# சீன, ஜப்பான் மற்றும் தென்கிழக்காசிய நாடுகளின் வரலாறு (கி. பி. 1966 வரை)

(பட்டப் படிப்பிற்குரியது)

(திருத்தப்பட்ட பாடத் திட்டத்தின்படி வெளியிடப்படுகிறது)

வ. இராசாராம்



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க. வெ.) வரிசை எண்—653

# சீனு, ஜப்பான் மற்றும் தென்கிழக்காசிய நாடுகளின் வரலாறு (கி. பி. 1966 வரை)

(பட்டப் படிப்பிற்குரியது).

திருத்தப்பட்ட பாடத் திட்டத்தின்படி வெளியிடப்படுகிறது)

ஆசிரியர்

**வ. இராசாராம்,** எம்.ஏ.,
துணைப் பேராசிரியர், வரலாற்றுத்துறை,
அரசினர் கலைக்கல்லூரி, நந்தனம்,
சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—October, 1975

T.N.T.B.S. (C.P.) No. 653

© Government of Tamilnadu

# HISTORY OF CHINA, JAPAN AND SOUTH EAST ASIA UPTO 1966 A.D.

**V. RAJARAM**

**Price Rs. 13-85**

Published by the Tamilnadu Text-book Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

*Printed by*
BHAGAT PRINTERS,
407, M. K. N. ROAD,
ALANDUR, MADRAS-600 016.

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினைந் தாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பட்டப் படிப்பு வகுப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத் தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். 1969ஆம் ஆண்டி லிருந்து அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிறபல துறை களில் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித்தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்களுக்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக் கழகமும், சென்னைப் பல்கலைக் கழகமும் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப் பிட்டுச் சொல்லவேண்டும்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், மெய்ப் பொருளியல், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டம் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூல நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான சீனு, ஜப்பான் மற்றும் தென்கிழக்காசிய நாடுகளின் வரலாறு (கி.பி. 1966 வரை)' என்ற இந் நூல் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 653 ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 688 நூல்கள் வெளிவந்துள்ளன. இந்நூல் மைய அரசு, கல்வி, சமூகநல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப் படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும், கலையியற் பாடங்களை யும், அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங் களையும் பயிலுகின்ற மாணவர்கள், அவற்றைத் தமிழில் பயில வேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளரவேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளிதாக, விரைவாக வளர வேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ் எங்கும் தமிழ்' என்ற குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு, தமிழகத்து ஆசிரியப் பெருமக்களையும் மாணவர்களை யும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# பொருளடக்கம்


பக்கம்

தோற்றுவாய் ... 1

## இயல் ஒன்று

1. சீனாவில் மஞ்சுப் பேரரசு ... 19
2. சீன ஐரோப்பியத் தொடர்பு ... 35
3. ஆங்கில-சீன உறவுகள் ... 41
4. முதல் அபினிப்போர் (1839-42) நான்கிங் உடன்படிக்கை ... 47
5. சீனாவில் தைப்பிங் கலகம் (1851-64) ... 55
6. நாங்கிங்கிலிருந்து பீகிங் வரை ... 72
   (இரண்டாம் அபினிப்போர்—தியன்சின் உடன்படிக்கை—பீகிங் மாநாடு)

## இயல் இரண்டு

1. ஜப்பானில் தொகுகாவா ஷோகன்களின் ஆட்சி ... 82
2. ஜப்பான் மேலையருக்குத் திறந்துவிடப்படுதல் ... 93
3. மேஜிப் புரட்சி (அல்லது) மிகாடோவின் முன்னிலை மீட்சி ... 103
4. மேஜிப் புரட்சியின் விளைவுகள் ... 112
   (புதிய ஜப்பான் உருவாதல்)

## இயல் மூன்று

1. சீன-ஜப்பானியப் போர் (1894-95) ... 143
   (ஷிமானேஸெகி உடன்படிக்கை)
2. சீனாவில் சீர்திருத்த இயக்கமும் பாக்ஸர் கலகமும் ... 1[illegible]

## இயல் நான்கு


பக்கம்

1. ருஷிய-ஜப்பானியப் போர் (போர்ட்சு மவுத் உடன்படிக்கை) ... 167
2. சீனப் புரட்சி (1911) ... 178
3. யுவான்-ஷி-கேயின் தலைமையில் சீனக் குடியரசு ... 190
4. முதல் உலகப்போரில் சீனாவும்-ஜப்பானும் ... 197
5. சீனாவில் தேசிய இயக்கம் ... 205
6. மஞ்சூரிய நெருக்கடி (1931) ... 217
7. ஜப்பானில் படையாட்சி ... 225


## இயல் ஐந்து


1. சீனாவில் சியாங் கே-ஷேக்கின் தலைமையில் கோமிண்டாங் ஆட்சி ... 235
2. இரண்டாம் சீன-ஜப்பானியப் போர் (1937-41) ... 248
3. ஜப்பானிய உலக நாடுகள் உறவு (1937-41) ... 262
4. பசிபிக் பெருங்கடல் பகுதியில் இரண்டாம் உலகப் போர் ... 274
5. நேச நாடுகளின் பொறுப்பில் ஜப்பான் ... 284
6. இன்றைய ஜப்பான் ... 299
7. சீன உள்நாட்டுப் போர் ... 307
8. 1949-க்குப் பின்னர் செஞ்சீனா ... 319
9. கொரியப் போர் (1950–53) ... 333


## இயல் ஆறு

## தென்கிழக்காசிய நாடுகள்


1. வேற்றுமையில் ஒற்றுமை ... 348
2. தென்கிழக்காசிய நாடுகளில் இந்தியப் பண்பாடுகள் ... 356
3. தென்கிழக்காசியாவில் இந்தியப் பண்பாடுகள் ... 375

பக்கம்

4. தென்கிழக்காசிய நாடுகளில் சீனப் பண்பாட்டுக் கூறுகள் ... 384
5. இஸ்லாமிய சமயம் பரவுதல் ... 389
6. ஐரோப்பியர் வருகை ... 397

இயல் ஏழு

1. ஆங்கிலேயர்களும் டச்சுக்காரர்களும் ... 407
2. கிழக்கிந்தியத் தீவுகளில் டச்சுக்காரர் ஆதிக்கம் ... 415
3. தென்கிழக்காசியாவில் ஆங்கிலேயர்கள் ... 425
4. பர்மாவில் ஆங்கிலேயர் ஆதிக்கம் ... 431
5. இந்தோ-சீனுவில் பிரெஞ்சு ஆதிக்கம் ... 438
6. சயாம் அல்லது தாய்லாந்து ... 443

இயல் எட்டு

1. தென்கிழக்காசிய நாடுகளில் தேசிய இயக்கம் ... 457
2. இந்தோனேஷியாவில் தேசிய இயக்கம் ... 464
3. மலேயாவில் தேசிய இயக்கம் ... 470
4. பர்மாவில் தேசிய இயக்கம் ... 477
5. இந்தோ-சீனுவில் தேசிய இயக்கம் ... 485
6. பிலிப்பைன் தீவுகள் ... 493

இயல் ஒன்பது

1. ஜெனிவா மாநாடு—வியட்நாம் பிரச்சினை ... 510
2. லாவோஸ்—கம்போடியா ... 519
3. மலேசியா—சிங்கப்பூர் உருவாதல் ... 525
4. சுதந்திர இந்தோனேஷியா ... 532
5. பாண்டுங் மாநாடு ... 540

மேற்கோள் நூற்பட்டியல் ... 552

கலைச் சொற்கள் ... 554

# பட விளக்க அட்டவணை

பக்கம்

1. ஜப்பான் ... 20
2. சீனு-தைப்பிங் கலகம் ... 56
3. 1889ஆம் அரசியல் சட்டப்படி ஜப்பானிய அரசின் முக்கிய அம்சங்கள் ... 120
4. சீனு-அந்நிய ஆக்கிரமிப்பு ... 158
5. முதல் உலகப்போரில் சீனுவும்-ஜப்பானும் ... 198
6. பொதுவுடைமை ஆதிக்கத்தின் வளர்ச்சி ... 243
7. வட சீனுவில் ஜப்பானிய ஆதிக்கம் ... 249
8. நேச நாடுகளின் எதிர்த்தாக்குதல்கள் ... 275
9. ஜப்பானிய அரசியல் சட்டம் (1947) ... 292
10. கொரியப் பிரிவினை ... 334
11. தென்கிழக்காசிய நாடுகள் ... 349
12. பண்டைய நாடுகள்—கி.பி. முதல் ஐந்து நூற்றுண்டுகள் ... 365
13. சைலேந்திரர் காலத்து மைய கிழக்கு சாவா ... 369
14. இந்தியவழி அரசுகள்—கி.பி. 7-9ஆம் நூற்றுண்டுகள் ... 371
15. இடைக்கால அரசுகள்—கி.பி. 9-14ஆம் நூற்றுண்டுகள் ... 373
16. இஸ்லாமிய சமயம் பரவுதல்—14-15ஆம் நூற்றுண்டுகள் ... 390
17. மலேயாக் கூட்டாட்சி ... 471
18. பிலிப்பைன் தீவுகள் ... 494
19. இந்தோ-சீனு ... 511

# தோற்றுவாய்

## பண்டைய சீனு

சீனு பழம்பெரும் நாடு. உலகில் மனிதன் தோன்றி வாழ்ந்த தாகக் கருதப்படும் இடங்களுள் சீனுவும் ஒன்று. சீனு முழுவதிலும் வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட மனிதன் வாழ்ந்திருந்ததற் கான சான்றுகள் பலவிடங்களில் அகழ்வாராய்ச்சித் துறையினரால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே மனிதன் சீனுவில் வாழ்ந்திருக்கின்ருன். மனிதக் குரங்கிற்கும் மனிதனுக்கும் இடைப்பட்ட குரங்கு மனிதனும் (Ape Man) சீன மண்ணில் வாழ்ந்துபட்டிருக்கின்ருன். இயற்கையின் வழிநடந்து, இயற்கையுடன் போராடி, வனவிலங்குகளை வேட்டை யாடி, மரத்தின் பட்டைகளையும் இலை தழைகளையும் ஆடையாக அணிந்து, சங்குகளைத் தனது மகளிருக்கு அணிவித்து மகிழ்ந்து, குறிப்புகள் மூலமாகத் தனது கருத்தினை வெளிப்படுத்தி, கற்கள், எலும்புகள், மூங்கில் கழிகள் ஆகிய பொருள்களாலான ஆயு தங்களைத் தற்காப்புக்காகப் பயன்படுத்தியும், நெல் முதலான உணவுப் பொருள்களை உற்பத்தி செய்தும், மட்பாண்டங்கள் செய்தும் வாழ்ந்திருந்த தன்மை கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றது.

இத்தகைய ஆதி மனிதர்கள் வாழ்ந்திருந்த நாட்டில், பழம் பெரும் நாகரிகம் ஒன்றும் தோன்றியிருக்கின்றது. சீனுவின் மஞ்சள் நதி தீரத்தில் தோன்றியிருந்ததாகக் கருதும் நாகரிகம், பண்டைய நாகரிகங்களான எகிப்திய, சுமேரிய, இந்திய நாகரிகங் களுக்கு இணையான சிறப்பு வாய்ந்ததாகக் கருதப்படுகின்றது. கி.மு. 1500 ஆண்டுகளுக்கு முன்னர் இந்த நாகரிகம் தோன்றி யிருக்கக்கூடும் என்றும் கருதப்படுகின்றது. உலகில் தோன்றிய பண்டைய நாகரிகங்களின் இணையாகக் கருதப்பட்டாலும், அந் நாகரிகங்களினின்று இது மாறுபட்டுக் காணப்படுகின்றது. இதன் காரணம் நில அமைப்பே ஆகும். பூகோள அமைப்பு, சீனுவின் வரலாற்று நிகழ்ச்சிகளைக் கட்டுப்படுத்தியிருக்கின்றது.

மேற்கு தெற்குப் பகுதிகளில் வறண்ட பாலைவனங்களும், மிக உயர்ந்த மலைகளும், அடர்ந்த காடுகளும், கிழக்கு தென்கிழக்குப் பகுதிகளில் ஆழ்கடலும் சூழ்ந்து, சீனுவின் நில அமைப்பு, உலகின் ஏனைய பகுதிகளிலிருந்து தனித்துக் காணப்படுகின்றது. இதே காரணத்தினால்தான் சீனுவில் தோன்றிய நாகரிகம் உலகின் பிற பகுதிகளுக்குப் பரவ இயலாது போயிற்று. கொரியா, ஜப்பான், இந்தோசீனு, மத்தியாசியாவின் ஒருசில இடங்கள் ஆகிய பகுதி களில் மட்டுமே சீன நாகரிகம் பரவியிருக்கின்றது. சீனர்களும் வேறெந்த நாகரிகத்தைப் பற்றியும் அறிந்திருக்கவில்லை. உலகில் தங்கள் நாட்டினைத் தவிர்த்து வேறு பகுதிகளும் உண்டு, அங்கும் தங்களைப்போல மக்கள் வாழ்கின்றார்கள் என்பதனையே சீனர்கள் அறிந்திருக்கவில்லை. இதனால்தான் தங்களைவிட நாகரிகத்தில் சிறந்தவர்கள் இப் பூவுலகிலேயே இல்லை என நம்பினர். தங்களுடைய நாட்டினை விண்ணுலகமான சுவர்க்கத்திற்கும், பாதாள உலகமெனக் கருதப்பட்ட நரகத்திற்கும் இடைப்பட்ட தான நடு அரசு (Middle Kingdom) எனப் பெருமையுடன் கருதினர். தங்களுடைய 'நடு அரசு' உலகிலேயே தலைசிறந்த அரசு என்றும், அவ்வரசனுக்குப் பணிந்து, திறை செலுத்தி, வணங்கி ஏனைய உலக மக்கள் வாழவேண்டும் என்றும் கருதினர். இத்தகைய உயர்வு மனப்பான்மை, சீனர்களிடையே இருபதாம் நூற்றுண்டில் கூடக் காணப்படுகின்றது. 17, 18ஆம் நூற்றுண்டுகளில் ஐரோப்பிய நாட்டினர் சீனுவுக்கு வந்தபோது, அவர்களைப் பண்பு அறியாத காட்டுமிராண்டிகள் என்றே சீனர்கள் அனைவரும் கருதினர். அவர்களைத் தங்களுக்கு இணையாகக் கருதி நடத்த, மதிப்பளிக்க மறுத்தனர்.

கி.மு. 221-ல் முதல் சீனப் பேரரசு உருவாக்கப்படும்வரை உள்ள காலத்தில் இரண்டு அரச குலங்கள் சீனுவை ஆண்டன. கி.மு. 1520-லிருந்து கி.மு. 1027 வரையில் 'ஷங்' (Shang) அரச குலத்தினரும் கி.மு. 1027 முதல் கி.மு. 256 வரை 'சௌ' (Chou) அரச குலத்தினரும் சீனுவை ஆண்டிருக்கின்றனர். இந்தக் காலங் களில் சீன அரசு யாங்ட்சி நதிப் பள்ளத்தாக்கு முழுவதும் பரவி யிருந்தது. சீனப் பெருமதிற் சுவர் (Great wall) வடக்கு எல்லையாக அமைந்திருந்தது. கி.மு. 221 முதல் கி.மு. 207 ஆம் ஆண்டு வரை 'சின்' (Chin) அரசகுலம் சீனுவை ஆண்டது. இக்கால அரசியல் முறை பன்முகப்படுத்தப்பட்டிருந்தது. இடைக்கால ஐரோப் பாவில் தோன்றியிருந்த நிலமானிய முறையமைப்பைவிடச் சற்றுச் சிறந்த முறை சீனுவில் இருந்துவந்தது. பல சிற்றரசர்கள், பேரரசரின் மேலாண்மையை ஏற்றுச் சுயாட்சியுரிமையுடன் ஆட்சி புரிந்தனர். இத்தகைய சிற்றரசுகளுள் ஒன்றுன 'சின்' அரச குலத்

தினர் 'சௌ' அரச குலத்தினரின் திறமையின்மையை உணர்ந்து, அவரை வீழ்த்தத் திட்டமிட்டனர். தங்களுடைய சிற்றரசில் பண்டைய ஸ்பார்ட்டா (Sparta) நகரில் இருந்தது போன்ற இராணுவக் கட்டுப்பாட்டினையும் சமூக அமைப்பினையும் உருவாக்கி வளர்ச்சியடைந்தனர். இவ்வாறு வளர்ச்சிபெற்ற 'சின்' அரசகுலம் 'சௌ' அரச குலத்தை வீழ்த்தியது. கி.மு. 221-ல் சீனாவின் முதல் பேரரசராக 'சின்' அரச குலத்தைச் சேர்ந்த சின்-ஷி-ஹுவாங் தி (Chiu-Shih-Huang Ti) என்பவர் அரியணை ஏறினார். சீனப் பேரரசு உருவானது.

## ஹான் அரச குலம் (The Han Dynasty) கி.மு. 202 — கி.பி. 8; கி.பி. 25—220

கி.மு. 221ஆம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்ட 'சின்' அரச குலம் மிக விரைவிலேயே அழிவுற்றது. 'ஹான்' அரசகுலம் தோன்றியது. சீன வரலாற்றில் மிகச் சிறப்பான காலம் 'ஹான்' அரசின் காலமே யாகும். இவர்கள் காலத்தில்தான் காலத்தைக் கணக்கிடுகின்ற முறை உருவானது. நிலவின் இயல்புகளை அடிப்படையாகக் கொண்ட காலண்டர் (Lunar Calendar) உருவாக்கப்பட்டது. நில நடுக்கத்தினை அறிவிக்கும் கருவியும் கண்டுபிடிக்கப்பட்டுப் பயன் படுத்தப்பட்டன. மழமழப்பான, சித்திர வேலைப்பாடுகள் கொண்ட மட்பாண்டங்கள் உற்பத்தி செய்யப்பட்டன. இக் காலத்திய பானை ஓடுகள் தென்கிழக்காசிய நாடுகள் அனைத்திலும் கிடைக்கின்றன. பட்டுத் தொழில் மிகவும் வளர்ச்சியடைந்தது. பூ வேலைப்பாடுகள் கொண்ட சீனப் பட்டாடைகள் உலகின் பல பாகங்களுக்கும் எடுத்துச் செல்லப்பட்டது. அழகு மங்கையர் தங்கள் அழகினை மேலும் அதிகமாக்க, முகப்பூச்சுகளையும், செயற்கை அழகு சாதனங்களையும் பயன்படுத்தினர். கலையும் இலக்கியமும் வளர்ந்தன. பெரிய நூலகம் ஒன்று நிறுவப்பட்டுக் கையெழுத்துப் படிகள் சேகரித்து வைக்கப்பட்டன. சீன வரலாறு முறையாக எழுதி வெளியிடப்பட்டது. நூல்கள் எழுதுவதற்குக் கந்தைத் துணிகளைக் கொண்டு செய்யப்பட்ட ஒருவிதக் காகிதம் பயன்படுத்தப்பட்டது. 'சௌ' அரச குலத்தினரின் ஆட்சிக் காலத்தில் சீனாவில் வாழ்ந்திருந்த தத்துவ மேதைகளான லோட்சு, கன்பூசியஸ் (Low-Tzu, Confucius) போன்றவர்களின் எழுத்தோவி யங்களைத் திரட்டிவைத்து, அவர்களின் கருத்துகளைச் சீன மக்களுக்கு எடுத்தியம்பிய பெருமை இந்த 'ஹான்' குலத்தினையே சாரும்.

**'தாங்', மற்றும் 'சுங்' அரச குலத்தினர் (The Tangs & the Sung)**

'ஹான்' அரசகுலத்தின் வீழ்ச்சிக்குப் பின்னர் 'சுயி' (Sui) குலத்தினர் ஆட்சிப் பொறுப்பேற்றனர். இவர்கள் காலத்தில் அரசு பணித் தேர்வு முறைகள் (Civil Service Examinations) ஆரம்பிக்கப்பட்டன. இவர்களுக்குப் பின்னர் வந்த 'தாங்' (Tangs' 618-906 A.D.) அரச குலத்தினர் சீனுவின் எல்லைகளை விரிவடையச் செய்தனர். சட்டங்கள் வரையறுக்கப்பட்டன. கல்விக்கு ஊக்கமளிக்கப்பட்டது. வர்த்தகம் வளர்ச்சியடைந்தது. கால்வாய்கள் வெட்டப்பட்டு, உள்நாட்டுப் போக்குவரத்திற்கும் வர்த்தக வளர்ச்சிக்கும் பயன்படுத்தப்பட்டது. சமயப் பொறைக் கொள்கை பொதுவாகக் கடைப்பிடிக்கப்பட்டிருந்தாலும், புத்த சமயத்தின் வளர்ச்சியையும், மற்ற மதங்களையும் அரசு கண்காணித்துக் கட்டுப்பாடுகளை ஏற்படுத்தியது. 'தாங்' அரசின் காலத்தில்தான் சீன ஜப்பானியத் தொடர்பு உயர்ந்த நிலையை எய்தியது. புகழ்பெற்ற பல கவிஞர்கள், லி-போ, து-பு, வாங்-வை, (Li-Po, Tu-Fu, Wang-wei) போன்றவர்கள், சீன இலக்கியச் செழிப்பிற்குக் காரணமானவர்களுள் ஒருசிலராவர். இரண்டு கலைக்களஞ்சியங்கள் வெளியிடப்பட்டன. அச்சுப்பொறி கண்டுபிடிக்கப்பட்டு, நூல்கள் அச்சிடப்பட்டன.

'தாங்' பேரரசின் வீழ்ச்சியிலிருந்து, 'சுங்' பேரரசின் ஆட்சி வரையுள்ள காலத்தில் ஐந்து அரச குலங்கள் (Five Dynasties) ஆட்சி புரிந்தன. இந்தக் காலத்தில்தான் சீனப் பெண்கள் தங்கள் பாதங்களைத் துணியால் இறுக்கிக் கட்டுகின்ற பழக்கம் (Foot-binding) ஏற்பட்டது. பின்னர் கி.பி. 960-ல் ஏற்பட்ட 'சுங்' அரசகுலம் 1279 வரை தொடர்ந்து ஆட்சிபுரிந்தது. இவர்கள் காலத்தில் சீனு மிகவும் வளம் பெற்றது. மக்கள் மகிழ்வுடன் வாழ்ந்தனர். கலை இலக்கியங்களின் மறுமலர்ச்சி ஏற்பட்டது. இயற்கைக் காட்சிகளை வண்ணக் கலவைகளைப் பயன்படுத்தி வரைதல், புத்தகம் அச்சிடுதல் போன்றவைகள் வளர்ந்தன. கணிதமும் வளர்ச்சியுற்றது. புதிய கன்பூசியத் தத்துவங்கள் வெளியிடப்பட்டன.

**மங்கோலியர்கள் (கி.பி. 1260—1368)**

மத்தியாசியாவிலிருந்து புறப்பட்ட மங்கோலியப் படையினர் மேற்கில் இந்தியா வரையிலும், கிழக்கில் சீனுவையும், ருஷ்யாவின் பெரும் பகுதியையும் வென்றனர். மங்கோலியாவைக் கைப்பற்றிய மங்கோலியர்கள், 1231-ல் கொரியாவை வென்றனர்; 1260-ல் சீனப் பகுதிகளையும் வென்றனர். குப்ளாய்கான் என்பவர்

சீனாவின் மங்கோலியப் பேரரசர்களுள் மிகவும் புகழ் பெற்றவர். வெனிஸ் நகர வணிகன் மார்க்கோபோலோ, சீனாவில் பயணம் செய்து திரும்பியது இவரது காலத்தில் ஆகும். மங்கோலியர்கள் கொரியா வழியாக ஜப்பானை வெல்வதற்கு இரு முயற்சிகள் மேற் கொண்டனர். ஆனால், வெற்றியடையவில்லை. மங்கோலியர் காலத்தில் உலகில் வர்த்தகப் போக்குவரத்துப் பெருகியது. அதனால் நாட்டு மக்களிடையே வளம் பெருகியது.

## 'மிங்' அரச குலம் (கி.பி. 1368—1644)

மங்கோலியரின் வீழ்ச்சிக்குப் பின்னர் சீனாவைச் சேர்ந்த 'மிங்' அரச குலத்தினர் பதவியேற்றனர். சீனாவை ஆண்ட இறுதியான சீன அரசகுலத்தினர் இவர்களே. இவர்கள் 17ஆம் நூற்றாண்டின் இடையில், சீனாவின் வடமேற்கிலிருந்து வந்த மஞ்சுக்களால் வெல்லப்பட்டனர். சீனாவில் 'மஞ்சு' அரசகுலம் தோன்றியது. மஞ்சுக்களைப் பற்றி அடுத்த அத்தியாயத்தில் சற்று விளக்கமாகவே காண்போம்.

## பண்டைய சீனாவின் அரசியல், பொருளாதார, சமூக அடிப்படைகள்

பண்டைய சீனாவின் ஆட்சி முறையில் அரசியல் அதிகாரங்கள் அனைத்தும் மைய அரசின் கட்டுப்பாட்டில் இருந்தன. பொரு ளாதார வளர்ச்சி, தொழில், வர்த்தகம் இவைகள் பன்முகப் படுத்தப்பட்டு, மாநில அரசுகளின் பொறுப்பில் விடப்பட் டிருந்தன. இரண்டாவதாக, அரசில் சிறந்த பெரிய அதிகார வர்க்கத்தினர் மேன்மையான நிலையில் உயர்ந்து, அரசியல், பொரு ளாதாரம், இராணுவம், சமயம், சமூக இயல் அனைத்தையும் கட்டுப்படுத்துகின்ற ஆற்றல் பெற்றிருந்தனர். மூன்றாவதாக, அதிகார வர்க்கத்தினரின் செல்வாக்கிற்குட்பட்டிருந்த இவ்வரசின் அடிப்படை வேளாண்மைத் தொழிலை முதன்மையாய்க் கொண் டிருந்தது. வேளாண்மைத் தொழிலில் மக்கள் அனைவரும் ஈடு பட்டிருந்தனர். அவர்கள் அனைவருமே எழுத்தறிவில்லாதவர் களாயினும், பகுத்தறிவு மிக்கவர்கள்; உழைப்பாளிகள்; நாடு காக்கும் பணியில் சிறந்த படை வீரர்கள். நீண்ட கால்வாய்கள் வெட்டுதல் அல்லது பெருமதிலைப் போன்ற பாதுகாப்பு அரண்கள் கட்டுதல் போன்ற பொதுப்பணிகளில் பங்கேற்று நாட்டின் பெருமையை உயர்த்தும் நற்பணியாளர்களாகவும், படை யெடுத்துச் செல்லும்போது வெற்றி தேடித்தரும் வீரர்களாகவும், பொதுவாகக் கூறுமிடத்து நாட்டின் முதுகெலும்பாக இருந்த வர்கள் இந்த எழுத்தறிவற்ற, ஆனால் உழைப்பையே மூலதனமாகக் கொண்ட உழவர் பெருங்குடி மக்களே. உணவு உற்பத்தியும்,

கலைநயம் கொண்ட கைத்தொழிற் பொருள்களை உருவாக்குவதும், இவர்களது தலையாய கடமைகளாய் இருந்தன. நான்காவதாக, சிறுபான்மையினரான, கற்றறிந்த அதிகார வர்க்கத்தினர்தான் மொழியியலை வளர்த்து, அறிவுப் பயிர் வளர்த்தவர்களாவர். சீன மொழி மிகவும் கடினமான எழுத்துகளையும், ஏராளமான சொற்களையும் (Characters) கொண்டது. இத்தகைய மொழியினைக் கற்றுத்தேர்ந்து, இலக்கியங்களைப் படித்து, அறிவு வளர்ச்சிப் பெற நெடுங்கால உழைப்புத் தேவை. அந்த அளவுக்கு உழைப்பையும் பொருளையும் பெருநிலப் பிரபுக்களால் மட்டுமே கொடுக்க இயலும். எனவே, பெருநிலப் பிரபுக்கள்தாம் கற்றறிந்தவர்கள். அவர்கள்தாம் அரசின் ஆணிவேர். எனவே, பண்டைய சீனுவின் தலைவர்களாயிருந்தோர் வேளாண்மைத் தொழிலை மூலதனமாகக் கொண்ட இப் பெருநிலப் பிரபுக்களேயாவர். ஐந்தாவதாக, சமுதாய அமைப்பில் தனி மனிதனுக்கு இடமில்லை. குடும்பங்கள் அல்லது இனப்பிரிவுகளே முதன்மையிடம் பெற்றன. இதனுல் தான் மூதாதையரை வழிபடுகின்ற பழக்கமே ஏற்பட்டது. மேலை நாடுகளிலிருந்தது போன்ற விரிவான சட்டங்கள் சீனுவில் இருந்த தில்லை. மரபுகளும், வழக்காறுகளுமே அவர்களின் சிறந்த சட்டங்களாகும்.

**சமயக் கொள்கைகள்**

சீனுவில் தோன்றிய பழமையான தத்துவக் கருத்துகளைப் பற்றி மாறுபட்ட கருத்துகள் உலவிவருகின்றன. ஐரோப்பிய சமயங்களையும், வாழ்க்கை நெறிகளையும், அரசியல் கோட்பாடுகளையும் அளவுகோலாகக் கொண்டு, சீன வரலாற்றையும், தத்துவங்களையும், சமய முறைகளையும் அறிந்துகொள்ள முயன்ருல், குழப்பமே மிகும். இதனுல் சீனர்களுக்குச் சமயமே இல்லை எனக் கூறிவிட முடியாது. சமயக் கருத்துகளும், அரசியல் கோட்பாடுகளும் ஒன்ருேடொன்று பின்னிப் பிணைந்து கிடக்கின்றன. பாமரச் சீனர்கள் பண்டுதொட்டே ஏராளமான சடங்குகளிலும், இயற்கை வழிபாடுகளிலும் நம்பிக்கை கொண்டு வணங்கி வந்திருக்கின்றனர். மூதாதையர் வழிபாடு, சுவர்க்கம், நரகம் ஆகியவற்றில் நம்பிக்கை கொண்டிருந்தனர். தேவதைகள், பேய் பிசாசுகள் முதலியவைகளை விரும்பியோ, அச்சத்துடனே வழிபடும்முறை நிலவிவந்தது. மந்திரங்களிலும், மாயாஜால வித்தைகளிலும் சீன மக்களுக்கு அதிக ஈடுபாடு உண்டு. கன்பூசியஸ், கௌதம புத்தர், லோட்சே போன்ற ஞானிகளும் கடவுளராகவே கருதப்பட்டு வணங்கப்பெற்றனர். அதே நேரத்தில் கற்றறிந்தவர்கள், ஆட்சியாளர்கள் கன்பூசியத் தத்துவத்தை அரசியலின் அடிப்படையாக ஏற்றனர். கன்பூசியத்தை மதம்

என்று ஏற்றுக்கொள்வதைவிட, அவரது கோட்பாடுகள் அனைத்தையும் அரசின் விதிமுறைகளாக ஏற்றுச் செயல்பட்டனர். பாமர மக்களிடையே குடிகொண்டிருந்த கருத்துகள், நம்பிக்கைகள், பழக்க வழக்கங்களைப்பற்றிக் கற்றறிந்தோர் சிறிது கூடக் கவலைப்படவும் இல்லை; அவர்களின் கருத்துகளை மாற்றிக் கொள்ளும்படி வற்புறுத்தவுமில்லை. பொதுவாக நோக்குமிடத்துப் பண்டைய சீன வரலாற்றில் காணப்படுகின்ற முப்பெரும் ஞானிகளின் கருத்துகளை மூன்றாகவே பிரிக்கின்றனர். லோட்சுவின் கருத்துகளைத் தீவிர இடதுசாரியென்றும், கன்பூசியசு கருத்துகளை நடுவம் என்றும், மோ-தி (Mo-Ti) என்பவரின் கருத்துகளை வலதுசாரியென்றும் தற்கால மொழியில் பிரிக்கின்றனர்.

## தாவோயிசம் (Taoist Philosophy)

தாவோயிசக் கொள்கைகள் அறிவாளிகளை ஈர்த்தன. பாமர மக்களுக்குச் சமயக் கருத்துகளாகத் தெரிந்தன. இத் தத்துவத்தை உருவாக்கியவர் லோட்சு (Loa Tzu) என்பவர். 'தாவோ' என்றால் வழி, அல்லது பாதை என்று பொருள் (Tao means the way, or Road, or Process). தாவோயிசத்தின் கொள்கைகளுக்கும், பண்டைய இந்துக்களின் நம்பிக்கைக்கும் ஒருவித ஒற்றுமையிருப்பதை அறியலாம். 'எல்லாம் அவன் செயல்; நம் கையில் ஏதுமில்லை;' 'தெய்வம் விட்டவழி' என்று சும்மா இருந்துவிடுதல் இந்துக்களின் தத்துவப் பண்பு. அதேபோல தாவோயிசமும் உலகின் செயல்களைக் கட்டுப்படுத்த முயல்வதைத் தடுக்கிறது. நன்மை, தீமை என்று பாகுபாடு செய்வதையே கண்டிக்கிறது. 'இலக்கியம், அறிவு, நாகரிகம் இவைகளைத் தேவையற்றவை என ஒதுக்குகிறது, அழகை அழகென்று உணர்வதில்தான் அழகற்ற தன்மை வெளிப்படுகின்றது. நன்மையை நன்மையென்று உணர்ந்தால், அதுவே தீமையாகிவிடுகிறது. எனவே, உலகு இயங்குவதுபோல இயங்கட்டும். அதன் இயக்கத்தைக் கட்டுப்படுத்திச் சீர்திருத்த முயல்வது வீண் வேலை' எனப் போதிக்கின்றது.[1] தாவோயிசம் இயற்கை வழிமுறைகளையே ஆதரிக்கின்றது. இவ்வியற்கை வழிமுறைகளிலிருந்துதான், பின்னர் வந்தவர்கள் மந்திரங்கள், சடங்குகள், பேய், பிசாசு போன்றவை

[1] Literature, Knowledge, Civilization were undesirable for . When the world knows beauty to be beauty, there is ugliness; When it knows goodness to be good, there is evil......... Heaven and Earth are not, humane... The universe was neither kindly nor righteous best went its way, ignoring human desires or human standards of conduct. The efforts to reform morals or to right wrongs were a waste of time...... The Far East. Clyde & Beers. p. 19.

களைப் பற்றிய கருத்துகளை மக்களிடையே பரப்பினர். தாவோயிச தத்துவம் இறந்தவர் வழிபாட்டு முறையையும் வற்புறுத்துகின்றது. இக் கருத்துகள் இன்றைய சீனுவில்கூட இருக்கின்றன.

**கன்பூசியக் கருத்துகள்**

'சௌ' அரச குலத்தினரின் காலத்தில் வாழ்ந்த கன்பூசியஸ் என்பவரின் கருத்துகள் சீன வரலாறு உலகிற்கு வழங்கிய மிகச் சிறந்தவையாகும். இவரது கருத்துகள் ஐந்து பண்டைய இலக்கியங்களிலும் (Five Classics) நான்கு நூல்களிலும் (Four Books) அடங்கியுள்ளன. மஞ்சு அரசகுலத்தின் வீழ்ச்சி வரையிலும், அரசு பணித் தேர்வுகளில் பங்கெடுத்துக் கொள்வோர், இந்த ஒன்பது நூல்களையும் கற்றுத் தேர்ந்திருக்கவேண்டும் என்ற நிலை இருந்தது. சீனுவில் 'அறிஞன்' அல்லது 'கல்வி கற்றவன்' என்ற சொற்கள் கன்பூசியத் தத்துவங்களைக் கற்றவன் என்பதையே குறிக்கும்

கன்பூசியசின் தத்துவங்களில் ஐந்து பண்புகள் குறிப்பிடப்படுகின்றன. அரசன், மந்திரிகள், பெற்ருேர், குழந்தைகள், கணவன் மனைவி, மூத்த இளைய சகோதரர்கள், நண்பர்கள் ஆகியோருக்கிடையே உறவு முறைகள் எவ்வாறு இருக்கவேண்டும் என்பது வலியுறுத்தப்படுகின்றது. ஒருவனுக்குத் தாளாண்மை, நேர்மை, தலைமையேற்கின்ற பண்பு, அறிவு, தூய்மையான அன்பு போன்ற ஐந்து குணங்களும் வற்புறுத்தப்படுகின்றன. இத்தகைய குண நலன்களைக் கொண்டிருக்கும் ஒருவனே மகிழ்ச்சியான வாழ்வை நடத்திச் சமுதாய மாற்றங்களைப் பேணமுடியும் எனக் கன்பூசியசு கூறுகிருர். பொதுவாகக் கூறவேண்டுமாளுல் கன்பூசியக் கருத்துகள் மனிதனின் நேர்மையான மகிழ்ச்சியான வாழ்விற்கும், சமூக உயர்விற்கும் வழிகாட்டுகின்றன எனலாம். இவை எதிலும் மனிதத் தன்மையை வலியுறுத்துகின்றது.

**புத்தமதம்**

புத்தமதம் கிறித்து பிறப்பதற்கு முன்னரே இந்தியாவிலிருந்து சீனுவிற்குச் சென்றிருக்கக்கூடும். புத்தமதக் கொள்கைகள் கிழக்காசிய நாடுகள் அனைத்திலும் காணப்படுகின்றது. சீனுவிற்குச் சென்ற புத்தமதக் கோட்பாடுகள், அங்கு ஏற்கெனவே பரவியிருந்த தாவோயிச, கன்பூசியக் கொள்கைகளுடன் கலந்து, சிறிது மாற்றம் பெற்று, சீன மக்களை ஆட்கொண்டிருக்கும் மூன்று தத்துவங்களில் ஒன்ருக உயர்ந்திருக்கின்றது. புத்தமதம் தான்

தோன்றிய இடத்தில் மறைந்துபட்டாலும், சென்ற இடங்களில் செல்வாக்குப் பெற்று நிலைத்துவிட்டது.

இத்தகைய கருத்துகளில் ஊன்றிவிட்ட சீனச் சமுதாயத்தை இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். கற்றறிந்தோர், பாமர மக்கள் என்பதுவே அப் பிரிவுகளாகும். கற்றறிந்தோர்தான் அதிகார வர்க்கத்தின் ஆட்சியாளர்கள், உயர்ந்தவர்கள், செல்வந்தர்கள் எனச் சமுதாயத்தின் உயர்நிலையிலிருப்பவர்கள். அடுத்த நிலையில் இருப்பவர்கள் உழவர்கள். மொத்த மக்கள் தொகையில் 75-80 விழுக்காடு உழவர்களேயாவர். இவர்களிடையேதான் கைவினைஞர்கள், வர்த்தகர்கள், இராணுவ வீரர்கள் ஆகியோரும் இருப்பர்.

## பண்டைய ஜப்பான்

'உதயசூரியன் நாடு' என்றழைக்கப்படுகின்ற ஜப்பான் நாடு ஆசியாவின் கிழக்குப் பகுதியில், பிறைவடிவில், சங்கிலித் தொடரெனக் கோத்து நிற்கும் மூவாயிரத்து முந்நூறு தீவுகளைக் கொண்டதாகும். வடக்கில் காம்சட்கா (Kamchatka) தீவி லிருந்து, தெற்கில் தைவான் என்றழைக்கப்படுகின்ற பார்மோசா தீவுவரை அமைந்துள்ள தீவுக் கூட்டங்களே ஜப்பான் என்றழைக்கப்படுவது. சகாலின் (Saghalin) என்ற பெருந்தீவு ஜப்பானியருக்குத் தொன்றுதொட்டே தெரிந்திருப்பினும், அவர் கள் இத் தீவில் குடியேறவோ, இதனைத் தங்கள் ஆட்சிக்குட் படுத்தவோ முயலவில்லை. குர்லி (Kurile) தீவுக் கூட்டங்களின் நிலையும் அவ்வாறேயிருந்தது. உலகப் படத்தை உற்று நோக்கும் போது ஆசியாப் பெருநிலப் பரப்பிற்கும் ஜப்பானுக்குமுள்ள தொடர்பை அறியமுடியும். கொரியாவை அடுத்துள்ள சிறிய கடல் பரப்பு மட்டுமே ஜப்பானையும் ஆசியாவையும் பிரிக்கின்றது. அக் கடல் பரப்பிலும் ஹூஷிமா (Tshuohima) என்ற தீவு கொரியா விற்கும் ஜப்பானுக்குமிடையில் பாலமாக அமைந்திருக்கின்றது. ஜப்பான் மூவாயிரத்து முந்நூறு தீவுகளைத் தன்னகத்தே கொண் டிருந்த போதிலும், அவற்றுள் தலையானவையாக நான்கு பெரிய தீவுகளைக் கொள்ளலாம். அவைகள் வடக்கேயுள்ள ஒக்கைதோ, நடுவிலுள்ள ஹொன்ஷூ, தெற்கிலுள்ள ஷிக்கொக்கு, குயுஷூ ஆகியவையாம். ஜப்பானின் மொத்தப் பரப்பளவு கிட்டத்தட்ட 3,77,384 சதுர கிலோ மீட்டராகும்.

ஜப்பான் ஏராளமான மலைகளையும் அவைகளில் தோன்றி ஓடும் ஆறுகளையும் கொண்டது. மலைகள் கடல் மட்டத்தினின்று, ஏழு அல்லது எட்டு மைல் உயரத்திலுமுள்ளன. அம் மலைகள்

ஒன்றோடொன்று பின்னிக் கிடப்பதாலும், இடையிடையே விரைந்தோடும் ஆறுகளைக் கொண்டிருப்பதாலும், நாற்புறமும் மிகவும் ஆழமான கடல்களால் சூழப்பட்டிருப்பதாலும் அடிக்கடி ஜப்பானில் நில நடுக்கங்களும், எரிமலைக் குமுறல்களும், புயற் காற்றுகளும், நதிகளின் பெயர்ச்சிகளும் ஏற்படுகின்றன.

ஜப்பான், வடசீனவைப் போன்று சமதட்பவெப்ப மண்டலத்தில் அமைந்துள்ளது. தென்கிழக்குப் பருவக் காற்றினுல் கோடையில் ஜப்பான் முழுவதிலும் மழை பெய்தபோதிலும், இதற்கு, தென்கிழக்குப் பகுதிகளில் அதிகமான மழை பெய்கிறது. ஜப்பானில் ஏற்படும் புயற்காற்றுகள் குறிப்பாகக் குளிர்காலங்களில் ஏற்படுகின்றன. பூமியதிர்ச்சியும் நில நடுக்கங்களும் ஜப்பானில் அதிகமாக ஏற்படுகின்றன. நாளொன்றுக்கு சராசரி 20 நில நடுக்கங்கள் ஏற்படுவதாக நில நடுக்கத்தையளக்கும் கருவிகள் குறிப்பிடுகின்றன.

ஜப்பான் இயற்கை வளம் மிகுந்த நாடு. காடுகளும் மரங்களும் ஜப்பானியருக்குப் புலவகையிலும் பயன்படுகின்றன.. கனி வளங்கள் ஜப்பானில் இருந்தபோதும், ஜப்பானின் தேவைக்கு மிகவும் குறைந்தவைகளே. இதனுல்தான் வளர்ந்துவிட்ட ஜப்பான் ஏராளமான கனிப்பொருள்களை அந்நிய நாடுகளிலிருந்து இறக்குமதி செய்து கொள்ளுகின்றது.

இன்றைய ஜப்பானிய மக்கள் மங்கோலிய இனத்தின் வழி வந்தவர்களென மாந்தநூல் வல்லுநர்கள் கருதுகின்றனர். ஆனுல் துல்லியமாக இவர்களை இன்ன இனத்திலிருந்து வந்தவர்கள் தாம் என்று கூற இயலாது. ஒக்கைதோ தீவிலுள்ள 'ஐநு' (Ainu) என்ற பழங்குடி மக்கள் ஒருகாலத்தில் ஜப்பான் முழுவதும் பரவியிருந்தார்களென்றும் அவர்களின் வழித்தோன்றல்களே இன்றைய ஜப்பானியர் என்றும் கருதப்படுகின்றது. ஆனுல், மாந்தநூலின்படி கூர்ந்து, அன்வயப்படுத்தி நோக்கும்போது, மங்கோலிய, நைஜீரிய, எத்தனிக் முதலிய பலதரப்பட்ட இனங்களின் சேர்க்கையாலுண்டான ஒரு கலப்பினத்தவரே ஜப்பானியர் என்பது தெளிவாகின்றது.

கிறித்தவ சகாப்தத்தின் தொடக்கத்தில் மங்கோலிய இனத்தவர்கள் ஜப்பானுக்குள் நுழைந்தனர். இவர்கள் சீனவின் பண்பாட்டு முறைகளை அறிந்தவர்கள். இவர்கள்தான் வாளையும், வயிரக்கற்களையும், செப்புக் கண்ணடியையும் ஜப்பானுக்குள் முதன்முதலாகக் கொண்டுவந்தவர்கள். இவர்கள் ஜப்பானின் மையப்பகுதியில் தங்களது ஆட்சியை நிறுவினர். இவ்வரசு

'யமாதோ' (Yamato) என்றழைக்கப்பட்டது. ஆரம்ப நிலையில் ஜப்பானிலிருந்த சிற்றரசுகளில் ஒன்றாக இருந்த 'யமாதோ' பின்னர் ஜப்பானிய அரசாகவே ஆயிற்று. இவ்வரசு அதிகாரத்தின் சின்னங்களாக வாள், வயிரக்கல், கண்ணாடி ஆகியவை காணப் பட்டன. இன்றுங்கூட ஜப்பானிய மாமன்னரின் அதிகாரத்தைக் குறிப்பிட இம் மூன்று பொருள்களையும் பயன்படுத்துகின்றனர்.

## யமாதோவின் தொடக்கம்

ஆரம்பத்தில் கொரியா வழியாக வந்த 'யமாதோ' குலத்தினர் ஜப்பானிய அரசியலில் முக்கியத்துவம் பெற்றனர். ஜப்பானில் இருந்த ஏனைய குலத்தலைவர்களை அடக்கித் தமது பகுதியின் எல்லைகளை விரிவடையச் செய்தனர். அதிகாரத்தைக் கைப் பற்றியது போலவே சமயத்துறையிலும் இவர்கள் முதன்மை பெற்றனர். யமாதோ பிரிவினரின் சமயக் கோட்பாடுகளை மற்றக் குலத்தினர் ஏற்றனர். இந்த யமாதோ பிரிவினரின் குலதெய்வம் சூரியக் கடவுள். ஜப்பானியப் புராணங்களின்படி சூரியக் கடவுள் ஒரு பெண் தேவதை என்றும், அத் தேவதையின் பேரன்தான் யமாதோவின் முதல் அரசன் என்றும், மற்றவர்கள் அனைவரும் சூரியக் கடவுளின் பேரன் வழியில் வந்தவர்களென்றும் கருதப்படு கின்றது. அதனால் ஜப்பானிய சமயமான ஷிண்தோ மதம் சூரிய வழிபாட்டை வற்புறுத்துகின்றது என்றும் கூறுவர். இந்த யமாதோ பிரிவினைச் சேர்ந்தவர்கள் தங்களைச் சூரியக் கடவுளின் வழிவந்தவர்கள் என்ற நம்பிக்கையை வளர்த்தனர். ஜப்பானியப் பேரரசு குடும்பம் இவ்வாறு தோன்றியது.

கி.பி. இரண்டாம் மூன்றாம் நூற்றாண்டுகளிலிருந்து சீனத் தொடர்புகள் ஆரம்பமாயின. இருப்பினும் ஆறாம் நூற்றாண்டில் தான் சீனச் செல்வாக்கு ஆரம்பமானது. சீனாவிலிருந்து புத்த சமயமும், கன்பூசியக் கருத்துகளும் ஜப்பானில் நுழைந்தன. சீனாவின் பண்பாடு, கலைகள், கல்வி முறைகள், அரசியல் அனைத்தும் ஜப்பானில் நுழைந்து ஆதிக்கம் பெற்றன. சீனக்கருத்துகளின் விளைவாக ஜப்பானிய அரசியலில் சீர்திருத்தங்கள் செய்யப் பட்டன. ஷோதோகு தைஷி என்ற யமாதோ, ஜப்பானியரனை வரையும் ஒற்றுமைப்படுத்திச் சீன முறையைப்பின்பற்றி அரசியல் மாற்றங்களை ஏற்படுத்த முயற்சிசெய்தார். சீன முறைகள் ஏற்றுக்கொள்ளப்பட்டன. ஆயினும் ஜப்பானியர் ஒருசில முக்கிய மாறுதல்களைச் செய்து கொண்டனர். அவைகளில் முக்கியமானது சீன சமுதாய அமைப்பில் கல்வியின் அடிப்படையில் உயர்ந்தோர், அல்லது அரச பதவிகள் என்ற நிலை இருந்தது. அந் நிலையை

விடுத்து ஜப்பானில் குடிப்பிறப்பின் உயர்வால், அரசியல் சமூக உயர்வு பெறுதல் என மாற்றி ஏற்றுக்கொண்டனர்.

**சீனுவின் செல்வாக்கு**

சீனக்கட்டடக் கலைஞர்களின் உதவியால் ஜப்பானிய அரசர் ஒரு புதிய நகரத்தை உருவாக்கினுர். அந் நகர் 'நாரா' (Nara) எனப் பெயர் பெற்றது. சீனத்தலைநகரின் மாதிரியிலேயே நாராவும் அமைக்கப்பட்டது. இந்த நாரா நகரில்தான் சீனுவிலிருந்து வந்த புத்தசமயம் மிகுந்த செல்வாக்குப் பெற்றது. புத்தக் கோவில்கள் ஜப்பானிய நகரங்களை அழகுபடுத்தின. சீன மொழியும் ஜப்பானில் புகுந்தது. புத்த மதத்தைப் பின்பற்றுவோருக்கும், மடாலயங்களில் சேர்ந்தோர்க்கும் வரிவிலக்கு அளிக்கப்பட்டது. நிலமானிய முறையாலும், மக்கள் தொகைப் பெருக்கத்தாலும் வேளாண்மை வளர்ச்சி ஏற்பட்டது. அதே நேரத்தில் அரசின் ஆடம்பரச் செலவுகளினுல் நிதி நிலைமை மோசமாயிற்று. இதைச் சரிப்படுத்த புதிய வரிகள் விதிக்க வேண்டியதாயிற்று. இதனுல் பாதிக்கப்பட்டவர்கள் கடைநிலை மக்களேயாம். பிரபுக்களும், உயர் வகுப்பாரும் வரிவிலக்குப் பெற்றுச் செல்வத்தில் திளைத்தனர். இதனுல் சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வுகள் தோன்றின.

**ஹியன் காலம் (கி.பி. 794—1185)**

எட்டாம் நூற்ருண்டின் இறுதியில் புத்த சமயம் மிகவும் செல்வாக்குப் பெற்று விளங்கியது. அரசர் புத்த சமயத்தின் கட்டுப்பாடுகளையும் தலையீடுகளையும் விரும்பவில்லை. காம்மு (Kammu) என்ற பேரரசர் புத்த பிட்சுகளின் அரசியல் தலையீடுகளைப் பொறுக்க இயலாமல், அவர்களிடமிருந்து தப்பித்துக் கொள்ள வேண்டி, தமது தலைநகரை நாராவிலிருந்து 'கியாத்தோ' (Kyoto) நகருக்கு மாற்றிக்கொண்டார். அந் நகரை மையமாகக் கொண்டு ஜப்பானிய அரசர்கள் ஆளத் தொடங்கியதை ஹியன் ஆட்சிக்காலத்தின் தொடக்கம் என்று குறிப்பிடுவர். ஜப்பானின் அரசியல் பண்பாட்டு வளர்ச்சியிலும் ஒரு திருப்பக்கட்டம் ஏற்பட்டது என்றும் கூறலாம். சீன நாகரிகத்தை மாதிரியாகக் கொண்டு ஜப்பானிய நாகரிகம் மாற்றியமைக்கப்பட்டது. தங்கள் நாட்டின் எல்லாத் துறைகளிலும் ஜப்பானியப் பண்பாட்டுத் தனித்தன்மையை ஏற்படுத்த வேண்டுமென்று ஜப்பானியர்கள் கருதினுர்கள்.

புத்த பிட்சுகளின் செல்வாக்கிலிருந்து தப்பி வந்த பேரரசர் காம்மு, ஜப்பானியரின் பண்டைய மதமான ஷிண்தோ

சமயத்தை மீண்டும் ஊக்குவிக்க முயன்றார். இதன் விளைவாக புத்தமதக் கருத்துகளும் ஷிண்தோ சமயத்தின் கோட்பாடுகளும் ஒன்றே என அறிவிக்கப்பட்டது. கோபோ தைஷி (Kobo Daishi) என்பவர், 'ஷிண்தோ சமய தேவதைகளாகப் புத்தர் ஜப்பானில் ஏற்கெனவே தோன்றியிருக்கின்றார். எனவே புத்தசமயமும், ஷிண்தோ சமயமும் ஒன்றே' எனக் கூறிப் புத்த சமயத்தையும் ஜப்பானியருடையதாக்கிவிட்டார். இதனால் ஜப்பானிய மைய அரசின் ஆதிக்கம் மேலும் உயர்ந்தது.

கியாத்தோ நகர் சீனாவின் தலைநகரைப் போலவே எழில்மிகு நகரமாக அமைக்கப்பட்டது. கி.பி. 1868-ல் முன்னிலை மீட்சி ஏற்படுகின்ற வரையில் கியாத்தோ நகரே பேரரசர்களின் உறைவிடமாக இருந்தது. பேரரசரவை எழுத்தாளர்களை ஊக்குவித்தது. எழுத்தாளர்களில் பெண்களும் நிறைந்திருந்தனர். இக்காலப் ஜப்பானிய இலக்கிய வரலாற்றில் பொற்காலமெனத் திகழ்கிறது. ஜப்பானிய இலக்கியங்கள் பல உருவாக்கப்பட்டன. முராசாகி (Lady Murasaki) என்ற அம்மையாரின் எழுத்துகள் இன்றும் புகழ்பெற்று விளங்குகின்றன. ஷெய் ஷோனகான் (Sei Sonagon) என்ற அம்மையாரின் நூலும் மிகவும் புகழ் பெற்றது.

ஃபியூஜிவாராக்கள் (Fujiwaras)

சீன அரசியல் முறை ஜப்பானில் புகுத்தப்பட்டு, ஜப்பானிய மயமாக்கப்பட்டது. சீனாவில் அரசுபணி யேற்கவேண்டுமெனில் அரசுபணித் தேர்வுகளில் வெற்றி பெற்றிருக்கவேண்டும். அதேமுறை ஜப்பானில் புகுத்தப்பட்டபோதிலும், சில காலத்திற்குள் சிதைந்துபோயிற்று. உயர்குடிப் பிறப்பொன்றே உயர்ந்த பதவிகள் பெறத் தகுதியுடைத்து என்ற நிலை வளர்ந்தது. பேரரசுகுடும்பம் பெருமதிப்பிற்குரியதாக இருப்பினும், படிப்படியாய் அரசு அதிகாரங்களை இழந்தது. ஜப்பானிய அரசர்கள் சீனர்களிடமிருந்து பதவி துறப்பு முறையைக் (Abdication) கற்றுக் கொண்டனர். மேலும், புத்தமதக் கருத்துகளை ஏற்றுக் கொண்ட ஜப்பானிய மன்னர்கள் 'புத்தரின் பதவிதுறப்பை'த் தாங்களும் பின்பற்றத் தொடங்கினர். இம் முறையைப் பின்பற்றிய ஜப்பானிய மன்னர்கள் தங்கள் அரசபதவியைத் துறந்து மடங்களுக்குச் சென்றனர். இவ்வாறு ஒருவர் பின் ஒருவராகப் பல மன்னர்கள் தங்கள் இளம் புதல்வர்களுக்குப் பட்டம் சூட்டிவிட்டுத் துறவு பூண்டதால் அரசியல் பொறுப்பை ஏற்று நடத்திய 'பூஜிவாரா' குடும்பத்தினர், அரச அதிகாரங்கள் அனைத்தையும் கைப்பற்றி, முடிசூடா மன்னர்களாய் விளங்கினர். அதிகாரத்தைக் கைப்பற்றிய பூஜிவாராக்கள் தங்களுக்குப் போட்டியாக இருந்த

குடும்பங்களை நசுக்க ஆரம்பித்தனர். இவர்களுடைய தொல்லைகளைப் பொறுக்க இயலாத பல வீரக்குலத்தினர் தலைநகரைவிட்டு வெளியேறினர். இதனால் நாட்டில் அமைதியின்மையும் கலகங்களும் ஏற்படும்போது, அவைகளை அடக்கப் படையினர் தேவைப்பட்டனர். பூஜிவாராக்கள் படைத்திறமை பெற்றவர்களல்லர். எனவே, வேறு சில புதிய மறக்குலத்தவரின் துணையை இவர்கள் நாட வேண்டியதாயிற்று. இப் புதிய படைக்குலத்தினரில் இரு குடும்பங்கள் புகழ் பெற்று விளங்கின. அவை தைராக்கள் (Tairas), மினுமொத்தோக்கள் (Minomotos) என்பன ஆகும். இவை போன்ற மறவர் குலத்தில் வந்தவர்களே பின்னர் தைமியோக்கள், சாமுராய்கள் என ஜப்பானிய வரலாற்றில் புகழ்பெற்ற படைக் குலத்தினராவார்கள்.

## தைராக்களும் மினுமொத்தோக்களும்

இக் குடும்பங்களின் செல்வாக்கினையும், படை வலிமையையும், உள் நோக்கங்களையும் உணர்ந்த பூஜிவாராக்கள், பிரித்தாளும் சூழ்ச்சியைக் கையாண்டு, இவ்விரு படைக்குலங்களிடையே போட்டியைத் துவக்கிவிட்டனர். ஆரம்பத்தில் கியோமோரி (Kiyomori) என்ற தைராக்களின் தலைவர் மினுமொத்தோக்களை வென்று, அதிகாரத்தைக் கைப்பற்றினார். தமது குடும்பத்தினர் அனைவரையும் கியாத்தோவில் குடியேற்றினார். இதுவரை பூஜிவாராக்களின் பெண்களை மணந்து வந்த ஜப்பானிய இளவரசர்களைத் தம் குடும்பத்துப் பெண்களை மணக்கும்படி செய்தார். தம்முடைய மகளை மிகாடோவிற்கு மணமுடித்துக் கொடுத்து, தாமே மிகாடோவின் தலைமையமைச்சரானார். பூஜிவாராக்கள் அனுபவித்துவந்த எல்லாப் பதவிகளையும், பட்டங்களையும் தைராக்களே ஏற்றனர். ஆனால், தைராக்களின் இந்த வெற்றியும் செல்வாக்கும் அதிகநாள் நீடிக்கவில்லை.

தைராக்கள், மினுமொத்தோக்களின் போராட்டத்தின் போது மினுமொத்தோக்களின் தலைவனைக் கொன்ற தைரா கியாமோரி, அத் தலைவனின் குடும்பத்தினர் அனைவரையும் கொல்ல முயன்றான். ஆனாலும் யொரித்தாமோ என்ற பதின் மூன்று வயது பாலகன் தப்பிவிட்டான். யொரித்தாமோ, தைராக்களுடைய தலைவரின் கொடுமைகளை மறந்துவிடவில்லை. தப்பிச் சென்றவர் ஹோஜோ தொகிமசா (Hojotohemasa) என்பவரின் பாதுகாப்பில் வளர்ந்து, அவரது மகளை மணந்தார். யொரித்தாமோ அறிவுக்கூர்மையும், ஆற்றலுமிக்கவர். தம் தந்தையைக் கொன்றவனைப் பழிவாங்கும் எண்ணம் கொண்டார். கொஞ்சம் கொஞ்சமாகத் தமது படையை உருவாக்கி வளர்த்துக்

கொண்டார். தைராக்களுக்கும் மிைமொத்தோக்களுக்கும் மீண்டும் போர் ஏற்பட்டது. இச் சமயத்தில் யொரித்தாமோ மிைமொத்தோ வெற்றி பெற்றார்.

**காமகுராக் காலம் (கி.பி. 1192—1333) ஷோகன்களின் ஆட்சியின் தொடக்கம்**

தைராக்களின் வீழ்ச்சியின் பின்னர் பதவியேற்ற மிைமொத்தோக்களுக்குப் பலவித எதிர்ப்புகள் இருந்தன. இருப்பினும் ஆரம்ப காலத் தொல்லைகளை எளிதில் அடக்கிவிட்டு, யொரித்தாமோ தமது அதிகாரத்தை நிலைபெறச் செய்வதில் முனைந்தார்; புத்த மடாலயங்களின் ஆதரவைப் பெற்றார். தலைமைப் பதவியிழந்த பூஜிவாராக்களும் இவருக்கு ஆதரவளித்தனர். தமது அதிகாரத்தை நிலைநிறுத்திய பின்னர் கியாத்தோ சென்று மிகாடோவைப் பணிந்து வணங்கினார். 1192-ல் யொரித்தாமோ மிைமொத்தோவைப் பெருமைப்படுத்தும் வகையில் செய்-தாய்-ஷோகன் (Sei-Tai-Shogun) என்ற விருதுப் பெயரை மிகாடோ வழங்கினார். செய்-தாய்-ஷோகன் என்றால் காட்டுமிராண்டிகளை அடக்கும் தளபதி என்பது பொருளாகும்.

ஷோகன் பட்டத்தைப் பெற்ற யொரித்தாமோ, தமது இருப்பிடமாகிய காமகுரா நகருக்குச் சென்று தமது ஆட்சியைத் துவக்கினார். இவ்வாறு அவருடைய படையாட்சியின் செயலகமாக காமகுரா அமைந்ததால் அதனைப் படைகளின் பாசறை என்கிறோம். ஷோகன் பட்டத்தைப் பெற்ற யொரித்தாமோ சிறுகச் சிறுக அதிகாரங்கள் அனைத்தையும் மன்னரிடமிருந்து பெற்றுக்கொண்டு மாநில ஆளுநர்களாகத் தம் குலத்தைச் சேர்ந்தவர்களையே நியமித்தார். இவ்வாறு யொரித்தாமோ காமகுராவிலிருந்து ஆட்சி நடத்தவும், பேரரசர் கியாத்தோவிலிருந்து பெயரளவுக்கு ஆட்சி புரிந்தார். இத்தகைய ஜப்பானிய ஆட்சி முறையை இரட்டையாட்சி என்கிறோம். ஷோகன்களின் பதவியும் பரம்பரைப் பதவியாக்கப்பட்டது. மன்னர்களும் திறமையற்றவர்களாகக் காணப்பட்டனர். யொரித்தாமோவினால் தொடங்கப்பட்ட ஷோகன்களின் ஆட்சியும், இரட்டையாட்சியும், ஜப்பானில் 1868-ல் ஏற்பட்ட முன்னிலை மீட்சியின்போது ஒழிக்கப்பட்டன.

இவ்வாறு யொரித்தாமோ, காமகுராவை மையமாகக் கொண்டு, ஷோகன் பதவியிலிருந்து ஆளத்தலைப்பட்ட 1192ஆம் ஆண்டை 'ஷோகன் ஆட்சியின் தொடக்க காலம்' என்கிறோம். யொரித்தாமோவிற்குப் பின்னர் அவரது மாமனாரான ஹோஜோவின் குடும்பத்தார் ஷோகன் பதவியை வகித்தனர் (1203-1333).

காமகுரா காலத்தின் மிகவும் சிறப்பான நிகழ்ச்சி, புத்த மதத்தின் புதிய கோட்பாடுகள் ஜப்பான் முழுவதும் பரவியதாகும். முழுக்க முழுக்க ஜப்பான் நாட்டிற்கே உரித்தான சுய பண்பாட்டோடு இம் மதம் கடைப்பிடிக்கப்பட்டது. பொதுமக்களும் படைக்குலத்தினரும் இம் மதத்தைப் பின்பற்றினர். இதுவரை இம் மதத்தை கியாத்தோவிலிருந்த அரசவையினரும், அரச குடும்பத்தினரும், பிரபுக்களும் மட்டுமே பின்பற்றியிருந்தனர். ஆனால், 14ஆம் நூற்றுண்டில் புத்தமதம் ஜப்பானியர் அனைவராலும் பின்பற்றப் பட்டது எனலாம்.

### அஷிகாகா ஷோகன்கள் - முராமாச்சி காலம் (கி.பி. 1333—1573)

மங்கோலியர்கள் சீனுவை வென்ற பின்னர் ஜப்பான்மீது 1281-ல் படையெடுத்தார்கள். ஆனுல், காமகுரா ஷோகன்கள் மங்கோலியரை விரட்டியடித்து ஜப்பானைக் காப்பாற்றினுர்கள். ஆனுல் மங்கோலியப் படையெடுப்பின் விளைவாக ஏற்பட்ட உள் நாட்டுக் குழப்பங்களிலிருந்து தங்களைக் காத்துக்கொள்ளத் தவறி விட்டனர். மங்கோலியரை விரட்ட உதவிய நிலமானியப் பிரபுக்கள், பெரும் பரிசுகளையும், நிலமானியங்களையும் கேட்டனர். ஏற்கெனவே பொருளாதாரம் சீர்குலைந்து, மக்கள் வரிச்சுமையால் துன்பமுற்றனர். இதனுல் பரிசுகள் விரும்பிய அனைவருக்கும் ஷோகனுல் பரிசுகள் வழங்க இயலவில்லை. பரிசு பெருதவர்கள் கலகம் செய்தனர். இச் சமயத்தில் கியாத்தோவில் அரசவையிலும் குழப்பங்கள் ஏற்பட்டன. இதுவரை பேரரசர், ஷோகன்களின் கைப்பாவையாய் இருந்துவந்தார். ஆனுல், 1333-ல் ஷோகனுல் தோற்கடிக்கப்பட்டு விரட்டப்பட்ட பேரரசர், அஷிகாகா தாக்காஜி (Azhikaga Takauji) என்பவரின் துணைகொண்டு ஷோகனைத் தோற்கடித்து, காமகுரா நகரை அழித்தார். பேரரசருக்குத் துணை நின்ற அஷிகாகா தாக்காஜி ஷோகனுக அமர்த்தப்பட்டார். ஆனுல், இவரைப் பின்பற்றி வந்த ஷோகன்கள் திறமையற்றவர் களாகக் காணப்பட்டனர். ஜப்பானில் எழுந்த வலிமையுற்ற நிலமானியப் பிரபுக்களும் படையாதிக்கப் பிரபுக்களும் ஷோகன் ஆட்சியை எதிர்த்தனர். அஷிகாகாக்களின் ஆட்சியை ஜப்பானிய மாநில ஆட்சியாளர்கள் ஏற்க மறுத்தனர். இதனுல் உள்நாட்டுப் போர்கள் ஆரம்பமாயின. இவர்கள் காலத்தில் வர்த்தகமும், கலையும், பொருளாதார வளர்ச்சியும் ஏற்பட்டிருந் தாலும், நாட்டில் அமைதி நிலவவில்லை. மைய அரசின் ஆதிக்கமும், ஷோகன்களின் செல்வாக்கும் குறைந்தன. நாடு பிளவுபட்டது. பல படைப் பிரபுக்கள் தாங்களே ஆட்சி நடத்தத் தொடங்கினர். இத்தகைய படைக் குலத்தவர்களுள் மிகவும்

செல்வாக்கு வாய்ந்தவரான ஒதா நொபுநாகா என்பவர் சிறப்பிடத்தைப் பெறுகின்றார்.

இக்கட்டான சூழ்நிலையில் படைத் தலைவர்களின் பிடியிலிருந்தும், மற்ற உள்நாட்டுத் தன்னலவாதிகளின் பிடியிலிருந்தும் மீட்டு, ஜப்பானை ஒன்றிணைத்த பெருமை கீழ்க்காணும் முப்பெரும் வீரர்களைச் சாரும். அவர்கள் நொபுநாகா (Nobunaga), ஹிதயோஷி (Hidayoshi), ஐயேயாசு ஆகியோர் ஆவர். இவர்களுள் கடைசி இருவரால் ஏற்படுத்தப்பட்ட அரசியல் முறைதான் 19ஆம் நூற்றாண்டின் மைய காலம் வரை ஜப்பானில் நிலைத்து நின்றது. அஷிகாகாக்களின் காலத்தில் ஏற்பட்ட உள்நாட்டுக் குழப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு தங்கள் வலிமையினை வளர்த்துக் கொண்டவர்கள் இவர்கள். நொபுநாகா என்பவர் தமது படை வலிமையால் அஷிகாகா ஷோகன்களை அழித்து, பின்னர் கியாத்தோ நகரையும் 1568-ல் கைப்பற்றினார். புத்த மடாலயங்களின் செல்வாக்கினை ஒழித்தும், படைப் பிரபுக்களை வென்றும் ஜப்பானின் மையப்பகுதி முழுவதையும் தம் ஆணைக் கீழ்க் கொண்டு வந்தார். ஆனால், நொபுநாகா 1582-ல் கொலை செய்யப்பட்டார். இவருக்குப்பின் இவரது மிகச் சிறந்த தளபதியான ஹிதயோஷி ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டார். இவரை ஜப்பானிய நெப்போலியன் என்றும் பெருமையுடன் அழைப்பார்கள். இவர் தம்முடைய படைவலியின் துணையாலும், மிகச்சிறந்த தளபதியான ஐயேயாசுவின் துணையாலும், உள்நாட்டுக் குழப்பத்தில் மூழ்கிக்கிடந்த ஜப்பானை ஒற்றுமைப்படுத்தினார். படைப் பிரபுக்களின் கொட்டம் ஒடுக்கப்பட்டது. பேரரசரின் தலைமை மீண்டும் ஜப்பான் முழுவதும் பரவியது. இவ்வாறு ஜப்பானிய எதிர்ப்புகளை முறியடித்து மீண்ட ஹிதயோஷி, தம்மிடம் மிகச்சிறந்த படையொன்று இருப்பதனைக் கண்டு, அதனைப் பயன்படுத்த முயன்றார். ஜப்பானிய வரலாற்றில் முதல்முறையாக, ஜப்பானுக்கு அப்பாலிருந்த கொரியாவைத் தாக்கிப்பிடிக்க எண்ணம் கொண்டு செயல்பட்டார். 1592-ல் ஜப்பானியப் படைகள் கொரியாவில் காலடி எடுத்துவைத்தன; வெகு எளிதில் கொரியப் படைகளை வென்று, தலைநகரான செவுலையும் கைப்பற்றி, மேலும் முன்னேறின. தரைப் போரில் மாவீரரான ஹிதயோஷி, கடற்போரில் திறமையற்றுக் காணப்பட்டார். எனவே கொரியா முழுவதையும் வென்ற இவர், கொரியர்களின் எதிர்ப்புக் காரணமாகவும், கடற்படையின் திறமையின்மை காரணமாகவும் கொரியாவைவிட்டு வெளியேறினார். 1598-ல் ஹிதயோஷி இறந்த பின்னர், கொரியாவிலிருந்த ஜப்பானியப் படைகள் முழுவதும் திரும்ப அழைத்துக் கொள்ளப்பட்டன.

ஹிதயோஷி இறப்பதற்கு முன்னர் தமது மகனை சிறு வயது பாலகனை ஷோகனாக நியமனம் செய்து, அவன் ஆட்சிப் பொறுப் பேற்கும் வரை, ஆட்சி நடத்த ஒரு குழு ஒன்றினை ஏற்படுத்தி யிருந்தார். அக் குழுவில் அவரது தலைசிறந்த படைத் தளபதியான ஐயேயாசும் இருந்தார். ஐயேயாசு தமக்கு இருந்த எதிர்ப்புகள் அனைத்தையும் முறியடித்து, பின்னர்-1603-ல் தாமே ஷோகனானார். இவர் ஏற்படுத்திய ஷோகன் பரம்பரைதான் தொகுகாவா ஷோகன் பரம்பரை எனப்படுவது. இவர் தம்முடைய தலைநகரான எதோ (Yedo) நகரை ஷோகனின் ஆட்சியிடமாக மாற்றிக் கொண்டார். தொகுகாவா ஷோகன்கள் 1603-லிருந்து 1867 வரை ஜப்பானைத் தொடர்ந்து ஆண்டனர். தொகுகாவாக்களின் ஆட்சி பின்வரும் அத்தியாயத்தில் மேலும் விளக்கப்பட்டிருக்கின்றது.

## இயல் ஒன்று

# 1. சீனாவில் மஞ்சுப் பேரரசு (1644-1912)

### பேரரசின் தோற்றம்

சீனப் பேரரசின் வடகிழக்கு எல்லையாக அமைந்திருந்தது மஞ்சூரியா. மஞ்சூரியாவின் தென்பகுதியில் சீனர்களும், வட பகுதியில் மங்கோலியர்களும், இடைப்பட்ட பகுதியில் 'துங்கு' (Tungus) என்ற பிரிவினரும் வாழ்ந்தனர். துங்குகளும், மங்கோலியர்களும் திருமணக்கலப்பின் விளைவாக இணைந்தனர். தெற்கிலிருந்த சீனப் பேரரசைப் பின்பற்றி, 'துங்கு' பிரிவினர் ஆட்சித் துறை, வேளாண்மை, பண்பாடு, சமயம் போன்றவைகளை அமைத்துக்கொண்டனர். சீனாவை 'மிங்' வமிசத்தினர் ஆண்ட போது, மஞ்சூரியா சீனப் பேரரசின் மேலாண்மையை ஏற்றது. ஆனால் 17ஆம் நூற்றாண்டின் துவக்கத்தில் 'மிங்' பேரரசு வலிமை குன்றியபோது, மஞ்சூரியாவிலிருந்த 'துங்குகள்' எதிர்ப்பியக்கத்தைத் தொடங்கினர். மஞ்சூரியர்கள் சீனப் பேரரசின் எல்லைகளைத் தாக்கி; தங்கள் ஆதிக்கத்தை விரிவுபடுத்திக்கொள்ள முயன்றனர்.

மஞ்சூரியாவிலிருந்த 'துங்கு' குலத்தினரிடையே உள்ள உட்பூசல்கள் நூர்ஹாச்சி (Nurhachi) என்ற தலைவனால் 1616-ல் முடிவுக்குக் கொண்டுவரப்பட்டன. 'துங்கு' குலத்தினர் அனைவரையும் ஒருங்கிணைத்து வலிமை பொருந்திய படையொன்றினை உருவாக்கிச் சீனப் பேரரசின் எல்லைப் பகுதிகளைத் தாக்க ஆரம்பித்தார் நூர்ஹாச்சி. அவரது தாக்குதல்களை முறியடிக்க 'மிங்' அரசு எடுத்த முயற்சிகள் பலனளிக்கவில்லை. நூர்ஹாச்சி இறப்பதற்கு முன்னர் மஞ்சூரியாவிலிருந்த சீனப் பேரரசு பகுதிகளை வென்று, முக்டன் நகரைத் தமது தலைநகராக்கிக் கொண்டார்.


காம்சட்கா
ரு ஷி யா
சாகலின்
குரைல் தீவுகள்
மஞ்சூரியா
மங்கோலியா
விளாடிவாஸ்டக
முக்டன்
ஜப்பான் கடல்
பீகிங்
தியன்சின்
கொரியா
டோக்கியோ
சீனு
ஒசாகா
ஷிகொகு
கியூஷு
ஷாங்காய்
பசிபிக் பெருங்கடல்
ரியூகியூ தீவுகள்
பார்மோசா
காண்டன்
ஜப்பான்

1626-ல் நூர்ஹாச்சி இறந்த பின்னர் அவரது மகன் 'அபஹாய்' (Abahai) என்பவர் துங்குகுலத் தலைவரானர். அவர் சீன முறைகளைப் பின்பற்றித் தமது வல்லாட்சியை ஏற்படுத்த முனைந்தார். இதன் முதற்படியாகத் தமது குலப்பெயரை 'மஞ்சு' என மாற்றிக் கொண்டார். 'மஞ்சு' என்ற பெயர், 'போதிசத்வா மஞ்சுஸ்ரி' (Bodhisatva Manjusri) என்ற துங்கு குலத்தினரின் பண்டைய சமய, பண்பாட்டு முறைகளை உருவாக்கித் தந்த ஞானியின் நினைவாக ஏற்படுத்தப்பட்டது என்று கருதப்படுகின்றது. தமது குலப் பெயரை 'மஞ்சு' என மாற்றியது போலவே தமது அரசின் பெயரையும் முதலில் 'சின்' (Chin-Gold) என்றும், பின்னர் 'சிங்' (Ching-Pure) என்றும் மாற்றிக்கொண்டார். 'சிங்' அல்லது 'தூய்மையான' என்ற பெயரை ஏற்றுக்கொள்ளக் காரணம் தாங்கள் சீனவின் 'மிங்' அரச குலத்தினருக்கு எவ்வகையிலும் தாழ்ந்தவர்களல்லர் என்ற தன்னம்பிக்கை பெறவேண்டியே ஆகும். 'மிங்' என்ற சொல்லுக்கு 'ஒளி பொருந்திய' என்று பொருள். இதனை ஒத்தே தம்முடைய அரச குலத்தின் பெயரையும் 'சிங்' (Ching) என்று மாற்றிக்கொண்டார்.

மஞ்சு குலத்தோன்றலான அபஹாய் 1638-ல் கொரியாவை வென்று அடிபணியச் செய்தார். மங்கோலியப் பகுதிகளை வென்ற பின்னர், சீனவையும் வெல்லும் எண்ணம் கொண்டு தெற்கு நோக்கி முன்னேறினர். சீனப் பெருமதிலை அடைந்த அவர், அப் பெருமதிலைக் கடந்து சீனவைத் தாக்குவதற்கான திட்டங்களை உருவாக்கிக் கொண்டிருந்தார். இதற்கிடையில் சீனவில் 'மிங்' அரச குலத்திற்கெதிராகப் புரட்சி ஏற்பட்டது. பஞ்சம், பட்டினி, வரிப்பளு, முறையற்ற ஆட்சி, இவைகளுக் கெதிரான மிகப்பெரிய புரட்சி வெடித்தது. இப் புரட்சியாளர் களின் படை பீகிங் நகரைக் கைப்பற்றியது. இதனையுணர்ந்த கடைசி மிங்குலப் பேரரசர் தற்கொலை செய்து கொண்டார் (1644). சீனப்படைத் தலைவரான உ-சான்-குயி (Wu-San-Kui) என்பவர் புரட்சிப் படைகளை முறியடித்து, மிங் குலத்தினரின் ஆட்சியை மீண்டும் நிலைபெறச் செய்யும் முயற்சிகளை மேற் கொண்டார். இந்நிலையில் சீனப் பெருமதிலுக்கு வெளியே காத்துக் கொண்டிருந்த மஞ்சுக்களின் உதவியை நாடினர். பீகிங்மீது படையெடுக்க திட்டம் தீட்டிக் கொண்டிருந்த மஞ்சுக்கள், இவ்வரிய வாய்ப்பினை உளமார வரவேற்றனர். மஞ்சுக்களின் படை பீகிங் நோக்கி விரைந்தது; புரட்சிப்படைகள் பீகிங்கிலிருந்து விரட்டி யடிக்கப்பட்டன. பீகிங் நகர் பிடிபட்டது. புரட்சிப் படை யினரிடமிருந்து பீகிங்கை விடுவித்த மஞ்சுக்கள், அந் நகரிலிருந்து வெளியேறுவதாக இல்லை. இதனை உணர்ந்த உ-சான்-குயி, வேறு

வழியின்றி மஞ்சுக்களுடன் சேர்ந்துகொண்டார். பீகிங் தாக்குதல் நடைபெறும்போதே அபஹாய் இறந்துபட்டார். எனவே அவர்து மகன், ஆறு வயது பாலகன், முதல் மஞ்சுகுலப் பேரரசராக அறிவிக்கப்பட்டார். தங்களுக்கிருந்த எதிர்ப்புகள் அனைத்தையும் பதினைந்து ஆண்டுகளுக்குள் முறியடித்து, மஞ்சு குலத்தினர் மீண்டும் சீனாவில் நிலைத்தனர். இவர்களது ஆட்சி 1644-லிருந்து 1912-ல் முதல் சீனக் குடியரசு ஏற்படும்வரை நிலைத்து நின்றது.

## மஞ்சு குலத்தினரின் தனிப்பண்புகள் புகுத்தப்படல்

சீனாவை வென்று அடிமைப்படுத்திய மஞ்சுக்கள், சீன அரசியல், சமய, பண்பாட்டு முறைகளால் அடிமைப்படுத்தப்பட்டனர். சீன அரசியல் பண்பாட்டு முறைகளைப் பெரும்பாலும் அப்படியே ஏற்றுக் கொண்டுவிட்டபோதிலும், ஒருசில முக்கிய மாறுதல்களைச் செய்யத் தவறவில்லை.

முதலாவதாக, சீன அரசின் உயர்பதவிகள் அனைத்தும் மஞ்சுகுல உயர் பிரபுக்களுக்கே கொடுக்கப்பட்டன. ஒருசில உயர்பதவிகளில் மட்டும் மஞ்சுப் பிரபுக்களுடன் சீன அதிகாரிகளும் நியமிக்கப்பெற்றனர். ஆனால், கீழ்நிலைப் பதவிகளில் 80-லிருந்து 90 விழுக்காட்டினர் சீனர்களாகவே இருந்தனர்.

இரண்டாவதாக, சீனர்களின் தோற்றத்தினை மாற்றத் தீவிர முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. 'மிங்' காலத்துச் சீன ஆடைகள் அணிவது தடைசெய்யப்பட்டது. மஞ்சு குலத்தினரின் ஆடையமைப்புகளையே சீனர்களும் பின்பற்ற வேண்டுமெனச் சட்டமியற்றப்பட்டது. அடுத்து ஆண்கள் அனைவரும் தலையின் முன் பகுதியை மழித்துவிட்டு, பின்பகுதியில் சிறிய பின்னல் (Pig-Tail-or Quwe) ஒன்றினை வைத்துக்கொள்ள வேண்டுமென வற்புறுத்தப்பட்டது. மஞ்சுக்களின் அடிமைகள் என்ற எண்ணத்தைச் சீனர்களிடையே உருவாக்கவே இம் முறைகள் புகுத்தப்பட்டன. இம் மாற்றங்களை ஏற்றுக்கொள்ள மறுத்தவர்களுக்குக் கடுமையான தண்டனைகள் வழங்கப்பட்டன. இத் தண்டனைக்குப் பயந்தவர்களில் சிலர் தற்கொலை செய்துகொண்டனர். பலர் வாழ்க்கையையே வெறுத்துத் துறவிகளாயினர். சீனப் பெண்கள் மஞ்சு குலத்தினரின் ஆடைகளையே பின்பற்ற வேண்டுமென வற்புறுத்தப்படவில்லை. ஆனால், அவர்கள் பாதங்களைத் துணியால் இறுக்கிக்கட்டி (Foot Binding), சிறியதாக ஆக்குகின்ற பழக்கம் தடைசெய்யப்பட்டது. ஆனால் இத் தடையை முற்றிலும் செயல்படுத்த இயலவில்லை. மஞ்சுகுலப் பெண்டிருக்கு அப் பழக்கம் இல்லையென்பது குறிப்பிடத்தக்கது.

மூன்ருவதாக, மஞ்சுகுலப் பிரபுக்கள் தங்கள் பேர்ராற்றலைக் காத்து, மேலும் வளர்த்துக்கொள்ளும் வகையிலும், சீனப் பண்பாட்டியல்களில் மயங்கி, தங்கள் தனித்தன்மையை இழந்து விடக் கூடாதென்றும் வற்புறுத்தப்பட்டனர். இதற்காகவே மஞ்சு மொழியை வளர்க்கவும் பாடுபட்டனர். மொழியாலும், தங்கள் மரபுகளைக் கடைப்பிடிப்பதாலும், தாங்கள் சீனுவில் தனித்து இயங்கமுடியும் எனவும் நம்பினர். ஆனுல், பிற்காலத்தில் மஞ்சுக்கள் தங்கள் தாய்மொழியினை மறந்து சீனமொழியையே ஏற்றுக்கொண்டுவிட்டனர். பதினெட்டாம் நூற்ருண்டின் ஆரம்பத்திலேயே மஞ்சுமொழி மறையத் தொடங்கிற்று. மஞ்சு குலப் பேரரசர்கள் சீனமொழியின் வளர்ச்சியிலும் மேன்மையிலும் பெரும் அக்கறை காட்டினர். துருக்கிஸ்தான் மாநிலத்தில்மட்டும் இன்றும்கூட மஞ்சுமொழியைப் பேசுபவர்கள் வாழ்கின்றனர்.

நான்காவதாக, மஞ்சுக்கள் தங்கள் இனத் தூய்மையை, காப்பாற்றிச் சமூகத்தில் சீனர்களைவிட உயர்ந்த நிலையில் இருக்க வேண்டுமெனக் கருதப்பட்டது. இதன் காரணமாகவே மஞ்சுக்கள்-சீனர்கள் கலப்புத் திருமணம் தடைசெய்யப்பட்டது. மஞ்சுகுலப் பேரரசர்களும் சீனப் பெண்களை மணம் செய்வது தடைசெய்யப் பட்டது. ஆனுல், மஞ்சுக்கள்-சீனர்களின் இரத்தக் கலப்பினைத் தடுக்க இயலவில்லை. முதல் இரண்டு மஞ்சுப் பேரரசர்களின் அந்தப்புரங்களில் சீன அழகிகள் இடம் பெற்றிருந்தனர். மூன்ருவது, நான்காவது மஞ்சுப் பேரரசர்களை ஈன்றெடுத்த வர்கள் சீனப் பெண்களே எனவும் கருதப்படுகின்றது. பதினெட்டாம் நூற்ருண்டின் தொடக்கத்திலிருந்தே மஞ்சுக்கள், சீனர்கள் என்ற பாகுபாடு மறையத் தொடங்கியது. இத்தகைய ஒரு சில மாறுதல்களைத்தவிர (அவைகளும் விரைவிலேயே மறைந்து பட்டன) மற்ற வகைகளில் அப்படியே சீனமுறைகளை ஏற்றுப் பின்பற்றினர்.

சீன அரசகுலமான 'மிங்' பேரரசை அழித்துச் சீனுவில் ஆதிக்கம்பெற்ற மஞ்சுக்கள், அந்நியராக இருந்தாலும், சீனப் பண்பாடுகளையும், சமயத்தினையும், அரசு முறைகளையும் விரும்பி யேற்றுக் கொண்டிருந்தனர். சீனர்களைப் போலவே உருவ அமைப்பையும் கொண்டிருந்த மஞ்சுக்கள், மிகவிரைவில் சீன மக்களின் ஆதரவையும் பெற்றனர். வெற்றிப் பெருமிதத்துடன் சீனுவில் நுழைந்த மஞ்சுக்களை, மிங் பேரரசின் எதிரிகளாய் இருந்த செல்வந்தர்கள், பிரபுக்கள் வரவேற்று அடிபணிந்தனர். இம் மக்களின் ஆதரவைப் பெற்ற மஞ்சுக்கள் வெகு எளிதில் சீனு முழுவதையும் வென்று தங்களது ஆட்சியை நிலைபெறச் செய்தனர்.

## மஞ்சு குல மாமன்னர்களுள் இருவர்

சீனுவையாண்ட மஞ்சுகுலப் பேரரசர்களுள் மிகவும் சிறப்பு வாய்ந்தவர் காங்-சி (Kang-Hsi) என்பவராவர். இவர் 1661-லிருந்து 1722 வரை அறுபத்தோர் ஆண்டுகள் ஆட்சி புரிந்திருக்கின்றார். ஐரோப்பிய வரலாற்றில் மிகச்சிறப்புப் பெற்றிருக்கின்ற பிரெஞ்சுப் பேரரசர் பதினுன்காம் லூயியும், ருஷியாவைப் பழமைப் பிடியிலிருந்து விடுவித்து, புத்தொளி வீசச்செய்த மாமன்னர் பீட்டரும், திருக்குரான்வழி நின்று அரசோச்சுவதே தமது தலையாய கடமை எனக் கருதி, அதன் வழிநடந்து மொகலாயப் பேரரசின் கடைசி மாமன்னராக விளங்கிய அவுரங்கசீபும் இவரது சம காலத்தவர்களாவர். இத்தகைய முப்பெரும் பேரரசர்களுக்கு எவ்விதத்திலும் காங்-சி பேரரசர் குறைந்தவரல்லர். அவரது பேரரசும், மாமன்னர் பீட்டரைத் தவிர்த்து மற்றவர்களுடையதைக் காட்டிலும் விரிந்து பரந்து கிடந்தது. காங்-சி மன்னரின் பேரரான சியன்-லுங் (Chien Lung 1736–1796) என்பவரும் தமது பாட்டனுரைப் போலவே ஆற்றல் மிக்கவராய் இருந்திருக்கின்ருர். இவரது சமகாலத்து ஐரோப்பிய மாமன்னர்களான மாமன்னர் பிரடரிக் (பிரஷ்யா), பேரரசியார் காதரின் (ருஷியா) ஆகியோரைப் போலவே இவரும் செயற்கரிய சாதனைகள் பல புரிந்தவர். இவரது காலத்தில்தான் மஞ்சுப் பேரரசு மிகவும் உன்னத நிலை அடைந்தது. இவருக்குப்பின்னர் பதவியேற்ற மஞ்சுகுல மன்னர்கள் திறமையற்றுக் காணப்பட்டனர். உள்நாட்டுக் குழப்பங்கள் தோன்றின. நடுவண் அரசின் திறமை குன்றியது. திறமையின்மையும், பொறுப்பின்மையும் வளர்ந்தன. மஞ்சு குலத்தின் வீழ்ச்சி ஆரம்பமானது. இத்தகைய சீர்கேடுகளைக் களைந்து சீர்மிகு ஆட்சியை ஏற்படுத்தும் திறன்படைத்த அரசர்கள் தோன்றவில்லையெனினும், இருபதாம் நூற்ருண்டின் தொடக்கம்வரை மஞ்சுகுலம் சீனுவில் நிலைத்து நின்றது வியப்பையே அளிப்பதாய் உள்ளது.

காங்-சி, சியன்-லுங் போன்ற பேரரசர்களின் காலத்தில்தான் சீனுவின் எல்லைகள் பெரிதும் விரிவடைந்தன. மஞ்சூரியாவின் வடஎல்லையான ஆமூர் நதி (River Amur) வரையிலும் மஞ்சுக்களின் அதிகாரம் வளர்ந்திருந்தது. மங்கோலியர்கள் முழுவதும் அடக்கப்பெற்றுப் பணிந்தனர். சீனுவின் வடஎல்லை மாநிலமாக சிங்கியாங் (Sinkiang) மாநிலம் அமைந்தது. திபெத்து முழுவதும் அடிபணிந்தது. நேபாளம் மஞ்சுக்களின் ஆட்சியை ஏற்றுக் கொண்டது. பர்மா, பணிந்து திறை செலுத்தியது. அன்னம் அரசு (வியட்நாம்), பார்மோசா தீவு ஆகியவை பேரரசுப் பகுதிகளாக மாறின. ரியுகுயு (Ryukyu) தீவுக் கூட்டங்களும்,

கொரியாவும் மஞ்சுக்களுக்குப் பணிந்து திறை செலுத்தின. இவ்வாறு சீன வரலாற்றில் முதன்முறையாக மாபெரும் பேரரசை உருவாக்கிய பெருமை காங்-சி, அவரது பேரர் சியன்-லுங் ஆகிய இவ்விரு பேரரசர்களையே சாரும். ஆனல் இத்தகைய மாபெரும் பேரரசைக் கட்டிக்காக்கும் வலிமைபெற்ற பேரரசர்கள் இவ்விருவருக்குப் பின்னர் மஞ்சு குலத்தில் தோன்றவில்லை.

காங்-சி, சியன்-லுங் பேரரசர்கள் காலத்தில் மஞ்சுப் பேரரசு ஏற்றமிகு நிலையை அடைந்தது. மக்கள் தொகை இரு மடங்காய் உயர்ந்தது. வர்த்தகம் பெருகியது. வேளாண்மை சிறந்தது. கலைகளும் இலக்கியங்களும் வளர்ந்தன. மக்கள் அமைதியான, வளமான வாழ்வினை மேற்கொண்டனர்.

போரிடுவதில் மட்டுமன்றிக் கலை, இலக்கியப் பணிகளிலும் காங்-சி பேரரசர் செயற்கரிய செயல்களைப் புரிந்து, சீன வரலாற்றில் மங்காத புகழ்பெற்றிருக்கின்ருர். அவரது சாதனை முத்துகளில் மூன்றினை மட்டும் ஈண்டுக் குறிப்பிடுவோம். ஏனெனில் இம் மூன்று சாதனைகளுமே இவருடைய மேன்மையை எடுத்துக்காட்டும் என்பதில் ஐயமில்லை.

1. சீன மொழிச் சொற்களைத் (Characters) தொகுத்து, 40,000 சொற்களைக் கொண்ட கலைச்சொல் அகராதி ஒன்றினை உருவாக்கினர். இவ்வகராதி இன்றும்கூட சீன மொழியியலில் மிகச்சிறந்த இடத்தினைப் பெற்றுள்ளது.

2. எழு நூற்றுக்கும் அதிகமான மடலங்கள் (Volumes கொண்ட கலைக்களஞ்சியம் (Encyclopeadia) ஒன்றனைச் சீன மொழியில் உருவாக்கினர். இக் கலைக்களஞ்சியத்தில் குறிப்பிடப் படாதவை எதுவுமே இருக்க முடியாதெனக் கருதப்பட்டது. இத் தொகுப்பு காங்-சி பேரரசர் இறந்த பின்னர் வெளியிடப்பட்டது.

3. சீன இலக்கியத் தொகுப்பு ஒன்றும் உருவாக்கப்பட்டது. இந் நூலில் இதுவரை சீன மொழியில் எழுதப்பட்டிருந்த இலக்கியங் களின் பட்டியல், முக்கியக் குறிப்புக்களுடனும், திறனய்வுடனும் இடம்பெற்றிருந்தன. இந் நூலில் கவிதைகள், கட்டுரைகளுடன் வரலாற்றுக் குறிப்புக்களும் இடம்பெற்றிருந்தன.

காங்-சி பேரரசர் தமது ஆட்சியின் ஆரம்பகாலத்தில் ஐரோப்பிய வர்த்தகர்களை வரவேற்ருர்; தடையற்ற வர்த்தக உரிமைகளை வழங்கினர். ஆனல், ஐரோப்பிய வர்த்தகர்களின் திமிரான போக்கும், இவ் வர்த்தகர்களைப் பின்பற்றிச் சீனவில்

நுழைந்த கிறித்தவ சமயப் பரப்பூழியர்களின் வெறிச் செயலும், ஆணவப்போக்கும், காங்-சி மன்னரின் வெறுப்பினைத் தூண்டிவிட்டன. ஐரோப்பிய வர்த்தகர்களைக் கண்காணிக்கவும், பின்னர் இரண்டு துறைமுகங்களைத் தவிர மற்றவைகளிலிருந்து அவர்களை வெளியேற்றவும், சமயப் பரப்பூழியர்களை வெளியேற்றவும் ஆணைகள் பிறப்பித்தார். இவருக்குப் பின்னர் வந்தவர்களில் சியன்-லுங் (Chien-Lung 1736-1796), தோ-காங் (Tao Kang 1821-1850), சின்-ஃபெங் (Hsien Feng 1851-60), பேரரசியார் ஸு-ஷி (Tsu-Shi) போன்றோர் சிறப்புப் பெற்றவர்களாக இருந்தாலும், 19ஆம் நூற்றாண்டின் இடையிலிருந்து மஞ்சு குலத்தினரின் திறமையின்மை வெளிப்பட்டது. ஐரோப்பியரின் வலிந்து நுழைகின்ற வர்த்தக முறைகளும், அதன் விளைவாக ஏற்பட்ட அபினிப் போர்களும், மக்கள் புரட்சிகளும் (தைப்பிங் கலகம்), இக் கலகத்தையடக்க ஐரோப்பியர்களின் துணையை நாடியதும், சீனுவின் வலிமை குன்றிய நிலையினை உலகிற்கு எடுத்துக்காட்டியது. சீனுவின் வலிமையற்ற தன்மையை ஐரோப்பியர்கள் ஓரளவிற்கு உணர்ந்திருந்தாலும், சீனுமீது முழுத் தாக்குதல் நடத்த அஞ்சினர். ஆனல், மேஜிப் புரட்சியின் பின்னர் ஐரோப்பியரைப் பின்பற்றி வளர்ந்த ஜப்பான், கொரியப் பிரச்சினையின் காரணமாகச் சீனுவுடன் போர்தொடுத்து வென்றது (முதல் சீன ஜப்பானியப் போர் 1894-95). இப் போருக்குப் பின்னர், ஐரோப்பியர்கள் அனைவரும் சீனுவைத் தங்களுக்குள் பங்கு போட்டுக்கொள்ள முனைந்தனர். அந்நியர்களின் இச் செயல்களைத் தடுக்கும் திராணியற்றுக் காணப்பட்ட மஞ்சுகுல அரசிற்கு எதிரான சீர்திருத்த இயக்கங்களும், கலகங்களும் ஏற்பட்டன. இக் கலகங்களைப் பேரரசியார் தமது திறமையினுல் அந்நியர்களுக்கெதிரான கலகமாகத் திசைதிருப்பிவிட்டார். இது பாக்ஸர் கலகமெனக் குறிப்பிடப்படுகின்றது. இவைகளைப்பற்றியும், மஞ்சு குலத்தின் வீழ்ச்சியைப் பற்றியும் பின்வரும் இயல்களில் விளக்கமாகக் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

## மஞ்சு ஆட்சி முறை

### நடுவண் அரசு

சீனுவை வென்று அடிமைப்படுத்திய மஞ்சுக்கள் சீன அரசியல் பண்பாட்டு முறைகளால் அடிமைப்படுத்தப்பட்டனர். 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் மஞ்சுக்கள் தங்களது பண்டைய பண்பாட்டு முறைகளை முற்றிலும் மறந்துவிட்டவர்களாய்க் காணப்பட்டனர். 'மிங்' பேரரசர்களின் அரசு முறைகளை ஒரு

சில மாற்றங்களுடன் அப்படியே அவர்கள் ஏற்றுக்கொண்டனர் என்பதை முன்னரே கண்டோம்.

அரசு அதிகாரங்கள் அனைத்தும் பேரரசரிடம் குவிந்து கிடந்தன. இதனுல் சீனப் பேரரசர் ஒரு வல்லாட்சியாளர் என அறியப்படுகிறுர். இறையருளினுல் (Divine Right) பேரரசரானவர் என்ற நம்பிக்கை நிலவிவந்தது. இருப்பினும் பேரரசருக்கும் சில கட்டுப்பாடுகள் உண்டு. அவை மரபுகள், வழக்காறுகள், வழிவழி வந்த பண்டைய முறைகள், சட்டங்கள் போன்றவைகளை மதித்து நடக்கவேண்டும் என்பதாகும். பேரரசருக்கு அரசோச்சுவதில் உதவிபுரிய மந்திரிசபையும், மிகப்பெரிய ஆட்சித்துறையும் உண்டு. மந்திரிகளை நியமிப்பதும், நீக்குவதும் பேரரசரே. மந்திரிகள் ஆலோசனை கூறலாம். ஆனுல் அதை ஏற்பதும், மறுப்பதும் பேரரசரின் தனியுரிமை. மஞ்சுப் பேரரசர்களின் அமைச்சரவையில் இடம் பெற்றவர்கள் அனைவரும் மஞ்சுக்களின் தொடக்ககால வெற்றிக்கு உறுதுணையாக நின்ற மாபெரும் பிரபுக்களாவர். பேரரசர் தமது பேரரசியைக்கூட மஞ்சுகுல பெரும் பிரபுக் குடும்பங்களிலிருந்தே தேர்ந்தெடுக்க வேண்டும் என்ற கட்டுப்பாடும் இருந்தது. இதன்வழி மஞ்சுகுலப் பேரரசரின் இனத் தூய்மை காப்பாற்றப்படலாம் என நம்பினுர்கள். ஆனுல், அவர்கள் எதிர்பார்த்த அளவுக்குப் பிற்காலத்தில்வந்த பேரரசர்கள் தங்களது இனத்தூய்மையைக் காப்பாற்றுவதில் அக்கறை கொள்ளவில்லை. சிலர் சீனப்பெண்களையும் மணம்செய்து கொண்டனர்.

பேரரசர் இறையருள் பெற்றவரென்றும், அவருடைய செயல்களைக் குறைகூறுவது தெய்வ நிந்தனையே என்றும் கருதப்பட்டு வந்தது. ஆனுலும் அவருக்கும் கட்டுப்பாடுகள் இருந்தன. மன்னரின் தவறுகளைக்கூட எடுத்துக்காட்டும் அதிகாரம் படைத்த நிறுவனங்களும் சீன அரசியலில் இருந்திருக்கின்றன. அரசு நெறியாளர்கள் (Censors) என்பவர்கள் மாவட்ட மாஜிஸ்திரேட்டு முதல் பாராளும் மாமன்னர் வரையிலான அரசு அதிகாரிகளின் செயல்களைத் திறனுய்ந்து, நிறை குறைகளை எடுத்தியம்பும் வலிமை பெற்றனர். இம் முறை மஞ்சு ஆட்சியின் பிற்காலத்தில் தானுக மறைந்தது. இத் தணிக்கையாளர்களும் மந்திரி சபையிலிருந்த பெருநிலப் பிரபுக்களும் ஓரளவுக்கு மன்னரைக் கட்டுப்படுத்த இயலும். இறையருளினுல் பேரரசு பதவியடைந்தவர் தாம் பேரரசர் என்ற நம்பிக்கை உருவானபோது, பேரரசரின் குற்றங் குறைகளை இறைவனேகூடச் சுட்டிக்காட்ட முடியும் எனவும் நம்பினர். நாட்டில் தோன்றும் பஞ்சமும், பட்டினியும், இயற்கையின் கோரத் தாண்டவத்தால் ஏற்படும் அழிவுகளும்

இறைவன் பேரரசர்பால் கொண்டுள்ள கோபத்தை வெளிப்படுத்த ஏற்படுத்தியவைகளே என்றும் நம்பினர். இயற்கையின் இத்தகைய செயல்களால் மக்கள் உணவின்றியும், கொள்ளை நோய்களாலும் அல்லலுறுவர்; நாட்டில் அமைதி குலையும்; மக்களின் ஆத்திரம் பொங்கும்; எரிமலையென மக்களிடையே கலகங்கள் தோன்றும்; இப் புரட்சிப் புயலில் பேரரசு வீழும். இறையருளை இழந்துவிட்டதால்தான் இத்தகைய நிகழ்ச்சிகளும், அதன் விளைவாகப் பேரரசின் வீழ்ச்சியும் ஏற்பட்டது என மக்கள் நம்பினர். சீன வரலாற்றில் ஏற்பட்ட பேரரசுகளின் வீழ்ச்சிகள் பெரும்பாலும் மக்களின் புரட்சிகளின் காரணமாகவே ஏற்பட்டன என்பதையும், இறுதிப் பேரரசு குலமான மஞ்சு குலத்தின் துயர மான வீழ்ச்சியும் மக்கள் புரட்சியின் காரணமாகவே ஏற்பட்டது என்பதையும் அறியும்போது இவையாவும் ஆண்டவன் கட்டளை யால் மக்களைக் கருவியாகக் கொண்டு ஏற்பட்ட விளைவுகளே என்ற சீன மக்களின் நம்பிக்கை பொய்க்கவில்லை என்பது புலனுகும். சீன அரசியலின் அடிப்படைத் தத்துவமாக விளங்குகின்ற 'கன்பூசியத்' தத்துவமும் இக் கருத்தினையே வலியுறுத்துகின்றது. 'மக்கள் குரலே மகேசன் குரல்' என்பது போன்ற கருத்துகள் சீன வரலாற்றேடுகளிலும் காணப்படுகின்றன. அரசியலில் மக்களுக்கு முதலிடமும், ஆட்சித்துறையினருக்கு இரண்டாவது இடமும், மூன்ருவது இறுதி இடமே பேரரசருக்கு என்றும் சீன மரபுகள் வலியுறுத்துகின்றன. இதை உணரும்போது சீனர்கள் குறிப்பிடுகின்ற இறையருள் கொள்கையின் உண்மையான விளக்கம் தெளிவாகின்றது.

பேரரசரின் அமைச்சர் குழுவில் ஆறு அமைச்சகங்கள் அல்லது வாரியங்கள் இருந்தன. அவைகள் சிவில் ஆட்சித்துறை (அதிகாரி கள் நியமனம்) நீதி, சமயச் சடங்குகள், போர், குற்றவியல், பொதுப்பணித்துறை என்பனவாகும். இவைகளுடன் மேலும் இரண்டு தனியமைப்புகளும் உண்டு. அவைகள் இராணுவத் துறையும், அரசு நெறிமுறைப்படுத்தும் நிறுவனமும் ஆகும். இத்தகைய பிரிவுகள் பொதுவாக இருப்பினும் பேரரசர்கள் தங்கள் விருப்பம்போல அமைச்சர்களின் எண்ணிக்கையையும், நிறுவனங்களின் அமைப்பு, செயல்முறைகள் ஆகியவைகளையும், மாற்றிக் கொள்ளலாம். பேரரசரின் விருப்பத்திற்கிணங்கச் செயல் படுவதே அமைச்சர்களின் நோக்கமாகவும் இருந்தது. பேரரசரின் திறமை குறைந்த காலத்தில் இவ்வமைச்சர்கள் அதிகாரங்கள் அனைத்தையும் தாங்களே கவர்ந்து கொண்டு, தன்னல மேன்மைக்குப் பயன்படுத்துவதும் உண்டு.

**நெறியாளர்கள் (Censors)**

அரசு நெறிமுறைப்படுத்துவோர் சீன அரசியலில் தனிச் சிறப்பிடத்தைப் பெறுகின்றனர். பீகிங் நகரில் மட்டும் 24 நெறியாளர்களும், மாநிலங்களில் 56 நெறியாளர்களும், இருந்தன ரென்று குறிப்பிடப்படுகின்றது. மாவட்ட மாஜிஸ்திரேட்டு முதல் மாமன்னர் வரை உள்ள அதிகாரிகள் அனைவரின் செயல் களைத் திறனய்வு செய்து, நிறை குறைகளை விருப்பு வெறுப்பின்றி, வேண்டியவர் வேண்டாதவர் என்ற பாகுபாடின்றி வெளியிட வேண்டும். இந் நெறியாளர்கள் எந்த அளவுக்கு நேர்மையுடன் செயலாற்றினர் என்பது கேள்விக்குரியதாக இருப்பினும், இவர்கள் 'அரசின் கண்ணுகவும் காதாகவும்' இருந்து அதிகாரிகளின் நேர்மையை வலியுறுத்தினர் என்பதை மறுக்க இயலாது. எடுத்துக் காட்டாக அரச மூதாட்டியார் ஸு-ஷி என்பவர் மறைந்துவிட்ட தமது கணவரான பேரரசரின் நினைவைப் போற்றுவதற்கும், வழி படுவதற்கும் ஒரு வாரிசை நியமிக்கவில்லையென்றும், அதனல் சீனர்கள் போற்றுகின்ற சிறப்பான பரம்பரை வழக்கத்தை மீறிவிட்டார் என்றும் கடுமையான அறிக்கை ஒன்றினைப் பத்தொன்பதாம் நூற்ருண்டின் இறுதியில் ஒரு நெறியாளர் துணிந்து சமர்ப்பித்தார். இவ்வறிக்கையின் உண்மை நிலையை வலியுறுத்த வேண்டியும் அதே நேரத்தில் பேரரசியாரின் கோபத்தி லிருந்து தப்பித்துக் கொள்ளவும் அந் நெறியாளர் தற்கொலை செய்து கொண்டார் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இந் நிகழ்ச்சி சீனமரபில் வந்த நெறியாளர்களின் துணிவையும், பொறுப்புடன் செயலாற்றுகின்ற மாண்பினையும் எடுத்துக்காட்டுவதாக அமைந் துள்ளது. மாநிலங்களில் இந் நெறியாளர்கள் ஒற்றர்களைப் போலவும் செயலாற்றினர். தவறிழைக்கும் பெரும் மாநில அதிகாரிகளைப் பற்றிய விளக்கக் குறிப்புகளை நடுவண் அரசுக்கு அனுப்பியும் வந்தனர். இதன் காரணமாகவே மாநில அரசுகளைக் கட்டுப்படுத்தும் வாய்ப்பினையும் நடுவண் அரசு பெற்று, தவறிழைக்கின்ற அதிகாரிகள் யாராக இருந்தாலும் தண்டித்துத் தன்து மேலாண்மையை நிலைநாட்ட முடிந்தது.

**மாநில அரசு**

சீனப் பேரரசு பதினெட்டு மாநிலங்களாகப் பிரிக்கப் பட்டிருந்தது. ஒவ்வொரு மாநிலத்திலும் நடுவண் அரசால் நியமிக்கப்பட்ட ஆளுநர் ஆட்சிப் பொறுப்பேற்றிருந்தார். இரண்டு அல்லது மூன்று மாநிலங்களின் இணைந்த ஆட்சிப் பொறுப்பைத் தலைமை ஆளுநர் ஒருவர் ஏற்ருர். பதின்மூன்று மாநிலங்கள் அவ்வாறு இணைக்கப் பெற்றிருந்தன. ஒவ்வொரு

மாநிலத்திற்கும் ஒன்பது உயர் அதிகாரிகள் நியமிக்கப்பட்டனர். இந்த ஒன்பது பேரும் ஒன்பது பிரிவினைச் சேர்ந்த உயர் பிரபுக்களாவர். இவ்வதிகாரிகள் தமது சொந்த மாநிலத்தில் அமர்த்தப்படமாட்டார்கள். மூன்றுண்டுகளுக்கு ஒரு முறை மாற்றப்படுவார்கள். நியமனம் செய்தல், பதவி உயர்வு, அதிகாரிகளை இடம் மாற்றுவது ஆகிய பொறுப்புகள் அனைத்தையும் நடுவண் அரசு ஏற்றுக்கொண்டது.

ஒவ்வொரு மாநிலத்திலும் ஆளுநருடன் படைத்தலைவர், கருவூலக் காப்பாளர், மாநிலத் தலைமை நீதிபதி, உப்புவரி அதிகாரி (உற்பத்தி-விற்பனைக் கண்காணிப்பாளர்) உணவுத் தானிய உற்பத்திக் கண்காணிப்பாளர், தேர்வாளர் (அரசு சிவில் துறை தேர்வுகளை நடத்துபவர்) என முக்கிய அதிகாரிகள் இருந்தனர்.

## மாவட்ட ஆட்சி

ஒவ்வொரு மாநிலமும் பல மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது (Hsien). மாவட்ட அதிகாரி மாஜிஸ்திரேட்டு என அழைக்கப்படுவார். அவர் அம் மாவட்ட மக்களுக்கு 'தந்தையும் தாயுமெனப்' பணியாற்ற வேண்டுமெனக் கருதப்பட்டது (Father and mother Official). சட்டம் அமைதி காத்தல், நிலவரி வசூலித்து, மாநில அரசு மூலம் நடுவண் அரசுக்கு அனுப்புதல், சிவில் குற்றவழக்குகளை விசாரித்து நீதி வழங்குதல், இறந்தவர் பட்டியல் தயாரித்தல், அரசு வழக்கறிஞராகப் பணியேற்றல், சிறைச்சாலை நிர்வாகம், விளை நிலங்கள் பற்றிய விவரங்கள், மகசூல் முறைகள் ஆகியவற்றைக் குறிப்பிடுதல், பஞ்ச நிவாரண வேலைகளை மேற்கொள்ளுதல், பொதுப்பணித்துறை ஆகியவை மாவட்ட மாஜிஸ்திரேட்டிடமே விடப்பட்டிருந்தன.

## ஊராட்சி

சீனப் பேரரசில் கடைசி ஆட்சித்துறை அதிகாரியாக மாவட்ட மாஜிஸ்திரேட்டு கருதப்பட்டார். பெரிய கிராமங்கள், சிற்றூர்கள் ஆகியவைகளின் நிர்வாகம் அவ்வூர்களைச் சார்ந்த மூத்தோர் அவையிடம் விடப்பட்டிருந்தது. மூத்தோர் அவையின் உறுப்பினர்களாகக் கற்றறிந்தோர் நியமிக்கப்பட்டனர். மூத்தோர் அவை ஊராட்சி நிர்வாகத்தின் கண்ணும் காதுமாகவும், மக்களின் எண்ணத்தைப் பிரதிபலிக்கின்ற நிறுவனமாகவும் செயல்பட்டது. சிற்றூர்களில் இருந்தவர்கள் பேரரசரைப் பற்றியோ, அவரது ஆட்சிமுறை, அதிகாரிகள், கொள்கைகள் இவைகளைப் பற்றியோ அதிகமாகக் கவலைப்படவில்லை. அவர்கள் தங்களது பழம்பெரும்

மரபுகள், பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் ஆகியவைகளின் படியே செயல்பட்டனர்.

## அரசு பணித் தேர்வுகள் (Civil Service Examinations)

சீனச் சமுதாயத்தில் கற்றறிந்தவர்கள் மிகவுயர்ந்த நிலையில் வைத்துப் போற்றப்பட்டனர். ஒவ்வொரு சீனக் குடும்பமும், தங்கள் குடும்பத்தில் ஒருவராவது தேர்வுகளில் தேர்ச்சி பெறுவதன் மூலம் குடும்பத்தின் பெருமையை உயர்த்த வேண்டுமே என ஏங்கினர். சீன அரசு நடத்தும் தேர்வுகளில் வெற்றி பெற்றவர்களுக்கே அரசுபதவி என்ற நிலையில், கல்வியார்வம் சீனர்களிடையே வளர்ந்திருந்தது. குலப்பிறப்பால் ஒருவனுக்கு அரசாங்கப் பதவி என்ற நிலை சீனாவில் இல்லை. உயர்கல்வியால், தனது திறமையால் எக்குடிப்பிறப்பினும் மிக உயர்ந்த பதவியை அடைய முடியும் என்பதைச் சீன வரலாறு வலியுறுத்துகின்றது.

ஆனால், இத்தகைய உயர்நிலையில் போற்றப்படும் கல்வி கற்பிக்க முறையான பள்ளிகள் சீனாவில் ஏற்படுத்தப்படவில்லை. சீனக் கல்வி என்பதே மூதறிஞர்களின் நூல்களைப் பயின்று மனப்பாடம் செய்தல் என்பதனையே வலியுறுத்துகின்றது. பழமையான இலக்கியங்களைக் கற்றால்தான் அரசாங்கத் தேர்வுகளில் வெற்றி காண முடியும் என்ற நிலை ஏற்பட்டிருந்தது. பண்டைய இலக்கியங்களையும், சமய நூல்களையும், தத்துவங்களையும் வலியுறுத்திய சீனக் கல்வி முறை, சீன மரபினை, பண்பாட்டு மேன்மையினை, சிறப்பினைச் சீனனுக்கு விளக்கி, அவ் வழியில் சென்று, வளமான, உயர்வான, வாழ்க்கைக்கு வழிகாட்டியது. எனினும், மாறிவரும் உலகில், வெறும் பழமைக் கருத்துகளை அப்படியே பின்பற்றியது, சீனப் பண்பாட்டு வளர்ச்சியின் தேக்க நிலையையே குறிப்பிட்டது என்றும், சீனரின் நினைவாற்றலைச் சோதித்த தேர்வு முறை, சிந்தனையாற்றலைத் தடைசெய்தது என்றும் குறை கூறுவர்.

அரசு தேர்வுகள் மூன்றாண்டுகளுக்கு ஒருமுறை சிறு நகரங்களில் நடத்தப்பெறும். அத் தேர்வுகளில் இரண்டு விழுக்காட்டினரே வெற்றி பெறுவர். இது முதல்நிலைத்தேர்வு. இரண்டாம் நிலைத்தேர்வு மாவட்டத் தலைநகரங்களில் நடைபெறும். அத் தேர்வுகளில் ஐம்பது விழுக்காட்டினர் வெற்றி பெறுவர். அத் தேர்வில் வெற்றி பெற்றவர்கள் அரசின் சிறு பணிகளில் அமர்த்தப் பெறுவர். அடுத்த கட்டமாக மாநிலத் தேர்வுகள் நடைபெறும். மாநிலத் தேர்வுகளிலும், பின்னர் பேரரசர் முன்னிலையில் நடை-

பெறும் தேர்வுகளிலும் வெற்றி பெற்றவர்கள் அரசின் மிக உயர்ந்த பதவிகளில் அமர்த்தப் பெற்றனர்.

### சமுதாய அமைப்பு

சீன மக்களில் பெரும்பாலோர் உழவுத் தொழிலையே நம்பி வாழ்ந்தனர். உழவுத்தொழிலில் ஈடுபட்டிருந்த மக்கள் சிற்றூர் களில் வாழ்ந்தனர். அச் சிற்றூர்களின் பெயர்கள், அவ்வூர்களில் உறையும் தெய்வத்தின் பெயரையோ அல்லது முக்கிய குடும் பத்தின் பெயரையோ கொண்டிருக்கும். அவ்வூர்க் கோவிலின் தலைமைக் குரு மக்களிடையே மதிப்புப் பெற்றவராகவும், அவர்களை நல்வழிப்படுத்தும் ஆசானுகவுமிருப்பார். கோவிலைச் சுற்றியிருந்த காலி இடம் வாரச்சந்தைகள். திருவிழாக்கள் போன்ற பொது நிகழ்ச்சிகளுக்குப் பயன்பட்டது.

சீனச் சமுதாய அமைப்பு குடும்ப முறையைக் கொண்டது. வயதில் மூத்தவர் குடும்பத்தலைவராக இருப்பார். சில குடும்பங் களில் கொள்ளுப்பாட்டன், பாட்டன், தந்தை, மகன், பேரன் என ஐந்து தலைமுறையினர் வாழ்வதும் உண்டு. தந்தைவழிக் குடும்ப அமைப்பில், திருமணங்கள் குடும்பத்தில் மூத்தவரால் ஏற்பாடு செய்யப்பட்டு நடத்தப்படும். ஆண் குழந்தைகளைப் பெறுவது பெருமைக்குரியதாகவும், பரம்பரை வளர்ச்சியைக் குறிப்பதாகவும் கருதப்பட்டு மகிழ்ச்சிக்குரிய செயலாகக் கொண் டாடப்படும். இளம் வயது திருமணங்கள் நடைபெற்றன். மணப் பெண் கணவன் வீட்டில் வசிக்கவேண்டும்; கணவனின் பெற் றோர்கள், மூதாதையர்களை வணங்க வேண்டும். மூத்தோரிடம் மரியாதைக் குறைவாக நடப்பது திருமண முறிவுக்கு வழி வகுக்கும். மலடி, கற்புநெறி தவறுதல், கணவனின் பெற்றோர்- முன்னோர்களை அவமதித்தல், எதிர்த்துப் பேசுதல், திருட்டுக் குணம், பொறாமை, சந்தேகம் கொள்ளுதல், உறுப்புகள் ஊன மடைதல் போன்ற காரணங்களுக்காகத் திருமண முறிவுகள் ஏற்படலாம். இருப்பினும் பெண்ணின் பெற்றோர்களின் செல்வாக்கு. செல்வ நிலை இவைகள் காரணமாக பெண்ணின் பெருமை காப்பாற்றப்படும். திருமண முறிவுகள் சீனச் சமுதா யத்தில் அவ்வளவாக ஏற்படுவதில்லை.

மூதாதையரை தெய்வமாகப் போற்றி வணங்குதல் சீனரின் மாண்பு. அதற்காகவே ஒவ்வொரு குடும்பத்திலும் ஆண் வாரிசு இருக்கவேண்டும் என விரும்புவர். சிற்சில சமயங்களில் திருமண உறவினுல் ஆண் குழந்தைகள் பிறக்கவில்லையெனில் வேறு

பெண்கள் (Concubinage) மூலமாகவேனும் ஆண் குழந்தைகள் பெற விழைவதும் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

குடும்பத் தகராறுகள் கிராம மூத்தோரவையினுல் தீர்த்து வைக்கப்பட்டன. இம் மூத்தோரவையில் குடும்பத் தலைவர்கள் அனைவரும் இடம்பெற்றிருப்பர். கிராமங்களில் ஏற்படும் தகராறுகளைத் தீர்த்துவைக்கச் சில சமாதானப் பேச்சாளர்கள்' (Peace Talkers) இருப்பர்.

கிராமத்தை அடுத்துள்ள நிலம் அக் கிராமத்துக் குடும்பங்களுக்குச் சொந்தமானது. தந்தையின் நிலத்தை அவரது மறைவிற்குப் பின்னர் மகன்கள் பங்கிட்டுக்கொள்வர். இதனுல் நிலங்கள் சிறுசிறு துண்டுகளாகப் பிரிந்துவிட வாய்ப்புகள் ஏற்பட்டன. எனினும் தீவிரச் சாகுபடி முறைகளைக் கையாண்டு ஒவ்வொருவரும் அவரவர் குடும்பங்களுக்குத் தேவையான உணவுத் தானியங்களை உற்பத்தி செய்து கொள்ள முயலுவர். வறட்சி, பஞ்சம் ஏற்படும் காலங்களில் இம் மக்கள் மிகவும் வறிய நிலையடைவர். இந்நிலையில் மனைவி மக்களைக்கூட அடிமைகளாக விற்றுவிடுகின்ற பரிதாபமான வழக்கமும் இருந்தது. இருப்பினும் மக்கள் பெருக்கத்தினிடையேயும்கூட சீனர்கள் தங்களது சிக்கனம், கடின உழைப்பு, தீவிரச் சாகுபடி முறைகள் இவைகளினுல் தங்கள் வாழ்க்கை வசதிகளை ஏற்படுத்திக்கொண்டனர்.

பொருளாதாரம்

வேளாண் பெருங்குடி மக்களுக்கு அடுத்த நிலையில் இருப்பவர்கள் கைவினைஞர்கள். முதலாளிகள், தொழிலாளிகள் என்ற பாகுபாடு இருந்தது. ஒவ்வொரு வீடும் ஒரு சிறு தொழிற்கூடமாகவே காட்சியளிக்கும். கைவினைஞர்கள் தொழிற் கழகங்களை (Craft guilds) ஏற்படுத்திக்கொண்டு, உற்பத்தியையும், விற்பனை முறைகளையும் வரையறைப்படுத்திக் கொண்டனர். தொழிற் கழகங்களுக்கிடையே ஏற்படும் தகராறுகள்,அவர்களுக்குள்ளேயோ அல்லது சில சமயங்களில் மாவட்ட மாஜிஸ்திரேட்டின் தலையீட்டினுலேயோ தீர்த்து வைக்கப்படும். புதிய வரிகள் விதிக்கப்படும் போது, மாவட்ட மாஜிஸ்திரேட்டு இத் தொழிற் கழகங்களின் ஆலோசனையை நாடுவார். இக் கழகங்கள் தொழிலாளர் நலம் பேணுவதையும் பொதுப் பிரச்சினைகளுக்கு விவாதங்கள் மூலம் முடிவு காண்பதையும் தங்கள் பணிகளாகக் கொண்டிருந்தன. இதைப்போலவே வர்த்தகர்களும் கழகங்களை ஏற்படுத்திக் கொண்டிருந்தனர். இக் கழகங்கள்தான் சீனப் பொருளாதார வளர்ச்சியின் உயிர்நாடியாய் இருந்தன.

இருபதாம் நூற்றுண்டின் தொடக்கம் வரையில் மேலே குறிப்பிட்ட முறைகளையும், கன்பூசியத் தத்துவத்தின் அடிப்படையிலான அரசியல் சமுதாயப் பண்பாட்டு முறைகளையும் பின்பற்றி வந்த சீனர்கள், ஐரோப்பிய அமெரிக்கத் தொடர்பு காரணமாக, தங்கள் பண்டைய கருத்துக்களைச் சிறிதுசிறிதாக மாற்றிக் கொள்ளத் தொடங்கிவிட்டனர். 1911-ல் சீனுவில் ஏற்பட்ட புரட்சி பண்டைய சீன அரசியல், பண்பாடுகளுக்கெதிராகத் தோன்றிய புரட்சியென்றும், அதன் பின்னர்த் தோன்றிய தேசிய சீனுவின் எழுச்சியும், தற்போது நடைபெறுகின்ற பொதுவுடைமைச் சீனுவின் ஆட்சியும், புதிய ஆனுல் பண்டைய கருத்துகளிலிருந்து மாறுபட்ட சீனுவை உருவாக்க முயற்சி செய்கின்றன வென்றும் சிலர் கருத இடமுண்டு. எனினும் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் அதிகமாகச் சீன இரத்தத்தில் ஊறிவிட்ட பழம் பெருமைக் கருத்துகளை மாற்றுவதென்பது எந்த அளவிற்கு வெற்றியைத் தேடித்தரும் என்பதைக் காலம்தான் நிர்ணயிக்க முடியும்.

# 2. சீன-ஐரோப்பியத் தொடர்பு

உரோமானியப் பேரரசு காலந்தொட்டே சீனுவிற்கும் ஐரோப்பாவிற்குமிடையே தொடர்பு இருந்திருக்கின்றது. சீனத்துப் பட்டும், நுண்ணிய வேலைப்பாடு கொண்ட பல்வேறு பொருள்களும் உரோமர்களின் அரச குலத்தினரையும், அரசவையையும் அலங்கரித்திருக்கின்றன. ஆனல், இத்தொடர்பு ஐரோப்பிய-சீன நேரடித்தொடர்பன்று. இருப்பினும் சீனத்துப் பொருள்கள் மூலமாகச் சீனவை ஐரோப்பியர்கள் ஓரளவுக்கேனும் அறிந்திருந்தனர். கி.பி. ஆரும் நூற்றுண்டில் கீழை உரோமப் பேரரசு காலத்தில் துருக்கியர்களுடன் ஏற்பட்ட தொடர்பின் விளைவாக, சீனவைப்பற்றிய செய்திகள் ஐரோப்பியரிடையே பரவியிருந்தன. பின்னர் பதின்மூன்றும் நூற்றுண்டில் மத்தியாசியாவில் ஏற்படுத்தப்பட்ட மங்கோலியப் பேரரசு, ஐரோப்பாவையும் சீனவையும் எல்லைகளாகக் கொண்டிருந்தது. இதன் விளைவாக ஐரோப்பிய-சீன நேரடி வர்த்தகத் தொடர்பு தரை வழியாக ஏற்பட்டிருந்தது. 1246-ல் ஜான்-டி-பிளானே கார்ப்பினி (Jhon de Plano Carpini) என்பவர் சீனவில் மங்கோலியப் பேரரசராக இருந்த குப்ளாய் கான் காலத்தில் சீனவிற்கு வந்தார். பிரான்சின் அரசன் ஒன்பதாம் லூயியால் அனுப்பப்பட்ட இரு தூதுகுழுக்களும் சீனவை அடைந்தன (1249, 1252). 1264-ல் வெனிஸ் நகர வணிகர்களான நிக்கோலோ போலோவும், மாஃபியோ போலோவும் சீனப் பேரரசன் குப்ளாய்கானல் வரவேற்கப்பட்டனர். பின்னர் 1275-ல் மார்க்கோ போலோ, சீனவில் பதினேழு ஆண்டுகள் தங்கியிருந்தபின்னர், கிழக்கிந்தியத் தீவுகள், மலேயா, தென்னிந்தியா வழியாக வெனிஸ் நகரை அடைந்தார். அவர் எழுதி வெளியிட்ட புத்தகம் ஐரோப்பியர்களை வெகுவாகக் கவர்ந்தது. சீனவையடைந்து, அதன் வளப்பத்தில் பங்குகொள்ள வேண்டும் என்ற பேரார்வத்தைத் தூண்டியது. ஆனல், சீனவில் மங்கோலியப் பேரரசு வீழ்ச்சியடைந்தபின்னர், தரை வழியாகச் சீனவை

அடைவது இயலாது போயிற்று. பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதியில் கடல் வழிகள் கண்டுபிடிக்கும் வரை ஐரோப்பியர்கள் சீனாவையோ, கிழக்காசியப் பகுதிகளையோ அடைய இயலவில்லை.

போர்ச்சுகீசிய மாலுமி வாஸ்கோடகாமா, இந்தியாவிற்குக் கடல்வழி கண்டுபிடித்ததன் காரணமாக, 16ஆம் நூற்றாண்டில் போர்ச்சுகீசியர் கிழக்காசிய நாடுகளுடன் வர்த்தகம் செய்யும் உரிமை பெற்றனர். போர்ச்சுகீசிய கப்பல் 1516-ல் சீனாவிலுள்ள காண்டன் துறைமுகத்தையடைந்தது. ஆரம்பத்தில் போர்ச்சுகீசியர்களைச் சீனர்கள் வரவேற்றனர். ஆனால், விரைவில் போர்ச்சுகீசியரை அமாய், நிங்போ போன்ற துறைமுகங்களிலிருந்து விரட்டியடித்தனர். போர்ச்சுகீசியர்கள் நாடு பிடிக்கும் எண்ணங் கொண்டிருக்கின்றனர் என்ற செய்தி, சீனாவிலிருந்த 'மிங்' குல பேரரசருக்கு எட்டியதே, அவர்கள் விரட்டப்படுவதற்குக் காரணமாகும். 1557-ல் மகாவோ (Macao) என்ற சிறு தீவில் தங்கி வர்த்தகம் செய்யும் உரிமை பெற்றனர். இவ்வர்த்தகமும் சீன அதிகாரிகளின் கடுமையான கட்டுப்பாடுகள், மேற்பார்வைகளின் கீழ் நடைபெற்றது.

போர்ச்சுக்கீசியர்களைத் தொடர்ந்து கத்தோலிக்கத் திருச்சபையினர் சீனாவிற்கு வந்தனர். ஃபிரான்சிஸ் சேவியர் (Francis Xavier) 1549-ல் ஜப்பான் வழியாகச் சீனா வந்தடைந்தார். சீனாவில் கத்தோலிக்க சமயம் புகுத்தப்பட்டது. 1552-ல் சேவியர் இறந்தார். அவருக்குப் பின்னர் 1582-ல் வந்த மேத்தியோ ரிக்கி (Matheeo Ricci) என்ற கத்தோலிக்கப் பாதிரியார் சீனாவில் கிறித்தவ சமயத்தைப் பரப்ப முயன்று ஆரம்ப வெற்றியும் கண்டார். சமயப் பரப்பாளர் என்பதைவிட அறிஞர் என்ற முறையில் சீன அதிகாரிகளிடையே நன்மதிப்பைப் பெற்றார். இவரைப் பின்தொடர்ந்து வந்த கத்தோலிக்கப் பாதிரிகள் சீன அரசவையில் பெருமதிப்புப் பெற்றனர். கத்தோலிக்கப் பாதிரிமார்களின் அறிவுத் திறமையையும், செயலாற்றலையும் உணர்ந்த காங்-சி என்ற மஞ்சு குலப் பேரரசர் கத்தோலிக்க சமயத்திற்கு ஆதரவளித்தார். கத்தோலிக்க திருச்சபைகள் சீனாவெங்கிலும் நிறுவப்பட்டன. கத்தோலிக்கர்களைப் பின்பற்றி, சீனாவில் நுழைந்த மற்றக் கிறித்தவ சமயப் பிரிவினர், கத்தோலிக்கர்களின் வெற்றியைக் கண்டு பொறாமையடைந்தனர். கிறித்தவர்களுக்கிடையே சீனாவிலும் சமயப்போட்டி ஆரம்பமானது. கிறித்தவ சமயத்திற்கு ஆதரவளித்துப் போற்றிய, காங்-சி பேரரசர் கிறித்தவர்கள் அனைவரையும் வெளியேற்றினார். இதன் பின்னர் சீனாவில் கிறித்தவ சமயத்திற்குப் பேரரசின் எதிர்ப்பு தொடர்ந்து இருந்தே வந்தது.

போர்ச்சுகீசியரைப் பின்பற்றி கடல்வழி கண்டுபிடிப்பதில் போட்டியிட்ட ஸ்பானியர் 1571ஆம் ஆண்டிற்குள் பிலிப்பைன் தீவுகளில் நிலைபெற்றுவிட்டனர். பிலிப்பைனிலிருந்து ஸ்பானியர் சீனாவுடன் 1575-ல் வர்த்தகத் தொடர்பை ஏற்படுத்திக் கொண்டனர்.

டச்சுகள் 1604-ல் சீனாவையடைந்தனர். ஆனால், 1604-லிலும், 1607ஆம் ஆண்டிலும், போர்ச்சுகீசியரின் தூண்டுதல் காரணமாக டச்சுகளுக்கு வர்த்தக உரிமை மறுக்கப்பட்டது. 1624-ல் பாஸ்கபோர் தீவிலும், பின்னர் பார்மோசா தீவிலும் டச்சுகள் வர்த்தக உரிமைகள் பெற்றனர். 17, 18ஆம் நூற்றாண்டுகளில் டச்சு அரசு நான்கு தூது குழுக்களை சீனாவின் மஞ்சு குலப் பேரரசரவைக்கு அனுப்பி, வர்த்தக உரிமை கோரியது. இத் தூது குழுக்கள் அனைத்தும் சீனப் பேரரசரை மண்டியிட்டு வணங்கும்படி வற்புறுத்தப்பட்டன. (Kow-Tow-என்ற சீன முறைப்படி, சீனப் பேரரசர் முன்போ, அல்லது அவரது உருவப் படத்தின் முன்போ ஒன்பது முறை விழுந்து வணங்கவேண்டும்.) இவ்வாறு மண்டியிட்டு வணங்குவதை ஐரோப்பியர்கள் வெறுத்தனர். இருப்பினும் டச்சு வர்த்தகக் குழுக்கள், சீனப் பேரரசரை வணங்கி வர்த்தக உரிமைகள் பெற்றனர். 1729ஆம் ஆண்டு முதல் காண்டன் நகரில் தங்கி, டச்சுகள் நிலையான வர்த்தகத் தொடர்பினை ஏற்படுத்திக்கொண்டனர்.

ஆங்கிலேய வர்த்தகக் கப்பல் 1637-ல் காண்டன் நகரை அடைந்தது. முதலில் ஆங்கிலேயர்களுக்கு அனுமதி மறுக்கப் பட்டாலும், பின்னர் வர்த்தக உரிமைகள் வழங்கப்பட்டது. 1699-க்கு பின்னர் ஆங்கிலேய-சீன வர்த்தகம் தொடர்ந்து நடைபெறத் தொடங்கியது. ஆங்கிலேயரைப் பின்பற்றிப் பிரெஞ்சுக் காரர்கள் 1698-லும். டென்மார்க் நாட்டுக் கப்பல் 1731-லும், ஸ்வீடன் நாட்டினர் 1732-லும், ருஷியர்கள் 1753லும், அமெரிக்கர்கள் 1784-லும், சீனாவை அடைந்து வர்த்தகத் தொடர்புகளை ஏற்படுத்திக் கொண்டனர்.

ஐரோப்பிய நாடுகள் அனைத்தும் கடல் வழியாகச் சீனத் தொடர்பை ஏற்படுத்திக் கொள்வதில் ஈடுபட்டிருந்தபோது, ருஷியர்கள் தரை வழியாக வர்த்தகத் தொடர்பை ஏற்படுத்திக் கொள்ள முயன்றனர். சீனாவின் வடக்கு எல்லையாக ருஷியா அமைந்திருப்பதால் ருஷிய-சீனத் தொடர்பு ஏற்படுவது எளிதாக அமைந்தது. ஆயினும் ஆரம்ப நிலையில் ருஷிய வர்த்தகர்கள் சீனாவுடன் வர்த்தக உறவுகொள்ள முயன்று தோல்வியடைந்தனர்.

சீன-ருஷிய எல்லைப்போர்களும் ஆரம்பமாயின. ஆனுல், சீனப் பேரரசர் காங்-சி, ருஷியப் போரைத் தவிர்க்க எண்ணி, உடன் படிக்கையொன்று செய்துகொள்ள விரும்பினுர். அதன் விளைவாக 1689-ல் நெர்ச்சின்ஸ்க் உடன்படிக்கை (Treaty of Nertchinsk) ஏற்பட்டது. இவ் வுடன்படிக்கை ஏற்படுத்துவதில் கத்தோலிக்க திருச்சபையினர் சீனர்களுக்குப் பேருதவி செய்தனர். ருஷிய-சீன தொடர்புகள் ஆரம்பமாயின. சீனு ஒரு தூது குழுவை புனித பீட்டர்ஸ்பர்க் நகருக்கு அனுப்பியது. ருஷியாவுடன் செய்து கொண்ட உடன்படிக்கைதான் சீனு மேலைநாடுகளுடன் செய்து கொண்ட முதல் உடன்படிக்கையாகும். புனித பீட்டர்ஸ்பர்க் நகருக்கு அனுப்பிய தூது குழுதான் சீனுவிலிருந்து வெளியுலகிற்கு அனுப்பப்பட்ட முதல் தூது குழுவுமாகும்.

ஐரோப்பிய-சீன உறவுகள்

சீனுவின் மஞ்சு குலப் பேரரசர்கள், ஆரம்ப நிலையில் ஐரோப்பிய வர்த்தகர்களையும், கிறித்துவ சமயப் பரப்பாளர்களை யும் வரவேற்றனர். ஆனுல், 18ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தி லிருந்து கிறித்தவ சமயத்தினரையும், ஐரோப்பிய வர்த்தகர்களை யும் சீனுவிலிருந்து வெளியேற்ற முற்பட்டனர். இதற்குக் காரணம் கிறித்தவ சமயப் பரப்பாளர்களுக்கிடையே ஏற்பட்ட தகராறு களும், அவர்களின் ஆணவமான போக்குமே ஆகும். ஐரோப்பி யர்கள் வர்த்தக உரிமைகளை வற்புறுத்தியபோது, சீனப் பேரரசு காண்டன், மக்காவோ (Macao) நகரங்களில் மட்டும் தங்கி வர்த் தகம் செய்யும் உரிமைகளை வழங்கியது (1757). காண்டன் நகரிலும் ஐரோப்பிய வர்த்தகர்களுக்கு ஏராளமாகக் கட்டுப் பாடுகள் விதிக்கப்பட்டன.

சீனர்களை வெளி உலகத்துடன் தொடர்பு கொள்வதைத் தடுக்கவேண்டும் என்ற முறையிலும், வெளியுலகச் செல்வாக்கினைத் தடை செய்யவேண்டும் என்ற நிலையிலும் மஞ்சுப் பேரரசர்கள் செயல்பட்டனர். இதனுல்தான் ஐரோப்பிய வர்த்தகர்களைக் காண்டன் நகரின் ஒதுக்குப்புறத்தில் தங்கச் செய்தனர். கோ-ஹொங் (Co-Hong) என்றழைக்கப்பட்ட பதின்மூன்று சீன வர்த்தக நிறுவனங்களை மட்டுமே ஐரோப்பியருடன் வர்த்தகம் செய்ய அனுமதித்தனர். குறிப்பிட்ட இந்த பதின்மூன்று நிறுவனங்களைத் தவிர மற்றச் சீனர்கள் ஐரோப்பியர்களுடன் எவ்விதத் தொடர்பு களும் வைத்துக்கொள்ளக்கூடாது எனத் தடுக்கப்பட்டனர்.

சீனப் பேரரசு 'விண்ணூர்ந்த பேரரசு' என்றும், ஏனைய உலக அரசுகள் அனைத்தும் சீனப்பேரரசருக்குக் கப்பம்கட்டி, அடிபணிந்து

நடக்கவேண்டும் என்றும் சீனர்கள் நம்பினர். மேலும் உலகிலேயே பண்பாட்டுச் சிறப்பு மிக்கோர் சீனர்கள் மட்டுமே என்றும், ஏனைய உலகினர் அனைவரும் நாகரிகமற்ற காட்டுமிராண்டிகளே என்றும் சீனர்கள் கருதினர். எனவேதான் ஐரோப்பியர்களையும் காட்டு மிராண்டிகளாகவே கருதி, மதிப்பளிப்பதையோ, சமநிலையில் வைத்துப் பேச்சு வார்த்தைகள் நடத்துவதையோ விரும்பவில்லை. அத்துடன் சீனக் குமுகாய அமைப்பில் வர்த்தகர்கள் மிகவும் தாழ்ந்த நிலையில் இருந்தனர். கற்றறிந்தோர், உழவர்கள், கை வினைஞர்கள் என்ற முப்பெரும் குமுகாயப் பிரிவினருக்கு அடுத்த படியாக நான்காவது இடத்தையே வர்த்தகர்களும், படைவீரர் களும் பெற்றனர். தங்கள் குமுகாய அமைப்பில் தாழ்ந்த நிலையி லிருந்த வர்த்தகர்களை நடத்தியது போலவே அந்நிய நாட்டு வணிகர்களையும் தாழ்ந்த பிரிவினராகவே கருதி நடத்தினர்.

ஐரோப்பாவில் ஏற்பட்ட தொழிற் புரட்சியின் காரணமாக பெருகிவிட்ட உற்பத்திப் பொருள்களை விற்பதற்கும், தேவையான மூலப் பொருள்களைப் பெறுவதற்கும் சீனாவை மிகச் சிறந்த சந்தை யாக ஐரோப்பியர்கள் கருதினர். எனவேதான் எப்பாடு பட்டா கினும் சீனாவுடன் வர்த்தகத் தொடர்பு ஏற்படுத்திக்கொள்ள முயன்றனர்.

விவசாய உற்பத்தியின் அடிப்படையில் அமைந்த பொரு ளாதார வளர்ச்சியைக் கொண்டிருந்த சீனா, ஐரோப்பியர்களின் உற்பத்திப் பொருள்களைத் தங்களுக்குத் தேவையற்றது எனக் கருதி ஒதுக்கிவிட முடிவு செய்தது. இதன் விளைவாகத்தான் சியன் லுங் (Chien Lung) என்ற மஞ்சுகுலப் பேரரசர், 'உங்கள் நாட்டுப் புதுமைப் பொருள்கள் எங்களுக்குத் தேவையில்லை' என இறுமாப்புடன் ஆங்கிலப் பேரரசருக்குக் கடிதம் எழுதியிருந்தார். சீனத்துப் பட்டு, தேயிலை, பீங்கான் பொருள்கள், மற்றும் பல நுட்ப வேலைப்பாடமைந்த பொருள்களை ஐரோப்பியர்கள் பெரிதும் விரும்பி வர்த்தகப் பொருள்களாக ஏற்றனர். இப்பொருள்களின் மீது சீன அரசு ஏராளமான சுங்க வரி விதித்தது. ஏராளமான வர்த்தகக் கட்டுப்பாடுகளையும் விதித்தனர். ஊழல் மலிந்த சீன அதிகாரிகளின் சுயநலப் போக்கிற்கும், ஈடுகொடுக்க வேண்டி யிருந்தது. மேலும் சீனாவில் குற்றம் புரிந்த ஐரோப்பியர்கள் சீனச் சட்டங்களின்படியே கொடூரமாகத் தண்டிக்கப்பெற்றனர். இத்தகைய செயல்களால் ஐரோப்பிய வர்த்தகர்கள் பெரிதும் அல்லலுற்றனர். இந் நிலையில் அவர்களுக்கு மூன்று வழிகள் தென் பட்டன. முதலாவது சீனர்களின் அடக்குமுறைச் சட்டங்களுக்குப் பணிந்து, வர்த்தகத்தைத் தொடருதல், இரண்டாவது, சீன வர்த்தகத் தொடர்பையே துண்டித்துக்கொண்டு வெளியேறி

விடுதல், மூன்ருவது, படைவலிமை கொண்டு போரிட்டு, சீனப் பேரரசையே ஆட்டிப்படைத்தல் என்பனவாகும்.

வர்த்தகத் தொடர்பின் ஆரம்ப காலத்தில் சீனப் பேரரசின் தாறுமாருன சட்டங்களுக்குப் பணிந்த ஐரோப்பியர்கள், நாளடைவில் சீனுவின் குறைபாடுகளையும், சீனப் பேரரசின் திறமையற்ற போக்கினையும் உணர்ந்து, படைவலிமையைப் பயன் படுத்தி, சமாதான முறையில் மறுக்கப்பட்ட வர்த்தகம், மற்றும் சிறப்புரிமைகளைத் துப்பாக்கி முனையில் பெற்றனர்.

சீனுவில் நுழைந்த ஐரோப்பிய வர்த்தகர்களின் கட்டுப் பாடற்ற, தான்தோன்றித் தனமான ஆதிக்கப் போக்கும், சீனச் சட்டங்களையும் பண்பாட்டு முறைகளையும் அவமதிக்கின்ற நிலையும்தான் சீனர்களை ஐரோப்பியர்பால் வெறுப்படையச் செய்தன. போர்ச்சுகீசியப் படைத்தலைவர் ஒருவரின் கூற்று இதனை மெய்ப்பிக்கும். 'வர்த்தகர்கள் என்ற நிலையில் நுழைந்து, பின்னர் சமயப் பரப்பாளர்கள் மூலமாக மக்கள் இதயத்தைக் கவர்ந்து, பின்னர் படைகொண்டு தாக்கி, அரசியல் ஆதிக்கம் பெறுவதே எங்கள் நோக்கம்' என்பது போன்ற தேவையற்ற கூற்றுகள் ஐரோப்பியர்கள்பால் சீனர்களுக்கு இருந்த ஐயத்தினையும், அச்சத் தினையும் உறுதிப்படுத்தியது.

ஆரம்ப காலத்தில் ஐரோப்பியர்கள் ஏராளமானப் பொருள் களைச் சீனுவிலிருந்து ஏற்றுமதி செய்தார்கள். ஏற்றுமதி செய் கின்ற அளவுக்குத் தங்கள் உற்பத்திப் பொருள்களைச் சீனுவில் விற்க முடியவில்லை. இதனுல் ஏராளமான செல்வத்தைத் தங்கமாகவோ அல்லது வெள்ளியாகவோ சீனுவிற்குக் கொடுக்க வேண்டியதா யிற்று. இதனுல் ஐரோப்பாவின் செல்வ வளம் குறைந்துவிடுமோ என்ற அச்சம்கூட ஏற்பட்டது. ஆனுல், அபினி வியாபாரம் தொடங்கியவுடன் ஐரோப்பியர்களின் வர்த்தகம் நல்ல நிலையை அடைந்தது. இந்த அபினி வியாபாரத்தில் ஈடுபட்டவர்களில் முதன்மையானவர்கள் ஆங்கிலேயர்களே. சீனர்களுக்கு அபினி புகைக்கும் 'நல்ல பழக்கத்தை' ஏற்படுத்தி, கொள்ளை இலாப மடைந்து பெருமையடைந்தவர்கள் ஆங்கிலேயர்களே ஆவர். அபினி புகைப்பதனுல் ஏற்படுகின்ற தீமையினை உணர்ந்த சீன அரசு அபினி வியாபரத்தைத் தடை செய்ய முயன்றது. ஆனுல், பெரும் இலாபமடைந்த ஆங்கிலேயர்கள் அபினி வியாபாரத்தைக் கைவிடுவதாக இல்லை. இதன் விளைவாக ஏற்பட்டதே 'முதல் அபினிப் போர்' ஆகும். இப் போரையும் அதன்பின் விளைவு களையும் அடுத்த இயலில் சற்று விளக்கமாகவே காணலாம்.

# 3. ஆங்கில-சீன உறவுகள்

பதினெட்டாம் நூற்றாண்டின் இடையிலிருந்து 1842ஆம் ஆண்டு வரையில் சீனப் பேரரசு ஐரோப்பியர்களைச் சீனாவிற்குள் நுழைய அனுமதிக்கவில்லை. மக்காவோவில் தங்கி, காண்டன் நகரில் வர்த்தகம் செய்கின்ற உரிமையை மட்டும், பலவாறான கட்டுப்பாடுகளுக்கும் மேற்பார்வைகளுக்குமிடையில் வழங்கியிருந்தது. ஐரோப்பிய நாடுகள் அனைத்தும் காண்டன் நகரில், சீனக் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டு வர்த்தகம் செய்து வந்தாலும் இடையிடையே பல பிரச்சினைகள் எழுந்தன. வர்த்தகச் சமநிலை (Balance of Trade) ஏற்படுத்த முடியவில்லை. ஏனெனில் சீனாவிலிருந்து ஏராளமான அளவில் பொருள்களை ஏற்றிச் சென்ற ஐரோப்பியர்களிடமிருந்து, சீனர்கள் மிகக் குறைவான அளவு பொருள்களையே வாங்கினர். இதனால் ஐரோப்பிய நாடுகள் தங்கக் கட்டிகளைச் சீனாவிற்குக் கொடுக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. இந்நிலையை ஈடுகட்ட அபினி வர்த்தகத்தை ஐரோப்பியர்கள் தொடங்கினர். அடுத்தாற்போல சீனச் சட்டதிட்டங்கள் ஐரோப்பியர்களுக்கு வெறுப்பளித்தன. சீனர்கள் ஐரோப்பியர்களைச் சம மதிப்புக் கொடுத்து நடத்தவில்லை. தங்களைவிடப் பண்பாட்டில் குறைந்தவர்கள் என்றும், ஐரோப்பியர்கள் அனைவருமே 'செந்நிறக் காட்டுமிராண்டிகள்' (Red Barbarians) என்றே கருதினர். தவறிழைத்த ஐரோப்பியர்களைச் சீனச் சட்டங்களின்படியே தண்டிப்பதையும் ஐரோப்பியர் வெறுத்தனர். இத்தகைய பொதுப்படையான காரணங்களால் ஐரோப்பியர் அனைவருமே சீனப் பேரரசின்பால் வெறுப்புக் கொண்டிருந்தாலும், ஆங்கிலேயர்கள் மட்டுமே முதன்முதலில் சீனாவை எதிர்த்துப் போரிடும் அளவிற்கு முன்வந்தனர்.

ஆங்கிலேய வர்த்தகர்கள் முதன்முதலில் 1637-ல் காப்டன் வெடல் (Captain Weddal) என்பாரின் தலைமையில் மக்காவோவிற்கு வந்தனர். போர்ச்சுகீசியரின் போட்டியால், வெடல்

காண்டன் துறைமுகம் சென்று, படை வலிமையினால் வர்த்தக உரிமைகள் பெற முயன்று தோல்வியுற்றார். சீனப்பேரரசரிடம் நடந்துவிட்ட தவறுக்கு மன்னிப்புக்கோரிய பின்னர் காண்டன் துறைமுகத்தில் வர்த்தக உரிமைகளை அவர் பெற்றார் என்பதை முன்னரே கண்டோம். இவ்வாறு ஆரம்பத்திலேயே படை வலிமையைப் பயன்படுத்தி வர்த்தக உரிமைகள் பெற முயன்ற ஆங்கிலேயரைச் சீனர்கள் ஐயங்கலந்த அச்சத்துடனேயே நோக்கினர்.

காண்டன் நகரில் வர்த்தக உரிமைகள் பெற்ற ஆங்கியேர் 1715ஆம் ஆண்டிற்குள் தங்கள் வர்த்தக நிலையத்தை ஏற்படுத்தி விட்டனர். முறையான ஆங்கிலேய–சீன வர்த்தகம் தொடர்ந்தது. எனினும், ஐரோப்பியர்கள் தாழ்ந்தவர்களாகக் கருதப்படுவதை யும், வர்த்தகம் முழுவதும் கோ-காங் (Co-Hong) எனப்பட்ட சீன வணிக நிறுவனங்களுடனேயே பலவிதக் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டு நடத்தவேண்டும் என்பதையும் ஆங்கிலேயர் மிகவும் வெறுத்தனர். மேலும், தங்களுக்கென்று ஒதுக்கப்பட்ட நகர்ப் பகுதியிலிருந்து வெளியில் செல்லக்கூடாது; சீன மொழியைக் கற்கக்கூடாது; சீன மக்களுடன் எவ்விதத் தொடர்பும் வைத்துக் கொள்ளக்கூடாது; சீன அதிகாரிகளிடமும் இவர்கள்நேருக்குநேர் பேச்சுவார்த்தைகள் வைத்துக்கொள்ளக்கூடாது; சீன அரசுடனும் எந்தவிதத் தொடர்பும் கொள்ளக்கூடாது. அப்படியே தொடர்பு ஏற்படுத்திக்கொள்ள விரும்பினாலும் கோ-காங்குகள் வழியாகத் தான் விண்ணப்பங்களை அனுப்ப முடியும், இந்த கோ-காங்குகளும் அந்நியரிடமிருந்து பணம் பறித்தல் ஒன்றினையே தங்கள் குறிக் கோளாகக் கொண்டிருந்தனர். இத்தகைய கட்டுப்பாடுகள், ஆங்கிலேயரை மட்டுமல்லாது, ஐரோப்பியர், அமெரிக்கர்களுக்கு ஆத்திரத்தை விளைவித்ததில் வியப்பேதுமில்லை. கடலாதிக்கம் பெற்று, அரசியல், பண்பாட்டு, சமய மேன்மையுற்று, அறிவியல் துறையில் மாபெரும் சாதனைகளைப் புரிந்து, பல்லாயிரம் மைல் களைக் கடந்து, பாதி உலகையே வலம்வந்து, இடைப்பட்ட ஏனைய ஆப்பிரிக்க நாடுகளுடன் தங்களின் விருப்பப்படி வர்த்தகம் நடத்தும் உரிமைகளைப் பெற்று, உயர்வடைந்திருந்த ஆங்கிலே யரும் ஐரோப்பியர்களும், சீனப் பேரரசு தங்களைத் தரம்குறைந்த வர்களாக எண்ணி, ஒதுக்கிவிடுவதையும், கட்டுப்பாடுகள் விதித்து அவமதிப்பதையும் கண்டு, முதலில் வியப்பும் அதிர்ச்சியும் அடைந்தனர்; பின்னர் ஆத்திரமும் வெறுப்பும் அடைந்தனர். எனினும் சீனாவின் வர்த்தகத்தினால் கிட்டும் பெருத்த இலாபத்தை எண்ணி ஆரம்ப நிலையில் பொறுத்துக் கொண்டனர்.

இந்த நிலையினை மாற்ற எண்ணிய ஆங்கிலப் பேரரசு, கீழை நாடுகளில் வர்த்தக முன்னுரிமை பெற்றிருந்த கிழக்கிந்திய

வர்த்தகக் குழுவின் வேண்டுகோளினை ஏற்று மூன்று தூது குழுக்களை 1787-க்கும் 1816-க்குமிடையே அனுப்பியது. முதல் தூது குழுவின் தலைவராக சார்லஸ் காத்கார்ட் (Charles Cathcart) என்பார் 1787-ல் அனுப்பப்பட்டார். இவரது தூதுகுழு படுதோல்வியுடன் திரும்பிவந்தது. பின்னர், 1792ஆம் ஆண்டு ஜார்ஜ் மெக்கார்டினி பிரபு சீனப் பேரரசுடன் தொடர்பு கொள்ளும்படி அனுப்பப்பட்டார். அவரைத் தன் அரசவையில் வரவேற்ற சியன் லுங் (Chien Lung) என்ற மஞ்சுப் பேரரசர், மெக்கார்டினி பிரபு கொணர்ந்த பரிசு பொருள்களை ஏற்றார். ஆனால் வர்த்தக உரிமைகளைப் பொறுத்தவரையில், அதுவரையில் செயல் முறையிலிருந்த சட்டங்களைச் சிறிதுகூட மாற்ற மறுத்துவிட்டார். அத்துடன் ஆங்கிலப் பேரரசரான மூன்றாம் ஜார்ஜ் மன்னருக்கு இறுமாப்பான கடிதம் ஒன்றனையும் எழுதினார். அக் கடிதத்தில் குறிப்பிடப்பட்டிருந்தவையாவது: 'விலையுயர்ந்த அதிசயமான, புதிய பொருள்களை நாம் விரும்பவில்லை. உங்கள் நாட்டுப் பொருள்கள் எங்களுக்குத் தேவையில்லை. எங்கள் எண்ணத்தினை உணர்ந்து, நீங்கள் என்றென்றும் எங்களுக்கு அடிபணிந்து ஆட்சி புரிய வேண்டும். தயக்கமோ, வெறுப்போ காட்டாமல் பயபக்தியுடன் இக் கடிதத்தை மதித்து, ஏற்று, செயல்படுத்தவேண்டும்.' இக் கடிதம் ஆங்கிலேயருக்கு வியப்பினையும் அதிர்ச்சியையும் அளித்திருக்குமெனக் கூறத் தேவையில்லை. ஐரோப்பாவில் ஏற்பட்ட பிரெஞ்சுப் புரட்சி, நெப்போலியனின் ஆதிக்கப் போர்கள் இவைகளில் மூழ்கிக் கிடந்த ஆங்கிலேயர், நெப்போலியனின் வீழ்ச்சிக்குப் பின்னர் 1816-ல் மீண்டும் சீனாவில் வர்த்தகச் செல்வாக்கினைப் பெறும் முயற்சியில் இறங்கினர். ஆம்ஹர்ஸ்ட் பிரபுவின் (Lord Amherst) தலைமையில் மூன்றாவது தூதுகுழு சீனாவிற்கு அனுப்பப்பட்டது. 'தாம் சீனப் பேரரசிற்கு எவ்விதத்திலும் குறையாத ஆங்கிலப் பேரரசின் தூதுவர் என்ற முறையில் நடத்தப்படவேண்டும்' என்றும், சீனப் பேரரசின் தலைமையை ஏற்றுக் கொண்டு அடிபணிந்து திறைப் பணத்தைக் கொணரும் தூதுவரைப் போல நடத்தக்கூடாது என்றும் சீன அதிகாரிகளிடம் திட்டவட்டமாகக் கூறிவிட்டார். மேலும், சீனப் பேரரசரையோ, அல்லது அவரது படத்தையோ, சீன முறைப்படி ஒன்பதுமுறை மண்டியிட்டு வணங்க முடியாது என்றும் மறுத்துவிட்டார். இதனால் சீனப் பேரரசர் ஆம்ஹர்ஸ்ட் பிரபுவைச் சந்திக்க மறுத்து வெளியேறும்படியும் ஆணையிட்டார். சீனப்பேரரசின்முன் மண்டியிட்டு வணங்கி, அவர்கள் கொடுக்கும் வர்த்தக உரிமைகளைப் பணிந்தேற்றுக் கொள்ளாது, தன்மான உணர்ச்சியால் தூண்டப்பட்ட ஆம்ஹர்ஸ்ட் வெறுங்கையுடன் நாடு திரும்பினார்.

ஆங்கிலேயர்களின் இம் மூன்று முயற்சிகளும் பயனற்றுப் போய்விட்டாலும், அவர்களின் வர்த்தக வளர்ச்சியில் எவ்விதக் குறைவும் காணப்படவேயில்லை. ஆரம்ப நிலையில் சீனர்கள் ஆங்கிலேயரின் உற்பத்திப் பொருள்களை வாங்க மறுத்தனர். ஆனுல் இங்கிலாந்தில் சீன நாட்டுத் தேயிலைக்கும், பீங்கான் பொருள்களுக்கும், பட்டுத் துணிகளுக்கும் அதிகமான கிராக்கி இருந்தது. எனவே, ஆங்கில வர்த்தகர்கள் இப் பொருள்களை மிக அதிக அளவில் சீனுவிலிருந்து ஏற்றுமதி செய்தனர். இதனுல் ஆங்கிலேயரின் வர்த்தகச் சமநிலை (Balance of Trade) பாதிக்கப் பட்டது. இந் நிலையை ஈடுகட்ட சீனர்கள் விரும்பியேற்றுக் கொள்ளக்கூடிய பொருளினை ஆங்கிலேயர் சீனுவில் இறக்குமதி செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டது. நல்வினைப் பயனுக ஆங்கிலேயர்கள் அபினி வர்த்தகத்தில் ஈடுபட்டனர். சீனர்களுக்கு அபினி புதிதன்று. 17ஆம் நூற்றுண்டிலிருந்தே சீனர்கள் அபினி புகைக்கும் பழக்கத்தை மேற்கொண்டிருந்தனர். இப் பழக்கத்தை முதலில் சீனர்களுக்குக் கற்றுக் கொடுத்தவர்கள் டச்சுக்காரர் களாவர். டச்சுக்காரர்கள் மலேரியாக் காய்ச்சலிலிருந்து தங்களைக் காத்துக் கொள்வதற்காக அபினியைப் புகையிலையுடன் கலந்து புகை பிடித்தனர். ஆனுல் சீனர்கள் அபினியைப் புகையிலையுடன் கலக்காமல் புகைக்கக் கற்றுக்கொண்டனர். இப் பழக்கத்தை சீன மக்களிடையே அறிமுகப்படுத்தியது டச்சுக்காரர்கள்தான் என்றுலும், சீனர்களிடையே அபினியைத் திணித்து, அவர்களை அபினி அருந்தும் பழக்கத்திற்கு அடிமையாக்கி, கொள்ளை இலாப மடைந்த பெருமை ஆங்கிலேயரையே சாரும். ஆங்கிலேயர்கள் அபினி வியாபாரத்தில் 1770-லிருந்துதான் ஈடுபட்டனர். 1773-ல் இந்தியாவில் உற்பத்தியாகும் அபினியை வாங்கி, வர்த்தகம் செய்யும் முன்னுரிமையை ஆங்கிலக் கிழக்கிந்திய வர்த்தகக் குழு ஏற்றுக்கொண்டது. இதன்பின்னர் ஆங்கிலேயர்கள் இந்திய அபினி முழுவதையும் சீனுவிற்கே கொண்டு சென்றனர். கிழக்கிந்திய வர்த்தகக் குழுவின் சீனு வர்த்தகம் வளர்ந்து, விரைவிலேயே மற்ற ஐரோப்பிய நாடுகளைவிட உயர்ந்துவிட்டது. ஆங்கிலே யருக்கு அடுத்தாற்போல அமெரிக்கர்கள்தான் சீன வர்த்தகத்தில் பெரும் பங்கேற்றனர்.

இந்த அபினி வர்த்தகத்தைத் தடைசெய்யச் சீன அரசு முயற்சி களை மேற்கொண்டது. ஆனுல் சுயநலமிக்க சீன அதிகாரிகள் கையூட்டுப் பெற்றுக்கொண்டு அபினி இறக்குமதியை அனுமதித் தனர். 1833-ல் இவ்வபினி இறக்குமதியைத் தடைசெய்ய தனியதிகாரி ஒருவரை சீனப் பேரரசர் நியமித்தார். ஆனுல் கையூட்டுப் பெற்றுச் செல்வநிலையை அடைந்த சீன அதிகாரிகளும்,

கொள்ளை இலாபமடைந்த ஐரோப்பிய வர்த்தகர்களும், சீன அரசின் கட்டுப்பாடுகளை ஏற்கவில்லை. அபினி இறக்குமதி தடை யேதுமின்றி வளர்ந்தது. 1835-ல் மட்டும் 26,000 பெட்டி களுக்கும் அதிகமான அபினி சீனுவில் இறக்குமதியாயிற்று. இதில் பெரும் பகுதி ஆங்கிலேய வர்த்தகர்கள் மூலமாகவே இறக்குமதி செய்யப்பட்டது.

இதற்கிடையில் 1833-ல் கிழக்கிந்திய வர்த்தக குழுவுக்குக் கீழை நாடுகளின் வர்த்தக முற்றுரிமை முடிவுபெற்றது. மீண்டும் அக் குழுவிற்கு வர்த்தக முற்றுரிமைகள் வழங்க ஆங்கிலப் பாராளு மன்றம் மறுத்துவிட்டது. இந் நிகழ்ச்சி ஆங்கிலேய-சீன உறவில் பெருமாறுதலை ஏற்படுத்தியது. இதுவரை கிழக்கிந்திய வர்த்தகக் குழுவினுல் நியமிக்கப்பட்ட வர்த்தக அதிகாரி, காண்டன் நகரி லிருந்துகொண்டு, வர்த்தகம் சம்பந்தப்பட்ட பிரச்சினைகளை ஏற்றுக்கொண்டார். கிழக்கிந்திய வர்த்தக குழுவைத்தவிர வேறு ஆங்கிலேயத் தனி வணிகர்கள் சீனுவுடன் வர்த்தகம் செய்ய அனு மதிக்கப்படவில்லை. 1833-க்குப் பிறகு ஆங்கில வணிகர்கள் பலரும் சீன வர்த்தகத்தை மேற்கொண்டனர். இதன் விளைவாக ஆங்கிலப் பேரரசு சீன-ஆங்கில வர்த்தகத்தைக் கவனிக்க மேற் பார்வையாளர் ஒருவரை நியமித்தது. இந்த மேற்பார்வையாளர் வர்த்தக உறவுகளை மட்டும் மேற்பார்வை செய்வதல்லாது, ஆங்கிலப்பேரரசின் பேராளராகவும் இருந்து, ஆங்கிலேய-சீன அரசு களின் அரசியலுறவையும் கவனித்துக் கொள்ளவேண்டும் எனக் கருதப்பட்டது. ஆங்கிலப் பேரரசின் முதல் மேற்பார்வையாள ராக நேப்பியர் பிரபு (Lord Nppier) நியமிக்கப்பட்டார். இவர் சீனுவிற்கு வந்தவுடன் சீனத் தலைமை ஆளுநருடன் நேரடித் தொடர்பு கொள்ள முயன்ருர். சீன அதிகாரிகள் இதை வரவேற்க வில்லை. அவரை ஆங்கிலப் பேரரசின் பேராளர் என்ற முறையில் பெருமையோடு மதித்து, வரவேற்கவும் விரும்பவில்லை. இதுவரை நடந்ததுபோலவே சீன வர்த்தக நிறுவனங்கள் (Co-Hong) வழியாகவே நேப்பியர் பிரபுவும் தொடர்பு கொள்ளவேண்டும் எனச் சீனத் தலைமையாளுநர் அறிவித்தார். மேலும், ஆங்கிலேயர் மற்றும் எந்நாட்டு வர்த்தகராயினும், சீன அதிகாரிகளுடன் நேரடித் தொடர்பு கொள்ள முயற்சி செய்யவும் கூடாது. அவ்வாறு முயற்சி செய்வதும் வீண் எனவும் கண்டிப்பாக அறிவிக் கப்பட்டது. நேப்பியர் பிரபுவின் முயற்சிகள் பலனளிக்கவில்லை. காண்டனிலிருந்து தோல்வியுடன் மக்காவோ திரும்பிய நேப்பியர்,

நோய்வாய்பட்டு இறந்தார். அவருக்குப் பின்னர் மேற்பார்வை யாளர்களாகப் பொறுப்பேற்ற மூன்று அதிகாரிகளும் சீன அரசின் கட்டுப்பாடுகளை ஏற்றுக்கொண்டனர். இவ்வாறு ஆங்கில அரசின் முதல் முக்கிய முயற்சியை சீனர்கள் வெற்றிகரமாக முறியடித் தனர். இதன்மூலம் சீனர்கள் ஐரோப்பியர்களின் வர்த்தக உரிமைகளிலும், நடவடிக்கைகளிலும் எவ்வித மாற்றங்களையும் ஏற்படுத்த விரும்பவில்லை என்பதை உறுதிப்படுத்தினர். எவ்வித மாற்றங்களும் தேவையில்லை என்றும் நம்பினர்.

# 4. முதல் அபினிப் போர் (1839-42)

**காரணங்கள்**

சீனப் பேரரசின் கட்டுப்பாடுகளையும் தடைகளையும் மீறி ஆங்கிலேயர்கள் அபினியைச் சீனாவிற்குள் இறக்குமதி செய்தனர். 1835ஆம் ஆண்டில் 26,000 பெட்டிகளை இறக்குமதி செய்த ஆங்கிலேயர்கள், 1839ஆம் ஆண்டில் 40,000 பெட்டிகளுக்கும் அதிகமான அபினைச் சீனாவிற்குள் இறக்குமதி செய்தனர். இதனால் சீனாவில் பெருங்கலகம் ஏற்படுகின்ற நிலை உருவானது. அபினி வியாபாரம் ஒன்று மட்டுமே, சீனாவிலிருந்து ஏற்றுமதியான மற்றப் பொருள்கள் அனைத்தையும்விட மிகவும் அதிகமாய் இருந்தது. இதற்காகச் சீன அரசு ஏராளமான வெள்ளியை ஆங்கிலேயர்களுக்குக் கொடுக்கவேண்டியதாயிற்று. இதனால் நாட்டில் பணத் தட்டுப்பாடு ஏற்பட்டது. எனவே அபினி இறக்குமதியைத் தடுத்தேயாகவேண்டும் என்று ஒரு சாரார் பேரரசை வற்புறுத்தினர். இதுமட்டுமன்றி அபினி புகைக்கும் பழக்கத்தில் ஏராளமான குடும்பங்கள் சீரழிந்தன. ஒருமுறை அபினியைப் புகைத்துப் பழக்கப்பட்டவன், அப் பழக்கத்திற்கு அடிமையாகிறான். எனவே, மக்கள் நலனில், வளமான வாழ்க்கையில் அக்கறை கொள்ளும் எந்த அரசும், தவறான பழக்கங்களை ஆதரிக்காது; ஆதரிக்கவும் கூடாது. இதனாலும் சீனப் பேரரசு, அபினி வர்த்தகத்தைத் தடை செய்ய முயன்றது. 1833ஆம் ஆண்டுவரை எடுத்த அரசின் முயற்சிகள் சீன அதிகாரிகளின் திறமையின்மை, ஊழல் இவைகளின் காரணமாக வெற்றி பெறவில்லை. எனவே, அபினிப் பிரச்சினையைப் பற்றிப் பேரரசரவையில் விவாதம் நடைபெற்றது. ஒரு சிலர் வர்த்தகத்தை முழுவதும் தடை செய்வதற்குமாறாக, அரசின் நேரடிக் கட்டுப்பாடுகளின்கீழ் அனுமதிக்க வேண்டுமென்றும், சீனாவிலும் அபினி பயிரிடுதலை ஆரம்பிக்க வேண்டும் என்றும், அவ்வாறு செய்வதனால் தேவையான அபினியைச் சீனர்களே உற்பத்தி செய்து விடுவரென்றும், ஐரோப்பியர்கள்

அபினியைத் திணிக்கமுடியாது என்றும் வாதிட்டனர். மேலும், அபினி வர்த்தகத்தின் காரணமாக ஐரோப்பிய நாடுகளுடன் போரிடவேண்டிய அபாயம் உண்டு என்றும், எச்சரித்தனர். இறுதியில் அபினி வர்த்தக எதிர்ப்பாளர்களையே பேரரசரும் ஆதரித்தார். 1839-ல் லின்-சே-ஸு என்ற திறமைமிக்க அதிகாரி, அபினி வர்த்தகத்தைத் தடைசெய்யும் பொருட்டு, சீனப் பேரரசின் தனி அதிகாரியாக நியமிக்கப்பட்டார்.

1835ஆம் ஆண்டிற்குப் பின்னர் ஆங்கிலேயரும் தங்கள் கொள்கைகளைத் திட்டவட்டமாக ஏற்படுத்திக்கொண்டு அக் கொள்கைகளைச் செயல்படுத்துவதில் தீவிரமாக ஈடுபட ஆரம் பித்தனர். அக் கொள்கைகளாவன: முதலாவதாகச் சீனப் பேரரசு தனது மிக்குயர் நிலையை (Assumption of Superiority)க் கைவிட்டு, ஆங்கில அரசுடன் சமநிலையில் அரசியல் தொடர்பு ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். இரண்டாவது ஆங்கில வர்த்த கர்களுக்கு தடையற்ற வாணிப உரிமைகள் கொடுக்கப்பட வேண்டும். குறிப்பிட்ட பதின்மூன்று சீன வர்த்தக நிறுவனங் களுடன் (Co-Hongs) மட்டும் வர்த்தகத் தொடர்பு கொள்ள வேண்டும் என்ற தேவையற்ற கட்டுப்பாடு நீக்கப்படவேண்டும். மூன்றுவதாக, மேலைநாட்டுச் சட்டப்படி குற்றவாளிகள் தண்டிக் கப்படவேண்டும். சீனச் சட்டத்தின்படி, ஐரோப்பியன் ஒருவன் குற்றம் புரிந்தால், குற்றம் புரிந்தவனை அவர்கள் சீனர்களிடம் ஒப்படைத்துவிடவேண்டும். அவ்வாறு ஒப்படைக்க மறுத்தால், குற்றம் புரிந்தவனைச் சார்ந்த அனைவரும் தண்டிக்கப்படுவர். இம் மூன்று கொள்கைகளுக்காகவும் ஆங்கிலேயர் போராட முடிவு செய்தனர். சீனர்கள் இக் கொள்கைகளை ஏற்றுக்கொள்ளவில்லை என்பது அறிந்ததே. எனவே, போர் ஒன்றுதான் இப் பிரச்சினை யைத்தீர்க்கும் வழி என்ற நிலை உருவாயிற்று.

இதற்கிடையில் லின்-சே-ஸு தமது கடமைகளைத் தொடங் கினார். கட்டுப்பாடு, தன்னம்பிக்கை, எடுத்த காரியத்தை வெற்றி யுடன் முடிக்கின்ற செயல்திறம் அனைத்தும் நிறைந்த இவ்வதிகாரி முறைப்படி, செயலாற்றத் தொடங்கினார். தங்களிடமிருக்கும் அபினிப் பெட்டிகள் அவ்வளவையும் உடனடியாகத் தம்மிடம் ஒப்படைக்கும்படியும், ஒப்படைத்த பின்னர் இனி அபினி வர்த்த கத்தில் ஈடுபடமாட்டோம் என்ற உறுதிமொழிப் பத்திரமும் எழுதிக் கொடுக்கவேண்டும் என்றும் காண்டனிலிருந்த ஐரோப்பிய வர்த்தக நிறுவனங்களுக்கு ஆணையிட்டார். இந்த ஆணையை ஏற்று உடனடியாகச் செயல்படுத்த ஐரோப்பியர்கள் முதலில் முன் வரவில்லை. எனவே, காண்டன் நகரிலிருந்த ஐரோப்பியர் வதியும் பகுதிகளுக்கு எப்பொருளும் அனுப்பக்கூடாது என்றும், ஐரோப்

பியர்களிடம் பணிபுரிந்த பணியாட்கள்கூட செல்லக்கூடாது என்றும், தடைவிதிக்கப்பட்டது. இத் தடையின் உண்மை நோக்கத்தினை உணர்ந்த ஐரோப்பியர்கள் பணிந்தனர். ஆங்கில அரசின் மேற்பார்வையாளராய் இருந்த தளபதி எலியட் என்பார் தங்களிடமிருக்கும் அபினிப் பெட்டிகளைச் சீன அதிகாரிகளிடம் ரசீது பெற்றுக்கொண்டு ஒப்படைக்குமாறு ஆங்கில வர்த்தகர்களைப் பணித்தார். 20,000 பெட்டிகளுக்கும் அதிகமான அபின் கைப்பற்றப்பட்டது. ஆனால் அபினி வர்த்தகத்தில் இனி ஈடுபட மாட்டோம் என்ற உறுதிப் பத்திரத்தை வழங்க மறுத்துவிட்டார். முதலில் அமெரிக்கர்களும் இவ்வுறுதி மொழியை வரிவடிவில் கொடுக்கமறுத்தனர். ஆனால் உறுதிமொழிப் பத்திரத்தில் சில மாறுதல்கள் செய்த பின்னர் அமெரிக்கர்களும் கையெழுத்திட்டனர். எனவே லின்-சே-ஸூ ஆங்கிலேயருக்கெதிரான கடுமையான நடவடிக்கைகளில் ஈடுபட்டார். ஆங்கிலேயருக்கு காண்டன் நகரிலிருந்த வர்த்தக உரிமை தடைசெய்யப்பட்டது. அவர்களுக்குக் குடிதண்ணீர்கூட வழங்குவது நிறுத்தப்பட்டது. ஆங்கிலேயர் அனைவரும் ஹாங்காங் நகருக்குத் திரும்பினர். ஆங்கிலேயரிடமிருந்து கைப்பற்றிய அபின் முழுவதும் லின்-சே-ஸூவின் முன்னிலையில், சீன மக்களின் மகிழ்ச்சி ஆரவாரத்திற்கிடையே அழிக்கப்பட்டது. சீனர்கள் பெரும் வெற்றிபெற்றதாக மகிழ்ந்தனர். ஆனால் ஆங்கிலேயரின் உறுதியைக் கண்ட 'லின்' ஆங்கில-சீனப் போர் ஏற்படுவது உறுதி என்று நம்பினார். இதற்கான நடவடிக்கைகளிலும் ஈடுபட்டார்.

காண்டன் நகரிலிருந்து வெளியேறிய ஆங்கில வர்த்தகர்கள் சில நாள்களில் அமெரிக்கர்களின் உதவியுடன் மீண்டும் அபினி வர்த்தகத்தில் ஈடுபட்டனர். அதே நேரத்தில் ஆங்கில அரசின் அனுமதியுடன் ஒரு சிறு கப்பற் படையையும் தற்காப்பிற்காக வரவழைத்துக் கொண்டனர். போர் ஆபத்து நெருங்கியது.

ஆனால், 'அபினி வர்த்தகம் ஒன்றே ஆங்கில சீனப் போருக்கு அல்லது முதல் அபினிப் போருக்கான காரணம் எனக் கூற முடியாது' என்று ஜான் குலின்சி ஆடம்ஸ் என்பார் குறிப்பிடுவார். சீனர்கள் ஏதோ கொஞ்சம் அபினிப் பெட்டிகளைப் பிடுங்கி அழித்துவிட்டார்கள் என்பதற்காகவே ஆங்கில-சீன முதற் போர் ஏற்பட்டது என்று கூறமுடியாது. ஏனெனில் பாஸ்டன் துறைமுகத்தில் நின்றிருந்த ஆங்கிலேயக் கப்பலிலிருந்து ஒரு சில தேயிலைப் பெட்டிகளைக் கடலில் வீசியெறிந்து விட்டதால்தான் அமெரிக்க சுதந்திரப் போர் ஏற்பட்டது எனக் கூறுவது எவ்வாறு பொருத்தமற்றதோ, அதேபோல, ஒருசில அபினிப் பெட்டிகளை

ஆங்கிலேயரிடமிருந்து பிடுங்கி அழித்துவிட்டதால்தான் முதல் ஆங்கில-சீனப் போர் ஏற்பட்டது என்று கூறுவதுமாகும் என்றும் கருதினுர். ஆங்கிலேயர்களைப் பொறுத்தவரையில் ஆடம்ஸின் கருத்துச் சரியானதே. அபினிப் பிரச்சினை, அபினிப் போருக்கான காரணங்களில் ஒன்றேதவிர, அபினிப் பிரச்சினை ஒன்றினுல்தான் போர் ஏற்பட்டது என்று கூறமுடியாது. வேறு பல முக்கிய காரணங்களும் உண்டு.

ஆங்கிலேயர் சீனுவில் சம உரிமையுடன், நடத்தப்பட வேண்டும் என்று எண்ணினர். தங்களுக்குச் சீனச் சட்டங்களி லிருந்து விதிவிலக்கு அளிக்கப்பட வேண்டுமென்று கருதினர். சீனப் பேரரசு ஆங்கில அதிகாரிகளைப் பண்பாட்டுச் சிறப்புமிக்க சுதந்திரமான பேரரசின் பேராளர்கள் என மதித்து, அதற் கேற்றூற்போல உரிமைகள் வழங்கி மதிப்புடன் நடத்த மறுத்தது ஒரு காரணமாகும்.

கோ-டோ (Kow - Tow) என்ற சீனர்களின் வணக்கம் செலுத்தும் முறையை ஆங்கிலேயர்கள் மறுத்தனர். அவ்வாறு மண்டியிட்டு வணங்குதல் அடிமைகள் மட்டுமே வணங்க வேண்டிய முறை என்று ஆங்கிலேயர் எண்ணினர். கடற்படை வலிமையினுல் ஐரோப்பிய நாடுகளிலேயே மிக்குயர் நிலையைப் பெற்று, ஆப்பிரிக்க ஆசிய நாடுகளை அடிமைப்படுத்திப் பெருமிதத்துடன் தலைநிமிர்ந்து நின்ற ஆங்கிலேயன், சாதாரணக் கீழைநாட்டுப் பேரரசனின் முன்னிலையில் விழுந்து வணங்குவதையோ, பண்பாட்டுக் குறை வாக நடத்தப்படுவதையோ முற்றிலும் வெறுத்தான். உலகாளப் பிறந்தவர்கள் என்ற பெருமையோடு வந்தவர்களை உலகம் முழுவதும் வணங்கியேற்க வேண்டுமே தவிர, அவர்கள் யாரிடமும் தலைவணங்கமாட்டார்கள், வணங்கவும் வேண்டியதில்லை என்று இறுமாப்புக் கொண்டிருந்தனர். 'நாங்கள் யாரையும் எங்களுடன் வந்து வர்த்தகம் செய்யுங்கள் எனக் கூவி வற்புறுத்தி அழைக்க வில்லை. உங்கள் தேவையை முன்னிட்டு, எங்கள் நாட்டுப் பொருள்களின் தரத்தினையும், சிறப்பையும் உணர்ந்து எங்களை நாடி ஓடோடி வருகிறீர்கள். உங்களுடன் நாங்கள் வர்த்தகம் செய்யத் தேவையில்லை; எங்களுக்கு விருப்பமும் இல்லை. அவ்வாறு வர்த்தகம் செய்ய விரும்பினுல் எங்கள் கட்டுப்பாடுகள் சட்டதிட்டங்கள் இவைகளுக்கு உட்பட்டு நடந்து கொள்ளுங்கள்' என்று சீனர்கள் அறிவித்தனர். ஏனெனில் ஐரோப்பியர்களைப் பற்றி அவர்கள் ஓரளவு தெரிந்து வைத்திருந்தனர். முதலில் வர்த்த கர்களும், அவர்களைப் பின்பற்றிச் சமயத்தினரும், பின்னர் படை களும் என இவ்வரிசையில் வந்து தங்களை அடிமைப்படுத்திவிடுவர் என்ற அச்சத்தினுலேயே ஐரோப்பியர்களுக்கு இவ்விதக் கட்டுப்

பாடுகளைச் சீனர்கள் ஏற்படுத்தினர். இக் கட்டுப்பாடுகளை விரும்பாத நிலையில் ஐரோப்பியர்கள், சிறப்பாக ஆங்கிலேயர்கள் படைகொண்டு தகர்க்கும் எண்ணம் கொண்டனர்.

சீன வர்த்தக நிறுவனங்கள் ஆங்கிலேயரிடம் கடன்பட்டிருந்தன; பெருந்தொகை ஒன்றினைக் கொடுக்க வேண்டியிருந்தது. சீன வர்த்தகர்கள் தங்களுக்குக் கொடுக்கவேண்டிய தொகைக்கு ஈடாக, கடன் வழங்கும்படி ஆங்கில அரசைக் கடன் கேட்டனர். எனவே சீனாவில் இருந்த ஆங்கில அதிகாரி, சீன வர்த்தகர்களிடம் வற்புறுத்திக் கடன் வசூலிக்க முயற்சிகள் எடுத்துக்கொண்டார்.

**உடனடிக் காரணம்**

அபினி வர்த்தகம், அரசியல் உரிமைகள், கடன் தொகைகள், ஆங்கிலேயரின் தனி உரிமை பற்றிய பிரச்சினைகள் ஆகிய அனைத்தும் ஆங்கில-சீன உறவின் முறிவுக்குக் காரணமாகவும், போர் உருவாகின்ற நிலையை ஏற்படுத்தியிருந்தன. காண்டன் நகரிலிருந்த ஒரு சில ஆங்கில வர்த்தகர்கள் மக்காவோவிற்குச் சென்றனர். அங்கு ஒருசில ஆங்கிலக் கடற்படை வீரர்களுக்கும், சீனன் ஒருவனுக்குமிடையே மதுபானக் கடையில் தகராறு ஏற்பட்டது. சீனன் அடித்துக் கொல்லப்பட்டான். இச் சிறு நிகழ்ச்சி, மிகப் பெரிய போருக்குக் காரணமாய் அமைந்தது. குற்றவாளியை ஒப்படைக்கும்படி சீன அதிகாரிகள் வற்புறுத்தினர். குற்றவாளியைக் கண்டு பிடிக்க முடியவில்லை என்ற பொய்க் காரணத்தைக் கூறிக் காலம் தாழ்த்தினார் ஆங்கில அதிகாரி. ஒரு மாதம் பொறுத்திருந்த சீன அதிகாரி, ஆங்கிலேயர்கள் அனைவரையும் தங்கள் நாட்டுச் சட்டத்தின்படி தண்டிக்க முற்பட்டார். அதன் விளைவாக ஆங்கிலேயருடன் யாரும் தொடர்பு கொள்ளக் கூடாதென்றும், அவர்களுக்கு குடிநீர் முதற்கொண்டு எந்தவிதப் பொருள்களும் அனுப்பக் கூடாது என்றும் தடை விதித்தார்.

இத்தகைய கடுமையான சூழ்நிலையில், ஆங்கிலேய அதிகாரியான தளபதி எலியட் என்பார், தமது படைவலிமையைக் காட்டிச் சீனர்களை அச்சுறுத்திப் பார்க்கும் எண்ணம் கொண்டார். இதன் விளைவாக, காண்டன் துறைமுகத்தில் நிறுத்தப்பட்டிருந்த சீனப் போர்க் கப்பல்கள் வர்த்தகக் கப்பல்கள் அனைத்தும் தாக்கி அழிக்கப்பட்டன. முதல் அபினிப் போர் தொடங்கியது.

1840-ல் ஆங்கிலப் பாராளுமன்றம் சீனாவுடன் போர் தொடுக்க அனுமதி வழங்கியது. இப் போரை இரண்டு பகுதிகளாகப் பிரிக்கலாம். முதற்பகுதி 1840ஆம் ஆண்டு, ஆங்கிலேயர்

காண்டன் நகரைத் தாக்கிப் பிடித்துக்கொண்டனர். பிறகு காண்டனிலிருந்து வெளியேறி, யாங்ட்சி நதிக் கழிமுகத்தை அடைந்து, முற்றுகையிட்டனர். இத் தோல்விகளின் காரணமாக லின்-சே-ஸீ என்ற சீனத் தனியதிகாரி நீக்கப்பட்டார். சி-ஷான் (Chi-Shan) என்ற புதிய சீன அதிகாரி ஆங்கிலேயருடன் பேச்சு வார்த்தைகள் நடத்தினுர். இப் பேச்சுவார்த்தைகள் பயனற்றுப் போகவே போரின் இரண்டாவது கட்டம் ஆரம்பமாயிற்று. இரண்டாவது கட்டத்தில் காண்டன் நகர் மீண்டும் கைப்பற்றப் பட்டது. யாங்ட்சி நதி வழியாக முன்னேறிய ஆங்கிலக் கடற் படை நாங்கிங் நகரை அச்சுறுத்தியது. சீனப் பேரரசு இதனுல் இரண்டாகப் பிளந்தது. இந் நிலையில் மஞ்சுப் பேரரசு ஆங்கி லேயரிடம் சமாதானம் கோரியது. இதன் விளைவாக ஏற்பட்டது தான் நாங்கிங் உடன்படிக்கை.

## நாங்கிங் உடன்படிக்கை
## (Treaty of Nanking-1842)

முதல் ஆங்கில-சீனப் போரின் முடிவில் இரண்டு உடன் படிக்கைகள் செய்துகொள்ளப்பட்டன. முதல் உடன்படிக்கை நாங்கிங் நகரில் 1842ஆம் ஆண்டு, ஆகஸ்டுத் திங்கள் 29ஆம் நாளும், இரண்டாவது உடன்படிக்கை போகு நகரில் (Bogue) 1843ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 8ஆம் நாளும் கையெழுத் தாயின. இவ்விரண்டு உடன்படிக்கைகளும் நூறுண்டுகளுக்குச் சீனுவின் அயலுறவுக் கொள்கைகளின் அடித்தளமாய் அமைந்தன. அதற்குப்பின்னர் கையெழுத்தான உடன்படிக்கைகள் அனைத்துமே முதலில் ஏற்பட்ட இவ்விரு உடன்படிக்கைகளின் கூறுபாடுகளை விளக்குவதற்காகவோ அல்லது அதிகமாக்குவதற்காகவோ செய்யப்பட்டவைகளே அன்றி, அடிப்படையை மாற்றவில்லை. இந்த உடன்படிக்கைகள் 1943-ல் ஏற்றத்தாழ்வான, சமநிலையற்ற இந்த உடன்படிக்கைகளை நீக்கும் வரை அமலிலிருந்தன.

**கூறுபாடுகள்**

1. ஹாங்காங் தீவும், துறைமுகமும் ஆங்கிலேயர்களுக்குக் கொடுக்கப்பட்டன. அத்துடன் ஐந்து துறைமுகங்கள் ஐரோப்பிய வர்த்தகத்திற்குத் திறந்துவிடப்பட்டன. அவைகள் காண்டன், பூசௌ, நிங்போ, அமாய், ஷாங்கை ஆகும். ஹாங்காங் ஆங்கிலப் பேரரசுடன் இணைக்கப்பட்டது. ஆங்கில வர்த்தகர்கள் கட்டுப் பாடற்ற வர்த்தக உரிமைகளைப் பெற்றனர். இவ்வைந்து துறை முகங்களும் ஆங்கில-சீன வர்த்தக உறவுகளின் வளர்ச்சியில் முக்கி யத்துவம் பெற்றன.

2. சுங்க வரிவிதிப்பு முறைகள் ஒழுங்குபடுத்தப்பட்டன. அரசு சுங்கவரி விதிப்புகளைப் பற்றிய அறிவிப்புகளை வெளியிடும்.

3. "கோ-டோவ் (Kow-Tow) என்ற மண்டியிட்டு வணங்கும் முறை ஒழிக்கப்பட்டது. இனி ஆங்கில அதிகாரிகள் சம உரிமையுடன் நடத்தப்படுவர்.

4. சீனு இருபத்தொரு மில்லியன் டாலர்களைப் போர் இழப்பீடாகக் கொடுக்கச் சம்மதித்தது. இதில் ஆறு மில்லியன் டாலர்கள், முன்பு கைப்பற்றிய அபினியின் மதிப்பாகும். மூன்று மில்லியன் டாலர்கள் சீன வர்த்தக நிறுவனங்கள் ஆங்கிலேய வர்த்தகர்களுக்குக் கொடுக்கவேண்டிய கடன் தொகையாகும். மீதி பன்னிரண்டு மில்லியன் டாலர்கள் போர்ச் செலவு ஆகும்.

5. சீன வர்த்தக நிறுவனங்களுக்குக் (Co-Hongs) கொடுக்கப்பட்டிருந்த வர்த்தக முற்றுரிமைகள் திரும்பப் பெற்றுக்கொள்ளப்பட்டன.

6. கள்ளக்கடத்தலை ஒழிக்க, சீன அரசுக்கு ஆங்கிலேயர்கள் தங்கள் ஒத்துழைப்பைத் தரவேண்டும்.

நாங்கிங் உடன்படிக்கையின்படி, திறந்துவிடப்பட்ட ஐந்து துறைமுகங்களிலும் ஆங்கில வர்த்தக அதிகாரி ஒருவர் இருப்பார். அத் துறைமுக நகரங்களில் ஆங்கிலேயர் எங்கு வேண்டுமானாலும் செல்லவும், சீன அதிகாரிகளுடன் சம நிலையில் தொடர்பு கொள்ளவும் உரிமை பெற்றனர். ஏற்றுமதி இறக்குமதி வரி ஐந்து விழுக்காடு என்று அறிவிக்கப்பட்டது. இந்தச் சுங்கவரி வசூலிப்பதில் ஆங்கில அதிகாரிகள் சீன அதிகாரிகளுடன் இணைந்து பணியாற்றவும் ஏற்பாடாயிற்று. மேலும் ஐரோப்பியர்களைச் சீனச் சட்டங்கள் கட்டுப்படுத்தாது என்ற விலக்கு உரிமையை (Extra-teritorial Rights) யும் பெற்றனர் (The Treaty of Bogue, Article IX). இது மிகப் பெரிய வெற்றியாகக் கருதப்பட்டது. இப் போர் அபினிப் போர் எனக் கருதப்பட்டாலும், உடன்படிக்கைகளில் அபினி வர்த்தகத்தைப் பற்றி எவ்விதக் குறிப்பும் காணப்படவில்லை என்பது வியப்பை அளிக்கின்றது. அபினி வர்த்தகத்தைத் தடை செய்வதோ, அனுமதிப்பதோ சீன அரசின் பொறுப்பு என இங்கிலாந்து வாளாவிருந்துவிட்டது. தடைசெய்தால், அத் தடையைச் செயலாக்குவதும் சீன அரசின் பொறுப்பேயாகும். இதை உணர்ந்த் சீன அரசு அபினி வர்த்தகத்தைத் தடை செய்யவில்லை. இறுதியாக இங்கிலாந்திற்குச் சில சிறப்புரிமைகளும் வழங்கப்பட்டன (Treaty of Bogue, Article VII). இவ்வுரிமை

யின்படி சீன அரசு வேற்று நாடுகளுக்கு வழங்கும் உரிமைகளை ஆங்கிலேயரும் பெறுவர் என்பதாகும்.

இங்கிலாந்துடன் செய்துகொண்ட நாங்கிங் உடன்படிக்கைக்குப் பின்னர் சீனு மேலும் மூன்று உடன்படிக்கைகளை ஐரோப்பிய நாடுகளுடன் செய்துகொண்டது. அமெரிக்காவுடனும் (July 3, 1844), பிரான்சுடனும் (Oct. 24, 1844) நார்வே, சுவீடன் நாடுகளுடனும் (March 20, 1840) வர்த்தக உடன்படிக்கைகள் செய்து கொள்ளப்பட்டன. இவைகளில் அமெரிக்காவுடன் செய்து கொண்ட ஒப்பந்தங்கள் சீன வரலாற்றில் மிகுந்த சிறப்புப் பெறுகின்றன. இவ்வளவு காலம், 1842 வரை ஐரோப்பியர்களை எதிர்த்து நின்ற சீனு, ஐரோப்பியருக்குப் பணிந்தது. எனினும் ஐரோப்பியரிடம் கொண்டிருந்த வெறுப்பினை மாற்றிக் கொள்ள வில்லை. ஆனுல், சீனுவில் ஐரோப்பியர்கள் வலிந்து நுழைய ஆரம்பித்து விட்டனர். சீன வரலாற்றில் புதிய அத்தியாயம் தொடங்கப் பெற்றுவிட்டது.

# 5. சீனுவில் தைப்பிங் கலகம் (1851-64)

## முன்னணி

பத்தொன்பதாம் நூற்றுண்டின் தொடக்கத்திலிருந்தே சீன அரசியல்வானில் கார்மேகங்கள் சூழ ஆரம்பித்தன. ஐரோப்பியர்களின் வருகையால் ஏற்பட்ட பிரச்சினைகளும், உள்நாட்டில் மக்கள் தொகைப் பெருக்கத்தால் ஏற்பட்ட உணவுப் பற்றுக் குறையும், அதன் விளைவாக உருவான அமைதியற்ற நிலையும், அரசு அதிகாரிகளின் தன்னலப் போக்கும், பொறுப்பற்ற நிலையும், திறமையின்மையும், பொருளாதாரச் சீர்கேடுகளும், மக்களைக் கசக்கிப்பிழிந்தன. இத்தகைய சீர்கேடுகளைச் சீனப் பேரரசு உணர வில்லை. அப்படியே உணர்ந்திருந்தாலும், அச் சீர்கேடுகளை அகற்றி, மக்களிடையே அமைதியையும் கட்டுப்பாட்டினையும் ஏற்படுத்தத் தேவையான வலிமையோ. திறமையோ அற்றிருந்தது. சீனுவில் நுழைந்த ஐரோப்பியர்கள் இருமுறை சீனப் பேரரசு படைகளை வென்று, தாங்கள் கோரிய உரிமைகளையும், சலுகைகளையும் தாங்களே வற்புறுத்தி எடுத்துக்கொண்டனர். இதனுல் பேரரசின் சிறப்பான மிக்குயர் நிலையும், அதிகாரமும்கூட ஆட்டம் காண ஆரம்பித்தது. 1644-ல் இருந்த மக்கள் தொகை 1800 ஆம் ஆண்டில் மூன்று மடங்காக உயர்ந்தது. இதுவரை இருந்த விளை நிலங்கள் பல சிறுதுண்டுகளாகப் பிரிக்கப்பட்டன. உணவு உற்பத்தி, வளர்ந்துவிட்ட மக்கள் தொகைக்கேற்பப் பெருகவில்லை. பஞ்சமும், பட்டினியும் ஏற்பட்டன. வரிகள் உயர்த்தப்பட்டன. உயர்த்தப்பட்ட வரித்தொகைகளைவிட மிக அதிகமாகவே வற்புறுத்தி வசூலிக்கப்பட்டது. மக்கள் வரிப் பளுவாலும், உணவுப் பற்றுக்குறையாலும் வதங்கிய நிலையில் இத்தகைய இழி நிலைக்குத் தங்களை ஆளாக்கிய அரசின்மீது ஆத்திரம் கொண்டனர். இந்த ஆத்திரம் புரட்சியாக வெடித்தது. 'வெண்டாமரைக்கழகம்' (White Lotus Society) என்ற புரட்சி அணி உருவாகியது. இவ்வணி




2. சீனு—தைப்பிங் கலகம்

1796-லிருந்து 1803 வரை பெரும் கலகத்தை ஏற்படுத்தியது. இக் கலகம் கடுமையாய் நசுக்கப்பட்டது. பல்லாயிரக்கணக்கானோர் கொல்லப்பட்டனர். இக் கலகத்தின் பின்னரும் சிறுசிறு கலகங்கள் தோன்றிய வண்ணமே இருந்தன். 1850 ஆண்டுவரை, ஒவ்வோர் ஆண்டிலும், சீனுவின் ஏதாவது ஒரு பகுதியில் புரட்சி ஏற்பட்டுக் கொண்டே இருந்தது. இப் புரட்சிகள் அனைத்தும் 1851-ல் தொடங்கி 1864 வரை நடந்த மாபெரும் கலகமான 'தைப்பிங் கலகத்திற்கு' முன்னோடியாக விளங்கின. இக் கலகத்திற்குச் சீன மக்களைத் தயார் செய்யும் சிறு இயக்கங்களாகவும் இவை விளங்கின.

## தைப்பிங் கலகம்

காரணங்கள் : மஞ்சு குலப் பேரரசர்களின் திறமையின்மை

தைப்பிங் கலகத்தின் பொதுவான காரணங்களை நோக்கும் போது, முதலில் தென்படுவது மஞ்சு அரசகுலத்தின்மீது சீனர்கள் கொண்டிருந்த வெறுப்பும், பகையுணர்வும் தென்படும். மஞ்சுக்கள் சீனுவில் அந்நியர்களாகவே கருதப்பட்டனர். அவர்களும் தங்கள் தனித் தன்மையைப் பேணிக் காப்பாற்ற முயன்றதுடன், சீனர் களைத் தங்களின் அடிமையாகவே கருதி நடத்த முற்பட்டனர். இப் பகையுணர்வு திறமையான மஞ்சுகுலப் பேரரசர்களின் காலத்தில் மறைந்திருந்தது. அரசின் திறமைக் குறைவு வெளிப்பட்டபோது. அவர்களின் எதிர்ப்புணர்வும் வெளிப்பட்டது.

காங்-சி போன்ற ஆற்றல்மிக்க பேரரசர்களின் காலத்தில் சீனப்பேரரசு செழித்தோங்கியது. அதிகாரிகள் கட்டுப்பாட் டுடனும், கண்ணியத்துடனும் கடைமையாற்றி, மக்களின் நன்மதிப்பைப் பெற்றனர். பேரரசின் எல்லைகள் விரிவடைந்தன. அந்நியத் தொடர்பு ஏற்பட்டபோதிலும் அரசின் ஆதரவு பெற்று, அரசுக்கு அடங்கியே செயல்பட்டது. சீனுவின் பெருமை உயர்ந்தது. இலக்கியமும் கலைகளும் வளர்ந்தன. இவருக்குப் பின்னர் வந்த ஒருசில பேரரசர்களும் இவரைப் போன்றே ஆற்றல் மிக்கவர்களாய் இருந்தனர். உலக வரலாற்றைக் காணும்போது, ஒவ்வொரு அரசகுலமும் ஆரம்ப காலத்தில் மிகத்திறமை படைத்த மாமன்னர்களை உருவாக்கி, வளர்ந்தது. வளர்ச்சி முதிர்ந்த நிலையை அடைந்ததும் திறமை குறைந்து, தளர்வுற்று, மங்கி மறையத் தொடங்கும். உலகில் தோன்றி மறைந்த எண்ணிறந்த பேரரசுகளின் வரலாறு, இந்த இயற்கையின் நியதிக்கு உட்பட்டுத் தான் காணப்படுகின்றது. இவ்வியற்கை நியதிக்கு மஞ்சு அரச குலம் மட்டும் விதிவிலக்காய் இருக்க முடியாது. அதேபோல 1820-லிருந்து 1850 வரை சீனுவை யாண்ட தோ-குவாங் (Tao-

Kuang) என்ற பேரரசர் திறமையற்றவராய், உல்லாசவாசியாய்க் காணப்பட்டார். இவரது காலத்தில்தான் மஞ்சு குலத்தின் சிதைவு ஆரம்பமானது. இவருக்குப் பின்னர் பதவியேற்ற சியன் ஃபெங் (Hsien Feng-1850-1861) என்ற பேரரசரும் அரசு நடத்துவதில் அக்கறை காட்டவில்லை. இவரது காலத்தில் அரசு அதிகாரிகளும் மன்னரைப் பின்பற்றி ஆற்றல் குறைந்தும், ஊழல் மிக்க சுயநலவாதிகளாகவும் தென்பட்டனர். இத்தகைய நிலை, ஆட்சித் தலைமையில் காணப்படும்போது, புரட்சி தோன்றி வளர்ந்ததில் வியப்பேதுமில்லை.

**சமுதாய - பொருளாதார - காரணங்கள்**

இக் கலகம் சமூக, பொருளாதாரச் சீர்கேடுகள் காரணமாக ஏற்பட்டது என்றும் கூறலாம். உழவர்கள், கைவினைஞர்கள், கீழ்மட்டத்திலிருந்த அறிவாளிகள், ஆகியவர்களின் எழுச்சியே, தைப்பிங் கலகமாய் வெடித்தது எனலாம். பெரும் நிலப்பிரபுக்கள், தங்கள் நிலங்களைக் குத்தகைக்குவிட்டு, வருகின்ற வருமானத்தில் வளமான வாழ்வு நடத்தினர். நாள் முழுவதும், ஆண்டுதோறும் நெற்றி வியர்வை நிலத்தில் சிந்த பாடுபடுகின்ற ஏழை உழவன் தனது உற்பத்தியில் பெரும் பகுதியை பெரும் நிலப்பிரபுக்கள் எடுத்துக்கொள்ள, மீதியை அரசுக்கு வரியாகச் செலுத்தி விட்டு, அரைவயிற்றுக் கஞ்சிகூடக் கிடைக்காமல் திண்டாடினன். அவனுடைய தொல்லைகளைக் குறைக்க அரசு எவ்வித முயற்சியும் மேற்கொள்ளவில்லை. சட்டங்களின் பிடிகளிலிருந்து, தன்னை விடுவித்துக்கொண்ட பெரும் நிலப் பிரபுக்களும், பெரும் வணிகர்களும், அரசு அதிகாரிகளும் ஏற்றமிகு வாழ்வு வாழ்ந்தனர். ஊழல் மிகுந்த நிலையில் வறிய உழவர்கள், மற்றும் ஏழைத் தொழிலாளிகளைக் கசக்கிப் பிழிந்து, பணம் சேர்த்தனர். இத்தகைய சமூகத்தை உறிஞ்சி வாழ்கின்ற அட்டைகளாய்ச் சோம்பித்திரிந்த உயர்குல மக்களுக்கெதிராகத் தோன்றியதே, இந்தத் தைப்பிங் கலகம். கலகத்தின் ஆரம்பமாகப் பெரும் நிலப்பிரபுக்களின் பண்ணைகள் பிடுங்கப்பட்டன. அந் நிலங்களை நிலமற்ற ஏழை உழவனுக்குப் பகிர்ந்து கொடுக்கப்பட்டன. பெருஞ் செல்வந்தர்களாக இருந்த வர்த்தகர்கள் தாக்கப்பட்டனர். திறமையற்ற, சுயநலமிகளான அரசு அதிகாரிகள் வேட்டையாடப்பட்டு அழிக்கப்பட்டனர்.

ஐரோப்பியர்களுடன் நடந்த போர்களினால் சீனப் பொருளாதாரம் மேலும் நலிந்தது. பெருகிவிட்ட அபினி வர்த்தகம் காரணமாகச் சீனாவின் வர்த்தகச் சமநிலை பாதிக்கப்பட்டது. வர்த்தகச் சமநிலையைப் பாதுகாக்கப் பெருமளவு வெள்ளியை ஐரோப்பியர்

களுக்குக் கொடுக்க வேண்டியதாயிற்று. மேலும், ஐரோப்பியர் களுடன் நடந்த போர்களில் தோல்வியுற்ற சீன பெருந் தொகையைப் போர் இழப்பீடாகக் கொடுக்க வேண்டியிருந்தது. ஏற்கெனவே வரிவசூல் அதிகாரிகளின் ஊழல் காரணமாக சீனக் கருவூலம் வறண்டு கிடந்தது. இந் நிலையில், ஐரோப்பியர்களுக்குப் போர் இழப்பீடு கொடுக்க இயலாத நிலையில், அதிக வரிவிதிக்க வேண்டியிருந்தது. சீனவின் பாமர மக்கள் செப்புக்காசுகளையே கொடுக்கல் வாங்கல்களில் பயன்படுத்தினர். செப்புக்காசு களுக்கும், உயர்மட்டத்தினரும் அரசும் பயன்படுத்திய வெள்ளி நாணயங்களுக்குமிடையேயான விகிதம் நிர்ணயிக்கப்பட் டிருந்தது. பெருமளவு வெள்ளி வெளிநாட்டினருக்குக் கொடுக்கப் பட்டதால், நாட்டில் வெள்ளியின் மதிப்பு உயர்ந்தது. சீன உழவன் தானியங்களாக வரி செலுத்துவான். அத் தானியங்களின் மதிப்பு வெள்ளிக் காசுகளில் கணக்கிடப்பட்டு, ஏற்றுக்கொள்ளப் படும். வெள்ளியின் மதிப்பு பன்மடங்கு உயர்ந்த நிலையில் ஒவ்வொரு சீனனும் மிக அதிக அளவு தானியத்தை வரியாகச் செலுத்த வேண்டிய நிலை ஏற்பட்டது. ஏற்கெனவே மிகுந்த வரிப் பளுவைத் தாங்க இயலாமல் நலிவுற்றிருந்த ஏழைச் சீனன், இந்த நிலையால் மேலும் நசுக்கப்பட்டான். இக் குறைகளை நிவர்த்தி செய்ய அரசு எந்த முயற்சியையும் மேற்கொள்ளவில்லை.

இத்துடன் ஐரோப்பியர்கள் பெற்றிருந்த வர்த்தக உரிமைகள் காரணமாக ஏராளமான புதிய இயந்திர உற்பத்திப் பொருள்கள் சீனவில் இறக்குமதி செய்யப்பட்டன. உழவுத் தொழிலுடன் குடிசைத் தொழிலையும் மேற்கொண்டு, தங்களது வாழ்வைத் தொடர்ந்த உழவர்களும், கைத்தொழிலையே வாழ்வின் அடிப் படையாக நம்பி வாழ்ந்த கைவினைஞர்களும் இதனல் மதிப்பிழந் தார்கள். மலிவாகவும், உறுதியுடனுமிருந்த ஐரோப்பிய நாட்டுப் பொருள்களுக்குப் போட்டியாக வேலை நுட்பமிகுந்த, ஆனல் விலையுயர்ந்த கைத்தொழில் உற்பத்திப் பொருள்கள் விளங்க முடியவில்லை. இதனல் சமுதாயத்தின் அடித்தளத்தில் இருந்த தொழிலாளர்களும் வறுமையுற்று வாடினர். இவ்வாறு உழவர்கள், தொழிலாளிகள், அறிஞர்கள் ஆகியோர் அனைவரும் வறுமையில் திண்டாடிய நிலையில், அரசின்மீது வெறுப்படைந் திருந்தனர். இந்த வெறுப்பே தைப்பிங் கலகத்தின் அடித்தளமாய் அமைந்தது.

## முதல் அபினிப் போரின் விளைவுகள்

முதல் அபினிப் போரின் ஆரம்ப நிலையில் காண்டன் நகர அதிகாரிகள் 'தேசியத் தொண்டர் படை' யொன்றினை (Patriotic

Volunteers) ஏற்படுத்தினர். இப் படையினர் ஐரோப்பியரை எதிர்த்துப் போரிட்டு, பெருமை தேடிக் கொண்டிருந்தனர். போரின் முடிவில் இப் படை கலைக்கப்பட்டது. ஆனால், படையினரிடம் கொடுக்கப்பட்டிருந்த ஆயுதங்களைத் திரும்பப் பெறவில்லை. கலைக்கப்பட்ட படையினர் வேலையேதுமின்றித் திரிந்தனர். ஆயுதங்களைக் கொண்டிருந்த, வேலை வாய்ப்பற்ற இப் படையின் வீரர்கள் கொள்ளைக்கூட்டத்தினராக மாறினர். அரசுக்கு எதிரான கலகம் ஏற்பட்டபோது, அக் கலகத்தில் விரைந்து சேர்ந்தனர்.

முதல் அபினிப் போரின் விளைவாகப் பேரரசு படைகள் தங்கள் மதிப்பையிழந்தன. 'யாராலும் வெற்றி கொள்ள முடியாத சீனப் பெரும் படை' என்று இறுமாந்திருந்த நிலை மாறியது. தாய்நாட்டின் பெருமையைக் காக்கும் வலிவற்ற இப் படை மக்களின் மதிப்பையும் ஆதரவையும் இழந்தது. அவ்வாறே சீனக் கடற்படையும் ஆங்கிலேயரால் முழுவதுமாக அழிக்கப்பட்டுவிட்டது. அபினி வர்த்தகம் தடை செய்யப்பட்டதால் கள்ள வாணிபம் மிகுந்தது. சீனக் கடல்பகுதிகளில் கடற்கொள்ளைக்காரர்களும் திரிந்தனர். இவைகளை அடக்கும் வலிமையற்ற நிலையில் சீனப்பேரரசின் படைகள் இருந்தன.

ஆங்கிலப் படைகளின் வெற்றியும், அதன் விளைவாக ஆங்கிலேயர்கள் பெற்ற உரிமையும் சீனர்களிடையே பெரும் அதிர்ச்சியையும் ஆத்திரத்தையும் கிளறிவிட்டிருந்தது. இந்த அதிர்ச்சியும், ஆத்திரமும், சீனாவைக் காக்க இயலாத மஞ்சு அரசர்கள் பால் திரும்பியது.

### இயற்கையின் ஆசி

குவாங்சி, குவாண்டுங், ஹூனுன் மாநிலங்களில் 1846-47 ஆம் ஆண்டுகளில் வறட்சியும், வறட்சியைத் தொடர்ந்து பஞ்சமும் பட்டினியும் மக்களை வாட்டியது. வறட்சியைத் தொடர்ந்து பெரு வெள்ளமும், வெள்ளம் வடிந்தபோது கொள்ளை நோயும் பரவியது. பட்டினியால் வதங்கி, கொள்ளை நோய்க்குத் தமது குடும்பத்தினரைப் பலி கொடுத்து மயங்கிய பட்டினிப் பட்டாளம், அரச எதிர்ப்பியக்கங்களில் பல்லாயிரக் கணக்கில் சேர்ந்தது. மேலும் முன்னரே இந்நூலில் குறிப்பிட்டுள்ளவாறு, கன்பூசியத் தத்துவமும் மக்களின் புரட்சிக்கு ஆதரவாக இருந்தது. மன்னன் இறையருளால் நாட்டை ஆளுகின்றார் என்றும், அவ் விறையருள் விலகியபோது, நாட்டில் பஞ்சமும், வறட்சியும், வெள்ளமும், கொள்ளை நோயுமெனத் தோன்றி, இறையருள் விலகிவிட்டதை

அறிவிக்கும் எனவும், அவ்வாறு, அருளை இழந்த மன்னருக் கெதிராக கலகங்கள் தோன்றும், அதன் விளைவாக மன்னரும், மன்னர் குலமும் அழிவுறும்; புதிய அரசகுலம் தோன்றும் என்ப துவும் சீனாவில் பண்டுதொட்டு வருகின்ற கன்பூசியக் கருத்தாகும். இதையே சீனவரலாறும் நமக்கு எடுத்துக்காட்டுகின்றது. கன்பூசியத் தத்துவம் குறிப்பிட்ட இந்நிலை ஏற்பட்டுவிட்டதாகப் மக்கள் நம்பினர். இரகசியப் புரட்சி இயக்கங்களில் சேர்ந்தனர். பெருங்கலகத்தின் தொடக்கம் ஏற்பட்டது.

### சமயத்துறைக் காரணங்கள்

சீனாவில் சமயமும் அரசியலும் பிரிக்க 'இயலாதவாறு ஒன்றி யிருந்தன என்பது நாம் அறிந்த ஒன்றாகும். அதே போல தைப்பிங் கலகத்திற்கும் ஒரு காரணமாகச் சமய இயக்கம் இருந்திருக்கின்றது. கிறித்தவ, கன்பூசியத் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்ட புதிய சமய இயக்கம் ஒன்று சீனாவில் தோன்றி வளர்ந்தது. ஆரம் பத்தில் அரசை எதிர்க்கும் எண்ணம் இப் புதிய சமய இயக்கத்தின ருக்கு இல்லை யெனினும், விரைவில் சமய இயக்கம் அரசியல் இயக்க மாக உருமாறியது. சமய இயக்கத்தின் தலைவர்கள் அரசியல் போராட்டத்தைத் தலைமையேற்று நடத்த ஆரம்பித்தனர்.

### ஹங்-சியு-சுவாங்கும் சமய இயக்கத்தின் தோற்றமும்

சீனாவின் குவாண்டுங், குவாங்சி மாநிலங்களில் ஹக்கா (Hakka) என்ற முரட்டு இனத்தவர்கள் வாழ்ந்து வந்தனர். இவ்வினத்தினருக்கும், மற்ற இன மக்களுக்குமிடையே அடிக்கடி பூசல்கள் தோன்றுவதுண்டு. பொருளாதார நலிவுற்ற நிலையில் இப் பூசல்கள் அதிகரித்தன. 'ஹக்கா' இனத்தைச் சேர்ந்த ஹங்-சியு-சுவாங் (Hung-Hsia-Cheian) என்பவர், தன் இன மக்களைக் கொண்டு ஒரு புதிய வழிபாட்டுக் கழகத்தை உருவாக் கினார். இக் கழகம் 'இறை வழிபாட்டுக் கழகம்' (Association for Worshipping God) என அழைக்கப்பட்டது. இக் கழகமே, மக்களாதரவு பெற்று வளர்ந்து, பின்னர் 'தைப்பிங்' இயக்கமாக உருவெடுத்து, சீனப் பேரரசையே ஆட்டிப் படைக்கின்ற அளவுக்கு வலிமை பெற்றுவிட்டது. ஹங்-சியு-சுவாங் என்பவர் இவ்வியக் கத்தைத் தோற்றுவித்தார் எனக் கூறுவதைவிட, சமுதாயப், பொருளாதாரச் சீர்கேடுகளின் விளைவாக, மக்களிடையே ஏற்பட்ட புரட்சி இயக்கத்தினை இவர் தலைமையேற்று நடத்தினார் எனக் கொள்வதே மிகவும் பொருத்தமாக இருக்கும் என்று கருதப் படுகின்றது.

ஹங்-சியு-சுவாங் என்பவர் காண்டன் நகருக்கருகில் இருந்த ஒரு சிற்றூரில் சாதாரண ஏழை உழவனின் ஐந்தாவது மகனாகப்

பிறந்தார். இவரைக் கல்வியறிவு மிக்க அறிஞனுக்கி, அரசு தேர்வுகளில் வெற்றிபெறச் செய்து, அரசுபணியில் சேர்ப்பித்து, புகழுடைய வேண்டும் என்பது இவரது பெற்றோரின் ஆசையாகும். பெற்றோர்களின் விருப்பத்தை நிறைவேற்றும் வகையில், ஹங் தமது படிப்பில் ஆர்வம் கொண்டார். எனினும் காண்டன் நகரில் நடந்த மாநில அரசு தேர்வுகளில் மூன்றுமுறை முயன்றும் தோல்வியடைந்தார். மூன்ருவது முறையும் தோல்வி யடைந்ததை எண்ணி வருந்திய ஹங் நோய்வாய்ப்பட்டார். நோயுற்றுப் படுக்கையில் மயங்கிக் கிடந்தபோது, சில 'காட்சிகள்' தோன்றின. அக் காட்சிகளில் இவர் ஒரு புதிய உலகிற்குப் பறந்து செல்வது போலவும், அங்குச் சென்று பெரிய அரண்மனை போன்ற மாளிகையை அடைந்து, அங்கே பளபளக்கும் அரியணையில் அமர்ந் திருந்த ஒரு முதியவரை வணங்கி நின்றபோது, அம் முதியவர், நவரத்தினங்களால் இழைக்கப்பட்ட ஒரு சிறு கத்தியைக் கொடுத்து, தீமையை அழித்து, மக்களைக் காப்பாற்று என்று ஆணையிட்டது போலவும் உணர்ந்தார். அதே அரண்மனையில் நடுத்தர வயதுள்ள மற்றொருவரைச் சந்தித்ததாகவும், அவரை 'அண்ணு' என்றழைத்துப் பேசியதாகவும் உணர்ந்தார். அந்த 'அண்ணுவும்' இவரும் சேர்ந்து பேய் பிசாசுகளை விரட்டியடிப்பது போலவும் உணர்ந்தார். இக் காட்சிகளின் வேகத்தால் உந்தப் பெற்ற இவர் தமது படுக்கையினின்று எழுந்து கை கால்களை வீசிக்கொண்டு கண்ணிற்குப் புலப்படாத எதிரிகளை அழிக்க முற்பட்டார். அக் 'காட்சி' முடிந்து தன்னிலை உணரப் பெற்ற இவர், தன்னுள் ஒரு புதிய சக்தியும், தெம்பும் உருவாகி யிருப்பதை உணர்ந்தார். இவர் முகத்தில் ஒளிவீசுகின்ற புதுக்களை ஏற்பட்டிருப்பதாகவும், சற்று உயரமாகக்கூட வளர்ந்து விட்டதைப் போலவும் உணர்ந்த இவரது பெற்றோர்கள் வியந் தனர். இவர் உடல் நலம் பெற்ற பின்னும் இவரது கனவுக் காட்சிகளே இவரது உள்ளத்தை நிறைத்திருந்தன. இக் காலத்தில் கிறித்தவப் பாதிரியார் ஒருவரின் தொடர்பு கிட்டியது. அவரிட மிருந்து பைபிளையும், பழைய ஏற்பாடுகளையும் (Old Testement) கற்ருர். கிறித்தவ சமய நூல்களைப் படித்த பின்னர், அவர் கண்ட காட்சிகளின் கருத்து இவருக்குத் தெளிவாக விளங்கியது. தாம் கனவில் கண்ட முதியவர்தான் உலகின் தந்தையான இறைவன் (God Father) என்றும், இவரால் 'அண்ணு' என்று அன்புடன் அழைக்கப்பட்ட நடுத்தர வயதுள்ளவர்தான் இயேசு கிறிஸ்து என்றும், அவர்களின் கட்டளையைப் பெற்றுப் புனிதமடைந்த இவர் தம்மை இயேசுவின் தம்பியெனவும் கருதினுர். இக் கருத்துக் களினுல் தெளிவடைந்து புதிய ஆர்வம் பெற்ற இவர், தமது புதிய சமயக் கொள்கைகளைப் பரப்ப முற்பட்டார். இதன் காரண

மாகவே இறைவழிபாட்டுக் கழகத்தை நிறுவி, அதன் வழியாக உண்மையான இறைவன் வழிபாட்டு முறையினை பரப்ப முயன்றார். இவரது கருத்துகள் மக்களிடையே வரவேற்கப்பட்டன. இவரது ஆதரவாளர்கள் பெருகினர். இவரது செயல்களைக் கேள்வியுற்ற சீன அரசு இவ்வியக்கத்தினைத் தடை செய்தது. அரசின் தடையுத்தரவால் இவரது புகழ் மேலும் பரவியது. அரசினை எதிர்த்தும், கிறித்தவரல்லாத மற்ற சமயத்தின் கோட்பாடுகளைக் கடிந்தும் தீவிர பிரசாரங்கள் செய்யப்பட்டன. அரசின் கொள்கைகளையும், சீர்கேடுகளையும் எதிர்த்த மக்கள் இவரைப் பின்பற்றினர். சமய இயக்கமாத் தோன்றிய இவ்வியக்கம் அரசியல் போராட்டமாக உருவெடுத்தது.

**கலகத்தின் உடனடிக் காரணம்**

அரசுக்கு எதிரான உணர்வுகள் சீனாவெங்கிலும் பரவலாகக் காணப்பட்டன, நாடு புரட்சிக்குத் தயாராய் இருந்தது. இப் புரட்சி வெடிப்பதற்கு ஒரு சிறு காரணம் தேவைப்பட்டது. விரைவிலேயே காரணமும் கிடைத்தது. 1850ஆம் ஆண்டு குவாங்சி மாநிலத்தில் ஒரு சிறு கிராமத்தில் அரசு படையினர் மக்களை வற்புறுத்திப் பணம் வசூலிக்க முயன்றனர். மரக்கறி உற்பத்தி செய்யும் தொழிலாளர்கள் சிலர் படைவீரர்கள் பணம் வசூலிப்பதைத் தடுக்க முயன்றனர். இதனால் கைகலப்பு ஏற்பட்டது. கைகலப்பில் ஈடுபட்ட தொழிலாளர்கள் அனைவரும் இறைவழிபாட்டுக் கழகத்தின் உறுப்பினர்கள். எனவே, ஹங்-சியு-சுவாங், தம்முடைய கழகத்தைச் சார்ந்தவர்கள் தாக்கப்பட்டதை யொட்டி, அரசுக்கெதிரான கலகங்களை ஏற்படுத்த முனைந்தார். தைப்பிங் கலகம் தோன்றியது.

இதற்கிடையில் ஹங், உலகில் நடக்கும் கொடுமைகளையும், தீமைகளையும் அழித்து, அமைதியேற்படுத்தும்படி, கடவுள் தமக்கு ஆணையிட்டிருப்பதாகக் கூறிக்கொண்டார். அப் பணியில் ஈடுபட்ட தம்மைத் ‘தெய்விக அரசர்’ (Heavenly King) என்றும், தம் கடமையை நிறைவேற்ற புதிய நிறுவனம் ஒன்றினை ஏற்படுத்துவதாகவும் அறிவித்தார். அப் புதிய நிறுவனத்தின் பெயர் ‘நிறைவான அமைதி’ அல்லது ‘தைப்பிங் அரசகுலம்’ (Perfect Peace-Tai’Ping) என்பதாகும். ஆரம்பித்த மூன்றே ஆண்டுகளில் சீனாவின் மையப் பகுதி முழுவதிலும் இவ்வியக்கம் விரைந்து பரவியது, ஹூனன், ஹூபே, குவாங்சி மாநில மக்கள் படையெனத் திரண்டனர். ஏற்கெனவே ஹங் அவர்களின் நாவன்மையில் மயங்கிய படைவீரர்கள், புரட்சிப் படையாக உருவெடுத்து, ஹங்கின் ஆணையை எதிர்நோக்கி

நின்றனர். ஆரம்பத்தில் பத்தாயிரத்திற்கும் சற்றுக் குறைவான எண்ணிக்கை கொண்டிருந்த இப் புரட்சிப் படை 1853ஆம் ஆண்டுக்குள் ஒரு மில்லியனுக்கும் அதிகமான வீரர்களைக் கொண்டதாகப் பெருகி வளர்ந்தது. இப் படைகள் சென்ற வழியெங்கும் பெரும் அழிவை ஏற்படுத்திச் சென்றது. 1853-ல் நாங்கிங் நகர் பிடிக்கப்பட்டது. தைப்பிங் ஆட்சியினரின் தலைநகராக நாங்கிக் மாற்றப்பட்டது. ஹங்-சியு-சுவாங், 'தீன் வாங்' (Tien-Wang-Meeaiah-King) என்ற பெயருடன் அரசரானர். தென் சீன மாநிலங்களில் தைப்பிங் படையினரின் ஆட்சி ஏற்பட்டது. மஞ்சுப் பேரரசுப் படைகள் தோற்கடிக்கப்பட்டு விரட்டப்பட்டன. மாநில, மாவட்ட ஆட்சியாளர்களாக 'இளவரசர்கள்' என் அழைக்கப்பட்ட படைத்தலைவர்கள் நியமிக்கப்பட்டனர். நாங்கிங் நகரிலேயே 'ஹங்' தங்கி, ஆட்சிப் பொறுப்பினை ஏற்றார்.

சீனுவின் தெற்குப்பகுதியில் தமது ஆட்சியை உறுதி செய்து கொண்ட ஹங், தாம் மட்டும் நாங்கிங் நகரிலேயே தங்கிவிட்டார், அவரது தைப்பிங் படையின் ஒரு பிரிவு பீகிங்கை நோக்கி அனுப்பப் பட்டது. தெற்கில் பெற்றது போன்ற எளிதான வெற்றியை வடக்கில் பெற முடியவில்லை. பேரரசு படைகளின் எதிர்ப்பு மிகவும் கடுமையானதாய் இருந்தது. பேரரசு படைகளின் தலைவர்களாக செங்-கோ-ஃபான் (Tseng-Ko-Fan) என்பவரும் லி-ஹாங்-சாங் (Li-Hang-Chang) என்பவரும் இருந்தனர். இவர்களின் வீரமும், போராற்றலும், படை நடத்தும் முறைகளும், உயர்தரமான நவீன ஆயுதங்களும், பேரரசு படைகளை மிகவும் வலிமையுள்ளதாக மாற்றிவிட்டிருந்தன. தியன்சின் நகர் வரை சென்ற தைப்பிங் படைகளை இவ்விரு தளபதிகளும் விரட்டியடித்தனர். இதுவரை வெற்றியையே கண்ட தைப்பிங் படைகள், முதல் முறையாகத் தோற்கடிக்கப்பட்டன. இப் படைகள் தெற்கு நோக்கி திரும்பின. இப் படைகளின் தோல்வி, தைப்பிங் கலகத்தின் தோல்வியின் ஆரம்பமாகக் கருதப்படுகின்றது.

1853-லிருந்து 1864 வரை பதினோராண்டுகளுக்கு நாங்கிங் நகரைத் தலைநகராகக் கொண்டு தைப்பிங் கலகத் தலைவரான 'ஹங்' தென் சீன மாநிலங்களை ஆண்டார். ஆனல், தைப்பிங் குழுவினரின் சமயக் கருத்துகள் சீன மக்களிடையே ஆதிக்கம் பெறவில்லை. தைப்பிங் இயக்கத்தில் கிறித்தவ சமயக் கருத்துக்களும் கன்பூசியக் கருத்துகளும் இடம் பெற்றிருந்தன. உருவ வழிபாடு தடை செய்யப்பட்டது. இவ்வாறு சமயக் கருத்துக்களின் காரணமாக ஏற்பட்ட புரட்சி, சந்தர்ப்பச் சூழ்நிலையால் வெற்றி பெற்று அரசியலையும் கைப்பற்றியது. ஆனல், செயல் திறமை

மிக்க, ஆட்சித்துறை அனுபவமிக்க தலைவர்கள் தோன்றாததால், விரைவிலேயே வீழ்ச்சியுற நேர்ந்தது.

### தைப்பிங் ஆட்சியினரின் சீர்திருத்தங்கள்

தைப்பிங் ஆட்சியில் பல சீர்திருத்தங்கள் மேற்கொள்ளப் பட்டன. நிலங்கள் குடும்பத்தின் அளவுக்கேற்றவாறு பிரித்துக் கொடுக்கப்பட்டன. இருபத்தைந்து குடும்பங்கள், தங்களின் நிலங்களை ஒன்றாக இணைத்துப் பயிர்த்தொழில் செய்யவேண்டும். உற்பத்தியாகின்ற விளைபொருள்களைத் தங்களின் குடும்பத் தேவைக்கேற்றவாறு பகிர்ந்து கொள்ளவேண்டும். தேவைக்கு அதிகமாக இருந்தால், அதை அரசிடம் ஒப்படைக்க வேண்டும். மக்கள் அனைவரும் சகோதரர்களே. அவர்களுக்குள் பிறப்பால், உயர்வால், செல்வநிலையால் ஏற்றத்தாழ்வு கிடையாது என்ற சகோதரத்துவ தத்துவத்தை தைப்பிங் ஆட்சியினர் பின்பற்றினர். பெண்கள் ஆண்களுக்கிணையாக, பால்வேற்றுமையின்றி நடத்தப் படவேண்டும் என்றும் அறிவிக்கப்பட்டது. ஒருதார மணம் வரவேற்கப்பட்டது. பெண்கள் தங்கள் பாதங்களை இறுக்கிக் கட்டி, சிறியதாக ஆக்கிக் கொள்ளுகின்ற பண்டைய வழக்கம் தடை செய்யப்பட்டது. விபசாரம் செய்வதும் தடை செய்யப் பட்டது. பெண்களும் ஆண்களைப் போலவே அரசு பணித் தேர்வு களில் பங்கு பெறலாம் என்றும், உயர்பதவிகளில் அமரலாம் என்றும் அறிவிக்கப்பட்டது. இத்தகைய சமூக, பொருளாதார முன்னேற்றக் கருத்துகளை வெளியிட்டுச் செயல்படுத்த விரும்பிய தைப்பிங் ஆட்சியினரிடையே, ஏராளமான குறைபாடுகளும் காணப்பட்டன. நிலமனைத்தும் ஊருக்குச் சொந்தம். அனைவரும் கூட்டுப் பண்ணை முறையில் விவசாயம் செய்து, வருகின்ற விளை பொருளைத் தேவையின் அடிப்படையில் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று உபதேசம் செய்த தைப்பிங் ஆட்சியாளர்கள், தாங்கள் மட்டும் தேவைக்கதிகமாகப் பொருள்களைப் பெற்றனர். அதுபோலவே அவர்கள் இயற்றிய பெரும்பாலான சட்டங்களை மீறியவர்களும் தைப்பிங் அரச அதிகாரிகளே. மேலும் ஒருதார மணத்தை வற்புறுத்தி, பெண்களுக்கும் சமஉரிமை அளித்த தைப்பிங் அரசின் அதிகாரிகளுடைய வீட்டு அந்தப்புரத்தை ஏராளமான அழகிகள் அலங்கரித்தனர். இதுதான் தைப்பிங் கலகத்தினரின் ஏற்றத்தாழ்வற்ற சமதர்ம சமுதாயம் ஏற்படுத்த வேண்டும் என்ற ஆர்வத்தின் விளைவாகும்.

### அந்நியர்களின் போக்கு

சீனாவில் வர்த்தக உரிமைகளைப் பெற்று, நிலைபெற்று விட்ட ஐரோப்பியர்கள், அவர்கள் கண்முன் தோன்றி வளர்ந்த தைப்பிங்

கலகத்தினை எந்தக் கண்ணோட்டத்தில் நோக்கினார்கள் என்பதையும் குறிப்பிட்டாக வேண்டும். புராடெஸ்டண்டு கிறித்தவ சமயத்தைச் சேர்ந்தவர்கள், தங்கள் சமயக் கருத்துகள் தைப்பிங் இயக்கத்தின ரிடையே ஏற்றம் பெற்றிருப்பதைக் கண்டு மகிழ்வடைந்தனர். தைப்பிங் இயக்கத்தினருக்கு நல்லாசி கூறி வாழ்த்தினர். புராட்டெஸ்டண்டுகளின் சமயக் கருத்துகள் இடம் பெற்றிருக்கின்றன என்ற ஒரே காரணத்திற்காக, சீனுவில் இருந்த கத்தோலிக்கர்கள் தைப்பிங் இயக்கத்தினருக்கு ஆதரவளிக்க மறுத்தனர். அதே போல அமெரிக்கர்களும், ஆங்கிலேயரும்கூட ஆரம்ப நிலையில் மாறுபட்ட கருத்துகளைக் கொண்டிருந்தனர். அமெரிக்கர்கள் தைப்பிங் இயக்கத்தை எதிர்த்தனர். மஞ்சுகுலப் பேரரசு நிலை பெற்று இருப்பது, தங்களுக்கு ஆதரவாக இருக்கும் என உறுதி யுடன் நம்பினர். இதன் காரணமாகவே தைப்பிங் இயக்கத் தினருக்கு எவ்வித உதவியோ, அனுதாபமோகூடக் காட்டாது, ஒதுங்கி நின்றனர். ஆனல், ஆங்கிலேயர்கள், தங்களது புராட்டெஸ்டண்டு சமய உணர்வால் தூண்டப்பெற்று தைப்பிங் இயக்கத் தினரை ஆதரிக்க வேண்டுமென்று எண்ணினர். சீனு முழுவதும் தைப்பிங் இயக்கத்தினரின் ஆட்சி ஏற்பட்டால் தங்களுக்கு ஏராளமான வர்த்தக உரிமைகளும் சலுகைகளும் எளிதாகக் கிடைக்கும் எனவும் நம்பினர். எனவே நாங்கிங் நகரிலிருந்த தைப்பிங் அரசை அங்கீகரித்து, உறவு ஏற்படுத்திக்கொள்ள வேண்டும் என்ற முடிவிற்கும் வந்தனர். ஆனல், இரண்டாவது அபினிப் போரின் முடிவில் 1858-ல் திருத்தப்பட்ட உடன் படிக்கைகள் கையெழுத்தான பின்னர், ஆங்கிலேயர் தைப்பிங் இயக்கத்தினருக்கு ஆதரவு காட்டவேண்டிய அவசியமில்லை யென்பதை உணர்ந்தனர். மேலும், தைப்பிங் இயக்கத்தினர் வெற்றி பெற்ருல், அந்நியர்களுக்கெதிரான வலிவுள்ள தேசிய சீனு உருவாக்கப்படும் என்றும் உணர்ந்தனர். எனவே, தைப்பிங் இயக்கத்தினருக்கு ஆதரவளிக்க மறுத்து, அமெரிக்கர்கள் பின் பற்றிய ஒதுங்கி நிற்கும் கொள்கை அல்லது தேவையானல் மஞ்சுப் பேரரசுக்கு உதவுவது என்ற கொள்கையை ஏற்றுக்கொள்ள முன்வந்தனர்.

ஐரோப்பிய அரசுகள், மஞ்சுப் பேரரசருக்கு உதவுவது என்ற முடிவை அறிந்த சீனுவின் பேரரசர், ஐரோப்பியரின் ஒத்துழைப்பை நாடினர். செங்-கோ-ஃபானும், லி-ஹங்-சாங்கும் பேரரசு படைகளைத் திருத்தியமைத்ததின் மூலமும், படைச் சீர்திருத்தங்களை மேற்கொண்ட காரணத்தாலும், பேரரசின் படைகள் புதிய சக்தியைப் பெற்றன. சீனப் பேரரசில் காணப் பட்ட ஆட்சித்துறைச் சீர்கேடுகளும் சரிசெய்யப்பட்டன. இவ்விரு

படைத்தலைவர்களும் அந்நியரின் உதவியையும் பெற்றனர். ஃபிரெடரிக் டவுன்செண்ட் வார்டு (Frederick Townsend Ward) என்ற அமெரிக்கர் 'வெற்றிப்படை' (Ever Victorious Army) என்ற படையமைப்பை உருவாக்கினுர். ஐரோப்பியர்களின் நவீன ஆயுதங்களையும், சிறந்த போர் முறைகளையும் பயன்படுத்தி, ஆர்வமிக்க இளைஞர்களைக் கொண்டு, உருவாக்கப்பட்ட இப் படை, தைப்பிங் படைகளைத் தாக்கி அழிக்க ஆரம்பித்தது. ஐரோப்பியக் குடியேற்றங்களின் அருகில் நின்ற தைப்பிங் படைகள் சின்னு பின்னமாக்கப்பட்டன. இவ்வெற்றிப் படையின் தலைவர் வார்டு என்பார் இறந்த பின்னர், இப் படையின் அமைப்பில் சில குறை பாடுகள் தோன்றின. தலைவரற்ற இப் படை சீர்கேடுற்றது. இந் நிலையில் பீகிங் அரசு, வேறு ஒரு படைத்தலைவரை நியமித்து, இவ் வெற்றிப்படைகளுக்கு உதவுமாறு ஆங்கிலேயரை வேண்டிக் கொண்டது. இவ் வேண்டுகோளை ஏற்ற ஆங்கிலேயர் கார்டன் (Gordon) என்பாரை இவ் வெற்றிப் படைகளின் தலைவராக நியமித்தனர். கார்டனின் தலைமையிலான இப்படை மீண்டும் புத்துயிர் பெற்று, தைப்பிங்குகளை வேட்டையாடியது. தைப் பிங்குகளின் அழிவிற்கு மூலகாரணமே இந்த வெற்றிப் படைதான் எனக் கருதப்படுகின்றது.

செங்-கோ-ஃபான், லி-ஹங்-சாங் போன்ற சீனப் படைத் தலைவர்களும், ஆங்கிலேய, பிரெஞ்சுப் படைகளின் உதவியைப் பெற்று, யாங்ட்சி நதிப் பள்ளத்தாக்கில் நிலைபெற்றிருந்த தைப்பிங் படைகளை முறியடித்தனர். 1864-ல் நாங்கிங் நகரம் கைப்பற்றப் பட்டது. 'தெய்விகப் பேரரசர்' என்று தம்மை அழைத்துக் கொண்ட ஹங் சியு-சுவான், தோல்வியைக் கண்டு மனமுடைந்து தற்கொலை செய்துகொண்டார். தைப்பிங் கலகம் அடக்கப்பட்டு விட்டது.

### தைப்பிங் கலகத்தின் தோல்விக்கான காரணங்கள்

1851லிருந்து, 1864 வரை சீனு முழுவதையும் ஆட்கொண் டிருந்த இப் பெருங்கலகம் ஏற்படக் காரணம் சீனுவின் மஞ்சுப் பேரரசின் திறமையின்மையே ஆகும். பேரரசு படையினர், தைப்பிங்குகளின் படைகளுக்கு முன் நிற்கமாட்டாது சிதறி யோடினர். தைப்பிங் கலகத்தினர் இன்னும் சிறப்பாகப் பணி யாற்றி, மக்களின் குறைகளைப் போக்கி, திறமையான, நேர்மை யான, ஆட்சி முறையை ஏற்படுத்த முயன்றிருந்தால் ஒருவேளை மஞ்சுகுலத்தினரை வீழ்த்தி, பேரரசைக் கைப்பற்றியிருக்கலாம். ஆனல், தைப்பிங் இயக்கத்தினரிடையே திறமையான, ஆற்றல் மிக்க தலைவர்கள் தோன்றவில்லை. திறமையுடன் செயலாற்றிய

தலைவர்கள் புரட்சியின் ஆரம்ப காலத்திலேயே உயிரிழந்தனர். அதன்பின்னர்த் தோன்றிய தலைவர்களுக்குள் ஒற்றுமையில்லை. அவர்களுக்குள்ளேயே போட்டியும் பொறாமையும் ஏற்பட்டன. ஒருவரையொருவர் தாக்கி அழித்துக்கொள்ள முற்பட்டனர். இந்த உட்பூசலைத் தடுத்து, தன்கீழ்ப் பணியாற்றிய இளவரசர்களை அமைதிப்படுத்தும் திறமையற்று விளங்கினார் ஹங்சியு-சுவான். இத்தகைய குறைபாடுகளினால் தைப்பிங் கலகம் தோல்வியில் முடிந்தது.

செங்-கோ-ஃபான், லி-ஹங்-சாங் போன்ற படைத் தலைவர்களின் எழுச்சியும், அவர்கள் கையாண்ட படைச் சீர்திருத்த முறைகளும், பேரரசு படைகளை மிகவும் சிறப்படையச் செய்தன. மிகப் பெரிய தைப்பிங் படைகளை எதிர்த்து, எண்ணிக்கையில் குறைவான வீரர்களைக் கொண்டு, தமது திறமையாலும், போர்த் தந்திரத்தாலும் செங்-கோ-ஃபான் மாபெரும் வெற்றிகளைப் பெற்றார். உள்நாட்டில் யாங்ட்சி பள்ளத்தாக்கிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாகத் தைப்பிங் படைகளைத் தோல்வியுற்றுப் பின்னடையச் செய்து, கடற்கரைப் பகுதிகளுக்கு விரட்டினார். கடற்கரைப் பகுதிகளை அடைந்த தைப்பிங் படையினருக்கு உரிய வரவேற்பளிக்க, ஐரோப்பியர்களின் தகரிகள் (பீரங்கிகள்), வேட்டைகள் (துப்பாக்கிகள்) காத்துக் கொண்டிருந்தன. இவ்விரு படைகளுக்கிடையே சிக்கிய தைப்பிங் படைகள் அழிந்தன.

தைப்பிங் படையினரின் அழிவில் ஃபிரெடரிக் டவுன்சென்ட் வார்டு அவர்கள் ஏற்படுத்திய 'வெற்றிப் படையின்' தீரச் செயல்களும், வார்டு அவர்கள் இறந்தபின்னர் கார்டன் என்பாரின் தலைமையில் இப் படையினரின் வெற்றிகளும் தைப்பிங்கினரின் அழிவுக்குக் காரணமாய் அமைந்தன.

தைப்பிங்குகளின் சமூக, பொருளாதாரச் சீரமைப்புத் திட்டங்கள், மக்களிடையே வெறுப்புணர்ச்சியைத் தோற்றுவித்தன. கன்பூசியத் தத்துவத்தை ஏற்றுக்கொண்டிருந்த பாமர மக்கள் தைப்பிங்குகளின் புரட்சித் திட்டங்களை ஏற்க மறுத்தனர். தேசியமும், கூட்டுப்பண்ணை முறைகளும், சமுதாயச் சமநிலை அமைப்பும், சகோதரத்துவக் கொள்கையும், கொள்கையளவில் மிகச் சிறந்ததாகக் காணப்பட்டாலும், பழமைச் சமுதாய நெறியில் ஊறிவிட்டவர்கள், இப் புதிய கருத்துகளை ஏற்க மறுத்தனர். ஆரம்பத்தில் தைப்பிங்குகளுக்கு பாமர மக்கள் காட்டிய ஆதரவு இதனால் மறையத் தொடங்கியது.

மஞ்சுக்களின் திறமையின்மை, ஊழல், அதிகார வேட்கை, தரக்குறைவான வாழ்க்கை நெறிகள் இவைகளைச் சாடி, இக் குறைபாடுகளை நீக்கித் தூய்மையான, நேர்மையான, சமதர்ம சமுதாய அமைப்பில் திறமையான ஆட்சியமைப்பினை உருவாக்கி, நாட்டு மக்கள் நலனைப் பேணிப் பாதுகாப்போம் எனச் சூளுரைத்த தைப்பிங்குகள், அதிகாரத்தைக் கைப்பற்றியதும், மஞ்சுக்களிடம் காணப்பட்ட அதே தவறுகளைத் தாங்களும் செய்தனர். மஞ்சுக்கள் அரசியலில் காணப்பட்ட குறைபாடுகள் அப்படியே தைப்பிங்குகளின் ஆட்சியிலும் காணப்பட்டன.

தைப்பிங் கலகம், சமய அடிப்படையில் தோன்றியதால், சீன மக்கள் அனைவரின் முழு ஒத்துழைப்பையும் ஆதரவையும் பெற்றிருக்கவில்லை. இக் காரணத்தால் இதனை மஞ்சுக்களுக்கெதிரான தேசிய எழுச்சியெனக் கருத இயலாது. அத்துடன் தைப்பிங் படையினரின் வெறியாட்டங்கள், தேவையற்ற அழிவுச் செயல்கள் போன்றவைகள் நாட்டு மக்களுக்கு எல்லையற்ற வேதனையை ஏற்படுத்தின. இறுதியாக, அந்நியர்கள் மஞ்சுப் பேரரசை ஆதரிக்க ஆரம்பித்தவுடனேயே தைப்பிங் கலகத்தினரின் முடிவு காலம் நெருங்கிவிட்டது என்று நிச்சயமாகக் கூறலாம்.

## தைப்பிங் கலகத்தின் விளைவுகள்

தைப்பிங் கலகம் முடிவுற்றாலும், அதன் விளைவுகள் சீன வரலாற்றில் சில முக்கிய மாறுதல்களைத் தோற்றுவித்தன. தைப்பிங் கலகத்தின்போது நாட்டின் பல பகுதிகள் அழிக்கப்பட்டன. கலகம் முடிந்து பல ஆண்டுகள் அழிக்கப்பட்ட பகுதிகளிலிருந்து வரிவசூல் செய்வது இயலாது போயிற்று. இதனால் மைய அரசின் நிதி நிலை மிகவும் சீர்கேடுற்றது. ஐரோப்பியர்களுக்குப் போர் இழப்பீட்டுத் தொகை கொடுக்க இயலவில்லை, படைச் சீர்திருத்தச் செலவுகளை ஏற்கவும், பணமில்லாது போயிற்று. அரசின் அடிப்படைக் கடமையான சட்டம், ஒழுங்கு, அமைதி ஆகியவைகளைக்கூட நிறைவேற்ற இயலாத அளவிற்கு மைய அரசு திறமையற்றுவிட்டது என்பது தெளிவாகியது.

இக் கலகம் 1911-ல் ஏற்பட்ட சீனப் புரட்சிக்கு முன்னோடியாய் இருந்தது எனவும் கருதப்படுகின்றது.

இக் கலகத்தின்போது இருபது மில்லியனுக்கும் அதிகமான மக்கள் கொல்லப்பட்டனர். ஒருசில வரலாற்றாசிரியர்கள் இத் தொகையை முப்பது மில்லியன்கள் என்றும் குறிப்பிடுகின்றனர். இத்தகைய படுகொலை உலக வரலாற்றிலேயே ஏற்பட்டதில்லை

எனலாம். இத்தகைய படுகொலையால் ஒரு நன்மை ஏற்பட்டது என்றும் கருதப்படுகிறது. இவ்வளவு மக்கள் இறந்துபட்டதனுல், ஒருசில ஆண்டுகள் சீன, மக்கள் தொகைப் பெருக்கத்தினுல் ஏற்படுகின்ற தீய விளைவுகளினின்று தப்பியது.

தைப்பிங் கலகத்தினர் சில சீர்திருத்தங்களை ஏற்படுத்த முனைந்தனர். இச் சீர்திருத்தங்களை மக்கள் விரும்பியேற்றுக் கொள்ளவில்லையென்றுலும், சீர்திருத்தங்களின் தேவையை உணர்ந்தனர். சீன வரலாற்றில் இதன்பின்னர்த் தோன்றிய சீர்திருத்த இயக்கங்களுக்கும் இக் கலகம் முன்னேடியாய் இருந்திருக்கின்றது.

நிதிப்பற்றுக்குறை காரணமாகச் சீனுவில் இக் கலகத்தின்போது புதிய வரியொன்று விதிக்கப்பட்டது. ஒரு மாநிலத்திலிருந்து மற்றொரு மாநிலத்திற்குப் பொருள்களை எடுத்துச் செல்லும்போது, அப் பொருள்களின் மீது வரி விதிக்கப்பட்டது. இப் புதிய வரியினுல் மிக அதிகமான பணம் வசூலிக்கப்பட்டு, நிதிநிலையை ஓரளவுக்குச் சீராக்க முடிந்தது.

தைப்பிங் கலகத்தின்போது, ஷாங்காய்த் துறைமுகத்திலிருந்த சுங்கவரி அதிகாரிகள் அனைவரும் ஓடிவிட்டனர். இதனுல் ஐரோப்பியர்கள் தங்கள் கப்பல்களிலிருந்து பொருள்களை இறக்கவோ, ஏற்றுமதிப் பொருள்களை எடுத்துச் செல்லவோ இயலவில்லை. மேலும், சீன அரசுக்குச் சுங்கவரி செலுத்துவது தங்கள் கடமை என்பதனை உணர்ந்த ஆங்கிலேயர்கள், தாங்களாகவே சுங்கவரியை வசூலிக்க ஆரம்பித்தனர். இவ்வாறு வசூலிக்கப்பட்ட சுங்க வரியினை முறையாக மைய அரசுக்கு அனுப்பி வைத்தனர். கலகம் முடிவுற்ற பின்னர்த் திரும்பிவந்த சீன அதிகாரிகள், ஆங்கிலேயரின் கட்டுப்பாட்டில் நடக்கின்ற சுங்கவரி வசூல் முறைகளைக் கண்டு வியந்தனர். ஆங்கிலேயர்கள் பின்பற்றிய அதே முறைகளை ஏற்றுக் கொண்டதோடு, ஆங்கிலேய அதிகாரிகளைத் தொடர்ந்து பணியாற்றுமாறும் வேண்டிக்கொண்டனர். இம் முறை ஒருசில மாறுதல்களுடன், 1920 வரை செயல்பட்டது.

மைய அரசு படைகளின் திறமைக் குறைவினை அறிந்த மஞ்சுக்கள், மாநிலப் படைகளை உருவாக்கினர். ஒவ்வொரு மாநில ஆளுநரும் ஒரு பெரிய படையை உருவாக்கி, பயிற்சியளித்து வைத்திருக்கின்ற உரிமைகளைப் பெற்றுர். இந்த நிலையினுல்தான் பிற்காலத்தில் போர்ப் பிரபுக்கள் (War Lords) என்றழைக்கப்பட்ட படைப் பிரபுக்கள் தோன்றி, மஞ்சு அரசின் கட்டளைகளை ஏற்க மறுத்து, புரட்சிகளில் ஈடுபட்டனர். ஒருசில பிரபுக்கள் தங்களது

படை வலிமையால் பேரரசரை ஆட்டிப் படைக்கின்ற அளவுக்கு வலிமை பெற்றனர். இதன் விளைவாக 1911 வரை, சீனுவில் உள்நாட்டுப் போர்கள், கலகங்கள் ஏற்பட்டவண்ணம் இருந்தன.

மாநில ஆட்சித் தலைவர்கள், பேரரசின் திறமையின்மையை உணர்ந்து, நெருக்கடியான காலங்களில், தங்களது மூத்தோர் அவையைக் கூட்டி ஆலோசனை நடத்தினர். இதனுல் மாநிலங்களிலிருந்த அறிஞர்கள் அரசியல் செல்வாக்குப் பெற முடிந்தது. இவ்வாறு உருவாக்கப்பட்ட அரசியல் அறிஞர்கள் தாம் அரசியலமைப்புக் கோரி ஏற்பட்ட இயக்கத்தினையும், சீனுவின் சீர்திருத்த இயக்கத்தினையும் தோற்றுவித்து வளர்த்தவர்களாவார்கள்.

# 6. நாங்கிங்கிலிருந்து பீகிங்வரை

நாங்கிங் உடன்படிக்கையைப் பின்பற்றி, ஏனைய ஐரோப்பிய நாட்டினரும் சீனவுடன் வர்த்தக உடன்படிக்கைகளைச் செய்து கொண்டனர் என்பதை முன்னரே குறிப்பிட்டோம். அவ் வுடன் படிக்கைகளில் மிகவும் முக்கியமானது அமெரிக்காவுடனும், பிரான்சுடனும் செய்துகொண்ட உடன்படிக்கைகளே ஆகும். அமெரிக்கா, சீனவில் 'அனைத்து நாடுகளுக்கும் சம உரிமை' (Open door) என்ற கோட்பாட்டை வலியுறுத்தியது. பிரான்சு, சமயப்பரப்பாளர்களை மீண்டும் சீனவில் அனுமதிக்கும் உரிமை யைப் பெற்றது.

மீண்டும் சீனவில் நுழைந்த கிறித்தவ சமயப் பரப்பாளர்கள் மிகச் சிறந்த சாதனைகளைப் புரிந்தனர். இவர்கள் சீன மொழியைக் கற்று, வர்த்தகர்களுக்கு மொழிபெயர்ப்பாளர்களாக உதவினர்; சீன மொழி நூல்களை ஐரோப்பிய மொழிகளிலும், ஐரோப்பிய நூல்களைச் சீன மொழியிலும் மொழிபெயர்ப்புச் செய்து, கிழக்கு மேற்கு நாடுகளிடையே நீடித்த தொடர்பை ஏற்படுத்தவும், ஒருவரையொருவர் உணர்ந்துகொள்ளவும் வழிகாட்டினர். சீன வெங்கும் சென்று கிறித்தவ சமயத்தைப் பரப்பவும், அதன் வழியாகச் சீன மக்களிடையே பழகும் நல்வாய்ப்பினையும் பெற்றனர்.

இருப்பினும், சீனர்களும் ஐரோப்பியர்களும் இவ் வுடன் படிக்கைகளால் மகிழ்ச்சியடையவில்லை. சீனர்கள் ஐரோப்பியரின் படைவலிமைக்குக் கட்டுப்பட்டு, உரிமைகள் கொடுத்துவிட்டதற் காக வருந்தினர். ஐரோப்பியர்களை நாகரிகமானவர்கள் என்றோ, சமமாக மதிக்கக் கூடியவர்களென்றோ சீனர்கள் மதிக்கத் தயாராக இல்லை. வேறு பல ஐரோப்பிய நாட்டினருக்கும் உரிமைகள் வழங்கியதின் முக்கிய நோக்கம், 'எதிரிகளைப் பிரித்துத் தற் காத்துக் கொள்ளுதல்' (Divide and Survive) என்ற கொள்கையின்

விளைவேயாம். 'அனைத்து நாடுகளுக்கும் உரிமைகள் கொடுப்பதனால், நாடுகளுக்கிடையே போட்டி ஏற்படும்; அப் போட்டியின் விளைவாகத் தான் காப்பாற்றப்படுவதுடன், முடிந்தால் அந் நாடுகளைப் பணிய வைக்கவும் முடியும்' எனச் சீனர்கள் நம்பினர். இந்த நம்பிக்கை பொய்க்கவில்லை என்பதைப் பிற்காலச் சீன வரலாறு விளக்கும்.

இவ்வுடன்படிக்கைகளின் விளைவாக, ஏராளமான ஐரோப்பியப் பொருள்கள் சீனாவில் குவிக்கப்பட்டன. இதனால் சீனத் தொழில் துறை வளர்ச்சி தடைபட்டது. அபினி வர்த்தகம் மேலும் நீடித்தது. அபினி வர்த்தகத்தைத் தடுத்து நாட்டு மக்களைக் காப்பாற்றவேண்டும் என்ற எண்ணங்கொண்ட சீனப் பேரரசு, ஐரோப்பியர்களின் படை வலிமை காரணமாகத் தடைசெய்ய இயலாது தயங்கியது. எனினும் இவ்வுடன்படிக்கைகள் நடைமுறைக்கு வந்தபோது ஏராளமான பிரச்சினைகளும் தோன்றின. சீனாவின் மைய அரசு இவ்வுடன்படிக்கையில் கையொப்பமிட்டு இருந்தாலும், அதை நிறைவேற்றுவது, மாநில அரசுகள்தாம். வலிமையற்ற நிலையில் இருந்த மைய அரசு, உடன்படிக்கைதனை உள்ளூர வெறுத்த நிலையில் சுயாட்சி உரிமை பெற்றிருந்த மாநில அரசுகளுக்கு விளக்கமான ஆணைகள் பிறப்பிக்கத் தயங்கியது. மாநில அரசுகளும் மைய அரசின் ஆணைகளைப் பெற்ற பிறகும், செயல்படுத்துவதில் காலம் தாழ்த்தியது.

தாங்கள் விரும்பிய அளவுக்கு நாங்கிங் உடன்படிக்கை அமையவில்லை என்ற வருத்தம் ஐரோப்பியர்களுக்கு ஏற்பட்டது. மேலும், சீனாவை வற்புறுத்தி உரிமைகள் பெறவேண்டும் என்ற எண்ணமும் தொடர்ந்தது. உடன்படிக்கைகளை நிறைவேற்றுவதில் சீன அதிகாரிகள் ஐரோப்பியர்களுடன் ஒத்துழைக்க மறுத்தனர். சீன மக்களும் ஐரோப்பியர்களை விரும்பி வரவேற்றனர் என்றும் கூறமுடியாது. சிறப்பாக உடன்படிக்கையில் குறிப்பிட்ட துறைமுகங்களில் ஐரோப்பியர்கள் நுழைய முயன்றபோது பல பிரச்சினைகள் தோன்றின. ஆனால் ஷாங்காய் துறைமுகத்தில் ஐரோப்பியர்கள் வரவேற்கப்பட்டனர். அவர்களுக்கென்று நகரின் ஒருபகுதி ஒதுக்கிவிடப்பட்டிருந்தது. ஒவ்வொரு நாட்டினரும் தனித்தனிப் பகுதிகளில் உரிமைபெற்றுக் குடியேற வழிவகை செய்யப்பட்டிருந்தது. பிற்காலத்தில் உரிமைகள் (Concessions) என்ற பெயரில் சீனாவை ஐரோப்பியர்கள் பங்கிட்டுக் கொண்டதற்கு, இதுதான் முதல்படியோ எனப் பிற்கால வரலாற்றாசிரியர்கள் கருதினர். ஒவ்வொரு பகுதியும் அந்தந்த நாட்டு மக்களால் ஆளப்பட்டு வந்தது. அமாய், நிங்போ துறைமுகங்களில் சிறிது

தொல்லைகள் ஏற்பட்டன. சீனக் கூலிகளை வைத்து வேலைசெய்யும் போது தகராறுகள் தோன்றின. பூசௌ நகரில் வர்த்தகம் பெருகி வளராத நிலையில் ஐரோப்பியர்கள் அவ்வளவாக முதலில் அக்கறை காட்டவில்லை. ஆனால், காண்டன் நகரில் ஐரோப்பியர் களுக்குப் பலமான எதிர்ப்பு உருவாகியது. நாங்கிங் உடன்படிக்கை கையெழுத்தாகும் வரையில், சீன வர்த்தக நிறுவனங்கள் பெற்றிருந்த முற்றுரிமையையும், ஐரோப்பியர்களை நடத்திய விதமும், உயர்ந்தோர் என்ற எண்ணமும், ஐரோப்பியர்களுக்கு உரிமைகள் வழங்குவதையோ, உரிமைபெற்ற நிலையில் அவர் களுடன் தொடர்புகள் ஏற்படுத்திக்கொள்வதையோ, காண்டன் நகர மக்களும், சீன அதிகாரிகளும் விரும்பவில்லை; வெறுக்க ஆரம்பித்தனர். ஆரம்ப நிலையில் ஐரோப்பியர்களை நடத்திய விதத்தைக் காண்டன் வாசிகள் மாற்றிக்கொள்ள விரும்ப வில்லை. இதேபோல ஹாங்காங்கிலும் ஆங்கிலேயருக்கு எதிர்ப்புகள் இருந்தன. இவ்வளவு எதிர்ப்புகளுக்கிடையிலும் ஐரோப்பியர்கள் பொறுமையுடனும் நிதானத்துடனும் நடந்து கொண்டனர். ஆங்காங்கே சிற்சில இடங்களில் ஐரோப்பியர்களும் தேவையற்ற முரட்டுத்தனத்துடன் நடந்து கொண்டார்கள் என்றும் குறிப்பிடப்படுகின்றது. பிற்காலத்தில் இந்தத் துறை முகங்கள் சீனப்பேரரசின் எல்லைக்குள், ஆனால் அந்நியர்களின் ஏதேச்சாதிகாரத் தனியாட்சிக்குட்பட்ட நகரங்களாய் விளங்கின. ஹாங்காங்கும், ஷாங்காயும் உலக வர்த்தகத்தில் சிறப்பிடத்தைப் பெற்று வளர்ந்தன.

## இரண்டாம் அபினிப்போர் (1856-1860)

### காரணங்கள்

நாங்கிங் உடன்படிக்கையின் விளைவாகச் சீனக் கதவுகள் சிறிதளவு திறக்கப்பட்டனவே தவிர, முழுவதுமாகத் திறக்கப்பட வில்லை. சீனக்கதவுகளை முழுவதுமாகத் திறந்து, சீனுவெங்கிலும் பயணம்செய்யும் உரிமையைப் பெறுதலையும், சீன மக்களுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்வதையும் நோக்கங்களாகக் கொண் டிருந்த ஐரோப்பியர்களுக்கு நாங்கிங் உடன்படிக்கை ஆரம்பமாகத் தோன்றியதே தவிர, அவர்களது முழு வேட்கையைத் தணிக்க வில்லை. எனவே, மேலும் உரிமைகள் பெற ஐரோப்பியர்கள் முயன்றனர். ஐரோப்பியர்களை வெறுத்த சீன அரசும், ஏற்கெனவே அளித்த உரிமைகளையே நிறைவேற்றத் தயங்கியபோது, மேலும்

புது உரிமைகளைத் தர மறுத்தது. இதனால் மீண்டும் ஐரோப்பிய சீன உறவுகள் மோசமடைந்தன.

மேலும், அபினி வர்த்தகம் தொடர்ந்து நடைபெறுவதையும், அதனால் சீனப் பொருளாதார நிலை பாதிக்கப்படுவதோடு, மக்கள் நலமும் கெடுகிறது என்று சீன அரசும், மக்களும் ஐரோப்பியர்களை வெறுத்தனர். அத்துடன் சீனர்களைப் பெருமளவில் வெளிநாடுகளுக்கு அழைத்துச் சென்று, அங்குக் கூலிகளாகப் பயன்படுத்தினர். இவ்வாறு வெளிநாடு சென்ற சீனக்கூலிகள் மிருகங்களைவிட மோசமாக நடத்தப்பட்டனர். இதை உணர்ந்த சீனர்கள் கொதிப்படைந்தனர். மேலும், சீனக் கடற்பகுதிகளில் கடற் கொள்ளைக்காரர்கள் மிகுந்து காணப்பட்டனர். கள்ள வாணிபமும் நடைபெற்றது. போர்ச்சுக்கீசியரும், மற்ற ஐரோப்பியர்களும் இவைகளுக்கு உடந்தையாக இருக்கின்றனர் என்றும் சீன அரசு நம்பியது. இதனால் சீனர்களுக்கும் ஐரோப்பியர்களுக்குமிடையே மோதல்கள் ஏற்பட்டன. ஐரோப்பிய வர்த்தகர்களுக்கு வழங்கப்பட்ட சீனச் சட்டங்களின் செயல்முறைகளிலிருந்த விதிவிலக்கு (Extra-territorial) ஐரோப்பியக் கிறித்தவ சமயத்தினருக்கும் கிடைத்தது. அத்துடன் கிறித்தவ சமயத்தைத் தழுவிய சீனர்களும் இவ்வுரிமையில் அடங்கினர். இவைகள் அனைத்தும் சீன மக்களைக் கொதிப்படையச் செய்தன.

இதற்கிடையில் ஐரோப்பியர்கள் தங்கள் தூதுவர்களுக்குப் பீகிங் நகரில் தங்க அனுமதி கோரினர். ஐரோப்பியர்களுக்குச் சம உரிமை அளிக்கப்படவேண்டும் என்ற கோரிக்கையை மேலும் வலியுறுத்தினர். தங்கள் வர்த்தகத்திற்கு மேலும் பல துறைமுகங்கள் திறந்துவிடப்பட வேண்டும் என்றும், ஐரோப்பிய வர்த்தகர்கள் சீனாவெங்கிலும் தடையின்றிப் பயணம் செய்யும் உரிமைகளையும் கோரினர். கிறித்தவ சமயப் பரப்பாளர்கள் சீனர்களைச் சமய மாற்றம் செய்யும் உரிமையையும், மதத்தைப் பரப்புகின்ற உரிமையையும், தங்கள் சமயத்தினருக்குப் பாதுகாப்பையும் வேண்டினர். பீகிங் நகரில் தங்களது தூதுவர்கள் முழுப்பாதுகாப்புடன் தங்கியிருந்து, பேரரசரவையில் இடம் பெறுகின்ற உரிமையையும் வேண்டினர். இக் கோரிக்கைகளை ஏற்றுக் கொண்டு, புதிய திருத்தப்பட்ட உடன்படிக்கைகள் ஏற்படுத்தப்பட வேண்டுமென்று அமெரிக்கர்களும், ஆங்கிலேயரும் முயன்று தோல்வியுற்றனர். காண்டன் நகரில் இருந்த எதிர்ப்பும், சீனப் பேரரசின் திறமையற்ற நிலையும், மீண்டும் படைவலிமையைக் கொண்டு சீனர்களைப் பணிய வைக்கவேண்டும் என்ற எண்ணத்தை ஐரோப்பியர்களுக்கு ஏற்படுத்தின. போர் ஏற்படக்கூடிய சூழ்நிலை மீண்டும் உருவாகியது.

**லோர்ச்சா ஆரோ பிரச்சினை-(The Lorcha Arrow Incident)**

முதல் அபினிப் போரில் மிக எளிதாகச் சீனர்களை வென்று அடிபணியச் செய்த பெருமிதத்தில் திளைத்த ஐரோப்பியர்கள், தங்களுக்கெதிரான சிறு நிகழ்ச்சிகளையும் மிகைப்படுத்தி, மீண்டும் போரைத் துவக்க அணியமாயினர். இவ்வாறு சீனர்களுடன் இரண்டாவது முறை மோதி, வென்று, அவர்கள் விரும்பியவாறு புதிய திருத்திய உடன்படிக்கைகளைப் பெறவேண்டும் என்ற எண்ணத்தில் ஐரோப்பியர்கள் போருக்கான காரணங்களைத் தேடினர். காரணமும் விரைவில் அகப்பட்டது. அக் காரணம் இரண்டாவது அபினிப் போரைத் துவக்கியது. 1856-ல் ஹாங் காங்கில் பத்தாண்டுக் காலம் தங்கியிருந்த சீன் வர்த்தகர் ஒருவரின் கப்பல், ஹாங்காங்கில் பதிவு செய்யப்பட்டு, ஆங்கிலக் கொடியை பறக்க விட்டுக்கொண்டு காண்டன் துறைமுகத்தில் நங்கூரம் பாய்ச்சி நின்றது. 'லோர்ச்சா ஆரோ' (Lorcha Arrow) என்ற அக் கப்பலின் தலைவர் ஓர் ஆங்கிலேயராவார். அக் கப்பல் கள்ள வர்த்தகத்தில் ஈடுபட்டிருப்பதாகக் குற்றம் சாட்டி, சீன அதி காரிகள் அக் கப்பலைக் கைப்பற்றி, அதிலிருந்த சீன மாலுமிகளில் பன்னிரண்டுபேரைக் கைது செய்தனர். அந்த பன்னிரண்டு பேரும் கடற்கொள்ளையிலும், கள்ள வர்ணிகத்திலும் ஈடுபட்ட தாகக் குற்றம் சாட்டப்பட்டனர். இச் செய்தியைக் கேட்டவுடன் ஹாரி பார்க்ஸ் (Harry Parks) என்ற ஆங்கில அதிகாரி, லோர்ச்சா ஆரோ என்ற கப்பல் ஆங்கில வர்த்தகக் குழுவிற்குச் சொந்தமான கப்பலென்றும், தமக்கு முன்னறிவிப்புக் கொடுக்காமல் அக் கப்பலில் நுழைந்து, மாலுமிகளைக் கைது செய்தது முறையற்ற செயல் என்றும் கண்டித்து, உடனடியாகக் கைது செய்யப்பட் டிருந்த பன்னிருவரும் விடுதலை செய்யப்பட வேண்டுமென்றும் கோரினர். மேலும், அக் கப்பலில் நுழைந்த சீன அதிகாரிகள் ஆங்கிலேயரின் தேசியக் கொடியை அவமதித்து விட்டனரென்றும் குற்றம் சாட்டினர். கைது செய்யப்பட்ட பன்னிருவரும் விடுதலைச் செய்யப்படுவதுடன், இனி இம்மாதிரி தவறுகள் நடக் காது என்ற உறுதி மொழிதரவும், நடந்துவிட்ட தவறுக்கு மன்னிப்புக் கேட்க வேண்டும் என்றும் வற்புறுத்தினர். பார்க்ஸ் அவர்களின் முறையீடுகளை ஏற்ற சீனர்கள் கைது செய்யப்பட்ட பன்னிருவரையும் விடுதலை செய்தனர். ஆனல், பார்க்ஸ் கேட்ட வாறு மன்னிப்புக் கடிதம் தர மறுத்துவிட்டனர். ஏதாவது ஒரு காரணம் காட்டி, உடன்படிக்கைத் திருத்தங்களைப் பெற வேண்டும் என்றெண்ணிய ஆங்கிலேயருக்கு இது ஒரு நல்வாய்ப் பாய் அமைந்தது. ஆங்கிலேயர்களுக்குத் துணையாகப் பிரெஞ்சுக் காரர்களும் நின்றனர். ஆங்கில-பிரெஞ்சுப் படைகள் பீகிங் நோக்கிச் செலுத்தப்பட்டன.

ஆங்கிலேயர், பிரெஞ்சுக்காரர்கள், அமெரிக்கர்கள், ருஷியர்கள் ஆகிய நான்கு நாட்டினரும் சீனுவிடமிருந்து மேலும் பல உரிமைகள் பெறுவதையே நோக்கமாகக் கொண்டிருந்தனர். சீனுவில் கிறித்தவ சமயப் பரப்பாளராய் இருந்த பிரெஞ்சு நாட்டு பாதிரி அபே சாப்தலின் (Abbe Chapdalaine) என்பார், சீனப் பேரரசுக்கெதிராக மதம் மாறிய சீனர்களைத் தூண்டிவிட்டதாகக் குற்றம் சாட்டப்பட்டுக் கைது செய்யப்பட்டார். சீன நீதிமன்றம் இவருக்கு மரணதண்டனை விதித்தது. சாப்தலின் பாதிரியார் சித்திரவதை செய்யப்பட்டுக் கொல்லப்பட்டார். சீன நீதி மன்றத்தினரால் செய்யப்பட்ட இக் கொலையை (The so called Judicial Murder) பிரெஞ்சுக்காரர்கள் தங்களுக்குச் சாதகமாகப் பயன் படுத்திக்கொண்டனர். பிரெஞ்சுக்காரர்கள் இக் கொலையைக் காரணமாகக் காட்டி, சீனர்களுக்கெதிராக, ஆங்கிலேயருடன் கூட்டுச் சேர்ந்தனர். ஆங்கில-பிரெஞ்சுக் கப்பற்படைகள் பீகிங்கை நோக்கி நகர்ந்தன. இப் படைகளைப் பின்தொடர்ந்து அமெரிக்க-ருஷியக் கப்பற்படைகளும் நகர்ந்தன.

இங்கிலாந்து அரசும், இப் போரை ஆதரித்து, எல்ஜின் பிரபு (Lord Elgin) என்பவரை முக்கியமாக உடன்படிக்கைத் திருத்தங்களை வலியுறுத்தி, புதிய ஒப்பந்தங்களைச் செய்துகொள்ளும் நோக்கத்துடன் அனுப்பியது. இங்கிலாந்திலிருந்து அனுப்பப் பட்ட படைகள், 1857-ல் இந்தியாவில் ஏற்பட்ட 'சிப்பாய்க் கலகம்' என அழைக்கப்பட்ட முதல் விடுதலைப் போரில் ஆங்கிலப் படைகளுக்கு உதவுமாறு நிறுத்தப்பட்டனர். இந்திய விடுதலைப் போரை முடித்தபின்னர் இப் படைகள் 1857-ல் காண்டன் நகரை அடைந்தன. காண்டன் நகரம் 1857, டிசம்பரில் வீழ்ந்தது. காண்டன் நகர ஆளுநரும் சிறைப்பிடிக்கப்பட்டார், பின்னர், இவ் வெற்றிப் படைகள் சீனத் தலைநகரை நோக்கி நகர்ந்து, தலைநகரின் நுழைவாயிலாய் இருந்த தாகு (Taku) கோட்டையை முற்றுகையிட்டு அழித்து, முன்னேறினர். தங்கள் தலைநகருக்கு வந்த ஆபத்தினை உணர்ந்த சீனர்கள் சமாதானம் வேண்டினர். சீனர்கள் சமாதானக் கோரிக்கையை ஏற்றுக்கொண்ட நான்கு ஐரோப்பிய அமெரிக்க நாட்டினரும் தியன்சின் நகரில் சீன அதிகாரிகளைச் சந்தித்து, தனித்தனியாக உடன்படிக்கைகளைச் செய்து கொண்டனர்.

## தியன்சின் உடன்படிக்கைகள்—1858
## (The Treaties of Tientsn)

**கூறுபாடுகள்**

1. ஆங்கில அரசின் தூதுவர் ஒருவர் பீகிங் நகரில் தங்கியிருக்கவும், அவர் தம்மிச்சைபோல மற்ற நகரங்களுக்குச் சென்று

வரவும் ஏற்பாடாயிற்று. சீன அரசுடன் ஏற்படும் அரசியல் உறவுகளில், சுதந்திர இங்கிலாந்து அரசின் பேராளர் என்ற கண்ணியத்துடனும் உரிமையுடனும் மதிப்புடன் அவர் நடத்தப் படவேண்டும்.

2. மேலும், பத்துத் துறைமுகங்கள் ஆங்கிலேயருக்குத் திறந்துவிடப்பட வேண்டும். அத் துறைமுகங்கள் மஞ்சூரியாவி லிருந்து, பார்மோசாத் தீவுவரை விரிந்து கிடந்தன. மேலும், யாங்ட்சி நதியில் கப்பல் செலுத்தும் உரிமையும் ஆங்கிலேயர் பெற்றனர். இதன் காரணமாக ஹாங்கோ நகர்வரையில் யாங்ட்சி நதியின் இருமருங்கிலும் இருந்த வளமான நகர்ப் பகுதிகளை யடையும் வாய்ப்பினை ஆங்கிலேயர் பெற்றனர்.

3. ஐரோப்பிய அதிகாரிகளின் அனுமதியுடன் சீன அதிகாரி களின் ஒப்புதலையும் பெற்று, சீனுவெங்கிலும் தடையற்ற பயணம் செய்கின்ற உரிமைகள் ஐரோப்பியர்கள் அனைவருக்கும் வழங்கப் பட்டன.

4. கிறித்தவ சமயத்தினருக்கு, சமயப் போதனை செய்யவும், சீனர்களை மதமாற்றம் செய்கின்ற உரிமையும், எங்கு வேண்டு மானுலும் செல்லலாம் என்ற தடையற்ற பயண உரிமையும் ஏற்றுக்கொள்ளப்பட்டன.

5. ஐரோப்பியக் கடற்படைகள், உடன்படிக்கையில் குறிப் பிடப்பட்டுள்ள எத் துறைமுகத்திற்கும், யாங்ட்சி நதிக்கரையில் அமைந்திருந்த ஹாங்கோ நகர்வரைக்கும் கூடச் செல்லும் உரிமைகள் பெற்றன.

6. சீன அரசு நான்கு மில்லியன் டாலர்களைப் போர் இழப் பீடாக ஆங்கிலேயருக்குக் கொடுக்கவேண்டும்.

7. ஆங்கிலேயர்களுக்கிடையே ஏற்படும் வழக்குகளை ஆங்கில அதிகாரிகளே முடிவு செய்யவேண்டும். சீனர்-ஆங்கிலேயருக் கிடையே ஏற்படும் வழக்குகளை சீன-ஆங்கிலேய அதிகாரிகளின் குழு ஏற்று முடிவு செய்யும். குற்ற வழக்கானுல், குற்றம் சாட்டப் பட்டவர் எந்த நாட்டினரோ அந்த நாட்டின் சட்டப்படி தண்ட னைகள் வழங்கப்படும்.

இதே போன்ற உடன்படிக்கைகளை நான்கு ஐரோப்பிய- அமெரிக்க நாட்டினரும் செய்துகொண்டனர். மேலும், பத்துச் சீனத் துறைமுகங்கள் திறந்துவிடப்பட வேண்டும் என்று உடன்

படிக்கைகளில் குறிப்பிடப்பட்டிருந்தாலும், புதிய துறைமுகங்களில் ஐரோப்பியர்கள் அவ்வளவு எளிதாக அனுமதிக்கப்படவில்லை. உதாரணமாக, நாங்கிங் நகரில் 1899 வரை ஐரோப்பியர்கள் நுழைய இயலவில்லை. இதே போன்று வேறு துறைமுகங்களிலும் ஐரோப்பியர்களுக்கு ஏராளமான முட்டுக்கட்டைகள் போடப்பட்டன. இருப்பினும் சீனர்கள் ஐரோப்பியர்களைத் தடுத்து நிறுத்த இயலவில்லை. அந்நியர்கள் படைவலிமை கொண்டு, சீனப் பேரரசைப் பணியச் செய்து, தங்களுக்கு வேண்டியவைகளை வற்புறுத்தி-அச்சுறுத்திப் பெறுகின்ற நிலை, மஞ்சுகுலப் பேரரசின் திறமையின்மையையும், வீழ்ச்சியின் ஆரம்பத்தினையும் எடுத்தியம்பியது.

முதன் முதலாக, தியன்சின் உடன்படிக்கையின் போதுதான் அபினி வர்த்தகத்தின் மீதும் சுங்கவரி விதிக்கப்பட்டது. பொதுவாக சீனாவின் இறக்குமதி-ஏற்றுமதிப் பொருள்களின் மீதான சுங்கவரி, பொருள்களின் விலையில் ஐந்து விழுக்காடு என்று முடிவு செய்யப்பட்டது. அதே போல அபினியின் மீதும் வரி விதிக்கப்பட்டது. இதன் விளைவாக அபினி வியாபாரமும் சீன அரசால் ஏற்றுக்கொள்ளப்பட்டுவிட்டது. ஆனால், அபினி வர்த்தகத்தைப் பொறுத்தவரையில் ஏராளமானக் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டு, அவைகள் திறமையாகச் செயல்படுத்தப்பட்டன.

**மீண்டும் போர்**

தியன்சின் உடன்படிக்கைகள் சீனப் பேரரசால் ஏற்றுக் கொள்ளப்பட்டன. ஆனால், ஏற்றுக்கொண்டு, கையெழுத்திடப் பட்ட இவ்வுடன்படிக்கைகளின் படிகள், பீகிங் நகரில் கூடவிருக்கும் மாநாட்டில் அதிகார பூர்வமாகப் பெற்றுக்கொள்ளப் படும் என்று முடிவு செய்யப்பட்டிருந்தது. ஆனால், சீனப் பேரரசு ஏதாவது காரணம் காட்டி, பீகிங் நகரில் ஐரோப்பியர்களை நுழையவிடாமல் தடுக்க எண்ணியது. தரை வழியாக வந்த ருஷிய தூதுவர் பீகிங் நகரை எளிதாக அடைந்துவிட்டார். ஆனால், கடல் வழியாக வந்த ஆங்கில, பிரெஞ்சு, அமெரிக்க அதிகாரிகள் பீகிங்கின் நுழைவாயிலான தாகு (Taku) கோட்டையை 1859, ஜூன் மாதத்தில் அடைந்தனர். ஆனால், தாகு கோட்டையிலிருந்த சீனப் படைகள் ஐரோப்பியர்களை மேற் செல்லவிடாமல் தடைசெய்தனர். போரிட்டு, வழியேற்படுத்திக் கொள்ள முனைந்த ஐரோப்பியர்கள் தோற்கடிக்கப்பட்டனர். ஐரோப்பியக் கப்பற்படை ஷாங்காய் திரும்பியது. பீகிங்கை முன்னரே அடைந்துவிட்ட ருஷிய தூதுவரும் வெறுங்கையுடன் ஷாங்காய் திரும்பினார். ஷாங்காய் நகரில் ஐரோப்பியர்கள்

மேலும் ஒரு படையெடுப்பிற்குத் தங்களை அணியமாக்கிக் கொண் டிருந்தனர். 1860ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் ஐரோப்பியக் கூட்டுக் கடற்படையினர் மீண்டும் தாகு கோட்டையைத் தாக்கி அழித்துவிட்டு பீகிங்கை நோக்கி முன்னேறினர். சீனப்படைகள் ஐரோப்பிய படைகளை எதிர்த்து நிற்கமாட்டாது, சிதறி யோடின. போர் வெறியால் தூண்டப்பட்டுப் பழிவாங்கும் கொடூரமான எண்ணத்துடன், ஐரோப்பியப் படைகள் பீகிங் நகரில் நுழைந்தன. இதற்கு முன்னரே மஞ்சுப் பேரரசர் பீகிங்கை விட்டு ஓடிவிட்டார். பீகிங்கில் நுழைந்த ஐரோப்பியப் படைகள் பீகிங் நகரையே அழிக்க முற்பட்டன. கொலை, கொள்ளை, தீயிடுதல் போன்ற நாச வேலைகளில் ஈடுபட்டன. சீனப் பேரரசர் களின் கோடைக்கால மாளிகை (Summer Palace) தீக்கிரையாக்கப் பட்டு முற்றிலும் அழிக்கப்பட்டது. அம் மாளிகையில் இருந்த விலைமதிப்பற்ற கலைப் பொருள்கள் முழுவதும் தீக்கிரையாக்கப் பட்டன. நாகரிகத்தில் மிகச் சிறந்த ஐரோப்பிய நாட்டுப் படைகள் கூடப் போர் வெறியால் உந்தப்பட்டவுடன், உலகே வியக்கின்ற கலையழகுப் பெட்டகங்களை நாசப்படுத்தியது வியப்பிற் குரிய செயலாகும். பீகிங் நகரைக் கைப்பற்றிய ஐரோப்பியர்கள், தாங்கள் தியன்சின் நகரில் செய்துகொண்ட உடன்படிக்கைகளை ஏற்றுக் கொண்டதோடு மட்டுமல்லாமல், வேறு பல புதிய சலுகை களையும் பெற்றனர்.

## பீகிங் மாநாடு—1860
## (The Peking Convention)

பீகிங் நகரில் நுழைந்து, சீனப் பேரரசரையே விரட்டிய ஐரோப்பியர்கள் வெற்றிப் பெருமிதத்தில் களித்தனர். தாங்கள் கோருவது அனைத்தையும் பெறமுடியும் என்பதை உணர்ந்தனர். இந்தப் பீகிங் மாநாட்டில் தியன்சின் நகர உடன்படிக்கைக் கூறு பாடுகள் அனைத்தும் ஏற்றுக் கொள்ளப்பட்டன. 1859-ல் தாகு கோட்டைக்கெதிரில் நடந்த தவறான நடவடிக்கைகளுக்குச் சீனப் பேரரசர் வருத்தம் தெரிவித்தார். ஆங்கில அதிகாரி ஒருவர் பீகிங் நகரில் தங்க அனுமதியளித்தார். தியன்சின் துறைமுகமும் ஐரோப்பியர்களுக்குத் திறந்துவிடப்பட்டது. ஹாங்காங் தீவினை அடுத்து இருந்த கௌலூன் (Kowloon) தீபகற்பப் பகுதியும் ஆங்கிலேயருக்குக் கொடுக்கப்பட்டது. தியன்சின் உடன்படிக்கை யின்படி நான்கு மில்லியனாக இருந்த இழப்பீட்டுத் தொகை இப்போது அதிகரிக்கப்பட்டு, போரில் பங்கெடுத்துக்கொண்ட நான்கு நாட்டிற்கும், ஒரு நாட்டுக்கு எட்டு மில்லியன் டாலர்கள் என்று உயர்த்தப்பட்டது. பிரெஞ்சுக்காரர்கள் கத்தோலிக்கத்

திருச்சபையைக் கட்டுவதற்குத் தேவையான நிலங்களை வாங்கவும், 1724 முதல் திருச்சபையினரிடமிருந்து பறித்துக் கொள்ளப்பட்ட நிலமனைத்தையும் மீண்டும் பெற்றுக்கொள்ளவும் ஒத்துக்கொள்ளப் பட்டது.

முதல் அபினிப் போர் சீனாவில் ஐரோப்பியர்கள் நுழைய வழி வகுத்தது. இரண்டாவது அபினிப் போர், சீனாவில் ஐரோப்பி யர்கள் முழு உரிமை பெற்றவர்களாகச் சீனத் துறைமுகங்களைத் திலுமே தங்கி வர்த்தகம் புரியவும், தங்கள் தூதுவர்கள் பீகிங் நகரில் தங்கவும், ஐரோப்பியர்களுக்கு சீனச் சட்டங்களிலிருந்து விலக்குப் பெற்றுத் தனியுரிமை பெறவும், சீனாவில் பாய்ந்தோடு கின்ற நதிகளில் கப்பல் செலுத்தும் உரிமையும், பெறச் செய்தது. சீனப் பேரரசின் திறமையின்மை முழுவதுமாக வெளிப்படுத்தப் பட்டது.. ஐரோப்பிய வர்த்தகர்கள், குறைந்த ஏற்றுமதி இறக்கு மதி வரிகளையே செலுத்த வேண்டியிருந்ததால் சீனா, அவர்களின் பொதுச் சந்தையாயிற்று. இதனால் சீனாவின் தொழில் வளர்ச்சி தடைபட்டது. இத்தகைய உரிமைகளைப் பெற்ற ஐரோப்பி யர்கள் பிற்காலத்தில் சீனாவைத் தங்களுக்குள் பங்குபோட்டுக் கொண்டு, தங்களின் உரிமை பெற்ற பகுதிகளை (Spheres of Influnce) ஏற்படுத்திக்கொள்ள முடிந்தது.

இவ்வளவு தூரம் ஐரோப்பியர்களால் அவமானப் படுத்தப் பட்ட சீனா, தன்னிலையை உணர்ந்து திருத்திக்கொள்ள முன்வர வில்லை. ஐரோப்பியர்பால் மேலும் வெறுப்பினையும், ஆத்திரத்தை யும் வளர்த்துக்கொண்டதே தவிர, ஐரோப்பிய வழிமுறைகளைப் பின்பற்றி, முன்னேற வேண்டும் என்ற ஆர்வம் தோன்றவே இல்லை. தனது பழம் பெருமைகளையும், கன்பூசியத் தத்துவங் களின் மேன்மையையும், 'விண்ணூர்ந்த பேரரசு' என்ற தனது உயரிய பண்டைய நம்பிக்கையையுமே மேற்கொண்டு, ஐரோப்பி யர்களைக் காட்டுமிராண்டிகள் என்றும், தங்களைவிடத் தாழ்ந்த வர்கள் என்றும் கருதியே செயல்பட்டது. வளர்ந்துவிட்ட ஐரோப் பாவின் முன்னேற்றக் கருத்துகளைச் சீனா ஏற்றுக்கொள்ள முன்வர வில்லை. இதன் விளைவாகத்தான் 1860லிருந்து, 1894-ல் ஜப்பா னிடம் தோல்வியுறும் வரையிலும், சீனாவில் சீர்திருத்த இயக்கங் களும், போராட்டங்களும் ஏற்பட்டபோதும் கூட, சீனப் பேரரசு வாளாவிருந்தது.

## இயல் இரண்டு

# 1. ஜப்பானில் தொகுகாவா ஷோகன்களின் ஆட்சி

## (The Tokugava Shogunate—1603-1867)

தொகுகாவா ஷோகன் குடும்பத்தைத் தோற்றுவித்தவர் இயேயாசு (Iyeyasu) என்பவராவர். இவர் கி. பி. 1542ஆம் ஆண்டில் மிகாவா என்னும் மாநிலத்தில் ஒரு சிற்றூரில் பிறந்தார். இவருடைய முன்னோர்கள் 12ஆம் நூற்றாண்டிலிருந்தே ஜப்பானிய அரசியலில் பங்கு பெற்றிருந்தனர். அவர்கள் மினமொத்தோக் களின் மரபு வழியில் வந்தவர்கள்; தொகுகாவா என்னும் ஊரில் வாழ்ந்தவர்களாதலால் தங்கள் பெயர்களுக்குமுன் 'தொகு காவா' என்னும் அடைமொழியைச் சேர்த்துக்கொள்வது வழக்க மாயிற்று. இதனால் இயேயாசும் தம்மைத் 'தொகுகாவா இயே யாசு' என்று அழைத்துக்கொண்டார். இவர் ஹிதேயோஷி இறந்தபின்னர், கி.பி. 1603-ல் தமது 61ஆம் வயதில் ஷோகன் ஆனார். இவரைத் தொடர்ந்து ஷோகனான இவரது குடும்பத்தார் தங்களைத் 'தொகுகாவா ஷோகன்கள்' என அழைத்துக்கொண் டனர். இந்தத் தொகுகாவா ஷோகன்களின் ஆட்சி கி.பி. 1603 முதல் 1867 வரை, இரண்டரை நூற்றாண்டுகளுக்கும் அதிகமாக ஜப்பானில் நிலைபெற்றிருந்தது. ஜப்பானில் ஆண்ட கடைசி ஷோகன் குலத்தவர்களும் இவர்களே.

தொகுகாவா இயேயாசு, 1582 வரை 'நொபுநாகா' (Nobu-naga) என்பவரின் அறிவாற்றல் மிக்க தலைமையிலும், பின்னர் ஹிதேயோஷி (Toyotomi-Hideyoshi) என்பவரின் சீரிய தலைமை யிலும் பணியாற்றி, வியத்தகு செயல்கள் புரிந்து, அவர்களின் நம்பிக்கையைப் பெற்றவர். இதன் காரணமாகவே, ஹிதோ

யோஷி, தாம் இறக்கும் முன்னர் ஐந்தே வயது நிரம்பிய தமது மைந்தனை ஷோகனாக நியமித்தார். அவன் வயதடைந்து, நிர்வாகப் பொறுப்புகளை ஏற்கும் வரையில், நிர்வாகப் பொறுப்பு களைக் கவனிக்க ஒரு குழுவையும் ஏற்படுத்தியிருந்தார். அக் குழுவில் தொகுகாவா இயேயாசுமிருந்தார். 1598-ல் ஹிதோ யோஷி இறந்தபின்னர், இயேயாசு, தானே ஷோகனாக விரும் பினார். இதன் விளைவாக கி.பி. 1600-ல் ஓர் உள்நாட்டுப் போர் ஏற்பட்டது. ஹிதோயோஷியின் உறுதிமொழிகளை நிறைவேற்ரு மலும், அவர் மகனுக்கு ஷோகன் பதவியை வழங்காமலும் இவர் நம்பிக்கைத் துரோகியாகி விட்டார் என்பதே உள்நாட்டுக் கலகத்தில் ஈடுபட்டவர்கள் கூறிய காரணமாகும். இக் கலகக் காரர்களைப் போர்ச்சுகீசியப் பாதிரிகளும் ஆதரித்தனர். இக் கலகக்காரர்கள் பண்டைப் பெருமைமிக்க படைக் குலத்தினரின் உதவியைப் பெற்று மாபெரும் படையொன்றினை உருவாக்கி ஞர்கள். இப் படையின் தலைவனாக மித்சுநாரி (Mitsu Nari) என்பவன் இருந்தான். இவர்களை எதிர்த்துப் போரிட்டுத் தமது நிலையை உறுதிப்படுத்திக் கொள்ள விரும்பிய இயேயாசு, மிகச் சிறிய படையொன்றினையே (7500 வீரர்கள்) கொண்டிருந்தார். 21—10—1600-ல் இருதரப்புப் படையினரும் செகிகஹாரா (Sekigahara) என்னுமிடத்தில் மோதிக் கொண்டனர். ஒரு நாள் முழுவதும் நடந்த போரில் தொகுகாவா இயேயாசு, வெற்றி பெற்றுர். வெற்றிபெற்ற மாவீரன் இயேயாசுவை மிகாடோ வரவேற்று கி.பி. 1603ஆம் ஆண்டில் ஷோகனுக்கிப் போற்றினுர்.

## தொகுகாவா இயேயாசு (1603—1605)

உள்நாட்டுப் போரில் வெற்றிபெற்ற இயேயாசு, தம்மை எதிர்த்துப் போரிட்டவர்களின் மானியங்களைப் பறித்துத் தம் ஆதரவாளர்களுக்குப் பகிர்ந்தளித்தார். ஜப்பானில் நிலமானிய முறை உறுதி பெற்றுவிட்ட நிலையில், அந்த நிலமானிய முறையையே தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளத் திட்டம் வகுத்தார். காலியாய்க் கிடந்த நிலங்களையும், சிதறிக் கிடந்த நிலங்களையும் பண்ணைகளாக்கித் தம் குடும்பத்தினருக்கும் உறவினர்களுக்கும் பகிர்ந்தளித்தார். தம்முடைய புதல்வர் களையும், புதல்விகளையும் பெருநிலப் பிரபுக்கள் குடும்பங்களுடன் திருமண உறவுகொள்ளச் செய்தார். இவ்வாறு முன்னரே ஜப்பானில் வேரூன்றிவிட்ட நிலப்பிரபுத்துவ முறையில் தம் குடும்பத்தினரையும் சேர்த்துவிட்டார். பகைவர்களாக இருந்த நிலப் பிரபுக்களை உறவினர்களாக்கிக் கொண்டு, தமது ஆட்சிக்கு ஆக்கம் தேடிக்கொண்டார். இப் பிரபுக்கள்தாம் இயேயாசுவின் ஆட்சிக்குத் துணை நின்றுர்கள். இவர்கள் மாநிலங்களின் ஆட்சிப்

பொறுப்பையேற்று, உள்துறைச் சட்டதிட்டங்களையும், நீதிமன்றங்களையும், படைகளையும் கட்டுப்படுத்தி அரசர்களைப்போல அனைத்து உரிமைகளுடனும் வாழ்ந்தனர்.

இயேயாசு இரண்டு தலைநகர முறையைத் தொடர்ந்தார். பேரரசரும் அரசவையினரும், கியாத்தோ (Kyoto) நகரில் வாழ்ந்தனர். சமயத்துறை சார்ந்த விழாக்களுக்குத் தலைமை தாங்குதல், ஜாப்பானிய மரபுகளையும் பண்பாட்டு வளர்ச்சியையும் பாதுகாத்தல், பட்டங்கள் வழங்குதல் போன்ற பணிகள் பேரரசரிடம் (மிகாடோ) விடப்பட்டிருந்தன. எதோ நகரில் (தற்காலத்தில் தோக்கியோ என அழைக்கப்படுவது) ஷோகன் தங்கியிருந்தார். இந் நகரில் இருந்த இயேயாசுவின் கோட்டை ஜப்பானின் ஆட்சித் துறையின் தலைமையிடமாய் விளங்கியது. இங்குதான் சாமுராய் (Samurai) எனப்படும் படைக்குலப் பிரபுக்கள் வாழ்ந்தனர். இவர்கள் அரசவைப் பிரபுக்களாகவும், அமைச்சர்களாவுமிருந்து ஆட்சியின் முதுகெலும்பாய்த் திகழ்ந்தனர்.

இயேயாசு தமக்குப் பகைவர்களாக நாட்டில் உலவும் பல பிரபுக்களைக் கவனமாகக் கண்காணித்தார். பகைப் பிரபுக்களை ஒடுக்கி, தமது ஆட்சியை நிலைபெறச் செய்யும் நோக்கத்துடன் 1615-ல் இரண்டு முக்கியச் சட்டங்களைக் கொண்டு வந்தார். அவைகள் 'படைக் குடும்பத்தாரின் சட்டங்கள்' (Laws of Military Houses) என்றும், அரசவை மற்றும் அரசவைப் பிரபுக்களுக்கான சட்டங்கள் (Rules of the Imperial Court and the Court nobles) என்றும் அழைக்கப்பட்டன. படைக் குடும்பத்தாரின் சட்டப்படி சீன மொழியைக் கற்றல், போர்க் கலைகளில் பயிற்சி பெறல் முதலியவற்றை இதுவரை பிரபுக்களே தனியுரிமையாகக் கொண்டிருந்ததை மாற்றி, இவற்றைத் தம் படைக் குடும்பத்தினரைத் தவிர மற்றவர்கள் தம் அனுமதியின்றிக் கற்கக்கூடாது என்றுக்கினர். பெரிய அல்லது சிறிய நிலமானியப் பிரபுக்கள் தம்முடைய அனுமதியின்றி சாமுராய்களைத் தங்களுடைய படைகளில் சேர்த்துக் கொள்ளக் கூடாதென்றும், எதோவிலுள்ள தொகுகாவா அரண்மனையின் உத்தரவின்றி எவரும் தங்கள் கோட்டைகளைப் புதுப்பிக்கவோ, புதிதாகக் கட்டவோ கூடாதென்றும் இச் சட்டத்தில் கூறப்பட்டது. மேலும், பிரபுக்கள் எதோ அரண்மனையின் உத்தரவின்றி கலப்புத் திருமணங்களைச் செய்து கொள்ளவோ, ஆடம்பரச் செலவுகளைச் செய்யவோ, குதிரை சவாரி செய்தல், ஆயுதம் தாங்கிச் செல்லல், பல்லக்கில் ஊர்தல் முதலியவற்றை மேற்கொள்ளுதலோ கூடாது என்றும் இச் சட்டம்

கூறியது. மருத்துவர்கள், நிமித்திகர்கள், முதியவர்கள், துறவிகள், சமயத் தலைவர்கள் ஆகியோர் விதிவிலக்கு பெற்றனர்.

தாம் ஷோகனுகு முன் எதிரிகளுடன் சேர்ந்தும், பின்னர் தம் பகைவர்களுடனும் உறவாடிக் கலகம் விளைவித்த கிறித்தவ பாதிரிமார்களை ஒடுக்குவதில் இயேயாசு முனைந்தார். 1612, 1613-ல் உரோமன் கத்தோலிக்கர்களை எச்சரித்தும், ஜப்பானியருக்கு அவர்களால் வரும் ஆபத்தை விளக்கியும் அறிக்கைகள் வெளியிட்டிருந்தார். 1614-ல் ஓர் ஆணையைப் பிறப்பித்து, அதன்படி அந்நியக் கிறித்தவர்கள் அனைவரையும் நாகசாகியில் கூடச்செய்து, அவர்களை எச்சரித்து நாடுகடத்தினார். மாதாகோயில்கள் இடிக்கப்பட்டன. மதம் மாறிய ஜப்பானியர்கள் மீண்டும் தங்கள் மதத்திற்குத் திரும்பும்படி கட்டாயப் படுத்தப்பட்டனர்.

கி.பி. 1605ல் இயேயாசு தமது மூன்றாவது மகனான ஹிதேதாதாவை (Hidetada 1605-1632) ஷோகனுக்கிவிட்டுப் பதவி துறந்தார். ஆனால் தொடர்ந்து அதிகாரங்களைத் தாமே ஏற்று நடத்தி, 1616ஆம் ஆண்டில் மாண்டார். ஷோகன் பதவியேற்ற ஹிதேதாதா தம் தந்தை விட்டுச்சென்ற பணிகளைத் தொடர்ந்தார். இவர் காலத்தில் எதோ நகரில் மாபெரும் கோட்டையொன்று கட்டப்பட்டது. இவர் தமது மகளை 108ஆம் மிகாடோவிற்கு மணமுடித்துக் கொடுத்தார். இத் திருமண உறவால், தொகுகாவா ஷோகன்களின் குலம் பேரரச குலத்துடன் இணைந்தது. இவர் 1632-ல் காலமானபோது, இவரது மகன் ஐயேமித்சு (Iye-Mitsu) ஷோகன் பதவியேற்றார்.

ஐயேமித்சு, தமது பாட்டனாரும், தந்தையாரும் விட்டுச் சென்ற பணிகளைத் தொடர்ந்து செய்தார். இவர் தமது தொகுதாவா குடும்பத்தினரும், மற்றும் பேரதிகாரிகளும் அரசியல் பணிகளுக்காக மாநிலங்களுக்குச் சென்றுவிட்டாலும், அவர்களின் குடும்பங்களை எதோ நகரிலேயே விட்டுச் செல்லவேண்டுமெனச் சட்டமியற்றினார். இவ்வாறு ஷோகன்களின் படையாட்சித் தளத்தில் தங்களது குடும்பங்களை விட்டுச் சென்ற பிரபுக்கள், ஷோகனுக்கெதிரான சதிச்செயல்களிலோ, புரட்சிகளிலோ ஈடுபடமாட்டார்கள் என ஷோகன் நம்பினார்.

ஐயேமித்சு, தமது பாட்டனாரைப் போலவே கிறித்தவ சமயத்தினரை வெறுத்தார். அவர்களை ஜப்பானிலிருந்தே ஒழிப்பதற்காகக் கடுமையாகச் சட்டங்களை வெளியிட்டார். அதன்படி அரசனைப்

பிரபுக்களும், பெரு நிலப் பிரபுக்களும் ஏதாவதொரு குறிப்பிட்ட புத்த சமயப் பிரிவைத்தான் பின்பற்ற வேண்டுமெனவும், ஒவ்வொரு புத்த கோவிலிலும், ஷின்தோ கோவிலிலும் எத்தனை பேர் அம் மதங்களைப் பின்பற்றிக் கோவிலுக்கு வருகிறார்கள் என்பதையறிய, நாள்தோறும் வருகைப் பதிவேடுகள் வைக்கப்பட வேண்டுமெனவும் ஆணையிட்டார். ஜப்பானியர், கிறித்தவராகித் தங்கள் தேசிய உணர்வை மறந்து, ஐரோப்பாவைத் தங்கள் தாயகமாகக் கருதுவதையும், தங்கள் பேரரசரைத் தெய்விகப் பேரரசராக வணங்காமல் போப்பாண்டவரையும், ஏசுவின் சீடர் களையும் வணங்குவதையும், புத்தரை ஒரு சமயத் தலைவராகக் கொள்ளாமல் இழித்துரைத்தலையும், தங்கள் நாட்டு வழக்கப்படி இயற்கைத் தேவதைகளைத் தொழுவதைப் பிசாசுகளைத் தொழு வதாகப் பழிப்பதையும், மரபுப்படி தற்கொலை செய்துகொள்ளு வதை பாவச் செயல் எனக் கருதுவதையும், மற்றும் பல சமயச் சடங்குகளையும், பழக்கவழக்கங்களையும் மூட நம்பிக்கைகள் என வெறுத்தொதுக்குதலையும் உணர்ந்த ஐயேமித்சு, இத்தகைய கிறித்தவ சமயத்தால் நாடே அழிந்தொழியும் என எண்ணினார். இதனால்தான் கிறித்தவ சமயம் பரவாமல் தடுக்க முயற்சிகளை மேற்கொண்டார்.

அந்நிய நாட்டினரை முதலில் வரவேற்ற முதல் தொகுகாவா ஷோகனை இயேயேசு, அவர்களுடைய ஆபத்தான தன்மையை உணர்ந்த பின்னர், அந்நிய நாட்டினரையும், கிறித்தவ சமயத் தையும் தடுக்க ஆரம்பித்தார். ஸ்பெயின் நாட்டு அரசர், கிறித்த வராக மதம் மாறிய ஜப்பானியரைத் தங்கள் தெய்விக மிகா டோவை எதிர்த்துக் கலகம் செய்யும்படி தூண்டினார்; ஆயுத உதவியும் அனுப்பினார். இத்தகைய இவர்களுடைய நோக்கம் 1615லிருந்து, 1622வரை ஸ்பெயினில் தங்கியிருந்து, திரும்பிய ஜப்பானிய ஒற்றனால் மெய்ப்பிக்கப்பட்டது. ஐரோப்பாவில் நடந்த முப்பதாண்டுப் போர் ஒரு சமயப் போரே என்பதனையும் அவ் வொற்றன் அறிவித்தான். கிறித்தவ நாடுகளுக்குள்யே இத்தகைய போர் நடக்கும்போது, அதேபோன்ற சமயப் போர்கள் ஜப்பானி லும் தொடங்கப்படலாம் என ஜப்பானியர் அஞ்சினர். எனவே தான் சமயப் போர்வையில் ஜப்பானுக்குள் இறங்கிய ஐரோப் பியரையும், கிறித்தவ சமயத்தையும் ஷோகன்கள் தடை செய்தனர்.

இவ்வாறு ஸ்பானியர்கள், போர்ச்சுக்கீசியர் ஆகியோரின் மீதான வெறுப்புணர்ச்சியால் ஜப்பானியர் பொதுவாக ஐரோப் பியர்களனைவரையுமே வெறுத்தொதுக்கத் தொடங்கினர். இதே

நேரத்தில் டச்சுக்காரர்கள் கிழக்கிந்தியத் தீவுகளில் தங்கள் குடியேற்றங்களை ஏற்படுத்துவதில் முனைந்திருந்தனர். அதேபோல ஆங்கிலேயரும் வட அமெரிக்காவிலும், கிழக்காசியப் பகுதிகளிலும் குடியேற்றங்களை அமைப்பதில் ஈடுபட்டிருந்தனர். தங்கள் நாட்டையும் ஐரோப்பியர் தங்கள் குடியேற்றமாகக் கொண்டு விடுவரோ எனவும் ஜப்பானியர் பயந்தனர். 1623-ல் நடந்த 'அம்பாய்னு படுகொலை' ஜப்பானியரை மேலும் அச்சுறுத்தியது. ஆங்கிலேய வணிகர்களும் கிழக்கிந்திய தீவுகளிலிருந்து கொண்டு, சீனு ஜப்பானோடு வர்த்தக உறவை ஏற்படுத்திக்கொள்ள முயற்சி செய்தனர். ஆனால் டச்சுக்காரர்களையும், ஸ்பானிய, போர்ச்சுகீசியரையும் தடை செய்த ஜப்பானியர், ஆங்கிலேயர்களையும் சேர்த்து, 'அந்நியர் ஜப்பானில் நுழையக்கூடாது' என்று தடை விதித்தனர்.

ஐரோப்பியர்களைத் தங்கள் நாட்டில் தங்கவிடுவதால் ஏற்படும் அபாயத்தினை உணர்ந்த ஷோகன் ஐயேமித்சு, அந்நியர்களுக்குத் தடை விதித்ததோடு, எந்த ஜப்பானியனும் ஜப்பானைவிட்டு வெளியேறவோ, வெளியேற முயலவோ கூடாதென்றும் தடை விதித்தார். இத் தடைகளை எதிர்த்து குய்ஷூத்தீவிலிருந்த ஸ்பானியரும், போர்ச்சுக்கீசியரும் 1637-ல் கலகம் விளைவித்தனர். இது ஷிமாபாராக் கலகம் (Shimabara Rebelloin-1637-38) எனக் குறிப்பிடப்படுகின்றது. இக் கலகத்தினை டச்சுக்காரர்களின் உதவியோடு ஷோகன் அடக்கினுர். இனி, எந்த ஒரு போர்ச்சுகீசிய கப்பலும் ஜப்பான் கரைக்கு வந்தால் சுட்டெரிக்கவேண்டுமென ஷோகன் ஐயேமித்சு உத்தரவிட்டார். இச் சட்டத்தை ஒட்டி 1640-ல் நாகசாகியில் வந்திறங்கிய போர்ச்சுகீசியக் கப்பல் எரிக்கப்பட்டது. மீண்டும் 1647-ல் ஏற்பட்ட போர்ச்சுகீசியரின் கலகமும் நசுக்கப்பட்டது.

1640-ல் டச்சுக்காரர்களையும் நாட்டைவிட்டு வெளியேறுமாறு ஜப்பான் பணித்தது. அவர்கள் ஜப்பானைவிட்டு வெளியேறினுலும், 600 அடி நீளமும், 240 அடி அகலமும் உள்ள தெஷிமா (Deshima) என்னும் சிறு தீவில் (நாகசாகியில்) தங்க அனுமதி பெற்றனர். அத் தீவில் தங்குவதற்கு ஆண்டொன்றுக்கு 450 பவுண்டு வெள்ளியை வாடகையாக டச்சுக்காரர்கள் கொடுத்தனர். ஜப்பானியர் இத் தீவிற்குச் சென்றுதான் அவர்களோடு வணிகத் தொடர்பு கொள்ளவேண்டும். ஆனுல், டச்சுக்காரர்கள் ஜப்பானுக்குள் வரக்கூடாது. இத் தீவைச் சுற்றிலும் டச்சுக்காரரைக் கண்காணிக்க ஜப்பானிய அதிகாரிகளும் ஒற்றர்களும் நியமிக்கப்பட்டனர். டச்சுக்காரர்கள் சீனுவோடு வர்த்தகம்

செய்யும் உரிமையும் வழங்கப்பட்டது. சீனுவிலிருந்தும், சீன மொழியில் கிறித்தவ சமயக் கருத்துக்கள் ஜப்பானில் பரவாமலும் கண்காணிக்கப்பட்டது. கிறித்தவ சமயத்திற்கு எதிராகச் செயல் படும் ஜப்பானிய அதிகாரிகள் நாடுமுழுவதும் திரிந்தவாறிருந்தனர். ஒவ்வொரு ஜப்பானியனும் ஏதாவது ஒரு புத்த சமயப் பிரிவில் சேரவேண்டுமென்றும், அவ்வாறு சேர்ந்துள்ளான் என்பதற்கான பதிவு ஏதாவதொரு புத்தக் கோவிலில் இருக்கவேண்டுமென்றும், ஒருவனைச் சோதித்து, அவனுடைய பெயர் எந்தக் கோவில் பதிவேட்டிலுமில்லையென்றால், அவனை நாடுகடத்த வேண்டு மென்றும் ஆணை பிறப்பிக்கப்பட்டது.

இத்தகைய கடுமையான சட்டதிட்டங்களுக்கிடையிலும், டச்சுக்காரர்கள் வாயிலாக வெளியுலகக் கருத்துகள் சிறிதள வேனும் ஜப்பானுக்குள் நுழைந்தன. இருப்பினும் தூரக்கிழக்கு நாடுகள் அனைத்தும் மேற்கத்திய நாடுகளுடன் தொடர்பு கொண் டிருந்த காலத்தில் ஜப்பான் மட்டும் திடீரெனத் தொடர்பை துண்டித்துக் கொண்டது. கி.பி. 1853-ல் கமோடர் மாத்யூ-சி- பெர்ரி, ஜப்பானியக் கதவுகளைத் துப்பாக்கி முனையில் திறக்கும் வரை ஜப்பானியக் கதவுகள் மூடிய வண்ணமே இருந்தன. ஜப்பானுக்குள் அந்நிய நாட்டினர் நுழையவும் இயலாது; ஜப்பானியர் வெளியேறவும் இயலாது; இந்த நிலையில், வெளி உலகத் தொடர்பற்று, கிணற்றுத் தவளையென ஜப்பானியர் முடங்கிக் கிடந்தனர்.

## தொகுகாவாக்களின் அரசியல் பண்பாட்டு வளர்ச்சி

ஆட்சித்துறையில் தொகுகாவாக்கள் முன்பிருந்த நிலமானிய முறையையே பின்பற்றினர். தைமியோக்கள் (Daimyoo) என அழைக்கப்பட்ட நிலப்பிரபுக்கள், மாநில, மாவட்ட ஆட்சித் துறைத் தலைவர்களாக அமர்த்தப்பட்டனர். விவசாயத்தின் அடிப்படையாகக் கொண்ட பொருளாதாரம்தான் நாட்டின் உயிர்நாடி என்ற முறையில், பிரபுக்களின் நில வருமானத்தைக் கொண்டு, அவர்களின் தரம் நிர்ணயிக்கப்பட்டது. தொகு காவாக்களின் காலத்தில் 270 பெரும் நிலப்பிரபுக்கள் இருந்தன ரென்று கணக்கிடப்படுகின்றது. இந்த 270 பிரபுக்கள்தான் தொகுகாவாக்களின் கண்காணிப்பின்கீழ் நாட்டை ஆண்டு வந்தனர். இப் பிரபுக்களைப் பொதுவாக மூன்று வகையினராகப் பிரிக்கலாம். முதல் பிரிவினர் ஷிம்பன்கள் (Shimpans) என அழைக்கப்பட்டனர். இவர்கள் தொகுகாவாக் குலத்தினரைச் சேர்ந்தவர்களாக இருப்பினும், ஷோகன் பதவி இவர்களுக்குக்

கொடுக்கப்படுவதில்லை. இரண்டாவதாக ஃபூதாய்' (Fudai) என்ற தொகுகாவா குடும்பத்தினர்; மூன்றாவதாக தொஸாமா (Tozamas) என்பவர்கள் தொகுகாவா குடும்பத்தை ஒத்த வேறு குடும்பத்தினர். இவர்கள்தான் பின்னர் தொகுகாவாக்களின் பகைவர்களாக மாறியவர்கள். இவர்களைத் தவிர தரத்தில் குறைந்த சிறு நிலப்பிரபுக்களும் இருந்தனர். சிறு நிலப்பிரபுக்கள் தாம் 'சாமுராய்கள்' (Samurais) என அழைக்கப்பட்ட வீரம் செறிந்த படைக்குலத்தவர்கள்.

இத்தகைய நிலப்பிரபுக்களிடையில் நாடு பிரிக்கப்பட்டு இருந்தாலும், தொகுகாவாக்களின் ஆதிக்கத்திற்கு அனைவரும் கீழ்ப்படிந்தனர். தொஸாமா போன்றவர்களும், மற்றையோரும், தொகுகாவாக்களுக்கு எதிராகக் கலகம் விளைவிப்பதைத் தடுக்கும் வகையில் சில தடுப்புச் சட்டங்கள் இயற்றப்பட்டன. அச் சட்டத்தின்படி அரசு பணி புரிவோரும், பேரரசரவை உறுப்பினர்களும், மாநில ஆட்சித் தலைவர்களும் தமது குடும்பங்களை எதோ நகரிலேயே வைத்திருக்கவேண்டும். அரசுப் பணியின் காரணமாக மாநிலங்களுக்குச் செல்லும்போதும், அவர்கள் தங்கள் குடும்பத்தினை எதோ நகரிலேயே விட்டுச் செல்லவேண்டும். பேரரசரவைக்கு ஒரு சமயத்தில் பாதிப் பிரபுக்கள்தான் செல்ல முடியும். மீதிப் பிரபுக்கள் எதோ நகரில் இருந்தேயாக வேண்டும். இத்தகையக் கட்டுப்பாடுகளினால் படைப்பிரபுக்கள் எந்நேரமும் தொகுகாவா ஷோகன்களின் நேரடிப் பார்வையில் பாதிபேராவது இருக்கின்ற நிலையிருந்தது. இம் முறை 'சாங்கின் கோட்டை' (Sankien Kotai) என்று வழங்கப்பட்டது. இம் முறையினால் பிரபுக்கள் தொகுகாவா ஷோகன்களின் எதோ நகருக்கும், பேரரசரின் கியாத்தோ நகருக்கும், மாநிலத்தலை நகரங்களுக்குமிடையே சென்று வருகின்ற அரசப் பணியாட்களாக இருக்க முடிந்ததே தவிர, புரட்சியாளர்களாக மாற வழியேதுமில்லை.

அரசின் கொள்கைகளை உருவாக்க மூத்தோரவை (Council of Elders) ஒன்றிருந்தது. இவ்வவையின் உறுப்பினர் ஒருவர், ஷோகன் சிறு பிராயத்தவராக இருந்தால், அவருக்குப் பதிலாகப் பொறுப்பேற்று ஆட்சி நடத்துவார். மூத்தோரவையில் பெரும் பிரபுக்கள் இடம் பெற்றிருப்பர். இச் சபைக்கு அடுத்தாற்போல கீழவை ஒன்றும் உண்டு. இச் சபையில் இரண்டாம் நிலை தொகுகாவாப் பிரபுக்கள் இடம் பெற்றிருப்பர் (Lower Council of Junior Elders). இவ்விரு சபைகளின் கட்டுப்பாட்டின்கீழ் அரச உயர்மட்ட அதிகாரிகள், நிருவாகத்தினர், நீதித்துறை அதிகாரிகள் அனைவரும் பணியாற்றுவர். இவ்வதிகாரிகள் அனைவரும் தொகு

காவா குலத்தினரால், பரம்பரையாக அமர்த்தப்பட்டனர். இம் முறையை நோக்கும்போது, குழு ஆட்சி முறையைப்போல தோற்றமளிக்கின்றதேயல்லாமல், தனி மனிதனின் ஆட்சியாகத் தென்படவில்லை. மாநில, மாவட்ட ஆட்சி முறைகளும் இதே முறையில் அமைக்கப்பெற்று, சுயாட்சி பெற்ற நிலையில் இயங்கின.

### சமுதாய அமைப்பு

குலத்தினடிப்படையில் சமுத்ரய அமைப்பு இருந்தாலும், இவ்வமைப்பு தொகுகாவாக்கள் ஆட்சிப் பொறுப்பேற்பதற்கு முன்பிருந்தே இருந்துவந்தது என்பதைக் கருத்திற் கொள்ள வேண்டும். தாங்கள் ஆட்சிப் பொறுப்பேற்பதற்கு முன்னமேயே, மக்களிடையே ஊறிப்போன சமுதாயப் பிரிவுகளுக்கு, முறையான வடிவம் கொடுத்து, தங்களின் நேரடிப் பார்வையிலும் கட்டுப் பாட்டிலும் கொணர்ந்து, இருநூற்றைம்பதுக்கும் அதிகமான கால அளவில் அமைதியான ஆட்சிமுறையை உருவாக்கித் தந்த பெருமை தொகுகாவாப் பரம்பரையினரையே சாரும்.

சமுதாயத்தின் மிக்குயர் நிலையில் இருந்தோர் பேரரசரும், அவரது அரசவையினரும் ஆவர் (Kuge). அதற்கடுத்த உயர்நிலையி லிருந்தவர் சாமுராய் என அழைக்கப்பட்ட படைக்குலத்தினர். வீரக்குலத்தினர் பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தனர். இவர் களில் முதல் பிரிவினர் உயர்நிலைப் பிரபுக்களாவர். இரண் டாவது பிரிவினர் ஹதமோடோ (Hatamoto) என்றழைக்கப் பட்டனர். இவர்கள் ஷோகன்களின்கீழ் அரசு பணியேற்ற வர்கள், இவர்கள் எதோ நகரிலேயே வாழ்ந்தவர்கள். மூன்றாவ தாக 'பைஷின்' (Baishin) என்பவர்கள். இவர்கள் முதலிரண்டு பிரிவினருக்கும் உதவியாளர்கள்; அரசு கீழ்நிலைப் பணியாளர் களாகவும், காலாட் படையினராகவும் பணியாற்றினர். நான்கா வதாக ரோனின் (Ronin) என்றழைக்கப்பட்ட சுதந்திர சாமுராய் வீரர்கள், ஐந்தாவதாக கோஷி (Goohi) என்றழைக்கப்பட்ட விவசாய மக்கள்; இவர்கள் போர்க்காலங்களில் மட்டும் படையில் பணியாற்றுவர். இவர்கள்தான் தொகுகாவா அரசின் ஆணிவேர் என்று நிச்சயமாகக் கூறலாம்.

பிரபுக்களும், சாமுராய் குலத்தினரும் சிறப்பு உரிமை பெற்ற உயர் குலத்தினர் எனக் கருதலாம். மற்றவர்கள் எல்லாம் அடிமைகள் அல்லராயினும் உரிமைகளற்றவர்கள் எனக் கூறலாம்.

மற்றவர்கள் என்ற பட்டியலில் வேளாண் பெருங்குடி மக்களும், கைவினைஞர்களும், தொழிலாளர்களும், வர்த்தகர்களும்

அடங்குவர். இவர்களுக்கு அடுத்தாற்போல் உள்ளவர்கள் சமூகத்தின் அடித்தளத்தில் உள்ளவர்கள்; தீண்டப்படாதவர்கள். ‘எடா’ (Eta) என்றழைக்கப்பட்ட மக்களினத்திலிருந்துதான் கூத்தாடிகள், தோல்பதனிடுவோர், கொலைத்தண்டனை நிறை வேற்றுவோர் எனப் பலரும் காணப்பட்டனர். இவர்கள் நகரின் ஒதுக்குப் புறங்களில் வாழ்ந்தனர்; மாக்களைப்போல நடத்தப் பட்டனர். மக்கள் தொகைக் கணக்கெடுப்பின்போதுகூடத் தாழ்ந்த மக்களும், பிச்சைக்காரர்களும் ஒதுக்கிவிடப்பட்டனர். இதே நிலையில் இவர்கள் 1871ஆம் ஆண்டுவரையிலும் வாழ்ந்தனர். இப்போது இவ்விரு இனத்தவரின் வழித் தோன்றல்கள் குடியுரிமை பெற்ற ஜப்பானியர்களாக, நாகரிகமடைந்தவர்களாக ஏற்றுக் கொள்ளப்படுகின்றனர். அவர்களின் முன்னேற்றத்தில் அரசும் அக்கறை கொண்டுள்ளது.

தொகுகாவாக்களின் வாழ்க்கை முறை பற்றிய கருத்துகள் வேடிக்கையாகவும், வேறெந்த நாட்டிலும் காணமுடியாத கருத்துக்களாகவும் இருக்கின்றன. வாழ்க்கை நெறிகளை அரசு உருவாக்கித் தந்திருக்கின்றது. ‘வாழ்க்கை என்பது இன்பத்தை நாடுவதற்காக அல்ல; அது ஒரு கடமை’ என்பது போன்ற கருத்துகள் வெளியிடப்பட்டன. சிந்திக்கும் உரிமை மனிதனுக்குத் தேவையில்லை. ஏனெனில், அரசிற்குப் பணிந்து கடமையை ஆற்றுதலே ஒருவனின் முக்கிய குறிக்கோளாகும். இதைத் தவிர்த்து வேறு சிந்தனைகள் தேவையற்றவை. தரம் பிரிக்கப்பட்ட சமுதாய அமைப்பில், முன்னேற்றம் என்ற சொல்லுக்கு இட மில்லை. ஏனெனில் உயர்ந்த நிலையில் உள்ளவனும், சமுதாயத்தில் அந்தந்த நிலையில் உள்ளவன் அதே நிலையிலேயே இருக்கவேண்டும்— என்பது போன்ற உலக நியதிக்கு முற்றிலும் புறம்பான கருத்து களைக் கொண்டிருந்தனர் தொகுகாவா ஷோகன்கள். ‘கன்பூசிய மதம்’ தொகுகாவாக்களால் மீண்டும் உயர் நிலைக்குக் கொண்டு வரப்பட்டது. ஏற்கெனவே புத்தமதத்தின் செல்வாக்கு குறைந் திருந்தது. தொகுகாவாக்களின் காலத்தில் கிறித்தவமும் தடை செய்யப்பட்டது. எனவே, கன்பூசியத் தத்துவங்கள் அரசின் ஆதரவுடன் மீண்டும் உயர்நிலையை அடைந்தன.

## பொருளாதார நிலை

நெல் உற்பத்திதான் ஜப்பானியர்களின் பொருளாதாரத்தின் அடிப்படை. எவ்வளவு நெல் விளைவிக்கிறார்கள் என்பதைப் பொறுத்துதான் நிலப் பிரபுக்களின் தரம் நிருணயிக்கப்பட்டது. நெல்லுக்கு அடுத்தாற்போலக் கோதுமையும், பார்லியும் விளைவிக் கப்பட்டன. காய்கறிகளும், பழவகைகளும் அதிகமாகப் பயிரிடப்

பட்டன. தேயிலைத் தொழில் மிகவும் முக்கியத் தொழிலாக அமைந்தது. சீனர்களைப்போல, பழைய முறைகளிலேயே உழவுத் தொழில் செய்யப்பட்டாலும் ஜப்பானில் நிறைய விளைச்சலைப் பெற முடிந்தது.

அரசவைப் பிரபுக்களும், அரசப் பெரும் பணியாளர்களும் படையினரும் மற்றவர்களும், தங்கள் குடும்பங்களுடன் எதோ நகரில் வாழ்ந்தனர். இந் நகரின் மக்கள் தொகையும் நாகரிகமும் உயர்ந்தது. நீண்டகால அமைதியில் சாமுராய் படைக் குலத் தினர் சொகுசான நாகரிக வாழ்வில் திளைத்தனர். இவர்களின் சுகவாழ்விற்கு அடிப்படையாக அமைந்த வணிகர்கள், கைவினை ஞர்கள், ஏவலாளிகள், மற்றும் பலரும் இவர்களை அண்டி வாழ்ந்த தால் மக்கள் தொகை மிகவும் அதிகமாகியது. வணிகர்கள் பெரும் பொருளீட்டினர். நகரங்களில் செல்வந்தர்கள் வணிகர் களும், தரகர்களும், வைப்பகங்கள் வைத்திருப்போரும் ஆவர். அவர்கள் வர்த்தகத்தைக் கட்டுப்படுத்தினர். சுகபோக வாழ்க் கையில் ஈடுபட்ட தைமியோக்களும், சாமுராய்களும், இப் புதிய செல்வந்தர்களிடம் கடன்பட்டனர். இத்தகைய வணிக குலத்த வரால் பணம் மூலதனத்தின் முன்னணியில் நின்றது. நிலத்தையும், விளைச்சலையும் நம்பி வாழ்ந்த படைக் குடும்பங்களை, எதிர்க்கவும், அவர்களைக் கட்டுப்படுத்தவும் செல்வம் மிக்க வணிகர்கள் முயன்றனர். புதிய பொருளாதார முறைகள் வளர்ந்தன.

1700-க்குள் தொகுகாவாக்களின் ஆட்சியிலிருந்த ஜப்பான் பண்டைய முறைகளிலிருந்து மாறுபடத் தொடங்கியது. புதிய, திறமையான அரசியலமைப்பை உருவாக்கி, நாட்டின் அமைதி காத்தபிறகு, புதிய அமைதியான சூழலில், தொகுகாவாக்களும் சிறிது மயங்கினர். ஆட்சித்துறையிலும், பொருளாதார, சமூக வியலிலும் மாற்றங்கள் தோன்றின. இம் மாற்றங்களோடு, அந்நியர் வருகையும், தொகுகாவா ஷோகன்களுக்குப் பெரும் சோதனையாக அமைந்தன. அச் சோதனைகளை ஏற்கும் திறமை படைத்தவர்கள் தொகுகாவா குலத்தில் உதிக்கவில்லை. இருநூறு ஆண்டுகளுக்குப் பின்னர் எழுந்த புரட்சி, தொகுகாவாக்களையும், ஷோகன் பதவியையுமே அடியோடு அழித்தது. புதிய ஜப்பான் ஏற்பட வழிவகுத்தது.

# 2. ஜப்பான் மேலையருக்குத் திறந்துவிடப்படுதல்

கி.பி. 1638ஆம் ஆண்டிலிருந்து 1853 வரை ஜப்பான் அயல் நாட்டுத் தொடர்பற்றுக் கிணற்றுத் தவளையாகக் கிடந்தது என்பதை அறிவோம். இந்த இருநூறு ஆண்டுகளுக்குட்பட்ட காலத்தில் உலகில் பல முக்கிய நிகழ்ச்சிகளும், மாறுதல்களும் முன்னேற்றங்களும் ஏற்பட்டிருந்தன. இக்காலத்தில் இங்கிலாந்து, ஸ்காட்லாந்து, அயர்லாந்து ஆகிய இம்மூன்றும் இணைந்து ஒன்றிய அரசாகியது (United Kingdom). இங்கிலாந்தில் பாராளுமன்ற முறை தோன்றி வளர்ந்திருந்தது. உலகின் பல பாகங்களிலும் குடியேற்றப் போட்டிகள் ஏற்பட்டன. ஆங்கிலேயர்கள், பிரெஞ்சுக்காரர்கள், ஸ்பானியர்கள், டச்சுக்காரர்கள் முதலானோர் அமெரிக்காவில் தங்களது குடியேற்றங்களை அமைத்தனர். அமெரிக்க ஐக்கியநாடுகள் தோன்றின. ஸ்பெயினும், துருக்கிப் பேரரசும் வலிவிழந்து காணப்பட்டன. பிரான்சில் பதினான்காம் லூயியின் இறப்புக்குப் பின்னர், மாபெரும் பிரெஞ்சுப் புரட்சி ஏற்பட்டது. பிரெஞ்சுப் புரட்சியின் கருத்துகள் உலகெங்கணும் பரவிப் புதிய மாற்றங்கள் ஏற்படக் காரணமாயின. மாவீரன் நெப்போலியனின் சகாப்தம் ஏற்பட்டு, ஐரோப்பா முழுவதும் கலங்கியது. ருஷியாவும், பிரஸ்யாவும் புத்துணர்ச்சிபெற்று ஐரோப்பிய மயமாக்கப்பட்டன. இந்தியாவில் மொகலாயப் பேரரசின் அழிவுகாலம் அவுரங்கசீப்பின் மறைவோடு தொடங்கி, மராத்தியரின் எழுச்சியையும், சீக்கியரின் கால்சாப் படையமைப்பையும், ஐதர்அலி, திப்புசுல்தான் ஆகியோரின் எழுச்சியையும், கருநாடகப் போர்களையும், பிரெஞ்சுக்காரரின் வீழ்ச்சியையும், ஆங்கிலேயரின் எழுச்சியையும் கண்டு, புகழ்பெற்ற முதல் இந்திய விடுதலைப் போருக்குத் தன்னைத் தயாராக்கிக் கொண்டிருந்தது. இவற்றை ஒரு சிறிதும் ஜப்பான் அறியவில்லை. உலகமும் இவ்விடைக்காலத்தில் ஜப்பானில் நடந்தவற்றை அறியவில்லை.

அண்மையிலிருந்த கொரியா, பார்மோசா, பிலிப்பைன் தீவுகள், மாபெரும் நாடான சீனு ஆகியவற்றையும் கூட ஜப்பான் அறியவில்லை. இக்காலத்தில் ஐரோப்பாவில் ஏற்பட்டிருந்த தொழில்—வேளாண்மைப் புரட்சியையும், அரசியலிலும், அரசியற் கோட்பாடுகளிலும் ஏற்பட்ட மாறுதல்களையும், கலை, பண்பாடு இலக்கியங்களில் ஏற்பட்டிருந்த வளர்ச்சியையும், பொதுவாகச் சொல்லப் போனுல், ஜப்பானின் நான்கு தீவுகளுக்கப்பால் என்ன நடக்கிறது, மக்கள் வாழ்கிருர்களா இல்லையா என்பதுகூட ஜப்பானியருக்குத் தெரியாது என்றே கூறலாம். இருப்பினும் இவ்விரண்டரை நூற்றுண்டுக் காலத் தனிமையில், நாகசாகியில் அனுமதிக்கப்பட்டிருந்த டச்சுக்காரர்களின் மூலமாக ஏதோ சிறிதளவு வெளியுலகைப் பற்றி ஜப்பானியர் அறிந்து வைத்திருந்தனர்.

பதினெட்டாம் நூற்றுண்டின் இறுதியிலும், பத்தொன்பதாம் நூற்றுண்டின் தொடக்கத்திலும் மூடிக்கிடந்த ஜப்பானின் கதவுகளைத் திறக்க ஐரோப்பிய நாடுகள் முயற்சியை மேற்கொண்டன. சைபீரியாவினின்று தெற்குநோக்கி வளர்ந்து பசிபிக் கடற்கரையை அடைந்துவிட்ட ருஷியா, தனது அண்டை நாடான ஜப்பான்—சீனுவுடன் தொடர்பு கொள்ள விரும்பியது. முதலில் வர்த்தக உறவையும், பின்னர் நட்புறவையும் ஏற்படுத்திக் கொண்டு எல்லைகளை நிர்ணயம் செய்து கொள்ளவும் முயன்றது. ஜப்பானின் வடக்கிலிருந்த குறில் (Kurile Islands) தீவுகளையும், சாகாலின் (Sakhalin) தீவையும், காம்சட்கா தீவினையும் (Kamchatka Island) தனது எல்லைக்குட்படுத்த விரும்பி, ருஷியா படையெடுப்புகளை மேற்கொண்டது. ஆனுல், ஜப்பானிய அரசவை தனது மரபுவழிக் கொள்கையான 'தனிமைக் கொள்கையை' (Isolation), மாற்றிக்கொண்டு, வர்த்தகம், மற்றும் அரசியலுறவு ஏற்படுத்திக் கொள்வதை விரும்பவில்லை. எனவே, ருஷியாவின் முயற்சிகள் பயனளிக்கவில்லை.

ருஷியர்களைப் போலவே ஆங்கிலேயரும் ஜப்பானின் கதவுகளைத் திறக்க முயன்றனர். தங்களின் வர்த்தகக் கப்பல்களுக்குத் தேவையான இன்றியமையாத பொருள்களைப் பெறவும், ஜப்பானியக் கடற்கரைப் பகுதிகளை ஆராயவும், தங்களின் உண்மை நோக்கங்களைக் குறித்துப் பேச்சு வார்த்தைகள் நடத்தவும் எனப் பல பொய்க் காரணங்களைக்கூறி, ஜப்பானில் நுழைய ஆங்கிலேயர் அனுமதி கோரினர். இத்தகைய காரணங்களை ஆங்கிலேயர் சாக்காகக் கொண்டு, ஜப்பானுக்குள் நுழைவதையே விரும்புகிருர்கள் என்பதையுணர்ந்த ஜப்பானியர், அவர்களுக்கு அனுமதி

யளிக்கவில்லை. மேலும் சீனுவில் ஆங்கிலேயர் நடந்துகொண்ட முறைகளையும், அபினிப் போருக்கான காரணங்களையும், விளைவு களையும் டச்சுக்காரர்கள், சீனர்கள் வாயிலாக ஜப்பானியர் உணர்ந்தே இருந்தனர். மாபெரும் நாடான சீனுவே ஆங்கிலேயர் களை எதிர்த்து, வெளியேற்ற இயலாமல், அடிபணிந்ததைக் கண்ட ஜப்பானியர் உண்மையிலேயே அச்சம் கொண்டனர். தங்களது கதவுகளை மேலும் இறுக்கமாக மூடிக்கொள்வதையே, தங்களுக்குப் பாதுகாப்பு என்றும் கருதினர்.

இந் நாடுகளைப் போலவே பத்தொன்பதாம் நூற்றுண்டின் தொடக்கத்திலிருந்தே அமெரிக்காவும் ஜப்பானுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள முயன்றது. அமெரிக்கர்களின் மீன்வேட்டை அவர்களுக்கு மிகுந்த அந்நிய செலாவணியைக் கொடுத்தது. பசிபிக் பெருங்கடலில் மிகுதியாகக் காணப்பட்ட வேல் (Whale) என்ற மீனின் எண்ணெய் அமெரிக்காவிலிருந்து பல நாடுகளுக்கும் ஏற்றுமதியாகியது. இந்த மீன் வேட்டைக்காக பசிபிக் பெருங் கடலில் திரிந்த அமெரிக்கக் கப்பல்கள் புயலின் காரண மாகவோ, தீ யூ ழி ன் காரணமாகவோ, சில நேரங்களில் ஜப்பானியக் கடற்கரையைச் சென்றடைந்தன. இவ்வாறு வந்து ஒதுங்கிய அமெரிக்கர்களை ஜ ப் பா னி ய ர் சித்திர வதை செய்தனர். பெருங் குற்றவாளிகளைப்போலக் கூண்டுகளில் அடைத்து, மக்களின் பார்வைக்கு வைத்து ஏளனம் செய்தனர். இச் சித்திரவதைகளால் பலர் இறந்தனர். ஒருசிலர் நாகசாகியி லிருந்த டச்சுக்காரர்கள் மூலமாகத் திருப்பியனுப்பப்பட்டனர். இவ்வாறு தப்பித்து வந்தவர்கள் கூறிய கதைகள் அமெரிக்கர்களைத் திகைக்க வைத்தன. எனினும் ஜப்பானியக் கதவுகளைத் திறக்க அமெரிக்கா முழு முயற்சிகள் எடுத்துக்கொள்ளவில்லை. எடுத்த மு ய ற் சி க ளு ம் முழுமனத்தோடு செயல்படுத்தப்படாததால் தோல்வியில் முடிந்தன. 1827-ல் அமெரிக்கரின் மாரிசன் (Morrison) என்ற கப்பலும், 1845-ல் தளபதி கூப்பரின் கப்பலும், 1848-ல் தளபதி சிசிலியின் கப்பலும், 1849-ல் தளபதி மத்தீசன் கப்பலும் ஜப்பானியரால் சிறைப்பிடிக்கப்பட்டன.

இதற்கிடையில் அமெரிக்கா மேற்கு நோக்கி விரிவடைந்து, பசிபிக் பெருங்கடல் எல்லையை அடைந்தது. 1848-ல் கலிபோர்னி யாவில் தங்கச் சுரங்கங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. இதனுல் கலிபோர்னியா தூரக்கிழக்கு நாடுகளின் வாணிக மையமாகத் திகழ்ந்தது. சான்-பிரான்சிஸ்கோ நகரையும், ஹாங்காங்கையும் நேரடிக் கடல்வழியால் இணைக்க ஆங்கிலேயரும் திட்டமிட்டனர். இவற்றிற்கிடையேயுள்ள தொலைவு 6149 கடல் மைல்களாகும். இத் திட்டம் நிறைவேறினுல் பல வர்த்தகக் கப்பல்கள் விரை

வாகவும், எளிதாகவும், சிக்கனமாகவும் ஹாங்காங்கை அடைய முடியும் என நம்பினர். ஆனால், இத் திட்டத்திற்கு இடையூறாக ஜப்பான் இருப்பதையும் ஆங்கிலேயர்கள் உணர்ந்தனர். மேலும், நீராவிக் கப்பல்களுக்குத் தேவையான நிலக்கரியையும், மற்றும் பல தேவைகளைப் பெறுவதற்கும், செப்பனிடப்படுவதற்குரிய வசதிகளைப் பெறவும் ஜப்பானியக் கடற்கரையில் துறைமுகம் ஒன்று தேவைப்பட்டது. அத்துடன் அமெரிக்கர்கள் ஜப்பானுடன் வளமான வர்த்தகத் தொடர்பை ஏற்படுத்திக் கொள்ளமுடியும் எனவும் நம்பினர்.

முதலாம் அபினிப் போருக்குப் பின்னர் சீனுவின் நிலைமையை உணர்ந்த ஜப்பான் தனது படைவலிமையைப் பெருக்கிக்கொள்ளும் தேவையை உணர்ந்து, ஹாலந்து நாட்டிலிருந்து புதிய வேட்டைக்கங்களையும் (துப்பாக்கிகள்) வெடிகுண்டுகளையும் வரவழைத்துக் கொண்டது. ஐரோப்பிய முறையில் தனது படைகளுக்கும் பயிற்சியளிக்க முற்பட்டது. தெஷிமா (நாகசாகிக்கருகில்) விலிருந்த டச்சுக்காரர்களும் அடிக்கடி ஜப்பானியரை எச்சரித்தனர். பிரிட்டனே அமெரிக்காவோ ஜப்பானைக் கைப்பற்றுமென 1847-ல் ஹாலந்து எச்சரித்தது. 1849-ல் அமெரிக்கர்கள் இன்னும் ஓராண்டில் ஜப்பானுக்குள் வலுக்கட்டயமாக நுழைவார்கள் என்றும், அவர்களுக்குத் தங்கள் கதவுகளை ஜப்பானியர் திறந்துவிட மறுத்தால், அமெரிக்க-ஜப்பானியப் போர் ஏற்படுவது உறுதி எனவும் எச்சரித்தனர். 1846-ல் வணிக உறவுகொள்ள ஜப்பானுக்குச் சென்ற தளபதி பிட்டில் (Commodore Biddle) என்பவரை ஜப்பான் மதியாது மறுத்துரைத்தது. எனவே, ஜப்பானுக்குள் வலுக்கட்டாயமாக நுழைந்தேயாக வேண்டும் எனக் கருதி, இதற்கு ஐரோப்பிய நாடுகளின் அனுமதி வேண்டுமென அமெரிக்கா ஐரோப்பிய நாடுகளைக் கேட்டுக் கொண்டது. இதனையொட்டித்தான் ஹாலந்து மேலே குறிப்பிட்ட எச்சரிக்கையை ஜப்பானுக்கு விடுத்தது இத்தகைய சூழ்நிலைகள் ஜப்பானுக்கு வெளியில் வளர்ந்து கொண்டிருந்தபோது, தொகுகாவா ஷோகன்களின் வலிமையும் குறைந்துகொண்டே போயிற்று. ஜப்பானில் தொகுகாவாக்களுக்கு எதிர்ப்பும் வளர்ந்துகொண்டே வந்தது. இயற்கையும் தொகுகாவாக்களுக்கு எதிராகச் சதி செய்தது. புயலும், எரிமலைக் கொந்தளிப்புகளும், வறட்சியும், பஞ்சமும் தலைவிரித்தாடின. ஷோகன்களின் முயற்சிகள் பலனளிக்கவில்லை. இத்துடன் தொகுகாவாக்களிடையேயும் ஒற்றுமைக் குறைவு காணப்பட்டது. குறிப்பாகச் சொல்ல வேண்டுமென்றால் தொகுகாவா ஷோகன்களின் ஆட்சி ஆட்டம் கண்டது. பேரரசரும் இத்தகைய உள்நாட்டு குழப்ப நிலையை உணர்ந்தே இருந்தார்.

மேத்யு-சி-பெர்ரி என்ற கப்பற்படைத் தலைவர் ஜப்பானை நோக்கிச் செல்லும் அமெரிக்கக் கப்பற்படையின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவர் 1852ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 24ஆம் நாள் நார்போக் துறைமுகத்திலிருந்து, நான்கு போர்க் கப்பல்களுடன் புறப்பட்டார். இவர் நன்னம்பிக்கை முனை வழியாக, சீனக்கடலையடைந்து, சீனத் துறைமுகங்களைக் கடந்து, போனின் தீவுகள், ரியூகியூ தீவுகள் வழியாக, எதோ வளைகுடா விற்குள் நுழைந்து, ஜப்பானியக் கரையை 1853ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் ஏழாம் நாள் அடைந்தார். ஜப்பானியரின் எதிர்ப்பைப் பொருட்படுத்தாமல் துணிந்து சென்று உராகா (Uraga) என்னும் சிற்றூருக்கருகில் நங்கூரம் பாய்ச்சி நின்றார். மிகப்பெரிய நாட்டின் பிரதிநிதி என்ற முறையில், பெருமிதத் தோடும், கண்ணியத்தோடும் நடந்து கொண்டார். மிகவும் உயர்ந்த அதிகாரிகளைத் தவிர மற்றையோரிடத்தில் பேச்சு வார்த்தைகள் வைத்துக்கொள்ள மறுத்தார். அவரது வற்புறுத்தல் களுக்குப் பணிந்த ஜப்பானியர், இரு உயர் அதிகாரிகளை அனுப் பினர். இவ்வதிகாரிகளிடம் அமெரிக்கக் குடியரசு தலைவர் பில்மோர் (Fillmore) கொடுத்தனுப்பிய மடலை அவர் கொடுத்தார். நாகசாகியிலிருந்த டச்சுக்காரர் மூலமாக எந்த விதமான பதிலையும்பெற விரும்பாமல் அடுத்த ஆண்டு திரும்பி வந்து ஜப்பானியரின் பதிலைப் பெற்றுக்கொள்வதாகக் கூறிவிட்டுச் சென்றார்.

கப்பலுடைந்து அல்லது புயலால் உந்தப்பட்டு ஜப்பானியக் கரையைச் சேரும் அமெரிக்கரைக் காப்பாற்ற வேண்டுமென்றும், இனி அமெரிக்கா ஜப்பானுடன் வணிக உறவுகொள்ளும் அவசியத் திலிருப்பதால் அதன் ஒருசில துறைமுகங்களை அமெரிக்காவிற்குத் திறந்துவிட வேண்டுமென்றும், அவ்வாறு ஜப்பான் திறந்துவிட மறுத்தால், அமெரிக்கா போரிட்டாவது பெறத் தயாராய் இருப்ப தாகவும், ஆனாலும் அமெரிக்கா ஜப்பானுடன் நட்புறவு கொள் வதையே விரும்புகிறது என்றும், பெர்ரியின் கடிதத்தில் கூறப்பட் டிருந்தது. இக் கடிதம் ஷோகனுக்கும், மிகாடோவிற்கும் கொடுக்கப்பட்டது. ஷோகன் குழுவின் தலைமை அறிவுரையாளர் அயலாரைத் தங்களது புனித பூமியில் அனுமதிக்கவே கூடாது என்றார். அவருடைய கருத்தினைப் பலரும் ஏற்றுக்கொண்டனர். ஆனால், ஓர் உறுப்பினர் மட்டும் ஜப்பானின் பொருளாதாரத்தை யும், படை வலிமையையும் சுட்டிக்காட்டி, அமெரிக்கரை மறுப்ப தால் வரும் அபாயத்தையும் விளக்கினார். மிகோடாவும், அவரது அவையினரும்கூட அமெரிக்காவின் நுழைவை வெறுத்தனர்.

சீனக் கடற்கரைப் பகுதிகளுக்குச் சென்ற கடற்படைத் தலைவர் பெர்ரி, அங்கு நடந்துகொண்டிருந்த தைப்பிங் கலகத்தையும், பிற சூழ்நிலைகளையும் கண்டார். அதே நேரத்தில் ருஷிய-பிரெஞ்சுக் கடற்படைகள் ஜப்பானை நோக்கிச் செல்லத் திட்டமிட்டிருப்பதையும் உணர்ந்தார். எனவேதான் முன்பு குறிப்பிட்டுச் சென்ற காலத்திற்கு முன்பே ஜப்பானியக் கடற்கரையை அடைந்தார். அப்போது அவரிடத்தில் ஏழு பெரிய போர்க் கப்பல்கள் இருந்தன. ஷோகன்களின் அவையில், அமெரிக்கர்களுக்கு அனுமதியளிக்க முடிவு செய்தனர். இன்றைய யோஹாஹாமா நகர் எழுந்துள்ள இடத்தில் இருதரப்பினரும் விருந்துண்டு, கைகோத்து ஆரவாரத்துடன், அன்பளிப்புகளைப் பரிமாறிக்கொண்டு, உடன்படிக்கையில் கையொப்பமிட்டனர் (March 31, 1854). இந்த அமெரிக்க-ஜப்பானிய உடன்படிக்கை ஜப்பானிய வரலாற்றை, ஏன் உலக வரலாற்றையே மாற்றியமைக்கும் திறவுகோலாய் அமைந்தது எனலாம். இவ்வுடன்படிக்கையின் கூறுபாடுகளாவன:

1. ஜப்பானும் அமெரிக்காவும் சமாதான நட்புறவோடு வாழ வேண்டும்.

2. ஷிமோதா, ஹகோதாத் துறைமுகங்கள் அமெரிக்கருக்குத் திறந்துவிடப்பட வேண்டும். இத் துறைமுகங்களில் அமெரிக்கக் கப்பல்களுக்குத் தேவையான வசதிகளும், பொருள்களும் தருதல் வேண்டும்.

3. கப்பலுடைந்து தவிக்கும் மக்கள் ஜப்பானியராயினும், அல்லது அமெரிக்கராயினும் உடனடியாகக் காப்பாற்றப்படல் வேண்டும். அவ்வாறு ஆபத்தில் சிக்கிக் கரையேறுபவர்களை ஊடுருவல்காரர்களென்று, குற்றவாளிகளைப் போல நடத்துவதைத் தவிர்க்கவேண்டும். அவர்களுக்காகும் செலவைச் சம்பந்தப்பட்ட நாடு பிறகு கொடுக்கவேண்டும்.

4. ஷிமோதா, ஹகோதாத் துறைமுகங்களில் வந்து தங்கும் அமெரிக்கர்கள் ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் திரிய அனுமதி அளிக்கப்பட வேண்டும். துறைமுகங்களுக்குள்ளேயே அடைந்து கிடக்க வேண்டுமென அவர்களைக் கட்டுப்படுத்தக்கூடாது.

5. வாணிபம் மற்றும் பல தொடர்புகளை இரு சாராரும் தங்களுக்குள்ளே பேசி, சுமுகமான முடிவு காணல் வேண்டும்.

6. ஜப்பானிய அரசாங்கத்தின் சட்டதிட்டங்களுக்குக் கட்டுப்பட்டே துறைமுகங்களில் வாணிபம் செய்தல் வேண்டும்.

7. அமெரிக்கக் கப்பல்களுக்கு வேண்டிய நிலக்கரி, நீர், மரம் மற்றும் எந்தப் பொருளையும் ஜப்பானிய அரசு பணியிலுள்ள அதிகாரிகள் மூலமே பெறவேண்டும்.

8. இவ் வுடன்படிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ள உரிமைகளை விட வேறுசில உரிமைகளை அயல்நாடுகளுக்கு ஜப்பான் வழங்கு மானால் அந்த உரிமைகளும் அமெரிக்காவிற்கு உண்டு.

9. அமெரிக்கக் கப்பல்கள் குறிப்பிடப்பட்ட இரு துறை முகங்களைத் தவிர, வேறிடங்களுக்குச் செல்லுதல் கூடாது. ஆனால், கடும்பனி, புயல் இவற்றில் சிக்கித் தவிக்கும்போது இவ் விதி தளர்த்தப்படும்.

10. அமெரிக்க நாட்டின் முகவர்கள், ஆட்சிப் பேராளர்கள் ஆகியோர் ஷிமோதாவில்தான் தங்கவேண்டும்.

11. இவ் வுடன்படிக்கையில் ஏதாவது குறைபாடுகள் காணப்பட்டால் அவற்றைப் பதினெட்டு மாதங்களுக்குள் மாற்றி யமைக்கலாம்.

அமெரிக்கர்கள் ஜப்பானுடன் ஏற்படுத்திக்கொண்ட உடன் படிக்கையை அறிந்த ஏனைய ஐரோப்பிய நாடுகள், தாங்களும் அதேபோன்ற உடன்படிக்கைகளை ஜப்பானுடன் செய்து கொண்டன. 1854-ல் இங்கிலாந்தும், 1855-ல் ருஷியாவும் உடன் படிக்கைகளைச் செய்துகொண்டன. 1856-ல் ஹாலந்தும் புதிய உடன்படிக்கை ஒன்றினைச் செய்துகொண்டது. வேறு பல நாடு களும் இவற்றைப் பின்பற்றின. ஆயினும் இந் நாடுகள் யாவும் 1858-க்குப் பின்னரே ஜப்பானுடன் நடைமுறையில் உறவு கொண்டன.

அமெரிக்கக் கடற்படைத் தளபதி பெர்ரி என்பார் தமது முயற்சிகளால், மூடிக்கிடந்த ஜப்பானியக் கதவுகளைச் சிறிதளவே திறந்தார். இவருடைய முயற்சி ஆரம்பகால முயற்சியேயாகும். ஆனால் ஜப்பானுடன் முழு வர்த்தக உடன்படிக்கை செய்து கொண்ட பெருமை டவுன்ஷெண்ட் ஹாரிஸ் என்பவரையே சாரும். அமெரிக்கா, தனது ஜப்பானிய ஆட்சிப் பேராளராக டவுன்ஷெண்ட் ஹாரிஸ் என்பவரை நியமித்தது. இவர் 1856-ல் ஷிமோதாவிற்குச் சென்றார். ஜப்பானிய அரசு இவருக்கு அநேக தொல்லைகளையும், இடையூறுகளையும் ஏற்படுத்தினாலும், அத்தனை தொல்லைகளையும் ஏற்றுக்கொண்டு, ஜப்பானிய அரசுடன் சிறப் பான வணிக உரிமைகள் பெறுவதையே நோக்கமாகக் கொண்டு

செயல்பட்டார். மேலும் சிறப்புரிமைகள் வழங்க ஷோகனும் மிகாடோவும் மறுத்தனர். 1857-ல் ஹாரிஸ் எதோ நகருக்குச் சென்று ஷோகனைச் சந்தித்து பேச்சுவார்த்தைகள் நடத்தினர். ஷோகன்–ஹாரிஸ் நேரடிச் சந்திப்பு ஜப்பானியருக்கு மிகுந்த ஆச்சரியத்தை விளைவித்தது. ஷோகனை நேருக்குநேர் சந்தித்துப் பேசிய முதல் அந்நியர் ஹாரிஸ் ஒருவரே. இப் பேச்சு வார்த்தை களின் பயனுகப் புதிய ஒப்பந்தம் ஒன்றனைச் செய்துகொள்ள ஜப்பானிய அரசு இணக்கம் தெரிவித்தது. இது ஹாரிஸின் முதல் மாபெரும் வெற்றியாகும். புதிய ஒப்பந்தம் ஒன்று உருவாக்கப் பட்டது. மிகவும் காலம் தாழ்த்திய பின்னர் இரண்டாவது ஒப்பந்தம் 1858ஆம் ஆண்டு ஜுலைத் திங்கள் 29ஆம் நாள் கையெழுத்தாகியது. இதற்கிடையில் சீனுவில் டியன்சின் உடன் படிக்கை கையெழுத்தாயிற்று. இவ்வுடன்படிக்கையின்படி ஆங்கி லேயர், பிரெஞ்சுக்காரர், ருஷியர்கள் ஆகியோருக்குச் சீனு பணிந்து, வர்த்தக உரிமைகளை வழங்கியது. இதேபோன்று ஐரோப்பிய நாடுகள் தங்கள் படை வலிமையைக் காட்டி, ஜப்பானிலும் உரிமைகள் பெற முயலும் என்பதை ஹாரிஸ் ஜப்பானியருக்குச் சுட்டிக்காட்டினர். இதன் விளைவாகவே ஜப்பானிய—அமெரிக்க இரண்டாவது ஒப்பந்தம் கையெழுத்தாயிற்று. இந்த ஒப்பந்தத் தின்படி அமெரிக்கர்களுக்கு மேலும் சில வர்த்தக உரிமைகள் வழங்கப்பட்டன. தலைநகரில் அமெரிக்கத் தூதுவர் தங்கவும், துறைமுகங்களில் பேராளர்கள் தங்கவும், மேலும் பல துறை முகங்களை அமெரிக்கருக்குத் திறந்துவிடவும், வணிக வரிகளைக் குறைக்கவும், அபினி இறக்குமதியைக் குறைக்கவும், தங்களின் மதத்தைப் பின்பற்றவும் உரிமை பெற்றனர். பொதுவாக ஜப் பானில் அமெரிக்கர்களுக்குச் சிறப்பான உரிமைகளும், ஜப்பானியச் சட்டங்கள் அமெரிக்கர்களைக் கட்டுப்படுத்தாது என்ற உரிமையும் வழங்கப்பட்டன.

ஹாரிஸின் இந்த ஒப்பந்தம் 1894வரை ஜப்பானின் அயலுறவுக் கொள்கைகளின் அடிப்படையாய் இருந்தது. இவ் வொப்பந்தத்தை முன்னேடியாகக் கொண்டு, ஏனைய ஐரோப்பிய நாடுகளும் ஜப்பானுடன் புதிய உடன்படிக்கைகளைச் செய்து கொண்டன. இவ்வொப்பந்தத்தின்படி முதல் ஜப்பானியத் தூதரகம் ஒன்று அமெரிக்காவில் நிறுவப்பட்டது (1860). இதன் பின்னர் அமெரிக்க—ஜப்பானிய வணிகமும், நல்லுறவும் வளர ஆரம்பித்தன. 1867ஆம் ஆண்டுக்குள் பதினைந்து ஐரோப்பிய நாடுகள் ஜப்பானுடன் ஒப்பந்தங்கள் ஏற்படுத்திக்கொண்டன.

இதற்கிடையில் ஜப்பானிய அரசில் பெருங்குழப்பநிலை ஏற்படத் தொடங்கியது. ஷோகன், அயல்நாட்டவருடன் உறவு

ஏற்படுத்திக் கொள்ள விரும்பியதை ஜப்பானிய அரசின் எதிர்ப்பாளர்கள் எதிர்த்தனர். தொகுகாவா பரம்பரையினரின் எதிரிகளான தொஸாமா (Tozama) பிரபுக்கள் இவ்வெதிர்ப்புகளை முன்னின்று நடத்தினர். தொகுகாவா ஷோகன்களின் ஆட்சியை ஒழிக்கவேண்டும் என்பதே இவர்களது முக்கிய நோக்கமாகும். இவர்கள் அந்நியர்களுக்கெதிராகவும் செயல்பட ஆரம்பித்தனர். எதோவில் தங்கியிருந்த அந்நிய நாட்டினர்மீது பயங்கரத் தாக்குதல்கள் தொடங்கப்பட்டன. ஹாரிஸ் ஒருவரைத் தவிர மற்றவர்கள் அனைவரும் எதோ நகரிலிருந்து வெளியேறி ஷிமோதாவை அடைந்தனர். 1862-ல் ரிச்சர்டுசன் (Richardson) என்ற ஆங்கிலேயரும், அவருடன் பயணம் செய்த ஒரு பெண் உள்பட மூவரும் தாக்கப்பட்டனர். இத் தாக்குதலில் ரிச்சர்டுசன் உயிரிழந்தார். இதன் காரணம் சத்சுமா (Satsuma) பிரபு பயணம் செய்தபோது, வழியில் சென்றுகொண்டிருந்த ரிச்சர்டுசன், தமது குதிரையினின்றும் இறங்கி, வணங்கி, வழிவிடவில்லை என்பதாகும். இச் செயலை யோஹோஹாமாவில் தங்கியிருந்த அந்நியர்கள் அனைவரும் கண்டித்தனர். 1863-ல் ஆங்கில அரசு ரிச்சர்டுசனின் விவகாரத்தைக் குறிப்பிட்டு, கோரிக்கை ஒன்றினை அனுப்பியது. இக் கோரிக்கையில் ஓர் இலட்சம் பவுன்கள் இழப்பீடாகவும், ரிச்சர்டுசனின் கொலையாளிகள் கண்டுபிடிக்கப்பட்டு ஆங்கில அதிகாரிகளின் முன்னிலையில் தண்டிக்கப்படவேண்டும் என்றும் குறிப்பிடப்பட்டிருந்தது. இக் கோரிக்கைகளை ஷோகன் ஏற்றுக்கொள்ள முன்வந்தாலும், பேரரசரும் தொகுகாவாக்களின் எதிரிகளும் ஏற்றுக்கொள்ள முன்வரவில்லை. மாறாக அந்நியர்களை வெளியேற்ற மிகாடோ முயற்சியெடுத்தார். இந்நிலையில் ஆங்கிலக் கப்பற்படை சத்சுமா பிரபுவின் கோட்டையான காஹோஷிமா (Koghoshima) நகரைத் தாக்கி, பெரும் அழிவை ஏற்படுத்தியது. இதன் பின்னர் சத்சுமா பிரபு ஆங்கிலேயருடன் சமாதானம் செய்து கொண்டார். ஆங்கிலப் போர்க்கப்பல் ஒன்றனையும் விலைக்கு வாங்கிக்கொண்டார். இதேபோல, மற்றொரு பிரபுக் குடும்பமான 'சோஷு' (Choshu) படையினரும் அந்நிய எதிர்ப்பியக்கத்தில் ஈடுபட்டனர். ஹொன்ஷுத் தீவிலிருந்த அந்நியரை வெளியேற்ற சோஷு பிரபுக்கள் முயன்றனர். இதன் விளைவாக இங்கிலாந்து, பிரான்சு, அமெரிக்கா, டச்சு ஆகிய நாட்டினர் ஒன்றாக இணைந்து, சோஷு பிரபுக்களின் படை வலிமையை ஒடுக்கிப் பணியச் செய்தனர். சத்சுமாவைப் போலவே, சோஷுக்களும், அந்நியர்களின் படை வலிமையை உணர்ந்து சமாதானம் செய்து கொண்டனர்.

ஜப்பான் மேலையருக்குத் திறந்துவிடப் பட்டதிலிருந்து ஜப்பானிய வரலாற்றில் வியத்தகு மாற்றங்கள் நிகழ்ந்தன. இரு

நூற்றைம்பது ஆண்டுகளுக்கும் அதிகமாக ஜப்பானை ஆண்ட தொகுகாவா ஷோகன்கள் பதவியிழந்தனர். இத்துடன் ஏழு நூற்றாண்டுகளுக்கும் அதிகமாக ஜப்பானில் நிலவிவந்த ஷோகன் களின் ஆட்சி மறைந்தது; ஜப்பானில் இருந்த இரட் டையாட்சி முறையும் ஒழிந்தது. மிகாடோ, தாம் இதுகாறும் இழந்திருந்த அதிகாரத்தை மீண்டும் பெற்றார். மேலையர்களை வெறுத்தொதுக்கிய ஜப்பானியர், அவர்களை வரவேற்க ஆரம் பித்தனர். சமூக, பொருளாதார, அரசியல் மாற்றங்கள் விரைந்து ஏற்பட்டன. இத்தகு மாற்றங்களுக்கு எல்லாம் காரணமாக இருந்த மேஜி புரட்சி தோன்றியது.

# 3. மேஜிபுரட்சி (அல்லது) மிகாடோவின் முன்னிலை மீட்சி—1868

ஜப்பானின் தெய்விகப் பேரரசர்கள் 1192-லிருந்து 1867 வரை தங்களுடைய அதிகாரங்களனைத்தையும் பறிகொடுத்து விட்டு, கியாத்தோ நகரில், வெறும் பொம்மைகளைப் போல வாழ்ந்து வந்தனர். இவ்விடைக்காலத்தில் அரசு அதிகாரங்கள் அனைத்தும் ஷோகன்கள் எனப்பட்ட படைக் குலத்தவரிடம் நிலைத்திருந்தது. ஆனால், 1868-ல் இந்நிலை மாறியது. ஷோகன் பதவி ஒழிந்தது. மிகாடோ மீண்டும் தமது பண்டைய முழு அதிகாரங்களையும் பெற்று, எவ்விதக் கட்டுப்பாடுமின்றி எதேச்சையாக ஆளத் தொடங்கினார். இந் நிகழ்ச்சியையே மிகாடோவின் முன்னிலை மீட்சி (Restoration) என்கிறோம். இவ்வாறு பண்டிருந்த உரிமையைத் திரும்பவும் பெற்று, ஆளத் தொடங்கிய முதல் மிகாடோ முட்சுஹிதோ (Mutsu Hito) ஆவார். இவரை 'மேஜி மாமன்னர்' என்னும் சிறப்புப்பெயரால் அழைக்கின்றனர். 'மேஜி' என்ற சொல்லுக்கு 'ஒளி பொருந்திய' அல்லது 'தெய்விகத்தன்மை வாய்ந்த' என்பது பொருளாம். இவருடைய ஆட்சி மக்கள் நலம் நாடும் நல்லாட்சியாக அமைந்ததால் இவரை மக்கள், 'ஒளி பொருந்திய மாமன்னர்,' 'தெய்விகப் பேரரசர்' என்றெல்லாம் போற்றினர். இவர் தமது ஆட்சிக் காலத்தில் அரிய பல சீர்திருத்தங்களைச் செய்து, ஜப்பானை ஐரோப்பியமயமாக்கி, உலகில் சிறந்து நின்று, நவீன முறையில் மேம்பாடு அடைந்து, வல்லரசுகளாகத் திகழும் நாடுகளுள் ஒன்றாக ஜப்பானை உருவாக்கினார். இவ்வாறு இவருடைய காலத்தில் ஏற்பட்ட புதிய மாற்றத்தைக் குறிப்பிடவே இவரது காலத்தை 'மேஜி சகாப்தம்' (Meiji Era) என்று பெருமையுடன் குறிப்பிடுகின்றனர். இம் முன்னிலை மீட்சி ஜப்பானில் ஏற்படுவதற்கான காரணங்களை இனிக் காண்போம்.

(1) மிகாடோவின் முன்னிலை மீட்சிக்கான முதல் காரணத்தை, தொகுகாவா ஷோகன்களே உருவாக்கியிருந்தனர். தொகுகாவாக்

களின் முதல் மூன்று ஷோகன்களின் ஆட்சியில் ஜப்பானிலிருந்த அந்நிய நாட்டினர் அனைவரும் வெளியேற்றப்பட்டனர். ஜப்பானிய படைக் குலத்தினரை அடக்கி, அவர்களைத் தங்களது நேரடிக் கண்காணிப்பில் வைத்திருந்தனர். அதனால் உள்நாட்டில் நீண்ட காலத்திற்கு அமைதி ஏற்பட்டது. ஆட்சி முறையும் சீர்திருத்தி அமைக்கப்பட்டதால் அரசு செவ்வனே நடைபெற ஏதுவாயிற்று. இத்தகைய சூழ்நிலையில் பின்னர் பதவியேற்ற தொகுகாவா ஷோகன்கள் அரசியல் குழப்பங்கள் ஏதுமற்ற நிலையில் உல்லாச வாழ்க்கையை மேற்கொண்டனர். சிறிதுசிறிதாக அவர்களது கட்டுப்பாடுகள் தளர்ந்தன.

இதனால் தொகுகாவாப் பரம்பரையின் பகைவர்களாக இருந்த மாநிலப் பிரபுக்கள் ஊக்கம் பெற்றனர். தொகுகாவா ஷோகன்களின் திறமை சரிய ஆரம்பித்தபோது, இப் பிரபுக்கள் மறைமுகமாகத் தங்கள் திறமையினை வளர்த்துக்கொண்டு, ஷோகன்களின் ஆட்சியைக் கவிழ்ப்பதற்கான சூழ்நிலையை எதிர் நோக்கியிருந்தனர்.

போர்த்தொழிலையே தங்களது குலத் தொழிலாகக் கொண்டிருந்த சாமுராய் வீரப் பரம்பரையினரும், தொகுகாவா ஷோகன்களின் அமைதியான ஆட்சியில் உல்லாச வாழ்க்கையை மேற்கொள்ள ஆரம்பித்தனர். கலைகளும், கல்வியும் வளர்ந்தன. தொகுகாவா இயேயேசு காலத்தில் தொடங்கப்பெற்ற ஜப்பானிய வரலாற்றுத் தொகுப்பு முடிவடைந்தது. ஏராளமானவர்கள் பண்டைய ஜப்பானின் வரலாற்றை ஊன்றிப் படிக்க ஆரம்பித்தனர். ஜப்பானின் பண்டைய வரலாற்றைப் படிக்க ஆரம்பித்தவர்கள், 1192ஆம் ஆண்டிற்கு முற்பட்ட மன்னர்களின் தனியாட்சி முறைகளையும், மக்களுக்கும், மாமன்னருக்குமிடையே இருந்த தெய்விகப் பற்றையும் கண்டு வியந்தனர். இவ்வாண்டுக்குப்பின்னர் எழுந்த ஷோகன்கள், மன்னரின் அதிகாரத்தை எந்த அளவுக்கு அபகரித்துக்கொண்டு, தெய்விக மன்னரைத் தங்களின் கைப்பாவையாக்கிவிட்டனர் என்பதையும் உணர்ந்தனர். இந்த ஷோகன்களின் பரம்பரை மக்களைச் சுரண்டி வாழும் தன்னலமிகளின் பரம்பரையே என்பதனையும் தெளிந்தனர். இந்த ஷோகன்களே ஜப்பானில் ஏற்பட்ட எண்ணற்ற உள் நாட்டுக் கிளர்ச்சிகளுக்கும், போர்களுக்கும் காரணமானவர்கள். ஷோகன்கள், பெருநிலப் பிரபுக்கள், அரசவைப் பிரபுக்கள், மாநிலத் தலைவர்கள், ஆகியோரின் பொறாமையும், தன்னலமும், நாடெங்கிலும் தலைவிரித்தாடியதை மாணவர்களும், அரசியலறிஞர்களும், மக்களும் கண்கூடாகக் கண்டு, இவற்றிற்கொரு முடிவுகாண வேண்டு

மெனில், மக்கள் நலம்நாடும் நல்லாட்சி ஏற்படுத்துவதைத் தவிர வேறு வழியில்லை என்னும் முடிவுக்கு வந்தனர்.

ஜப்பானில் ஏற்பட்ட ஷிண்தோ சமயத்தின் மறுமலர்ச்சியும், மன்னரின் தெய்விகத் தன்மையை வலியுறுத்தியது. பேரரசரையும், இயற்கையையும், இறந்தவர்களையும் போற்ற வேண்டும் என்பது இம் மதத்தின் போதனையாகும். சூரியனின் நேரடி வாரிசாகத் தோன்றிய ஜப்பானியப் பேரரசர்களைச் சக்தியற்ற சாயல்களாக்கிவிட்டு, உருவங்களாக உலாவித்திரிகின்ற உலுத்தர்களான தன்னலவாதிகளை ஒழித்தே ஆகவேண்டும் என்ற ஒருமித்த உணர்ச்சி நாடெங்கிலும் அதிகமாகப் பரவ, இந்த ஷிண்தோ சமயத்தின் மறுமலர்ச்சி உதவியது. ஜப்பானிலேற்பட்ட பஞ்சங்களும், பட்டினிகளும், கொள்ளை நோய்களும், கொடிய துன்பங்களும், ஐரோப்பியரின் நுழைவும், அவர்களின் கிறித்தவ சமயமும், புனிதப் பேரரசரை மறந்து, புல்லியராகிய ஷோகன்களைப் போற்றியதால்தான் எனப் படித்தோரும் பாமரரும் நம்பினர்.

அத்தகைய மன்னராட்சிக்குத் தடையாயிருக்கும் எத்தகைய சக்திகளையும் ஒழித்தே ஆகவேண்டுமென மக்கள் முடிவுசெய்தனர். இத் தருவாயில் நிலப்பிரபுத்துவ முறையும் நலிந்து நின்றது. பிரபுக்களும் அவரது குடும்பத்தினரும் உல்லாச வாழ்வு நாடி எதோ நகரிலேயே வாழ்ந்தனர். இவர்களின் ஆடம்பரச் செலவுகள் அதிகமாயின. விளைவிக்கின்ற உற்பத்திப் பொருள் முழுவதையுமே நிலப் பிரபுக்களுக்குக் கொடுத்துவிட்ட நிலையில் உழவனும் வறியனுன். எதோ நகரில் வாழ்ந்த பிரபுக்களும் தங்களின் ஆடம்பரச் செலவுகளுக்காகக் கடன்வாங்க ஆரம்பித்தனர். எதோ போன்ற பெரிய நகரங்களில் வணிகர்கள் கொள்ளை இலாபம் சம்பாதித்துச் செல்வந்தர்கள் ஆனுர்கள். இவ் வணிகர்களே பிரபுக்களுக்குக் கடன் வழங்க முன்வந்தனர். செல்வச் செருக்குற்ற வணிகர்கள் பிரபுக்களை மட்டுமல்லாது, மறவர் குலத்தினரான சாமுராய்களையும் தங்கள்பால் ஈர்க்கின்ற வலிமை பெற்றனர். ஜப்பானிய பொருளாதாரம் இத்தகைய செல்வமிக்க ஒருசிலரின் பிடிக்குள் வந்தது. பொருளாதார ஏற்றம் பெற்ற இவ் வணிகர்கள் புதிய சக்தியாக உருவெடுத்தனர். நிலமானிய முறை சீரழியத் தொடங்கியது. தொகுகாவா ஷோகன்கள் கட்டிக்காத்த நிலமானிய முறையை அடிப்படையாகக் கொண்ட பொருளாதார முறை சரியத் தொடங்கியது.

இத்தகைய நிலையில் அந்நியர்கள், அமெரிக்க பெர்ரியின் தலைமையில் ஜப்பானில் வலிந்து நுழைந்தனர். தங்கள் படைவலிமையைக் காட்டி, ஜப்பானியரைப் பணியவைத்த அந்நியரை

ஜப்பானியர் வெறுத்தனர். அந்நியர்களை வெறுத்த ஜப்பானியர், அதற்குக் காரணமாய் இருந்த திறமையற்ற ஷோகன்களையும் வெறுத்தனர். தங்கள் தெய்வத் திருநாட்டை அந்நியர்களுக்கு ஷோகன்கள் விட்டுக்கொடுத்துவிட்டதாகவே எண்ணி மனம் புழுங்கினர். தொகுகாவா குலத்தின் எதிரிகளான சத்சுமா, சோஷு குலத்தினர் இவ்வாறு மக்களிடையே வளர்ந்துவிட்ட வெறுப்பைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு, தொகுகாவாக்களை ஒழிப்பதற்குத் திட்டமிட்டனர். மேலும் அந்நியர்களுடன் செய்துகொண்ட உடன்படிக்கைகளும், நாட்டைக் காக்கின்ற வீரமறவர் குலத்தினரின் கையாலாகாத தன்மையும், ஷோகன்களின் திறமையின்மையின் சான்ருக வெளிப்பட்டன.

தளபதி பெர்ரியும், அவரைப் பின்பற்றி வந்த அந்நியப் படைகளும் ஜப்பானியக் கதவுகளைத் திறக்க முற்பட்டபோது, தொகுகாவா ஷோகன், எந்த முடிவையும் எடுத்து, செயல் படுத்தும் திறமையற்ற நிலையில் மிகாடோவின் ஆலோசனையை நாடினுர். ஷோகன்களின் எழுநூறு ஆண்டுக்கால ஆட்சியில் மிகாடோவின் ஆலோசனையை நாடியது இதுவே முதல் முறையாகும். இது தொகுகாவா ஷோகன்களின் உறுதியற்ற நிலையை மேலும் தெளிவாக்கியது. இந்நிலையைப் பயன்படுத்திக்கொண்ட தொகுகாவா குலத்தினரின் எதிரிகள், ஷோகன்களுக்கு எதிராகவும், மாண்புறு மன்னரின் அதிகாரத்தினை நிலைப்படுத்தி, ஜப்பானியரின் பழம்பெருமையை மீண்டும் நிலைநாட்டவும் புரட்சிகளில் ஈடுபடத் தயாராயினர்.

இத்தகைய நிலைமைகள் ஜப்பானில் உருவாகிக் கொண்டிருந்த போது, 120ஆம் மிகாடோவான கொமாய் (Komei 1847-1867) 1867ஆம் ஆண்டு, பிப்பிரவரித்திங்களில் திடீரென்று காலமானுர். அவருக்குப்பின் பதவியேற்ற அவரது மகன் 'மேஜி மாமன்னர்', தம் தந்தையைப் போலல்லாமல் ஐரோப்பியர்களை வரவேற்கத் தொடங்கினுர். 1858ஆம் ஆண்டிலிருந்து 1866வரை ஷோகனுயிருந்த இயேமொச்சி என்பவரும் 1866ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் காலமானுர். அவரது மைந்தரான யொஷிஹிசா (Yoshihisa) ஷோகன் பதவியேற்ருர். இவரும் தம் தந்தையின் கொள்கைகளிலிருந்து மாறுபட்டுக் காணப்பட்டார்.

1867ஆம் ஆண்டுத் தொடக்கத்திலேயே தொகுகாவாக்களை எதிர்த்து ஜப்பானியர்புரட்சி செய்தனர். 'பேரரசரைப் பெருமைப் படுத்து, கொள்ளைக் கூட்டத்தை வெளியேற்று' (Son-O. Jo. I Revere the Emperor and Expel the Barbarians) போன்ற முழக்கங்கள் விண்ணை முட்டின. 1867-அக்டோபரில் தோஷா என்னும்

மானியத்தின் பிரபுவான யோதோ (Yodo) என்பவர் ஷோகனிடம் ஒரு நீண்ட விண்ணப்பத்தைக் கொடுத்தார். அதில், 'ஜப்பானை ஷோகன்—மிகாடோ ஆகிய இருவர் அதன் கண்ணாகவும், காதாகவும் இருந்து ஆளுகின்றனர்; ஆனால், அக் கண்ணும் காதும் எதிரெதிர்த் திசைகளை நோக்கிச் செயல்படுவதால் உடலாகிய ஜப்பான் பல இன்னலுக்குள்ளாகின்றது. எனவே ஷோகன் தமது பதவியை மிகாடோவிடம் ஒப்படைத்து விலகினால் ஒரே அரசால் ஆளப்படும் ஜப்பான், மற்ற நாடுகளுக்கிணையாக வாழும்' என்றார். இதற்குமுன் மிகாடோ அயலாரை வெளியேற்ற மக்கள் குரலை மதிக்கும்படி ஷோகனுக்கு உத்தரவிட்டார். ஷோகன் மக்களின் கிளர்ச்சிக்கும், அயலாரின் போர்க் கருவிகளுக்குமிடையில் சிக்கி, வேறுவழியின்றி யோதோ பிரபுவின் விண்ணப்பத்தை ஏற்று, 1867ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 14ஆம் நாள் தமது பதவியைத் துறந்தார். இவ்வாறு ஏறத்தாழ எழுநூறு ஆண்டுகளாக இருந்த ஷோகன்பதவியும், இரட்டையாட்சியும் ஜப்பானில் மறைந்தன. இனி, அதிகாரங்கள் அனைத்தையும் பேரரசரே மேற்கொள்ள ஏற்பாடு செய்யப்பட்டது. ஷோகன் பதவி விலகிய பின்னர், மேஜி மாமன்னர் முட்சுஹிதோ 23—3—1868-ல் முதன் முறையாகத் தம் அரியணையில் அமர்ந்து அரசோச்ச முற்பட்டார். இந் நிகழ்ச்சியையே 'முன்னிலை மீட்சி' என குறிப்பிடுகின்றனர். இந் நிலைக்குப் பின்னரும் மேஜி மாமன்னர் தன்னிச்சைபோல, முழு அதிகாரத்துடன் தனித்தாள முடியவில்லை. அதற்கு இரு காரணங்களைக் கூறலாம். ஒன்று அவர் பதினைந்தே வயது நிரம்பிய இளைஞனாக இருந்ததால், இதுவரையில் பல நூற்றாண்டுகளாக ஆட்சியதிகாரங்களை ஆண்டனுபவித்து வந்த படைக் குடும்பத்தினரின் ஆலோசனைகளும் பேருதவிகளும் தேவைப்பட்டன. இன்னமும் பல பெரிய அதிகாரிகளாகவும், ஆட்சிபீடத்தின் தூண்களாகவும் விளங்கிநின்ற படைக்குடும்பத்தினர் தங்கள் சுகபோகங்களைவிட்டுத் திடீரென விலகிக் கொள்ளவுமில்லை. இரண்டாவதாக தொகுகாவாக்களை அடியோடு ஒழித்துவிட்டு, அவர்கள் ஆண்டனுபவித்த பதவிகளையும், செல்வாக்கினையும் பெறவேண்டுமென்று கிளர்தெழுந்த மேற்கு ஜப்பானியக் குடும்பங்களான சத்சுமா, சோஷு, தொஸா, ஹைசன் ஆகியவைகள் அதிகாரங்களைக் கைப்பற்றிக் கொண்டு, மேஜியின் ஆட்சிக்கு இடையூறுகளாய் இருந்தன. படிப்படியாக இத்தகைய இடையூறுகளைக் களைந்து, மேஜி மாமன்னர் ஜப்பானிய வரலாற்றில் ஒரு புதிய சகாப்தத்தைத் தொடங்கினார். இதுவே 'மேஜி சகாப்தம்' என்பதாகும்.

**மேஜி புரட்சி—சிறு விளக்கம்**

1868-ஆம் ஆண்டு ஜனவரி மாதம், ஜப்பானிய வரலாற்றில் சிறப்புமிக்க பகுதியைத் துவக்கிய காலமாகும். அப்போதுதான் இருநூற்றைம்பது ஆண்டுகளுக்கும் அதிகமாக, தன்னிகரற்றுச் செங்கோல் செலுத்திவந்த தொகுகாவா பரம்பரையைச் சேர்ந்த ஷோகன்களின் ஆட்சி வீழ்ந்தது. 'தெய்வத் திருமகன்' என்று ஜப்பானிய மக்களால் போற்றப்படுகின்ற 'மிகாடோ' கிட்டத்தட்ட எட்டு நூற்றாண்டுகளுக்குப் பின்னர் அரசியல் அதிகாரம் முழுவதும் கைவரப் பெற்றார். 'காமக்குரா ஷோகன்களின்' ஆட்சியினின்று இக்காலம் வரை பேரரசர் பெயரளவில் மட்டும் ஆட்சித்துறைத் தலைவராகவும், உண்மை அதிகாரமனைத்தும் ஷோகன்களிடமும் இருந்த இரட்டையாட்சி முறை முழுவதுமாகமாறி, அதிகாரம் அனைத்தும் மன்னரிடத்திலேயே நிலைத்தது. மேலை நாட்டவரின் ஆபத்து மிகுந்த இந்தக் காலத்தில் ஜப்பானைக் காக்கின்ற திறமை படைத்தவராக, மக்களை நல்வழிப்படுத்தும் ஆற்றல் மிக்கவராக, பேரரசர் மட்டுமே விளங்கினார். மேலை நாட்டவரின் தொடர்பையும், அதனால் ஏற்பட்ட விளைவுகளையும்கண்டு அஞ்சிய ஜப்பானியரின் முதல் எண்ணம் 'பழைய நிலைக்குத் திரும்புக' (Return to the Past) என்பதாகும். இந்நிலைதான் 'முன்னிலை மீட்சி' அல்லது 'பண்டுரிமை மீட்சி' எனப்படுகின்றது. ஆதிக்கப் போட்டிக்கு அப்பாலும், அரசைவிட உயர்ந்தநிலையிலும் விளங்கிய பேரரசரிடம் மீண்டும் அரசியல் அதிகாரங்கள் அனைத்தும் குவிக்கப்படுகின்ற நிலையே 'முன்னிலை மீட்சி' என வழங்கப் பெறுகின்றது.

'முன்னிலை மீட்சி' என்பது அதிகார மாற்றத்தைமட்டும் சுட்டிக் குறிப்பிடவில்லை. ஆரம்ப நிலையில் திறமையற்ற ஷோகன்களின் ஆட்சியை ஒழிக்க வேண்டி, இளவரசர்கள், பிரபுக்கள், டைமியோக்கள், அவரைச் சார்ந்தவர்கள் என அனைவருமாக இணைந்து செயல்பட்டாலும், இறுதியில் வரலாற்றுச் சிறப்புமிக்க சமூக பொருளாதார அடிப்படை மாற்றங்களுக்கும், முன்னேற்றங்களுக்கும் காரணமாக இருந்திருக்கின்றது. பழமை விரும்பிகளான ஷோகன்களை அகற்றுவதற்காக எழுந்த புரட்சி வெள்ளம், மேலை நாட்டுப் பாணியில் புதிய ஜப்பானை உருவாக்கும் முயற்சிகளையும் வெளிக்கொணர்ந்தது. உதய சூரியன் நாடு எனப் புகழ் பெற்ற நாட்டில் பழமை இருளை அகற்றி, ஆட்சி அதிகாரம் பரம்பரைச் சொத்து என இறுமாந்திருந்த ஷோகன்களை ஒழித்து, இதுவரை தூசு படிந்து, கேட்பாரற்று, ஒதுங்கிக் கிடந்த மிகாடோவை ஒளி வீசச் செய்தது. புதிய ஜப்பானை உருவாக்கிட, புதிய சமுதாயம் படைக்க, புதிய வரலாறு தொடங்கியது. இதுவே மேஜி புரட்சி அல்லது முன்னிலை மீட்சி எனப்படுகின்றது.

ஜப்பானில் நிகழ்ந்த இந்த முன்னிலை மீட்சியைப் 'புரட்சி' எனக் கருதலாமா என்ற கேள்வியும் எழுகின்றது. ஐரோப்பாவில் ஏற்பட்ட புரட்சிகளையும், அப்புரட்சிகளுக்கான காரணங்களையும், ஜப்பானியப் புரட்சியோடு ஒத்து நோக்கின் பிரெஞ்சுப் புரட்சியைப் போலவோ, ருஷியப் புரட்சியைப் போலவோ ஜப்பானில் மக்கள் வெள்ளமெனப் பொங்கியெழுந்து மாற்றங்கள் கோரவில்லை. ஆனால் ஜப்பானில் அரசியல், சமுதாய மாற்றங்கள் வெகுவாக ஏற்பட்டிருக்கின்றன. அதே நேரத்தில் ஜப்பானிலும் மக்கள் ஓரளவுக்காவது தங்கள் வெறுப்பைக் காட்டியிருக்கின்றனர். விவசாயப் பெருங்குடிமக்களும், வணிகப் பெருமக்களும் கிளர்ந்தெழுகின்ற நிலையில் இருந்தனர். இவர்களின் கிளர்ச்சிகள் ஆங்காங்கே, சிற்சில பகுதிகளில் எழுந்த சிறு குமுறல்களேயாகும். இதனால் ஜப்பானியப் புரட்சியை நடுத்தர மக்களின் புரட்சி என்றும் கூற இயலாது. இப் புரட்சியை வெற்றிகரமாக நடத்தியவர்கள் நடுத்தர மக்கள் அல்லர். படைத்தலைவர்கள், பரம்பரைப் பிரபுக்களான சாமுராய்களே இப் புரட்சியின் தலைவர்கள் ஆவார்கள். இதனால்தான் பிரெஞ்சுப் புரட்சி, ருஷியப் புரட்சியுடன் இதை ஒப்பிட்டு நோக்கப் போதுமான ஒத்த நிகழ்ச்சிகளைக் காண்பது அரிதாகின்றது. மேஜி புரட்சி காலத்தில் ஜப்பானில் பரவலாகக் காணப்பட்ட பதட்ட நிலைக்குக் காரணம் அந்நியரின் வருகையும், அவர்கள் ஜப்பானில் காலடி எடுத்துவைத்த முறையின் அடிப்படையில் எழுந்த அச்சமுமேயாகும்.

மேஜி புரட்சியை வெற்றிகரமாக நடத்தி, ஜப்பானிய வரலாற்றை பொன்னொளி பெறச் செய்த இப் புரட்சித் தலைவர்களின் நோக்கம் யாது? ஜப்பானிய மாமன்னர்மீது இவர்கள் கொண்டிருந்த அளவற்ற பக்தியா? அல்லது மேலை நாட்டுப் பாணியில் தங்களது தாயகத்தை மாற்ற வேண்டும் என்ற புதுமைக் கருத்துகளின்மீது இவர்கள் கொண்ட மோகமா? அல்லது உரிமைகள் பறிக்கப்பட்டு நசுக்கப்பட்ட நடுத்தரமக்களின் குமுறலா? இவைகளுக்கு விடை காணப்புகின், ஐரோப்பிய வரலாற்றின் அடிப்படையில் ஜப்பானிய வரலாற்றை நோக்குவது போலாகும். இது ஜப்பானிய முறைக்குப் பொருந்தாது.

முன்னிலை மீட்சி இயக்கத்தினை முன்னின்று நடாத்திய செயல் வீரர்கள் நூற்றுக்கும் சற்று அதிகமானவர்கள்தாம். அவர்களின் உள்ளக் கிடக்கைகள், உயர்ந்த எண்ணங்கள், அவ்வெண்ணங்களைச் செயல்படுத்தும் உறுதி, ஆகிய இவைகளை நோக்குமிடத்து, இப் புரட்சியின் அடிப்படை நோக்கங்களையும் உணர முடியும். அரசவைப் பிரபுக்களான சத்சுமா, சோஷு, தோஸா, ஹைசன்

போன்ற மேற்கு ஜப்பானியக் குடும்பங்கள் முழுப் பங்கேற்றன. இவர்கள் அனைவரும் தொகுகாவா பரம்பரையின் பகைவர்கள். இவர்கள் அனைவருமே கற்றறிந்தவர்கள். ஒருசிலர் மேல்நாட்டுக் கல்வியும் பயின்றவர்கள்; படைத்துறை, அரசுதுறை ஆகிய பணிகளிலும் அனுபவமிக்கவர்கள்; நாட்டுப்பற்றுமிக்கவர்கள்; சமுதாயப் பிணிகளை உணர்ந்து, அவைகளைக் களைய ஆர்வம் கொண்டவர்கள். கன்பூசிய, ஷிண்தோ மதக் கருத்துகளை உணர்ந்து அதன் வழி நடப்பவர்கள். மேலைநாட்டுக் கல்வி பயின்ற இவர்களில் சிலர், மேலைப் பண்பாடுகளை வெறுக்கும் தீவிரவாதிகளாகவும் இருந்தனர். ஆனால் தீவிரவாதிகளில் பலர் புரட்சியின் ஆரம்ப காலத்திலேயே மரணமடைந்தனர். இட்டோ பிரபு (Marquis Ito), ஒக்குபோ (Okubo), சைகோ (Saigo) போன்றோர் மேலைப் பண்பாட்டின் மேன்மையை உணர்ந்திருந்தனர்; அப் பண்பாட்டினைப் பின்பற்றி நாட்டை முன்னேற்றும் எண்ணங் கொண்டிருந்தனர். இத்தகைய மனமாற்றம் அநேகமாகப் புரட்சியாளர்கள் அனைவரிடமும் காணப்பட்டது. இதனால்தான் 'முன்னிலை மீட்சி' அல்லது 'பழமையை நாடுதல்' என்று ஆரம்பித்தவர்கள் சீர்திருத்தச் செம்மல்களாக மாறினர். புதிய ஜப்பான் உதயமானது.

சத்சுமா, சோஷு போன்ற சிறப்புவாய்ந்த அரசவைப் பிரபுக்களின் கூட்டிணைவால்தான் 1868-ல் ஏற்பட்ட புதிய ஆட்சி தோன்றியது. தோஸா, ஹைசன் போன்ற வலிமை மிக்க குழுக்களும் இக்கூட்டிணைவில் பின்னர்ச் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். இதை 'Satcho Tohi' என்ற சொற்றொடர் குறிப்பிடுகின்றது. சத்சுமா, சோஷு, தோஸா, ஹைசன் என்ற நான்கு குழுவினரைக் குறிக்கும் முதல் எழுத்துக்களின் கோவையே 'Satcho Tohi' எனப்படுகிறது. இதைக் குழு ஆட்சி (Oligarchy) என்றும் கூறலாம். ஆனால் இக் குழுவினர், பிரபு குடும்பங்களின் ஆட்சியை மாற்றி, அரசியலமைப்பிற்குட்பட்ட மன்னரின் ஆட்சியை உருவாக்கி வலுப்படுத்த வேண்டுமென்ற எண்ணத்தில்தான் செயல்பட்டனர். அதற்கான முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன.

1868-ல் தொகுகாவா ஷோகன்களிடமிருந்து பறிக்கப்பட்ட பகுதிகள் மைய ஆட்சிக்குட்பட்ட பகுதிகளாகப் பிரிக்கப்பட்டன. அப் பகுதிகளின் ஆளுநர்களாக, மேலை ஜப்பானிய பரம்பரையில் வந்த எழுச்சி மிக்க இளைஞர்கள் அமர்த்தப்பட்டனர். மைய அரசின் கட்டுப்பாட்டிற்கிணங்க, பகுதிகளனைத்திலும் ஒரே மாதிரியான ஆட்சியமைப்பு ஏற்படுத்த வேண்டுமென்ற கட்டளையை ஏற்றுச் செயல்படுத்தினர். இதன் பிறகு மேலும் மேலும் அரசியல் மாறுதல்கள் ஏற்பட்டன. பழமை விரும்பிகள்,

தன்னிச்சையாக, குழு முறையில் ஆட்சிசெய்து பழக்கப்பட்டவர்கள்; முக்கிய பொறுப்புகளிலிருந்து தாங்களாவே விலகினர். சத்சுமா பரம்பரையினர் மட்டும் அதிக செல்வாக்குப் பெற்று விளங்கினர். பின்னர் குழுத் தலைவர்கள் அனைவரும் ஒன்றுகக் கூடித் தங்களது சிறப்புரிமைகளை விட்டுக் கொடுக்கவும், மத்திய அரசை வலுப்படுத்தவும் கோரிக்கைகளை நிறைவேற்றினர். அனைத்துக் குழுக்களும் மைய அரசின் மேலாண்மையை வலிந்து ஏற்றுக் கொண்டன. அடுத்த நிகழ்ச்சியாக தைமியோக்கள் இதுகாறும் தனித்தனியாக உருவாக்கி வைத்திருந்த படைகளைக் கலைக்கவும், அப்படையினர் அனைவரும் அரசு படையில் பணியேற்றுக் கொள்ளவும் வழிவகைகள் மேற்கொள்ளப்பட்டன. தைமியோக்களும் பண்டுதொட்டு அனுபவித்துவந்த இந்த படைச் சிறப்புரிமையையும், தாங்களாகவே விட்டுக் கொடுக்க வேண்டியதாயிற்று. ஏராளமான தைமியோக்களுக்கு ஓய்வூதியம் வழங்கப்பட்டது. அவர்களின் செல்வாக்கிற்குட்பட்ட அரசுகளை ஏற்றுக் கொள்ளும் போதும், படைகளைக் கலைக்கும் போதும் மைய அரசு நிதானமாக, சிந்தனைத் தெளிவுடனும் செயலாற்றி, மிகவும் சிக்கலான இப் பிரச்சினைகளுக்கு மிகவும் எளிதாக, காழ்ப்பு உணர்ச்சியின்றி முடிவு கண்டது வியப்பிற்குரிய செயலாகும். அந்தந்த அரசுகளின் சொந்தக் கடன்களையும், புழக்கத்திலிருந்த நாணய முறைகளையும் கூட அப்படியே மைய அரசு ஏற்றுக்கொண்டது, அதன் செயலாற்றலுக்கு மேலும் ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். தொகுகாவா ஷோகன்களின் கடைசி ஷோகனான தொகுகாவா யொஷிஹிசா என்பவருக்கும் பெருந்தன்மையுடன் ஓய்வூதியம் வழங்கப்பட்டது. இவ்வாறாக அந்நியர் வரவினால் ஏற்பட்ட ஆபத்து நிலை ஜப்பானியருக்கு வரப்பிரசாதமாக அமைந்தது. புதிய ஜப்பானை உருவாக்கும் திறம் பெற்ற பல தலைவர்கள் அயராது தன்னலம் கருதாது உழைக்க முன் வந்தனர். ஏற்றமிகு ஜப்பான் உருவாகத் தடையேதும் இனி இல்லை என்ற நிலை ஏற்பட்டது.

# 4. மேஜி புரட்சியின் விளைவுகள் – புதிய ஜப்பான் உருவாதல்

1868ஆம் ஆண்டு மேஜி புரட்சி ஏற்பட்டது. ஜப்பானிய வரலாற்றில் ஒளிமிக்க ஓர் அத்தியாயம் தோன்றியது. இதுவரை அரசப் பதவியைப் பெற்றிருந்த தொகுகாவா ஷோகன்கள் பதவி யிழந்தனர். 'சூரியக் கடவுளின் வாரிசு', 'தெய்வத் திருமகன்,' 'புனிதத் தன்மையின் உருவகம்' என்றெல்லாம் ஜப்பானிய மக்க ளால் நம்பப்பட்டு, அவர்களின் வணக்கத்திற்குரியவராக ஏற்றுக் கொள்ளப்பட்ட 'மிகாடோ முட்சுஹிதோ', இதுவரை இழந்தி ருந்த அரசியல் அதிகாரங்கள் அனைத்தையும் மீண்டும் பெற்றார். இதைத்தான் 'பண்டுரிமை மீட்சி' என்றும், 'முன்னிலை மீட்சி' என்றும் ஜப்பானிய வரலாற்றில் சொல்லுகின்றனர். மிகாடோ வின் முன்னிலை மீட்சிக்காக முயன்று உழைத்த ஜப்பானியத் தலைவர்கள் ஆட்சி பொறுப்பை ஏற்றுத் தேவையான அரசியல் மாற்றங்களைத் திட்டமிட்டுச் செயல்படுத்த முனைந்தனர். அவர்கள் இரண்டு முக்கியக் குறிகோள்களைக் கொண்டிருந்தனர். முதலாவது, ஆட்சித் துறையை வலுப்படுத்தி, மக்களின் ஆதர வைப் பெறுதல்; இரண்டாவது, நிலையான உறுதிமிக்க ஆட்சியமை உருவாக்கி, நீண்டகால வளர்ச்சித் திட்டங்களைத் தீட்டிச் செயல் படுத்துதல் ஆகும்.

இத் திட்டங்களை உருவாக்கும்போதும் அவர்கள் விழிப்புடன் இருக்க வேண்டியது அவசியமாயிற்று. ஏனெனில் மேலைநாட்டு அரசியல் அமைப்புகளைக் கற்றுத் தேர்ந்து, நம்பிக்கை கொண் டவர்கள் மேலைநாட்டு அரசியல் முறைகளை ஜப்பானில் புகுத்தி, மக்களாட்சியைத் தோற்றுவிக்கும் விருப்பம் கொண்டனர். இதற்கு மாறாக ஜப்பானியப் பழமை விரும்பிகள் பழைய ஜப்பானிய எதேச்சாதிகாரமுறைதான் ஜப்பானியரை ஒருங் கிணைத்து, வலிமை படைத்த அரசியல் அடித்தளத்தை உருவாக்கப் பெரிதும் பயன்படும் என்று வாதிட்டனர். ஜப்பானிய

மக்களிடையே விரவிக்கிடந்த இவ்விரு மாறுபட்ட கருத்துகளை உணர்ந்த அரசியல் தலைவர்கள், எந்த ஒரு கருத்தையும் அப்படியே ஏற்றுக்கொள்ளாது, இரண்டையுமே ஏற்று, பழமைக்கும் புதுமைக்கும் இணைப்புப்பாலம் அமைத்து, அதன்மூலம் வளம்காண முயன்று, வெற்றியும் பெற்றனர். மக்களாட்சித் தத்துவங்களையும், ஏதேச்சாதிகாரக் கருத்துகளையும் இணைத்து, புதிய அரசியல் அமைப்பை உருவாக்கினர். புதிய ஒருமைப்பாட்டைந்த ஜப்பானை உருவாக்கும் பணியில் ஏற்பட்ட முதல் இடர்ப்பாட்டைத் திறமையுடன் கடந்து, ஜப்பானிய மக்களின் பேராதரவைப் பெற்றுப் புகழடைந்தனர்.

**மேஜியின் ஆட்சிமுறை**

1868 ஜனவரியில் மேஜி மாமன்னர் தமது புதிய ஆலோசனைக் குழுவை ஏற்படுத்தினார். ஆட்சித்துறைத் தலைவராக (Sosai) இளவரசர் ஒருவர் நியமிக்கப்பட்டார். அவருக்குத் துணையாக இரண்டு அரசவைப் பிரபுக்கள் நியமிக்கப்பட்டனர். முதுநிலைப் பதவிகள் (Gijo) இளநிலைப் பதவிகள் (Sanyo) போன்றவற்றையும் ஏற்படுத்தினார். முதுநிலைப் பதவியில் பாதிப்பேர் அரசவைப் பிரபுக்களும் (Kuge) பாதிப்பேர் தைமியோ (Daimio) பிரபுக்களும் அமர்த்தப்பட்டனர். இளநிலைப் பதவியில் ஐந்து அரசவைப் பிரபுக்களும் (Kuge) பதினைந்து சாமுராய் (Samurai) வகுப்பினைச் சேர்ந்தவர்களும் நியமிக்கப்பட்டனர். முதுநிலை, இளநிலைக் குழுவினரின் முக்கிய அலுவல் ஆட்சித்துறைக்குச் சீரிய ஆலோசனைகளை வழங்குவதும், நிர்வாகத்துறைப் பொறுப்புகளை ஏற்றுச் செயல்படுத்துவதுமாகும். இப் பதவிகளில் தொகுகாவா ஷோகன்களை எதிர்த்து விரட்டுவதில் தலைமைப் பொறுப்பேற்றிருந்த பிரபுக்களில் பலர் அமர்த்தப்பட்டனர். அநேகமாக மேஜி புரட்சியில் பங்குகொண்ட தலைவர்களில் பெரும்பாலோர் ஏதாவது ஓர் அரசப்பணியேற்றுச் சிறப்படைந்தனர் எனக் கொள்வது மிகவும் பொருந்தும்.

**ஐந்துரிமைக் காப்புறுதிப் பத்திரம் (The Five Article Charter Oath)**

பேரரசர் இரண்டு பேரறிக்கைகள்மூலம் தமது அரசியல் கருத்துகளை மக்களுக்குத் தெளிவாக்கினார். நாட்டுப் பகுதிகள் (Dominon) அனைத்திலிருந்தும் பேராளர்கள் (Delegates) வரவழைக்கப்பட்டனர். அவரது அழைப்பை ஏற்றுக் குழுமிய பேராளர் கூட்டத்தில் தமது முதல் பேரறிக்கையை வெளியிட்டார் (March 1868). அப் பேரறிக்கையில் புதிய ஆட்சிமுறையின் தன்மைகளும், குறிக்கோள்களும் விளக்கப்பட்டன. மக்களின் கடமை

களும், அவர்களின் உரிமைகளும் வரையறுத்துக் கூறப்பட்டன. கலகம் விளைவிக்கும் எண்ணங்கொண்ட பிரபுக்கள் பலரும், உயர் குடியினரும் இத்தகைய நேரடிச் சந்திப்பால் மனம் மாறி, பேரரசரின் தலைமையை விழைந்து ஏற்றுக்கொள்ள முன்வந்தனர். பேரரசர் தமது இரண்டாவது பேரறிக்கையில் ஐந்து காப்புறுதி களை மக்கள்முன் வைத்தார். இது 'ஐந்துரிமைக் காப்புறுதிப் பத்திரம்' (The five article charter oath) என அழைக்கப்படுகிறது. இது 1868ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்கள் ஆறும்நாள் வெளியிடப் பட்டது. இதன் படி:

1. மக்களின் படிநிகராளிகளைக் கொண்ட பொதுச் சட்ட மன்றம் ஒன்று அமைக்கப்படும். இச் சட்டமன்றத்தினர் ஆலோசனைகளை ஏற்று அரசு இனிச் செயல்படும்.

2. நாடு ஒற்றுமைப் படுத்தப்படும். மக்களின் ஒற்றுமையும், நாட்டின் வளமான முன்னேற்றமும் அரசின் முதன்மைப் பணியாக இருக்கும்.

3. தனி மனிதன் தன் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளும் உரிமை வழங்கப்படும்.

4. பழங்காலக் கொடிய வழக்கங்கள், மூட நம்பிக்கைகள், கொடுமைச் செயல்கள் ஒழிக்கப்படும். அதற்குப் பதிலாக மேலை நாட்டுப் பண்பாடுகள், பழக்க வழக்கங்களை மக்கள் ஏற்றுப் பயனடைய வழிவகை செய்யப்படும்.

5. பேரரசு உயர்வுபெறும் வகையில் அறிவியல் அறிவும், செய்லியலும் உலகின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் வரவழைக்கப் பட்டு ஏற்றுக்கொள்ளப்படும்.

இவ்வைந்து உறுதிமொழிகளின் விளக்கம் வருமாறு: "ஜப்பானில் முன்பிருந்த பாசறை அலுவலகம், அரசவை அலுவலகம் போன்ற இருமுனையாட்சி முறையோ, சமுதாயத்தை மேடுபள்ளமாக்கிவிட்ட நிலப்பிரபுத்துவ முறையோ இனி இருக் காது; ஒரே அரசால், ஒரே கோநகரிலிருந்து, ஒரேவிதமான சட்ட திட்டங்களால் நாடு முழுவதும் இனி ஆளப்படும்; அரசவைப் பிரபுக்களும், படைக்குலத்தவர்களும் ஆண்ட பண்டைய நிலை மறைந்து, இனிப் பொது மக்களனைவரும் ஆட்சியில் பங்குபெறும் வண்ணம், அவர்களின் நிகராள்கள் நிரம்பிய சட்ட மன்றங்களின் மூலமாகவே இனி ஜப்பானியர் ஆளப்படுவர்; ஜப்பானியச் சமுதாயம் சாமுராய்கள், வேளாளர்கள், கைவினை

ஞர்கள், வணிகர்கள் ஆகிய நான்கு பிரிவுகளைக் கொண்டு வேறு பட்டு நின்ற நிலைமாறி, இனி எல்லோரும் வேற்றுமையற்ற ஒரே சமுதாய மக்களாய்க் கருதப்படுவர்; அரசவை மன்றம், பொதுசபை மன்றம், உள்நாட்டுத் தலைவர்கள் மன்றம் முதலிய பல நீதி மன்றங்கள் நாட்டில் அமைந்து இனப்பிரிவிற்கும், இடத்திற்கும், தரத்திற்கும் ஏற்றவாறு நீதி வழங்கியமுறை மாறி, 'நீதியின்முன் அனைவரும் சமம்' என்னும் கோட்பாடு ஜப்பானில் இனி நிலவி யிருக்கும்; புதிதாக எழுந்த சாமுராய்க் குலத்தவரான சத்சுமா (Satsuma), சோஷு (Choshu), தொஸா (Tosa), ஹைசன் (Hizen) ஆகியோரின் தனியாட்சியோ, அல்லது தனி அலுவலகமோ இனி ஏற்படாது; அவர்களுக்குச் சமுதாயத்தில் தனிச் சிறப்பும், தனியுரிமையும் வழங்கப்படமாட்டா; அதே சமயத்தில் பதவி நீங்கிய தொகுகாவா குடும்பத்தினரை ஒதுக்கவோ, ஒடுக்கவோ, தண்டிக்கவோ கூடாது; திறமையுள்ள எவரும் தங்கள் திறமைக் கேற்ப எத்தகைய பணியிலும் அமரலாம்; அவர்களுக்கு வாழ் வுரிமையும், தொழிலுரிமையும், மற்ற எல்லாவித உரிமைகளும் அரசால் அளிக்கப்பட்டு, அவற்றைக் காக்கும் பொறுப்பையும் அரசு ஏற்றுக் கொள்கிறது. அயல்நாட்டவரையும், அவர் களுடைய நாகரிகத்தையும், பண்பாட்டையும் வெறுத்து இது வரைத் தனித்திருந்ததால் ஜப்பான் நாட்டிற்கு இதுவரை இழப்பே ஏற்பட்டது; இனி ஜப்பானின் அரசியல், சமய, சமுதாய, பொருளாதார, அறிவியல் வளர்ச்சிகளுக்குத் தேவைப்படும் அறிவும் ஆக்கமும், எந்நாட்டவருடையதாயினும், அவற்றை யேற்க ஜப்பான் ஆவலோடு காத்திருக்கின்றது; இத்தகைய அறிவையும், ஆக்கத்தையும் பன்னாடுகளிலிருந்தும் தேடித்தர ஜப்பான் நாட்டு இளைஞர்களைப் பன்னாடுகளுக்கும் அனுப்பத் தயாராக இருக்கின்றது; எனவே 'எந்த ஜப்பானியனும் அயல் நாட்டிற்குச் செல்லக்கூடாது' என்றிருந்த விதி இன்றுடன் தகர்த் தெறியப்படுகின்றது; இத்தகைய புதியதோர் ஆட்சியை, புதிய சமுதாயத்தை, புதிய ஜப்பானைப் படைப்பதற்கு ஒவ்வொரு ஜப்பானியனும் தனது முந்திய உயர்வு தாழ்வுகளை மறந்து, பிறப்பால், இனத்தால், மொழியால், சமயத்தால், நாட்டால் நாமெல்லாம் ஒருதாய் மக்கள் என்றுணர்ந்து என்னுடைய இப் பேராணையை அன்பாணையாக ஏற்று என்னுடன் ஒத்துழைக்க வேண்டுகிறேன்.''—மேஜி. (தமிழாக்கம்: பேராசிரியர் கோ. தங்கவேலு—ஜப்பானிய வரலாறு—பக்கம் 176-177)

மிகாடோவின் இத்தகைய முயற்சிகளுக்குப் பின்னரும் ஜப்பானில் அவர் எதிர்பார்த்த அளவுக்கு அமைதியும், மக்களின் முழு ஒத்துழைப்பும் கிடைக்கவில்லை. சாமுராய்க் குலத்தவரின்

அதிகார வேட்கை பல குமுறல்களுக்குக் காரணமாய் இருந்தது. இருப்பினும் மிகாடோ தம்முடைய பேராணைகளுக்கேற்பச் சில மாறுதல்களைக் கொண்டு வந்தார். இம் முறையில் பாரம்பரியமாக வந்த சில அரசியல் முறைகளும், அதிகாரப் பிரிவினை, படிநிகராளிகளின் ஆட்சிமுறை பேர்ன்ற சில புதிய மேலைநாட்டு அரசியல் கொள்கைகளும் பின்னிப் பிணைந்து கிடந்தன. இம் மாறுதல்களின் படி ஆட்சித்துறைத் தலைவர் (Sosai), முதுநிலை உறுப்பினர் (Gijo), இளநிலை உறுப்பினர்கள் (Sanyo) ஆகிய இம்மூன்று அரசு நிலைகளும் ஒருமுகப்படுத்தப்பட்டு, செயல்துறை மன்றம் (Dajokan) என்ற புதிய மன்றம் உருவாக்கப்பட்டது. இது மேல்சபை அல்லது அரசு சபை (Council of State) எனப்பட்டது. கீழ்சபை (Kogosho) அல்லது நிலமானியப் பிரபுக்களின் பிரதிநிதிகள் சபை என்ற ஒன்றும் ஏற்படுத்தப்பட்டது. இவ்விரு சபைகளில் மேல் சபையே மிக்குயர் அதிகாரம் பெற்றிருந்தது. மேல் சபையிலிருந்து அனுப்பப்படுகின்ற பிரச்சினைகளை மட்டுமே விவாதிக்கின்ற அதிகாரம் கீழ்ச்சபைக்குக் கொடுக்கப்பட்டிருந்தது. இதன்மூலம் அதிகாரங்களனைத்தும் ஒருசபை (மேல்சபை) யினிடமும் மக்களை திருப்திப்படுத்தப் பிரதிநிதிகள் சபை (கீழ்சபை)யும் ஏற்படுத்தப் பட்டதென்பது குறிப்பிடத்தக்கதாகும். இவைகளைத்தவிர செயல் மன்றம், ஷிண்தோ சமயத்துறை, நிதித்துறை, போர்த் துறை, வெளியுறவுத்துறை, உள்துறை போன்றவைகளும் நீதித் துறை ஒன்றும் ஏற்படுத்தப்பட்டது. இவ்வரசியல் மாற்றங்கள் அனைத்தையும் மக்கள் உணர்ந்து கொள்ளும்வகையில் தலஆட்சி அமைப்புகளும் மாற்றியமைக்கப்பட்டன். தொகுகாவாக்களின் நேரடிக் கண்காணிப்பிலிருந்த பகுதிகள், தைமியோக்களின் ஆட்சிப்பொறுப்பில் இருந்த பகுதிகள் ஆகிய அனைத்தும் மைய ஆட்சியின்கீழ்க் கொண்டுவரப்பட்டது. நாடு முழுவதும் பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது. மைய அரசினுல் நியமிக்கப்பட்ட அதிகாரிகள் பகுதிகளின் (Dominions) ஆட்சிப் பொறுப்பை ஏற்றனர். நாடு முழுவதும் ஒரே மைய ஆட்சியின்கீழ் முதன் முதலாகக் கொண்டுவரப்பட்டது.

1868ஆம் ஆண்டின் இறுதியில் மிகாடோ தமது தலைநகரை கியாத்தோவிலிருந்து (Kyoto) எதோ—தோக்கியோ நகருக்கு (Yedo-Tokyo) மாற்றிக்கொண்டார். 'தோக்கியோ' என்ற சொல்லுக்குத் 'கிழக்குத் தலைநகர்' என்பது பொருள். பல நூற்றுண்டுகளாகத் தலைநகராகத் திகழ்ந்த கியாத்தோ நகர மக்களை அமைதிப்படுத்தும் பொருட்டு அந்நகருக்கு சைகோ (Saiko) அல்லது 'மேற்குத் தலைநகர்' என்று மறு பெயரிட்டார். கியாத்தோ நகரில்

தம்முடைய தந்தையின் நினைவு நாளையும், தமது திருமண விழாவையும் மிகாடோ கொண்டாடினர்.

**நிலப் பிரபுத்துவத்திற்குச் சாவு மணி (1871)**

முட்சுஹிதோ ஜப்பானின் தனிப்பெரும் மாமன்னரான போதிலும் நாட்டின் சக்திகள் யாவும் அவரை மையமாகக் கொண்டு இயங்கவில்லை. வலுவான மைய ஆட்சி இல்லாத எந்த நாடும் ஒருங்கிணைந்து நிற்காது என்பது வரலாறு கண்ட உண்மையாகும். நாடு முழுவதும் உள்ள நிலங்களைத் தங்கள் பரம்பரைச் சொத்துகளாக்கி, ஆயிரம் ஆண்டுகளாய் ஆண்டு அனுபவித்து வரும் பெருநிலப் பிரபுக்களிடமிருந்து திடீரென நிலங்களைப் பிடுங்குவதென்பது அவ்வளவு எளிதான செயலன்று. அவ்வாறு செய்தால் நிச்சயம் ஒரு பெரும் புரட்சி ஏற்படும். அதனைச் சமாளிக்கும் வகையில் புதிய மிகாடோவின் ஆட்சி, திறமை பெற்றிருக்கவில்லை. பெருநிலப் பிரபுக்களே தாங்களாக முன்வந்து, மேஜியின் காப்புறுதிப் பத்திரத்தையும், மாறிவரும் மக்களாட்சிப் பண்பினையும் மனத்திற்கொண்டு, தங்கள் நிலங்களை அரசுடைமையாக்கி, பெருமை பெறலாம். இன்பம் கண்ட எவரும் அதனை விட்டுக் கொடுத்துத் துன்பத்தை வலிந்து ஏற்றுக்கொள்ள முன்வர மாட்டார்கள். இது மனித இயல்பு. ஆயினும் புதியதோர் எழுச்சி மிக்க சமுதாயத்தை படைத்தேயாக வேண்டியிருப்பதால், நிலப்பிரபுத்துவ முறை அழிந்தேயாக வேண்டும். இன்று இல்லையேல் நாளை அல்லது அதற்குப் பின்னராவது சமநிலைச் சமுதாயம் அமைந்தே தீரும். இதை நிலப் பிரபுக்களும் உணராமலில்லை. சூழ்நிலையும் மாறி வந்தது.

தொகுகாவாக்களின் வீழ்ச்சிக்குப் பின்னர் அவர்களுடைய பெரும் பண்ணைகள் மைய அரசின்கீழ்க் கொண்டுவரப்பட்டன. ஏனைய நிலப் பிரபுக்களின் அதிகாரங்களைக் குறைக்கும் முயற்சிகள் அப்போது மேற்கொள்ளப்படவில்லை. 1868ஆம் ஆண்டு கொண்டுவரப்பட்ட சட்டத்தின் மூலம் பண்ணைகளைக் கண்காணிக்க ஒவ்வொரு பண்ணையிலும் அரசு அதிகாரி ஒருவர் அமர்த்தப்பட்டார். இதன் மூலம் மைய அரசின் அதிகாரம் நிலைநாட்டப்பட்டதுடன் மைய அரசின் அதிகாரங்களுக்குப் பிரபுக்கள் கட்டுப்பட வேண்டியதன் அவசியமும் அறிவுறுத்தப்பட்டது. இது முதல் நிலையாகும். இரண்டாவதாக அரசில் ஆதிக்கம் பெற்றிருந்த சாமுராய்கள், சத்சுமா, சோஷு, தோஸா, ஹைசன் போன்ற மிகப் பெரிய மேற்குப்பகுதி நிலப்பிரபுக்களை வற்புறுத்தித் தங்களது நில உரிமைகளை விட்டுக் கொடுக்கும்படி செய்தனர். மிகவும் செல்வாக்குப் பெற்றிருந்த இந் நான்கு பெரும் மேற்குக் குடும்பங்களே

தங்களின் நில உரிமையை விட்டுக்கொடுக்க முன்வந்தது, மற்றைய பிரபுக்களுக்கு ஓர் எடுத்துக்காட்டாய் அமைந்தது. மூன்ருவதாக அரச ஆணை மூலம் ஏனைய நிலப் பிரபுக்களும் அவர்களாகவே முன் வந்து தங்கள் உரிமைகளை விட்டுக் கொடுக்கும்படி வற்புறுத்தப் பட்டனர். அவ்வாறு தங்கள் உரிமையை விட்டுக் கொடுத்த நிலப் பிரபுக்கள் அந்தந்தப் பகுதிகளின் ஆளுநர்களாக நியமிக்கப்பட்டனர். நிலமானிய முறை ஜப்பானிலிருந்து மறைந்தது (1871).

பரம்பரை பரம்பரையாக ஆண்டு அனுபவித்து வந்த பழமைப் பெருமையை விட்டுக் கொடுத்து ஜப்பானின் ஒருமைப்பாட்டிற்கு உதவிய இந்நிலைக்குக் காரணமான அவர்களின் நாட்டுப்பற்றையும் நாட்டின் நலத்தின் பொருட்டுத் தன்னலத்தையும் தியாகம் செய் கின்ற உயரிய மனப்பாங்கினையும் போற்ற வேண்டும். தங்களின் நிலஉரிமைகளை வலிந்து விட்டுக்கொடுப்பதன் மூலம், சாமுராய் களைப் போல ஆட்சித்துறைப் பதவிகளைப் பெற்றுச் சிறப்படையக் கூடும் என்ற எண்ணமும் இந் நிலப் பிரபுக்களுக்கு இருந்தது என்பதனையும் ஈண்டு நினைவுகூர வேண்டும். டைமியோக்கள் அல்லது நிலப்பிரபுக்களின் செல்வாக்கினை ஒழிப்பதின் மூலம் அவர்களுடைய மிக்குயர் நிலையிலிருந்து குறைத்துத் தங்களின் செல்வாக்கினைப் பெருக்கிக் கொள்ள வேண்டும் என்று கருதிய சாமுராய்களின் தன்னல அதிகாரவேட்கையும் ஒரு காரணமாக இருக்கலாம். மேற்குப் பகுதி நிலப்பிரபுக்களே தங்கள் உரிமையை விட்டுக்கொடுத்து அரசின் ஆதரவைப் பெற்று உயர்ந்தபோது அவர்களைவிடக் குறைந்த நிலையிலிருந்த ஏனைய பிரபுக்களும் அவர் களின் முன்மாதிரியைப் பின்பற்றிப் பயனடைவதைத் தவிர வேறு வழியில்லை.

இவ்வாறு தங்களது பரம்பரை நில உரிமைகளை விட்டுக் கொடுத்த டைமியோக்களுக்கு அரசு பெருந்தொகையை ஓய்வூதிய மாக வழங்கியது. அவர்களின் கடன்களையும்கூட அரசு ஏற்றுக் கொண்டது. இதனாலும் நிலப்பிரபுவுக்கு நன்மையே ஏற்பட்டது. பண்ணை நிர்வாகப் பொறுப்பிலிருந்து விடுதலை பெற்ற பிரபுவுக்கு பெருந்தொகையை ஓய்வூதியமாகவும் பெற்று, ஆடம்பர வாழ்க்கையில் ஈடுபடவும் வசதியேற்பட்டது. நிலப்பிரபுக்களும் சாமுராய்களும் தங்களது பரம்பரை நில உரிமைகளையும், பட்டங் களையும் விட்டுக்கொடுத்தது நாட்டுப் பற்ருல்தான் என்று கூறு வதைவிட, உழைப்பின்றியே ஊதியம் பெறவும், அரசு பணியில் அமர்ந்து மிக உயர்ந்த நிலையை அடைய முடியும் என்ற பேராசை யுமே காரணமாகும் எனக் கூறுவது பொருந்தும்.

ஜப்பானிய நிலப்பிரபுத்துவ முறை அழிந்ததால் ஆங்காங்கே தனித்தனியாக நிறுத்தப்பட்டிருந்த பிரபுக்களின் படைகளும் கலைக்கப்பெற்றன. அதற்குப் பதிலாக, ஜெர்மானியப் படைமுறை யில் அமைக்கப்பட்ட ஜப்பானிய தேசியப்படை ஏற்படுத்தப் பட்டது. இது ஜப்பானின் படையாகவும், நிலையான, திறமை வாய்ந்த படையாகவும் செயல்பட்டது. பாரம்பரிய பதவிகளும் பட்டங்களும் இல்லாமல், தகுதி திறமை இவைகளினடிப்படையில் பதவிகள் வழங்கப்பட்டன. ஜப்பானிய வரலாற்றிலேயே முதன் முறையாக ஜப்பானியத் தேசியப்படை உருவானது.

இவ்வாறு பிரபுக்களும், சாமுராய்களும் தங்கள் பரம்பரைப் பட்டங்களையும், நில உரிமைகளையும் இழந்து, அரசின் ஓய்வூ தியத்தை எதிர்நோக்கி வாழத் தலைப்பட்டனர். இதனால் அரசுக்குப் பணத்தட்டுப்பாடு ஏற்பட்டது. செலவுகள் பலமடங்கு உயர்ந்தன. வருவாய் மிகக் குறைவானதாய் இருந்தது. அரசின் வருவாயை உயர்த்த எடுத்துக் கொண்ட பல முயற்சிகள் பலனளிக்கவில்லை. எனவே ஒகுமா பிரபு (Count Okuma) என்ற நிதி மந்திரி 1873-ல் ஒரு புதிய திட்டத்தைச் செயல்படுத்தினர். இத் திட்டத்தின்படி ஆண்டுதோறும் நிலப்பிரபுக்களுக்கு ஓய்வூதியம் வழங்கப்படு வதற்குப் பதிலாக ஒரு குறிப்பிட்ட பெருந்தொகையை மொத்த மாக வழங்குவதென்றும், அத் தொகையில் பாதியைப் பணமாக வும், மீதியை அரசு கடன் பத்திரங்களாகவும் வழங்குவதெனவும் முடிவு செய்யப்பட்டது. இதனால் ஓய்வூதியம் பெறுவோர் அனைவரும் மனக்கசப்படைந்தனர். அரசு தனது வாக்குறுதிகளைக் காற்றில் பறக்கவிட்டுவிட்டது என மனம் கறுவினர். இருப்பினும் நாட்டின் நிதிப் பற்றுக்குறையை முன்னிட்டும், பொதுவாக நாட்டின் நீண்டகால முன்னேற்றத்தைக் கருத்தில் கொண்டும் அரசு இவ்விதமாகச் செயல்பட்டது என்பது தெளிவு.

**அரசியல் அமைப்பு முறை உருவாதல்**

ஜப்பானின் தெய்விகப் பேரரசர் முட்சுஹிதோ அரசுரிமையை முழுவதுமாக ஏற்றுக்கொண்ட பின்னர், ஜப்பானின் அரசியல் வானில் ஏற்பட்ட சில முக்கிய மாறுதல்களைக் கண்டோம். இம் மாறுதல்களெல்லாம் மிகச் சிறப்பு வாய்ந்த பிற்கால ஜப்பானின் உன்னத வளர்ச்சிக்கும், உலகு வியக்கின்ற முன்னேற்றத்திற்கும் முன்னோடி எனக் கூறினல் அது மிகையாகாது. கிட்டத்தட்ட இருநூற்றாண்டுகளுக்கும் அதிகமாகப் புற உலகினின்று தனித்து வாழ்ந்திருந்த ஜப்பான், திடீரென விழித்தெழுந்து, உலகியல் முன்னேற்றங்களைக் கண்டறிந்து திகைப்புற்றது. ஆனால், செய்வ தறியாமல் திகைக்கவில்லை—திண்டாடவுமில்லை. மேலை நாடுகள்

# 1889-ஆம் ஆண்டு அரசியல் சட்டப்படி ஜப்பானிய அரசின் முக்கிய அம்சங்கள்



# 1889-ஆம் ஆண்டு அரசியல் சட்டப்படி ஜப்பானிய அரசின் முக்கிய அம்சங்கள்



கடந்த இருநூறு ஆண்டுகளில் வளர்ந்த வளர்ச்சியை மிகக்குறுகிய காலத்தில் தான் அடையவேண்டும் என்ற பேரார்வம் மடை திறந்த வெள்ளமெனப் பெருக்கெடுத்தோடியது. அவ் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டவை தாம் பழமை விரும்பிகளான தொகுகாவாக்களின் ஆட்சியும், அவ்வாட்சியின் சின்னமாக விளங்கிய நிலமானிய முறையும், அந் நிலமானிய உரிமையைக் கொண்டு பெருமித வாழ்வு வாழ்ந்த பிரபுக்களின் கொட்டமுமாகும். இவைகள் அனைத்தும் அழியக் காரணமாய் இருந்த புரட்சி வீரர்களிடையேகூட அரசு ஏற்படுத்துவதிலும், அதிகாரங்களை வகைப்படுத்துவதிலும், வகைப்படுத்திய அதிகாரங்களை நிலைபெறச் செய்வதிலும் கருத்துவேறுபாடுகள் நிலவின. ஒரு சில பிற்போக்குவாதிகள், பண்டைய ஜப்பானைப்போலப் பேரரசு அமைப்பதில் ஆர்வம் கொண்டனர். அண்டைய நாடுகளான கொரியாவையும் சீனுவையும் வென்று ஜப்பானியப் பேரரசின் பெருமையை உடனடியாக நிலைநாட்ட வேண்டுமென வாதிட்டனர். வேறு சிலர் அமைதியை விரும்பினர். நாட்டை ஒருமைப்படுத்துவதிலும், புதிய முறைகளைப் புகுத்தி, அவைகளை மக்கள் ஏற்றுக்கொள்ளும்வகை செய்து, நிலையான, உறுதியான அரசை நிறுவுவதே தலையாய கொள்கையாக இருத்தல் வேண்டுமென முழக்கினர். இத்தகைய செயலாற்றல்மிக்க தீரர்களில் முன் வரிசையில் நிற்பவர் கவுண்ட்-இதோ-ஹிரோ-பூமி (Count Ito Hirobumi) என்பவராவர். மேலை நாடுகளினிடையில் ஜப்பானும் தலைநிமிர்ந்து நிற்கவேண்டுமாயின், அந் நாடுகளைப் பின்பற்றி உயர்ந்தாகவேண்டும். அந்நாடுகளின் வளர்ச்சியையும் முன்னேற்றத்தையும் கற்றுணர்ந்து அதன்வழி செயல்பட்டால் தவிர ஜப்பானுக்கு விடிவு இல்லை என்பதனை நன்குணர்ந்த இவர் தம்முடைய நாவன்மையால் மக்களுக்கும் தெளிவாக்கினுர். மேலை நாடுகளின் வழியில் விரைந்து முன்னேறுகின்ற வேகத்திலும், அந் நாடுகளின் முறைகளை அப்படியே ஏற்றுக் கொள்ளாமல், ஜப்பானிய மனநிலைக்கேற்ப மாறுதல்களைப் புகுத்தி ஏற்றுக் கொள்வதையே விரும்பினுர். புதிய கருத்துகளை, பழமையுடன் இணைத்து, புதுமையெனச் செயல்படுத்தி வெற்றியும் கண்டார். இதோ பிரபுவின் தலைமையில் ஜப்பானியக் குழுவொன்று மேலை நாடுகளில் சுற்றுப் பயணம் செய்து முன்னேற்றக் கருத்துகளைப் மனப்பேழைகளில் வைத்துப் போற்றிக் கொணர்ந்தனர். இவரது அரிய முயற்சியால் உருவானதுதான் உயரிய ஜப்பானியப் புதிய அரசியல் அமைப்புச் சட்டம் (1889).

### அரசியலமைப்பின் அடிப்படை நோக்கங்கள்

ஜப்பானிய அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்கும் பணியில் தம்மை ஈடுபடுத்திக்கொண்ட இதோ பிரபு, மூன்று

அடிப்படைக் கொள்கைகளை வகுத்துக் கொண்டார். முதலாவது அரசியல் அமைப்பு மக்கள் போற்றும் தெய்விகப் பேரரசர் மனமுவந்து மக்களுக்கு அளிக்கும் அருட்பிச்சையாக இருத்தல் வேண்டும். மன்னரின் மாண்பு குறையாமல், சிதறாமல் பாது காத்து, அதே நேரத்தில் மக்களுரிமைகளும் புதிய முறையில் இயம்பப்படல்வேண்டும். இரண்டாவதாக, பேரரசரின் முன்னிலை மீட்சிக்குக் காரணமாய் இருந்தவர்களும், நிலமானியப் பிரபுக் களின் கொட்டங்களை அடக்க அரும்பாடுபட்டவர்களும், புதிய ஜப்பானை உருவாக்குவதில் எல்லையற்ற தியாகங்களைப் புரிந்து, மேலைநாட்டவரிடையே ஜப்பானின் மாண்பை உயர்த்திய அந்தச் சீர்திருத்தச் செம்மல்களும் கண்டிப்பாக இடம்பெற வேண்டும். மூன்றாவதாக, மக்களுக்கும் ஆட்சியில் பங்கு கொடுக்கப்பட வேண்டும். மக்களுக்கு ஆட்சியுரிமை என்பதனால் இங்கிலாந் திலிருப்பதைப் போன்ற மக்களாட்சி அமைப்பன்று. ஜெர்மானிய அரசியலமைப்பு போன்று மக்களாட்சிக் கொள்கைகளையும், பேரரசரின் உயர்தனிச் செல்வாக்கினையும் இணைத்துச் செயல்படும் விதத்தில் புதிய அரசியலமைப்பு உருவாக்குவது என்பதாகும்.

தமது மேலைநாட்டுச் சுற்றுப்பயணங்களை முடித்துத் திரும்பிய இதோ பிரபு 1883-ல் அரசியலமைப்பை உருவாக்கும் பணியில் ஈடுபட்டார். இதற்காக இதோ பிரபுவின் தலைமையில் ஒரு குழு நியமிக்கப்பட்டது. இக் குழு தனது பணியினை மிகவும் இரகசிய மாக வைத்துக் கொண்டது. முதன் முதலாக 1888-ல் அரசப் பேரவை ஏற்படுத்தப்பட்டது (Privi Council). அரசப் பேரவை யின் தலைவராகவும் இதோ பிரபுவே நியமிக்கப்பட்டார். பின்னர் உருவாக்கப்பட்ட அரசியலமைப்பையும் பேரரசருடன் மிகச் சிலரே அடங்கிய பிரபுக்கள் முன்னிலையில் வெளியிட்டார். மக்கள் இப் புதிய அரசியலமைப்பை அப்படியே ஏற்றுக்கொண்டாக வேண்டும் என்ற எண்ணத்தில் பலத்த முன்னேற்பாடுகள் செய்யப் பட்டிருந்தன என்பது குறிப்பிடத்தக்கது. பத்திரிகைகள் கடுமை யாகத் தணிக்கை செய்யப்பட்டிருந்தன. காவல் வீரர்கள் அதிகப் படுத்தப்பட்டனர். கலகங்கள் ஏற்படின் உடனடியாக அடக்கு வதற்குத் தேசியப்படையும் தயார் நிலையில் வைக்கப்பட்டிருந்தது. இத்தனை முன்னேற்பாடுகளும் செய்யப்பட்டிருக்கையில் மக்கள் அமைதியாகப் புதிய அரசியலமைப்பை ஏற்றுக்கொள்ள வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டிருந்தது. ஏனெனில் இவ்வரசியல் சட்டம் மக்களால் மக்களுக்காக உருவாக்கப்பட்டதன்று. இது பேரரசர் தமது தனிப்பெருங் கருணையால் மக்களுக்கு வழங்குகின்ற அருட் பிச்சையாகும். இரண்டாயிரத்தைந்நூறு ஆண்டுகட்கும் அதிக மாகத் தொடர்ந்து ஆட்சி புரிந்து வருகின்ற தெய்விக அரச பரம்

பரையின் தெய்வப் பண்பு மேலும் வளரவும், நிலைபெறச் செய்ய வும்தான் இவ்வரசியலமைப்பு வழங்கப்படுகின்றது என மேஜி மாமன்னர் விளம்பினுர்.

**அரசியல் சட்டத்தின் கூறுபாடுகள்**

இவ்வரசியல் சட்டத்தில் மொத்தம் ஏழு பிரிவுகளும் (Chapters) 111 கூறுபாடுகளும் (Articles) இருந்தன. ஏழு பிரிவுகளும் வருமாறு. 1. பேரரசரைப் பற்றியவை. 2. குடிமக்களின் கடமை களையும் உரிமைகளையும் பற்றியவை. 3. நாடாளுமன்றங்களையும், அரசர் அவையையும் பற்றியவை. 4. அமைச்சரவையைப் பற்றியவை. 5. அறங்கூறவைகளைப் பற்றியவை. 6. நிதியைப் பற்றியவை. 7. துணை விதிகளைப் பற்றியவை. இவ் வரசியல் சட்டம் மேஜி சகாப்தத்தின் 23ஆம் ஆண்டிலிருந்து (1890) நடை முறைக்கு வந்தது.

**பேரரசர்**

ஆண்டவன் திருவுருவாய் நாட்டை ஆள்பவர் தன்னேரில்லா இறைமாட்சி (Suprerme Sovereign Power) அதிகாரம் பெற்றவர். முப்படைத் தளபதியும் இவரே. சண்டையோ, சமாதானமோ, உடன்படிக்கையோ மன்னருக்கே அதிகாரம். நாடாளுமன்றத்தின் பரிந்துரைகளின்படி அதிகாரிகளை நியமிப்பார். சட்டங்களை ஆக்கவும், நீக்கவும் வல்லவர். எத்தகைய சட்டவரைவும் இவர் ஒப்புதலின்றிச் சட்டமாகாது; சட்டவரைவை நீக்கவோ, நிறுத் தவோ, இயலும். பேராணைகளை வெளியிடும் உரிமை படைத்தவர், பேரவைகளைக் கூட்டலும், கலைத்தலும் இவரது பொறுப்பு. பொதுவாக அரச அதிகாரங்களனைத்தும் இவரிடமிருந்தே பிறக்கும். சுருங்கச் சொல்லின் கட்டுக்கடங்காத சர்வாதிகாரி யாகவோ, கொடுங்கோலராகவோ மாற இயலும். எனினும் சூரியன் வழிவந்த புனிதப் பேரரசர், அவர்தம் தனிபெருங் கருணை யாலும், அன்புள்ளத்தாலும், புனிதத் தன்மைக் குலையாது நாட்டைக் கட்டிக்காத்து உய்விக்கச் செய்வார். அவர் செயல் களனைத்தும் மக்களின்—நாட்டின் நற்பயனே யாகும்.

இத்தகைய புனிதத் தன்மைமிக்க பேரரசர் சில சந்தர்ப்பச் சூழ்நிலையால் படைத் தலைவர்களிடமும், பேராசை மிக்க அரசியல் வாதிகளிடமும், சிக்கித் தமது இறைமாட்சி சிதைந்து, அரசியல் அமைப்பும் திசைமாறுகின்ற நிலையில் பிற்காலச் சூழ்நிலை மாறு கின்றது என்பதனையும் ஈண்டுக் குறிப்பிடல் வேண்டும்.

**மக்களின் கடமைகளும் உரிமைகளும்**

மனிதனின் அடிப்படை உரிமைகள் வழங்கப்பட்டன. தகுதிக் கேற்ற பணியும், உழைப்பிற்கேற்ற ஊதியமும், நீதி பெறுகின்ற உரிமையும், பொருளீட்டித் தனது வாழ்வை அமைத்துக்கொள்ளும் உரிமையும் போன்ற அடிப்படை உரிமைகள் குறிப்பிடப்பட் டிருந்தன. இந்த உரிமைகள் அனைத்தும் நாட்டின் சட்டதிட்டங் களுக்கு உட்பட்டவையாகும். வரி செலுத்துகின்ற கடமையும், இராணுவ சேவைசெய்யும் கடமையும் வலியுறுத்தப் பெறுகின்றன.

**நாடாளுமன்றம் (Diet)**

பிரபுக்கள் அவை (House of Peers), படிநிகராளிகள் அவை (House of Representatives) என இரு அவைகள் உண்டு. மேலவை யில் இருப்பவர்களில் (House of Peers) அரச குடும்பத்தைச் சேர்ந் தவர்களும், தலைமை அரசு பணிகளில் இருப்பவர்களும், மிகப் பெரிய பிரபுக்களும் ஆயுள் உறுப்பினர்கள். சிறு பிரபுக்கள், அதி காரிகளின் படிநிகராளிகள் ஏழாண்டுக் காலம் பதவியிலிருப்பர். கீழவையில் (House of Representatvies) இருப்போர் அனைவரும் சொத்துரிமை படைத்த மக்களால் தொகுதியினடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்டவராவர். இவர்களின் பதவிக் காலம் நான்கு ஆண்டுகள்.

நாடாளுமன்றத்தை ஆண்டுதோறும் பேரரசர் கூட்ட வேண்டும். குறைந்தது மூன்று மாதங்களாவது இம் மன்றம் நடைபெறல் வேண்டும். திடீரெனக் கலைக்கப்படவும் கூடும். நாடாளுமன்றத்தின் ஒப்புதலின்றி எத்தகையச் சட்டத்தையும் ஆக்கமுடியாது. புதிய வரிகளும் விதிக்க முடியாது. நாட்டின் வரவு செலவுத்திட்டங்கள் இவ்வவை முன்பு வைக்கப்பட்டு, ஏற்றுக்கொண்ட பிறகே செயல்முறைக்கு வரும். அவ்வாறு நாடாளுமன்றம் புதிய வரவு செலவுத் திட்டங்களை ஏற்கமறுத்தால் நடைமுறை ஆண்டின் வரவு செலவுத் திட்டத்தையே வருகிற ஆண்டிலும் பின்பற்றலாம். அமைச்சர்கள்மீது குற்றம் சாட்ட வேண்டுமெனின் பேரரசரின் முன்னிசைவு பெறல் வேண்டும். நாடாளுமன்றத்தின் எத்தகைய சட்டவரைவையும் மறுக்கின்ற மறுப்புரிமை (Veto) பேரரசருக்கு உண்டு.

**அமைச்சரவையும் அரசப்பேரவையும் (Cabinet and Privi Council)**

அரசியல் நிர்ணயச் சட்டப்படி அமைச்சரவையும் அரசப் பேரவையும் ஏற்படுத்தப்பட்டன. அமைச்சரவையை நடத்திச் செல்லத் தலைமை அமைச்சர் இருப்பார். அமைச்சர்களை

நியமிக்கும் அதிகாரம் பேரரசரிடமே இருப்பதனுல் அமைச்சர்கள் நாடாளுமன்றத்திற்குக் கட்டுப்பட்டவர்கள் அல்லர். அரசப் பேரவை என்பது அரசின் கொள்கைகளை வகுத்தளிக்கவும், பரிசிலனை செய்யவும், ஆலோசனை கூறவும், அரசருக்காக அரசரால் நியமிக்கப்படும் ஓர் அவையாகும். ஆலோசனை கூறலாமே தவிர இச் சபையால் அரசனைக் கட்டுப்படுத்த இயலாது. மக்களாட்சி மலர்ந்துள்ள ஏனைய உலக நாடுகளில் அரசின் கொள்கைகளை வகுப்பதிலும், சட்டதிட்டங்களை உருவாக்குவதிலும், மக்களின் படிநிகராளிகளவை பெரும் பங்கு வகிக்கும்போது, ஜப்பானில் மட்டும் இச் சபை பேரரசரின் கைப்பாவையாகவே விளங்கியது.

## மூத்தோர் அவை (Genro)

ஜப்பானிய சமுதாய அமைப்பில் வயது முதிர்ந்தவர்களைக் கலந்து காரியம் ஆற்றுகின்ற உயரிய பண்பு பொதிந்துகிடப்பதைக் காணலாம். இக் காரணங்கொண்டே, அரசியலமைப்பில் குறிப்பிடப்படாத ஒரு தனிக் குழுவும், ஜப்பானிய அரசியலமைப்பு வரலாற்றில் சிறப்புத்தன்மை பெற்று விளங்குகிறது. இதுதான் அரசியல் மூதறிஞர்களின் அவை (Genro). இதில் பங்கு பெற்றவர் அனைவரும் 'மிகாடோவின் முன்னிலை மீட்சி'க்கும் ஜப்பானின் வளமான முன்னேற்றத்திற்கும் வழிவகை செய்தவர்கள். சத்சுமா, சோஷு போன்ற தியாகப் பரம்பரையினர். இப் புதிய அரசியலமைப்பு உருவாக்கப்படும்வரை ஜப்பானின் அரசியலை வெற்றிகரமாக நடத்தி வந்தவர்கள். இவர்களின் அரிய அனுபவக் கருத்துரைகளை மதித்து, ஏற்றுச் செயல்பட முன்வந்தது, ஜப்பானியர் மூத்தோர் சொல்லுக்கு எந்த அளவுக்கு மதிப்புக் கொடுக்கின்றனர் என்பதைத் தெளிவாக்குகின்றது.

அமைச்சர்கள் அனைவரும் தத்தம் துறை நடைமுறைகளைக் கண்காணிக்க வேண்டும் என்பது முறையாயினும், நாட்டில் ஏற்பட்ட சூழ்நிலைகளும், சீனப்போரும், அந்நியர் தலையீடும், படைகளின் செல்வாக்கினை அதிகரித்துவிட்டன. அமைச்சரவையை ஒதுக்கிவிட்டு நேரடியாகவே பேரரசரிடம் ஆலோசனை கேட்கும் அளவுக்கு நாவாய்த்துறை அமைச்சரும், போரமைச்சரும் செல்வாக்குப் பெற்றனர்.

### அறங்கூறவையங்கள்

நீதித்துறை, இறைமைத்தன்மையின்றி நிர்வாகத்துறையின் ஓர் அங்கமாகவே செயல்பட்டு வந்தது. அரசியல் சட்டத்தின் பாதுகாவலனுகவும் இத் துறை இயங்கவில்லை. மேலைநாடுகளைப்

பின்பற்றி ஒரே மாதிரியான சட்டத் தொகுப்புகள் உருவாக்கப் பட்டுச் செயல்படுத்தப்பட்டன. நீதித்துறை பிரெஞ்சு நாட்டு முறைப்படி அமைக்கப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

## நிதி

நிதித்துறை நாடாளுமன்றத்தின் கட்டுப்பாட்டிலிருந்து விடு விக்கப்பட்டிருந்தது. இருப்பினும் வரவு-செலவுத் திட்டங்கள் நாடாளுமன்றத்தால் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டுமென்றும், அவ்வாறு நாடாளுமன்றம் ஏற்க மறுத்தால் நடை முறையாண்டு வரவு-செலவுத் திட்டத்தையே வருகிற ஆண்டிலும் பின்பற்றலாம் என்றும் அரசியல் சட்டம் வரையறுத்திருப்பதால், நாடாளு மன்றத்தின் செல்வாக்கு வெகுவாகக் குறைக்கப்பட்டுள்ளது. நாணய முறை தேசியமயமாக்கப் பட்டது. வரிவசூல் முறைகளும் திருத்தியமைக்கப்பட்டிருந்தது. அரசப் பேராணைகள் மூலம் வரிவசூல் விதிகள் வரையறை செய்யப்பட்டிருந்தன.

மேலவையில் மொத்த உறுப்பினர்கள் 120 பேராவர். கீழவையில் 363 பேர்கள். ஆண்டொன்றிற்கு ஒரு பவுன் ஸ்டெர்லிங் வரி செலுத்துவோருக்கும், 25 வயது நிரம்பியவர் களுக்கும் வாக்குரிமை வழங்கப்பட்டது. 1925ஆம் ஆண்டில்தான் வயது வந்தோரனைவருக்கும் வாக்குரிமை வழங்கப்பட்டது.

1889 ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்ட இவ்வரசியல் சட்டம் 1947 ஆம் ஆண்டு புதிய அரசியல் சட்டம் ஏற்படுத்தும் வரை செயல்பட்டது. மன்னரின் அதிகாரங்கள் மிகுதியாய் இருந்த போதிலும், செயல் முறையில் பேரரசரும் தமது அதிகாரங்கள் அனைத்தையும் செயல்படுத்த இயலவில்லை. மன்னராட்சியும், மக்களாட்சியுமின்றி, ஒரு குழு ஆட்சி (Oligarchy) என்று கூறு மளவுக்குக் குறிப்பிட்ட ஒரு சிலரின் கையில் அதிகாரம் முழுவதும் பொதிந்து கிடந்தது. மக்களுக்கு அடிப்படை உரிமைகள் வழங்கப் பட்ட போதிலும் அவ்வுரிமைகள் செல்வாக்குமிக்க அரசப் பேரவையால் தடைபடுத்தப்பட்டன. நாடாளுமன்றத்தில் இருசபைகளுக்குமிடையே அதிகாரப் போட்டி ஏற்பட்டு ஒன்றை யொன்று மீறி மேலதிகாரம் பெற முயன்ற வண்ணம் இருந்தன. நிதியதிகாரம் நாடாளுமன்றத்திடம் முழுவதுமாகக் கொடுக்கப் படவில்லை. அமைச்சரவையிடமே நிதித்துறைப் பொறுப்புகள் அனைத்தும் குவிந்திருந்தன. அமைச்சரவை பேரரசருக்குப் பொறுப்பாளியாக இருந்ததே தவிர நாடாளுமன்றத்திற்குப் பொறுப்பானதாக இல்லை. இவ்வாறு நோக்குமிடத்து இவ்வரசியல் அமைப்பை மன்னராட்சி அமைப்பு என்றோ, மக்களாட்சி அமைப்பு

என்றோ கூற இயலாவிடினும், நாடாளுமன்ற முறை ஆட்சி (Parliamentary Government) என்று கூறும் வகையில் அமைந்துள்ளது. இது எவ்வாறு இருப்பினும் 19ஆம் நூற்றுண்டின் இறுதியில் தோற்றுவிக்கப்பட்ட இந்த ஆட்சி முறையால் ஜப்பானில் வியத்தகு முறையில் சமூக, பொருளாதார, அரசியல், சமயமாற்றங்கள் தோன்றின. இதையே வரலாற்று அறிஞர்கள் 'ஒளிபொருந்திய ஆட்சி' அல்லது 'மேஜி சகாப்தம்' எனப் பெருமையுடன் குறிப்பிடுகின்றனர்.

## சமூக-பொருளாதார மாற்றங்கள்

அரசியல் வானில் வியத்தகு மாற்றங்களை ஏற்படுத்தி ஜப்பானைப் புதிய பாணியில் அமைத்த மேஜி இயக்கம், சமூக, பொருளாதார, கலை, கல்வி, சமயப் பண்பாட்டுத் துறைகளையும் விட்டுவைக்கவில்லை. அரசியல் புதுமைகள் ஏற்பட்ட அதே நேரத்தில் சமுதாய, பொருளாதாரத் துறைகளிலும் புதுமைக் கருத்துகள் புகுந்தன. மாறிவரும் அரசியல் சூழ்நிலைகளுக்கேற்ப இத் துறைகளிலும் மிக வேகமான வளர்ச்சியை அடைந்த ஜப்பான் 1894-ஆம் ஆண்டிற்குள் மேலை நாடுகளின் நாகரிகம் முழுவதையும் தன் தாக்கி, வேண்டியவற்றைத் தெரிந்தெடுத்து, தனது பழமைப் பண்பு கெடாமலிருக்க, தெரிந்தெடுத்தவைகளில் தேவையான மாற்றங்களைச் செய்து, புதுமை புனைந்து உலகம் வியக்கும் வண்ணம் முன்னேறியது. மேலைநாட்டு நாகரிக மோகத்தில்வீழ்ந்த ஜப்பான் தனக்கே உரித்தான தனிப்பண்புகளைக் குழிதோண்டி புதைத்து விடவில்லை. தங்கள் பண்புகளை மறந்து விடவோ, ஒதுக்கிவைத்துவிடவோ எண்ணவில்லை. புதிய சமுதாயம் படைக்கப்பட்டபோது, அதன் அடிப்படைத் தத்துவங்களும், சமயக்கருத்துகளும் முழுக்கமுழுக்க ஜப்பானிய இயல்புகளாகவே இருந்தது ஜப்பானிய மக்களின் பெருமைக்கு எடுத்துக் காட்டாகும். அமெரிக்கக் கடற்படைத் தளபதி பெர்ரியின் வருகைக்குப் பின்னர், ஜப்பானின் அரசியல் வளர்ச்சியை மேஜிப் புரட்சியின் வாயிலாக நாம் உணரலாம். ஆனால் பொருளாதார சமூக மாறுதல்கள் இல்லையெனில் அரசியல் புரட்சி அர்த்தமற்றதாகிவிடும். எனவே இவ்வரசியல் மாற்றங்கள் நிகழ்ந்த நாற்பதாண்டுகளில் (1853–1894) ஜப்பானின் சமுதாய-பொருளாதார வளர்ச்சியை மிகவும் சுருக்கமாக இங்குக் காண்போம்.

ஜப்பானில் ஏற்பட்ட மாற்றங்களை உற்றுநோக்குமிடத்து, இவைகள் அனைத்திற்கும் அடித்தளமாக விளங்கிய மூன்று முக்கிய

நிலைகளைக் கருத்தில் கொள்வது அவசியமாகிறது. முதலாவதாக, அரசு வழிகாட்டியாக இருந்து செயல்பட்டது என்பதைக் குறிப்பிட வேண்டும். உலகில் தோன்றிய புரட்சிகள் அனைத்தும், அரசியல் புரட்சிகளோ அல்லது தொழில்-வேளாண்மைப் புரட்சிகளோ, தானாக மக்களிடையே சிறு கொந்தளிப்பாக ஆரம்பித்து, புரட்சிகளாக, பெரும் புயலாக உருவெடுத்து மாற்றங்களை ஏற்படுத்தியதை உலக வரலாறு நமக்கு விளக்குகிறது. ஆனால், ஜப்பானில் ஏற்பட்ட மாற்றங்கள் அனைத்திற்குமே வழிகாட்டியாய் இருந்து, திட்டங்கள் தீட்டி, செயல்படுத்தியது ஜப்பானிய அரசே என்பதை உணர வேண்டும். இரண்டாவதாக, ஒவ்வோர் மாற்றமும் முறையாகச் சிந்தித்து, ஆய்ந்த அறிவின் நிலைக்களனாகத் தோன்றி, படிப்படியாகப் புகுத்தப்பட்டது என்பதும் நினைவில் கொள்ளத்தக்கதாகும். ஜப்பானில் தோன்றி வளர்ந்த ஒவ்வோர் இயக்கமும் சீரிய முயற்சிகளின் தவறாத விளைவுகளாகத்தான் காணப்படுகின்றதேயல்லாமல், பதட்ட நிலையில் அவசர அவசரமாக ஆரம்பித்து, கேடுகள் விளைந்தபோது திருத்திக் கொள்ளப்பட்டதாக இல்லை. மூன்றாவதாக, நாட்டின் வளர்ச்சி-முன்னேற்றத்தை அடிப்படையாகக் கொண்டு எழுந்த ஒவ்வொரு மாற்றமும் தனி மனிதனின் விருப்பு-வெறுப்புகளாலோ, அல்லது ஒரு சாராரின் அல்லது கூட்டத்தினரின் வளர்ச்சிக்காகவோ இல்லாமல் நாட்டின் பொது நலனுக்காகவே என்று உணர்ந்து செயல்பட்டதும் ஆகும். இம் மூன்று செயல் நிலைகளும்தான் ஜப்பானைப் புதிய நாடாக, மேலைநாடுகளின் பாணியில் உருவாக்கியது. அவ்வாறு முன்னேற்றமடைந்த நாடு, மேலைநாடுகளே பொறாமையும், அதிர்ச்சியும் அடையும் வண்ணம் வளர்ந்து, இருபதாம் நூற்றாண்டின் பெரிய வல்லரசுகளுள் ஒன்றாக உருவெடுத்தது.

இத்தகைய வளர்ச்சிகளின் அடிப்படைக் காரணம் ஜப்பான் அறிவைத் தேடி, ஆக்கப்பணிகளுக்கான ஆதரவை—பயிற்சியை நாடி மேலைநாடுகளுக்குச் சென்று, கற்றுவந்த திறமையேயாகும். தொகுகாவாக்களின் காலத்தில் விதிக்கப்பட்டிருந்த வெளிநாட்டுப் பயணங்களுக்கான தடை, பேரரசரின் பேராணை மூலம் தகர்க்கப்பட்டது. ஜப்பானின் கதவுகளும், ஜன்னல்களும் முழுவதுமாகத் திறந்து விடப்பட்டன. ஏராளமான ஜப்பானிய இளைஞர்கள் ஐரோப்பிய நாடுகளின்மீது அறிவுப் படையெடுப்பைத் தொடங்கினர். மேலைநாடு சென்றவர்கள் திரும்பி வருவதற்குள் ஜப்பானிய அரசு ஐரோப்பிய நாட்டுத் தொழில் நுட்பக் கலைஞர்களைப் பெருமளவில் இறக்குமதி செய்துகொண்டது. இவர்கள் அரசின் ஆலோசகர்களாக நியமிக்கப்பட்டனர். கல்வி, தொழில், இராணுவம், சட்டத்தொகுப்பு, வேளாண்மை போன்ற அனைத்துத்

துறைக்ளும் ஐரோப்பியத் தொழில்நுட்பச் சிற்பிகளின் கைவண்ணத்தால் புதுமை பெற்றன.

இருநூறு ஆண்டுகளாகத் தொடர்பற்றுத் தனித்துநின்ற ஜப்பான் ஐரோப்பியர்களின் வருகையால் தன்னிலை உணர்த்தப் பெற்றது. ஐரோப்பிய நாடுகளின் அரசியல், அறிவியல், பொருளாதாரப் பண்பாட்டு வளர்ச்சிகள் ஜப்பானியருக்குப் பெரும் விந்தையாக இருந்தது. மேலை நாடுகளில் பயணம் செய்து திரும்பிய ஜப்பானியர், ஐரோப்பிய நாடுகளின் அடிச்சுவட்டில் ஜப்பான் முன்னேற்ற மடைந்தால் தவிர உலக நாடுகளிடையே ஜப்பான் தலை நிமிர்ந்து நிற்க முடியாது என்ற கசப்பான உண்மையை ஒளிவு மறைவின்றி விளக்கினர். இவர்கள்தான் புதிய ஜப்பானை உருவாக்கும் சிற்பிகளானுர்கள். 'அமெரிக்க, பிரெஞ்சு முன்னேற்றங்களைப் பெற்றோர்களாகக் கொண்டு புதிய ஜப்பான் பிறக்க வேண்டும்'[1] என்று வற்புறுத்தினர்கள். புதிய ஜப்பான் பிறக்க ஒரேவழி, ஜப்பானின் பண்டைய பண்பாட்டு முறைகள் அடியோடு ஒழிக்கப்பட வேண்டுமென்றும் வற்புறுத்தினர்கள். இக் கருத்துகளை வலியுறுத்தி, மக்களிடையே பரப்பப் பல கழகங்கள் தோக்கியோ நகரில் தோன்றின. இவைகளில் சிறப்பு வாய்ந்தவை 1873-ல் மோரி அரினேரி (Mori Arinori) என்பவரால் தோற்றுவிக்கப்பட்ட மீரா–குஷா (Miro-Kusha) என்ற பகுத்தறிவுப் பாசறையாகும். பின்னர், 1875-ல் நகமுரா மஸானே (Nagamura-Masano) என்பவரால் தோற்றுவிக்கப்பட்ட தோஷிஸா (The Doshisha) என்ற கிறித்தவ சமயப்பரப்புக் கல்லூரியுமாகும். மீராகுஷா போன்ற பகுத்தறிவுப் பாசறைகளில் பயிற்சி பெற்றவர்களில் சிறப்பானவர்கள், பகுஸாவா யுகிச்சி (Fakuzawa Yugichi) என்பவர் கேயோ பல்கலைக்கழகத்தைத் தோற்றுவித்தவர். கேதோ ஹிரோயுகி (Kato Hiroyuki) என்பவர் தோக்கியோப் பல்கலைக் கழகத்தின் தலைவராகப் பணியாற்றியவர். நிஷிமுரா ஷிகக்கி (Nishimura Shigeki) என்பவர் பேரரசரின் ஆசானாக இருந்தவர். நிஷி அமானே (Nishi Amane) என்பவர் தோக்கியோ ஆசிரியப் , பயிற்சிக் கல்லூரியின் முதல்வர் போன்றவர்கள் வரலாற்றுச் சிறப்பு மிக்கவர்களில் ஒருசிலராவர். நவீன ஜப்பானை மேலைநாடுகளின் பாணியில் உருவாக்குவதில் இவர்கள் காட்டிய ஆர்வமும், எடுத்துக்கொண்ட முயற்சிகளும்தான், ஜப்பானை உலகநாடுகளின் வரிசையில் முன்னணியில் நிறுத்தியது எனலாம்.

[1] 'Japan must be reborn with America its new mother and France its Father' Japan From Pre-history to Modern Times, by John Whitney Hall. P. 289.

இவர்களுள் மிகவும் சிறப்பானவராக பகுஸாவா யுகிச்சியைக் (Fakuzawa Yugichi) குறிப்பிடலாம். பிரெஞ்சுப்புரட்சிக்குச் சிந்தனையாளர்கள் ஆற்றிய பணியைப் போல இவரும் ஜப்பானிய மறுமலர்ச்சிக்குக் காரணமாய் இருந்தார் என்று கூறினால் அது மிகையாகாது.

**கல்வித்துறை**

*1873*-ஜனவரி முதல் நாளிலிருந்து ஜப்பானில் ஐரோப்பிய முறைக் காலக்குறிப்பேடு (Gregorian Calender) நடைமுறைக்கு வந்தது. அதுவரை நிலாக்கோள் பெயர்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு காலத்தையும், பருவங்களையும் கணக்கிடும் சீன முறை தான் ஜப்பானில் இருந்தது. இந்தச் சீனமுறையை மாற்றி ஐரோப்பிய முறையைப் புகுத்திய நாளிலிருந்தே ஜப்பான் நவீன காலத்தில் அடியெடுத்து வைத்தது எனலாம். *1855*ஆம் ஆண்டிலேயே 'ஜப்பானிய மொழி பெயர்ப்புக் கழகம்' ஒன்றை தொகுகாவாக்கள் தொடங்கி, அயல்நாட்டு நூல்களை ஜப்பானிய மொழியில் மொழிபெயர்க்கும் பணியை ஆரம்பித்து வைத்தனர். *1860*-ஆம் ஆண்டிலேயே ஒருசில ஜப்பானிய இளைஞர்கள் ஐரோப்பிய நாடுகளுக்குச் சென்று கல்வி கற்றுத் திரும்பினர். தொகுகாவாக்களின் ஆட்சிக் காலத்திலும் கல்வி முறைச் சீர்திருத் தங்கள் ஆரம்பிக்கப்பட்டிருந்தாலும், மேஜி மாமன்னரின் ஆட்சி யின் போதுதான் விரிவான கல்விக் கொள்கைகள் உருவாக்கப் பட்டுச் செயல்படுத்தப்பட்டன.

*1869*-ல் மேஜி மாமன்னர், 'இன்றிலிருந்து ஜப்பான் முழுவது முள்ள மக்களுக்குக் கல்வி கற்பிப்பது கட்டாயமாகின்றது; இதற்குப் பின்னர் ஜப்பானிய ஊர்களில் படிக்காத ஒரு குடும்பமோ, அல்லது ஒரு குடும்பத்தில் படிக்காத ஒரு மாந்தனோ இருப்பதை நான் காணக்கூடாது' என்றார். இதிலிருந்து ஜப்பானின் கட்டாயக் கல்வித் திட்டம் தொடங்கியது எனலாம். இக் கல்வி முறையின் அமைப்பில் மூன்று மேலைநாடுகளின் கல்வி முறைகளைக் காணலாம். ஆரம்ப நடுத்தரக் கல்வி ஒருசில மாற்றங்களுடன் அமெரிக்கக் கல்வித் துறையை ஒத்தும், பல்கலைக்கழக அமைப்பு, உயர்கல்வி முறை பிரெஞ்சுக் கல்வி முறை யிலும், தொழிற்கல்வி, மற்றும் வேலைவாய்ப்பை அடிப்படையாகக் கொண்ட கல்வி முறை ஜெர்மானியத் தொழிற்கல்வி முறையின் அடிப்படையிலும் இருந்தன.

குழந்தைகளின் ஆரம்பக் கல்வி அவர்களின் ஆறுவது வயதி லிருந்து, பதினான்காவது வயது வரையில் கட்டாய ஆரம்பக்

கல்வியும், பதினுன்கிலிருந்து, பதினெட்டாவது வயது வரையில் நடுத்தரக் கல்வியும், பின்னர் இருபத்திரண்டு வயது வரையில் உயர்கல்வியும் கற்க வேண்டுமென்ற முறை புகுத்தப்பட்டது. நூல்களும், பாடமுறைகளும் அரசாங்கத்தால் நிருணயிக்கப் பட்டன. ஆரம்ப நடுத்தரப்பள்ளிகளில் மாணவர்களுக்கு ஒழுக்கத்தின் மேன்மையும், உள்ளத்தின் வளர்ச்சியைத் தூண்டும் வகையிலும் கல்வி முறைகள் அமைக்கப்பட்டன. இப் பள்ளிகளி லேயே நாட்டுப்பற்றும், மாமன்னரின்மீது பக்தியும் ஊட்டப் பட்டன. நடுத்தரக்கல்வி முடித்த ஒருவன் அரசுபணியில் நுழை வதற்கும், அல்லது உயர்கல்வியை நாடுவதற்கும் வாய்ப்புகள் அளிக்கப்பட்டன. ஆசிரியப் பயிற்சிப் பள்ளிகளும், தொழிற்கல்விக் கூடங்களும் தேவையான அளவு ஏற்படுத்தப்பட்டன. கல்வித் துறையில் அரசும், தனியார் துறையினரும் பல்கலைக் கழகங்கள் நிறுவவும் வழிவகை செய்யப்பட்டது. இறுதியில் கல்விப்பொறுப்பு முழுவதும் அரசே ஏற்றுக்கொண்டது. பெண் குழந்தைகளுக்கான கல்வி முறைகள் ஆரம்பநிலையில் ஆண்கள் கல்வி முறையைவிடச் சற்று மாறுபட்டிருந்தது. பின்னர், ஆண் பெண் இருபாலரும் வேற்றுமையின்றிக் கல்வி பயில வழிவகைகள் ஏற்படுத்தப் பட்டன.

ஆரம்ப நிலையில் ஜப்பானியக் கல்வி முறையில் பிரெஞ்சு மொழி ஆதிக்கம் பெற்றிருந்தது. பின்னர் தொழிற் கல்வியில் ஜெர்மானிய மொழி ஆதிக்கம் பெற்றிருந்தது. ஆங்கிலமும் கூடவே கற்பிக்கப் பட்டது. 1885-லிருந்து 1889-வரை கல்வியமைச்சராய் இருந்த வைகவுண்ட் மோரி (Viocount Mori) என்பார் ஜப்பானியக் கல்வி முறை ஆங்கில மொழியில்தான் இருக்க வேண்டுமென வற்புறுத்தினுர். இதன் காரணம் ஜப்பானிய மொழி எழுத்து க்ளின் கடினமான அமைப்புதான். மேலைநாட்டு முறையைப் போலப் பாடத்திட்டங்களில் உடற்பயிற்சிக்கும், விளையாட்டு களுக்கும் சிறப்பிடம் ஒதுக்கப்பட்டது. மாணவர்களுக்குச் சத்துணவு வழங்கும் திட்டமும் மேற்கொள்ளப்பட்டது. இதைப் போலக் கல்வித்துறையில் மிகவும் ஆர்வம் காட்டி, புதிய முறை களைப் புகுத்தி, தவறுகள் ஏற்பட்டபோது உடனுக்குடன் திருத்தி, ஜப்பானியரனைவரும் கல்வி பயின்று, நாட்டின் முன்னேற்றத்தில் பங்கெடுத்துக் கொண்டு வளர ஜப்பானிய அரசு ஆவன செய்தது.

தேசிய பல்கலைக் கழகங்கள் கல்வி முறையை ஒருமுகப் படுத்தின. மேலைநாட்டு முறைகளின் அடிப்படையிலேயே ஜப்பானியக் கல்வியமைப்பு இருந்த போதிலும், இவர்களும் சில மாற்றங்களைக் கொணர்ந்து சிறப்படையச் செய்தனர். கல்வி

யாண்டு வரம்பு, மதபோதனை, பண்பாட்டுக்கல்வி ஆகியவற்றைத் தங்கள் நாட்டிற்கேற்றாற் போல மாற்றியமைத்துக் கொண்டனர். ஐரோப்பிய மொழிகளிலிருந்த பல ஆயிரக்கணக்கான நூல்கள் ஜப்பானிய மொழியில் மொழி பெயர்த்தெழுதப்பட்டன. ஐரோப்பிய மொழிகளின் மூலச்சொற்களை அப்படியே ஜப்பானிய மொழியில் எழுதிப் படித்ததால் அறிவியல் துறையில் ஜப்பான் தடையின்றி முன்னேற முடிந்தது.

**செய்தித்தாள்கள்**

ஜப்பானில் ஏற்பட்ட இக் கல்வி முன்னேற்றத்திற்குப் பெரிதும் உதவியது அந் நாட்டில் தோன்றிய எண்ணிலடங்காத் தாளிகை களாகும். அறிவியல், வரலாற்றியல், கலை, இலக்கியப் பண்பாட்டியல் முதலியவற்றை முதன்மையாகக் கொண்ட சிறப்பேடுகள் ஏராளமாகத் தோன்றின. கிழமையிதழ்கள், திங்களிதழ்கள், நாளிதழ்கள் ஏராளமாகத் தோன்றின. இவை களில் பெரும்பாலானவை ஜப்பானிய மொழியிலேயே வெளி வந்தவை. இவைகளுள் சில அரசு கொள்கைகளை எதிர்த்தும், தரக்குறைவான செய்திகளையும், உண்மைக்குப் புறம்பான செய்திகளையும், செய்திகளை மனம்போன போக்கில் திருத்தியும், சிதைத்தும் வெளியிட்டன. இத்தகையவைகளைக் களைந்து, நேர்மையான அறிவு முன்னேற்றத்திற்கு உதவும் வகையில் திருத்தி யமைக்கும் வண்ணம் சில சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. 1875-ல் வெளியான அச்சகச் சட்டத்தின் பின்னர் செய்தித் தாள்கள் வெளியிடுகின்ற முறையில் சிறப்பான மாற்றங்கள் ஏற்பட்டன.

## சமயப் பண்பாட்டியல் மாற்றங்கள்

ஒரு நாட்டின் அரசியல் பொருளாதார மாற்றங்களுக்கு அடிப் படையாய் அமைவது அந் நாட்டின் சமுதாயப் புரட்சிகளே ஆகும். அச் சமுதாயப் புரட்சிக்கு அடிகோலுவது சமயப் பண் பாட்டியல் மாற்றங்களாம். ஜப்பானில் மீண்டும் புத்துயிர் பெற்ற ஷிண்தோ சமய மறுமலர்ச்சி, ஜப்பானிய மக்களை அரச விசுவாசம் கொள்ளச்செய்தது. ஷிண்தோ சமயம் ஜப்பானின் இயற்கை வழிபாட்டுச் சமயமென்றும், அதில் சீனப் பண்பியல் கலந்திருக்கவில்லையென்றும், ஜப்பானிய மக்கள் மீண்டும் தங்களு டைய பண்டைய பண்பாட்டிற்குத் திரும்புவதற்கு இதுவே சிறந்த வழியென்றும் கருதினார்கள். ஜப்பானில் பரவியிருந்த கன்பூசிய மதம், தாயிச சமயம், புத்த மதமும்கூடச் சீனாவிலிருந்து வந்தவை

யாகும். இம் மதக் கொள்கைகளை ஜப்பானியர் அனைவரும் நன்கறிவர். இதையொடுக்கும் பொருட்டு ஷிண்தோ சமயம் தவிர மற்ற சமயங்கள் 1871-ல் வெளியிடப்பட்ட அரசாணை ஒன்றால் தடைசெய்யப்பட்டது. புத்தமத வழிபாடுகளும் தடை செய்யப்பட்டது. ஷிண்தோ சமயம் ஒன்றே வலியுறுத்தப் பட்டது.

ஷிண்தோ சமயத்தின் சிறப்பு நிலை மேஜியின் அரசியல் அமைப் பிலேயே குறிப்பிடப்பட்டிருந்தது. அரசரும், அவருடைய குடும் பத்தினரும் தெய்வத் தன்மையுடைவர்களென்றும், வழிபாட்டுக் குரியவர்களென்றும் வற்புறுத்தியது. இதனால்தான் பள்ளிகளில் பேரரசர் முட்சுஹிதோவின் படம் வைக்கப்பட்டது. பள்ளி தொடங்கும் முன்பு இப் படத்தின் முன்னின்று மாணவர்களும் ஆசிரியர்களும் வழிபாடு செய்வர், ஜப்பான் தெய்விக நாடு என்றும், அதனால்தான் தெய்வத் தொடர்புள்ள பேரரசர் ஆட்சி புரிகிறார் என்றும் அறிவிக்கப்பட்டது. இத்தகைய சிறப்புத் தன்மைகளைக் கொண்ட ஜப்பான் மற்ற நாடுகளுக்குச் சமயப் பண்பாட்டுத் துறையில் வழிகாட்டியாக விளங்கவேண்டும் என்பது போன்ற கருத்துகள் வலியுறுத்தப் பெற்றிருந்தன. இவ்வாறாகப் பேரரசரின் தெய்வத் தன்மையும், ஜப்பானின் பண்டைய சமய நம்பிக்கையும், மூத்தோரை வழிபடுகின்ற முறையும் மீண்டும் நிலை நாட்டப்பெற்றது. இச் சமயக் கருத்துகள் அனைத்தும் மக்க ளாட்சிக் கருத்துகளுக்கு முரணாக இருப்பதையும், மேலைநாட்டு அரசியல் கருத்துகள் ஏற்றுக்கொள்ளப்பட்ட பின்னரும், இது போன்ற பண்டைய ஜப்பானியக் கொள்கைகள் வலியுறுத்தப் பட்டு, ஜப்பான் முழுக்க முழுக்க மேலைநாட்டுக் கொள்கைகளுக்கு அடிமையாகவில்லை என்பதைத் தெளிவுபடுத்தியது.

இந்த ஷிண்தோ மத வளர்ச்சியும், இம் மதக் கருத்துகளை பரப்புவதில் அரசாங்கம் காட்டிய ஆர்வமும்தான், ஜப்பானை அந்நியர் ஆதிக்கத்திலிருந்து காப்பாற்றியது என்றும் கூறலாம், இம் மதம் ஒவ்வொரு ஜப்பானியனையும் தன் நாட்டைப் பற்றியும், தொடர்ந்து ஆளுகின்ற அரச குடும்பத்தின் புனிதத் தன்மை பற்றியும், அறுபடாத பண்பு பற்றியும் சிந்திக்க வைத்து, தன் பேரரசருக்கும், பெருமை பொருந்திய தன் நாட்டிற்கும் உடல், பொருள், ஆவி, மூன்றையும் தியாகம் செய்கின்ற பண்பினை வளர்த்தது. இத்தகைய தன்மை கிழக்காசிய மக்களை வியப்பி லாழ்த்தியது. ஷிண்தோ சமயத்தின் மறுமலர்ச்சியை அரசியல் கண்ணோட்டத்துடன் நோக்கின் அது பேரரசரை மையமாகக் கொண்டு, தேசிய உணர்வுகளை மக்களிடையே பரப்பிய பண்பாட்

டியல் எனலாம். இத்தகைய பண்பாட்டியல் தொகுகாவாக்களின் காலத்திலேயே தோன்றி, இரட்டையாட்சி முறையை ஒழித்து, மன்னரின் பேராட்சியை ஏற்படுத்தவேண்டும் என்ற நோக்கத்துடன் வளர்ந்தது என்பதையும் கண்டோம். இந்தக் கொள்கையின் அடிப்படையில்தான் மேஜி முன்னிலை மீட்சி ஏற்பட்டது. இந் நிகழ்ச்சிக்குப் பின்னர் ஜப்பானியப் பண்பாடும் ஜப்பானிய மயமாக வேண்டும் என்ற கோட்பாட்டின்கீழ் இம் மதம் மக்களிடையே வளர்ந்தது. பண்டைய மாமன்னர்களையும், மன்னரவைகளையும், ஆட்சி முறைகளையும் உயர்த்திச் சீர்திருத்துவதற்காக எவ்வாறு பழங்காலத்தில் சீனப் பண்பாடும் சமயமும் அரசியல் முறையும் ஜப்பானில் புகுந்ததோ, அதைப் போலவே, முன்னிலை மீட்சிக்குப் பின்னர் ஏற்பட்ட நவீன மாறுதல்களால் மீண்டும் ஜப்பான், ஐரோப்பியப் பண்பாடுகளையும் சமயத்தையும் அரசியல் முறையையும் ஏற்றுக்கொண்டு, தன் நாட்டுப் பண்பாடு, சமயம், அரச பக்தி, நாட்டுப்பற்று முதலியவற்றை மறந்து அயல் நாட்டுப் பண்பாட்டிற்கு அடிமையாவதைத் தடுக்கவே இந்த ஷிண்தோ சமயம் தேசிய சமயமாக வலியுறுத்தப்பட்டது. இச் சமய மறுமலர்ச்சியை, நவீன ஜப்பானை ஒன்றிணைக்கும் சாதனமாகக் கருதலாம்.

இவ்வாறு ஷிண்தோ சமயம் அரசு ஆதரவு பெற்ற ஓர் அரச சமயமாக வளர்ச்சியடைந்த போதிலும், ஏனைய சமயங்களை ஒறுக்கும் உத்தரவுகளோ, அழிக்கும் நிகழ்ச்சிகளோ இல்லை. கிறித்துவ சமயம் ஐரோப்பிய உறவுகளுடன் நாட்டில் பரப்பப் பட்டாலும், ஜப்பானிய மக்களை அவ்வளவாகத் தன்பால் ஈர்க்க முடியவில்லை.

### இராணுவத் துறை மாற்றங்கள்

நிலமானிய முறை அழிக்கப்பட்டபோது நிலமானியப் படையும் கலைக்கப்பட்டது. படைக்குலப் பரம்பரையான சாமுராய்கள் புதிய ஜப்பானை உருவாக்கும் பணியில் பெரும் பங்கேற்றிருந்தனர். மேஜி ஆட்சியின் ஆரம்ப நிலையில் ஜப்பானிய அரசு தேசியப் படை ஒன்றனை ஏற்படுத்தியிருந்தது. இப் படையமைப்பிலும் மேலைநாட்டு முறைகள் புகுத்தப்பெற்று, ஜப்பானியப் படையும் புதிய உருவம் பெற்றது. 1873ஆம் ஆண்டு ஜப்பானியர் அனைவரும் தேசியப் படையில் சேரலாம் என்று அறிவிக்கப் பட்டது. அதுவரை இராணுவம் என்பது சாமுராய் குலத்தவருக்கு மட்டும்தான் என்ற நிலையிருந்தது. வகுப்பு, பிறப்பு, செல்வம் போன்ற சமுதாயப் பிணிகள் அகற்றப்பட்டு, அனைவரும் எவ்வித வேறுபாடுமின்றி எத் துறையிலும் பணியேற்கலாம் என்ற

சட்டத்தின்படி ஜப்பானியர் அனைவரும், இராணுவத்தில் சேரவும், உயர் பதவிகள் பெறவும், வழியேற்பட்டது. இந்த இராணுவம் முதலில் பிரெஞ்சுப்படை முறையில் அமைக்கப்பெற்று, பிரெஞ்சுப் படையதிகாரிகளால் பயிற்றுவிக்கப்பட்டது. 1871ஆம் ஆண்டில் பிரான்சு ஜெர்மனியால் தோற்கடிக்கப்பட்டது. இதன்மூலம் ஜெர்மனி தனது இராணுவச் சிறப்பை ஐரோப்பாவில் நிலைநாட்ட, ஜப்பானும், ஜெர்மானியப் படையமைப்பு முறையைப் பின்பற்றியது. புதிய ஆயுதங்கள், போர் நுணுக்கங்கள், பயிற்சிகள், அமைப்பு ஆகிய அனைத்தும் ஜெர்மானிய அதிகாரிகளால் கற்றுத் தரப்பட்டன. கடலால் சூழப்பட்டுள்ள தீவுக் கூட்டங்களே ஜப்பான் என்பதையும், முதன்முதலில் தங்களின் தனித் தன்மையை அழித்தது அமெரிக்கக் கடற்படைதான் என்பதையும் உணர்ந்த ஜப்பானியர்கள் கடலாதிக்கத்தின் மேன்மையை உணர்ந்து, தங்கள் கடற்படையையும் நவீன முறையில் அமைக்க விரும்பினர். இத் துறையில் பயிற்சியளிக்க, கடற்படைத் துறையில் தன்னிகரற்று விளங்கிய ஆங்கிலேயர் முன்வந்தனர். இங்கிலாந்திலிருந்து போர்க் கப்பல்கள் வாங்கப்பட்டன. ஆங்கிலக் கடற்படையதிகாரிகள் பயிற்சியுமளித்தனர். பின்னர், ஜப்பானிலேயே போர்க் கப்பல்கள் கட்டப்பட்டன. இன்று உலகிலேயே அமெரிக்காவிற்கு அடுத்தாற்போல மிகப் பெரிய கப்பல்களைக் கட்டுவதில் ஜப்பான் முதலிடத்தைப் பெற்றிருக்கின்றது என்பதையும் கருத்தில் கொள்ள வேண்டியுள்ளது.

## பொருளாதார மாற்றங்கள்

தொகுகாவா ஆட்சியின் இறுதிவரையிலும்கூட நாணய முறை தோற்றுவிக்கப்படவில்லை. நாணய முறை இல்லாத இக் காலத்தில் அரிசிதான் செல்வத்தை மதிப்பிடும் அளவுகோலாக இருந்தது. கொடுக்கல் வாங்கல்களின் போதும் நாணயங்களுக்குப் பதிலாக அரிசியின் மதிப்புப் பயன்படுத்தப்பட்டது (Rice as Standard of Exchange). 1868-க்குப் பிறகுதான் வெள்ளி, தங்க நாணயங்கள் வெளியிடப்பட்டன. ஆரம்ப நிலையில் வெள்ளி தங்க நாணயங்களுக்கிடையேயான விகித முறை தெளிவற்றிருந்தது. இந் நிலையைப் பயன்படுத்திக் கொண்ட அந்நிய வர்த்தகர்கள் பெருமளவு தங்கத்தை ஜப்பானிலிருந்து ஏற்றுமதி செய்தனர். இவ்வாறு தங்கம் வெளியேற்றப்படுவதைத் தடைசெய்ய வேண்டுமானால், ஜப்பானிய நாணய முறை தெளிவாக்கப்பட்டு, வைப்பக முறையும் (Banking System) ஏற்படுத்துவது அவசியமாயிற்று. 1872ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட சட்டத்தின்படி அமெரிக்க வைப்பக முறை ஜப்பானில் ஏற்படுத்தப்பட்டது. அடுத்த

ஆண்டில் முதல் தேசிய வைப்பகமும் (First National Bank) நிறுவப் பட்டது. காகித நாணயங்களும் வெளியிடப்பட்டன. காகித நாணயங்களுக்கும் உலோக நாணயங்களுக்குமிடையேயான விகித முறையும் தெளிவாக்கப்பட்டது. நாடு முழுவதும் வைப்பகங்கள் ஏற்படுத்தப்பட்டன. இம் முறையிலும் ஏற்பட்ட சில குறைகளை நீக்கும் முறையில் 1882-ல் ஜப்பானிய வைப்பகம் (The Bank of Japan) நிறுவப்பட்டு, நாணய முறை அதிகாரம் அனைத்தும் இவ் வைப்பகத்தின் பொறுப்பில் விடப்பட்டது. பின்னர், வர்த்தக வைப்பகங்கள், விவசாய வைப்பகங்கள், தொழில்க வைப்பகங்கள் எனத் தனித்தனி வைப்பகங்கள் அந்தந்த துறையைச் சார்ந்த நிலையில் ஏற்படுத்தப்பட்டன. இம் முறைகளால் ஜப்பானிய நிதிக் கொள்கை நவீன முறையில் செயல்பட ஏதுவாகியது. தொழில் வளர்ச்சியின் அடிப்படையே சீரான, வளமான நிதி நிலைமையல்லவா?

ஆரம்ப நிலையில் ஜப்பானியத் தொழில்கள் அனைத்தும் நகர்ப் புறம் சார்ந்த குடிசைத் தொழில்களாக, ஒருசில குடும்பங்களின் தனி பொறுப்பாக இருந்தது. 'மித்சு' (Mitsui) போன்ற குடும்பத் தினர் தொழில் துறையில் செல்வாக்குப் பெற்றிருந்தனர். பின்னர்ப் புதிய தொழில்கள் ஆரம்பிக்கப்பட்டபோது, 'இளம் முதலாளிகள்' (Young Capitalists) என்றழைக்கப்பட்ட ஒருசில செல்வந்தர்கள் தொழிலகங்களில் தங்களின் செல்வத்தை முதலீடு செய்து வெற்றி பெற்றனர். இந்த 'முதலாளிகள்' தான் ஜப்பானிய புரட்சிக்கும் ஆணிவேராய் இருந்து உதவியவர்கள். மேஜியின் ஆட்சி முறையில் ஐரோப்பிய முறைத் தொழிலகங்கள் ஆரம்பிக்கப்பட்டபோது, இதுகாறும் தொழில் துறையில் செல் வாக்குப் பெற்று வளமடைந்த ஒருசில செல்வக் குடும்பங்கள், இப் புதிய தொழிலகங்களில் பெரும் முதலீடு செய்ய அஞ்சினர். இவர்களின் அச்சத்தைப் போக்கி, புதிய தொழில்கள் தொடங்கப் பெறுவதற்கு அரசு ஊக்கமளித்தது. இதன் முதற்படியாக அரசே தொழில்களைத் துவக்கியது. பெரும் முதலீடுகள் செய்து அரசு துவக்கிய தொழிலகங்களை முன் மாதிரியாகவும், அரசின் ஆதரவு, ஊக்கத்துடன் தனியார் துறையும் துவங்கியது. தொழில்கள் வளர்ச்சியடைந்தபோது, பெரும் முதலாளிகளிடம் அரசு தமது தொழிலகங்களை ஒப்படைத்துவிட்டு, வெளியேறியது. இதனால் பெரும் செல்வம் படைத்த ஒருசில தனிக் குடும்பங்கள் இதுவரை அரசு நடத்திவந்த தொழிலகங்களை வாங்கின. ஒருசில பெரிய குடும்பங்கள் ஜப்பானியத் தொழில் துறையையே கட்டுப்படுத்து மளவுக்கு வளர்ந்தன. இவ்வாறு நாட்டின் தொழில்துறை வளர்ச்சி முழுவதையும், அதன் மூலமாக நாட்டின் பொருளாதார

ஆக்கத்தையும் தன்பால் ஈர்த்துக்கொண்ட குடும்பங்களுக்கு 'சைபாத்சு' (Zaibatsu) என்று பெயர்.

'சைபாத்சு' (Zaibatsu)

ஜப்பானியப் பொளாதார வளர்ச்சியில் தூய முதலாளித் துவமோ அல்லது தூய தனித் தொழிலாளித்துவமோ ஏற்பட வில்லை. இவையிரண்டும் கலந்த முதலாளித்துவக் குடும்பங்கள் தோன்றின. இத்தகைய குடும்பங்கள் அரசின் ஆதரவுபெற்று, பெருந் தொழில்களைத் தொடங்கி, ஏற்றுமதி இறக்குமதித் துறை களில் பேராதிக்கம் பெற்றன. மிக வேகமான தொழில் வளர்ச் சியை விரும்பிய அரசு, அத் தொழில் முன்னேற்றத்தை உருவாக்கும் ஆற்றல்பெற்ற ஒரு சில செல்வக் குடும்பங்களின் சேவையை நாட்டின் தொழில்துறை ஏற்றத்திற்குப் பயன்படுத்திக்கொண்டது போற்றுதற்குரியதேயாகும். இப் பெரும் தொழிற் குடும்பங்களே 'சைபாத்சு' என அழைக்கப்படுகின்றன. 'மித்சு' (Mitsui), 'மித்சு பிஷி' (Mitsuibishi) 'சுமிதாமோ' (Sumitamo) 'யசுதா' (Yasuda) போன்ற மிகப் பெரிய செல்வக் குடும்பங்கள் 'சைபாத்சு'வின் முக்கிய உறுப்பினர்கள். மற்றும் 'ஒகுரா' (Okura) 'அசனோ' (Asano), 'குஹாரா' (Kuhara), 'ஓகவா-தனகா' (Ogawa-Tanaka), 'கவசாகி' (Kawasaki), 'ஷிபுசவா' (Shibusawa), 'பருக்காவா' (Farukawa), 'மோரி' (Mori) போன்றதொழில் குடும்பங்களும் 'சைபாத்சு'வில் அடங்கும். சாமுராய் குலத்தவரும் 'சைபாத்சு' வில் இடம் பெற்றுள்ளனர். 'சைபாத்சு'விலேயே மிகச் சிறப்பான இடத்தைப் பெற்றுள்ள 'மித்சு' (Mitsui) குடும்பம் சாமுராய் குலத்தைச் சார்ந்தது என்பது குறிப்பிடத்தக்கதாகும். மித்சு, மித்சுபிஷி, சுமிதாமோபோன்ற 'சைபாத்சு' குடும்பங்கள் மட்டும் இரண்டாம் உலகப் போருக்கு முன்னர் ஜப்பானிய மொத்தப் பொருளாதாரத்தில் மூன்றில் ஒரு பங்கைக் கட்டுப்படுத்தி யிருந்தன. ஜப்பானியத் தொழில், மற்றும் வர்த்தகத்துறை முன்னேற்றத்திற்கும், ஆதிக்க வளர்ச்சிக்கும் அடிப்படைக் காரண மாக இருந்தவை இந்த 'சைபாத்சு' குடும்பங்களே. ஜப்பானியப் பொருளாதாரத்தின் முதுகெலும்பாகவும், அரசியல் ஆதிக்க வளர்ச்சியின் உயிர்நாடியாகவும் விளங்கி நின்றது இப் பெரும் தொழிற் குடும்பங்களே என்பதை ஜப்பானிய வரலாறு எடுத் துரைக்கின்றது.

சில முக்கியத் தொழில்கள் வளர்ச்சியில் ஜப்பானிய அரசு மிகுந்த ஆர்வம் காட்டியது. சிறப்பாகப் போக்குவரத்து, செய்தித் தொடர்புத் துறைகளில் மிகவும் கவனம் செலுத்தப்பட்டது. 1868ஆம் ஆண்டு புதிய தபால் தந்தி முறை முதன்முதலாகப்

புகுத்தப்பட்டு, 1872-ல் நாட்டுடைமையாக்கப்பட்டது. 1877-ல் தொலைபேசி நிறுவனமும் ஏற்படுத்தப்பட்டது. தோக்கியோ விற்கும், யோஹோஹாமாவிற்கும் இடையேயான 18மைல் நீள இருப்புப் பாதை போடப்புட்டு 1872-ல் இரயில் யுகம் ஆரம்பிக்கப் பட்டது. 1894ஆம் ஆண்டிற்குள் 2118 மைல் நீள இருப்புப் பாதைகள் போடப்பட்டன. தரைவழி நெடுஞ்சாலைகளும் திட்ட மிட்டு வளர்க்கப்பட்டன. இந்தச் செய்தித் தொடர்பு, போக்கு வரத்து வளர்ச்சி, தொழில் முன்னேற்றத்திற்குப் பெரிதும் காரணமாய் இருந்தது.

கடல் வழிச் சாதனங்கள் பண்டைய காலத்திலிருந்தே ஜப்பானில் முக்கியத்துவம் பெற்றவை. கப்பல் படைப் பெருக் கத்தைப் போலவே, வர்த்தகக் கப்பல்களும் ஏராளமாகக் கட்டப் பட்டன. கப்பல் கழகங்கள் தோற்றுவிக்கப்பட்டன. 'மித்சு பிஷி' கப்பல் நிறுவனம் ஜப்பானியப் பெருங்கடல் பாதைகளில் ஐரோப்பிய கப்பல் கழகங்களின் போட்டியிடையே மிகவும் சிறப்புப் பெற்றது; ஜப்பானின் வர்த்தக மேம்பாட்டிற்கு அடிப் படைக் காரணமாகவும் அமைந்தது.

ஜப்பான் நெசவுத் தொழிலிலும் வளர்ச்சியடைந்தது. சிறப்பாக ஜப்பானியப் பருத்தி, பட்டாடைகள் உலகப் புகழ் பெற்றவை. பருத்தி ஆலைகளுக்கு வேண்டிய பருத்தி முழுவதையும் இந்தியாவிலிருந்து தருவித்துக்கொண்டது. உலகச் சந்தைககளில் ஜப்பானியத் துணிகள் சிறப்பிடத்தைப் பெற்றன. ஐரோப்பிய நாட்டினரின் வர்த்தக நுணுக்கங்களைப் பின்பற்றிய ஜப்பான் அந் நாடுகளைப் போலவே உலக நாடுகளில் தொழிற் கண்காட்சி அரங்குகளை நிறுவி, அவைகளில் ஜப்பானிய ஆலைப் பொருள்களை குவித்து, விற்றுப் பெருஞ்செல்வம் ஈட்டியது. சீனாவுடன் ஏற்பட்ட முதல் போருக்குப் (1894-95) பின்னர் ஜப்பானியத் தொழில்துறை வளர்ச்சி பன்மடங்காக உயர்ந்தது.

### வேளாண்மை வளர்ச்சி

ஜப்பானில் பொருளாதாரவளர்ச்சி ஏற்படுவதற்குத் தொழிற் சாலை முறை (Factory System) நடைமுறைக்கு வந்ததுதான் அடிப் படைக் காரணம் என்பர் சிலர். ஆனால் நாடு முழுமைக்கும் நன்மை விளைத்த வேளாண்மைப் புரட்சியே ஜப்பானியப் பொரு ளாதார ஆக்கத்திற்கு அடிப்படைக் காரணம் எனக் கூறுவதே சாலப் பொருந்தும். ஏனெனில் 1871-ல் நிலப் பிரபுக்கள் தங்கள் பரம்பரையுரிமைகளைத் தாங்களாகவே விட்டுக் கொடுத்ததுதான் ஜப்பானிய பொருளாதார முன்னேற்றத்திற்கு அடிப்படையான

ரணமாகும். நிலப்பிரபுத்துவ வேளாண்மையின் போதும் ண்ணை முறை இருந்து வந்தது. ஆனால் இப் பண்ணைகளில் புதிய வளாண்மை முறைகளைப் புகுத்தி வளம் காண, பெரும் நிலக் மூரார்கள் முன்வரவில்லை. நிலப் பிரபுத்துவ முறை மறைந்த பிறகு ண்ணை முறைகளில் சீர்திருத்தம்செய்து, வேளாண்மைப் புரட் சியை ஏற்படுத்துவது சாத்தியமானது. 1876-ல் தோக்கியோவிலும், 1877-ல் ஒக்கைத்தோவிலும் வேளாண்மைப் பல்கலைக் கழகங் களும், செயல்விளக்கத்திட்ட முறைகளும் ஏற்படுத்தப்பட்டன. இவைகளில் பயின்று தேர்ந்தவர்கள் நாடு முழுவதும் சென்று புதிய செயல் முறைகளை விளக்கினர். இயந்திரக் கலப்பைகளும், ஒட்டு வீரிய விதைகளும் பெருமளவில் பயன்படுத்தப்பட்டன. வேளாண் மைப் புரட்சி தீவிரமடைந்தது. உற்பத்தி 30 சதவீதம் உயர்ந்தது. நெற்பயிருடன் கோதுமை, பார்லிபோன்ற பயிர்களும் பரவலாகப் பயிர்செய்யப்பட்டன.

வேளாண்மையோடு கடலோர ஊர்களில் மீன் பண்ணைமுறை யும் உயர்வு பெற்றது. நவீனப் படகுகளைக் கட்டி, மீன் பிடிக்கும் சாதனங்களை உருவாக்கி, மீன்பிடி தொழிலை வளர்த்துக் கொண் டனர். இதுவரை துணைத் தொழிலாக இருந்த மீன் பிடிக்கும் தொழில் ஜப்பானின் முக்கியத் தொழில்களில் ஒன்றாக உயர்வு பெற்றது.

பட்டுத் தொழில்தான் ஜப்பானுக்கு ஆரம்ப நிலையில் உலகப் புகழைத் தேடித்தந்த தொழில். பின்னர், பருத்தித் துணி உற்பத்தி யிலும் ஜப்பான் முதலிடம் பெற்றது. இந்த இரு தொழில்களும் ஜப்பானியருக்கு ஏராளமான அளவில் அந்நியச் செலாவணியைக் கொடுத்தன.

தொழிற்புரட்சியால் நகரங்கள் மட்டுமே வளர்ந்தன. கிராமப் புறங்களிலிருந்தும் குறைந்த கூலிக்கு வேலைசெய்ய பலர் நகரங்களை நாடிவந்தனர். வேளாண்மைப் புரட்சியால் உள்நாட்டுச் சந்தை களில் உணப் பொருள்கள் மலிவாகக் கிடைத்தன. உணவில் தன்னிறைவு பெற்றது ஜப்பான். பொருளாதாரச் சமநிலையைக் காக்கவும், சொத்துரிமையைப் பாதுகாக்கவும், மேலும் வளர்ச் சிக்கு வழிவகுக்கவும் அரசு அதிக ஆர்வம் காட்டியது. அவர்களின் உற்பத்திப் பொருள்களை விற்க உள்நாட்டில் சந்தைகளை அமைத் தும், போக்குவரத்து வசதிகளைப் பெருக்கியும், வேளாண்மைக் கண்காட்சிகளையும், விழாக்களையும் நாடு முழுவதிலும் ஏற்படுத் தியும், அரசு வேளாளருக்கு ஆதரவு காட்டியது. நீர்ப்பாசன வசதிகள் பெருக்கப்பட்டன. நிலவள வைப்பகங்கள் ஏற்படுத்தப் பட்டுக் கடன் கொடுக்கவும் வகை செய்யப்பட்டது. மேலும்,

வேளாண்மைத் துறையில் உயர்கல்வி பெற ஜப்பானிய மாணவர்கள் அமெரிக்க, ஐரோப்பிய நாடுகளுக்கு அனுப்பப்பட்டனர்.

இவ்வாறு வேளாண்மைப் புரட்சியின் விளைவாக உற்பத்தி உயர்ந்தபோதிலும், பெரும்பான்மையான ஜப்பானிய உழவர்கள் வறுமையில் வாடினர். பெரும் பண்ணைகளில் கூலிவேலைசெய்தும், அல்லது நகர்ப் புறங்களை நாடி ஆலைகளில் குறைந்த ஊதியத்திற்குப் பணிபுரிந்து, வறுமையில் வாடினர். நவீன விவசாய முறையில் செலவுகள் பெருகின. அரசின் நிலவரிக் கொள்கையும் வேளாண்குடி மக்களுக்கு ஊக்கமளிக்கவில்லை. புதிய நிலவரித் திட்டத்தின்படி நிலத்தின் மதிப்பிற்கேற்ப வரிவிதிக்கப்பட்டது. இதற்கு முன்னர் நிலத்தின் வருமானத்திற்கேற்ப வரிவிதிக்கப்பட்டிருந்தது. விளைச்சல் இருந்தாலும் இல்லையென்றாலும் குறிப்பிட்டத் தொகையை வரியாகச் செலுத்தக் கட்டாயப்படுத்தப்பட்டனர். பருவம் பொய்த்த காலத்தோ, அல்லது இயற்கையின் எதிர்ப்பினாலோ பயிர்கள் நாசமடைந்த நிலையிலும் நிலவரி, அதுவும் பணமாகவே செலுத்தப் படவேண்டுமென வற்புறுத்தப்பட்டனர். சிறு சிறு துண்டு நிலங்களை நம்பி வாழ்ந்திருந்த ஏழை உழவன், இவ் வரிக் கொடுமையால் அல்லலுற்றபோது நிலத்தை விற்றுவிட்டுக் கூலி வேலையை நாடினான். ஒரு சிலர் கிராமப் புறங்களிலிருந்து நகரங்களை நோக்கிப் புதுவாழ்வு தேடிப் படையெடுத்தனர். இதனால் சிறு சிறு விவசாய பண்ணைகள் மறைந்து, பெரும் பண்ணைகள் தோன்றின. நகர்ப்புறம் நாடிச் சென்றவர்களில் சிலர் வணிகம், தொழில்கள் மூலமாக வளம்பெற்றனர். இவ்வாறு வளம் பெற்றவர்கள் அரசியலிலும் ஈடுபாடு கொண்டனர்.

**அயல்நாட்டு வணிக ஒப்பந்தங்கள்**

1858-ல் அமெரிக்காவுடன் செய்துகொண்ட வணிக ஒப்பந்தத்தை மாற்றியமைப்பதற்காக, ஜப்பானிய அரசு இவாகுரா என்பவரின் தலைமையில் ஒரு தூது குழுவை அனுப்பியது (Iwakura Mission). ஜப்பானின் விருப்பப்படியே அமெரிக்கா தனது வணிக ஒப்பந்தங்களைத் திருத்தியமைத்துக் கொடுத்தது. ஆனால் ஐரோப்பிய நாடுகளைப்போல ஒரே மாதிரியான வர்த்தக உரிமைகளை அமெரிக்காவும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற ஜப்பானின் வேண்டுகோள் மறுக்கப்பட்டது. தன்னுடைய சிறப்பு உரிமையை அமெரிக்கா விட்டுக்கொடுக்க மறுத்தது. 1880-ல் உருவாக்கப்பட்டுச் செயல்முறைக்கு வந்த 'ஜப்பானியக் குற்றவியல் சட்டங்கள்' ஜப்பானில் வாழும் ஏனைய நாட்டினரையும் கட்டுப்படுத்தும் என ஜப்பானிய அரசு அறிவித்தது. ஆனால் அயல் நாடுகள் ஜப்பானிலுள்ள தங்கள் நாட்டுக் குடிமக்களை

விசாரிப்பதற்கு தங்கள் நாட்டு நீதிபதிகளே தகுதியானவர்களென்றும், எனவே அவர்களும் ஜப்பானிய நீதிமன்றங்களில் இடம் பெற வேண்டும் எனவும் விரும்பின.

ஐரோப்பிய நாடுகள் அனைத்தையும் ஒரு சேரக் கூட்டி தனது வணிக ஒப்பந்தங்களையும், உரிமைகளையும் ஏற்றுக் கொள்ளச் செய்வதில் உள்ள சிரமங்களை உணர்ந்த ஜப்பான் ஒவ்வொரு நாட்டுடனும் தனித்தனியாகப் புதிய ஒப்பந்தங்களைச் செய்துகொள்ளும் முயற்சியில் இறங்கியது; வெற்றியும் கண்டது. 1889-ல் மெக்ஸிகோவுடனும், பின்னர் ஏனைய ஐரோப்பிய நாடுகளுடனும் தனித்தனியாகப் புதிய வர்த்தக ஒப்பந்தங்கள் செய்து கொள்ளப்பட்டன. 1894-ல் பிரிட்டன் ஜப்பானுடன் நாவாய்-வணிக ஒப்பந்தம் செய்து கொண்டது. அமெரிக்காவும் இதைப் பின்பற்றியது. இத்தகைய வணிக ஒப்பந்தங்கள் ஜப்பானில் ஏற்பட்டு தொழில்-வேளாண்மைப் புரட்சிகளின் விளைவாக உற்பத்தி செய்யப்பட்டுக் குவிக்கப்பட்டிருந்த ஏராளமான பொருள்களை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்து வளம்பெறும் வாய்ப்புகள் ஏற்பட்டன. அதே நேரத்தில் தனது தொழிலகங்களுக்கு வேண்டிய மூலப் பொருள்களை உலக நாடுகளிலிருந்து தடையின்றி இறக்குமதி செய்து கொள்ளவும் வழியேற்பட்டது.

முடிவாக மேஜி புரட்சியைப் பற்றிக் கூற முயலும்போது K. S. Latourette என்ற வரலாற்று ஆசிரியரின் கருத்தினை இங்கே குறிப்பிடுவது மிகவும் பொருந்தும். 'புதியன புனையும் ஆக்கப் பணி 1894-க்குள் பெரும்பாலும் முடிவுற்றது. திறமை மிக்க, நிலையான ஆட்சித் துறையும், வரும் முயற்சிகள், தவறுகளின் பின்னர் முறையான அரசியல் அமைப்பும் உருவாக்கப்பட்டு செயல் முறைக்கு வந்துவிட்டது. மேலைநாட்டுப் பாணியில் ஜப்பானிய இராணுவமும் கடற்படையும் திருத்தியமைக்கப்பட்டு வலிமை பெற்றன. மக்கள் அனைவருக்கும் பயன்படுகின்ற திருந்திய புதிய கல்வித்திட்டம் தீட்டப்பட்டு வெற்றியுடன் செயல் படத் தொடங்கிவிட்டன. ஜப்பானியச் செய்பொருள்களை அயல்நாட்டுப் போட்டிகளிலிருந்து காக்கும் வகையில் காப்பு வரித்திட்டமும், மக்களுக்கு நீதிகோரும் தனியுரிமைத் திட்டங்களும் தயாராய் இருந்தன. தொழிலும் வர்த்தகமும் அரசு ஆதரவுடன் பெருகி வளரத் தொடங்கிவிட்டன. சீர்திருத்தக் கருத்துகளுக்கும், முன்னேற்றத் திட்டங்களுக்கும் முடிவே இல்லையெனினும், ஜப்பானில் உருவாக்கப்பட்ட முன்னேற்றத்திட்டங்கள் பலனளிக்க ஆரம்பித்து விட்டன. மேலைநாட்டு முறைகளை ஜப்பானில் புகுத்தும்போது ஏற்பட்ட ஆரம்ப அதிர்ச்சியும், தயக்கமும் மறைந்துபட்டன. 1894லிருந்து புதிய ஜப்பான் வெற்றி நடை பயிலத் தொடங்கிவிட்டது. இனி உலக வல்லரசுகளுடன் இணைந்து உயர்ந்த இடத்தை ஜப்பான் கண்டிப்பாக பெற்று உயரும் என்ற நம்பிக்கை ஒளி வீசத் தொடங்கிவிட்டது.'

## இயல் மூன்று

# 1. சீன-ஜப்பானியப் போர் (1894-95)

உலகப் படத்தை நோக்கும்போது சீனாவிற்கும் ஜப்பானுக்கும் இடையில் கொரியா அமைந்திருப்பதைக் காணலாம். வரலாற்றின் தொடக்க காலத்திலிருந்தே சீன-ஜப்பானிய உறவுக்குப் பாலமாகக் கொரியா இருந்து வந்திருக்கின்றது. சீனப் பேரரசு சிறப்போடு இருந்த காலை கொரியா வழியாகத்தான் ஜப்பானை அடைந்திருக்கின்றது. சீனாவின் அரசியல், சமயம், பண்பாடு, ஆக அனைத்துமே கொரியா வழியாகத்தான் ஜப்பானை அடைந்திருக்கின்றன. ஆதிக்காலம் தொட்டே கொரியாவின் வரலாறும் தன் இரு பக்கங்களிலும் பரவியிருக்கின்ற சீன ஜப்பானிய வரலாறுகளுடன் பின்னிப் பிணைந்து கிடக்கின்றது. 16ஆம் நூற்றாண்டிலிருந்தே கொரியா, சீன-ஜப்பானியரின் தாக்குதல்களுக்கு உள்ளாகி இருந்து வந்திருக்கின்றது. இத் தாக்குதல்களின்போது சீனாவும் ஜப்பானும் போட்டியிட்டனவே தவிர, வேற்று நாட்டவர்களின் தலையீடு இருந்ததில்லை. ஆனால் 19ஆம் நூற்றாண்டின் இறுதியில், வளர்ந்துவிட்ட ஜப்பான் தனது எல்லைகளை விரிவடையச் செய்யும் எண்ணம் கொண்டபோது அதன் பார்வை இயற்கையாகவே கொரியாவை நோக்கி நிலைத்து நின்றது. ஜப்பான் கொரியா மீது தன் கவனத்தைச் செலுத்தியபோது, சீனா மட்டுமன்றி, ஐரோப்பிய நாட்டினரும், அவர்களில் சிறப்பாக ருஷியாவும் கொரியாவை அடையும் எண்ணம் கொண்டிருந்தன. இப் புதியப் போட்டியாளர்கள் தோன்றிய பின்னர் கொரியப் பிரச்சினை உலகநாடுகளின் பொதுப் பிரச்சினையாக மாறியது. ஐரோப்பிய வழிகளில் தன்னை வளர்த்துக்கொண்ட ஜப்பான், ஐரோப்பிய ஏகாதிபத்தியக் கொள்கைகளையும் ஏற்றுக்கொண்டு செயல்படத் துவங்கியது. கொரியாவை ஜப்பான் கைப்பற்ற வேண்டுமெனில், கொரியாவின் பாதுகாவலனாக இருந்த சீனாவை

எதிர்க்கவேண்டியிருக்கும். எனவே முதல் சீன ஜப்பானியப் போரின் அடிப்படைக் காரணம் கொரியப் பிரச்சினையாய் அமைந்தது.

கொரியா

சீன ஜப்பானிய உறவின் அடிப்படையாகவும், ஐரோப்பிய நாடுகளின் ஆதிக்கக் கொள்கைகளின் செயலிடமாகவும் விளங்கிய கொரியாவின் வரலாற்றை மிகவும் சுருக்கமாகவேனும் அறிந்து கொள்ளுதல் அவசியமாகிறது. ஆசியப் பெருநிலப்பரப்பில் சீனுவின் கிழக்கிலும் மஞ்சூரியாவின் தெற்கிலும் ஜப்பானின் மேற்கிலுமாக அமைந்திருக்கின்ற தீபகற்பப் பகுதியே கொரியா எனப்படுவது. இது 400 மைல் நீளமும், 150 மைல் அகலமும் கொண்டது. மஞ்சூரியாவையும் கொரியாவையும் பிரிக்கும் எல்லையாக யாலு நதி இருக்கின்றது. மற்ற மூன்று பக்கங்களும் கடலால் சூழப்பட்டிருக்கின்றன. மேற்கில் மஞ்சள் கடலும், கிழக்கில் ஜப்பான் கடலும் தெற்கில் ஜப்பானையும் கொரியாவையும் பிரிக்கின்ற 40 மைல் அகலமுள்ள நீர்ப்பரப்பும் உள்ளது. இப்பகுதியில் ஸீஷிமா (Tsushima) தீவும், கொரிய நீரிணைப்பும் இருக்கின்றன.

சீனப் பேரரசின் ஒரு பகுதியாகவே கொரியா இருந்துவந்திருக்கின்றது. 16-ஆம் நூற்றுண்டில் ஹிதயோஷி (Hideyoshi) என்ற ஜப்பானியப் படைத்தலைவன் கொரியாவைக் கைப்பற்ற முயன்று, தோல்வியுற்றுன். சீனு தனது மேலதிகாரத்தை நிலை நிறுத்திக் கொண்டது. இந்நிலை 1894-95-ல் ஏற்பட்ட முதல் சீன ஜப்பானியப் போர் வரை நீடித்திருந்தது.

சீனுவிலும் ஜப்பானிலும் வர்த்தக உரிமைகளைப் பெற்ற ஐரோப்பிய நாட்டினர் கொரியாவிலும் நுழைய முயன்று தோல்வியுற்றனர். ருஷியா 1858-லும், 1860-லும், இருமுறை தனது எல்லையைக் கொரியா வரையில் விரிவடையச் செய்ய முயன்றது. இத்தகைய ஐரோப்பிய நாட்டினரின் ஆதிக்க முயற்சிகளைத் தடுத்து, கொரியாவைப் பாதுகாப்பது தனது கடமை என்பதையுணர்ந்த சீனு, கொரியா நாட்டில் அந்நியர் தலையிடுவதை விரும்பவில்லை. மேலும் ஜப்பானில் நுழைந்த ஐரோப்பியப் பண்பாடு, அரசியல், பொருளாதார முறைகள், கொரியா வழியாகத் தன் நாட்டிலும் பரவக்கூடும் எனவும் அஞ்சியது, கொரியாவும் சீனுவுக்குக் கடமைப்பட்ட நாடாக இருந்தது. ஏனெனில் தனது பண்பாடு, அரசியல், சமயம், சமுதாய அமைப்பு ஆகிய அனைத்துமே சீனுவினின்று பெற்றவையாகும். கொரியர்

களும் ஐரோப்பிய முறைகளை ஏற்றுக்கொண்டிருந்த ஜப்பானி யரை விரும்பவில்லை. மேற்கத்திய முறைகளை ஏற்றுக்கொண்ட தோடு அல்லாமல் கொரியர்களிடையே செல்வாக்குப் பெற்றிருந்த கன்பூசிய மதத்தை அறவே நீக்கிவிட்டு, மீண்டும் ஷிண்தோ மதத்தை ஏற்றுக்கொண்டிருந்த ஜப்பானியரைக் கொரியர்கள் வெறுக்கத் தொடங்கினர். ஆனால், ஜப்பான் தனது பாதுகாப்புக் காகவும், ஆதிக்க வளர்ச்சிக்காகவும், பொருளாதார முன்னேற்றத் திற்காகவும் கொரியாவில் தனக்கு உறவோ, செல்வாக்கோ, ஒப்பந்தமோ இருந்தாக வேண்டுமென உறுதிகொண்டிருந்தது.

1868-ல் முன்னிலை மீளப்பெற்று, ஆட்சிப் பொறுப்பை ஏற்ற ஜப்பானியப் பேரரசர், தம்முடைய அதிகார ஏற்றத்தை உலகிற்கு அறிவிப்புச் செய்தார். அதேமுறையில் கொரியாவிற்கும் தூதுக் குழு மூலமாக அறிவிப்புகள் அனுப்பினர். கொரியா இத் தூதுக் குழுவை ஏற்க மறுத்தது. பின்னர் அனுப்பப்பட்ட மூன்று ஜப்பானியத் தூதுக் குழுக்களுக்கும் இதே நிலைமை ஏற்பட்டது. ஜப்பான் தன்னை எவ்வாறு அமெரிக்கக் கடற்படைத் தளபதி அச்சுறுத்தி உரிமைகள் பெற்றாரோ, அதே முறையில் தானும் கொரியாவில் உரிமைகள் பெறும் எண்ணம் கொண்டது. ஜப்பானியக் கடற்படை கொரியத் தலைநகரைச் சூழ்ந்தது. கொரியாவும் ஜப்பானை எதிர்க்கும் வலிமையற்ற நிலையில் தனது கதவுகளைத் திறந்துவிட்டது (1876); ஜப்பானுடன் வர்த்தக உடன்படிக்கையும் செய்து கொண்டது. இதன் பின்னர் அமெரிக்காவும் ஐரோப்பிய நாடுகளும் சீனாவின் உதவி பெற்றுக் கொரியாவுடன் வணிக ஒப்பந்தங்கள் செய்துகொண்டன. இவ் வாறு செய்து கொண்ட ஒவ்வோர் ஒப்பந்தத்திலும் கொரியாவில் சீனாவுக்கு இருந்த மேலாதிக்க நிலையும் குறிப்பிடப்பட்டிருந்தது.

இவ்வாறு கொரியாவை மிரட்டிப் பணியவைத்து அந்நியர்கள் உரிமை பெற்றதைக் கண்ட கொரியர்கள் அயல் நாட்டினரை வெறுக்கத் தலைப்பட்டனர். அந்நியரின் தலையீடுகளையும் விரும்ப வில்லை. இவ்வாறு நுழைந்துவிட்ட அந்நியர்களை வெளியேற்றச் சீனாவின் உதவியை நாடவேண்டுமென ஒருசாரார் விரும்பினர். இவர்கள் பிற்போக்குவாதிகள் என அழைக்கப்பட்டனர். ஜப்பானை முன்மாதிரியாக ஏற்றுக்கொண்டு, மேற்கத்திய முறைகளை ஏற்றுக் கொரியாவையும் முன்னேற்ற வேண்டும் என வாதிட்டவர்கள் முற்போக்குவாதிகள் என்று பெயர் பெற்றனர். கொரிய மக்க ளிடையே ஏற்பட்ட இந்தப் பிரிவு பல மோதல்களுக்குக் காரண மாய் அமைந்தது. முற்போக்கு வாதிகளுக்கு ஜப்பான் ஆதரவு கொடுக்க முன்வந்தது.

1880ஆம் ஆண்டு கொரியப் பிரிவினர்களுக்கிடையே ஏற்பட்ட மோதலில் கொரியத் தலைநகரான செவுல் (Seoul) நகரிலிருந்த ஜப்பானியத் தூதரகம் தாக்கப்பட்டது. சில ஜப்பானியர் கொல்லப்பட்டனர். சீனு தன் படைகளை அனுப்பிக் கொரியாவில் அமைதி நிலைநாட்டியது. ஜப்பானுக்கு இழப்பீடு வழங்கப்பட்டது. தனது தூதரகத்தைத் தொடர்ந்து செவுல் நகரில் வைத்திருக்கவும், காவல் படையைக் கொரியாவில் வைத்திருக்கும் உரிமையும், மேலும் சில உரிமைகளையும் ஜப்பான் பெற்றது. இனி ஜப்பான் நேரடியாகக் கொரியாவுடன் தொடர்பு கொள்ளலாமெனவும், சீனுவின் மூலமாகத் தொடர்பு கொள்ள வேண்டியதில்லை என்றும் ஏற்பாடாயிற்று. ஜப்பானுக்கு அளித்த இவ்வுரிமைகளால் ஜப்பானியரின் செல்வாக்கு மேலும் வளர விடாமல் தடைசெய்யவும், கொரியாவில் மீண்டும் கலகங்கள் ஏற்படுவதைத் தடுக்கவும், தனது மேலதிகாரத்தை மேலும் உயர்த்தும் வகையிலும் சீனு செயல்பட முனைந்தது. இப் பொறுப்பை நிறைவேற்றும் பொருட்டு, சீனுவில் தலைசிறந்த அரசியலறிஞராக விளங்கிய லீ-ஹங்-சாங் (Lee-Kung-Chang) என்பவரை மேலதிகாரியாக அனுப்பியது.

1884-ல் கொரியாவில் முற்போக்காளர்களுக்கும் பிற்போக்கு வாதிகளுக்குமிடையே மீண்டும் மோதல் ஏற்பட்டது. இதனை அடக்கச் சீனுவும், தனது உரிமைகளைக் காக்கின்ற முறையில் ஜப்பானும் தங்களது படைகளை அனுப்பின. இந்தோ-சீனுவில் பிரெஞ்சுக்காரர்களுடன் போரிட்டுக் கொண்டிருந்த சீனு தனது முழுக்கவனத்தையும் கொரியக் கலகத்தின்பால் செலுத்த இயல வில்லை. இந் நிலையைப் பயன்படுத்திக் கொண்ட கொரிய முற்போக்குவாதிகள், சீனுவின் ஆதரவாளர்களான பிற்போக்கு வாதிகளை அடக்கி, ஆட்சிப் பொறுப்பையும் கைப்பற்ற முனைந்தனர். கொரிய அரசரை வற்புறுத்தி, ஜப்பானியரின் உதவியை ஏற்றுக்கொள்ளுமாறும் செய்தனர். கொரிய அரசரின் வேண்டுகோளுக்கிணங்கி, கொரியக் கலகத்தை அடக்க முயன்ற ஜப்பானியப் படைகளும் சீனப்படைகளும் மோதிக்கொண்டன. சீனப்படைகளுக்குத் தலைமை தாங்கிய யுவான் ஷி கேயின் (Yuan Shi Kay) (பிற்காலத்தில் சீனக் குடியரசு தலைவர்) தீவிர முயற்சியால் ஜப்பானியப் படைகள் தோற்கடித்து விரட்டப்பட்டன. சில ஜப்பானிய வீரர்கள் கொல்லப்பட்டனர். இத்தகைய இழப்பிற்காகவும், போர்ச் செலவுக்காகவும் கொரிய அரசிடம் ஜப்பான் இழப்பீடு கோரியதுடன், சீனுவின் மீது தகுந்த நடவடிக்கை எடுக்கும்படியும், தன்னிடம் மன்னிப்புக் கேட்க ஒரு தூதுக் குழுவை அனுப்பும்படியும் கொரியாவைக் கேட்டது.

## தியென்சின் (Tiensin) உடன்படிக்கை

கொரியாவில் ஜப்பானியப் படைகளுக்கு ஏற்பட்ட தோல்வியைக் கண்ட ஜப்பானியர் உடனடியாகச் சீனுமீது போர் தொடுக்க வேண்டுமெனக் கூக்குரலிட்டனர். ஆனல், இதோ பிரபுவின் தலைமையிலான ஜப்பானிய அரசு, இன்னும் முழுவளர்ச்சியடையாத நிலையில், அமைதிக் கொள்கையே ஜப்பானுக்கு நன்மை பயக்கும் எனக் கருதிச் சீனுவுடன் உடன்படிக்கை செய்துகொள்ள விரும்பியது. இதனுல் ஜப்பானிய அரசு, தன் தலைமை அமைச்சரான இதோ பிரபுவைச் சீனுவிற்கு அனுப்பி, கொரியாவில் இருதரப்புப் படையினருக்கும் நேர்ந்த மோதலைப் பற்றி விசாரணை செய்யவும், இனி அத்தகைய மோதல்கள் ஏற்படாதவாறு தடுக்கவும் ஏற்பாடுகள் செய்ய முனைந்தது. சீனுவின் அரசப் பகராளரான லீ-ஹங்-சாங்கும் (Lee - Kung - Chang) இதோ பிரபுவும் தியென்சின் என்னுமிடத்தில் சந்தித்து, ஓர் உடன்படிக்கை செய்துகொண்டனர் (1885). இதன்படி சீனுவும் ஜப்பானும் முன்னறிவிப்பின்றிப் படைகளைக் கொரியாவிற்குள் அனுப்புவதில்லை யென்றும், இருதரப்புப் படைகளும் கொரியாவிலிருந்து வெளியேற வேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது. இருநாடுகளும் கொரியாவின் படைகளுக்குப் பயிற்சியளிக்க உதவியோ, பயிற்சியாளர்களையோ அனுப்புவதில்லை யென்றும் முடிவாயிற்று. ஜப்பானியத் தூதரகம் தாக்கப்பட்டதற்கும், ஜப்பானியர் கொல்லப்பட்டதற்கும் சீனு ஜப்பானிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டது.

## தியென்சின் உடன்படிக்கைக்குப் பின்னர்க் கொரியாவின் நிலை

தியென்சின் உடன்படிக்கை ஜப்பானுடைய அரச தந்திர முயற்சிக்குக் கிடைத்த வெற்றி எனக் கூறலாம். இவ்வுடன்படிக்கையின் மூலம், கொரியாவின் சுதந்திரம் நிலைநாட்டப்பட்டுவிட்டது என்றும் ஜப்பான் நம்பியது. கொரியாவின் முற்போக்குவாதிகளும் ஜப்பானின் உதவியுடன், கொரியா வளர்ச்சியடையும் என எதிர்பார்த்தனர். ஆனல் ஜப்பானின் உண்மை நோக்கம் அதுவன்று. கொரியாவைச் சீனுவின் பிடியிலிருந்து விடுவித்து, பின்னர் உதவி செய்கின்ற முறையில் தன்னுதிக்கத்தைக் கொரியாவில் ஏற்படுத்த வேண்டும் என்பதாகும். ஜப்பானின் இவ் வெற்றி அதிக நாள் நீடிக்கவில்லை.

ஜப்பானுடன் உறவுகொள்ள வேண்டும் என்று விரும்பிய கொரிய முற்போக்காளர்களைச் சீனு ஒடுக்கியது. சீனுவும் ஜப்பானும் கொரியப் படைகளுக்கு எவ்வித உதவியும் செய்ய முன்வராத நிலையைப் பயன்படுத்திக் கொண்டு, ருஷ்யா தனது இராணுவ

அதிகாரிகளை அனுப்பிக் கொரியப் படைகளுக்குப் பயிற்சியளித்து, அதன் மூலம் கொரியாவில் தனது செல்வாக்கினை வளர்த்துக் கொள்ள முயன்றது. இதைக் கண்ட ஜப்பான் ஆத்திரமடைந்தது. ருஷியாவைப் பின்பற்றி அமெரிக்கரும், ஆங்கிலேயரும் கொரியக் குழப்பத்தில் பயனடைய முயன்றனர். இவ்வாறு ஐரோப்பியர்களின் தலையீட்டைக் கண்ட சீனுவும் ஜப்பானும், தங்களது பகைமையை மறந்து, கொரியாவைக் காக்கத் திட்டமிட்டன. கொரியாவின் சுதந்திரத்தைக் காப்பது தனது தலையாய கடமையென்றும், அவசியமானல் கொரியாவைத் தன் நாட்டுடன் இணைத்துக் கொள்ளவும் தயங்காது என்றும் சீனு எச்சரிக்கை விடுத்தது. சீனு கொரியாவிலிருந்த தன் அதிகாரியை, சீனுவின் அதிகாரத்தை வலியுறுத்தும் படியும் பணித்தது. கொரியாவைத் தனதாக்கிக் கொள்வதையே குறிக்கோளாகக் கொண்ட ஜப்பான், சீனுவின் இப் புதிய தலையீடுகளை எதிர்க்க ஆரம்பித்தது. 'துறவி நாடு' (Hermit Kingdom) என அழைக்கப்பட்ட கொரியா, அந்நிய நாடுகளின் வேட்டைக்காடாயிற்று. 1889-லிருந்து 1894-வரை, கொரியாவில் ஏராளமான கிளர்ச்சிகளும், கொலைகளும், அரசியல் மாற்றங்களும் நடந்தவண்ணம் இருந்தன. அமைதியான வளர்ச்சியை விரும்பிய கொரிய மக்களும் கொரிய அரசனும் இக் குழப்ப நிலையில் செய்வதறியாது திகைத்தனர். 1894-ல் கொரியாவில் ஏற்பட்ட சீன - ஜப்பானியப் போர் இக் குழப்ப நிலைகளுக்கு முடிவைக் கொடுத்தது.

**போருக்கான உடனடிக் காரணங்கள்**

கொரியாவில் சீனுவிற்கும் ஜப்பானுக்குமிடையே ஏற்பட்ட ஆதிக்கப் போட்டியே இப் போரின் அடிப்படைக் காரணமாகும். ஐரோப்பிய முறைகளைப் பின்பற்றி முன்னேறிய ஜப்பான், ஆதிக்கக் கொள்கையையும் அவர்களிடமிருந்து கற்றுக்கொண்டது. இதைவிட ஜப்பானுக்கு ஆதிக்கக் கொள்கையில் பற்று மேஜி புரட்சிக்கும் முன்பிருந்தே இருந்தது என்பதையும் ஏற்றுக்கொள்ள வேண்டும். மேஜி மன்னரின் தலைமையில் பேரரசு உருவாக்கப்பட வேண்டும் என்ற ஆர்வமும் ஜப்பானியரிடையே நிலவி வந்தது. 1894ஆம் ஆண்டு வரை ஜப்பான் தனது ஆதிக்கக் கொள்கையைச் செயல்படுத்தவில்லை யெனின், அதன் காரணம் உள்நாட்டு வளர்ச்சியிலும், முன்னேற்றத்திலும் தனது முழுக்கவனத்தையும் செலுத்தியிருந்ததேயாகும். அதாவது பேரரசு பெருக்கம் என்ற செயலில் இறங்கும்போது, அப் பெருக்கம் ஏற்படுத்துவதற்கான அடிப்படை வளர்ச்சியை முதலில் அடைய வேண்டும் என்று ஜப்பான் நம்பியது. மேஜி புரட்சியின் போதே ஜப்பானியப் போர்விரும்பிகள், அண்டை நாடுகளையும் வென்று ஆதிக்கம்

பெற வேண்டும் என அறைகூவல் விடுத்தனர். ஆனால், அமைதி முறையில் முன்னேற்றம் காண்பதை விரும்புகின்ற அரசியல்வாதிகள் ஜப்பானில் ஆதிக்கம் பெற்றிருந்ததால், போரை விரும்புவோரின் முயற்சிகள் தடைபட்டன. 1894ஆம் ஆண்டிற்குப் பின்னர், அமைதியை விரும்பியவர்களே போரை விரும்பி ஏற்றுக் கொள்ளும்நிலை உருவானது.

ஆனாலும் சீன-ஜப்பானியப் போருக்கான உடனடிக் காரண மாகக் கூறப்படுவது கொரியாவில் தோன்றி வளர்ந்துவந்த 'தோங்காக்கள்' (Tonghaks) எனப்படும் அரசியல் கட்சியினரால் ஏற்படுத்தப்பட்ட கலகமாகும். 1859-ல் 'தின்தே' (Tienteh) என்னும் மதவெறியன் கொரியாவில் பூசானுக்கருகில் (Pusan) புத்தம், தாயிசம், கன்பூசியம், கிறித்துவம் ஆகிய மதங்களின் கொள்கைகளைக் கொண்ட ஒரு புதிய சமய முறையைப் போதித் தான். ரோமன் கத்தோலிக்கச் சமயத்தை சேர்ந்தவன் எனக் கருதி, இவனை 1865-ல் கொன்றுவிட்டார்கள். இவனுடைய சமய வெறிக்கூட்டம், 'தோங்காக்கள்' என்ற அரசியல் கட்சியுடன் இணைந்து, அக் கட்சித் தலைமையையும் கைப்பற்றியது. இவ் வெறியர் கூட்டம் அந்நியர்களை வெளியேற்ற வேண்டுமென்றுகூறிக் கொரியாவெங்கிலும் பெருங்கலகம் செய்தது. இக் கலகத்தை அடக்கவேண்டி, கொரிய அரசர் தமது பாதுகாப்பு நாடான சீனாவின் உதவியைக் கோரினார். சீனப் படைகள் கொரியாவில் நுழைந்தன. தியென்சின் உடன்படிக்கையின்படி, தன் படைகள் கொரியாவில் நுழைந்தசெய்தியைச் சீனா ஜப்பானுக்கு அறிவித்தது. இவ்வறிவிப்பின்போது, தன்னுடைய ஆதிக்கத்திற்குட்பட்ட கொரி யாவின் வேண்டுகோளுக்கிணங்கத்தான் படையை அனுப்பியதாகக் குறிப்பிட்டிருந்தது. ஜப்பான் கொரியா சீனாவின் ஆதிக்கத்திற் குட்பட்ட நாடு என்ற கூற்றை மறுத்துத் தானும் தனது படைகளைக் கொரியாவிற்கு அனுப்பியது. இவ்விரு நாட்டுப் படைகளும் கொரி யாவிற்குள் வருவதற்குள் கொரியாவில் ஏற்பட்ட பெருங்கலகம் அடக்கப்பட்டுவிட்டது. ஆனால், கலகத்தை அடக்கும் பொருட்டு நுழைந்த இவ்விரு படைகளும் வெளியேறவில்லை.

இருநாட்டுப் படைகளும் கொரியாவிலிருந்து வெளியேற வேண்டு மென்றும், கொரியாவின் உள்நாட்டு விவகாரங்களில் ஜப்பான் தலையிடவேண்டியதில்லை என்றும் சீனா கூறியது. ஆனால், கொரி யாவின் சுதந்திரத்தை முதலில் சீனா ஏற்றுக்கொள்ளவேண்டும் என்றும், பிறகு வேண்டுமானால் இரு நாடுகளும் இணைந்து கொரி யாவின் அரசியலைத் திருத்தி, முன்னேற்றத்திற்குப் பாடுபடலாம் என்றும் ஜப்பான் யோசனை கூறியது. இந்த யோசனையைத்

கொரியா ஏற்றுக்கொண்டது. ஜப்பான் கொரியப் பிரச்சினையில் தலையிடுவதைச் சீனுவும், கொரியப் பிற்போக்குவாதிகளும் எதிர்த்தனர். சீனுவிற்கும் ஜப்பானுக்குமிடையே போர் அபாயம் நெருங்குவதை உணர்ந்த கொரிய அரசு, சீனுவின் தூண்டுதலின்படி ஜப்பானை வெளியேறும்படி வேண்டியது. ஜப்பான் இவ் வேண்டுகோளை மறுத்ததுடன், சீனப்படைகள்தாம் முதலில் வெளியேற வேண்டும் என்றும் வற்புறுத்தியது. இதற்கிடையில் இரு நாடுகளும் மேலும் தங்கள் படைகளைக் கொரியாவில் குவிக்கத் தொடங்கின. இதனைக் கண்ணுற்ற ஜப்பான் திடீரெனக் கொரியத் தலைநகரான செவுல் நகரைக் கைப்பற்றி, கொரிய அரசின் அரண்மனைக்குள் நுழைந்து, சீனப் படைகளை வெளியேறுமாறு உத்தரவிடும்படி கொரிய அரசரைப் பணித்தது. சீன-ஜப்பானியப் போர் தொடங்கியது.

**ஜப்பான் இப் போரை வரவேற்றதன் காரணங்கள்**

'ஜப்பானின் நெஞ்சத்தை நோக்கியிருக்கின்ற கூர்வாள்தான் கொரியா' என்று ஜப்பான் கருதியது. கொரியாவில் ஆதிக்கம் பெறும் எந்த நாடும் ஜப்பானைக் கைப்பற்ற முயற்சிக்கக்கூடும். சீனுவின் பாதுகாப்பிலிருக்கும் கொரியாவின் குழப்பநிலை, வளர்ந்து வரும் ஜப்பானுக்கு எரிச்சலூட்டியதில் வியப்பில்லை. மேலும், கொரியாவின் குழப்பநிலையைப் பயன்படுத்தி ஐரோப்பிய நாடுகள், சிறப்பாகக் கொரியாவில் ஆதிக்கம்பெற விழையும் ருஷியா, கொரியாவைக் கைப்பற்றலாம். ஆசிய நாடுகளின் தலைமையைப் பெற விழையும் ஜப்பானுக்குப் போட்டியாக ருஷியா வளர்வதை விரும்பவில்லை. மேலும், வளர்ந்துவரும் ஜப்பானியத் தொழிற் புரட்சி, வேளாண்மைப் புரட்சியின் விளைவாகப் பெருகிவரும் மக்கள் தொகைக்கு ஒரு போக்கிடமாகவும், உணவுப்பொருள்கள், தொழில்களுக்கு வேண்டிய மூலப்பொருள்கள் வழங்கும் நாடாகவும், தனது உற்பத்திப் பொருள்கள் விற்பனைக்கேற்ற சந்தையாகவும் கொரியா பயன்படும் எனக் கருதிய ஜப்பான் கொரியாவில் ஆதிக்கம் செலுத்த விரும்பியது. இது மட்டுமன்றிக் கொரியாவைத் தனதாக்கிக் கொள்ளவேண்டும் என்ற எண்ணம் ஜப்பானியருக்குப் புதிதன்று. 16ஆம் நூற்றுண்டிலேயே இம்முயற்சி மேற்கொள்ளப்பட்டு, தோல்வியில் முடிந்தது. 'ஜப்பானிய அரசியல் நிலையும், ஜப்பானியப் பேராட்சிக் கொள்கையின் நுழைவாயில் கொரியாதான் என்று பண்டுதொட்டே இருந்துவந்த எண்ணமும், வலிமைபெற்ற வேருெரு நாடு கொரியாவில் ஆதிக்கம் பெற்றுவிடுமோ என்ற தேசிய அச்சமும், மேலும் கொரியாவின் இயற்கைக் கனிவளங்களைத் தனது புதுமைப் பொருளாதார ஏற்றத்திற்குப் பயன்படுத்த முடியும் என்ற அசைக்க

முடியாத நம்பிக்கையுமே சீன-ஜப்பானியப் போரின் அடிப்படைக் காரணங்களாகும்' என விஞக்கே என்ற வரலாற்ருசிரியர் குறிப் பிடுகின்ருர் (p. 139-140).

சீனுவும் இப் போரை எதிர்பார்த்தது என்றே கூற வேண்டும். கொரியாவில் சீனுவிற்கிருந்த மேலாதிக்கத்தை ஜப்பான் ஏற்க மறுத்தது. ஜப்பானிய வளர்ச்சியைக் கண்டு வெறுப்படைந்திருந்த சீனு, ஜப்பானை ஒடுக்கும் வாய்ப்பை எதிர்பார்த்திருந்தது என்றே கூறலாம். சீனுவிற்கும் ஜப்பானுக்கும் போர் ஏற்படின் வெகு எளிதாக ஜப்பானை வெற்றிகொள்ள முடியும் என்று சீனர்கள் நம்பியிருந்தனர். இக் கருத்தை வலியுறுத்தும் வகையில் லீ-ஹங்-சாங்கின் படைச் சீர்திருத்தங்கள் பற்றியும், இராணுவ வலிமை பற்றியும் சீன அரசு பெருமிதம் கொண்டிருந்தது. ஐரோப்பிய நாடுகளும் சீனுவின் படை வலிமையை ஏற்றுக்கொண்டு, ஜப் பானின் தோல்வி உறுதி என்று நம்பினர்; எதிர்பார்த்தனர்.

விண்ணூர்ந்த பேரரசு (Celestial Empire) எனப் பண்டு தொட்டு விளங்கிவந்த சீனப் பேரரசை அற்பமான சிறிய ஜப் பான் எதிர்க்கத் துணிந்தது கண்டு உலகம் வியந்தது. வல்லமை யனைத்தும் பொருந்திய பெருவீரன் ஒருவனை அறியாப் பாலகன் எதிர்ப்பது போலத்தான் இதுவும் என எண்ணினர். ஆனுல் முடிவில் மிகவும் சாதாரண, அற்பமான நாடு எனக் கருதப்பட்ட ஜப்பானில் வாழும் குள்ளர்கள், சீனுவை வீழ்த்தினர்; சீனுவின் அசைக்க முடியாத வலிமை என்ற மாயையை மாய்த்தனர், உலகம் வியந்தது; அதிர்ச்சியடைந்தது. ஜப்பானின் இம் மாபெரும் வெற்றியின் காரணம் சீனுவில் நிலவிவந்த அரசியல் குழப்ப நிலையும், திறமையற்ருேர் பழம்பெருமையில் மூழ்கி, புதிய எழுச்சி மிக்க புரட்சிக் கருத்துகளைக் கண்மூடித்தனமாக வெறுத் தொதுக்கியதும், சீனுவின் படை வலிமையில் அவர்கள் கொண் டிருந்த அளவிற்கு மீறிய தன்னம்பிக்கையும்தான். ஜப்பானின் வளர்ச்சியையோ, புதுமை புனைகின்ற ஆக்கத்திறனையோ, ஐரோப் பியர்களின் அடிச்சுவட்டில் ஜப்பானியர்களின் முன்னேற்றத் தையோ, சாமுராய் பரம்பரையில்வந்த ஜப்பானிய வீரக்குலத்தின் போர் வல்லமையையோ, நவீன போர்க்கருவிகளைத் திறமையுடன் பயன்படுத்துகின்ற ஆற்றலையோ, படைமுறைகளிலும் போர் நுணுக்கங்களிலும் அவர்களடைந்திருந்த தேர்ச்சியையோ, இவை யனைத்திற்கும் மேலாகத் தெய்விகப் பேரரசரின் பாதங்களில் உடல், பொருள், ஆவி இம் மூன்றையும் பணிந்தளிக்கும் பக்தியையோ, கொழுந்துவிட்டெரியும் தீயென, இளம் உள்ளங்களில் கனன்று வரும் தேசப்பற்றையோ, ஆதிக்க வளர்ச்சியில் ஜப்பானியர்கள்

கொண்டிருந்த பேரார்வத்தையோ, சீனர்கள் மட்டுமன்றி, உலகமும் அறியாததில் வியப்பேதுமில்லை.

**போரின் முக்கிய நிகழ்ச்சிகள்**

1894ஆம் ஆண்டில் தோங்காக்களின் கலகத்தை அடக்குவதற்காகக் கொரியாவில் நுழைந்த சீன-ஜப்பானியப் படைகள், தங்களுக்குள் நேரடி மோதலைத் துவக்கின. இப் போரில் ஜப்பான் தாக்குதலைத் தொடங்கியது. சீனக் கடல் வலிமையை அழித்தால் தான் கொரியாவில் சீனுவைப் பணிய வைக்க முடியும் என்பதை யுணர்ந்த ஜப்பான், யாலு ஆற்றின் முகத்துவாரத்தில் நடந்த போரில் (செப். 17, 1894) ஜப்பான் சீனக் கப்பற்படையை முறியடித்தது. இப் போருக்குப் பின்னர், கொரியாவைச் சுற்றியுள்ள கடல்பகுதி முழுவதும் ஜப்பானிய ராதிக்கத்தின்கீழ் வந்தது. இதற்கு முன்பாக (செப். 15, 16, 1894) பிங்யாங் நதிக்கரையில் சீனப் பெரும்படை தோற்று ஓடியது. இந்தப் பிங்யாங் வெற்றி சீன ஜப்பானிய வரலாற்றில் மிகச் சிறப்பான நிகழ்ச்சியாகக் கருதப்படுகின்றது. இவ்விரண்டு மாபெரும் வெற்றிக்குப் பின்னர் ஜப்பானியப் படைகள் வேகமாகக் கொரியாவிலிருந்த சீனப் படைகளை விரட்டியடித்தன. மஞ்சூரியாவிற்குள் பின்னடைந்த சீனப்படையை ஜப்பானியர் முன்னேறித் தாக்கினர். லியோடுங் தீபகற்பம் முழுவதும் பிடிபட்டது. போர்ட் ஆர்தர் துறைமுகமும் கடுமையான முற்றுகைத் தாக்குதலுக்குப் பின்னர் வீழ்ந்தது. லியோடுங் தீபகற்பத்தைப் பிடித்த ஜப்பானியர் பீகிங் நகர் நோக்கி விரைந்தனர். இதற்கிடையில் சீனத் துறைமுகமான வை-ஹை-வை (Wai-Hai-Wai) ஜப்பானியக் கடற்படைக்குப் பரிசாகக் கிடைத்தது. இவ்வாறு நீரிலும் நிலத்திலும்/ஜப்பானியப் படைகளின் முன் நிற்கமாட்டாது சீனப்படைகள் தோற்று ஓடின. இனியும் போரைத் தொடர்ந்து நடத்துவதன் ஆபத்தை உணர்ந்த சீனு, சமாதானம் வேண்டியது, ஆறே மாதங்களில் செயற்கரிய சாதனையைப் புரிந்த ஜப்பான் வெற்றிப் பெருமிதத்தில் திளைத்தது.

**சிமானேசெகி உடன்படிக்கை (Treaty of Shimonooseki, April 17, 1895)**

1895ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 17ஆம் நாள் சிமானேசெகி என்னுமிடத்தில் கையெழுத்தான உடன்படிக்கையுடன் முதல் சீன ஜப்பானியப் போர் முடிவுற்றது. இவ்வுடன்படிக்கையில் சீனுவின் மாபெரும் அறிஞரான லீ-ஹங்-சாங்கும், ஜப்பானின் அரசியல் சட்டத் தந்தை இதோ பிரபுவும் கலந்துகொண்டனர். அமெரிக்க ஆலோசகர்கள் இருதரப்பினருக்கும் உதவிபுரிந்தனர். இவ்வுடன் படிக்கையின் கூறுகளாவன:

1. கொரியா சுதந்திர நாடாக்கப்பட்டது.

2. லியோடுங் தீபகற்பம், பார்மோசா தீவு, பாஸ்கபோர்ஸ் தீவுக்கூட்டங்கள் ஜப்பானுக்குக் கொடுக்கப்பட்டன.

3. ஷாஷி (Shasi), சுங்கிங் (Chungking), சூச்செள (Soochow), ஹாங் செள (Hangchow) ஆகிய நான்கு துறைமுகங்களில் ஜப்பானியர் வணிக உரிமை பெற்றனர்.

4. போர் இழப்பீடாக இரண்டு கோடியே, ஐம்பத்தோ ரிலட்சத்து அறுபதாயிரத்து இருநூற்றைம்பத்தாறு பொற்காசுகளைச் சீனு ஜப்பானுக்கு வழங்க ஒப்புக்கொண் டது. அத் தொகை கொடுத்து முடியும் வரையிலும் வை-ஹை-வை (Wai-Hai-Wai) துறைமுகப் பட்டினத்தை ஜப்பானியரிடம் பிணையாகவைத்தது.

**விளைவுகள்**

இவ் வெற்றியால் ஜப்பானின் பெருமை உயர்ந்தது. பல நன்மை மைகளையும் பெற்றது. நன்மைகள் பல இருப்பினும், ஜப்பான் ஐரோப்பியர்களின் பார்வையில் சில மாற்றங்களை ஏற்படுத்தியது. ஐரோப்பிய நாடுகள் அனைத்துமே, வளர்ந்துவிட்ட ஜப்பான், இனித் தங்களுக்குப் போட்டியாக உதித்துவிட்டதை உணர்ந்தன. கீழை ஆசிய நாடுகளில் ஜப்பான் ஒரு தனிச் சிறப்பான இடத் தைப் பெற்றது. அதே நேரத்தில் பல பகை நாடுகளும் ஜப்பானுக்கு உருவாயின. சிறப்பாக ருஷியா ஜப்பானின் வெற்றி களைக் கண்டு பொறுமையுற்றது. லியோடுங் தீபகற்பம் ஜப் பானுக்குக் கிடைத்ததால், இனி அப் பகுதிகளில் தனது செல்வாக் கிற்கு ஆபத்து வந்துவிட்டதை உணர்ந்தது. இந்த ஆபத்தை முளையிலேயே கிள்ளி எறியவும் முயற்சியெடுத்தது. ஐரோப்பாவில் தனது போக்கிற்கு ஆதரவு காட்டி வருகின்ற ஜெர்மனி, பிரான்சு ஆகிய இவ்விரு நாடுகளையும் கூட்டுச் சேர்த்துக்கொண்டு சீனுவின் பாதுகாவலர்கள் தாங்களே என்று அறிவித்தது. லியோடுங் தீபகற்பப் பகுதியை மீண்டும் சீனுவிடமே ஒப்படைக்க வேண்டு மென ஜப்பானை இந் நாடுகள் வற்புறுத்தின. இம் மூன்று நாடு களையும் எதிர்த்துப் போரிடுவதால் ஏற்படும் தீமையினை நன் குணர்ந்த ஜப்பான், தான் அரும்பாடுபட்டுப் பெற்ற வெற்றியின் பயனை, விட்டுக்கொடுக்க இசைந்தது. லியோடுங் தீபகற்பத் திலிருந்து ஜப்பான் வெளியேறியது. இதற்கு இழப்பீடாக 49 மில்லியன் பொற்காசுகளை ஜப்பான் பெற்றது. இந் நிகழ்ச்சி யையும், இதனுல் தனக்கு ஏற்பட்ட தலைக்குனிவையும் ஜப்பான் மறக்கவில்லை. இதற்கு மூல காரணம் ருஷியாதான் என்றுணர்ந்த

ஜப்பான், ருஷியாவைப் பழிவாங்கும் தருணத்தை எதிர்நோக்கி யிருந்தது. 1904-05-ல் ருஷியாவைத் தோற்கடிக்கும் வரையில் ஜப்பானின் திறமை முழுவதும் இவ்வெண்ணத்தைச் செயல் படுத்தும் முயற்சிகளிலேயே செலுத்தப்பட்டது.

வளர்ந்துவிட்ட ஜப்பானை அச்சத்தோடு, அதே நேரத்தில் ஆர்வத்தோடு நோக்கிய ஐரோப்பிய நாடுகள் சீனுவின் வலிமை யற்ற நிலையை உணர்ந்தன. பழமைப் பெருமையிலும் சிறப் பிலும் ஊறிப் போன சீனு உண்மையிலேயே உளுத்துப் போன, ஆனல் வெளியில் மட்டும் உயர்வாகத் தெரிகின்ற நிலை என்பதனை உலகம் உணர்ந்தது. ஐரோப்பியர்கள் ஏற்கெனவே சீனுவின் எல்லைப் பகுதிகளான இந்தோ-சீனு, பர்மா போன்ற பகுதிகளைப் பங்குபோட்டுக் கொண்டிருந்தனர். அடுத்து நேரடியாகச் சீனு விற்குள் நுழைந்து தங்கள் செல்வாக்கை நிலைநாட்டினர். சீனு ஐரோப்பிய நாடுகளின் வேட்டைக்காடாக மாறியது. சீன அரச குலத்தவரான 'மஞ்சு'க்களின் திறமையின்மை வெளிப்பட்டது. ஜப்பானியர்களைப் போலத் தாங்களும் முன்னேற வேண்டுமெனச் சீன மக்கள் ஆர்வம் கொண்டனர். சீர்திருத்தங்கள் கோரினர். சீனப் பேரரசின் நிலை அனுதாபத்திற்குரியதாக மாறியது.

# 2. சீனுவில் சீர்திருத்த இயக்கமும் பாக்ஸர் கலகமும்

சீன-ஜப்பானியப் போருக்குப் பின்னர் ஜப்பானின் வலிமை யையும், போர்த் திறமையையும் ஐரோப்பியர்கள் உணர்ந்தனர். வளர்ந்துவிட்ட ஜப்பான் இனி ஐரோப்பிய நாடுகளுக்கு இணை யான ஆற்றல் பெற்றுவிட்டதால், கிழக்காசிய நாடுகளில் ஜப்பான் தனது செல்வாக்கை விரிவடையச் செய்யும் என்றும் உணர்ந்தனர். எனவே, ஜப்பானின் ஆதிக்க வளர்ச்சியைக் கட்டுப்படுத்தும் வகையில் ஐரோப்பிய நாடுகள் தங்கள் கொள்கைகளை அமைக்க முயன்றனர். ஆனால், ருஷியா தனக்கு மாபெரும் எதிரியாகக் கீழைப் பகுதிகளில் உருவாகிவிட்ட ஜப்பானைச் சற்றுப் பொறாமை கலந்த அச்சத்துடன் நோக்கிற்று. அதே நேரத்தில் சீனுவின் மிகப் பரிதாபமான நிலையும் உலகிற்குத் தெற்றென விளங்கியது. இதுவரை வலிமை பொருந்தியதாகவும், திறமையுடனும் செயல் படுவதைப் போலத் தெரிந்த சீனுவின் 'விண்ணூர்ந்த பேரரசு' (Celestial Empire) தன்னை ஜப்பானிடமிருந்து காத்துக்கொள்ள இயலாத அளவுக்கு வலிமை குன்றியிருந்த நிலையைக் கண்ட ஐரோப்பிய நாடுகள் அதிர்ச்சியடைந்தன. இனிச் சீனுவில் தாங் களும் செல்வாக்குப் பெற இயலும் என்பதை உணர்ந்து, சீனுவைத் தங்களுக்குள் 'பழுத்துக் கனிந்த பழத்தைத் துண்டாடு வதைப் போல'த் துண்டாடும் எண்ணங் கொண்டனர்.

சீனுவின் இந்த அவலநிலைக்குக் காரணம் மஞ்சுப் பேரரசின் திறமையின்மையும், ஆட்சியில் மலிந்துகிடந்த கட்டுப்பாடற்ற தன்மையும், ஊழல்களுமே யாகும். அதிகாரிகள் அனைவரும் சுய நலத்தின் அடிப்படையில் செயல்பட்டனரே தவிர, நாட்டு நலத்தைக் கவனிப்பார் யாருமிலர். 'கன்பூசியத் தத்துவத்தின்' மேன்மையை வாய்கிழிய உரைத்தனரே தவிர அதைச் செயல் படுத்துவார் யாருமிலர். 'கன்பூசிய'க் கொள்கை அரசின் குறை களையும், திறமையின்மையையும் மறைத்து, மக்களை வாயடைக்கச்

செய்யப் பயன்பட்டதே தவிர, ஜப்பானைப் போல முன்னேற்றப் பாதையில் அடியெடுத்து வைக்கும் எண்ணத்தை உருவாக்க வில்லை. 'மஞ்சு' குலத்தின் தோன்றலான அரசமூதாட்டி (Empress Dowager) ஷீ ஷி (Tseu Tsi) பழமை விரும்பியாகவும், உல்லாசியாகவும், அதிகாரப் பேராசை படைத்தவராகவும் இருந்தார். முன்னேற்றக் கருத்துகளை அறிவித்தவர்கள், அவை களில் நம்பிக்கைக் கொண்டவர்கள் அழிக்கப்பட்டனர். ஜப்பா னைப்போல, பேரரசுக்காகத் தங்களைத் தியாகம் செய்கின்ற தியாகச் செம்மல்களையும், நாட்டுப்பற்று மிக்கவர்களையும் சீனு பெற்றிருக்க வில்லை. இதனுல்தான் லீ-ஹங்-சாங் (Lee-Hung-Chang) போன்ற அரசியலறிஞர்களும், யுவான்-ஷி-கே (Yuan-Shi-Kai) போன்ற பெருந் தளபதிகளும் இருந்தும் புதுமை வேகத்தால் உந்தப்பெற்ற நவீன ஜப்பானின் புத்தொளிப் படைகளை எதிர்த்து நிற்க முடியாமல் சீனு தோற்றது; தன் பெருமை அழிக்கப் பெற்றுத் தான் இதுகாறும் பெற்றிருந்த சிறப்பிடத்தையும், நன்மதிப்பையும் இழந்து, ஐரோப்பிய நாடுகளின் வேட்டைக்காடாக மாறியது.

சீன-ஜப்பானியப் போரின் முடிவில் ஒரு பெருந்தொகையைப் போர் இழப்பீடாக ஜப்பானுக்குக் கொடுக்கச் சீனு இசைந்தது என்பதை முன்பே குறிப்பிட்டுள்ளோம். இப் பெருந்தொகையைத் திரட்டச் சீனு தடுமாறியபோது ஐரோப்பிய நாடுகள் சீனுவிற்குப் பெருந்தொகையைக் கடனுக வழங்க வலிந்து முன்வந்தன. ருஷியா ஆரம்பித்து வைக்க பிரான்சு, ஜெர்மனி போன்ற நாடுகள் தொடர, பெருந்தொகை கடனுகச் சீனுவிற்கு அளிக்கப்பட்டது. இதைக் கண்ணுற்ற இங்கிலாந்தும், மற்ற நாடுகளைப் பின்பற்றிச் சீனுவிற்குப் பண உதவி செய்தது. இவ்வாறு பண உதவி செய் வதன் மூலம், ஒவ்வொரு நாடும் சீனுவில் சிறப்பு உரிமை பெற்ற வர்களாக நடமாட முடியும் என்றும், வர்த்தக உரிமையும் அல்லது முடியுமானுல் அரசியல் உரிமையும் பெற்று, சீனப் பகுதிகளில் தங்கள் ஆட்சியை ஏற்படுத்த முடியும் என்றும் ஒவ்வோர் ஐரோப்பிய நாடும் கனவு கண்டது. 1900ஆம் ஆண்டிற்குள்ளாக இக் கனவு நனவாகவும் மாற்றப்பட்டது.

முதன்முதலில் ருஷியா சீனுவில் உரிமை பெற்றுத் தனது சைபீரிய இருப்புப் பாதைத் தொடரை மஞ்சூரியா வழியாக விளாடிவாஸ்டாக்கிற்கும், பின்னர் போர்ட் ஆர்தர் துறைமுகம் வரையும் நீட்டி, மஞ்சூரியாவிலும் லியோடுங் தீபகற்பத்திலும் தனது செல்வாக்கினை உருவாக்கியது. ருஷியாவின் இம் முன்னேற் றத்தைக் கண்ணுற்ற ஜெர்மனி தானும் சீனுவின் ஒரு பகுதியைப் பெறவேண்டும் என்ற முயற்சியில் ஈடுபட்டது. ஜெர்மானியப் பாதிரிகள் இருவர் சீனுவில் கொலை செய்யப்பட்டனர். இக்

காரணத்தைக் காட்டி, சீனாவை அச்சுறுத்தி கியாச்செள (Kiachow) துறைமுகத்தையும், அதைச் சுற்றியுள்ள பகுதிகளில் முழு ஆதிக்கத்தையும் ஜெர்மனி பெற்றது. ஜெர்மனி இவ்வாறு சீனாவின் பகுதிகளைப் பெற்றதைக் கண்ட ருஷியாவும் மற்ற நாடுகளும் சீனாவில் ஆதிக்கம் பெற முயன்றன. ருஷியா போர்ட் ஆர்தர் துறைமுகம் உட்பட லியோடுங் தீபகற்பம் முழுவதையும் எடுத்துக் கொண்டது. பிரான்சு, யுனான், குவாங்சி, குவாண்டங் ஆகிய மாநிலங்களில் தனது செல்வாக்கினை உறுதிப்படுத்திக்கொண்டது. பிரான்சு ஏற்கெனவே இந்தோ-சீனப் பகுதி முழுவதையும் சீனாவிடமிருந்து பறித்துக்கொண்டதும் குறிப்பிடத்தக்கது. பிரிட்டனும் இக் கொள்ளையில் பங்கெடுத்துக்கொண்டது. ஹாங்காங் துறைமுகத்தை அடுத்துள்ள யாங்ட்சி நதிப் பள்ளத்தாக்கு முழுவதையும் பெற்றது. வை-ஹை-வை துறைமுகப் பகுதியையும் பெற்றது. ஜப்பான் தனது பங்காகப் பார்மோசா தீவிற்கு அருகிலுள்ள புகின் (Fukien) மாநிலத்தை வற்புறுத்திப் பெற்றது. இறுதியாக இப் போட்டியில் கலந்துகொண்ட இத்தாலி மட்டும் வெறுங்கையுடன் திரும்பியது.

இவ்வாறு சீனப் பேரரசின் பெரும் பகுதியை, சீனாவின் பாதுகாப்பாளர்கள்-நண்பர்கள் எனக் கூறிக் கொண்டிருந்த ருஷியா, பிரான்சு, ஜெர்மனி ஆகிய நாடுகள் பங்கு போட்டுக்கொண்டன. இந்தக் கொள்ளையில் இங்கிலாந்தும் ஜப்பானும்கூடத் தங்களுடைய பங்காகச் சில முக்கியப் பகுதிகளைப் பெற்றன. இவைகளெல்லாம் அந்தந்த நாடுகளின் செல்வாக்கிற்குட்பட்ட பகுதிகள் (Spheres of Interest) என அழைக்கப்பட்டன. இப் பகுதிகள் அனைத்துமே அந்தந்த நாடுகளுக்கு முழு உரிமையுடன் வழங்கப்பட்ட பகுதிகள் அல்ல. அவைகள் ஐரோப்பிய நாடுகளின் செல்வாக்கிற்குட்பட்ட சீனப் பேரரசின் பகுதிகள் எனக் குறிப்பிடப்பட்டன. இப் பகுதிகளின் தொழில் வளர்ச்சிக்கும், கனி வளங்களைப் பயன்படுத்துவதற்கும், தடையற்ற வாணிக உரிமையும் ஐரோப்பியர்களுக்குக் கொடுக்கப்பட்டனவே தவிர, ஏனைய அரசியல் உரிமைகள் அனுமதிக்கப்படமாட்டா எனக் கூறப்பட்டது. ஆனால், ஐரோப்பிய நாடுகளின் உண்மையான நோக்கம் சீனாவைப் படிப்படியாகத் தங்கள் குடியேற்ற நாடாக மாற்றுவதே என்பதாகும்.

இவ்வாறு ஐரோப்பிய நாடுகள் அனைத்தும் சீனாவைத் தங்களுக்குள் கூறுபோட்டுக் கொண்டிருந்தபோது அமெரிக்கா மட்டும் தனித்து நின்றது. சீனப் பேரரசு வலிமையற்றிருந்தாலும், அப் பேரரசு காப்பாற்றப்பட வேண்டுமென்று அமெரிக்கா வாதாடியது. சீனாவைக் கூறுபோட்டுக்கொண்டு, பின்னர் அரசியல் ஆதிக்

கமும் பெற்றல், அது ஐரோப்பிய நாடுகளுக்குள்ளே போர் ஏற்படக் காரணமாக அமையும் என்றும், அதனுல் சீனுவின் ஒற்றுமை அழிக்கப்படலாம் என்றும் அமெரிக்கா கருத்துத் தெரிவித்தது. இந் நிலையிலிருந்து சீனுவின் அரசியல் உரிமையைக் காப்பதற்காகவும், சீனப் பேரரசு தன்மையை உறுதிப்படுத்தவும்

சீனு-அந்நிய ஆக்கிரமிப்பு (1895-1911)

அமெரிக்க அரசு 1899ஆம் ஆண்டு 'சீனுவில் அனைத்து நாடுகளுக்கும் சம வர்த்தக உரிமை'க் கொள்கையை (Open door Policy) அறிவித்தது. இதன்படி ஐரோப்பியர்களின் உரிமை பெற்ற பகுதிகளிலும் ஏனைய பகுதிகளிலும் எந்த நாட்டிற்கும் எத்தகைய தடையும் விதிக்கக்கூடாது என்றும், இறக்குமதி, ஏற்றுமதிப் பொருள்களின்மீது சீனுவின் சுங்கவரி உரிமையை அங்கீகரித்து, வரி செலுத்தப்பட வேண்டும் என்றும், சீனத் துறை

முகங்களில் வர்த்தகம் செய்யும் அனைத்து நாட்டுக் கப்பல்களுக்கும் ஒரே மாதிரியான உரிமைகளும் சலுகைகளும் வழங்கப்படவேண்டு மென்றும், இரயில் கட்டணமும் ஒரே மாதிரியாக வேறுபாடின்றி விதிக்கப்படவேண்டும் என்றும் அமெரிக்கா தன்னுடைய 'சீனுவில் அனைத்து நாடுகளுக்கும் சம வர்த்தக உரிமைக் கொள்கை' மூலம் ஐரோப்பிய நாடுகளுக்கு வேண்டுகோள் விடுத்தது. இக் கொள்கையின் மூலம் சீனுவை ஐரோப்பிய நாடுகளின் ஆதிக்கப் பிடியிலிருந்து காப்பாற்ற முடியும் என்று அமெரிக்கா கருதியது. ஆனுல், இக் கொள்கையை ஐரோப்பிய நாடுகள் ஏற்க மறுத்தன. அமெரிக்கா தன்னுடைய இக் கொள்கையின் மூலம் ஐரோப்பிய நாடுகளின் வர்த்தகச் சம உரிமையை நிலைநாட்டி, ஐரோப்பியர் களின் ஆதிக்கப் பிடியிலிருந்து சீனுவைக் காக்க முயன்று தோல்வி கண்டது.

இந் நிகழ்ச்சிகளின் போதுதான் சீனு ஐரோப்பியர்களின் ஆதிக்க வெறியை உணர்ந்தது. தன்னை ஜப்பானிடமிருந்தும் ஐரோப்பிய நாடுகளிடமிருந்தும் ருஷ்யா காப்பாற்றும் என்ற நம்பிக்கை பொய்த்ததையும் அறிந்தது. சீனுவிடமிருந்து உரிமை களையும், பகுதிகளையும் பெறுவதிலேயே கண்ணும் கருத்துமாய் இருந்ததே தவிர, மற்ற நாடுகளின் ஆதிக்க வெறியிலிருந்து சீனுவைக் காப்பாற்ற முன்வரவில்லை. இந் நிலையையும் சீனர்கள் உணர்ந்தனர். சீன-ஜப்பானியப் போருக்குப் பின்னர் நான்கே ஆண்டுகளில் சீனப் பேரரசின் பெரும் பகுதிகளை ஐரோப்பிய நாடுகள் தங்களின் செல்வாக்குப் பகுதிகளாக மாற்றிக்கொண்டன. இதைச் சீன அரசால் தடுக்க இயலவில்லை. இந் நிலையில் சீனு தன்னைக் காத்துக்கொள்ள வேண்டுமெனில், ஜப்பானைப் போல மிகப் பெரிய அளவில் சீர்திருத்தங்களை மேற்கொள்ள வேண்டும். அரசியல் பொருளாதார சமூகத் துறைகளில் முன்னேற்றம் அடைந்தாலன்றிச் சீனப் பேரரசைக் காப்பது இயலாது என்பதைச் சீனர்கள் உணர்ந்தனர்; சீர்திருத்தங்கள் வேண்டினர். இதை வற்புறுத்தும் வகையில் சீனுவில் சீர்திருத்தம் கோரும் இயக்கங்களை ஆரம்பித்தனர்.

சீனுவில் ஏற்பட்ட சீர்திருத்த இயக்கங்கள் 19ஆம் நூற் ருண்டின் இறுதியில் ஐரோப்பியர்களின் ஆதிக்க வெறியின் விளை வாகச் சீன மக்களிடையே எழுந்த உணர்ச்சிக் கொந்தளிப்பால் தோற்றுவிக்கப்பட்டன என்ருலும், 19ஆம் நூற்ருண்டின் இடையி லேயே, சீனுவில் சீர்திருத்தக் கருத்துகள் தோன்றி வளர ஆரம்பித் திருந்தன. முதன் முதலாகக் கிறித்துவச் சபைகள் கல்விச் சீர்திருத் தங்களைத் தொடங்கின. மேலைநாட்டு நூல்கள் சீன மொழியில்

மொழிபெயர்க்கப்பட்டு வெளியிடப்பட்டன. கிறித்துவ சமய இயக்கத்திற்குச் சீனுவில் எதிர்ப்பு உருவானபோது, இப் பணியும், முடிவடைந்தது. வேங் தோ (Wang Tao), ஸுஃபு-செங் (Hseuh Fu-Cheng) போன்றோர் மேலைக் கல்வியின் சிறப்பையும், சட்டம், அரசியல் துறைகளின் மேன்மையையும் உணர்ந்து, சீனுவிலும் அம் முறைகளைப் புகுத்த வேண்டுமென உறுதிகொண்டனர். 'பழம் பெருமைகளில் திளைத்து வாளாவிருந்தால், நாம் மேலை நாட்டினரை விடச் சிறந்தவர்களாக விளங்க இயலாது' என்ற கருத்துகளை ஆர்வத்துடன் சீனு முழுவதும் பரப்பினர்.

காங் யு வீ (Kang Yu Wee, *1858-1927*) என்ற சீர்திருத்தவாதி மேலைநாட்டு நூல்களைக் கற்றறிந்து, அக்கருத்துக்களைக் 'கன்பூசியக்' கொள்கைகளுடன் ஒப்பு நோக்கி, கன்பூசியத் தத்துவங்களும் சீர்திருத்தக் கருத்துகளையே வற்புறுத்துகின்றன என உரைத்தார். இவரைப் பின்பற்றி வந்த சி-சோ (Che-Chao), சாங்-சி-துங் (Chang-Chi-Tung) போன்றோரும் நவீன நாடுகளைப் பின்பற்றிச் சீனு முன்னேற வேண்டும் என்ற கருத்துகளைப் பரப்பினர். இவர்கள் கல்விச் சீர்திருத்தத்தின் அவசியத்தையும் வலியுறுத்தினர். அடிப்படைக் கல்வி சீன முறையிலும், தொழிற்கல்வியும் உயர் கல்வியும் மேலைநாட்டு முறையிலும் அமைவதுதான் முன்னேற்றம் காண வழி என்பதையும் அறிவுறுத்தினர். இவர்களுடைய முன்னேற்றக் கருத்துகளை ஏற்ற அரசு, சீனுவில் முதல் நூற்பாலைத் தொழிற்சாலை, ஓர் இரும்புத் தொழிற்சாலை, முதல் இரயில்பாதை ஆகியவைகளை ஏற்படுத்தியது.

## நூறுநாள் சீர்திருத்தங்கள் (The 'Hundred days' Reform)

பத்தொன்பதாம் நூற்றுண்டின் இடையிலிருந்தே சீர்திருத்தக் கருத்துகள் சீனுவில் பெருகி வந்திருந்தாலும், அந் நூற்றுண்டின் இறுதியில்தான் இக் கருத்துகள் உருவம் பெற்றன. இவ்வெற்றியும் நூறு நாள்களே நிலைத்திருந்தன. நூறு நாள்களுக்குள் பழமை விரும்பிகள் அரசமூதாட்டியின் (Empress Dowager) துணையுடன் இச் சீர்திருத்தச் செம்மல்களை விரட்டிவிட்டு, இக் கருத்துகளைக் குழிதோண்டிப் புதைத்தனர்.

சீர்திருத்தவாதிகளில் வெளி உலகிற்கு அறிமுகமானவர் டாக்டர் சுன் யாட் சென் (Dr. Sunyat Sen) என்பவராவர். ஆனால், *1895*ஆம் ஆண்டு காண்டன் நகரில் இவரது தலைமையில் ஏற்பட்ட புரட்சி இயக்கம் தோற்கடிக்கப்பட்டது. இவர் நாட்டைவிட்டு வெளியேறினர். இவருக்குப் பின்னர் காண்டன் நகரில் காங்-யு-வீ (Kang-Yu-Wee), சாங்-சி-துங் (Chang-Chi-Tung) லியு-குன்-யி

Liee-Kwn-Yi) போன்றவர்கள் தலைமையில் ஒரு சீர்திருத்த இயக்கம் தோன்றியது. இவர்களின் முக்கிய நோக்கம் திறமையற்ற அதிகாரிகளை நீக்கி, புதிய அரசியலமைப்பை உருவாக்கி, நிலையான உறுதியான ஆட்சியமைப்பை நிறுவி, அதன் மூலம் நாட்டைச் சீர்திருத்த வேண்டும் என்பதாகும். இவர்களுக்கு ஆதரவாகப் பேரரசர் குவாங்-சு (Kuang Tsu) செயல்பட இசைந்தார். பேரரசர் குவாங்-சு அரசப் பொறுப்பைத் தானே ஏற்றவுடன் அரசமூதாட்டியார் பதவி ஓய்வு பெற்ருர். இருப்பினும் அதிகாரத்திலிருந்த பழமை விரும்பிகள் அரசமூதாட்டியாரின் கருத்துகளுக்கே மதிப்பளித்தனர். ஓய்வு பெற்றிருந்த அரசமூதாட்டியார் தேவை ஏற்பட்டால் மீண்டும் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொள்ள முடியும் என்ற நிலைமையிருந்தது.

இந் நிலையில் பேரரசர் சீர்திருத்தவாதிகளின் கருத்தை ஏற்றுக் கொண்டு நாற்பத்தெட்டு அரச ஆணைகளைப் பிறப்பித்தார். கல்விச் சீர்திருத்தம், மொழி பெயர்ப்புக் கழகம், போக்குவரத்துக் கழகம், சுரங்கக் கண்காணிப்புக் கழகம், இராணுவச் சீர்திருத்தங்கள், தேவையற்ற அரசப் பதவிகளை ஒழித்தல், தொழில் துறை வளர்ச்சி போன்ற முன்னேற்றங்களை ஏற்படுத்தும் வகையில் இவ்வரச ஆணைகள் இருந்தன.

ஆரம்ப நிலையிலிருந்த முன்னேற்றக் கருத்துகளுக்கு அரசமூதாட்டியாரின் எதிர்ப்பிருந்து வந்தது. இவ்வெதிர்ப்பினின்று தன்னைக் காத்துக் கொள்ளவும், முன்னேற்றங்களைச் செயல்படுத்தவும், இராணுவத்தின் துணையைப் பேரரசர் நாடினுர். யுவான்-ஷி-கே என்ற தளபதி சீர்திருத்தக் கருத்துகளை ஆதரிப்பவர் எனப் பேரரசரும் மற்றவர்களும் நம்பினர். எனவே, பேரரசரின் பாதுகாவல் படையின் தலைவராக யுவான்-ஷி-கே நியமிக்கப்பட்டார். இவர் அரசமூதாட்டியைக் கைது செய்யவும் அனுப்பப்பட்டார். ஆனுல் யுவான்-ஷி-கே தாம் சீர்திருத்தக் கருத்துகளின் முதல் எதிரி என்பதை அரசமூதாட்டியுடன் இணைந்து கொண்டதன் மூலம் நிரூபித்தார். பேரரசர் சிறைப் பிடிக்கப்பட்டார். சீர்திருத்தவாதிகள் தப்பியோடினர். நூறு நாள்களே நிலைத்து நின்ற சீர்திருத்த இயக்கமாதலால் நூறு நாள் சீர்திருத்தம் என வரலாற்றில் இடம் பெறுகின்றது.

### நூறு நாள் சீர்திருத்த இயக்கத்தின் விளைவுகள்

'நூறு நாள்' சீர்திருத்த இயக்கத்தின் தோல்வி சீனப் பழமைவாதிகளின் பெரும் வெற்றியாகக் கருதப்பட்டது. மேலும், இத் தோல்வி சீன அரசின் குழப்ப நிலைக்கு எடுத்துக்காட்டாகவும் அமைந்தது. 'மஞ்சு' அரசகுலத்தினரின் திறமையற்ற ஆட்சி

யைச் சீனர்கள் எதிர்த்தனர். ஆனால் இவர்களுக்கிடையே இருந்த ஒற்றுமைக் குறைவும், பொறுப்பற்ற அதிகார வேட்கையும் சீர்திருத்த இயக்கங்களை வலிவிழக்கச் செய்தன. பல முறை ஐரோப்பியர்களால் தோற்கடிக்கப்பட்ட சீனர்கள், அந்நியர்கள் மீதும் வெறுப்புக் கொண்டிருந்தனர். சீன அரசின் திறமையற்ற நிலையிலும், அரசமூதாட்டியார் தங்கள் பரம்பரையின் ஆட்சியை மேலும் உறுதிப்படுத்தவும், ஊழல் மலிந்த, சுயநலமிகளான அதிகார வர்க்கத்தினரின் பாதுகாவலராகவும் இருந்து, சீனுவின் முன்னேற்றத்திற்குத் தடையாக இருக்கிறார் என்ற எண்ணமும் வளர்ந்தது. இத்தகைய அரசிற்கு எதிராக எழுந்த எதிர்ப்புகள், ஐரோப்பியர் பால் திரும்பியது. மக்களின் ஆத்திரம் ஐரோப்பியர் பக்கம் திரும்பியிருப்பதை 'மஞ்சு' அரசு தனக்குச் சாதகமாக மாற்றத் தொடங்கியது. ஐரோப்பியர்களைச் சீன மண்ணிலிருந்து வெளியேற்றி முன்னேற்றம் காண்பதே அரசின் கடமையென அரசு அறிவித்தது.

## பாக்ஸர் கலகம் (1900-01)

**காரணங்கள்**

மேற்கூறப்பட்ட காரணங்களால் சீனு முழுவதிலும் ஐரோப்பிய எதிர்ப்புக் கருத்துகள் வலுவடைந்து, கொந்தளிப்பு நிலையை அடைந்தது. சீனுவின் பல பாகங்களில் இது பெரும் புரட்சியாக வெடித்தது.

**கிறித்தவ எதிர்ப்பு உணர்வுகள்**

ஐரோப்பியர்கள் அனைவருமே கிறித்தவர்கள். அவர்கள் சீனுவில் செல்வாக்குப்பெற்று, பற்றிடங்கள் அமைத்தும், பின்னர்ப் பலவிதமான சலுகைகள், உரிமைகள் பெற்று, அதன் மூலம் சீனுவையே தங்களுக்குள் பங்கிட்டுக் கொண்டனர் என்பதை முன்பே குறிப்பிட்டுள்ளோம். இதற்கிடையில் ஐரோப்பியர்கள் தங்கள் மதத்தைப் பரப்ப முயன்று, சீனர்கள் பலரை மதமாற்றம் செய்து கொள்ளத் தூண்டினர். மதமாற்றம் அடைந்த சீனர்கள் தங்களின் பண்டு தொட்டு வளர்ந்த பண்பாட்டு முறைகளை அடியோடு மறந்ததோடு அம் முறைகளைப் பின்பற்றும் மக்களை இழிவாக மதித்தும், அவர்களின் சமயக் கருத்துகளைத் தரக்குறைவாக ஏளனம் செய்தும் வந்தனர். இத்தகைய இழி செயல்களைத் தன்மானமுள்ள சீனர்கள் வெறுக்கத் தொடங்கினர். அது மட்டுமல்லாது கிறித்துவராக மாறிய உடனேயே இவர்களுக்குத் தற்பெருமையும், கிறித்தவரல்லாதவரை இழிந்தவர் எனக் கருதும் தவருன போக்கும் ஏற்பட்டன. இதனை உணர்ந்த சீனர்கள் கிறித்துவ மதம்

'கன்பூசியத்' தத்துவங்களையும், சீனப் பண்பாட்டையேகூட அழிக்க இயலுவதாகக் கருதி மனம் புழுங்கினர். கிறித்தவர்கள் குழந்தைகளின் கண்களைப் பிடுங்கி விடுகிருர்கள் என்பன போன்ற தவருன செய்திகள் சீன மக்களிடையே பரபரப்பையும் ஆத்திரத்தையும் ஏற்படுத்தின. இச் செய்திகள் தவருனவை, ஆதாரமற்றவை என்று அரசு வற்புறுத்திக் கூறினுலும், கல்வியறிவற்ற, மூடநம்பிக்கைகளில் ஊறி வளர்ந்த சீன மக்களின் கருத்தை மாற்ற இயலவில்லை. கிறித்தவர்கள் நீதித்துறையிலும் தலையிடுகிருர்கள் என்ற குற்றச்சாட்டும் உண்டு. ஐரோப்பியர்களைச் சீனச் சட்ட முறையில் தண்டிக்கக் கூடாது என்ற உரிமையை ஐரோப்பிய நாட்டினர் அனைவரும் பெற்றிருந்தனர். 'மதமாறிய சீனர்களையும் அந்நியர்களாகவே கருத வேண்டும்; அவர்களையும் சீனச் சட்டங்களின்படி தண்டிக்கக் கூடாது' என்று கிறித்தவப் பாதிரிகள் வாதாடினர். இதனுல் அதிகாரிகளும் கிறித்தவர்கள் மீது வெறுப்புக் கொண்டிருந்தனர்.

இந் நிலையில் அந்நிய நாட்டினர் சீனுவைத் துண்டாட விழைகின்றனர், சீனப் பேரரசை அழிக்க முயலுகின்றனர் என்ற கருத்தும் பரவி, அந்நியர்கள் மீது அளவற்ற வெறித்தனமான ஆத்திரத்தை மக்களிடையே ஏற்படுத்தியது. ஏற்கெனவே ஐரோப்பியர்கள் சீனுவில் பெற்றிருந்த உரிமைகள், சலுகைகளைப் பற்றி விளக்கமாகவே கூறப்பட்டுள்ளது. இவையனைத்தும் சீனமக்களை அந்நியருக்கெதிரான கலகத்தில் ஈடுபடத் தூண்டியது. 1889ஆம் ஆண்டில் சீன மாநிலங்களில் ஐரோப்பிய எதிர்ப்புக் கலகங்கள் ஏற்பட்டன. ஆரம்ப நிலையில் இக் கலகத்தின் முக்கியத்துவத்தை ஐரோப்பியர்கள் உணரவில்லை. கொஞ்சம் கொஞ்சமாக இக் கலகம் பரவி, வலுப்பெற்று, பீகிங் நகரை அடைந்த போது தான் ஐரோப்பியர்கள் தங்களைச் சூழ்ந்துள்ள ஆபத்தை உணர்ந்து, தற்காப்பு முயற்சிகளை மேற்கொண்டனர்.

### பாக்ஸர் கலகம்–நிகழ்ச்சிகள்

அந்நிய எதிர்ப்பு இயக்கம் முதலில் ஷாண்டுங் மாநிலத்தில் தோன்றி வளர்ந்தது. இந்த இயக்கத்தில் முக்கிய பங்கு கொண்டது 'பாக்ஸர்கள்' என அழைக்கப்பட்ட 'I Ho Tuan[1]' என்ற கழகமாகும். இவர்கள் அந்நியர்களைச் சீனுவிலிருந்து

[1] 'I Ho Tuan - The hands of Righteous Harmoney.' Sometimes they were called 'Fists of Righteous Harmoney'- 'I Ho Chuan' this later name reached some Europeans in the Port towns, and they translated is into Boxers', a Crude translation of a graceful phrase. — Glimses of World History—Jawaharlal Nehru, P. 475.

விரட்டுவதையே தங்கள் மூச்சாகக் கொண்டிருந்த ஒருவித வெறிக் கூட்டத்தினர். அரசின் ஆதரவையும் பெற்றிருந்த இந்த பாக்ஸர் இயக்கம் கண்மூடித்தனமான கொடுஞ் செயல்களில் ஈடுபட்டது.

இக் கலகத்தை அடக்கி, தங்களைக் காத்துக்கொள்ள ஐரோப் பியர்கள் அனைவரும் இணைந்து செயல்பட்டனர். பலநாட்டுப் படைகளும் இணைந்து, பொதுத் திட்டமென்றை உருவாக்கி, பாக்ஸர்களை எதிர்த்து அழிக்கத் தொடங்கினர். பீகிங் நகரைப் பாக்ஸர்கள் கைப்பற்றிய பிறகு, ஐரோப்பியப் படைகள் அந் நகரை முற்றுகையிட்டு, அரும்பாடுபட்டு மீட்டனர். ஐரோப் பியர்களின் இணைந்த தாக்குதல்களை எதிர்த்து முறியடிக்கும் வலிமை, முனைப்பார்வம் அற்ற சீனர்களை வெகு எளிதாக அடக்க முடிந்தது. பாக்ஸர் கலகமும் ஒடுக்கப்பட்டு, மீண்டும் அமைதியை நிலைநாட்ட முடிந்தது.

**பாக்ஸர் கலகத்தின் விளைவுகள்**

ஐரோப்பிய நாடுகளின் கூட்டிணைவுப் படைகள் பீகிங் நகரை அடைந்தபோதே, சீன அரசு தன் தலைநகரைவிட்டு ஓடிவிட்டது. பீகிங்கை அடைந்த ஐரோப்பியர்களுக்கு இனி எவ்வாறு செயல்படுவது என்ற கேள்வி எழுந்தது. சீனுவை முழுக்க முழுக்கத் தங்களிடையே பிரித்து, தங்களின் குடியேற்றங்களை அமைக்கலாமா, அல்லது புதிய ஆளும் வமிசத்தை ஏற்படுத்தி, அதை அனைத்துலக நாடுகளின் பொறுப்பில் விடலாமா, அல்லது ஓடிப்போன 'மஞ்சு' அரசப்பரம்பரையிடமே ஆட்சிப் பொறுப்பைக் கொடுத்து, நிர்வாகச் சீர்திருத்தங்களை மேற்கொள்ளச்செய்து, வலிமை பெற்ற, முன்னேற்ற மடைந்த நவீன சீனுவை உருவாக்கும் பணியில் தங்களின் முழு ஒத்துழைப்பை நல்கலாமா என்பதே வெற்றி பெற்ற ஐரோப்பிய நாடுகளின் முன்பு தோன்றிய கருத்துகளாகும். இதுவரை பாக்ஸர் கலகத் திலும், சீனுவைப் பங்கு போடுவதிலும், தலையிடாது தனித்து நின்ற அமெரிக்க அரசு, ஏற்கெனவே சீனுவின் ஒற்றுமையையும் அதிகாரத்தையும் மதித்து நடக்க வேண்டும் என்ற அறிவுரையை ஐரோப்பிய நாடுகளுக்கு வழங்கிய அமெரிக்க அரசு, இந் நிலையில் தலையிட்டு, சீனப் பேரரசைக் காப்பாற்ற முனைந்தது.

அமெரிக்காவின் தலையீட்டினுல் ஐரோப்பிய அரசுகள் மீண்டும் பழைய 'மஞ்சு' அரசையே சீனுவில் ஏற்படுத்த இசைந்தன. சீனுவில் அமைதி காக்கவும், சீனப் பேரரசைச் சிதைந்து போகாமல் காக்கவும், முன்னேற்றக் கருத்துகளை ஆதரிக்கவும் ஐரோப்பிய நாடுகள் தங்கள் இணக்கத்தைத் தெரி வித்தன. இதுவரை சீனுவின் நட்பு நாடுகளுக்கு வழங்கிய சலுகை

களையும் உரிமைகளையும் பாதுகாக்கவும், சீன அரசை மதித்து, வர்த்தக உரிமைகளை வேண்டிப் பெறவும், சீன அரசின் பெருமையை ஏற்றுக் கொள்ளும் வகையிலும் வழிவகைச் செய்ய வேண்டும் என்ற அமெரிக்கர்களின் கருத்தையும் ஐரோப்பிய நாடுகள் ஏற்றுக்கொண்டன.

இதன் அடிப்படையில் ஏற்பட்ட ஒப்பந்தத்தின்படி சீனு ஐரோப்பிய நாடுகளுக்கு 333 மில்லியன் டாலர்களைப் போர் இழப்பீடாகக் கொடுக்க இசைந்தது. இதற்காகச் சுங்கவரியை ஐந்து சதவீதமாக உயர்த்தவும் ஒப்புக்கொண்டது. பாக்ஸர் கலகத்திற்கு உறுதுணையாய் நின்ற அதிகாரிகளைக் கடுமையாகத் தண்டிக்கவும், சீனு உடன்பட்டது. ஐரோப்பியர்களின் வணிக நிலையங்களைக் காவல் புரிய ஐரோப்பியப் படை வீரர்கள் நிரந்தர மாகப் பீகிங்கில் தங்குவதற்கும் அனுமதி அளிக்கப்பட்டது. ஐரோப்பியர்கள் சீனப் பேரரசரைச் சந்திக்க வழி செய்யும் வகையில், இதுகாறும் பழக்கத்திலிருந்த பேரரசரின் முன்பு தரையில் வீழ்ந்து வணங்குகின்ற முறையில் மாற்றம் செய்யப் பட்டது. கலகம் நடந்த நகரங்களில் அரசாங்கத் தேர்வுகளை ஐந்து ஆண்டுகளுக்குத் தடைசெய்ய வேண்டுமென்றும், ஐரோப்பியர் அனுமதிக்கும் வரை வெளி நாடுகளிலிருந்து ஆயுதங்களைச் சீனு வாங்கக் கூடாது என்றும் தடைசெய்யப்பட்டது.

சீனுவின் எதிர்கால அரசியல் மாற்றங்களுக்கு இப் பாக்ஸர் கலகம் முன்னேடி எனலாம். 'மஞ்சு' அரசப் பரம்பரையின் வீழ்ச்சிக்கும், அதன் பின்னர் ஏற்பட்ட குடியாட்சி போன்ற மாறுதல்களுக்கும், இப் பாக்ஸர் கலகம் கட்டியங் கூறியது என வரலாற்றுசிரியர்கள் கருதுகின்றனர். கண்மூடித்தனமான நாட்டுப் பற்றுதான் இக் கலகத்தின் அடிப்படைக் காரணம். அந்நியர் களுடைய ஆதிக்க வெறியும், சிறப்பாகக் கிறித்தவ சமயப் பரப்பூழியர்களின் வெறித்தனமான போக்கும், சீன மக்களை மிகவும் ஆத்திரமடையச் செய்திருந்தது. 'அந்நியப் பேய்களை' விரட்டிலுல்தான் சீனு உருப்படும் என்று பெரும்பாலான சீன மக்களும் அரசு அதிகாரிகளும்கூட எண்ணினர். அந்த ஆணவம் பிடித்த அந்நியர்களை அவர்களுடைய மதம், கண்டு பிடிப்புகள், இயந்திரங்கள், கருத்துகள், கொள்கைகள் ஆகிய அனைத்துடனும் வெளியேறச் செய்வதே சீன வளர்ச்சியில் அக்கறை கொண்டோரின் மூச்சாக இருக்க வேண்டுமென பாக்ஸர் இயக்கத்தைச் சேர்ந்த வர்கள் முழங்கினர். இவ்வாறு கொதிப்படைந்திருந்த சீன மக்களை அந்நிய நாட்டுப் படைகள் தற்காலிகமாகத் தோற்கடித்து அவமானத்துடன் அடிபணியச் செய்திருந்தாலும், அவர்கள்

உள்ளங்களில் கொழுந்து விட்டெரியும் நாட்டுப்பற்றைக் குறைத்து விடவில்லை. அந்நியர்களை விரட்ட வேண்டுமெனில் அவர்களைப் போல அனைத்துத் துறைகளிலும் முன்னேற்றம் காண வேண்டும் என்ற வேட்கையையும், இம் முன்னேற்றங்களைச் செயல் படுத்தும் போது ஏற்படுகின்ற எதிர்ப்புகளை ஒழித்தே தீர வேண்டும் என்னும் உறுதியையும் கொண்டனர். இவ்வாருகப் பாக்ஸர் கலகம் சீனர் களின் இதயத்தில் ஏற்றிவைத்த நாட்டுப்பற்று என்னும் தீபம் அணையாமல், 1911ஆம் ஆண்டில் நடைபெற்ற புரட்சிக்கும், புரட்சிக்குப் பின்னர் உருவான ‘குடியரசுக்கும்’ முன்னேற்றங் களுக்கும் வழிகாட்டும் ஒளி விளக்காகத் திகழ்ந்தது எனக் கூறின் அது மிகையாகாது.

## இயல் நான்கு

# 1. ருஷ்ய-ஜப்பானியப் போர் (1904-05)

1894-95ஆம் ஆண்டுகளில் சீனப் பேரரசை மண்டியிடச் செய்த ஜப்பான், பத்தே ஆண்டுகளில் பெரும் வல்லரசு எனக் கருதப்பட்ட, பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நெப்போலியனையே தோற்கடித்த, ருஷியாவுடன் போரிட வேண்டிய அவசியம் ஏற்பட்டது. சீனாவுடன் தொடர்ந்த போரில் வியத்தகு ஆற்றலை வெளிப்படுத்திய ஜப்பான், போரின் முடிவில் ஏற்பட்ட சிமானோசெகி உடன்படிக்கையின்படி சீனாவின் லியோடுங் தீபகற்பத்தைப் பெற்றது என்பதையும், பின்னர் ருஷியாவின் தலைமையில் உருவான ஐரோப்பியப் பேரணியின் (ருஷியா, பிரான்ஸ், ஜெர்மனி) வற்புறுத்தலால், அரும்பெரும் செயல் திறத்தின் மூலம் பெற்றப் பகுதியினை விட்டுக்கொடுத்து, தன் வெற்றியின் பயனை இழந்தது என்பதனையும் முன்பே கண்டோம். லியோடுங் தீபகற்பப் பகுதியை இழந்த ஜப்பான், அவ்விழப்புக்கு மூலகாரணமாய் இருந்த ருஷியாவைப் பழிவாங்கும் எண்ணத்தைக் கொண்டிருந்தது என்பதனையும் முன்பே கண்டோம். சீன-ஜப்பானியப் போருக்குப் பின்னர் ருஷியாவின் தெற்குநோக்கி விரிவடைகின்ற கொள்கை ஜப்பானுக்கு மேலும் ஆத்திரத்தை மூட்டியது. ருஷியாவும் ஜப்பானிய வளர்ச்சியை அச்சத்துடன் நோக்கியதோடு ஜப்பானிய ஆதிக்கம் கொரியாவிலும், சீனாவிலும் பரவவொட்டாமல் தடுப்பதையே தன்னுடைய முதன்மையான கிழக்காசியக் கொள்கையாகக் கொண்டிருந்தது. ஆக ருஷியா, ஜப்பான் இவைகளின் ஆதிக்கப் போட்டியே, ருஷிய ஜப்பானியப் போரின் அடிப்படைக் காரணம் என்பது அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு கருத்தாகும்.

பொதுவாக நோக்குமிடத்து ருஷியாவுக்கும் ஜப்பானுக்கும் போர் ஏற்படுவதற்கான காரணங்களை இரு கூறுகளாகப் பிரிக்

கலாம். ஒன்று மஞ்சூரியா தொடர்பாக இவ்விரு நாடுகளுக்கும் ஏற்பட்ட சச்சரவு. மற்றொன்று கொரியா தொடர்பாக இவ்விரு நாடுகளுக்கும் இடையே வளர்ந்துவிட்ட பகையுணர்வு. இப் பகை யுணர்வுக்கு அடிப்படைக் காரணம் ஐரோப்பியப் பாணியில் வளர்ந்துவிட்ட ஜப்பான் தன்து அண்டை நாடுகளில் தன் அதிகாரத்தை அரசியல் பொருளாதார விளைவுகளின் காரணமாகப் பரப்ப முயன்றது. இதைத் தடுத்துத் தன்னுடைய மேம்பட்ட நிலையினையும், செல்வாக்கினையும் சீனுவில் பரப்பி, அதன்மூலம் கிழக்காசியப் பகுதிகளில் தனது பெருமையை நிலைநாட்டுவது என்பது ருஷியாவின் குறிக்கோளுமாகும்.

**மஞ்சூரியாவில் ருஷியாவின் ஆதிக்க வளர்ச்சி**

சீனப் பேரரசின் வடகிழக்கு எல்லைப் பகுதியாக அமைந்திருப்பது மஞ்சூரியாவாகும். இப் பகுதியில் இணைந்ததுதான் லியோடுங் தீபகற்பப்பகுதி. மஞ்சூரியா வளம்பொருந்திய பகுதி. அடர்ந்த காடுகளும், நிலக்கரி, இரும்பு, தங்கம்போன்ற கனிவளங்களும் நிறைந்த பகுதி. ஏராளமான உணவுப் பொருள்களும் இங்கு விளைந்தன. கொரியாவைப் போலல்லாமல் மஞ்சூரியா சீனப் பேரரசின் ஒரு மாநிலமாக இருந்தது. இம் மாநிலத்தைச் சீனுவிடமிருந்து பறித்துகொள்ளும் முயற்சியில் 1895-க்குப் பிறகு ருஷியா இறங்கியது. ஏனெனில் மஞ்சூரியாவின் தென்பகுதியான லியோடுங் தீபகற்பத்தில்தான் போர்ட் ஆர்தர் துறைமுகம் உட்பட மிகச் சிறந்த துறைமுகங்கள் உள்ளன. ருஷியாவிற்கு ஆசியப் பகுதிகளில் சிறப்பான துறைமுகங்களேதுமில்லை. விளாடிவாஸ்டாக் என்னும் துறைமுகப்பட்டினம் ருஷியாவின் தென்கிழக்குப் பகுதியில், பசிபிக் கடற்கரையில் அமைந்திருப்பினும், இது ஆண்டில் பாதிநாள் பனியால் மூடப்பட்டுப் பயனற்றதாக இருக்கும். பசிபிக் பெருங்கடல் பகுதியில் வளமான துறைமுகத்தின் தேவையை ருஷியா இதற்கு முன்னரே உணர்ந்திருப்பினும், ஜப்பான், தான் குமரப் பருவம் அடைந்துவிட்டதைச் சீனுவுடன் நடத்திய போரில் அறிவுப்புச் செய்தவுடன், ஜப்பானுக் கருகில் தனக்கு வலிமைமிக்க துறைமுகம் ஒன்று இருந்தேயாக வேண்டும் என்பதை ருஷியா மனத்தில் கொண்டது. ருஷியாவின் தெற்குநோக்கி விரிவடைய வேண்டும் என்ற ஆர்வம் பொருளாதாரக் கருத்துக்களுக்காக மட்டுமன்றி, முக்கியமாக அரசியல் காரணங்களுக்கேயாம் என்பது புலனுகின்றது.

சீன-ஜப்பானியப் போருக்குப் பின்னர், ருஷியா தன்னைச் சீனுவின் நண்பன் எனக் கூறிக்கொண்டு உதவ முன்வந்தது. போர் இழப்பீட்டுத் தொகைக்காகப் பெருந்தொகையைச் சீனுவிற்குக்

கடனுகக் கொடுத்து, அதன் நல்லெண்ணத்தைப் பெற்றது. சீனவை ஐரோப்பிய நாடுகள் அச்சுறுத்தி உரிமைகள் பெற்றுத் 'தங்கள் செல்வாக்குப் பகுதிகளை' (Spheres of influence) ஏற்படுத்திக் கொண்டபோது, ருஷியாவும் லியோடுங் தீபகற்பப் பகுதியை இருபத்தைந்து ஆண்டுக்கால குத்தகைக்குப் பெற்றது. உடனே போர்ட் ஆர்தர் துறைமுகத்தைப் பலபடுத்தி, தன் கீழைக் கப்பற்படைத்தளமாக மாற்றியது. பின்னர் சீனவின் பொருளா தார முன்னேற்றத்திற்குப் பாடுபடும் வகையில் மஞ்சூரியாவில் இருப்புப்பாதைத் தொடர் அமைக்கும் உரிமையைப் பெற்றுத் தனது 'இரண்டு சைபீரியன் இருப்புப் பாதை'யையும் மஞ்சூரியா வழியாக விளாடிவாஸ்டாக்வரை கொண்டு முடித்தது. இத் தொடரில் ஹார்பின் என்ற இடத்திலிருந்து ஓர் இருப்புப்பாதை முக்டன் நகர் வழியாக போர்ட் ஆர்தர் துறைமுகம்வரை நீட்டப் பட்டது. இதன் மூலமாக மஞ்சூரியப் பகுதியின் தெற்குமுனை வரையிலும் ருஷியாவின் செல்வாக்குப் பரவி, நிலைக்க வழியேற் பட்டது. 'அந்நியப் பேய்களை'ச் சீனவிலிருந்து விரட்டுவதற்காக ஏற்பட்ட 'பாக்ஸர் கலத்தின்' வெறிச் செயல்களைக் காரணமாகக் காட்டி, ருஷியா தனது படைகளை மஞ்சூரியாவிற்குள் கொணர்ந்து, அப் பகுதி முழுவதையும் ஆக்கிரமித்துக்கொண்டது. பாக்ஸர் கலகத்தின் முடிவில் ஏற்பட்ட ஒப்பந்தம் செயல்பட்ட போதுகூட ஏதாவது காரணம் கூறி மஞ்சூரியாவிலிருந்து தன் படைகளைத் திருப்பி அழைத்துக்கொள்ளாமல் நிறுத்தியிருந்தது.

மஞ்சூரியாவிலிருந்து ருஷியா வெளியேற வேண்டுமென்பதில் ஐரோப்பிய நாடுகளும் உறுதியாய் இருந்தன. இதற்கான பேச்சு வார்த்தைகள் 1901-02ஆம் ஆண்டுகளில் நடைபெற்றன. பாக்ஸர் கலகத்தின்போது மஞ்சூரிய இருப்புப்பாதைத் தொடருக்குச் சிறிது அழிவு ஏற்பட்டது; ருஷியர்களுக்கு எதிரான கொந்தளிப்பும் ஏற்பட்டது. இதைக் காரணம்காட்டி, மஞ்சூரியாவில் அமைதியை நிலைநாட்டிய பிறகுதான் வெளியேறுவதாக ருஷியா சமாதானங் கள் கூறிக் கொண்டிருந்தது. ருஷியா வெளியேற வேண்டும் என்று அமெரிக்கா, பிரான்சு, ஜெர்மனி, இங்கிலாந்து போன்ற நாடுகள் வற்புறுத்தியபோதும், ஏதாவது சாக்குப்போக்குகள் கூறி, ருஷியா வெளியேற மறுத்தது. சுதந்திர சீன அரசுடன் தான் கொள்ளும் எவ்வித ஒப்பந்தத்தையும் ஏனைய ஐரோப்பிய நாடுகள் தடை செய்யாது என ருஷியா நம்பியிருந்தது. ஆனால் சீன அரசு ருஷியா வுடன் தனி ஒப்பந்தம் எதையும் செய்து கொள்வதை ஐரோப்பிய அரசுகள் தடை செய்தன. ருஷியாவும் மஞ்சூரியாவைத் தன் ஆட்சிக்குட்பட்ட பகுதிபோலவே நடத்த ஆரம்பித்தது.

### ஆங்கில-ஜப்பானிய உடன்படிக்கை—1902

மஞ்சூரியாவிலும் லியோடுங் தீபகற்பத்திலும் ஏற்பட்ட ருஷியாவின் ஆதிக்க வளர்ச்சி ஜப்பானியருக்கு ஆத்திரமூட்டியது. லியோடுங் தீபகற்பத்திலிருந்து தான் வெளியேறக் காரணமாக இருந்த ருஷ்யா, தனக்கு மிக அருகில் ஆதிக்கம் பெறுவதைக் கண்ட ஜப்பான் அச்சமடைந்தது. தனக்கும், தனது சார்பு நாடான கொரியாவிற்கும் ருஷியாவினுல் ஆபத்து ஏற்படலாம் என்று ஜப்பான் கருதியதில் வியப்பேதுமில்லை. மேலும், சீனுவின் வலிவின்மையைப் பயன்படுத்திக்கொண்டு மஞ்சூரியாவைக் கைப் பற்றிக்கொள்ள வேண்டும் என்று ஜப்பான் போட்டிருந்த திட்டம் ருஷியாவால் தடைபட்டது. இதனுல் ருஷியாமீது ஜப்பான் கொண்டிருந்த பகைமை மேலும் வளர்ந்தது. இந் நிலையில் தன்னைக் காத்துக்கொள்ளும் பொருட்டும் கொரியாவில் தனது செல்வாக் கினை மேலும் வளர்த்துக்கொள்ளவும் ஜப்பான் விரும்பியது. அதே நேரத்தில் இங்கிலாந்து, ஜெர்மனி போன்ற நாடுகள் ருஷியாவின் ஆதிக்க வளர்ச்சியைக் கண்டு பொறுமையுற்றன. முதலில் இம் மூன்று நாடுகளும் (இங்கிலாந்து, ஜெர்மனி, ஜப்பான்) தற்காப்பு ஒப்பந்தம் ஒன்று செய்துகொள்ள ஆயத்தம் செய்தன. ஆனுல், ஜெர்மனி தன் அண்டை நாடான ருஷியாவைப் பகைத்துக் கொள்ள விரும்பவில்லை. அதே நேரத்தில் இங்கிலாந்தின் நட்பை யும் இழக்க விரும்பவில்லை. ஆகவே, ஜெர்மனி நடுநிலைக் கொள் கையைக் கடைபிடிக்க முயன்றது. ஆனுல் ருஷியா சீனுவில் செல் வாக்குப் பெறுவதை இங்கிலாந்து விரும்பவில்லை. சீனுவில் ருஷியா செல்வாக்குப் பெற்ருல் அது இந்தியாவையும் பாதிக்குமோ என இங்கிலாந்து அஞ்சியது. இந்தியாவில் தனது ஆதிக்கம் காப்பாற்றப்படவேண்டுமானுல், ருஷியாவிற்கு எதிராகவும், கிழைப் பகுதிகளில் தனக்கு ஆதரவாகவும் செயல்படக்கூடிய நட்பு நாடு ஒன்று தேவை என இங்கிலாந்து எண்ணியது. எனவேதான் ஜப்பானுடன் ஒப்பந்தம் செய்துகொள்ள இங்கிலாந்து முன் வந்தது.

இவ்வுடன்படிக்கை 1902ஆம் ஆண்டு கையெழுத்தாயிற்று. இவ்வுடன்படிக்கையின் முன்னுரையிலேயே சீனு, கொரியா ஆகிய நாடுகளின் ஒற்றுமையையும், சுதந்திரத்தையும் காக்கவும், இவை களை ஏனைய நாடுகளைப் போலவே மதிப்புடன் நடத்தவும், இவ் வுடன்படிக்கையில் இங்கிலாந்தும் ஜப்பானும் இறங்குகின்றன எனக் குறிப்பிடப்பட்டிருக்கின்றது. இங்கிலாந்தின் முழு நோக்கம் சீனுவில் தனது உரிமைகள், சலுகைகள் பாதுகாக்கப்படவேண்டு மென்பதே. ஆனுல் ஜப்பானின் எண்ணம் சீனுவில் தனது நலன்கள் பாதுகாக்கப்படுவதோடு, கொரியாவிலும் தனது சிறப்பு

உரிமைகள் நிலைநிறுத்தப்படவேண்டும் என்பதாகும். சீனுவிலும் கொரியாவிலும், இங்கிலாந்தும் ஜப்பானும் பெற்றிருந்த உரிமைகளைக் காக்கும்பொருட்டு இவ்விரு நாடுகளில் ஒன்று மற்ருெரு நாட்டுடன் போரிட நேர்ந்தால், மற்ருென்று நடுநிலைமை வகிப்பதுடன், எதிரி நாடு மற்ற நாடுகளிலிருந்து உதவி பெறுவதைத் தடுக்க முயற்சி எடுக்க வேண்டும். ஆனுல், எதிரி நாட்டிற்கு ஆதரவாக வேருெரு நாடு போரிலிறங்குமானுல் மற்ருென்று அதன் உதவிக்குச் செல்ல வேண்டுமென இவ்வுடன்படிக்கையில் குறிப்பிடப்பட்டிருந்தது.[1] இவ்வுடன்படிக்கை முதலில் ஐந்து ஆண்டுகளுக்கு நடைமுறையில் இருக்குமென்றும், பின்னர் சூழ்நிலைக்கேற்ப மாற்றியமைக்கப்படலாம் என்றும் முடிவு செய்யப்பட்டது. ஆனுல் இவ்வுடன்படிக்கை 1922 வரை இரு நாடுகளுக்குமிடையே நிலைத்து நின்றது. இவ்வுடன்படிக்கைக்கு எதிராகப் பிரான்சும் ருஷியாவும் ஒப்பந்தம் செய்துகொள்ள முயன்றன. ஆனுல், ஐரோப்பிய அமைதிக்குப் பங்கம் ஏற்பட்டால் தவிர ருஷியாவிற்கு ஆதரவாகப் பிரான்சு போரில் இறங்காது என்று அறிவித்து விட்டது.

இவ்வுடன்படிக்கையால் ஜப்பானின் மதிப்பு உலகநாடுகளிடையே பன்மடங்காக உயர்ந்தது. இதுவரை மிகத் தாழ்வாகக் கருதப்பட்ட கீழை நாட்டுடன், ஐரோப்பிய நாடுகளிடையே மிகவும் பெருமை வாய்ந்த ஆங்கிலப் பேரரசு உடன்படிக்கை செய்துகொண்டது என்ருல், அது ஆசிய நாட்டிற்குப் பெருமையல்லவா? இதனுல் ஜப்பானியரின் ஆணவமும், ஆதிக்க வெறியும் மேலும் மேலும் வளர ஆரம்பித்தன. சீன அரசவையில் ருஷியாவின் செல்வாக்கு குறைய ஆரம்பித்தது. இவ்வுடன்படிக்கையின் உடனடி விளைவாக ருஷியா மஞ்சூரியாவிலிருந்து பதினெட்டு மாதங்களில் வெளியேறுவதாகச் சீனுவுடன் 1902-ல் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டது. ஆனுல், பதினெட்டு மாதங்களுக்குப் பிறகும் ருஷியா தனது படைகளை வெளியேற்றிக் கொள்ளவில்லை. மாருக கொரியாவின் தலைநகரான செவுலிலும் மஞ்சூரியாவிலும் தனது செலவாக்கை மிக விரைவாக வளர்த்துக் கொள்ளப் பாடுபட்டது. இதன் காரணமாகத்தான் ருஷிய-ஜப்பானியப் போர் ஏற்பட்டது.

### கொரியாவில் ஜப்பானும் ருஷியாவும்

சீன-ஜப்பானியப் போருக்குப் பின்னர், கொரியாவில் ஜப்பானியரின் ஆதிக்கம் மேலோங்கியது. கொரிய அரசியலிலும் ஜப்பானியரின் தலையீட்டினுல் குழப்பங்கள் ஏற்பட்டன. இது கொரிய மக்களுக்கு ஆத்திர மூட்டியது. இவர்கள் ஜப்பானியரை

[1] A History of Far East-by Harold-M. Vinacke. p. 176.

வெறுக்கத் தொடங்கினர். ஜப்பானுக்கெதிராகக் கலகங்களும் கொரியாவில் ஏற்பட்டன. இக் கலகங்களைக் காரணமாகக் கொண்டு ருஷியர்கள் தங்கள் செல்வாக்கினைக் கொரியாவில் வளர்த்துக் கொண்டனர். இவ்வாறு ருஷியா, கொரியாவிலும் தனதாதிக்கத்தைப் பரப்பியதையும் கொரியர்கள் விரும்பவில்லை. ஜப்பானியரும் அச்சமடைந்தனர். எனவே, ருஷியாவும் ஜப்பானும் 1896-ல் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டன (The Yamagata-Lobonoff Protocal). இவ் வொப்பந்தத்தின்படி இரு நாட்டுப்படைகளும் கொரியாவினின்று வெளியேற வேண்டுமென்றும், கொரியாவின் பொருளாதார வளர்ச்சிக்கு இருநாடுகளும் உதவ வேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது. ஆயினும் ருஷியா இவ்வொப்பந்தம் கையெழுத்தான உடனேயே ஒப்பந்தத்தில் கண்ட கருத்துகளுக்கு மாறுபட்டு நடக்கத் துணிந்தது. ருஷிய இராணுவத்தினர் கொரியப் படைகளுக்குப் பயிற்சியளித்தனர். படைக்கலன்களும் வழங்கப்பட்டன. கொரியாவின் நிதித் துறையையும் தங்கள் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவர முயன்றனர். இவ்வாறு ருஷியா ஜப்பானுடன் செய்துகொண்ட ஒப்பந்தத்தைக் காற்றில் பறக்க விட்டுவிட்டதைக் கண்ட ஜப்பான், மீண்டும் கொரியப் பிரச்சினையைப் பற்றிப் பேச்சு வார்த்தை நடத்தி மறு ஒப்பந்தம் செய்து கொள்ளவும் முன்வந்தது. இத்தகைய முயற்சியால் 1898-ல் இரண்டாவது ருஷியா-ஜப்பானிய ஒப்பந்தம் கையெழுத்தானது (The Nishi-Roen Convention). இவ் வொப்பந்தம் ருஷிய-ஜப்பானியப் போர் தொடங்கும் வரையில் செயல்பட்டது. இவ்விரண்டு ஒப்பந்தங்களுமே கொரியப் பிரச்சினைக்கு முடிவு காணவில்லை. ருஷியா கொரியாவில் மேலும் உரிமைகள் பெறுவதிலேயே ஆர்வம் காட்டியது. ஜப்பானியர் பெருமளவில் குடியேறினர். கொரியாவில் பொருளாதார ஆக்கப் பணிகளைத் தொடங்கி, பெரும் முதலீடுகள் செய்து வளம்காண முயன்றது. பொருளாதார வளர்ச்சியில் கொரியாவிற்கு உதவிய அமெரிக்காவும், கொரியாவில் ஜப்பானுக்கிருந்த தனிச்சிறப்புரிமையை ஏற்றுக்கொண் டிருந்தது. 'ஜப்பான் தனது பாதுகாப்பை முன்னிட்டுக் கொரியாவில் தனக்கு இருக்கும் செல்வாக்கினைவிட்டுக் கொடுக்கவோ அல்லது வேறு எந்த அரசையும் கொரியாவில் தலையிட அனுமதிக்கவோ முடியாது' என்று 1904ஆம் ஆண்டு ஜப்பானிய வெளியுறவு மந்திரி அறிவித்தார்.

கொரியாவில் தனது ஆதிக்கத்தை வளர்த்துக் கொள்வதையும், சீனுவில் மற்ற அரசுகளுடன் ஒத்துழைப்பதையுமே தனது கொள்கையாக ஜப்பான் கொண்டிருந்தது. மஞ்சூரியாவிலும் கொரியாவிலும் ருஷியாவின் ஊடுருவலையும், ஒப்பந்தங்களை மீறிச்

செயல்படுகின்ற தன்மையையும் கண்ணுற்ற ஜப்பான், ருஷியாவுடன் இவ்விரு நாடுகளைப் பொறுத்தவரையில் முடிவான ஒப்பந்தம் ஒன்றைச் செய்து கொள்வதுதான் தன்னைக் காத்துக் கொள்கின்ற வழி என முடிவு செய்தது. ருஷிய ஜப்பானியப் பேச்சு வார்த்தைகள் 1903ஆம் ஆண்டு தொடங்கின. இப் பேச்சு வார்த்தைகளில் ருஷியர்கள் கையாண்ட பிடிவாதத்தாலும் திமிரான முறைகளினாலும், பேச்சுவார்த்தைகள் முறிந்தன. ஜப்பான் ருஷியாவிலிருந்து தன்னுடைய தூதுவரை அழைத்துக் கொண்டது. போருக்கான ஏற்பாடுகள் விரைவாகச் செய்யப்பட்டன.

### போருக்கு முன்னர் இரு நாடுகளின் வலிமை

இயற்கையமைப்பு ஜப்பானுக்குச் சாதகமாய் இருந்தது. ருஷியா தனக்கு மேற்குப் பகுதியிலுள்ள பல நாடுகளுக்கும் ஈடு கொடுக்கவேண்டும்; அதே சமயத்தில் கீழ்த்திசையிலுள்ள ஜப்பானோடும் போரிடவேண்டும் என்ற நிலையில் இருந்தது. தன்னுடைய கடற்படை முழுவதையும்கூட ஜப்பானியருக்கெதிராகப் பயன்படுத்தவும் முடியாத நிலையிருந்தது. மஞ்சூரியாவைத் தாக்குவதற்குக்கூட, தான் அமைத்த கிராண்டு சைபீரியன் இருப்புப் பாதைத் தொடர் மூலமாகமட்டுமே படைகளை அனுப்ப முடியும். அவ்வாறு படைகளை அனுப்பும்போது அப் படைகள் எளிதில் தாக்கப்படலாம். அதே நேரத்தில் ஜப்பான் ருஷியாவைத் தாக்க வேண்டுமானால் ஜப்பான் கடலைக் கடந்து, கொரியா அல்லது லியோடுங் தீபகற்பம் வழியாக எளிதில் தாக்கமுடியும். இவ்வாறு இயற்கையமைப்பே ஜப்பானுக்கு ஆதரவாய் இருந்தது.

அடுத்து ருஷியாவையும் ஜப்பானையும் ஒப்பிட்டுப் பார்க்கும் போது உருவத்தில் சித்திரக் குள்ளனையும், குன்றன்ன மாந்தனையும் போல் தோன்றினர். ருஷியர்களின் தகரிப்படையும் (Artilery), குதிரைப்படையும், வேட்டெஃகப் படையும் ஜப்பானியப் படைகளைவிடப் பன்மடங்கு உயர்ந்து காணப்பட்டன. ருஷியர்களின் பொருளாதார ஏற்றம் அளவிறந்த ஆயுதங்களை வாங்கிக் குவித்துப் பல ஆண்டுகள் நலியாமல் போரிடத் தக்க அளவுக்கு வளர்ந்திருந்தது: ருஷியன்தான் ஐரோப்பியன் என்பதனால் உயர்வு பெற்று நின்றான். ஆனால் ஜப்பானியன் ஓர் ஆசியன் என்ற இழிவோடு காணப்பட்டான். ஆயினும் ஜப்பானியன் தன் நாடு, தன் தேசியம் என்ற உணர்ச்சியில் காற்றிலேறி விண்ணையும் சாடும் ஆற்றல் பெற்றிருந்தான். அவனுடைய படைக்கலன்களிலும், பெற்றிருந்த பயிற்சியிலும், ஆற்றலிலும் எந்நாட்டிற்கும் தாழ்ந்த

வனல்லன். ஆங்கிலேயரின் பயிற்சியால் கடற்படை வளர்ச்சியிலும் படைக்கலன்களிலும் ஐரோப்பியருக்கு இணையாக நின்றான்.

ருஷிய நாடு மாபெரும் நாடு. மக்கள் தொகையோ ஜப்பானை விட அதிகம். போர்த் தளவாடங்களோ பன்மடங்கு அதிகம். இவற்றிற்கும் மேலாக ஐரோப்பியன் என்ற ஆணவம். இவற்றால் இறுமாப்படைந்திருந்த ருஷியர்கள், கீழைநாட்டுச் சித்திரக் குள்ளனான ஜப்பானை மிக எளிதில் புறங்காண முடியும் என எண்ணியதில் வியப்பேதுமில்லை. ஆனால், தெய்வப் பேரரசரின் தலைமையில் வீரத்தின் வித்துகளாய் விளங்கி நிற்கும் சாமுராய்களையும், தேசிய உணர்ச்சி கொண்டு திரண்டு நிற்கும் ஜப்பானியக் குடிமக்களையும், மேஜி புரட்சியால் ஏற்பட்ட நவீன சாதனைகளையும் ருஷியர்கள் உணரவில்லை என்றுதான் கூறமுடியும். ருஷியா தன்னுடைய வலிமையையே பெரிதாகக் கருதிக்கொண்டு, ஜப்பானில் கிளர்ந்துள்ள புதிய வலிமைகளை மேலெழுந்த வாரியாகக்கூட அறிந்துகொள்ள விரும்பவில்லை.[1]

**போர் நிகழ்ச்சிகள்**

போர் துவங்கும் முன்பே ஐரோப்பிய நாடுகளின் வற்புறுத்தலை ஏற்றுக்கொண்ட ருஷியாவும் ஜப்பானும் மஞ்சூரியாவைத் தவிர ஏனைய பகுதிகளில் சீனாவின் நடுநிலைமையைக் காப்பதாக உறுதி கூறின. இப் போரின்போது இங்கிலாந்துடன் ஜப்பான் செய்துகொண்ட ஒப்பந்தம் (Anglo-Japanees Treaty 1902) ஜப்பானுக்கு மிகப் பெரிய உதவியாய் இருந்தது. இங்கிலாந்தும் அமெரிக்காவும் உண்மையிலேயே ஜப்பானுக்கு ஆதரவாக இருக்க வேண்டுமென விரும்பினாலும் நடுநிலைமை வகித்தன. அதேபோல ஏனைய ஐரோப்பிய நாடுகளையும் நடுநிலைமை வகிக்கும்படி, சிறப்பாக அமெரிக்கா வற்புறுத்தியது. இல்லையெனில் ஜப்பானுக்கு எதிராக, இங்கிலாந்தைத் தவிர்த்து மற்ற நாடுகள் ருஷியாவுடன் இணைந்து போரிட்டிருக்கக்கூடும்.

ருஷியா, கொரியாவில் மரம் வெட்டும் உரிமையை 1896-ல் ஐந்தாண்டுகளுக்குப் பெற்றிருந்தது. அவ் வுரிமை மீண்டும் புதுப்பிக்கப் படவில்லை. இருப்பினும் தன்னை எதிர்க்க ஜப்பான் துணியாது என்ற தவறான நம்பிக்கையில், 1904ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் ருஷியத் துருப்புகள் மரம் வெட்டுதலைக் காரணமாகக் கொண்டு பெருமளவில் யாலு நதியைக் கடந்து கொரியாவிற்குள் நுழைந்தன. போரை எதிர்நோக்கித் தயாராக

[1] ஜப்பானிய வரலாறு—பேராசிரியர் கோ. தங்கவேலு. ப. 286-287.

நின்றிருந்த ஜப்பான், உடனடியாகத் தமது படைகளை கொரியா வினுள் செலுத்தியது. போர்ட் ஆர்தரைத் தாக்கத் தளபதி தோகோவின் (Togo) தலைமையில் ஜப்பானியக் கடற்படையும் அனுப்பப்பட்டது. ஆர்தர் துறைமுகத்திற்கான கடுமையான போரில் இரு தரப்பிலும் ஏராளமாக உயிர்ச் சேதம் ஏற்பட் டாலும், ஜப்பானியரால் அத் துறைமுகத்தைக் கைப்பற்ற முடிய வில்லை. முற்றுகை நீடித்தது. இம் முற்றுகையால் ருஷியக் கடற் படை ஜப்பானியக் கடலில் ஆதிக்கம் பெற இயலாமல் போயிற்று. ஜப்பான் தடையேதுமின்றி இராணுவத்தையும், போர்த் தளவா டங்களையும் கொரியாவிற்கும் மஞ்சூரியாவிற்கும் அனுப்ப முடிந்தது. அடுத்த சிறப்பு வாய்ந்த நிகழ்ச்சி யாலு நதிக் கரையில் ஜப்பானியர் பெற்ற மாபெரும் வெற்றியாகும். இவ் வெற்றி ருஷிய-ஜப்பானியப் போரின் திருப்பு மையமாக அமைந்தது எனக் கூறலாம். இப் போரில் வெற்றிபெற்ற ஜப்பானியப் படைகள் தளபதி குரோகியின் தலைமையில் மஞ்சூரியாவின் தலைநகரான முக்டன் (Mukdon) நகரை நோக்கி வெற்றிநடை போட்டன. மூன்று வாரங்கள் இடைவிடாது நடந்த இப் போரில் (Feb 23 to March 10th 1905) ருஷியர்கள் படுதோல்வியடைந்தனர். ருஷியப் படையில் 1,50,000 பேர் காயமுற்றும், இறந்தும் போனார்கள். இப் போருக்கு முன்னதாகவே போர்ட் ஆர்தர் துறைமுகமும் ஜப்பானியரால் கைப்பற்றப்பட்டது (Jan. 1, 1905). கிட்டத்தட்ட ஓராண்டுக் காலம் நடைபெற்ற இம் முற்றுகைப் போரில் ஜப்பா னியர் பெருத்த சேதமடைந்தனர். எனினும், இவ் வெற்றியால் அவர்கள் பெற்ற பயனும் ஏராளமே. இவ்வாறு தரைப் போரி லும், கடற்போரிலும் தோல்விமேல் தோல்வி கண்ட ருஷியா, ஜப்பானியக் கடலாதிக்கத்தை ஒழிக்க வேண்டி, ஐரோப்பாவில் பால்டிக் கடற்பகுதியில் நிறுத்தியிருந்த தன்னுடைய மிகப் பெரிய கப்பல் படையை ஜப்பானை நோக்கி அனுப்பியது. உலகைப் பாதி வலம் வந்த இந்த ருஷியக் கப்பற்படைக்கு ஏற்ற வரவேற்பளிக்க ஜப்பானியக் கடற்படைத் தளபதி தோகோ, ஜப்பானுக்கும் கொரியாவிற்கும் இடைப்பட்ட நீரிணைப்பிலிருந்த ஷுஷிமா (Tsushima) தீவுக்கருகில் காத்திருந்தார். பால்டிக் கடற்பகுதியி லிருந்து வந்த ருஷியக் கப்பற்படையை நிர்மூலமாக்கினர் (May 27, 1905). இந்த மாபெரும் ருஷியக் கடற்படையில் எஞ்சியவை இரண்டு அழிப்பான்களும், ஒரு சிறிய போர்க் கப்பலுமேயாகும். 'டிரபால்கர்' போருக்குப் பின்னர் இத்தகைய கடற்போர் நடந்த தில்லையென, கெட்டல்பி (C. D. M. Ketelby) என்ற வரலாற் றாசிரியர் வியந்துரைப்பது நோக்கத்தக்கது. இப் போருக்குப் பின்னர் ருஷியாவிலும் ஜப்பானிலும் ஏற்பட்ட கலகங்கள் போரை முடிவுக்குக் கொண்டுவரச் செய்தன. அமெரிக்காவும், ஏனைய

நாடுகளும் போரின்போதே சமரச முடிவு காண முயன்று கொண்டிருந்தன. இந் நிலையில் ஜப்பானிய அரசு ருஷியாவுடன் சமாதான உடன்படிக்கை செய்துகொள்ள முடிவு செய்தது. இதன்படி அமெரிக்கக் குடியரசு தலைவரான தியோடர் ரூஸ்வெல்டை (Theodore Rooswelt) ஜப்பான் அணுகி, சமாதான முயற்சிகள் மேற்கொள்ளுமாறு வேண்டியது.[1]

### போர்ட்சுமவுத் உடன்படிக்கை (Sept. 5, 1905)

அமெரிக்கக் குடியரசு தலைவர் எடுத்துக்கொண்ட முயற்சியின் விளைவாக ருஷிய-ஜப்பானியப் போர் முடிவுற்றது. இரு நாடுகளும் சமாதான உடன்படிக்கையை ஏற்றுக்கொண்டன.

இவ்வுடன்படிக்கையின்படி (1) லியோடுங் தீபகற்பத்தில் தனக்கிருந்த உரிமைகளையெல்லாம் ஜப்பானுக்கு ருஷ்யா விட்டுக் கொடுத்தது. (2) மஞ்சூரியாவின் தென் பகுதியையும், அதில் அமைக்கப்பட்டிருந்த இருப்புப் பாதையையும், சாகாலின் தீவின் தென் பாதியையும், ருஷியா ஜப்பானுக்குக் கொடுத்தது (3) கொரியாவில் ஜப்பானின் ஆதிக்கமும், உரிமைகளும் ருஷியாவால் ஏற்றுக் கொள்ளப்பட்டன (4) மஞ்சூரியாவிலிருந்து தங்கள் படைகளைத் திருப்பியழைத்துக் கொள்ள இரு நாடுகளும் சம்மதித்தன. ஆனால், மஞ்சூரிய இருப்புப் பாதையைக் காவல் புரிவதற்கு மட்டும் ருஷியப் பாதுகாப்புப் படைகள் நிறுத்தப்பட்டன. இப் படைகளும் லியோடுங் தீபகற்பத்தில் நுழைய அனுமதிக்கப்படவில்லை. மஞ்சூரிய இருப்புப் பாதையை வணிகப் போக்குவரத்துக்கின்றி, அரசியல் காரணங்களுக்காக இரு நாடுகளும் பயன்படுத்துவதில்லையென முடிவு செய்யப்பட்டது (5) சீனு தன் நாட்டின் தொழில், வாணிக வளர்ச்சிக்காக எத்தகைய முயற்சியும் எடுக்க ருஷியாவும் ஜப்பானும் தடையாக இருக்காதென உறுதியளிக்கப்பட்டது. ருஷியப் போர்க் கைதிகளுக்கான செலவுத் தொகையாக 40 இலட்சம் பொற்காசுகளை ஜப்பான் பெற்றது.

போர்ட்சுமவுத் உடன்படிக்கையால் ஜப்பானின் ஆதிக்கம் கொரியாவில் வலிவடைந்தது. கொரியாவைத் தன்கீழ்க் கொண்டு வரவேண்டுமென்ற ஜப்பானின் நெடுநாளைய விருப்பம் இதனுல் நிறைவேறியது. 1910ஆம் ஆண்டு வரை ஜப்பான் கொரியாவை தன்னுடைய பாதுகாப்பு நாடாக வைத்திருந்து, பின்னர் தன்னுடன் இணைத்துக்கொண்டது. லியோடுங் தீபகற்பத்தைப் பெற்ற

1. The Far East-Paul H. Clyde of Burton Beero—p. 237.

ஜப்பான், தென் மஞ்சூரியா முழுவதையும் தன் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவர முயன்றது. இதனால் சீனாவின் ஆதிக்க வளர்ச்சியைத் தடுத்துப் பணியவைக்கும் அளவுக்கு ஜப்பான் வல்லமை பெற்றது. ஜப்பானின் இந்த ஆதிக்க வளர்ச்சி ஆசிய வரலாற்றில் பல பெரும் மாறுதல்களுக்குக் காரணமாய் அமைந்தது. மாபெரும் ருஷியாவை, சிறு ஆசிய நாடு வெற்றி கண்டது, தென் கிழக்காசிய நாடுகளிடையே ஜப்பானுக்குச் சிறப்பிடத்தைப் பெற்றுத் தந்தது.

ஐரோப்பிய ஆதிக்கப் பிடியில் சிக்கித் தவித்த ஏனைய ஆசிய நாடுகளுக்கு ஜப்பானின் இம்மாபெரும் வெற்றி, புதிய தெம்பையும் உற்சாகத்தையும் அளித்தது. இப் போர் இந்திய தேசியவாதிகளின் ஒளிவிளக்காய் நின்றதென K. M. பணிக்கர் என்பாரும், தன் னம்பிக்கைக்கு உணர்வூட்டி, இந்திய விடுதலை வீரர்களைத் தட்டி யெழுப்பியதெனப் பண்டித நேருவும், பிறரும் கூறினர். இப் போர் ஐரோப்பிய அகம்பாவத்திற்கு முடிவு கட்டியதென்றும், கிழக்காசியாவில் வெள்ளையனின் தலைக்கனத்தைக் குறைத்தது என்றும் H. G. வெல்ஸ் என்பார் புகழுகின்றார்.

ருஷியாவிற்கு இப் போரினால் ஏராளமான இழப்பீடுகள் ஏற்பட்டன. கீழ்த்திசை நாடுகளில் ருஷியாவின் புகழ் மங்கி, ஜப்பானின் பெருமை வளரலாயிற்று. ருஷியாவில் புரட்சி ஏற்படு மளவுக்கு அரசியல் நிலை, சார் மன்னருக்கு எதிராகத் திரும்பியது. 1917ஆம் ஆண்டில் ஏற்பட்ட ருஷியப் புரட்சிக்கு முன்னோடியாக, ருஷிய ஜப்பானியப் போருக்குப் பின்னர் 1906-ல் ருஷியாவில் ஏற்பட்ட புரட்சியைக் கூறுவர். இதன் பின்னர்தான் ருஷியாவில் புரட்சிக் கருத்துகள் வேகமாகப் பரவி, 1917ஆம் ஆண்டுப் புரட்சிக்கு வழி வகுத்தது என்றும் கூறுவர்.

சீன வரலாற்றிலும் இப் போர் சிறப்பான இடத்தைப் பெறுகிறது. சீனாவில் புதுச் சலுகைகள் பெற மற்ற நாடுகள் தீவிரமாக முயன்றன. ஆசிய நாடுகளின் தலைமை சீனாவிலிருந்து ஜப்பானுக்கு மாறியது. 'ஆசியா ஆசியருக்கே' என்ற ஜப்பானிய முழக்கம் எதிரொலித்தது. சீனாவிலும் சீர்திருத்த இயக்கங்கள் வலிமை பெற்றன. மஞ்சு அரச குலத்தினரின் திறமையின்மையும், ஊழல் மலிந்த அதிகார வர்க்கமும்தான் சீனாவின் இக் கேவலமான நிலைக்குக் காரணம் என்பதை அறிந்து வெதும்பிய மக்கள், ருஷியாவை வென்ற பெருமிதத்தில் திளைக்கும் ஜப்பான், சீனாவில் தன் தனிப்பட்ட ஆதிக்கத்தை நிறுவ எண்ணம் கொண்டுள்ளது என்பதையும் உணர்ந்தனர். இதற்கெல்லாம் காரணமான 'மஞ்சு' அரசகுலத்தை ஒழிக்கும் வேட்கை கொண்டனர். புரட்சிப் பாதையில் சீனா வேகமாக வளரத் தொடங்கியது.

# 2. சீனப் புரட்சி (1911)

1900-01-ல் ஏற்பட்ட பாக்ஸர் கலகமும், அதன் விளைவாக ஏற்படுத்தப்பட்ட உடன்படிக்கையும் சீனுவைப் பெரும் தூக்கத்திலிருந்து விழித்தெழச் செய்தது. ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளாக 'விண்ணுார்ந்த பேரரசு' என்ற நிலையில் மார்தட்டி நின்ற சீனு, தன் திறமையின்மையால், நாட்டின் எல்லைகளையும், உரிமைகளையும், மக்களின் இறைமையையும்கூடக் காப்பாற்றிக் கொள்ள இயலாத நிலையில் ஐரோப்பியர்களால் பல முறை தோற்கடிக்கப்பட்டு, அவமானப் படுத்தப்பட்ட நிலையை உணர்ந்தது. அபினிப் போர்களில் பெரும் அவமானத்திற்குள்ளான சீனு, தைப்பிங் கலகத்தின்போது ஐரோப்பியரிடம் மண்டியிட்ட சீனு, ஐரோப்பிய சமயப்பரப்பாளர்களின் கொடுமைகளைச் சகித்துக்கொண்டிருந்த சீனு, துப்பாக்கி முனையில் வணிக ஒப்பந்தங்களையும், சிறப்புரிமைகளையும் ஐரோப்பியர்கள் வற்புறுத்திப் பெற்றபோதும் வாளாவிருந்த சீனு, வர்த்தகச் சிறப்புரிமைகள் என்ற பெயரில் தன் சுதந்திரம் பறிபோவதைக்கூடத் தடுக்கும் சக்தியிழந்த சீனு, தன்னுடைய சமயம், அரசியல், பண்பாடு இவைகளை ஏற்று, அடிவருடிக்கிடந்த ஜப்பான் தன்னையே புறங்கண்டபோதும் வெஞ்சினம்கூறிப் பகையை வேரறுக்கும் திறமையற்ற சீனு, பாக்ஸர் கலகத்தின்போது மட்டும் தன் உண்மை நிலையை உணர்ந்தது. இவ்வளவு இழப்புகளுக்கும் காரணமாக இருப்பது அந்நிய ஆட்சிப் பரம்பரையான 'மஞ்சு' அரசகுலம்தான் என்று எழுச்சிமிக்க, நாட்டுப்பற்றுமிக்க சீனர்கள் போராடியபோதும், அவர்கள் கவனத்தைத் திசைதிருப்ப ஐரோப்பியர்களைச் சாட முயன்று படுதோல்வியடைந்து, மேலும் தலைக்குனிவைத் தேடிக் கொண்டது சீன அரசு. இத்தகைய 'மஞ்சு' குலத் தோன்றலான ஷுஷி (Tsu Tsi) என்ற அரச மூதாட்டி (Empress Dowager), 'பழம் புத்தர்' என்று சீன மக்களால் அன்புடன் அழைக்கப்பட்டவர், தம் குலப்பெருமை வளர

வேண்டும், நிலைக்கவேண்டும், தழைக்கவேண்டும் என்பதிலேயே கண்ணும்கருத்துமாய் இருந்தவர், தமது மைந்தன் குவாங்சு (Kwang Hsu) பேரரசன் தீட்டி வெளியிட்ட சீர்திருத்தக் கருத்துக்கள்-'மஞ்சு' குலப் பெருமையைக் குறைக்கவல்லது என்ற காரணத்தினால், தமது மைந்தனையேகூட இறக்கும்வரையில் சிறையிலடைத்துத் துன்புறுத்தியவர்; அரச அதிகாரம் முழுவதையும் தாமே ஏற்றுக் கொண்டவர்—ஆக இத்தகைய சிறப்புகளைக் கொண்ட அரச மூதாட்டிகூட சீனாவின் அவலநிலையை நீக்கும் பணியில் தம்மை ஈடுபடுத்திக்கொள்ள முன்வந்தாரெனின், சீனாவின் இழிநிலையை விளக்கவும் வேண்டுமோ?

ஜப்பானுடன் நடந்த போரில் தோல்வியடைந்த சீனா ஜப்பானின் வளர்ச்சியை எரிச்சலுடன் நோக்கியது. ஆண்டாண்டு காலமாகப் பெருமையுடன் விளங்கிவந்த பெருமையை ஒரேயடியாக மாற்றி புதுமைக் கருத்துகளை ஏற்று, புதுமை புனைந்து ஆக்கம்பெற்ற ஜப்பானை, சீனா தாழ்வாகவே நினைத்திருந்தது. தாழ்வாக நினைக்கப்பட்ட ஜப்பான் 1904–05-ல் ஐரோப்பிய வல்லரசுகளுள் ஒன்றான ருஷியாவைத் தோற்கடித்த ஏற்றமிகு நிலையையும் சீனா கண்டது. அதுவும் ஜப்பான் ருஷியாவை வென்றதும் சீன மண்ணில்தான். இரு எதிரிநாட்டுப் படைகள், தன்னுடைய நாட்டில் போரிடுவதைச் செயலிழந்த நிலையில் தான் பார்த்துக் கொண்டிருக்க வேண்டியிருந்த தரக்குறைவான நிலையை எண்ணி மனம் புழுங்கியது.

இந்நிலையில்தான் அரசமூதாட்டி புதுமைக் கருத்துகளை ஏற்றுச் செயல்படுத்த முன்வந்தார். ஐரோப்பிய முறைகளை ஏற்று வளர்ந்த ஜப்பானைப் பற்றிச் சீனர்கள் கொண்டிருந்த கருத்து மாறியது. ஜப்பானைப்போலத் தாங்களும் பழைமையிருளை அகற்றி, புத்துணர்வோடு, புதுமைச் சீனாவைப் படைக்கவேண்டும் என்பதை உணர்ந்தனர். சீர்திருத்த இயக்கம் அரச மூதாட்டியாலேயே துவங்கப்பெற்றது. முதன்முதலாக இராணுவத்தை மாற்றியமைக்கும் பணி தொடங்கியது. யுவான்-ஷி-கே என்பாரின் தலைமையில் ஐரோப்பிய முறையில் இராணுவம் திருத்தியமைக்கப்பட்டது. புதிய போர்க்கருவிகளும், பயிற்சிகளும், நுணுக்கங்களும் கற்றுக் கொடுக்கப்பட்டன. திறமையான ஐரோப்பிய பாணியில் சீனாவின் தரைப்படை வளர்ச்சியுற்றது. அதே நேரத்தில் கப்பற்படை சீர்திருத்தம் பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

அடுத்துக் கல்வி முறையில் மாற்றம் கொண்டு வரப்பட்டது. ஆயிரக்கணக்கான சீன இளைஞர்கள் உயர்கல்வி நாடி, ஐரோப்பிய

நாடுகளுக்குச் சென்றனர். சீனக் கல்விமுறை மாற்றியமைக்கப் பட்டது. சீன இலக்கியங்களுடன் ஐரோப்பியமுறைப் பாடங்களும், அறிவியல், அரசியல், வரலாறு, கணிதம், பொறியியல் போன்ற வையும் கற்பிக்கப்பட்டன. தேர்வு முறைகள் மாற்றம் பெற்றன. பண்பாட்டு முறையிலும் மாற்றங்கள் நிகழ்ந்தன. 'கன்பூசியத்' தத்துவக் கருத்துகளுக்கு முதன்மையிடம் இருந்தபோதிலும், வழிவழி வந்த பண்பாட்டு முறைகளிலும்கூட மாற்றங்கள் புகுத் தப்பட்டு ஏற்றுக்கொள்ளப்பட்டன. புதுமுறைக் கல்வித் திட்டங் களினுல் வளரும் சமுதாயம் 'கன்பூசியக்' கொள்கைகளையேகூட மறந்துவிடுமோ என்ற அச்சம்கூடச் சிலருக்கு ஏற்பட்டது. கன்பூசிய இலக்கியங்களில் தேர்ச்சி பெற்றவர்களுக்குத்தான் அரசியல் பணிபுரிய வாய்ப்புக் கிடைக்கும் என்ற நிலை ஒழிக்கப் பட்டது. சீன-மஞ்சுக்களின் கலப்பு மணத்திற்கு விதிக்கப் பட்டிருந்த தடை நீக்கப்பட்டது. தேவையற்ற அரசு பணிகள் நீக்கப்பட்டன. அரசு அதிகாரங்கள் முறைபடுத்தப்பட்டு வரை யறுக்கப்பட்டன. தொழில், வணிக வளர்ச்சிக்கும், இருப்புப் பாதை வளர்ச்சிக்கும் அரசு ஆதரவு அளிக்கத் தொடங்கியது.

**அரசியல் அமைப்பு முறையின் தோற்றம்**

மேலைநாட்டு முறையில் கல்வி பெற்ற சீனர்கள், மேலைநாட்டு அரசியல் முறைகளையும் புகுத்த விரும்பினர். அரசியல் அமைப்புச் சட்டங்கள் கோரி சீனுவில் இயக்கங்கள் ஏற்படுத்தப்பட்டன. இவைகளுள் சிறப்பு வாய்ந்தது டாக்டர் சுன்யாட்சன் ஏற்படுத்திய சீன மறுவாழ்வுக் கழகமாகும் (Tung Meng-Hui—China Revival Society). இக் கழகம் அந்நியரின் தலையீட்டையும், அரசின் திறமை யற்ற எதேச்சாதிகாரப் போக்கையும் கண்டித்துக் கூக்குரல் எழுப்பியது. அமெரிக்க முறையில் அரசியலமைப்பு உருவாக்கப் பட வேண்டும் என்றும் கூறியது. இக் கழகம்தான் 1911-க்குப் பின்னர், 'மக்கள் தேசியக் கட்சி' (Kuo-Min-Tang—Peoples National Party) என்றழைக்கப்பட்டது. இக் கழகத்தில் ஏராளமான சீன இளைஞர் சேர்ந்தனர். இவர்களுக்குச் சீன அரசியல்-சமுதாயக் குறைபாடுகளையும் உணர்த்தி வழிப்படுத்தும் ஆசானுக, அரசியல் மேதையாக, டாக்டர் சுன்யாட்சன் விளங்கினுர். இது போன்ற வேறுசில இரகசியக் கழகங்களும் சீனுவில் தோன்றிச் சிறுகச்சிறுக வளர்ந்தது. 'மஞ்சு' குலத்தையே அழிக்கும் பணியில் ஈடுபட்டனர். இக் கழகங்களில் மேலைநாட்டுக் கல்வி பெற்ற மாணவர்களும் சேர்ந்தனர். நாட்டுப்பற்று மிக்க, எழுச்சி மிக்க இளைஞர் சமுதாயம் சீனுவின் பெருமையை மீண்டும் நிலைநிறுத்தும் நோக்கத்துடன் வீறுகொண்டெழுந்தது. இவர்களுடைய பாசறை தான் 'இளஞ்சீனு' (Young China) என்றழைக்கப்படுவது. இவர்

களுடைய முழக்கம், 'சீனு-சீனர்களுக்கே' என்பதாகும். இவர்கள் தாம் சீனப் புரட்சியின் ஆணிவேர் எனக் கூறின் அது மிகை யாகாது.

இந் நிலையில் புதிய அரசியலமைப்பை வழங்க அரச மூதாட்டி யார் இசைந்தார். அவர் கருத்தின்படி, அரசியல் அமைப்பு பேரரசரால் மக்களுக்கு வழங்கப்படுவதாகும். மக்கள் இதை வரப்பிரசாதமாக மதித்து ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பதாகும். இந்த அரசியலமைப்பை உருவாக்குவதில் ஜப்பானிய அரசிய லமைப்பு முன்மாதிரியாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஜப்பானின் வெற்றிகளுக்கெல்லாம் காரணம் அரசியலமைப்பு முறையும், அதன்வழி ஏற்பட்ட நிர்வாகச் சீர்திருத்தங்களுமேதான் என அரசமூதாட்டி நம்பினுர். அரசியலமைப்பு ஏற்பட்ட பின்னரும் பேரரசனின் அதிகாரம் சற்றும் குறையவில்லை என்பதையும் அறிந்திருந்தார். எனவேதான் சீனுவின் இந்தப் புதிய அரசிய லமைப்பும் ஜப்பானிய அரசியலமைப்பைப் போலவே அரசனின் அதிகாரத்தைச் சற்றும் குறைக்காமல், அதே நேரத்தில் மக்க ளாட்சிக் கோட்பாடுகளுக்கும் மதிப்பளிப்பது போல, அரசிய லமைப்பு உருவாக்கப்பட வேண்டும் என்று அரசமூதாட்டியார் குறிப்பிட்டிருந்தார். 'அரசியலமைப்பு வழங்கப்பட்ட நாடுகளில் எல்லாம் அதிகாரம் அனைத்தும் அரசவையில் குவிந்திருக்கும். நாடாளுமன்றம் அரசியலமைப்பிலிருந்து பிறக்க வேண்டுமே தவிர, அரசியலமைப்பு நாடாளுமன்றத்தால் உருவாக்கப் படக் கூடாது. சீன அரசு முறையும், அரசியலமைப்பும் அரசப் பேராணை மூலம் ஏற்படுத்தப் படுகிறது.'

1908ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட அரசப் பேராணையின் படி, படிப்படியாக ஒன்பது ஆண்டுகளில் புதிய அரசியலமைப்பு செயல் முறைக்குவரும் என்றறிவிக்கப் பட்டது. ஆரம்ப நிலையில் மாநிலச் சட்டமன்றங்கள் ஏற்படுத்தப்பட்டு, பிறகு படிப்படியாக மத்தியச் சட்டமன்றமும், அமைச்சரவைகளும் ஏற்படுத்தப்படும் என்றும் அறிவிக்கப்பட்டிருந்தது. இம் முறையில் உருவாக்கப்படு கின்ற அரசியலமைப்பின்படி 'மஞ்சு' குலத்தவரின் ஆட்சி சீனுவில் நிலைநிறுத்தப்படும் என்று அரசமூதாட்டியார் நம்பியிருந்தார்.

இந் நிலையில் சீனுவின் 'மஞ்சு' அரச குலத்தினருக்கு இருபெரும் இழப்புகள் ஏற்பட்டன. மஞ்சுகுலப் பெருமைக்காக அயராது உழைத்த அரச மூதாட்டியாரும், அவரால் சிறையிலடைக்கப் பட்ட பேரரசரும் ஒருவர்பின் ஒருவராக ஓரே நாளில் மாண்டனர்

(1908). இவருக்குப் பிறகு ஆட்சிப் பொறுப்பேற்றவர் சிறுபிள்ளை. அவருக்குப் பாதுகாவலாக இருந்து அரசப்பொறுப்பேற்றவர் திறமையற்றவர்; அருகதையற்றவர். சீனுவின் அரசியலில் மிகவும் நெருக்கடியான காலத்தில், திறமையாகச் செயலாற்றக்கூடிய இருவரின் இழப்பு 'மஞ்சு' குலத்தின் அழிவையும், மூன்றாண்டு களுக்குப் பின்னர் ஏற்பட்ட புரட்சியையும் முன்கூட்டியே அறிவித்தது எனலாம்.

அரசாணையின்படி ஏற்படுத்தப்பட்ட மாநிலச் சட்டமன்றங் கள் 1910ஆம் ஆண்டிலிருந்து செயல்படத் தொடங்கின. பழமை விரும்பிகள் நிறைந்த இம் மன்றம் அரசின் கைப்பாவையாக இருக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், இம் மாநிலச் சட்டமன்றங்கள் தங்கள் செயல்களின் மூலம், புரட்சிக் கருத்து களுக்கு ஆதரவளிக்க ஆரம்பித்தன. ஒன்பதாண்டுகளுக்குப் பிறகு நாட்டாளுமன்றம் கூட்டப்படும் என்பதை மாற்றி ஐந்தே ஆண்டு களில் நாட்டாளுமன்றம் கூட்டப்பட வேண்டும் என்று வற்புறுத் தியது. திறமையற்ற அரசு அதிகாரிகளைத் தண்டிக்க முயன்றது. நிர்வாக முறைகளையும், வரிவசூலிலிருந்த குறைபாடுகளையும் சாடியது. இச் செயல்கள் பிரதிநிதித்துவ ஆட்சியமைப்பைக் கோரும் புரட்சியாளர்களுக்கு உற்சாகமளித்தன. இம் மாநிலச் சட்டமன்றங்கள் கலைக்கப்படும் முன்னர் அரசாங்கம் இச் சட்ட மன்றங்களின் பெரும்பான்மையான வேண்டுகோள்களை ஏற்றுக் கொண்டு செயல்பட முனைந்தது. புரட்சி வெடிக்காமல் இருந்திருந் தால் அரசியலமைப்பு முறையிலேயே சீனுவின் எதேச்சாதிகார அரசு மாற்றியமைக்கப்பட்டு இருந்திருக்கலாம் என்ற கருத்தும் நிலவி வந்தது.

**புரட்சி ஏற்பட உடனடிக் காரணம்**

இதற்கிடையில் இயற்கையும் புரட்சிக்கு ஆதரவாக மாறியது. 1910, 11ஆம் ஆண்டுகளில் வறட்சியாலும், வெள்ளத்தாலும் பயிர்கள் அழிக்கப்பட்டன. பெருகிவிட்ட மக்கள் தொகைக்கு உணவளிக்க இயலாத நிலையில் அரசு இருந்தது. பசி, பட்டினியால் ஆயிரக்கணக்கில் மக்கள் மாண்டனர். பல்லாயிரக்கணக்கான மக்கள் இறக்கும் நிலையில் இருந்தனர். பஞ்சத்தால் பாதிக்கப் பட்ட மாநிலங்களிலிருந்து மற்ற மாநிலங்களுக்கு மக்கள் செல்ல விரும்பவில்லை. காரணம் சீன மக்களிடையே ஊறிப்போன சமுதாயக் கோட்பாடுகள்—இறந்தவர் வழிபாடு. இத்தகைய சமுதாயச் சடங்குகளால் கட்டுண்ட சீனன், தனக்கு உணவளித்து, பாதுகாப்பளிக்க உறுதி கொடுக்கும் எந்த இயக்கத்திற்கும் ஆதர வளிக்கத் தயாராய் இருந்தான்.

### வரிச் சுமை

பஞ்சத்தாலும் பட்டினியாலும் நலிவுற்ற சீன மக்கள் வரிச்சுமையையும் ஏற்க வேண்டியிருந்தது. இருபதாம் நூற்றுண்டின் தொடக்கம்வரை ஐரோப்பியர்களுடன் நடத்திய போர்களினுல் ஏற்பட்ட செலவுகளும், போர் இழப்பீடுகளும் அரசின் வருமானத்தில் பெரும்பகுதியை விழுங்கின. பொருளாதார முன்னேற்றத் திட்டங்களைச் செயல்படுத்த மேலும் அதிகப் பணம் தேவைப் பட்டது. இச் செலவுகளை ஈடுகட்ட அரசு மேலும் அதிக வரி விதித்தது. உண்ண உணவுக்கே வழியில்லாத நிலையில், வரிப்பளுவும் சுமத்தப் பட்டபோது, சீன மக்கள் மிகவும் கொதிப் படைந்தனர்.

### மைய மாநில உறவு முறைகளில் ஏற்பட்ட நெருக்கடி

சீனுவின் புதிய அரசியல் அமைப்பு முறை வழிவழி வந்த மாநிலங்களின் தனியுரிமையை அகற்றி, மைய அரசின்பால் அதிகாரங்கள் அனைத்தையும் குவிக்கின்ற வகையில் இருந்தது. சீன வரலாற்றின் ஆரம்ப நிலையிலிருந்தே மாநிலங்கள் சுயாட்சி பெற்றிருந்தன. பேரரசின் பகுதியாக மாநிலங்கள் இருந்த போதினும், தல ஆட்சி உரிமைகளைப் பெற்றிருந்தன. நவீன சீனுவை உருவாக்க முனைந்தவர்கள் பல இருப்புப்பாதைத் தொடர்களை அமைத்தனர். இவ்விருப்புப் பாதைகள் அமைப்பதில் மைய மாநில அரசுகளுக்கிடையே கருத்து வேற்றுமை ஏற்பட்டது. இருப்புப்பாதை அமைக்கும் உரிமை, பாதுகாப்பு ஆகிய பொறுப்பு கள் மாநிலங்களுக்கே வழங்கப்பட வேண்டும் என வற்புறுத் தினர். இதனுல் இருப்புப் பாதையமைப்பை மைய அரசே ஏற்றுக் கொண்டு, அந்நிய நாடுகளிலிருந்து கடன் உதவி பெற்று ஏற்படுத்த முனைந்தது. இருப்புப்பாதை யமைக்கத் தேவையான நிதிவசதியைப் பெற்றிராத மாநிலங்கள், மைய அரசின் இருப்புப் பாதையமைக்கும் திட்டங்களை எதிர்த்தனர். மாநில அரசுகளின் உரிமைகளில் மைய அரசு தலையிடுவதாகக் குறை கூறப்பட்டது. இதனுல் நாட்டின் பல பாகங்களில் கலகங்கள் ஏற்பட்டன. மைய-மாநில அரசுகளுக்கிடையே சமரசப் பேச்சு வார்த்தைகள் தொடங் கியது. இதற்கிடையில் செக்வான் (Szech wan) மாநிலத்தில் பெருங் கலகம் ஏற்பட்டது.

### புரட்சி ஆரம்பம்

இருப்புப்பாதை அமைப்பில் ஏற்பட்ட சிக்கல்களைக் களைய முயற்சிகள் எடுத்துக் கொண்டிருந்தபோதே சில முக்கிய நிகழ்ச்சிகள் நடைபெறத் தொடங்கின. ஹாங்கோ

(Hankow) நகரில் 1911ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 9ஆம் நாள் வெடிகுண்டு ஒன்று வெடித்தது. இவ் வெடிகுண்டு வெடித்த போதே வரலாற்றுப் புகழ்மிக்க சீனப் புரட்சியும் வெடித்தது எனக் கூறுவர். இவ் வெடிகுண்டு நிகழ்ச்சி சீன வரலாற்றில் ஒரு முக்கிய திருப்பு முனையாகவும் அமைந்தது. இவ் வெடிகுண்டு நிகழ்ச்சியைத் தொடர்ந்து இராணுவப் புரட்சி ஏற்பட்டது. (oct. 10, 1911). காட்டுத்தீப் போல் பரவிய இப் புரட்சி அணி, ஹாங்கோ, ஹன்யாங், வுசாங் (Hankow, Hanyang, Wuchang) போன்ற நகரங்களைக் கைப்பற்றியது. இப் புரட்சியணியின் தலைவராக லீ யுவான் ஹங் (Lee Yuan Hung) என்பவர் நியமிக்கப் பட்டார். சிறிதுசிறிதாக யாங்ட்சி நதிப் பள்ளத்தாக்கிலிருந்து தென் சீன மாநிலங்கள் முழுவதிலும் புரட்சியேற்பட்டது. வடமாநிலங்களில் புரட்சி பரவவில்லை.

இவ்வாறு தென்சீன மாநிலங்களனைத்தும் புரட்சியிலீடுபட்டிருந்தபோது மைய அரசு செயலிழந்து காணப்பட்டது. பேரரசரும் அரசவையாரும் ஆட்டம் கண்டனர். புதிதாக ஏற்படுத்தப்பட்ட தேசிய சபையும் இப் புரட்சியைப் பயன்படுத்திக் கொண்டு புதிய உரிமைகள் பெற அரசை வற்புறுத்திற்று. இந் நிலையில்தான் 'மஞ்சு' குலத்தையும், மைய அரசையும் காப்பாற்ற வேண்டி, இதுகாறும் பதவி நீக்கம் செய்யப்பட்டிருந்த தளபதி யுவான்-ஷி-கேயை மீண்டும் பதவியேற்கச் செய்தனர். யுவான்-ஷி-கே தலைமை அமைச்சராக நியமிக்கப்பட்டார். அரசு அதிகாரங்கள் அனைத்தும் அவரிடம் ஒப்படைக்கப்பட்டன.

சீனுவின் இராணுவச் சீர்திருத்திற்குக் காரணமாயிருந்து, சீனுவின் மிகச் சிறந்த தரைப் படையை உருவாக்கிய மிகச் சிறந்த தளபதி, அரசியலறிஞன் யுவான்-ஷி-கே ஆவார். சீனுவின் ஒற்றுமையையும் அரசையும் காக்க வேண்டிய மிகப்பெரிய பொறுப்பை, மிகவும் சிக்கலான நேரத்தில் ஏற்றார். ஆயினும் மஞ்சு அரசகுலத்தைக் காப்பாற்றும் எண்ணம் இவருக்கு இருந்ததா என்பது சந்தேகமே. ஆனால் இவர் விரும்பியது இங்கிலாந்திலிருப்பதைப் போல அரசியலமைப்பிற்குட்பட்ட முடியாட்சி ஏற்படுத்துவதேயாகும். புரட்சியாளர்களின் குடியரசு கொள்கையை அறவே வெறுத்தார். சீனு வளர்ச்சியுற வேண்டு மெனில் முன்னேற்றக் கருத்துகள் தேவைதான். அதே நேரத்தில் முன்னேற்றம் என்ற பெயரில் ஒரேயடியாக மக்களுக்குப் புரியாத, இதுவரை வழக்கிலிருந்த அரசியல் முறைக்கு முற்றிலும் மாறுபட்ட அரசியல் முறையைப் புகுத்துவது அறிவீனம் என்பது இவரது கொள்கை. அரசமுதாட்டியார் விரும்பிய அரசியலமைப்பு

முறையில் தேவையான மாற்றங்களைச் செய்து, செயல் படுத்து வதையே இவர் தமது குறிக்கோளாகக் கொண்டிருந்தார். இக் கொள்கைகளைச் செயல்படுத்த முனையும் முன்னர், தெற்கில் பரவிவந்த புரட்சியை அடக்குவது இவரது தலையாய கடமை யாயிற்று. இவருடைய வலிமைமிக்க படைகளைக் கொண்டு புரட்சி யாளர்களை வெகு எளிதில் நசுக்கியிருக்க முடியும். ஆனால் புரட்சிப் புயல் வீசும் போதுதான் தன்னுடைய ஆதிக்கத்தைச் சீனத் தலைநகரான பீகிங்கில் நிலைநிறுத்த முடியும் என்று கருதிய யுவான்-ஷி-கே, தெற்கத்திய புரட்சியாளர்களுடன் பேச்சு வார்த்தையைத் தொடங்கினர்.

இதற்கிடையில் லி- யுவான்- ஹுங்கின் தலைமையில் புரட்சிக் கொடியேந்திய தென் சீனர்கள், நாங்கிங் (Nanking) நகரில் கூடி ஒரு தாற்காலிகச் சீனக் குடியரசை நிறுவினர். இக் குடியரசின் தலைவராக டாக்டர் சுன்யாட்சன் ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். இப் புரட்சிக்கு முன்னர் அமெரிக்காவிலிருந்த டாக்டர் சுன்யாட்சன், புரட்சி வெடித்தவுடன், தாய்நாடு திரும்பினர். சீன மக்கள் அவரை வரவேற்றனர்; தங்கள் தலைவராக மகிழ்வுடன் ஏற்றுக்கொண்டனர். 1912ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் முதல் நாள் மேற்கத்திய முறையில் தென் சீனக் குடியரசின் தலைவராகப் பதவியேற்றார்.

டாக்டர் சுன்யாட்சன் தற்காலிகக் குடியரசு தலைவராகப் பதவியேற்றவுடன் பீகிங் அரசின் தலைமை யமைச்சராகப் பதவி யேற்றிருந்த யுவான்-ஷி-கேயுடன் சமாதானப் பேச்சுவார்த்தைகள் தொடங்கினர். யுவான் ஷி-கேயின் தலைமையிலிருந்த சீன அரசும், தென் மாநிலங்களின் புரட்சிக் குடியரசும் போதிய பணவசதி யில்லாமல் புரட்சியைத் தொடர்ந்து நடத்த இயலாத நிலையி லிருந்தன. 'மஞ்சு' அரசகுலம் பதவியிலிருந்து நீக்கப்பட வேண்டு மென்றும், சீனவில் குடியரசு ஏற்படுத்தப்பட வேண்டுமென்றும் டாக்டர் சுன்யாட்சன் வற்புறுத்தினர். இவ்வாறு சீனவில் குடியரசு ஏற்படுத்தப்படுமாயின் தாம் குடியரசு தலைவர் பதவியை யுவான் ஷி-கேயிற்கு விட்டுக் கொடுப்பதாகவும் டாக்டர் சுன்யாட்சன் உறுதியளித்தார். இவ் வாக்குறுதியின் அடிப்படையில் இருசாராருக்குமிடையே சமாதான ஒப்பந்தம் ஏற்பட்டது. இவ் வொப்பந்தம் ஏற்படுவதற்கு மற்றுமொரு முக்கிய காரணத்தை யும் இங்குக் குறிப்பிட்டாக வேண்டும். சீன இரண்டாகப் பிளவு பட்டுப் புரட்சிப் புயலில் சிக்கித் தவித்தபோது அண்டைநாடான ருஷியாவும், ஜப்பானும் சீனவின் குழம்பிய குளத்தில் தங்களுக்கும் ஆதாயம் தேட முற்பட்டனர். ருஷியா மங்கோலியாவையும்,

மஞ்சூரியாவின் வடபாதியையும் கவர்ந்து கொள்ளத் திட்டமிட்டது. ஜப்பானே மீண்டும் சீனுவைத் தாக்கிப் பயன்பெற முயன்றது. இவ்வாறு ஆதிக்கவெறி கொண்ட அண்டை நாடுகளின் பிடியிலிருந்து சீனுவைக் காப்பாற்ற வேண்டும் என்ற நல்லெண்ணத்தினுலும் இச் சமாதான ஒப்பந்தம் ஏற்பட்டது என்பதும் குறிப்பிடத்தக்கது.

**சமாதான உடன்படிக்கை**

1644ஆம் ஆண்டிலிருந்து சீனுவை ஆண்டுவந்த 'மஞ்சு' அரசு குலத்தின் கடைசிப் பேரரசர், ஆறு வயதுச் சிறுவன் அரச பதவியைத் துறந்தார் (abdicated). அவருக்கு ஓய்வூதியம் வழங்கப்பட்டது. அரண்மனையையும், பேரரசர் பட்டத்தையும் வைத்துக் கொள்ள அனுமதிக்கப்பட்டார். அமைதி காத்து, நாட்டின் ஒருமைப்பாட்டை வலியுறுத்தி, குடியரசு படைகளை ஏற்படுத்தி, மஞ்சுக்கள், சீனர்கள், மங்கோலியர், முகம்மதியர்கள், திபெத்தியர்கள் ஆகிய ஐம்பெருங் குடியினரின் பட்டங்களையும், உரிமைகளையும் காத்து, சீனக் குடியரசை ஏற்படுத்தும் அதிகாரத்தை யுவான்-ஷி-கேவிற்கு அளிக்கிருேம்'[1] என்று சீனப் பேரரசரின் இறுதி அரசப் பேராணை அறிவித்தது. இதன் பின்னர் டாக்டர் சன்யாட்சன் தம்முடைய உறுதிமொழிக்கேற்பப் பதவி விலகினுர். யுவான்-ஷி-கேயை குடியரசு தலைவராக ஏற்றுக்கொள்ளும்படி தென்மாநிலப் புரட்சித்தலைவர்களுக்கு அறிவுரை வழங்கினுர். தென்மாநிலத்தவர்களும், ஒருமைப்பாடடைந்த சீனக் குடியரசைக் காண விழைந்தவர்களாக யுவான்-ஷி-கேயை தங்கள் குடியரசு தலைவராக ஏற்றுக்கொண்டனர்.

1912ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 12ஆம் நாள் பேரரசர் பதவி விலகினுர், பிப்ரவரித்திங்கள் 13ஆம் நாள் டாக்டர் சன் யாட்சன் பதவி விலகினுர். பிப்ரவரி 14ஆம் நாள் சீனக்குடியரசின் முதல் தலைவராக யுவான்-ஷி-கே பதவியேற்ருர். கிட்டத்

[1] The final terms of settlement were agreed to and abdication edicts issued on Feb. 12, 1912. The dynasty abdicated in consideration of, 1. a good financial settlement, 2. The promise of security for members their race, and the Imperial Household; and 3. The provision for the upheep of Imperial tombo............ Let Yuan Shi-Kai-organise with full powers a provisional republican government, and confer with the republicon army as to methods of union, thus assuring peace to the people and tranquility to the Empire, & forming one Great Republic of China lay the Union as heretofore of the five peoples, namely, Manchus, Chinese, Mongols, Mohomdans and Tibetans, together with their territery in its integnity"—A History of Far East—H. M, Vinacke-P. 224.

தட்ட இரண்டாயிரம் ஆண்டுகளாக 'கன்பூசியக்' கொள்கைகளின் அடிப்படையில் ஆண்டுவந்த சீனுவின் 'விண்ணூர்ந்த பேரரசு' (Celestial Empire) முடிவுற்றது. சீன வரலாற்றில் ஒரு புதிய அத்தியாயம் ஆரம்பமாயிற்று.

## 'மஞ்சு' அரசு குலத்தின் வீழ்ச்சிக்கான காரணங்கள்

மஞ்சூரியப் பகுதியிலிருந்து வந்து மிங் (Ming) அரச குலத்த வரிடமிருந்து சீனுவைக் கைப்பற்றிய சிங் (Ching) அல்லது 'மஞ்சு' அரசகுலத்தினர் 1644-லிருந்து, 1912வரை சீனுவை ஆண்டனர். இவ்வளவு நெடுங்காலம், இருபதாம் நூற்றூண்டின் தொடக்கம் வரை ஆண்ட அரச குலத்தினரின் வீழ்ச்சியைப்பற்றி இங்கு மிகவும் சுருக்கமாகவேனும் குறிப்பிடுதல் அவசியமாகும். உலகின் ஏனைய நாடுகளில் தோன்றி மறைந்த சிறப்புவாய்ந்த அரசகுலங் களைப் போலவே, சீனுவின் உயர்வுக்கும், தாழ்விற்கும் காரணமாய் இருந்து சீன வரலாற்றில் சிறப்புமிக்கதொரு இடத்தைப் பெறு கின்றது. பத்தொன்பதாம் நூற்றூண்டில் அந்நியர் தலையீட்டி னுலும், 'மஞ்சு' குலத்தவரின் திறமின்மையாலும் ஏற்பட்ட குழப்பநிலையைப் பயன்படுத்திக் கொண்ட குடியரசுவாதிகள், 'மஞ்சு' அரசின் குறைகளை மிகைப் படுத்தியிருக்கின்றனர். பெருமையுடனும், குறைபாடுகளுடனும் 1912வரை ஆண்டனர் எனில் அதன் காரணம் சீனுவைக் காப்பாற்றி, முன்னேற்றுகின்ற திறமை இன்னமும் 'மஞ்சுக்களுக்கு' இருக்கின்றது என்ற நம்பிக்கை யாலன்று. சீனுவின் ஆட்சிப்பொறுப்பை ஏற்றுத் திறம்பட நடத்தும் அளவுக்கு வலிமை படைத்த மக்களால் ஏற்றுக்கொள்ளப்படுகின்ற மாற்று அரசகுலமோ, அல்லது இயக்கமோ சீனுவில் தோன்ற வில்லை யென்பதால்தான் என வரலாற்றறிஞர்கள் குறிப்பிடுவர்.

## மஞ்சுக்களின் திறமையற்ற நிலை

அபினிப் போர்கள் என்று குறிப்பிடப்படுகின்ற சீன-ஆங்கிலப் போர்களில் சீனுவிற்கு ஏற்பட்ட பெரும் தோல்வி, மஞ்சுக்களின் திறமையற்ற நிலையை முதன்முதலாக உலகிற்கு எடுத்துக் காட்டியது. இவர்களுக்கு வெளியுறவுக் கொள்கை ஒன்று இருந்த தாகக் கூற இயலாது. அப்படியே இருந்திருப்பினும், அது பத் தொன்பதாம் நூற்றூண்டில் ஏற்றுக்கொள்ளக் கூடியதாக இல்லை. சீனுவைத் தவிர மற்ற உலக நாடுகளனைத்தும் 'நாகரிகமற்றவை' என்றும், சீனப் பேரரசருக்குக் கீழானவை என்ற எண்ணத்திலும் செயல்பட்டு வந்தது. பேரரசர் இருந்தும் மைய ஆட்சி வலுவற்ற

நிலையிலிருந்தது. மாநிலங்கள் அனைத்தும் பேரரசிற்கு உட்பட்டிருப்பினும், சுதந்திர உரிமை பெற்ற நாடுகளைப் போலவே செயல்பட்டு வந்தன. அந்நியர்களுடன் ஏற்பட்ட போர்களின்போது கூடச் சீனு முழுவதுமாகப் போரில் ஈடுபடவில்லை. ஆங்காங்கே மாநிலங்கள் தாக்கப்பட்டபோது அந்தந்த மாநிலங்கள்தான் போரிலீடுபட்டனவே தவிர மற்ற மாநிலங்கள் எந்தவிதப் பொறுப்பும் ஏற்றுக்கொள்ளவில்லை. பத்தொன்பதாம் நூற்றுண்டில் நிலவிய இந் நிலையை மாற்றிச் சீனப் பேரரசின் ஒருமைப்பாட்டை நிலைநிறுத்தி வெற்றியுடன் அரசோச்சும் திறமையற்ற நிலையில் 'மஞ்சு' அரச குலம் நின்றது.

சீனுவின் படைத்துறைகள் வளர்ச்சி பெற்றிருக்கவில்லை. ஜப்பானைப் போல நவீன முறையில் படை முறையையோ, ஆயுதங்களையோ உருவாக்கவில்லை. நாட்டுப் பற்று மிக்க அதிகாரிகளையும் பெற்றிருக்கவில்லை. அரசு ஊழியர்களும் சுயநலவாதிகளாக, ஒழுக்கம் குறைந்தவர்களாகப் பொறுப்பற்ற நிலையில் சோம்பித் திரிந்தனர். அரசு பணித் தேர்வு முறையும் பழங்கால அடிப்படையிலேயே இருந்தது. இத்தகைய திறமைக் குறைவுகளுடன், பெருகிவந்த மக்கள் தொகையும் சீனப் பொருளாதாரத்தை மிகவும் நலிவடையச் செய்தது.

**மஞ்சுக்களின் குறுகிய நோக்கம்**

அந்நியர்களின் தலையீட்டினுல் ஜப்பான் தன் நிலை உணர்ந்து, அவைகளைப் பின்பற்றி வளர்ந்து உயர்ந்த நிலைமையை மஞ்சுக்கள் உணரவில்லை. சீர்திருத்தக் கருத்துகள் நாட்டில் தோன்றிய போது பிடிவாதமாக அவைகள் தடுக்கப்பட்டன. பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதிப் பகுதியில் சீர்திருத்த இயக்கங்கள் பல தோன்றின. ஆனுல், அரச மூதாட்டியாரின் எதிர்ப்பினுல் நசுக்கப்பட்டன. ஜப்பானுல் தோற்கடிக்கப்பட்ட பின்னர், ஐரோப்பியர் சீனுவைத் துண்டாட முயன்றபோதுகூட 'மஞ்சு' அரசு செயலிழந்து காணப்பட்டதே தவிர, சீர்திருத்தி முன்னேறும் வழிகளைக் கடைப்பிடிக்கவில்லை. பாக்ஸர் கலகத்தின் பின்னர்தான் சீர்திருத்தங்களைப் புகுத்தவேண்டும் என்பதை மஞ்சுக்கள் உணர்ந்தனர். மேல்நாட்டு முறைகளில் சீனுவைச் சீர்திருத்தும் எண்ணங்கொண்ட அரச மூதாட்டியார், அச் சீர்திருத்தங்களால் தம் குலம் பேணிக் காக்கப் படவேண்டுமென்றும், தமது கையிலேயே அதிகாரங்கள் அனைத்தும் இருக்கவேண்டும் என்றும் கருதினுரே தவிர உண்மையிலேயே சீனுவில் பரவிவந்த சீர்திருத்தக் கருத்துகளை அவர் அறிந்திருக்கவில்லை. இந்த அரச மூதாட்டியார் இறந்த பின்னர் 'மஞ்சு' அரசாகப் பதவியேற்றவர் ஆறு வயதே நிரம்பிய

குழந்தை. அரசியல், பொருளாதார முன்னேற்றங்களைக் கோரி புரட்சி ஏற்படும் நிலை உருவானபோது, மஞ்சுகுலத்தின் பெயரால் திறமையாகச் செயல்படுபவர் இல்லாதது இயற்கையின் விதி என்றே கூறவேண்டும்.

**புரட்சியாளர்கள்**

அரச எதிர்ப்பு இயக்கம் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றி வளர்ந்தது. 'இளஞ்சீனா', போன்ற இயக்கங்கள் மக்களிடையே செல்வாக்குப் பெற்றன. டாக்டர் சுன்யாட்சன் போன்ற பெருந் தலைவர்கள் தோன்றிப் புரட்சி இயக்கத்தை வளர்த்தனர். கோமிண்டாங் கட்சி உருவானது. குடியரசு கொள்கை மக்களிடையே ஆக்கம் பெற்றது. யுவான்-ஷி-கே என்ற தளபதியைக் குடியரசு கொள்கையின்பால் நாட்டம் கொள்ளச் செய்ய வேண்டித் தமக்கு வழங்கப்பட்ட குடியரசு தலைவர் பதவியை டாக்டர். சுன்யாட்சன் துறந்தார். இத்தகைய தியாக உள்ளம் படைத்த புரட்சித் தலைவர்கள்தாம் புதிய சீனாவை உருவாக்கிய சிற்பிகள் எனலாம். யுவான்- ஷி-கே முதல் குடியரசு தலைவரானார். சீனப் பேரரசு மறைந்தது. குடிய்ரசு உதயமானது. 'மஞ்சு' குலம் வீழ்ந்தது. அதன் பின்னர் எந்த அரசகுலமும் தோன்றும் வாய்ப்பும் மறைந்தது.

# 3. யுவான்-ஷி-கேயின் தலைமையில் சீனக் குடியரசு

சீனப் புரட்சியின் விளைவாக இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் அதிகமாக நிலைபெற்றுவந்த முடியாட்சி முறை மறைந்து, சீனாவில் குடியாட்சி தோன்றிவிட்டது என்று கூற இயலாது. ஏனெனில் யுவான்-ஷி-கேயின் தலைமையில் உருவானது இராணுவ ஆட்சியே யென்பதும், டாக்டர் சுன்யாட்சன் ஏற்படுத்தவிரும்பிய குடியாட்சி அல்லவென்பதும், யுவானின் ஆட்சிக் கால நிகழ்ச்சிகளில் இருந்து புரிந்துகொள்ள முடியும். யுவான் சீனாவின் சிறப்புமிக்க பெரும் படைத் தளபதி. சீனாவின் வடமாநிலங்களில் செல்வாக்கு மிக்கவர். தென்மாநிலங்களில் குடியரசை விரும்புவோர் பரவலாக இருந்தனர். எனினும் சீனாவின் அமைதி காக்க, ஒருமைப் பாட்டை நிலைநிறுத்தவேண்டித் தென்பகுதித் தலைவர்கள் யுவானின் தலைமையை ஏற்றுக் கொண்டனர். யுவானின் படைகளையும் தேசிய சீனப்படைகள் எனக் கூறுவதற்கில்லை. இவருடைய படைத்தலைவர்களும் தேசியப் படையின் அதிகாரி களாகத் தங்களைக் கருதவில்லை. படைப்பிரபுக்களே அந்தந்த மாநிலப் பொறுப்புகளை ஏற்றிருந்தனர். போர் வலிமை மிக்கவன் ஆட்சிப் பொறுப்பை ஏற்கும் நிலையிருந்ததே தவிர மக்களின் படிநிகராளிகள் பொறுப்பேற்கும் நிலை ஏற்படவில்லை. ஆரம்ப நிலையில், படைப்பிரபுக்களுக்கு மாநில அதிகாரங்கள் கொடுக்கப் படுவதன் மூலம் தன்னுடைய அதிகாரம் நிலை பெறும் என்றும், பின்னர்ப் படையதிகாரிகளை நீக்கிவிட்டு ஆட்சித்துறை அதிகாரி களை நியமிக்கவும் எண்ணங்கொண்டிருந்தார் என்பதை நினைவிற் கொள்ள வேண்டியதாகும்.

இதற்கிடையில் 1912ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட தாற்காலிக அரசியல் அமைப்புச் செயல்படத் தொடங்கியது. தென் மாநிலக் குடியரசு விரும்பிகளால் உருவாக்கப்பட்ட இவ்வரசியல் அமைப் பில் குடியரசு தலைவர் நாடாளுமன்றத்தின் ஆலோசனைகளுக்கு

உட்பட்டு நடக்கவேண்டும் என்பது குறிப்பிடத்தக்கது. 1912, ஆகஸ்டு மாதத்தில் டாக்டர் சுன்யாட்சன் தமது கோமிண்டாங் (Kuomintang—Nalional Peoples Party) கட்சியை நிறுவினார். இக் கட்சிக்குப் போட்டியாக யுவான், 'சின்புதாங்' (Chinputang) என்ற மற்றொரு கட்சியை ஆரம்பித்தார். புதிய நாடாளுமன்றம் 1913-ல் கூடியபோது கோமிண்டாங் கட்சி பெரும்பான்மைப் பலம் பெறவில்லையெனினும், பலமிக்க கட்சியாக விளங்கியது. இந் நிலையில்தான் கோமிண்டாங் கட்சியின் நாடாளுமன்றத் தலைவர் கொலை செய்யப்பட்டார். யுவான்தான் இக் கொலையைச் செய்யத் தூண்டியிருக்கக்கூடும் என கோமிண்டாங்கினர் ஐயுற்றனர். இந்த ஐயப்பாட்டினால் உந்தப்பெற்ற கோமிண்டாங் கட்சியினர் புரட்சி செய்தனர். இது கோடைப் புரட்சி (Summer Revolutoin) என்று வரலாற்றில் குறிக்கப்படுகிறது. கோமிண்டாங்கினரின் கோடைப் புரட்சி இரும்புக்கரம் கொண்டு நசுக்கப்பட்டது. புரட்சித்தலைவர்கள் தண்டிக்கப்பட்டனர். சுன்யாட்சன் ஜப்பானுக்குத் தப்பி யோடினார். எஞ்சியிருந்த நாடாளுமன்றத்தினர் யுவான் - ஷி - கேயைக் குடியரசு தலைவராகவும். - லி-ஹங்-சாங் (Lee-Hung-Chang) என்பவரை உதவித் தலைவராகவும் முறைப்படி தேர்ந்தெடுத்தனர். இந் நிகழ்ச்சிக்குப் பின்னர் நாடாளுமன்றம் கலைக்கப்பட்டது. கோமிண்டாங் கட்சியும் சீனாவில் தடைசெய்யப்பட்டது. யுவான் தம் விருப்பப்படி புதியதொரு அரசியலமைப்பை உருவாக்கி அதன்படி தமது வல்லாட்சியை ஏற்படுத்த முனைந்தார். இப் புதிய அரசியலமைப்பின்படி அரசு அதிகாரங்களனைத்தும் குடியரசு தலைவரிடம் விடப்பட்டது. யுவானுக்குத் தாம் பேரரசராக முடிசூட்டிக் கொண்டு தமது குலத்தினரின் ஆட்சியைத் துவக்க வேண்டும் என்ற பேராசை ஏற்பட்டது. இந்தப் பேராசையால் உந்தப்பெற்ற யுவான் வரம்பிற்குட்பட்ட முடியாட்சியைத் துவக்கும் பணியில் செயல்பட ஆரம்பித்தார். யுவானின் இக் கனவுக்கு ஆசி கூறுவதுபோல அவருடைய ஆலோசகரான பிராங்க்லின் குட்னோ(Franklein Goodnow) என்பவரும் கருத்துரை வழங்கினார். 'மக்கள் பங்கெடுத்துக் கொள்ளாத மக்களாட்சியை, குடியரசு எனப் பெயரளவில் மட்டும் செயல்படுகின்ற ஆட்சி முறையினை மாற்றி, வரம்புக்குட்பட்ட முடியாட்சி ஏற்படுத்த வேண்டுமெனச் சீனமக்கள் வேண்டினால் முடியாட்சியை ஏற்படுத்தலாம்' என்பதுதான் அவர் கூறிய கருத்து. இக் கருத்தினை ஏற்றுக் கொண்ட யுவான் 1915ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் வரம்புக்குட்பட்ட முடியாட்சி அறிவிப்பை வெளியிட்டார். 'குடியரசு' என்பதனையோ 'முடியாட்சி' என்பதன் பொருளையோ உணராத தென்பகுதி சீனமக்கள் கிளர்ந்தெழுந்தனர். இக் கிளர்ச்சியின் விளைவாகத் தமது முடியாட்சிக் கருத்தினை மாற்றிக்கொண்ட

யுவான், தோல்வியில் மனமுடைந்து 1916ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் இறந்தார்.

**யுவானின் உள்நாட்டுக் கொள்கை**

யுவான்- ஷி-கே தமது படைத்தலைவர்களை மாநில ஆளுநர்களாக நியமித்திருந்தார். வடமாநிலங்களில் செல்வாக்குப் பெற்றிருந்த யுவான் படிப்படியாகத் தென் மாநிலங்களையும் தமது பிடியில் கொண்டுவர முயற்சிகள் மேற்கொண்டார். நம்பிக்கைக்குகந்த போர்ப் பிரபுக்கள் (War Lords) தென் மாநிலங்களின் ஆட்சிப் பொறுப்பாளர்களாக நியமிக்கப் பட்டனர். இவர்களைத் தவிர அந்த மாநிலங்களில் இதுகாறும் பணியாற்றிய அதிகாரிகளையே பதவிகளில் நீடிக்கச் செய்தார். குடியாட்சி முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களவைகள் ஏற்படுத்தப் படவில்லை. புரட்சிக்கு முன்பிருந்த பழைய முறையே மாநிலங்களில் செயல் பட்டு வந்தது. அமைதிகாக்க வேண்டித் தமது படைகளை மட்டும் முக்கிய இடங்களில் நிறுத்தி வைத்திருந்தார். மக்களின் அறியாமையைப் பயன்படுத்தித் தமது எதேச்சாதிகார ஆட்சியை நிறுவும் எண்ணத்துடன் யுவான் ஆரம்பத்திலிருந்தே செயல்பட்டார் எனவும் கூறப்படுகின்றது.

நாட்டின் நிதி நிலைமையைச் சீராக்கும் பணியில் யுவான் தமது முழுக்கவனத்தையும் செலுத்தினுர். ஊழல், திறமையற்ற பொறுப்பற்ற அதிகாரிகள், செலவுமிக்க போர்கள், போர் இழப்பீடுகளாகப் பெருந்தொகை என்ற இத்தகைய குறைகளினுல் நாட்டின் கருவூலம் வறண்டு கிடந்தது. இந் நிலையில் வெளிநாடுகளிலிருந்து பெருந்தொகையைக் கடனுகப் பெறுவதன்றி, வேறு முறைகளில் ஆட்சியைத் தொடர முடியாது என்பதை உணர்ந்தார். சீனுவின் இந்த நிதி நிலையைத்தங்களுக்கு வாய்ப்பாகப் பயன் படுத்த முனைந்தன ஐரோப்பிய நாடுகள். இங்கிலாந்து, பிரான்சு, ருஷியா, ஜெர்மனி, ஜப்பான், அமெரிக்கா முதலிய நாடுகள் ஒன்றிணைந்து சீனுவுக்குப் பணவுதவியளிக்க முன்வந்தன. இதற்குச் சீனுவின் உப்பு வரி உரிமையைப் பணயமாகக் கோரினர். உப்பு வரி உரிமையைக் கோருவது, சீனுவின் உள்நாட்டு விவகாரத்தில் தலையிடுவதாகும் என்றும், அதன் சுதந்திரத்திற்குப் பாதகமாக அமையும் என்றும் கருதிய அமெரிக்கா, ஐரோப்பிய நாடுகளின் நிதி வழங்கும் ஒன்றியத்திலிருந்து விலகிக் கொண்டது. சீனுவின் உரிமையை மதிப்பதும் சீனுவில் அனைத்து நாடுகளுக்கும் சமவர்த்தக உரிமைக் கொள்கையை (Open door Policy) கடைப்பிடிக்கின்ற அமெரிக்க அரசு, சீனுவின் சுதந்திர உரிமைகளைக் குறைக்கும் எவ்விதச் செயலிலும் ஈடுபடாது என்று அமெரிக்கக் குடியரசு

தலைவர் உட்ரோ வில்சன் அறிவித்தார். இதனால் அமெரிக்கா நீங்கலாக ஏனைய ஐந்து அரசுகளும், சீனாவிற்கு நிதியுதவி அளிக்க முன்வந்தன. இதற்கான உடன்படிக்கையும் கையெழுத்தாயிற்று. இவ்வாறு ஐரோப்பிய நாடுகளிடமிருந்து நிதியுதவி பெறுவதை கோமிண்டாங்கினர் எதிர்த்தனர். இருப்பினும் நிதி வசதியைப் பெருக்கிக் கொண்ட யுவான்-ஷி-கே, தமது எதிர்ப்பாளர்களை அழிக்கும் பணியிலும், தமது வல்லாட்சியை நிலைநிறுத்தும் முயற்சியிலும் தமது முழுக்கவனத்தைச் செலுத்தினார். தொழில் வளங்களைத் தோற்றுவிப்பதிலும், புதிய இருப்புப்பாதைத் தொடர் களை அமைப்பதிலும், அக்கறையுடன் செயல்பட்டார்.

### எல்லைப் பகுதிகளில் ஏற்பட்ட தொல்லைகள்

'மஞ்சு' குலத்தின் வீழ்ச்சியும், சீனக் குடியரசின் தோற்றமும் சீனாவின் எல்லைப் பகுதிகளில் புரட்சி ஏற்படவும், பிரிந்து செல்லு கின்ற முயற்சிகளுக்கும் அடிகோலியது. சீனாவின் வடவெல்லையாக விளங்கிய மங்கோலியாவில் சீனர்கள் பெருமளவில் குடியேறி யிருந்தனர். சீன அரசும் தனது செல்வாக்கினை முழுவதுமாக மங்கோலியாவில் ஏற்படுத்தவும் முயற்சி செய்தது. இதனை மங்கோலியர்கள் எதிர்த்தனர். ருஷியாவும் மங்கோலியர் எதிர்ப்புக்குத் துணை நின்றது. இதன் காரணமாக 1911ஆம் ஆண்டின் இறுதியில் மங்கோலியாவில் புரட்சி அரசு ஒன்று நிறுவப்பட்டது. இப் புரட்சி அரசை ருஷியா உடனடியாக அங்கீகரித்தது. ருஷியாவின் தலையீட்டினால் மங்கோலியாவை மீண்டும் சீனாவுடன் இணைக்கும் முயற்சிகளைக் கைவிட்டு, பேச்சு வார்த்தைகளின் மூலம் தீர்வுகாணச் சீனா முயன்றது. இப்பேச்சு வார்த்தைகளின் முடிவில் மங்கோலியா சீன ஆட்சிக்குட்பட்ட 'ஆட்சியுரிமை பெற்ற பகுதி' (Autonomous State but not independant) என்ற நிலையைச் சீனா ஏற்றுக் கொண்டது.

இதே போல திபெத்திலும் கலகங்கள் ஏற்பட்டன. திபெத் திலிருந்த சீனப் படைகள் விரட்டப்பட்டு, திபெத்தும் தனது சுதந்திரத்தை அறிவித்தது; புதிய மங்கோலிய அரசுடனும் உடன் படிக்கை செய்து கொண்டது. இப் புரட்சியை யுவான்-ஷி-கே அடக்க முயன்றபோது இந்தியாவைத் தனதாக்கிக் கொண்டிருந்த ஆங்கில அரசு இதை எதிர்த்தது. மூன்று ஆண்டுகள் நடைபெற்ற பேச்சுவார்த்தைகள் மூலம் திபெத்தின் மேற்குப்பகுதி 'ஆட்சி யுரிமை பெற்ற பகுதி' (Autonomous State) என்றும், கிழக்குப் பகுதி சீனாவின் நேரடி ஆட்சிக்குட்பட்ட பகுதி என்றும் முடிவு செய்யப்பட்டது.

அந்நிய அரசுகளின் தலையீட்டினுல் ஏற்பட்ட குழப்பத்தின் காரணமாகச் சீனுவின் எல்லைப் பகுதியிலிருந்த இரண்டு மாநிலங்கள் சீன அரசுக்குட்பட்ட 'ஆட்சியுரிமை பெற்ற பகுதிகள்' என்ற நிலையை அடைந்தன.

**யுவானின் ஆட்சிபற்றிய மதிப்பீடு**

சீனப் புரட்சியின் விளைவாக ஏற்பட்ட முதல் குடியரசின் தலைவராகப் பொறுப்பேற்ற யுவான்-ஷி-கேயைப் பற்றிப் பல வாருன கருத்துகள் கூறப்பட்டிருக்கின்றன. இவர் உளுத்துப்போன பழமைக் கருத்துகளில் நம்பிக்கை கொண்டவரென்றும், குறுகிய மனப்பான்மையுடையவரென்றும், சந்தர்ப்பவாதி என்றும், பலவாருகக் குற்றம் சாட்டப்பட்டுள்ளார். இக் கருத்துகள் அனைத்தும் குறைகளை மிகைபடுத்தி, சிறப்புகளை மறைத்து அல்லது திரித்துக் கூறுகின்ற ஒருசிலரின் கருத்துகளாகும். இவரிடமும் குற்றங்குறைகளிருப்பினும், இவர் பழமை விரும்பியல்லர். முன்னேற்றக் கருத்துகளில் நாட்டம் கொண்டவர். ஆட்சி அனுபவமும், படை அனுபவமும் பெற்றவர். சீர்திருத்தக் கருத்துகளில் நம்பிக்கை கொண்டிருந்தும், இவர் மக்களாட்சி முறையில் முழுநம்பிக்கை கொண்டிருக்கவில்லை. சீனுவின் தொல்லைகளுக்கு மக்களாட்சி முறைதான் மருந்து என்ற கருத்தை இவர் ஏற்கவில்லை. இவருடைய கருத்தையே பலரும் கொண்டிருந்தனர் என்பதற்குச் சான்றுகள் நிறைய உள்ளன. அதுவுமன்றி ஈராயிரம் ஆண்டுகளாகச் சீன மண்ணில் நிலைபெற்று, மக்கள் வாழ்க்கையோடிணைந்து, சமயமாக, பண்பாடாக, வாழ்க்கை நெறியாக, அரசியல் முறையாக, புகழ்மிக்க தத்துவக் கருப்பொருளாக, பழம் பெருமைகளின் அடிப்படைக் காரணியாக விளங்கிய 'கன்பூசியத்தை' அவ்வளவு எளிதாக அகற்றிவிட முடியும் என்று யாரும் எண்ணிட முடியாது. சீனுவின் முன்னேற்றம் 'கன்பூசியக்' கொள்கைகளோடு இணைந்து உறுதியுடன் செயல்பட்டாலன்றி வெற்றிகாண இயலாது. மேலை நாட்டு அரசியல் தத்துவங்களைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றுவதால் மட்டும் சீனத் தொல்லைகள் மறைந்து விடாது என்று யுவான் உறுதியாய் நம்பினுர். சீன மக்களுக்கு முன்னேற்றக் கருத்துகளை விளக்கிக் கூறி, அவர்களுக்கு நம்பிக்கையூட்டி, அதன் பின்னர் முன்னேற்றப் பாதையில் அழைத்துச் செல்வதே நன்மைபயக்கும் என்று யுவான் எண்ணினுர். இதை எண்ணிப் பார்க்கும் போதுதான் யுவான் எந்த அளவிற்கு உண்மை நிலையை யுணர்ந்து, முற்காணியத்துடன் (Foresight) செயல்பட விழைந்தார் என்பது விளங்கும். இக் கருத்துகள் யுவானின் தலைசிறந்த அரசியல் அறிவையும், எண்ணிச் செயல்

படுகின்ற உயர்ந்த தன்மையையும் வெளிப்படுத்தும். இதன் காரணமாகவே சீனாவில் அமைதியை நிலைநாட்டுவதைத் தமது முதற்பணியாகவும், அரசியல், பொருளாதாரச் சீர்திருத்தங்களை அடுத்துச் செயல்படுத்தவும் நோக்கங் கொண்டிருந்தார்.

யுவான் - ஷி - கேயின் ஆட்சி 1911-லிருந்து 1916-வரை நீடித்தது. அவரது ஆட்சியைப் பற்றிக் குறிப்பிடுகின்ற வரலாற்றாசிரியர்கள், தற்கால வரலாற்றில் தோல்வியுற்ற அரசியல் தலைவர்களின் பட்டியலில் யுவான்-ஷி-கே முதலிடம் வகிக்கின்றார் எனக் குறிப்பிடுவர். சீனாவில் ஏற்பட்ட புரட்சி 'கன்பூசியக்' கொள்கைகளின் அடிப்படையில் தோற்றுவிக்கப்பட்ட முடியாட்சியை மாற்றி, மக்களாட்சியை ஏற்படுத்த முயன்றது. மக்களாட்சி ஏற்படுத்தத் தேவையான அரசியல் சட்டம், நாடாளுமன்றச் செயல் முறைகள், சட்டத்தொகுப்புகள், ஆகிய அனைத்தும் இருந்தும், முழுமையான மக்களாட்சியை ஏற்படுத்த முடியாமல் தோல்வியுற்றது. இதன் காரணம் மக்கள் இப் புதிய தத்துவங்களில் அக்கறை காட்டவில்லை; புரிந்து கொள்ளவும் முடியவில்லை. மக்களாட்சிக் கொள்கையின் அடிப்படையாவது அரசியல் உணர்வு கொண்டு, அரசியலில் நாட்டம் கொண்ட எழுச்சிமிக்க சமுதாயமே. பழம் பெருமைகளிலும், மூடநம்பிக்கைகளிலும், பேரரசர்களைத் தெய்வமாகவும் கருதி, அரசியல் அறிவின்றி, வறுமையிலும், வரிச்சுமையிலும், அறியாமையிலும் மூழ்கிக் கிடந்த சீன மக்களிடையே மக்களாட்சிக் கருத்துகளுக்கு வரவேற்பை எதிர்பார்க்க இயலாது. தேர்தல், மக்களுரிமை, குடியரசு—இவைகளெல்லாம் சீன மக்களுக்குப் புரியாத புதிர்கள். புரட்சியின் ஆரம்ப காலத்தில் நாங்கிங் நகரில் டாக்டர் சுன்யாட்சனின் தலைமையில் கூடிய பிரதிநிதிகளும் தேர்ந்தெடுக்கப் பட்டவர்களல்லர். இவர்கள் 'தேர்தல்' என்றால் என்னவென்பதையே அறியாதவர்கள். 'மஞ்சு' அரசகுலத்தவரைப் போலத் தெய்விக அருளினாலோ, அல்லது மக்களாலோ தேர்ந்தெடுக்கப் பட்டவரல்லர் யுவான்-ஷி-கேயும். தம்முடைய படை வலிமையைப் பயன்படுத்தி, அரச குலத்தினரையும், புரட்சியாளர்களையும், தம் இச்சைப்படி ஆட்டி, அதன் பின்னர் தலைமைப் பதவியில் அமர்ந்தவர். இவர் குடியரசு கொள்கைகளைப் போற்றுவாரென்றோ அல்லது மக்கள்தான் தங்கள் உரிமைகளை வற்புறுத்திப் பெறுகின்ற அளவுக்கு அறிவொளி பெற்றவர்களென்றோ கருத இடமில்லை. எனவேதான் குடியரசு ஏற்படக் காரணமாய் இருந்த கோமிண்டாங் கட்சியினரை ஒழித்து, தமது வல்லாட்சியை ஏற்படுத்தவும், பின்னர் தாமே, முடிமன்னராக மாறவும் விரும்பினார். இறுதியில் தோல்வியடைந்தார். பழமையில் திளைத்த

சீன மக்களைப் புதுமைக் கருத்துகளை ஏற்கச் செய்கின்ற வழி தெரியாமல்தான் சீனுவின் முதல் குடியரசு தோல்வியில் முடிந்தது.

சீனுவின் முதல் குடியரசு தோல்வியடைந்தாலும், முடியாட்சியை ஒழித்ததன் மூலம் புதிய பாதையில் சீனு அடியெடுத்து வைக்க வழிவகை செய்தது என்பது மறுக்க முடியாத உண்மையாகும். ஆனல் உண்மையான மக்களாட்சி சீனுவில் மலர்வதற்குள் இன்னும் ஏராளமான குழப்பங்களையும், தெளிவற்ற நிலையற்ற அரசியல் சூழலில் உழன்ற பின்னர்தான் சீனு புதுமைப் பொலிவுறும் என்பதை யுவான்-ஷி-கேவிற்குப் பின்னர் ஏற்பட்ட அரசியல் குழப்ப நிலை யுணர்த்தும். இவருக்குப் பின்னர் போர்ப் பிரபுக்கள் (War Lords) எனப் பெயர் பெற்ற படைத்தளபதிகள் சீனு முழுவதிலும் தோன்றி, ஒருவரையொருவர் தாக்கி அழித்துக் கொள்ள முயன்றனர். இப்போர்ப் பிரபுக்களை அடக்கி, அமைதியான சீனுவை உருவாக்கும் பணியை கோமிண்டாங் கட்சியினர் ஏற்றனர். 1928-ல்தான் போர்ப் பிரபுக்களை அடக்கி, வலிமை பெற்ற ஆட்சியை டாக்டர் சுன்யாட்சனின் மறைவிற்குப் பின்னர் தலைமைப் பொறுப்பேற்ற சியாங் கே ஷேக் நிறுவ முடிந்தது. அது வரை நடந்த தேவையற்ற போர்களினுல் நாட்டின் பொருளாதார வளர்ச்சி முற்றிலும் தடைபட்டது. மக்கள் பெரிதும் அல்லலுற்றனர்.

# 4. முதல் உலகப் போரில் சீனாவும் ஜப்பானும்

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நடைபெற்ற மாபெரும் துயர நிகழ்ச்சியாக முதல் உலகப் போரைக் குறிப்பிடலாம். இப் போரில் ஐரோப்பிய நாடுகளனைத்தும் இரு பெரும் பிரிவுகளாகப் பிரிந்து நின்று தாக்கி அழித்துக்கொள்ள முற்பட்டன. இப் பெரும் போருக்கு அடிப்படைக் காரணங்களாகக் குடியேற்ற நாடுகளுக்கான போட்டியும், பொருளாதார வர்த்தக உரிமைகளில் ஐரோப்பிய நாடுகளுக்கிடையே தோன்றிய பொறாமை உணர்வும், வளர்ந்து நின்ற இராணுவ வலிமையும், பெருகிவிட்ட கப்பற்படைகளும், இவைகளுக்கிணையாக உருவாகிய நாடுகளின் கூட்டிணைவுகளும், ஜெர்மனியின் பேராசையும், ஆணவமுமேயாகும். 1914ஆம் ஆண்டு செர்பியா நாட்டில் ஆஸ்திரிய நாட்டு இளவரசனும் இளவரசியும் கொலை செய்யப்பட்டதையொட்டி ஆஸ்திரியா செர்பியா நாடுகளுக்கிடையே தொடங்கிய போர் உலகப் பெரும் போராக உருவெடுத்தது என்பதை நாமறிவோம். இப் போர் உலக முழுவதையும் ஆக்கிரமித்தது. தூரக் கிழக்கு நாடுகளும், ஏனைய ஆசிய நாடுகளும் கூட கலந்துகொள்ள வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது.

ஐரோப்பாவில் ஏற்பட்ட இப் போர் தூரக் கிழக்கு நாட்டு மக்களிடையே ஒருவித பீதியையும் அச்சத்தையும் ஏற்படுத்தியது. புதிதாக எழுந்த தேசியமும், சுதந்திர உணர்வும், முன்னேறும் ஆர்வமும் கொண்ட தூரக் கிழக்கு நாடுகள் போரினால் விளையும் கேடுகளையும் உணர்ந்திருந்தன. சீனாவில் ஐரோப்பிய நாடுகள் 'வர்த்தகச் சிறப்புரிமைகள்' என்ற பெயரில் தங்களின் செல்வாக்கிற்குட்பட்ட பகுதிகளைப் பெற்றிருந்தன. பசிபிக் பெருங்கடல் தீவுகளனைத்தும் அமெரிக்க, ஐரோப்பிய நாடுகளின் பிடியிலிருந்தன. எனவே தாங்கள் நேரடியாகப் போரில் ஈடுபடா



முதல் உலகப் போரில் சீனுவும் ஜப்பானும்

விடினும், போரின் விளைவுகள் தங்களைக் கண்டிப்பாகப் பாதிக்கும் என்பதை இந் நாடுகள் உணர்ந்திருந்தன. ஆசிய நாடுகளிலேயே முன்னணியில் நின்றிருந்த ஜப்பான் இப் போரை ஒரு நல்வாய்ப் பாகக் கருதி தனது செல்வாக்கினை மேலும் வளர்த்துக்கொள்ள முற்பட்டது. ஐரோப்பிய நாடுகளனைத்தும் போரில் ஈடுபட் டிருக்கும் இந் நிலையில் தன்னுடைய பேராதிக்கக் கொள்கைகளுக்கு ஐரோப்பியர்களின் எதிர்ப்பு இருக்காது என்று ஜப்பான் கருதியது. போரின் ஆரம்ப நிலையில் சீனு நடுநிலைமை வகித்தது. தன்னுடைய நடுநிலைக் கொள்கையை ஆதரிக்கும்படியும், ஐரோப்பிய நாடு களையும் மதிக்கும்படி கூறவும் அமெரிக்காவைச் சீனு வேண்டிக் கொண்டது.

ஆனுல், ஜப்பான் நேச நாடுகளுக்கு ஆதரவாகப் போரில் இறங்கியது. 1902ஆம் ஆண்டு இங்கிலாந்திற்கும் ஜப்பானுக்கும் ஏற்பட்டிருந்த ஒப்பந்தத்தின் அடிப்படையில் ஜப்பானைத் தனக்கு ஆதரவாகப் போரில் இறங்கும்படி இங்கிலாந்து கேட்டுக் கொண்டது. போர் ஆர்வமிக்க ஜப்பான் இவ் வேண்டுகோளை ஏற்று ஜெர்மனிக்கு எதிராகப் போரில் குதித்தது. சீனுவில் ஜெர்மனியின் பகுதிகளாக இருந்த கியாச்செள (Kiachow) நகர், துறைமுகம், ஷாண்டுங் மாநிலத்தின் ஏனைய பகுதிகள் ஆகியவற்றி லிருந்து எந்தவித நிபந்தனையுமின்றி ஜெர்மனி வெளியேற வேண்டு மென 1914, ஆகஸ்டு 8ஆம் நாள் ஜப்பான் அறிவிப்புசெய்து, ஒரு வாரத்திற்குள் பதில்வேண்டி எச்சரிக்கை விடுத்தது. ஜெர்மனி யிடமிருந்து எந்தவிதப் பதிலும் வராது போகவே ஆகஸ்டு 23ஆம் நாள் ஜப்பான் ஜெர்மனி மீது போர் தொடுத்தது. உடனடியாக சீனுவில் ஜெர்மனி உரிமை பெற்றிருந்த பகுதிகளை நோக்கி ஜப்பானியக் கப்பல், தரைப்படைகள் முன்னேறின. ஷாண்டுங் மாநிலம் முழுவதும், கியாச்செள, ஷின்தோ நகரங்கள் உட்பட ஜப்பானியரால் பிடிக்கப்பட்டன. மேலும் சீனுவில் ஜெர்ம னிக்குச் சொந்தமான பற்றிடங்கள், உரிமைகள் ஆகிய அனைத்தை யும் ஜப்பான் கைப்பற்றியது. தன்னுடைய நடுநிலைமைக் கொள்கை தூக்கியெறிப்பட்டதைக் கண்ட சீனு ஷாண்டுங்கில், கியாச்செள நகரைச் சுற்றியுள்ள பகுதிகள் போர் நடக்கும் பகுதி களென (War Zones) அறிவிப்புச் செய்தது. கியாச்செள துறை முகத்திலிருந்து ஜப்பானை வெளியேறும்படி சீனு கேட்டபோது, சீன விவகாரங்களில் தான் உண்மையிலேயே தலையிட விரும்ப வில்லையென்றும், ஆனுல் கீழ்த் திசையிலிருக்கும் ஜெர்மானியக் கப்பல் படையை முழுவதுமாக அழிக்கும் வரையில் சீனப் பகுதி களிலிருந்து தான் வெளியேற இயலாதென்றும் ஜப்பான் அறிவித்து விட்டது. இதன் பின்னர் ஜப்பான் பசிபிக் தீவுகளான மரியனுஸ்,

கரோலினு, மார்ஷல் தீவுகள் ஆகிய தீவுக்கூட்டங்களிலிருந்தும் ஜெர்மானியப் படைகளை விரட்டியடித்து வெற்றி வாகை சூடியது. ஜப்பானியக் கடற்படை பசிபிக் பெருங்கடல் முழுவதும் ஆதிக்கம் செலுத்தும் வலிமை பெற்றது.

ஜெர்மானியப் பகுதிகளைக் கைப்பற்றும் நோக்குடன் சீனுவில் நுழைந்த ஜப்பான், ஜெர்மனியை வெளியேற்றுவதோடு மட்டும் நில்லாமல் சீனுவின் ஏனைய பகுதிகளையும் பிடிக்க முயற்சி எடுத்தது. ஷாண்டுங் மாநிலம் முழுவதையும், மேலும் சில முக்கிய இருப்புப் பாதைத் தொடர்களையும் ஜப்பான் பிடித்துக்கொண்டது. ஜப்பானின் இத்தகைய செயலுக்கு இங்கிலாந்தும் பிரான்சும் ஆதரவு கொடுத்தன. ஜப்பானின் இந்த ஆதிக்கக் கொள்கையை வெறுத்த சீனு, தன்னுடைய துறைமுகப் பகுதிகளிலிருந்து உள்நாட்டிலும் போர் பரவி வருவதைத் தடுக்க இயலாத நிலையில், 'போர்ப் பகுதிகள்' என அறிவிப்புச் செய்திருந்ததை இரத்து செய்தது. இந் நடவடிக்கையால் வெகுண்டெழுந்த ஜப்பான், சீனுவில் தனது உரிமையை நிலைநாட்ட வேண்டி 'இருபத்தொரு கோரிக்கைகளை' சீனுவிற்கு அனுப்பியது.

### ஜப்பானின் இருபத்தொரு கோரிக்கைகள் (The Twentyone Demands Jan. 18, 1915)

சீனுவில் முன்னரே தான் பெற்ற இடங்களோடும், செல்வாக்கோடும் மனநிறைவு பெருத ஜப்பான், மேலும் சீனுவின் மீது பேராதிக்கம் செலுத்த விரும்பியது. பெரிய வல்லரசுகள் யாவும் போரில் ஈடுபட்டிருக்கும் இந்த நேரத்தைப் பயன்படுத்திக் கொண்டு, ஆதரவற்ற நிலையிலிருக்கும் சீனுவைத் தன் காலடியில் கொண்டுவரும் எண்ணத்தில்தான் 'இருபத்தொரு கோரிக்கைகளை' ஜப்பான் சீனுவிற்கு அனுப்பியது. இக் கோரிக்கைகள் ஐந்து பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. முதல் பகுதி ஜெர்மனியிடமிருந்து எடுத்துக்கொள்ளப்பட்ட ஷாண்டுங் மாநில உரிமைகள் அனைத்தும் முழுமையாக ஜப்பானுக்குக் கொடுக்கவேண்டும் என்பதைப் பற்றியது. இரண்டாவது தெற்கு மஞ்சூரியாவிலும், மங்கோலியாவிலும் ஜப்பானின் உரிமைகளை நிலைநிறுத்துவதைப் பற்றியது. மூன்றுவது சீனத் தொழிலகங்களையும், யாங்ட்சி பள்ளத்தாக்கிலிருக்கும் இரும்புச் சுரங்கங்களையும் ஜப்பான் பயன்படுத்திக்கொள்வதைப் பற்றியது. நான்காவது சீனுவின் எப் பகுதியிலும் வேறு எந்த நாட்டிற்கும் (அமெரிக்கா உள்பட) எவ்வித உரிமையும் வழங்கக் கூடாது என்பதைப் பற்றியது. ஐந்தாவதில் சில மிக முக்கியமான 'வேண்டுகோள்கள்' குறிப்பிடப்பட்டிருந்தன. அதாவது சீனுவின் அரசியல், பொருளாதார, இராணுவ, காவல் துறைகளில்

ஜப்பானிய ஆலோசகர்களை ஏற்றுக்கொண்டு செயல்பட வேண்டும் என்பதாகும். இக் கோரிக்கைகளின் பொதுவான குறிக்கோள் ஜப்பானின் மேலாதிக்கத்தை சீன ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதாகும். இக் கோரிக்கைகள் அனைத்தும் இரகசியமாகச் சீனக் குடியரசு தலைவர் யுவான்-ஷி-கேவிற்கு நேரடியாக அனுப்பப் பட்டவையாகும். இக் கோரிக்கைகளை அப்படியே ஏற்றுக் கொண்டு பயனடையும்படியும், இவைகளை வெளியிடக்கூடா தென்றும் யுவான்-ஷி-கே வற்புறுத்தப்பட்டார். இக் கோரிக்கை களினல் வெகுண்டெழுந்த சீனர்கள், அரசுக்குத் தங்கள் முழு ஆதரவையும் அளிக்க முன்வந்தார்கள்.

ஜப்பானின் இருபத்தொரு கோரிக்கைகளைப் பற்றிய செய்திகள் வெளியான உடனே, உடனடியாக மறுப்புத் தெரிவித்த நாடு அமெரிக்கா மட்டுமேயாகும். சீனவின் சுதந்திரத்தைக் காக்கவும், சீனவில் தங்களது உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்ளவும் விரும்பிய அமெரிக்கர்கள் உடனடியாகத் தங்கள் எதிர்ப்பைத் தெரிவித்தனர். வேறு எந்த நாடும் தனக்கு ஆதரவு தராத நிலையில் ஜப்பானின் பெரும்பாலான கோரிக்கைகளை ஏற்றுக் கொண்டு சீன பலனடைந்தது. ஜெர்மனியின் ஆதிக்க வெறியை எதிர்த்துப் போரிடும் ஐரோப்பிய நாடுகள், ஜப்பானின் ஆதிக்க வெறியையும் வெறுத்தன. எனினும் வெளியில் காட்டிக்கொள்ள இயலவில்லை.

இந்த நிலையிலும் சீனவின் அரசியல் குழப்பங்கள் தொடர்ந்தன. யுவான்-ஷி-கேயின் முடியாட்சியைத் தொடங்கும் எண்ணமும், அதன் விளைவாக ஏற்பட்ட கலகத்தைப் பற்றியும் ஏற்கெனவே கண்டோம். யுவான்-ஷி-கேயின் மறைவிற்குப் பின்னர் உதவிக் குடியரசு தலைவராய் இருந்த லி ஹங் சாங் (Lee Hung Chang) சீனவின் குடியரசு தலைவரானர். சீனவின் மாநிலத் தலைவர்கள் அவர்களுக்குள்ளேயான உள்நாட்டுப் போரையும் தொடர்ந்து நடத்தினர். இத்தகைய குழப்பத்தினிடையே அமெரிக்காவின் வேண்டுகோளை ஏற்றுச் சீனவும் உலகப் போரில் இறங்கியது.

## முதல் உலகப் போரில் சீன

ஜெர்மனியின் கண்மூடித்தனமான நீர்மூழ்கிக் கப்பல்களின் தாக்குதல், இதுவரை நடுநிலைமை வகித்துவந்த அமெரிக்காவையும் போரில் இறங்கச்செய்தது. 1917ஆம் ஆண்டு, அமெரிக்காவும் ஜெர்மனிக்கு எதிராகப் போரில் இறங்கியது. ஜெர்மனியின் ஆதிக்க வெறியைத் தகர்க்கவும், உலகில் மக்களாட்சியையும்,

சமாதானத்தையும் விரும்பும் எந்த நாடும் நேச நாடுகளுடன் சேர்ந்து ஜெர்மனியை எதிர்க்கலாமென அமெரிக்கா அழைப்பு விடுத்தது. ஜப்பானிய ஆதிக்க வெறியினின்று தப்பவும், நேச நாடுகளின் நட்பைப் பெறவும் விம்பிய சீனு, அமெரிக்காவின் அழைப்பை ஏற்று முதல் உலகப்போரில் ஈடுபட்டது.

நிலையற்ற அரசு முறையையும், உள்நாட்டில் அமைதியற்ற நிலையையும் கொண்டிருந்த சீனு, பெருமளவில் போரில் பங்கெடுத்துக்கொள்ள முடியவில்லை. எனினும் ஏராளமான கூலிப் படைகள் பிரான்சிற்கும், ஆப்பிரிக்க நாடுகளுக்கும் அனுப்பப்பட்டனர். சிறுகச் சிறுக நேச நாடுகளுக்கு ஆதரவாகச் சீன மக்களும் திரும்பினர். சீனுவும் போரிலீடுபட்டால் சீனுவிலிருக்கும் ஜெர்மனியின் உரிமைகள் மறுக்கப்படும் என்ற ஒரே நோக்கத்திற்காகத்தான் நேச நாடுகள் சீனுவையும் போரிலீடுபடச் செய்தன. எவ்வித உதவியையும், வாக்குறுதியையும் நேச நாடுகளிடமிருந்து பெறுமல் சீனு போரிலிறங்கியது, அதன் அரசியல் முதிர்ச்சியற்ற நிலையையே தெளிவாக்குகிறது. அமெரிக்கா மட்டும்தான் சீனுவிற்கு உதவ முடியும். ஆனல், அமெரிக்காவும் சீனுவிற்காகப் பரிந்து பேசவோ, ஆதரவளிக்கவோ முன்வரவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

எனினும் நேசநாடுகளுக்கு ஆதரவாகப் போரிலிறங்கிய சீனுவிற்குப் பல நன்மைகள் கிட்டின. உதாரணமாக பாக்ஸர் கலகத்தின் விளைவாக ஆஸ்திரியாவிற்கும், ஜெர்மனிக்கும் கொடுக்கவேண்டியிருந்த இழப்பீட்டுத் தொகைகள் இரத்து செய்யப்பட்டன. ஏனைய ஐரோப்பிய நாடுகளுக்குக் கொடுக்க வேண்டிய இழப்பீட்டுத் தொகைகளும் ஐந்தாண்டுக் காலத்திற்கு ஒற்றிப் போடப்பட்டன. டியன்சின், ஹாங்கோ நகர்களில் ஜெர்மனியும், ஆஸ்திரியாவும் பெற்றிருந்த உரிமைகள், சலுகைகள் அனைத்தையும் சீனு திரும்பப் பெற்றது. போரில் ருஷியாவின் தோல்விகளும், ருஷியப் புரட்சிக்குப் பின்னர் மஞ்சூரியாவில் ருஷியா ஏற்படுத்தியிருந்த இருப்புப்பாதைத் தொடர்களின் பாதுகாப்பு உரிமையையும் சீனு பெற்றது. அனைத்திற்கும் மேலாக போரின் வெற்றிக்குப்பின்னர் ஏற்படும் சமாதான மாநாட்டில் ஐரோப்பிய நாடுகளுக்கு இணையாக, தனக்கும் ஓரிடம் கிடைக்கும் என்ற நம்பிக்கையுமிருந்தது. போரில் சீனு ஈடுபட்டதன் விளைவாக ஜப்பானியச் செல்வாக்கு சீனுவில் மேலும் பெருகியது. ஜப்பானிய இராணுவ ஆலோசகர்கள் சீனுவில் ஏற்றுக் கொள்ளப்பட்டனர். ஜப்பானிய ஆயுதங்களும், பெருமளவில் சீனுவிற்கு அனுப்பப்பட்டன. ஜப்பான் பெருந்தொகையைக் கடனுகக் கொடுத்து,

சீனப் பொருளாதார வளர்ச்சிக்கும் வித்திட்டது. ஜப்பானின் செல்வாக்கைப் பயன்படுத்திக் கொண்டு நிலையான அரசியல் செல்வாக்கும் பெறமுடியும் என்றும் சீன ஆட்சியாளர் கருதினர்.

### வெர்செயில்சு சமாதான மாநாட்டில் சீனாவும் ஜப்பானும்

போரின் முடிவில் ஏற்படுத்தப்பட்ட சமாதான மாநாட்டில் சீனாவுக்கும் இடம் வழங்கப்பட்டது. அயல் நாட்டினரால் தனக்கு ஏற்பட்ட தொல்லைகளுக்கு முடிவு கிட்டும் என்ற நம்பிக்கையுடன் சீனா மாநாட்டில் பங்கெடுத்துக் கொண்டது. ஆனால் சீனாவுக்குக் கிடைத்ததோ பெருத்த ஏமாற்றம்தான். சீனாவின் பிரதி நிதிகள் தங்கள் குறைகளை மிகவும் அழகாக, ஆணித்தரமாக எடுத்தியம்பி நிவாரணம் வேண்டி வலியுறுத்தினர். போரின்போது ஜப்பான் சீனாவிடமிருந்து வலிந்து பெற்ற பகுதிகள், உரிமைகள் அனைத்தும் முழுவதுமாகச் சீனாவிடமே திரும்பவும் ஒப்படைக்கவேண்டும் என வாதிட்டனர். ஜப்பானின் இருபத்தொரு கோரிக்கைகளின் அடிப்படையில் ஏற்பட்ட ஒப்பந்தங்களையும், அதன் பின்னர் ஜப்பான், சீனாவிடமிருந்து பெற்ற உரிமைகளையும் இரத்து செய்யவும் சீனா வற்புறுத்தியது. சீனாவின் கோரிக்கைகளைச் செவிமடுத்த ஐரோப்பிய நாடுகள் ஜப்பானுக்கு எதிராக எதையும் செய்ய இயலாத நிலையில் இருந்தன. போரின்போது, ருஷியாவின் தோல்விக்குப் பின்னர் ஜப்பானின் ஆதரவை நாடி நின்ற ஐரோப்பிய நாடுகள் 1917ஆம் ஆண்டு ஜப்பானுடன் இரகசிய ஒப்பந்தம் செய்து கொண்டன. அவ்வொப்பந்தத்தின்படி தூரக்கிழக்குப் பகுதியில் ஜெர்மானியரின் உரிமைகள், சலுகைகள் பகுதிகள் அனைத்தையும் போரின் முடிவில் ஜப்பான் அடைவதற்கு உறுதி வழங்கியிருந்தனர். லான்சிங்-இஷி (Lansing-Ishii Agreement of 1917) ஒப்பந்தத்தின்படி சீனாவில் ஜப்பானுக்குத் தனிச்சிறப்புரிமைகள் உண்டு என்பதை அமெரிக்காவும் ஒப்புக்கொண்டிருந்தது. எனவே சீனாவில் ஷாண்டுங் மாநிலமும் (முன்னர் ஜெர்மனி உரிமை பெற்றிருந்தது), மார்ஷல் (Marshall Islands) கரோலினா (Caroline) தீவுகளும், மற்றும் தூரக் கிழக்குப் பகுதிகளில் ஜெர்மனியும், ஆஸ்திரியாவும் பெற்றிருந்த உரிமைகள் அனைத்தும் ஜப்பானுக்குக் கொடுக்கப்பட்டன. சீனாவின் வேண்டுகோள்களை அமெரிக்காவைத் தவிர ஏனைய நாடுகள் ஏற்றுக்கொள்ள மறுத்தன. அமெரிக்கக் குடியரசு தலைவர் உட்ரோ வில்சன் மட்டும் சீனாவின் உரிமைகளுக்காக வாதாடினார். ஆனால், ஜப்பான் தனது உரிமைகள் முன்பு செய்து கொண்ட ஒப்பந்தங்களின்படி தனக்கு அளிக்கப்படவேண்டுமென்றும், இல்லையெனில் சமாதான மாநாட்டிலிருந்து வெளியேறுவதாகவும் அச்சுறுத்தியது. இறுதியில் ஜப்பானின் அச்சுறுத்தலுக்கு ஐரோப்பிய நாடுகள் பணிந்தன. தூரக்கிழக்கு நாடுகளின் உரிமை

களை முழுவதுமாகப் பெற்ற ஜப்பான், ஷாண்டுங் மாநிலத்தைப் பொறுத்தவரையில் பொருளாதார உரிமைகளை மட்டும் எடுத்துக் கொண்டு ஏனைய உரிமைகளை விட்டுவிடுவதாகப் பேச்சளவில் உறுதி கூறிற்று. இதையும் வெர்செயில்சு மாநாடு ஏற்றுக் கொண்டது. இவ்வுடன்படிக்கையில் சீனு கையெழுத்திட மறுத்து விட்டது. பின்னர் ஜெர்மனியுடனும், ஆஸ்திரியாவுடனும் சீனு தனியாகச் சமாதான உடன்படிக்கைகளைச் செய்துகொண்டது.

**விளைவுகள்**

ஷாண்டுங் மாநிலம் முழுவதும் ஜப்பானுக்குக் கொடுக்கப் பட்டது என்பதைக் கேள்வியுற்ற சீனர்கள் கொதிப்படைந்தனர். இதை ஐரோப்பிய நாட்டினர் தங்களுக்கு இழைத்த துரோக மென்ச் சீனர்கள் ஆத்திரமடைந்தனர். இத்தகைய துரோகச் செயலுக்கு ஜப்பான்தான் காரணம் என்பதை உணர்ந்த பின்னர் சீனுவில் ஜப்பானிய எதிர்ப்பியக்கம் தோன்றியது. பீகிங் பல்கலைக் கழக மாணவர்கள் இவ்வெதிர்ப்பியக்கத்தை ஆரம்பித்தனர். ஜப்பானியப் பொருள்கள் எரிக்கப்பட்டன. ஜப்பானியப் பொருள்களைத் தன்மானமுள்ள சீனக் குடிமக்கள் யாரும் வாங்கக் கூடாது என்று கூக்குரலிட்டனர். மாணவர்களின் இந்த எதிர்ப் பியக்கம் மக்கள் ஆதரவையும் பெற்று வளர்ந்தது. சீனுவெங் கணும் கலகங்கள் ஏற்பட்டன. இது 'மே மாத இயக்கம்' (May Fourth Movement) என்று குறிப்பிடப்படுகின்றது.

# 5. சீனுவில் தேசிய இயக்கம்

முதல் சீனக் குடியரசு தலைவர் யுவான்-ஷி-கேயின் மறைவுக்குப் பின்னர், சீன அரசியல் வானில் கார் மேகங்கள் சூழ ஆரம்பித்தன. மைய ஆட்சி மதிப்பிழந்தது; வலுவிழந்தது. யுவானின் காலத்தில் மாநில ஆட்சித் தலைவர் அனைவரும் இராணுவத் தளபதிகளாகவே இருந்தனர். டாக்டர் சுன்யாட்சனின் கோமின்டாங் கட்சியும் தடைசெய்யப்பட்டிருந்தது. நாடாளுமன்ற முறையும் இடம் பெற்றிருக்கவில்லை. இவர் உயிரோடு இருந்த வரை அவருடைய கட்டுப்பாட்டின் கீழ்ப் பணியாற்றிய மாநில ஆளுநர்கள் (போர்ப் பிரபுக்கள்) அவர் மறைவிற்குப் பின்னர் கலகம் செய்யத் தொடங்கினர். ஒவ்வொரு போர்ப் பிரபுவும் தமது அதிகாரத்தையும், செல்வாக்கினையும் வளர்த்துக் கொள்ள வேண்டிப் போரில் ஈடுபட்டனர். சீனுவில் அமைதி அழிந்தது. பொருளாதாரச் சீர்கேடுகள் அதிகரித்தன. மக்கள் நிம்மதியிழந்தனர். இக்காலத்தைத்தான் போர்ப் பிரபுக்களின் (War Lords) ஆட்சிக்காலம் எனக் குறிப்பிடுவர். இக் குழப்ப நிலையிலும் பெயரளவில் செயல்பட்டுவந்த மைய அரசு நேச நாடுகளின் சார்பில் முதல் உலகப் போரில் பங்கெடுத்துக்கொண்டது. (இதன் காரணங்களையும் விளைவுகளையும் இதற்கு முந்திய தலைப்பில் காணவும்) வெர்செயில்சு மாநாட்டிற்குச் சென்ற சீனர்கள் பெருத்த ஏமாற்றத்துடன் திரும்பி வந்தனர். வெர்செயில்சு மாநாட்டு உடன்படிக்கையிலும் கையொப்பமிடவில்லை.

சீனுவின் உரிமைக்குரலுக்குச் செவிசாய்க்க முடியாத ஐரோப்பியர்கள்மீது சீனர் வெறுப்புக் கொண்டனர். ஐரோப்பியர்கள் சீனுவிற்கு உதவ இயலாத நிலையில் இருப்பதற்கு அடிப்படைக் காரணம் ஜப்பானின் ஆதிக்க வெறிதான் என்பதைத் தெளிவாக உணர்ந்த சீனர் ஜப்பான் மீது தீராப் பகை கொண்டனர். இவ்வாறு செயலிழந்து, வலியற்று, தலைமையுமற்றுத் திண்டாடிய சீனுவில் புதிய சக்தி ஒன்று எழுந்தது. அச் சக்தி 1919ஆம் ஆண்டு

மே மாதம் நான்காம் நாள் பீகிங் நகரில் புயலாக உருவெடுத்தது. சீனுவின் இளம் உள்ளங்கள், மாணவச் செல்வங்கள் ஜப்பானியருக் கெதிராகப் போர்க்கொடியுயர்த்தினுர்கள். மக்கள் பேராதரவைப் பெற்ற இம் மாணவரியக்கம் காட்டுத்தீயெனச் சீனு முழுவதும் பரவியது. சீனமக்கள் புத்துணர்வு பெற்றனர். இதுகாறும் மேலை நாட்டு மக்களாட்சி அரசியல் பண்புகளில் நம்பிக்கை கொண்டிருந்தவர்கள்கூட மாணவரியக்கத்தில் ஆர்வம் கொண்டனர். இது காறும் உறங்கிக் கிடந்த சீனனின் தன்மான உணர்வைத் தட்டி யெழுப்பியது; தேசிய உணர்வூட்டியது; புதிய பண்பாட்டுப் புரட்சியையும் துவக்கி வைத்தது. இத்தகைய மாபெரும் சிறப்புப் பெற்ற இந்த மாணவரியக்கம் 'மே நான்காம் நாள் இயக்கம்' எனச் சீன வரலாற்று ஏடுகளில் பொன்னெழுத்துகளால் பொறிக்கப் பட்டிருக்கின்றது. மேலைநாட்டு முறையில் கல்வி கற்றறவர்கள், படைத்துறைப் பயிற்சிப் பெற்றவர்கள், சமுதாயப் பண்புகளை மாற்றிக்கொண்டவர்கள், ஆகிய இத்தகையோரும்கூடத் தாங்கள் பிறந்த பொன்னுட்டின் மானம் காக்க, உழைக்கவும், உலகு வியந்து பாராட்டும் வண்ணம் முன்னேற்றம் காணவும் உறுதி எடுத்துக் கொண்டுவிட்டனர்.

சீனுவில் ஏற்பட்ட மறுமலர்ச்சி இயக்கம் என இதைக் குறிப்பிட்டால் அதில் மிகையேதுமில்லை என வரலாற்றுசிரியர்கள் போற்றுகின்றனர். இதன் பின்னர் சீனர்கள் புதிய சமுதாயம் படைக்கும் உறுதி கொண்டெழுந்தனர். பழமைக் கருத்துகளை மாற்றி, புத்துயிர் பெற்ற சீனுவை உருவாக்கவேண்டும் என்ற வேகத்தில் செயல்பட முனைந்தனர். மேலை நாட்டுப் பாணியில் மக்களாட்சி முறை அரசை அமைப்பதுதான் சீனு வளர்ச்சியடைய வழி என வற்புறுத்தியவர்களும்கூட இதுகாறும் மக்களிடையே வளர்ந்துவிட்ட 'கன்பூசியக் கோட்பாட்டை' அறவே ஒழிப்பது இயலாத செயல் என்பதை உணர்ந்து செயல்பட்டனர். மேலை நாட்டு முறைகளைச் சீனப் பண்புடன் இணைத்து, அல்லது வேண்டிய மாற்றங்களுடன் ஒரு புதிய அரசியல் தத்துவத்தை உருவாக்க வேண்டுமென முனைந்தனர். இத்தகைய முயற்சிகளை மக்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமாயின் கல்வியறிவு வளர்ச்சி இன்றியமையாதது என்பதை உணர்ந்து கல்வியமைப்புச் சீர்திருத்தங்களையும் ஏற்படுத்தும் எண்ணங்கொண்டனர். சீனமக்கள் அனைவருக்கும் பால்வேறுபாடின்றி அடிப்படைக் கல்வி மேல்நாட்டு முறையில் கற்பிக்கப்படவேண்டியதின் அவசியத்தை எடுத்துரைத்தனர். அறியாமையிருளும், மூடநம்பிக்கையும் சீனுவினின்று அகல வேண்டுமாயின் பட்டி தொட்டிகளிலெல்லாம் கல்விக்கூடங்கள் ஏற்படுத்த வேண்டுமென முழங்கினர். அக் கல்வியும் தாய்மொழி

வழியாகவே கற்பிக்கப்படல்வேண்டும் என்றும், அதுதான் சீனா வின் முன்னேற்றத்திற்கு உகந்தது என்றும் கருதினர். இதற்காக தாய்மொழிச் சீர்திருத்தமும் மேற்கொள்ளப்பட்டது. ஏராள மான நாளேடுகளும், கிழமையிதழ்களும், திங்களிதழ்களும் வெளி யிடப்பட்டன. மக்கள் கல்வியறிவு பெற்றனர். புதிய சமுதாயம் எழுந்தது; தேசியம் மலர்ந்தது.

சீன தேசிய இயக்கத்தின் அடிப்படை நோக்கம், சீன மக்க ளிடையே உறங்கிக் கிடந்த தேசிய உணர்வைத் தட்டியெழுப்பி, சீனாவின் ஒருமைப்பாட்டிற்கு வழி கோலுவது. இரண்டாவதாக ஐரோப்பிய நாடுகளுடன் இதுகாறும் செய்திருந்த முறையற்ற, நேர்மையற்ற, ஒப்பந்தங்களை ஒழிப்பது. இளந்தலை முறையினரின் இப் புதிய சக்தி ஒரு பண்பாட்டுப் புரட்சியாகவே உருவெடுத்தது. புதிய சீனா உதயமானது.

மாணவரியக்கத்தின் போதுதான் கோமிண்டாங் கட்சி மீண்டும் சீனாவில் தலையெடுக்க ஆரம்பித்தது. 1911-ல் நடந்த சீனப் புரட்சிக்கு முன்பு டாக்டர் சுன்யாட்சன் ஏற்படுத்திய சீன மறுவாழ்வுக் கழகம் (Tung-Mery-Hui—China Revival Society) என்ற இரகசிய இயக்கம், புரட்சிக்குப் பின்னர் 1912ஆம் ஆண்டில் (Kuo-Min-Tang—Peoples National Party) 'தேசிய மக்கள் கட்சி' எனப் புதுப்பெயர் பெற்றது. 1913-ல் நடந்த கோடைப் புரட்சி யின் (Summer Revolution) காரணமாக யுவான்-ஷி-கேயால் தடை செய்யப்பட்டு, டாக்டர் சுன்யாட்சன் உட்பட கோமிண்டாங் கட்சியின் தலைவர்கள் அனைவரும் தப்பித்து ஓடினர். சீன மாண வரியக்கத்தின் காரணமாக, பெருங்குழப்பமும், கலகங்களும் நடை பெற்றுக் கொண்டிருந்த நேரத்தில் டாக்டர் சுன்யாட்சன் ஜப் பானிலிருந்து சீனாவிற்குள் வந்தார். தென் சீன மாநிலங்களில் தனது செல்வாக்கினை மீண்டும் நிறுவ முற்பட்டார். இம் முயற்சி யில் சீனப் பண்பாட்டுப் புரட்சிக்குக் காரணமாய் இருந்த மாணவப் புரட்சித் தலைவர்களில் பெரும்பாலோரைக் கவர்ந்து, தமது கட்சி யின் வளர்ச்சிக்குப் பயன்படுத்திக் கொண்டார். சீனாவின் தென் பகுதியில் காண்டன் நகரில் (Canton) 1921ஆம் ஆண்டு தமது போட்டி அரசைத் துவக்கினார். தென் மாநிலங்களில் ஆட்சி புரிந்த போர்ப்பிரபுக்களின் தாற்காலிக ஆதரவையும் பெற்றார். இந்நிலையில் தமது கட்சியிலிருந்த குறைபாடுகளைக் களைந்து, புதிய கொள்கைகளையும், செயல் திட்டங்களையும் உருவாக்கும் பணியில் ஈடுபட்டார். தமது கட்சி வெற்றியுடன் செயல்பட வேண்டு மாயின் தமது கட்சிக் கொள்கைகள் ஆர்வத்தோடு பரப்பப்பட வேண்டுமென்பதையும், கொள்கைகளை மக்களிடையே பரப்ப அய ராது உழைக்கும் எழுச்சிமிக்கக் கட்சித் தொண்டர்கள் தேவை என்

புதையும் உணர்ந்தார். அவர்களின் செயல்களை முறைப்படுத்தி, வழிநடத்தத் தக்கவாறு கட்சியின் அமைப்புப் பலப்படுத்த வேண்டு மென்பதையும், கட்சித் தொண்டர்கள் தங்களின் கடமைகளைக் கண்ணியத்தோடும், கட்டுப்பாட்டுடனும் செயல்படுத்தி, அவர் களைப் பழக்கப்படுத்த வேண்டுமென்பதையும் உணர்ந்தார். இவையனைத்திற்கும் மேலாகத் தமக்கு ஆதரவாகப் படை யொன்றன் தேவையையும் மனத்தில் கொண்டு செயல்பட்டார்.

போர்ப் பிரபுக்களின் கட்டுப்பாடற்ற, தேவையற்ற போர்களை நிறுத்தி, வலிவான தேசிய மைய அரசை நிறுவி, சீனுவை அழிவி லிருந்து காப்பாற்றும்பொருட்டு மேலை நாடுகளின் உதவியை நாடினர் டாக்டர் சுன்யாட்சன். சுய நலத்தின்பால் செயல்பட்டு, சீனுவையே தங்களுக்குள் பங்கிட்டுக்கொள்ள முனைந்த மேலைநாடு கள், சுன்யாட்சனின் உயர்ந்த இலட்சியங்களை அலட்சியப்படுத்தின. சார் மன்னர்களின் கொடுங்கோலாட்சியை, மக்கள் புரட்சியால் அழித்துப் பெருமையுற்ற ருஷியா மட்டும் (ஐரோப்பிய நாடுகளின் சந்தேகப் பார்வைக்குட்பட்டது) சுன்யாட்சனுக்கு உதவ முன் வந்தது. உலகின் எப் பகுதியிலிருந்தேனும் உதவி பெற்றுச் சீனுவை உய்விக்கச்செய்யவேண்டும் என்ற உறுதிகொண்ட சுன் யாட்சன், புதுமைப் பொலிவுடன், புரட்சிக் கருத்துகள் கொண்டு, 'பொதுவுடைமையை 'ஏற்றுக்கொண்ட ருஷியாவின் உதவியை மனமார வரவேற்ருர். ருஷியப் பிரதிநிதி அப்பிரகாம் அடல்ஃப் ஜோஃபி (Abraham Adolf Joffe) என்பவருடன் 1922ஆம் ஆண்டு சுன்யாட்சன் ஓர் ஒப்பந்தம் செய்து கொண் டார். சீனுவின் தொல்லைகளைக் களையப் பொதுவுடைமை முறை கள் பயன்படா என்பதை ஒப்புக்கொண்ட ஜோஃபி கோமிண்டாங் கட்சியினருக்கு உதவ முன்வந்தார். இவ்வாறு ருஷியாவின் நட்பைப் பெற்ற சுன்யாட்சன் வெற்றிப்பாதையில் அடியெடுத்து வைத்தார்.

கோமிண்டாங் கட்சியினருக்கு உதவிபுரிய மைக்கேல் பரோடின் (Michael Borodin) என்பவரின் தலைமையில் ருஷிய ஆலோசகர்கள் சீனுவிற்கு வந்தனர். இரண்டே ஆண்டுகளில் கோமிண்டாங் கட்சியமைப்பு முறை திருத்தியமைக்கப் பட்டு, பொதுவுடைமைக் கட்சியைப் போலவே சிறந்த கட்டுக்கோப்பைப் பெற்றது. 1921ஆம் ஆண்டு சீனுவில் ஏற்படுத்தப்பட்ட சீனப் பொதுவுடைமைக்கட்சியின் உறுப்பினர் கோமிண்டாங் கட்சியிலும் உறுப்பினர்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டனர். பொதுவுடைமை யினரின் படைகளை ஏற்படுத்தவும், படையதிகாரிகளுக்குப் பயிற்சி யளிக்கவும் 'வாம்புவா' (Whampoa) என்ற இடத்தில் 'இராணுவக்

கழகம்' (Military Academy) ஒன்றும் ஏற்படுத்தப்பட்டது. இக் கழகத்தின் தலைவராக சியாங்-கே-ஷேக் என்ற இளம் படையதிகாரி நியமிக்கப்பட்டார். இதற்கிடையில் சுன்யாட்சனும் கோமிண் டாங் கட்சியின் முதல் மாநாட்டை 1924-ல் கூட்டினுர். கோமிண்டாங் கட்சியின் கொள்கைகள் உருவாக்கப்பட்டு மக்களுக்குத் தெளிவாக்கப்பட்டன.

டாக்டர் சுன்யாட்சன் 1924-ல் கோமிண்டாங் கட்சியின் கொள்கைகளை மூன்று தொகுதிகளாக வெளியிட்டார், அவை யாவன: 1. மக்களின் மூன்று கொள்கைகள் (Three Principles of the People—San-Min-Chu-I) 2. தேசியப்புனரமைப்பின் அடிப் படைகள் (Fundamentals of National Reconstruction) 3. தமது இறுதிக் குறிப்புகள் (Will). இவைகளுள் சுன்யாட்சனின் 'மக்களின் மூன்று கொள்கைகள்' மிகச் சிறப்பான இடத்தைப் பெறுகின்றன. அவையாவன: 1. தேசியம்-நாட்டுப்பற்று (Peoples Nationalisim—Min-Tsu); 2. மக்களாட்சி (Democracy—Min ch'uan); 3. மக்கள் நலன் (Peoples Livelyhood—Min Sheng). சுன்யாட்சனின் இக் கொள்கைகள்தாம் கோமிண்டாங் கட்சியின் அடிப்படைக் கொள்கைகளாகும். இக் கொள்கைகளை விளக்கிக் கூற இந் நூலின் அமைப்பு இடங்கொடுக்கவில்லையெனினும், மிகவும் சுருக்கமாகச் சுன்யாட்சனின் மூன்று கொள்கைகளுக்குமட்டும் விளக்கம் கொடுப்பது அவசியமாகிறது.

### தேசியம் (Peoples Nationalism—Min-Tsu)

சீனுவில் மஞ்சுக்கள், சீனர்கள், மங்கோலியர்கள், திபெத்தி யர்கள் போன்ற பலவகை இனத்தினர் கலந்து வாழ்கின்றனர். இவ்வினத்தினர் அனைவரும் 'மணற் கயிறுபோல' இணைந்து வாழ்ந்து பழக்கப்பட்டவர்கள். இவர்களை இணைத்து, ஒரு நாட்டு மக்கள் என்ற எண்ணத்தை அல்லது இவர்களிடையே இருக்கும் இனப்பிரிவினையை ஒழித்து அனைவரும் சீன மக்களே என்ற எண் ணத்தை உருவாக்கச் செய்வதாகும். மேலும் சீனுவின் கொள்கை பேராதிக்கக் கொள்கையன்று. (Anti-Imperialist). 'ஆரம்பத்தில் மேலைநாட்டு முறை தேசியக் கருத்துகளில் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்த டாக்டர் சுன்யாட்சன் தற்போது மேலைநாட்டுத் தேசிய முறையை வெறுத்துச் சீனுவின் பாரம்பரிய முறையடிப் படையில்தான் சீன தேசியம் உருவாக்கப்பட வேண்டுமென்று விரும்புகிறுர்' என வரலாற்றுசிரியர் ஒருவர் கருத்துத் தெரி விக்கின்றுர்.

**மக்களாட்சி (Democracy—Min eh'uan)**

வரம்புக்குட்டபட்ட முடியரசையும், வல்லாட்சியையும் மறுத்தார். மேலைநாட்டு குடியாட்சிப் பண்புகள், ஸ்விட்சர்லாந்து நாட்டு அரசியல் அமைப்பிலுள்ள 'நேரடி மக்களாட்சி முறைகள்' (Direct Democratic Devices), ருஷிய அரசியல் முறை, சீனுவின் பழங் காலத் தேர்வு முறை—ஆகிய இவைகளினடிப்படையில் சீன அரசு அமையவேண்டும் என்று கருதினார், மக்களை நல்வழி நடத்தத் தலைவர்கள், தலைவர்களின் கொள்கைகளை மக்களுக்கு அறிவுறுத்தும் இடை நிலையர்கள், அத் தலைமையை ஏற்கவோ மறுக்கவோ உரிமை பெற்ற மக்கள் என மக்களை மூன்று வகையினராகவும் சுன்யாட்சன் வகைப்படுத்துகிறார். அரசு, சட்டமன்றம், செயல்துறை மன்றம், நீதித்துறை என்ற மூன்று மேலைநாட்டு அமைப்புகளுடன் 'தேர்வு முறை,' 'கட்டுப்பாடுகள்' என்ற இரண்டு பழஞ்சீன முறைகளை அடிப்படையாகக் கொண்டு செயல்பட வேண்டும் என்றும் வற்புறுத்தினார்.

**மக்கள் நலன் (Peoples Livelyhood—Min-Sheng)**

பொதுவுடைமை முறைகளை மறுத்தார். தொழிலாளர்-வேளாளர்களின் நல்வாழ்வு எனும் அடிப்படையில் அரசின் கொள்கைகளை அமைக்க விரும்பினார். வரி விதிப்பு, நில உடைமை ஆகியவை அரசின் பொறுப்பிலும், பொருளாதார முன்னேற்றத் தில் அனைவரும் பங்கும் பயனும் பெற அரசு உதவ வேண்டுமென வும் வலியுறுத்தினார்.

இக் கொள்கைகளினடிப்படையில் தமது கட்சியை உறுதிப் படுத்திய அதே நேரத்தில், சீனுவின் ஒற்றுமையைச் சமாதான முறையில் ஏற்படுத்தவும் நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டார். பீகிங் நகரில் மைய அரசின் தலைவராய் இருந்த தான் சி-ஜுவைச் (Taun Chi-Jui) சந்தித்து, அமைதிப் பேச்சுவார்த்தைகள் நடத்தும் நோக்கத்துடன் பீகிங் சென்றார். அங்கு 1925-ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்களில் மரண மடைந்தார். அவரது பூதஉடல் மறைந்தது; புகழுடம்பு நிலை பெற்று வாழ்ந்தது.

ஒருவன் உயிருடன் வாழும்போது அவனது நிறை குறைகளைச் சீர்தூக்கிப் பார்த்து வாழ்த்துவதும், தூற்றுவதும் உண்டு. ஆனால் அவன் மறைவுடன் அவனது குறைகளும் மக்களிடையே மறைய, அவனது நிறைகள் மட்டும் மனத்திலிருக்கும். இது பொதுவாக மானிட இயல்பு. அதே போல சுன்யாட்சன் வாழ்ந்த போது அவரது குறைகளை மிகைப்படுத்தித் தூற்றியவர்களும், அவரது கொள்கைகளில் அவ்வளவாகப் பற்றுதலோ, நம்பிக்

கையோ, ஆர்வமோ கொள்ளாத அவரது கட்சியினரில் சிலரும் கூட அவர்தம் மறைவிற்குப் பின்னர், அவரது நிறைவுகளை மட்டும் மனத்தில் நிறுத்தி, வியந்து போற்றினர். அவரது பேச்சும், மூச்சும் தேசியமே எனப் போற்றினர். அவரது எழுத்துகள், எண்ணங்கள் அனைத்துமே சீனுவின் ஒற்றுமைக்கும் வளர்ச்சிக்கும் தேவையான ஒளிமிக்கக் கருத்துக் கருவூலங்கள் என நம்பினர். கன்பூசியசுக்குப் பின்னர் சீன மண்ணில் தோன்றிய மாமேதையாக, மணி விளக்காக, தேசத் தந்தையாக, சுன்யாட்சன் கருதப்பட்டார். அவரது தத்துவக் கருத்துகள் அழியா வரம் பெற்றன. அவரது காலடிச்சுவடுகளைப் பின்பற்றி, அவர் உருவாக்கித்தந்த கோமிண்டாங் கட்சி சீன வரலாற்றில் எழுச்சிமிக்கச் சாதனையைப் புரிய ஆயத்தமானது. எனினும் சுன்யாட்சனுக்கு அடுத்தாற்போல மக்களின் மதிப்பைப் பெற்ற மாண்புறு தலைவன் அக் கட்சியில் இல்லையென்பதையும் உணர்ந்தனர். இதன் விளைவு உட்பூசல்கள்தாம். கோமிண்டாங் கட்சியில் கருத்து வேறுபாடுகள் தோன்றின. அரசியல், பொருளாதார, சமூக நலத்திட்டங்களைப்பற்றி சுன்யாட்சன் வகுத்துத்தந்த கொள்கைகளுக்கு மாறுபட்ட விளக்கங்கள் தரப்பட்டன. நட்புக் கட்சியாக விளங்கிய பொதுவுடைமையினர் இப் பூசலைப் பெரிது படுத்தித் தங்களது வளர்ச்சிக்குப் பயன் படுத்தும் எண்ணம்கொண்டு செயல்பட ஆரம்பித்தனர்.

இந்நிலையிலும் சுன்யாட்சனுல் காண்டன் நகரில் நிறுவப்பட்ட கோமிண்டாங் அரசுதான் சீனுவின் தேசிய அரசு என்று அறிவிக்கப் பட்டது (Nationalist Government). இந்த அரசு கோமிண்டாங் கட்சியைச் சேர்ந்த ஆட்சிக் குழுவினரால் செயல்படுத்தப்பட்டது. கோமிண்டாங் கட்சியில் உட்பூசல்கள் வளர்ந்து, வலது சாரிகள், இடது சாரிகள் என்று இரண்டாகப் பிளவுண்டது. இடது சாரிகளை வீழ்த்தி வலது சாரிகள் ஆதிக்கம் பெற்றனர். இதற்கிடையே குவாண்டுங் (Kwantung), குவான்சி (Kwansi) பகுதிகளில் கோமிண்டாங்கின் தேசியப் படைகள் வெற்றி பெற்றன. இவ்வெற்றிகளை அடிப்படையாகக் கொண்டு சீனு முழுவதையும் வென்று ஒற்றுமையை நிலைநாட்டி, வலிமை பெற்ற அரசை நிறுவ கோமிண்டாங் ஆட்சிக்குழு முடிவெடுத்தது. கோமிண்டாங்கின் தேசியப் படைகளின் தலைவராக சியாங்-கே-ஷேக் நியமிக்கப்பட்டார். இவரது தலைமையில் மூன்றே மாதங்களில் தேசியப் படையினர் வடக்கு நோக்கி முன்னேறி யாங்ட்சி நதிக்கரையை அடைந்தனர். 1927ஆம் ஆண்டு ஜனவரி மாதத்திற்குள் ஹாங்கோ (Hankow), ஹன்யாங் (Hanyang), வூசாங் (Wuchang) ஆகிய நகரங்களைக் கைப்பற்றி வூசாங் நகரை கோமிண்டாங்கின் முதல் தலைநகராகு

அமைத்தனர். இவ்வரசு 'ஊஹான் அரசு' எனப் பெயர் பெற்றது. இங்குதான் பொதுவுடைமையினருக்கும், தேசியவாதிகளுக்கு மிடையே இருந்த மனக்கசப்பு வெளிப்பட்டது. 1927ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதத்தில் 'நாங்கிங்' (Nanking) நகரம் கைப் பற்றப்பட்டு, தேசிய அரசின் தலை நகராக்கப் பட்டது. இங்கிருந்து தான் பொதுவுடைமையினரை ஒழிக்கும் ஏற்பாடுகள் தீவிரமாக்கப் பட்டன. ருஷிய உதவியாளர்கள் வெளியேற்றப்பட்டனர். சீனப் பொதுவுடைமையினர் வேட்டையாடப் பட்டனர். சியாங்-கே-ஷேக்கின் தலைமையிலான தேசியப் படைகள் பீகிங்கை நோக்கி முன்னேறின. இவர்களுக்கு ஆதரவாகப் படைப் பிரபுக் கள் சிலரும் இணைந்தனர். பீகிங் நகரும் பிடிபட்டது. 1928, டிசம்பர் மாத இறுதியில் மஞ்சூரியத் தலைநகரான முக்டன் (Mukden) நகரிலும் தேசியக் கொடி வெற்றிகரமாகப் பறக்கவிடப் பட்டது. தேசிய வாதிகள் சீனு முழுவதையும் வென்று ஒருமைப் படுத்தினர். சீனுவில் ஏற்படுத்தப்பட்டிருந்த முதல் குடியரசு மறைந்தது. சியாங்-கே-ஷேக்கின் தலைமையில் கோமிண்டாங் கினரின் இராணுவ ஆட்சி தொடங்கியது. நாங்கிங் சீன அரசின் தலைநகராக மாற்றப்பட்டது. இவ்வரசை அமெரிக்கா, பிரிட்டன், பிரான்சு முதலான பன்னிரு நாடுகள் அங்கீகரித்தன. டாக்டர் சுன்யாட்சனின் முதல் குறிக்கோளான 'தேசியம்-நாட்டு ஒருமைப் பாடு'—என்ற கொள்கையை வெற்றிகரமாகச் செயல்படுத்திய கோமிண்டாங்குகள், அவரது இரண்டாவது கொள்கையான 'மக்களாட்சியை' ஏற்படுத்தும் முயற்சியில் இறங்கினர். மக்க ளாட்சிக் கருத்துகளை நாட்டு மக்களிடையே பரப்பவும், அரசியல் முறைகளை வரையறுக்கவும் முடிவு செய்தனர். கோமிண்டாங் கட்சியின் அரசியல் குறிக்கோள்களை அடைந்த பின்னர் சமுதாய நலத்திட்டங்களை நிறைவேற்றவும் எண்ணங் கொண்டிருந்தனர். இக் கருத்துகளே தங்கள் ஆட்சியின் தலையாய குறிக்கோள்கள் என்று நாங்கிங் அரசு அறிவித்தது.

கோமிண்டாங் கட்சியினரின் இவ் வெற்றிக்குக் காரணமாக, சியாங்-கே-ஷேக்கின் திறமையையும், படைத் திறமையையுமே கூறலாம். படைப் பயிற்சி பெறுவதற்கு முன்பாக சியாங் தரகராக வும் வர்த்தகராகவும் விளங்கினுர். அப்போதுதான் சீனுவின் தொழில் துறை, நிதிக்கொள்கை, அந்நியரின் கட்டுப்பாடுகள் இவைகளை உணர முடிந்தது. பின்னர், ஜப்பானிலும் ருஷியா விலும் இராணுவப் பயிற்சி பெற்று, அதன் பின்னர் கோமிண்டாங் கட்சியினரால் ஏற்படுத்தப்பட்ட இராணுவக் கழகத்தின் தலைவராக (Whampoa Military Academy) வும் பணியாற்றினுர். இங்கு உருவாக்கப்பட்ட ஏராளமான சீனப் படையதிகாரிகள்

இவருடைய தலைமையில் எத்தகைய தியாகங்களையும் செய்யச் சித்தமாக இருந்தனர். சியாங்கின் திருமண உறவும் இவரது செல்வாக்குப் பெரிதும் வளரக் காரணமாய் இருந்தது. தொழில் துறையினர், வர்த்தகர்கள், சியாங் கிறித்தவ சமயத்தினர் என்பதால் வெளிநாட்டுத் தொடர்புடைய கிறித்தவ சமயக் குழுக்கள் சீனக் கிறித்துவர்கள், படையதிகாரிகள் ஆகிய அனைவரின் பேராதரவும், இவருடைய ஒப்பற்ற செயல் திறமை யும்தான் இவரை கோமிண்டாங்கின் கட்சித் தலைவராகவும், ஒருமைப்பாடடைந்த சீனுவின் ஒப்பற்ற தலைவராகவும் உயர்த் தியது எனலாம்.



## வாஷிங்டன் மாநாடு–1922

முதல் உலகப் போரின் முடிவில் தூரக் கிழக்கு நாடுகளில் ஜப்பான் மிகவும் பலம் பொருந்திய நாடாக விளங்கியது. போர்க் கால ஜப்பானின் வெற்றிகள் ஐரோப்பிய நாடுகளிடையே ஜப்பா னுக்குத் தனிப் பெருமையையும், சிறப்பையும் கொடுத்தன. உலக நாடுகளினின்றும் தனித்து, பழமையில் பல நூற்றுண்டு களாக ஆழ்ந்திருந்த ஜப்பான், மிகக் குறுகிய காலத்தில் ஐரோப்பி யுரைப் பின்பற்றி, அவர்களே அஞ்சும் விதத்தில் துரித வளர்ச்சி பெற்று, ஐரோப்பிய நாட்டினருக்கு இணையாக உயர்ந்திருந்தது. ஜப்பானின் இத்தகைய வளர்ச்சியை நோக்கிய மேலைநாடுகள் ஜப்பானின் பேராதிக்க நோக்கத்தைக் கண்டு அதிர்ச்சியுற்றன. முதலில் சீனுவையும், பின்னர் ருஷியாவையும் வெற்றி கண்டு, உலகப் போரின்போது, கீழை நாடுகளில் ஜெர்மனியின் ஆதிக் கத்தையும் அழித்த ஜப்பான், மேலும் தனது வலிமையை வளர்த்துக்கொள்ள விழைவதைக் கண்டனர். சிறப்பாக அமெரிக்க ஐக்கிய நாடுகள் ஜப்பானின் ஆதிக்க வளர்ச்சியைத் தடுக்கவும், தூரக்கிழக்கு நாடுகளில், சிறப்பாகச் சீனுவை ஜப்பா னின் பிடியிலிருந்து காப்பாற்றி, தூரக் கிழக்கு நாடுகளில் சக்திச் சமநிலையை ஏற்படுத்தவும் முயன்றது. இதன் விளைவாகத்தான் அமெரிக்காவின் தூண்டுதலின் பேரில் ஒன்பது நாடுகளின் மாநாடு வாஷிங்டன் நகரில் கூட்டப்பட்டது (Washington Conference-1922). இதில் பங்கெடுத்துக் கொண்ட நாடுகள், அமெரிக்கா, பிரிட்டன், பிரான்சு, ஜப்பான், இத்தாலி, சீனு, நெதர்லாந்து, போர்ச்சுக்கல், பெல்ஜியம் ஆகிய ஒன்பது நாடுகளாகும். இம் மாநாட்டின் முக்கிய நோக்கம் (1) ஜப்பானின் கடற்படை வளர்ச் சியைக் கட்டுப்படுத்தி, படைக் குறைப்பை ஏற்படுத்துவதும், (2) தூரக் கிழக்கு நாடுகளில் சக்திச் சமநிலையை ஏற்படுத்தி, சீனுவைக் காப்பாற்றுவதுமாகும். இதன்மூலம் பசிபிக் பெருங்கடல் பகுதியில்

அமைதியை நிலைநாட்டவும் உலகில் சமாதானத்தை நிலைநாட்டவும் வழிவகை காண முயன்றனர். இதனடிப்படையில்தான் நான்கு வல்லரசுகளின் ஒப்பந்தம் (The Four Power Pact), ஐந்து வல்லரசுகளின் கடற்படைக் கட்டுப்பாட்டு ஒப்பந்தம் (The five Powers Naval Treaty), ஒன்பது வல்லரசுகளின் ஒப்பந்தம் (The Nine Powers Treaty) ஆகியவை ஏற்பட்டன.

### நான்கு வல்லரசுகளின் ஒப்பந்தம்

முதலில் பிரிட்டன், ஜப்பான், பிரான்சு, அமெரிக்கா ஆகிய நான்கு வல்லரசுகளும் 1921ஆம் ஆண்டு, டிசம்பர்த் திங்கள் 13ஆம் நாள் ஒப்பந்தம் ஒன்றை ஏற்படுத்திக்கொண்டன. இதன்படி தூரக் கிழக்கு நாடுகளின் சிக்கல்களைத் தங்களுக்குள் கூடிப்பேசி அமைதியாகத் தீர்த்துக்கொள்ளவும், ஜப்பானைத் தவிர ஏனைய நாடுகள் ஏற்றத் தாழ்வின்றி சம உரிமையுடன் பசிபிக் தீவுகளில் நடந்துகொள்ளவும் வேண்டுமெனத் தீர்மானிக்கப்பட்டது. தங்களுக்குள் ஏற்படும் தகராறுகளுக்கு அமைதியான முறையில் தீர்வு காணவும் ஒப்புக்கொண்டன. 1902-ல் ஏற்பட்ட, 'ஆங்கில-ஜப்பானிய உடன்படிக்கையும்,' 1917-ல் ஏற்பட்ட 'அமெரிக்க-ஜப்பானிய உடன்படிக்கையும்' (Lansing-Ishii Treaty) கைவிடப்பட்டன. இவை கைவிடப்பட்டதால் அமெரிக்க-ஜப்பானுக்கிடையே இருந்த போர்பற்றிய அச்சம் நீங்கியது. அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற வல்லரசுகள் தூரக் கிழக்கு நாடுகளில் 'தலையிடாக் கொள்கையைக்' (Non-Intervention Policy) கடைப்பிடிக்கும் என்பதை ஜப்பான் நம்பியது.

### ஐந்து வல்லரசுகளின் கடற்படைக் கட்டுப்பாட்டு ஒப்பந்தம்

அமெரிக்கா, இங்கிலாந்து, ஜப்பான், பிரான்சு, இத்தாலி ஆகிய ஐந்து வல்லரசுகளின் கடலாதிக்கப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தி, பசிபிக் பெருங்கடலில் அமைதியை ஏற்படுத்தும் வகையில் இவ்வொப்பந்தம் செய்துகொள்ளப்பட்டது. இதன்படி மேற்கூறிய ஐந்து வல்லரசுகளும் 5:5:3:1·7:1·7 என்ற விகிதத்தில் போர்க் கப்பல்களைக் கொண்டிருக்க வேண்டுமென்று ஒப்புக்கொள்ளப்பட்டது. கப்பல்களின் எடையளவும் கப்பல் பீரங்கிகளின் சுடுதிறனும் (Caliber) குறிப்பிடப்பட்டிருந்தன. மேலும், ஹாங்காங், மணிலா போன்ற ஜப்பானின் மிக அண்மையிலுள்ள இடங்களில் கடற்படைத் தளங்களை வலுப்படுத்தக்கூடாதென்றும் இந்த உடன்படிக்கையில் குறிப்பிடப்பட்டிருந்தது. இதனால் மேலைநாட்டு வல்லரசுகள் திடீரென ஜப்பானைத் தாக்க இயலாது என்பதை ஜப்பான் உணர்ந்தது. போர்க் கப்பல்களின் எண்ணிக்கையை மட்டும் ஏற்படுத்தப்பட்ட இந்த உடன்படிக்கையால்

ஜப்பான் வேறு விதத்தில் தன் வலிமையை வளர்த்துக்கொள்ளும் தடையற்ற வாய்ப்பைப் பெற்றது. நீர்மூழ்கிக் கப்பல்களையும், போர் விமானங்களையும், தரைப்படைக்குத் தேவையான ஆயுதங்களையும் பெருமளவில் செய்து குவிக்கத் தடையேதுமில்லையெனவும், இவ் வுடன்படிக்கையைச் செய்துகொண்டதன் மூலம் ஐரோப்பிய நாடுகளின் நல்லெண்ணத்தையும் பெற முடிந்தது எனவும் ஜப்பான் நம்பி மகிழ்ந்தது.

### ஒன்பது வல்லரசுகளின் ஒப்பந்தம்

இதன்படி இந்த ஒன்பது வல்லரசுகளும் சீனுவின் உரிமைகளை மதித்து நடக்கவும், சீனுவில் அனைத்து நாடுகளின் சம வணிக உரிமைக் கொள்கையை (Open Door Policy) ஒரு மனதாய் ஏற்கவும், அதன் வலுவின்மையைப் பயன்படுத்திக்கொண்டு, அதன் மீது பேராதிக்கம் செலுத்தாமலிருக்கவும், அந்நியர் தலையீடின்றி அது அமைதியாகத் தனது முன்னேற்றத் திட்டங்களை நிறைவேற்றிக் கொள்ளவும், இந்த ஒன்பது நாடுகளும் ஒரு மனதாய் ஒப்புக்கொண்டன. இதற்கிடையே சீனுவும் ஜப்பானும் தங்களுக்குள் இருந்த மிக முக்கியப் பிரச்சினைகளைத் தனித்துக் கலந்துபேசி ஒரு முடிவுக்கு வந்தன.

### மதிப்பீடு

வாஷிங்டன் மாநாட்டில் உலக முக்கியத்துவம் வாய்ந்த பல ஒப்பந்தங்கள் நிறைவேற்றப்பட்டன. முக்கியமாகப் படைக் குறைப்பு ஒப்பந்தத்தை வெற்றிகரமாக நிறைவேற்றி, பிரிட்டன், அமெரிக்கா, ஜப்பான் ஆகிய நாடுகளின் கடலாதிக்கப் போட்டியைக் கட்டுப்படுத்தியது. இதனுல் பசிபிக் பெருங்கடலில் அமைதி நிலவியது. பல நாடுகள் சீனுவுக் கிழைத்துவந்த அநீதிகள் நீங்கவும், 'மனிதாபிமானத்தின்' பெயரால் சீனுவிற்குப் பண்ணுடுகளும் பாதுகாப்பளிக்கவும், தம் முன்னேற்றத்திற்குப் பாடுபடவும், இம் மாநாடு வழிவகுத்தது. இதனுல் பன்னுட்டு நீதிமுறை வலியுறுத்தப்பட்டது.

சீனுவிற்குப் பெரும் நன்மைகள் விளைந்தன. சீனுவில் தனியுரிமை பெற்று ஆதிக்கம் செலுத்திவந்த நாடுகள் இம் மாநாட்டிற்குப் பிறகு சீனுவிலிருந்து வெளியேறின. ஜப்பானும் ஷாண்டுங் பகுதியிலிருந்து வெளியேறியது. முதன்முறையாக சீனுவை மற்ற நாடுகள் மதிப்புடன் தங்களுக்குச் சமமான நிலையில் வைத்து நடத்தின; சீனுவின் வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் உதவ முன்வந்தன. தன்னைத் துண்டாட எண்ணியிருந்த ஐரோப்பிய

நாடுகள், தன்னை மதிக்கவும், பாதுகாப்பளிக்கவும், முன்னேற்றத்திற்கு உதவ முன்வந்த நிலையையும் கண்ட சீனு வியந்தது.

அமெரிக்க ஐக்கிய நாடுகள் மற்ற நாடுகளின் கவனத்தைத் தன்பால் ஈர்த்தது. உலகில் அமைதியை நிலைநாட்டவும், மற்ற நிகழ்ச்சிகளில் தான் தலைமையேற்று நடத்தும் வலிமையையும் வளர்ச்சியையும் அறிவித்தது. உலக வல்லரசுகளின் முக்கிய இடத்தைப் பிடித்துக்கொண்டது. பிரிட்டன் ஜப்பானுடன் 1902-ல் செய்துகொண்டிருந்த உடன்படிக்கையைக் கைவிட்டு அமெரிக்காவின் நட்பைப் பெற்றது.

ஜப்பானின் பேராதிக்கக் கொள்கைக்கு இம் மாநாடு முட்டுக் கட்டை விதித்தது எனலாம். படைக் குறைப்பு ஒப்பந்தத்தாலும், சீனுவின் உரிமைகள் பாதுகாப்புக் கொள்கையாலும் ஜப்பானின் ஆதிக்க வளர்ச்சித் தடைபட்டது. எனினும் போர்க் கப்பல் களின் எண்ணிக்கையை மட்டும்தான் இம் மாநாடு கட்டுப்படுத்தியது. ஆனால், ஜப்பான் தனது மற்றப் படைகளைப் பெருக்கிக் கொள்ளத் தடையேதுமில்லை. தனது கடற்கரையிலும், சீனக் கடல் பகுதிகளிலும் தன்னிச்சையாக ஜப்பான் வலிமை பெற வாய்ப்பு ஏற்பட்டது. சீனுவில் ஷாண்டுங் பகுதியிலிருந்து ஜப்பான் வெளியேறியபோதும், மஞ்சூரியாப் பகுதியில் தனது நிலையை உறுதிப்படுத்திக்கொள்வதையே ஜப்பான் பெரிதும் விரும்பி, அதனடிப்படையிலேயே செயல்பட்டது. இம் மாநாட்டின் பின்னர் உலக நாடுகளின் நல்லெண்ணத்தைப் பெற்ற ஜப்பான் அதைப் பயன்படுத்திக்கொண்டு, மேலும் வளர்ச்சியடையவும் தான் உரிமை பெற்றிருந்த இடங்களில் தன்னுரிமையை நிலைநாட்டிக் கொள்ளும் பணியிலும் தீவிரமாக ஈடுபட்டது. ஜப்பானில் தொழில்கள் வளர்ந்தன. வாணிகம் பெருகியதும், தூரக் கிழக்கு நாடுகளிலும், தென் கிழக்காசிய நாடுகளிலும் செல்வாக்குப் பெற்றுவிட்ட ஜப்பான், பிற்காலத்தில் அந் நாடுகளையே தனது படை வலிமையால் வெல்ல நினைத்தது. இதனுல்தான் வாஷிங்டன் மாநாடு ஜப்பானின் ஆதிக்க வெறியைத் தடுத்து நிறுத்தியது என்பதற்குப் பதிலாக அதனை மேலும் வளர்த்தது என்றும் கூறலாம்.

# 6. மஞ்சூரிய நெருக்கடி (1931)

1894ஆம் ஆண்டிலிருந்தே சீனுவில் தனது ஆதிக்கத்தை ஏற்படுத்தும் முயற்சியில் ஜப்பான் செயல் பட்டு வந்தது என்பதை நாமறிவோம். ஜப்பானின் இந்தப் பேராதிக்கக் கொள்கைக்கு 1922ஆம் ஆண்டில் நடைபெற்ற வாஷிங்டன் மாநாடு தாற்காலிகத் தடை விதித்திருந்தது. அம் மாநாட்டில் ஏற்பட்ட ஒப்பந்தங்களின்படி சீனுவின் ஒற்றுமைக்கும், உள்நாட்டு அரசியல் வளர்ச்சிக்கும், சுதந்திரப் பாதுகாப்பிற்கும், நிரந்தர எல்லைப் பாதுகாப்பிற்கும், பொருளாதார ஏற்றத்திற்கும் ஜப்பானும் ஒப்புதல் அளித்திருந்தது. இக் கருத்துகளே பன்னாட்டுக் கழகத்திலும் (League of Nations) வலியுறுத்தப் பட்டிருந்தன என்பதனையும் அறிவோம். இருப்பினும் சீனுவின் ஒருபகுதியாகிய மஞ்சூரியாவில் ஜப்பான் ஆதிக்கம் கொண்டதற்கும், அங்கு 1931-ல் ஏற்பட்ட நெருக்கடி நிலைமைக்குமான காரணங்களை ஆய்ந்தால்தான், இந் நெருக்கடிகள் எவ்வாறு இரண்டாம் சீன—ஜப்பானியப் போருக்கும், அப் போர் நடைபெற்றுக் கொண்டிருந்த போதே, ஜப்பான் இரண்டாம் உலகப் போரில் ஈடுபடுவதற்கான காரணங்களும் தெளிவாகும்.

ஜப்பானின் மஞ்சூரியக் கொள்கையை நோக்குமிடத்து, ஜப்பானின் சீனக்கொள்கைக்கும், மஞ்சூரியக் கொள்கைக்கும் இடையேயான வேற்றுமைப் புலப்படும். வாஷிங்டன் மாநாட்டில் கூட ஜப்பான் தான் மஞ்சூரியாவில் பெற்றிருந்த உரிமைகளை மட்டும் விட்டுக்கொடுக்க முன் வரவில்லை என்பதும், இதன் தனித்தன்மையை விளக்கும். வாஷிங்டன் மாநாட்டில் மஞ்சூரியாவைத் தவிர சீனுவின் மற்றப் பகுதிகளிலிருந்து ஜப்பான் வெளியேற இசைந்தது. சீனுவின் 'நெற்களஞ்சியமான' மஞ்சூரியாவிலிருந்து ஜப்பான் வெளியேற முடியாத நிலை உருவாகியிருந்தது. மஞ்சூரியாவைத் 'தன் உயிர்நாடி' (Life line) என ஜப்பான் கருதியிருந்ததே இதற்குக் காரணமாம். 1915-ல் ஜப்பானுக்கும்

சீனுவுக்குமிடையே ஏற்பட்ட ஒப்பந்தத்தால் 99 ஆண்டுகள் லியோடுங் (குவாண்டுங்) பகுதியில் இருப்புப் பாதை உரிமையை யும், மஞ்சூரியாவில் பொருளாதார, வேளாண்மை உரிமையையும் ஜப்பான் பெற்றிருந்தது. இவ்வுரிமைகளை 1922-க்குப் பிறகு சீனு மறுத்தது. அமெரிக்காவும், சீனுவும் ஜப்பானிய உற்பத்திப் பொருள்களின் விற்பனைக் கூடமாக இருக்கலாமே தவிர, மஞ்சூரியாவைப் போலத் தனது மக்களின் உணவுப் பிரச்சினையைத் தீர்க்கும் காமதேனுவாகவும், தனது தொழில்களுக்கு வேண்டிய மூலப்பொருள்களை வழங்கும் கனிச்சுரங்கமாகவும் இருக்க முடியாது. இதனால் தான் எவ்வித இடர்ப்பாடுகள் ஏற்படினும், படைப் பலம் கொண்டேனும் மஞ்சூரியாவைத் தன்னாதிக்கத்தில் வைத்திருந்தேயாக வேண்டிய தவிர்க்க முடியாத நிலையில் ஜப்பான் இருந்தது. மேலும், ஜப்பானியத் தொழில் வர்த்தகத் துறைகளைப் பெருமளவுக்குக் கட்டுப்படுத்தும் ஜப்பானிய 'சைபாத்சு குடும்பங்கள்' (Zaibatsu), அரசியலிலும் செல்வாக்குப் பெற்றிருந்தன. மஞ்சூரியாவிலிருந்து ஜப்பான் எக்காரணத்திற் காகவேனும் வெளியேறக் கூடாது என்பதில் இக் குடும்பங்கள் மிகவும் அக்கறை கொண்டன. இம் முறையில் தங்களின் அரசியல் செல்வாக்கினைப் பயன் படுத்தவும் தவறவில்லை.

இவ்வாறு மஞ்சூரியாவில் தங்கள் உரிமைகளை எப்பாடு பட்டாகிலும் நிலைநிறுத்தியே ஆக வேண்டும் என்று ஜப்பானியர் முடிவு செய்திருந்த அதே நேரத்தில், சீனர்களும் விழிப்புணர்ச்சி பெற்றிருந்தனர். கோமிண்டாங் கட்சியின் தலைமையில் தேசிய இயக்கம் சீனுவில் வேரூன்றி வளர்ந்திருந்தது. சீனுவை ஒருமைப் படுத்தி, அந்நியர்களை வெளியேற்றி, வலிமையுள்ள புதிய சீனுவை உருவாக்க வேண்டுமென்ற எண்ணம் சீன மக்களிடையே ஆதரவைப் பெற்றிருந்தது. சியாங்-கே-ஷேக்கின் தலைமையில் சீனு முழுவதும் ஒற்றுமையடைந்த நிகழ்ச்சியை முன்பே கண்டோம். தேசிய எழுச்சி பெற்ற சீனர்கள் மஞ்சூரியாவிலும் தாங்கள் இதுவரை இழந்திருந்த உரிமைகளை மீண்டும் நிலைநாட்ட முயன்றனர். சீனுவின் தேசியவாதிகள் மஞ்சூரியாவைத் தங்கள் நாட்டின் 'முதல் காவல் எல்லை' (First Line of defense) என்றும், கோடிக்கணக்கான சீன மக்களின் பசிப்பிணியைப் போக்கும் 'அட்சய பாத்திரம்' என்றும் நம்பினர். அது மட்டுமின்றிப் பெருகிவரும் சீன மக்கள் தொகைக்கு மஞ்சூரியா ஒரு போக் கிடமாக அமையும் என்றும் கருதினர். மேலும், ஜப்பானியரின் ஆதிக்கத்திலிருந்த தென் மஞ்சூரிய இருப்புப் பாதைத் தொடரைத் தங்கள் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவரவும், தேசிய உணர்வு தோன்ட சீனர்கள் விரும்பினர். இதை ஜப்பான் முழுமையாக

எதிர்த்தது. இதைக் கண்ட சீனர்கள் தாங்களாக ஒரு போட்டி இருப்புப் பாதைத் தொடரை ஏற்படுத்தி அதன் மூலமாகத் தங்கள் பொருளாதாரத்தை வளர்க்கவும் திட்டமிட்டனர். இவ்வாறு சீனு மற்றொரு இருப்புப் பாதைத் தொடரை மஞ்சூரியாவில் ஏற்படுத்தினல், அது தன்னுடைய பொருளாதார வளர்ச்சியைப் பாதிக்கும் எனக் கூறி, சீனுவின் இருப்புப் பாதையமைக்கும் திட்டங்களை ஜப்பான் தடைசெய்யத் துணிந்தது. சீன-ஜப்பானியரிடையே ஆத்திரமூட்டும் அளவில் கருத்து வேறுபாடுகள் முளைத்தன.

மேலும், 1895ஆம் ஆண்டிலேயே சீனுவிடமிருந்து லியோடுங் தீபகற்பப் பகுதிகளை ஜப்பானியர் பெற்றனர்; பின்னர், 1905ஆம் ஆண்டில் ருஷியாவிடமிருந்து மஞ்சூரிய உரிமைகளைக் கைபற்றியது. மஞ்சூரியப் பொருளாதார வேளாண்மைத் துறைகளில் பெரும் செல்வத்தை ஜப்பான் முதலீடு செய்து முன்னேற்றம் கண்டது. ருஷியாவின் ஆதிக்கத்திலிருந்தும் இதனல் மஞ்சூரியாவைக் காப்பாற்றியது. இதன் காரணமாக மஞ்சூரியாவில் தனிச் சிறப்புரிமை பெற ஜப்பானியர் பெரிதும் முயன்றனர். ருஷியாவில் வளர்ந்த பொதுவுடைமைக் கொள்கையை மஞ்சூரியாவில் புகவொட்டாமல் தடுத்ததற்காக ஜப்பானை மேற்கத்திய வல்லரசுகள் போற்றிப் புகழ்ந்தன. எனவேதான் சீன தேசிய உணர்வுக்கும், நீதிக்கும் புறம்பாக மஞ்சூரியாவில் ஆதிக்கம் செலுத்தும் ஜப்பானை மேற்கத்திய வல்லரசுகள் வெளிப்படையாக வெறுத்து, மஞ்சூரியாவிலிருந்து வெளியேற்றத் துணியவில்லை. இரும்புத்தாது, நிலக்கரி, தங்கம் போன்ற ஏராளமான கனிப் பொருள்களை ஜப்பானியத் தொழிற்சாலைகளுக்குப் பெருமளவில் கொடுத்து, ஜப்பானியப் பொருளாதார—வர்த்தகங்களின் உயிர் நாடியாகத் திகழ்ந்த மஞ்சூரியாவிலிருந்து வெளியேற ஜப்பானுலும் இயலவில்லை.

1929-ல் ஏற்பட்ட உலகப் பொருளாதாரப் பெருமந்தத்தின் காரணமாகத் தூரக்கிழக்கு நாடுகளிலும், ஆசிய நாடுகளிலும் ஜப்பானியப் பொருள்களுக்குப் பெருங்கிராக்கி ஏற்பட்டது. அமெரிக்காவிலும், ஐரோப்பாவிலும் கூட ஜப்பானியப் பொருள்களுக்குப் பெரும் வரவேற்பு கிடைத்தது. இந் நாடுகள் தங்கள் நாட்டுப் பொருள்களின் உற்பத்தியைப் பெருக்கவும், ஜப்பானின் செல்வாக்கினை ஒடுக்கவும், ஜப்பானிய இறக்குமதிப் பொருள்களுக்குத் தடைவிதித்தனர். அமெரிக்க நாடுகளிலும், ஐரோப்பாவிலும் ஜப்பானியர் குடியேறுவதுகூடத் தடை செய்யப்பட்டது. அமெரிக்கா—இங்கிலாந்தின் தூண்டுதலால் சீனுவும் ஜப்பானியப்

பொருள்களுக்குத் தடைவிதித்தது. இதனுல் ஜப்பானியப் பொருளாதாரம் மிகவும் பாதிக்கப்பட்டது.

இவ்வாறு தன் வர்த்தகத்தைத் தடைசெய்து, தன் நாட்டில் பொருளாதார நெருக்கடி நிலே உருவாகக் காரணமாய் இருந்த அமெரிக்காமீது ஜப்பான் பகைமை பாராட்டத் தொடங்கியது. நாட்டில் ஏற்பட்ட பொருளாதாரச் சீர்குலேவுகளினுல் குழப்ப நிலே உருவானது. இந் நிலேயைச் சீர்திருத்தி, தனது பொருளாதாரத்தை வளப்படுத்தக் குடியேற்ற நாடு ஒன்று தேவையென ஜப்பான் எண்ணியது. இந் நிலேயில் உள்நாட்டில் அரசியல் குழப்பங்கள் தோன்றின. மக்களாட்சி முறைப்படி ஜப்பானில் அரசு நடத்தியவர்கள் மதிப்பிழந்தனர். இராணுவத்தினர் சிறப்புப் பெற்றனர். லியோடுங் தீபகற்பத்தில் இருந்த ஜப்பானின் குவாண்டுங் படைப்பிரிவு (Kwantung Army) மஞ்சூரியாவைக் கைப்பற்றுவதற்கானத் திட்டங்களேத் தீட்டியது. ஜப்பானின் பொருளாதாரத்தைச் செம்மைபடுத்த வேண்டுமெனில் மஞ்சூரியாவைத் தாக்கிப்பிடித்தாக வேண்டும் என்ற கருத்து ஜப்பானியரிடையே பரப்பப்பெற்றது. இதன் விளேவாக எழுந்ததுதான் மஞ்சூரிய நெருக்கடி.

மேலும் அயல்நாட்டுறவில் ஜப்பானுக்கு ஏற்பட்ட தோல்விகளும், அதன் விளேவுகளும் ஜப்பானியருக்கு ஆத்திரமூட்டுவதாய் இருந்தன. அமெரிக்காவின் முயற்சியால் ஏற்பட்ட வாஷிங்டன் மாநாடும், அம் மாநாட்டின் முடிவுகளும் ஜப்பானேக் கட்டுப்படுத்தும் தளேகளாகவும், தன்னேத் தனித்து ஒதுக்கிவிடச் செய்யப்பட்ட ஏற்பாடுகளாகவும் தோன்றின. ‘ஆங்கில ஜப்பானிய உடன்படிக்கையின் முறிவு’, அமெரிக்காவுடன் செய்துகொண்ட ‘லான்சிங்-இஷி’ ஒப்பந்த முடிவு இவையனேத்தும் இந் நோக்கங்களே வலியுறுத்துவதாக அமைந்தன. ஜப்பானியரைத் தன் நாட்டில் குடியேருதவாறு அமெரிக்கா குடியேற்றத் தடுப்புச் சட்டங்களே இயற்றியது. வாஷிங்டன் மாநாட்டில் ஜப்பானியக் கடற்படை வளர்ச்சியைக் கட்டுப்படுத்தியது, ஜப்பானியப்பொருள்களுக்குத் தடைவிதித்ததன்மூலம் ஜப்பானின் அயல்நாட்டுச் சந்தைகளே மூடியது, சீனுவிலும் ஜப்பானியருக்கும் ஜப்பானியப் பொருள்களுக்கும் தடையேற்படவும் காரணமாய் இருந்தது, ஐரோப்பிய நாடுகளும், முக்கியமாக அமெரிக்காவும் தான் என்றெண்ணிய ஜப்பான் மனம் புழுங்கியது. தன் உறவை முறித்துக் கொண்ட இங்கிலாந்து தன்னேச் சுற்றிலும் படைத்தளங்கள் அமைப்பதையும், வலுப்படுத்துவதையும் உணர்ந்த ஜப்பான், தான் மட்டும் தனியளுக நிற்பதை எண்ணி வேதனேயுற்றது. தானும் இராணுவ பலத்தால் வளர்ந்தால் மட்டுமே

தவிர, மேலே நாட்டினரின் இத்தகைய எதிர்ப்புகளைத் தடுக்க வியலாது என்பதை உணர்ந்த ஜப்பான், தனது படை வலிமையைப் பெருக்கத் துணிந்தது. அது மட்டுமன்றி, தன்னைச் சுற்றிக் காவல் நிலையங்களை அமைத்த மேலேநாட்டினருக்கு தனது வலிமையை உணர்த்த வேண்டி ஆக்கிரமிப்புச் செயல்களில் ஈடுபடவும் முனைந்தது. இதன் விளைவாகத்தான், மஞ்சூரியாவைத் தனதாக்கிக் கொள்வது என்ற முடிவிற்கு ஜப்பான் வந்தது.

இதற்கிடையில் மஞ்சூரியாவில் சீனர்களுக்கும் ஜப்பானி யருக்குமிடையே ஏராளமான மோதல்கள் ஏற்பட்டன. ஜப்பானின் பொறுப்பிலிருந்த தென்மஞ்சூரிய இருப்புப் பாதை வழியாகச் சீன விவசாயிகள் பெருமளவில் மஞ்சூரியாவில் குடியேறி நில உரிமைபெற்று விவசாயத் தொழில்களில் ஈடுபட்டனர். ஜப்பானிய அரசு எவ்வளவுதான் ஊக்கமளிப்பினும் மஞ்சூரியா விற்குள் சென்ற ஜப்பானிய விவசாயி சீனர்களுடன் போட்டியிட இயலாமலும், சீனச் சட்டதிட்டங்களின் கட்டுப்பாட்டினாலும் அல்லலுற்றான். தென் மஞ்சூரிய இருப்புப் பாதைக்குப் போட்டி யாக, சீனர்கள் மற்றொரு இருப்புப் பாதைத் தொடரை ஏற்படுத் தினர். இதனால் ஜப்பானிய வருமானமும், செல்வாக்கும் மஞ்சூரி யாவில் குறைந்துவிடுமோ என்ற அச்சமும் ஏற்பட்டது. சீனாவில் கோமிண்டாங் கட்சியினரின் தலைமையில் ஏற்பட்ட தேசிய இயக்க மும், அதனால் தூண்டிவிடப்பட்ட அந்நியர் எதிர்ப்பியக்கமும், சீனாவிலிருந்து அந்நியர் அனைவரையும் வெளியேற்றி, 'சீனா சீனர் களுக்கே' என்ற கொள்கையை நிலைநாட்டத் துடிக்கும் சீன தேசிய வாதிகளின் எழுச்சியும், ஜப்பானியர்மேல் சீனர்களுக்கிருந்த பகைமையுணர்ச்சியும், மஞ்சூரியாவில் ஜப்பான் தனது காவல் படைகளை அதிகப்படுத்தும்படி தூண்டியது. தென் மஞ்சூரிய இருப்புப் பாதைக்குக் காவலாய் இருந்த நகமுரா (Nakamura) என்ற ஜப்பானிய இராணுவ அதிகாரி சீனர்களால் கொல்லப் பட்டார். இதுபோன்ற ஜப்பானிய எதிர்ப்புச் செயல்கள், கலவரங்கள், கொலைகள் 1930, 31ஆம் ஆண்டுகளில் நிறைய ஏற்பட்டன. இக் கலவரங்களை அடக்க ஜப்பான் எடுத்துக் கொண்ட முயற்சிகள் பலனளிக்கவில்லை. நகமுரா கொலையுண்ட பின்னர் ஜப்பானிய இராணுவ அதிகாரிகள், பழிதீர்க்கும் வகையில் மஞ்சூரியா முழுவதையும் தாக்கிப் பிடித்துக்கொள்ள வேண்டும் என வற்புறுத்தினர்.

இந் நிலையில் 1931ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 18ஆம் நாள் தென் மஞ்சூரிய இருப்புப் பாதையில் வெடிகுண்டு ஒன்று வெடித்தது. இந்த வெடிகுண்டு இருப்புப் பாதைக்குச் சேதம்

விளைவிக்கவில்லையெனினும், சீன-ஜப்பானிய உறவு வெடித்துச் சிதறக் காரணமாய் இருந்தது எனலாம். இவ் வெடிகுண்டு நிகழ்ச்சிக்குச் சீனுதான் காரணம் என ஜப்பான் கூறியது. சீனு இதை மறுத்து, ஜப்பானியர்தான் காரணம் எனக் குறைகூறியது. சீனுவின் இந்தச் செயலைப் பொருட்படுத்தாமல், ஜப்பான் நேரடி நடவடிக்கையில் இறங்கியது. மஞ்சூரியத் தலைநகரான முக்டன் நகரை ஜப்பானியர் பிடித்தனர். 1931ஆம் ஆண்டின் இறுதிக்குள் மஞ்சூரியா முழுவதையும் ஜப்பான் பிடித்துக்கொண்டது. மஞ்சூரியாவில் சீன அதிகாரம் அழிக்கப்பட்டது.

இதற்குள்ளாக ஜப்பானில் மஞ்சூரியப் படையெடுப்பைப் பற்றி மாறுபட்ட கருத்துகள் தோன்றலாயின. மஞ்சூரியாவில் தாங்கள் நடத்தியது ஆக்கிரமிப்புப் செயல் அல்லவென்றும், தற்காப்புக்காகச் செய்துகொண்ட ஏற்பாடு என்றும் ஜப்பான் சீனுவிற்கு அறிவித்தது. சீனுவிலிருந்த ஜப்பானியத் தூதரகமும் இதையே வலியுறுத்தியது. இச் செயலுக்குக் காரணமாய் இருந்த படைத் தளபதிகள் ஜப்பானிய அமைச்சரவையின் எவ்விதக் கட்டுப்பாடுகளையும் ஏற்க மறுத்தனர். இதனுல் இதுவரை ஜப்பானிய ஆட்சிப் பொறுப்பிலிருந்த 'மின்சிதோ' (Minseito) கட்சியினர் பதவி துறந்தனர். பின்னர் 'சையுகை' (Seiyukai) கட்சியைச் சேர்ந்த இனுகை தாகிஷி (Inukai Takishi) என்பார் ஆட்சிப் பொறுப்பேற்ருர். இவர்களாலும் இராணுவத் துறையினரை அடக்கியாள முடியவில்லை. ஜப்பானில் கட்சிப் பூசல்களும், 'சிவில்' இராணுவத் துறைகளுக்குமிடையே பூசல்களும் வலுத்தன. மஞ்சூரியாவிலிருந்த ஜப்பானியப் படைகளைத் திருப்பியழைக்க ஜப்பானின் எந்த கட்சி அரசாலும் முடியவில்லை.

மஞ்சூரியாவில் நீதிக்குப் புறம்பான முறையில் தாக்குதல் நடத்திப் பலவிடங்களையும் கவர்ந்துகொண்ட ஜப்பானை வெளியேற்றும்படி சீனு, பன்னுட்டுக் கழகத்தை (League of Nations) வேண்டியது. பன்னுட்டுக் கழகத்திலிருந்த ஜப்பானியப் பேராளர் (Japanese Delegate) தன் நாட்டிற்கு நாடு கவரும் நோக்கமே இல்லையென்றும், வேண்டுமானுல் சீனுவும் ஜப்பானும் பேச்சு வார்த்தைகளின் மூலம் மஞ்சூரியப் பிரச்சினைக்கு முடிவு காணலாம் என்றும் கூறினுர். ஆனுல், ஜப்பானியப் படை தென் மஞ்சூரிய இருப்புப் பாதைப் பகுதிகளைத் தவிர்த்து, ஏனைய பகுதிகளிலிருந்து முதலில் வெளியேற வேண்டுமென்றும், அதன் பின்னர்தான் பேச்சு வார்த்தைகள் நடத்த முடியுமென்றும் சீனர்கள் வாதாடினர். மஞ்சூரிய விவகாரங்களை நேரடியாகக் கண்ணுற்று, விசாரித்து, விளக்கங்களைப் பன்னுட்டு அவைக்குப் பரிந்துரை செய்ய,

பன்னாட்டுக் கழகம் 'விசாரணை ஆணைக்குழு' ஒன்றனை நியமித்தது. இவ்வாணைக் குழுவிற்கு இலிட்டன் பிரபு (Lord Lytton) தலைவராக அமர்த்தப்பட்டார். இச் சமயத்தில்தான் அமெரிக்காவும் மஞ்சூரிய நெருக்கடிக்கு ஒரு தீர்வு காண முனைந்தது. அமெரிக்க அரசு துறைச் செயலாளர் H. L. ஸ்டிம்சன், தென்கிழக்காசியப் பகுதிகளில் ஏற்கெனவே செயலிலிருந்துவரும் ஒப்பந்தகளும், உடன்படிக்கைகளும் பழுதுபடாமல் இருக்க வேண்டியதன் அவசியத்தை எடுத்துரைத்து மஞ்சூரியாவில் அமைதிகாணும் பணியிலும் செயல்பட்டார். பன்னாட்டுக் கழகத்தில் அமெரிக்கா அங்கம் வகிக்கவில்லையெனினும், தூரக் கிழக்கு, தென்கிழக்காசியப் பகுதிகளில் அமைதி காக்கும் பணியில் அமெரிக்காவும் ஒத்துழைக்கும் எனவும் அறிவித்தார். நீதிக்கு மாறான செயல்களில் ஈடுபடும் எந்த நாட்டையும் அமெரிக்காவோ, பன்னாட்டுக் கழகமோ அனுமதிக்காது எனவும் எச்சரித்தார். இவருடைய இந்தக் கொள்கையைத்தான் 'அனுமதி மறுப்புக் கொள்கை' (Doctrine of Non-Recogniton) என்கிறோம். இந்தக் கொள்கையை மிகவும் கடுமையாகக் கடைப்பிடிக்கத் தொடங்கியதால்தான், தவறிழைத்த நாடுகளைப் பன்னாட்டுக் கழகம் கண்டித்தபோது, அவைகள் பன்னாட்டுக் கழகத்திலிருந்தே வெளியேறின. இதன் விளைவாகப் பன்னாட்டுக் கழகமும் தோல்வியில் முடிந்தது. ஆக்கிரமிப்புச் செய்யும் நாட்டை வாயளவில் அன்றி, செயலளவில் தண்டித்து நிறுத்தக்கூடிய வலிமை பெற்ற சாதனம் அன்றைய பன்னாட்டுக் கழகத்தில் இல்லை. இன்றும்கூட அதே நிலைதான் என்றும் கூறலாம். இதனால்தான் மஞ்சூரியாவில் ஜப்பானின் ஆக்கிரமிப்புக் குறித்து அனுப்பப்பட்ட இலிட்டன் பிரபுவைத் தலைவராகக் கொண்ட 'விசாரணை ஆணைக் குழுவின்' முடிவுகளும் பயனற்றுப் போய்விட்டன.

பன்னாட்டுக் கழகத்தாலும், அமெரிக்காவின் எச்சரிக்கையாலும் ஜப்பானியரை மஞ்சூரியாவிலிருந்து வெளியேற்ற முடியவில்லை என்பதை அறிந்த சீனர்கள் தாங்களே ஜப்பானியரை எதிர்க்கத் தொடங்கினர். சீனர்கள் ஜப்பானியப் பொருள்களைக் கட்டுமறுப்பு (Boycot) செய்தனர். இதனால் ஜப்பானுக்குப் பெரும் இழப்பு ஏற்பட்டது. இந்தக் 'கட்டு மறுப்பு இயக்கத்தை'த் தகர்த்தெறிய ஷாங்காயில் படையொன்றினை அது நிறுத்தியது. ஜப்பானை ஷாங்காயிலிருந்தும் வெளியேற்றக் கோரி சீனா மீண்டும் பன்னாட்டுக் கழகத்தை வேண்டியது. இம் முறைப் பன்னாட்டுக் கழகம் திறமையுடன் செயல்பட்டு ஜப்பானியரை ஷாங்காயிலிருந்து வெளியேறச் செய்தது.

### மஞ்சுகோ-வின் தோற்றம்

ஷாங்காயில் ஜப்பானியப் படைகள் குவிந்து, சீனுவின் எதிர்ப் பியக்கத்தை ஒடுக்க முயன்ற அதே நேரத்தில், சீனுவின் தேசிய இயக்கத்திற்கு எதிராக ஜப்பான் மஞ்சூரியாவில், மஞ்சூரிய விடுதலை இயக்கத்தைத் தோற்றுவித்தது. ஜப்பானியரின் ஆதரவைப் பெற்றிருந்த இவ் வியக்கம் தீவிரமடைந்தது. 1934ஆம் ஆண்டு பிப்பிரவரி 18ஆம் நாள் மஞ்சூரியா விடுதலை பெற்றுவிட்டதாக அறிவிக்கப்பட்டது. இதுதான் முக்டனைத் தலைநகராகக் கொண்ட 'மஞ்சுகோ' (Manchuko) அரசாகும். 1912-ல் சீனுவின் ஆட்சியைத் துறந்த 'மஞ்சு குல'க் கடைசி அரசர் பு-யி (Pu-Yi) மஞ்சுகோவின் அரசராக நியமிக்கப்பட்டார். ஜப்பானின் கைப்பாவையான 'மஞ்சுகோ'வை உலக நாடுகள் அங்கீகாரம் செய்ய மறுத்தன. ஜப்பானை மஞ்சூரியாவிலிருந்து வெளியேற்ற முயன்ற பன்னாட்டுக் கழகத்திலிருந்தே 1933-ல் ஜப்பான் வெளியேறியது.

'மஞ்சுகோ' என்ற புதிய அரசை ஏற்படுத்தியதன் மூலம் உலக நாடுகளின் எதிர்ப்பையும், வெறுப்பையும் பொருட்டாக எண்ணாமல் நிலைபெற்றுவிட்ட ஜப்பான், சிறுகச் சிறுக சீனுவின் மற்றொரு மாநிலமான ஜெஹோலையும் (Jehol) பிடித்தது. பின்னர் மஞ்சூரியாவைத் தலைமைத் தளமாகக் கொண்டு சீனு முழுவதை யும் வென்று தன் காலடியில் கொணர வேண்டும் என்று கனவு கண்டது. இதற்குத் தன்னை ஆயத்தப்படுத்திக் கொள்ளும் வகையில் சீன அரசுடன் 'தாங்க்கு' (Thangku) என்னுமிடத்தில் தாற்காலிகப் போர் ஒய்வு ஒப்பந்தம் ஒன்றும் செய்துகொண்டது. மஞ்சூரியாவின் வளங்களைப் பயன்படுத்திப் பல வழிகளிலும் ஜப்பான் முன்னேறியது. ஜப்பானின் இவ் வளர்ச்சியைக் கண்ட ருஷியாவும், மற்ற ஐரோப்பிய நாடுகளும் அச்சமுற்றன. வளர்ச்சி யுற்ற ஜப்பான், ஆதிக்க வெறியில் திளைத்தது. முதலில் சீனுவை யும், பின்னர் தென்கிழக்காசிய நாடுகள் முழுவதையும் வென்று மிகப் பெரிய பேரரசை உருவாக்கத் திட்டமிட்டது. இத் திட்டங் களைச் செயல்படுத்த இராணுவத்தினர் ஜப்பானில் ஆட்சிப் பொறுப்பேற்றனர். மக்களாட்சி முறை ஒழிந்து வல்லாட்சி ஜப்பானில் ஏற்பட்டதால், ஜப்பான் இரண்டாம் உலகப் போரையும், பின்னர் ஏற்பட்ட அழிவையும் நோக்கி நடை போட்டது எனலாம்.

# 7. ஜப்பானில் படையாட்சி
## (Rise of Militarism in Japan)

முதல் உலகப் போரில் தொடங்கி, இரண்டாம் உலகப் போரில் தோற்று ஒடுக்கப்படும்வரை உள்ள காலத்தை ஜப்பானிய வரலாற்றில் 'ஒரு புதிய சகாப்தம்' என்பர். மேஜி சகாப்தத்தில் தலைமைப் பொறுப்பேற்ற பல தலைவர்கள் இன்னமும் தொடர்ந்து பணியாற்றினர். இவர்களின் எண்ணம், ஜப்பான் ஒரு பேரரசி யாக விளங்கவேண்டுமென்பதே. முதல் உலகப் போருக்குப் பின்னர் ஜப்பானில் தோன்றிய இளந்தலைமுறையினர் ஜப்பான் அனைத்துத் துறைகளிலும் வளர்ச்சிப்பெற்று, ஐரோப்பிய நாடு களுக்கு இணையாக விளங்குவதைக் கண்டவர்கள் ஜப்பானைத் தன்னிறைவு பெற்ற நாடாகவும், மக்களாட்சி அடிப்படையிலும் மாற்றியமைக்கவும் விரும்பினார்கள். மேஜி புரட்சியின்போதே கூட அதிகாரக்குவிப்பு நிறைந்த பேரரசரின் ஆட்சியை விரும்பு வோரும், அத்தகைய ஆட்சிமுறைக்கு மாறாக அரசியலமைப்புக் குட்பட்ட மக்களாட்சி அரசை அமைக்க விரும்புவோரும் என இரு பெரும் பிரிவினர் ஜப்பானில் இருந்தனர். பழமைக்கும் புதுமைக்கும் ஏற்பட்ட இந்த மோதலைத் தவிர்க்க வேண்டி, ஜப்பா னியக் கல்வித்துறை இவ்விரு கொள்கைகளையும் ஏற்று, அதன் அடிப்படையில் கல்வித்திட்டத்தை வகுத்தது என்பதையும் முன்பே கண்டோம்.

மேற்கத்தியக் கல்வி முறையால் மக்களாட்சிக் கொள்கைகளும் சோசலிசத் தத்துவங்களும் ஜப்பானியரிடையே மதிப்பு பெறத் தொடங்கின. அரசியல் கட்சிகளும் தோன்றின. இந்த நிலையைப் பயன்படுத்திக்கொண்டு சாமுராய்கள் அரசு பதவிகளையும், கட்சித் தலைமையையும் ஏற்று ஜப்பானிய அரசியலில் செல்வாக்குப் பெறத் தொடங்கினர். 1918-க்குப் பின்னர் ஜப்பானிய அரசியல் கட்சிகள், அரசின் குறைகளைச் சுட்டிக்காட்டி, எதிர்ப்புத்தெரிவிக்க

ஆரம்பித்தனர். இதுவரை ஏகபோக உரிமையுடன் தட்டிக்கேட் பாரின்றி அரசு நடத்திய 'சத்சுமா' சாமுராய்கள் இப்போது எதிர்க் கட்சியாக விளங்கி, அமைச்சரவையின் எதேச்சாதிகாரப் போக்கினைக் கட்டுப்படுத்த முயன்றனர். இத்தகைய போட்டிகளுக்கிடையே ஜப்பானில் மக்களாட்சி முறை வளரத் தொடங்கியது. இவ்வாறு ஜப்பானில் மக்களாட்சி மலர்வதைப் பழமை விரும்பிகளும், ஏகாதிபத்தியவாதிகளும், வேளாளர் குடும்பங்களும் விரும்பவில்லை. இத்தகையோர் ஒன்றுகூடி மக்களாட்சி முறைகளுக்கெதிராகக் கலகங்கள் செய்தனர்.

### ஜப்பானில் அரசியல் கட்சிகளின் தோற்றம்

ஜப்பானில் முதன் முதலாக அரசியல் கட்சி 1881-ல் இதகாகி பிரபுவால் (Count Itagaki) ஏற்படுத்தப்பட்டது. 'லிபரல் கட்சி' (Jiyu-To—Liberal Party) என்றழைக்கப்பட்ட இக் கட்சி பின்னர் 'சையுகை' (Seiyukai) என்று பெயர் பெற்றது. இக் கட்சி முன்னர் நிலமானியமுறை சிறப்புப் பெற்றிருந்த பகுதிகளில் செல்வாக்குப் பெற்றது. மற்றோர் அரசியல் கட்சி 1882-ல் ஒகுமா பிரபு (Count Okuma) என்பவரால் தோற்றுவிக்கப்பட்ட 'முன்னேற்றக்கட்சி' யாகும் (Kaishin To— Progressive Party). இக் கட்சி நகரங்களில் செல்வாக்குப்பெற்றது. 'மக்களாட்சி முறைப்படி ஏற்படுத்தப்பட்ட அரசியலமைப்பின்படி நடந்த முதல் பொதுத்தேர்தலின்போது (1890) பத்து அரசியல் பிரிவுகள் போட்டியிட்டன. இவைகள் பின்னர் நான்கு அரசியல் கட்சிகளாக இணைந்தன. ஜப்பானிய அரசியலமைப்பின்படி மக்கள் சபைக்கு (Diet) (மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் பல்வேறு கட்சிகளைச் சார்ந்தவர்கள்) மிகக்குறைந்த அதிகாரமே கொடுக்கப்பட்டிருந்தது. இந்த மக்கள் சபை (அ) கீழ்ச் சபைக்கு பணவதிகாரமோ, அமைச்சரவையைக் கட்டுப்படுத்துகின்ற அதிகாரமோ கொடுக்கப்படவில்லை. தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களவைக்கும் நியமிக்கப்பட்ட மேலவைக்கும் சமமான நிதியதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருந்தன. இதற்கும் மேலாக, 'மூத்தோர் அவை' யும் (Genro) இருந்தது. கீழவைக்கிருந்த நிதியதிகாரங்களைக் கொண்டு நிதிச்சிக்கல்களில் காலம் தாழ்த்த முடியுமே தவிர அமைச்சரவையைப் பணியவைக்க முடியாது. மேலும், அமைச்சரவையிலும் போர் அமைச்சர்கள் அமைச்சரவைக் கட்டுப்பாடுகளுக்கு அப்பாற்பட்டவர்களாய் இருந்தனர். போர் அமைச்சர்கள் நேரடியாகப் பேரரசரைச் சந்தித்துக் கொள்கை விளக்கம் பெறவும் அனுமதிக்கப்பட்டிருந்தனர். இதனால் மேலைநாடுகளிலிருந்த அமைச்சரவைக் கட்டுப்பாடுகளுக்கு ஜப்பானிய அரசியலமைப்பில் இடமில்லாது போயிற்று.

ஜப்பானில் தோன்றிய அரசியல் கட்சிகளும் வலுவான அடிப் படைக் கொள்கைகளற்று இருந்தன. நிரந்தரமான கட்சிக் கொள்கைகள் இருந்ததோடு, கட்சிக்கட்டுப்பாடுகளும், தலைமைக்குப் பணிந்து செயல்படுகின்ற தன்மையும், அனைவரையும் அரவணைத்து, ஆக்கபூர்வமான கொள்கைகளை உருவாக்கிக் கொடுத்து வழிநடத்திச் செல்கின்ற சுயநலமற்ற திறமையான கட்சித்தலைவர்களும் ஜப்பானில் இல்லாதிருந்தது பெருங்குறை யாகும். 1918-க்குப் பின்னர் கட்சிகளின் கூட்டு அமைச்சரவைகள் ஏற்பட்டன. ஒத்தகொள்கைகளின் அடிப்படையிலோ, அரசின் எதேச்சாதிகாரப் போக்கினைத் தடுத்து, மக்களுக்கு நன்மை புரியும் அடிப்படையிலோ இக் கட்சிகள் இணைந்து பணியாற்ற முன்வர வில்லை. ஒவ்வொரு கட்சியும் தங்களுக்கு எத்தனை மந்திரி பதவிகள் கொடுக்கப்படும் என்பதிலும், இதனால் தங்கள் கட்சி எந்த அளவுக்கு உயர முடியும் என்பதிலும் கண்ணும் கருத்துமாக இருந்தனரே தவிர அரசின் குறைபாடுகளைக் களைந்து, மக்களைத் தங்கள்பால் ஈர்க்கும் பணியில் ஈடுபடவில்லை. இதனால் மக்களும் அரசியல் கட்சிகளைப் பற்றி அவ்வளவாக அக்கறை கொள்ளா திருந்ததில் வியப்பேதுமில்லை.

இவ்வாறு மக்களின் பேராதரவைப் பெற முடியாத அரசியல் கட்சிகள் சுயநலக்குழுக்களின் கைப்பாவையாக மாறின. அதிகார வெறிகொண்ட பிரபுத்துவ குடும்பத்தினரும், பரம்பரையாக அரசியலில் செல்வாக்குப் பெற்றிருந்தோரும், சிறப்பாக இராணுவத் தளபதிகளும் இவ்வரசியல் கட்சிகளைப் பயன்படுத்தித் தங்களது பொருளாதார வளர்ச்சியை மேலும் பெருக்கிக்கொள்ள விழைந்த 'சைபாத்சுகளும்' (Zaibatsu) ஜப்பானியத் தொழில் வர்த்தகத்துறைகளை கட்டுப்படுத்தியிருந்த மித்சு, மித்சுபிஷி, சுனிதாமோ, யசுதா (Mitsu, Mitsubishi, Sunitamo, Yasuda) போன்ற இருபதுக்கும் மேற்பட்ட மேம்பாடடைந்த செல்வக் குடும் பங்கள் ஜப்பானிய அரசியல் கட்சிகளைத் தங்களது கைப்பாவை யாக்கிக் கொண்டு, தங்களது நலத்திற்காகப் பயன்படுத்த முனைந் தனர். இவ்வாறு மக்களைக் கவரமுடியாத அரசியல் கட்சிகள் சில தன்னலக் குழுக்களின் செல்வாக்கிற்குட்பட்டு மதிப்பிழந்தன. இதனால்தான் படையினர், ஜப்பானிய அரசின் ஆரம்ப நிலையில் அமைச்சரவைகளுக்குக் கட்டுப்படாத வகையில் பேரரசரிடம் நேரடித் தொடர்பு கொண்டு, நாட்டின் வெளியுறவுக் கொள் கைகளை உருவாக்கிச் செயல்படுத்தும் வல்லமை பெற்றிருந்தனர். (1904-05-ல் ருஷியாவுடன் போர், 1915-ல் இருபத்தொரு கோரிக்கைகளைச் சீனாவிடம் வற்புறுத்தியது, ஷாண்டுங் மாநிலத்தில் ஜப்பானியராதிக்கம், சைபீரியாவில் ஜப்பானியராதிக்கம்,-இவை

யனைத்தும் படையினர் தங்கள் விருப்பின்படி அரசு கொள்கைகளை உருவாக்கிச் செயல்படுத்தியமைக்கு ஒருசில எடுத்துக்காட்டுகளாகும்.) முதல் உலகப் போரில் ஜெர்மானியப் படையாதிக்கக் கொள்கையை மேலைநாட்டு மக்களாட்சி அரசுகள் அழித்ததன் காரணமாக ஜப்பானிலும் படையினரின் செல்வாக்கு ஓரளவுக்குக் குறைந்தது எனலாம்.

*1918*-ல் ஏற்பட்ட கலகத்தின் காரணமாக, அதுவரை ஆட்சிப் பொறுப்பேற்றிருந்த தளபதி தெராவுச்சியின் (General Terauchi) அமைச்சரவை கவிழ்ந்தது. 'மாபெரும் சாமானியர்' (The Great Commoner) என ஜப்பானிய வரலாற்றில் புகழ்பெற்றிருந்த ஹரா தக்காஷி (Hara Takashi) தலைமையமைச்சராகப் பணியேற்று சையுகை (Seiyukai) கட்சியின் ஆட்சியைத் துவக்கினர். இவர் காலம் தொட்டு *1931*-ல் ஏற்பட்ட படைக்கலகம் வரை கட்சிகள்-கட்சிச்சார்பற்ற பன்னிரண்டு அமைச்சரவைகள் ஒன்றன் பின் ஒன்றாகப் பதவியேற்றன. இருப்பினும் மக்களாட்சி முறையின் அடிப்படைத் தத்துவமான கட்சி ஆட்சி முறை ஜப்பானில் வேரூன்ற முடியவில்லை. கட்சியினரிடையே அளவு கடந்த ஊழல், பதவி வேட்கை, பதவிக்காகத் தங்கள் கொள்கைகளையும் கைவிடுகின்ற தரங்கெட்ட தன்மை, ஆகியவற்றால் மக்களின் ஆதரவை அடியோடு இழந்து, பின்னர் சுயநலமிகளான அதிகாரவருக்கம், பிரபுக்கள், படையினர், ஆகியவர்களின் தயவை நாடி, தங்கள் மதிப்பை இழந்தனர். 'மக்களாட்சி' என்ற பெயரால் அரசியல் கட்சிகள் சைபாத்சு (Zaibatsu) போன்ற வர்த்தகக் குடும்பங்களின் கையாளாகிச் சுரண்டலையும் தன்னலத்தையுமே வளர்த்துக் கொள்கின்றன என்றும், எத்தகைய அரசியல் கட்சிக்கும் உண்மையான தேசிய உணர்வோ, தன்னலமற்றுப் பொதுநலத்திற்குப் பாடு படும் மனப்பாங்கோ இல்லையென ஜப்பானியர் உணர்ந்து கொண்டனர். எத்தகைய அரசியல் கட்சியும் சைபாத்சு செல்வக் குடும்பங்களின் ஆதரவாலேயே பதவிக்கு வருவதால் அவர்களால் உருவாக்கப்படும் திட்டங்களும், சட்டங்களும் செல்வக்குடும்பங்களின் வளர்ச்சிக்குப் பயன்பட்டனவே தவிர பாமர மக்களின் நன்மைக்குப் பயன்படவில்லை என மக்களனைவரும் ஒருமனதாக நம்பினர். அதே நேரத்தில் இச் செல்வக் குடும்பங்கள்தான் ஜப்பானின் பொருளாதாரச் சீர்கேடுகளுக்கே காரணம் எனப் படைத்தலைவர்களும் குறைகூறினர்.

### படையினரின் எழுச்சி

*1931*ஆம் ஆண்டுவரை ஜப்பானிய அரசியலில் அரசியல்கட்சிகள் செல்வாக்குப் பெற்று ஆண்டனர் என்பதைக் கண்டோம்.

அவ்வரசியல் கட்சிகள் சைபாத்சு செல்வக் குடும்பங்களின் கைப் பாவையாக மாறிய பிறகு ஏற்பட்ட சீர்கேடுகளையும் குறிப்பிட் டோம். இவ்வாருகப் பெருகிவரும் ஜப்பானின் செல்வத்தை ஒரு சில செல்வம் கொழிக்கும் குடும்பங்களே அனுபவிக்கவும், அவர் களுக்குச் சாதகமான வணிகச் சட்டங்களை இயற்றியும், தங்கக் கட்டுப்பாடுகளை நீக்கியும், நில உச்சவரம்புச் சட்டத்தைச் செயல் படுத்தாமலும், நாட்டின் தொழில்கள், வைப்பகங்கள், போக்கு வரத்து நிறுவனங்கள் ஆகிய அனைத்தையும் அவர்களின் ஆதிக்கத் திற்கேவிட்டு, நாட்டின் பொருளாதாரத்தையே ஒருசில குடும்பங் களின் செல்வாக்கிற்குட்படுத்திய அரசியல் கட்சிகளை, மக்களும், சிறப்பாகப் படையினரும் வெறுக்கலாயினர். அமைச்சரவையின் கட்டுப்பாட்டை மீறி, அமைச்சரவையைக் கேளாமலே மஞ்சூரி யாவை ஜப்பானியப் படைகள் கைப்பற்றியதால், பெருகிவரும் மக்கள் தொகைக்கு மஞ்சூரியா புகலிடமாய் அமைந்தது. இத்தகைய மாபெரும் நன்மையினைத் தேடித்தந்த படையினரை மக்கள் பெரிதும் போற்றினர். 1932-ல் நடந்த கலகத்தின் போது படையினருடன் பொதுமக்களும் இணைந்து தலைமை யமைச்சரை கொலை செய்தனர். கட்சி அலுவலகங்களும், காவல் துறை தலைமையகமும், வங்கிகளும் சூறையாடப்பட்டுத் தீக்கிரை யாயின. இக் கலகத்திற்குக் காரணமானவர்கள்மீது தொடுக்கப் பட்ட வழக்கின்போதுதான் ஜப்பானின் சீர்கேடுகளுக்கு சைபாத்சு குடும்பங்களும், அரசியல் கட்சிகளும் எந்த அளவுக்குக் காரணம் என்பதை மக்கள் தெளிவாக உணர்ந்தனர். இந் நிகழ்ச்சிக்குக் காரணமாயிருந்த படையினரின் தேசிய உணர்வும், நாட்டுப் பற்றும் மக்களைப் பெரிதும் கவர்ந்தன. எனவே ஜப்பானின் சீர்கேடுகளை நீக்கி, அரசியல் கட்சிகள், சைபாத்சு செல்வக் குடும் பங்களின் செல்வாக்கு இவைகளை ஒடுக்கி, ஜப்பானை உய்விக்கும் சக்தி இராணுவத்தைத் தவிர வேறொன்றில்லை என ஜப்பானிய மக்கள் உறுதியாக நம்பினர். படையினருடன் ஜப்பானிய வேளாளரும் இணைந்து செயல்பட முன்வந்தனர்.

### புதிய ஜப்பானியம் (The New Japanism)

ஜப்பானில் தீவிர தேசியவாதிகள் தோன்றி, பேரரசரின் பழம் பெருமைகளை நினைவு கூர்ந்து பேரரசு வழிச் செல்வதே ஜப்பானின் மேன்மைக்குகந்த வழி என்பதை நாடெங்கும் பரப் பினர். எளிய குடும்பத்தில் பிறந்து, சொந்த முயற்சியால் படைத் தலைமைப் பதவிக்கு உயர்ந்து, இராணுவ மந்திரியாகப் பொறுப் பேற்றிருந்த தளபதி அராகி சாதவ் (General Araki Sadav) என்பவர்தாம் இக் கொள்கையின் தந்தை. ஜப்பான் வல்லரசாகத் திகழ வேண்டுமானுல் அதற்கொரு சரியான தலைமையும், தன்னலம்

கருதா நாட்டுப்பற்றும் தேவை. அத் தலைமை பாரம்பரியமாக இருந்து வருகின்ற பேரரசரின் கையிலேயே இருப்பதுதான் உகந்தது என்ற கருத்தையும் வலியுறுத்தினர் (Kodo—Imperial Way). மேலை நாடுகளின் படையாதிக்கத்திலும், புதுமைக் கருத்துச் சூழலில் சிக்கித் தவித்து, இடறிவிழுகின்ற நிலையிலிருக்கும் கிழக்காசிய நாடுகளைக் காக்கும் பொறுப்பு ஜப்பானுக்குத்தான் இறைவனாலேயே அளிக்கப் பட்டிருக்கிறதென்றும், அத்தகைய பொறுப்பை நிறைவேற்ற ஜப்பானிய தெய்விகப் பேரரசின் தலைமையில் செயல்பட வேண்டுமென்றும் வற்புறுத்தினர்.

இதுபோன்ற கருத்துகளைப் பரப்ப ஏராளமான இயக்கங்கள் ஜப்பானில் தோன்றி வளர்ந்தன. இத்தகைய இயக்கம் ஒன்றின் தலைவராய் இருந்தவர் கிதா இக்கி (Kita Ikki) என்ற படைத் தலைவராவர். ஜப்பான் தன் உழைப்பையே மூலதனமாகக் கொண்டு வேளாண்மைப் புரட்சியிலும், தொழிற்புரட்சியிலும் வெற்றி கண்ட நாடு. இப் புரட்சிகளின் பயனை ஸைபாத்சு போன்ற ஒருசில வணிகக் குடும்பங்களே கட்டுப்படுத்துமானால் முதலாளித்துவம் ஜப்பானில் நுழையும். முதலாளித்துவம் வளருமேயானால், உழைப்பாளர்களிடையே தீவிர பொதுவுடைமைக் கொள்கை வேரூன்றி வளர்ந்துவிடும் என்பதை கிதா இக்கி விளக்கினர். இவரும் இவரைப் போன்று பலரும், இது போன்ற கருத்துகளை மக்களிடையே பரப்பி, ஜப்பானிய தேசியத்தின் இன்றியமையாத் தன்மையை அறிவுறுத்தினர். ஜப்பானிய தேசியம் வளரவும், ஜப்பானின் பெருமை உலகெங்கும் பரவவும், மீண்டும் பேரரசரின் தலைமையில் படையினர் ஆதிக்கம் பெறவேண்டும் எனவும் வலியுறுத்தினர். இந்த விதமான இயக்கங்களில் இளம் படையதிகாரிகள் பெருமளவில் பங்கேற்றனர். இவர்கள் தீவிர தேசியவாதிகள் (Ultra Nationalists) என அழைக்கப்பட்டனர். இவர்களின் முக்கிய நோக்கம் ஜப்பானின் ஆதிக்கத்தை அயல்நாடுகளில் பரப்புவதும், முதலாளிகளை ஒழிப்பதும், மேற்கத்திய வல்லரசுகளை ஒடுக்குவதும், சமநிலைச் சமுதாயத்தை தேசிய அடிப்படையில் அமைப்பதுமாகும். இத்தகைய இயக்கத்தோரை தீவிரப் பொதுவுடைமையாளர்கள் என்றோ, அல்லது பாசிசவாதிகள் என்றோ கூறிவிட முடியாது.

ஜப்பானியப் படையினர் மஞ்சூரியாவைக் கைப்பற்றி, அதனைத் தங்கள் தளமாகக் கொண்டு தங்களின் ஆதிக்கத்தை ஆசியா முழுவதும் பரப்பத் திட்டமிட்டனர். இத்தகைய தங்களது திட்டங்களுக்கு ஜப்பானிய அமைச்சரவையும், ஸைபாத்சுக் குடும்பங்களும் இடையூறாய் இருப்பதைப் படையினர்

உணர்ந்து அவைகளை அழிக்க முயன்றனர். அவர்களுக்குச் சாதக மாக 1932லிருந்து 1936 வரையில் ஜப்பானில் அமைச்சரவையை அமைக்கும் வலுவான அரசியல் கட்சிகள் இருக்கவில்லை. இச் சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொண்டு படையினர் அமைச்சர வையைக் கைப்பற்ற முனைந்தனர். இதற்கு முன்பாக தங்களுக் குள்ளே இருக்கும் வேறுபாடுகளைக் களைய முற்பட்டனர். படை யினர் இளமதிகாரிகள், முதிய அதிகாரிகள் என இரண்டாகப் பிரிந்து செயல்பட்டனர். இளமதிகாரிகள் அரசியல் கட்சிகளையும், அவர்களுக்கு ஆதரவாகவும் சக்தியாகவும் விளங்கிய சைபாத்சுகளையும் வன்முறையில் அழிக்கத் திட்டமிட்டனர். முதிய அதிகாரிகள் வன்முறையைக் கைவிட்டு, அமைதியான முறையி லேயே அவர்களை அழிக்க முயன்றனர். பேரரசருக்கும் மக்களுக்கும் வெறுப்பளிக்காமல், அரசியல் மாற்றத்தை ஏற்படுத்த வேண்டு மென்பது மூத்தோர்களின் கொள்கையாகும். தங்களிடையே இத்தகைய் வேறுபாடுகள் கொள்கையளவில் இல்லை. ஆனல், அதனைச் செயல்படுத்தும் முறையில்தான் காணப்படுகின்றன என்பதையுணர்ந்த இரு சாராரும் வேறுபாடுகளைக் களைந்து இணைந்து செயல்பட்டனர். ஆட்சியையும் கைப்பற்றினர்.

மேஜி புரட்சியின் காலத்திலிருந்தே ஜப்பானிய அரசியலில் படையினர் சிறப்பான நிலையில் இருந்து வந்திருக்கின்றனர். மேஜிப் புரட்சிக்குப் பின்னர் ஆட்சிப் பொறுப்பேற்ற ஜப்பானியத் தலைவர்கள், ஜப்பானின் வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும் வழி வகுத்தனர். அரசியல் கட்சிகளும் தோன்றி வளர்ந்து வலிமை பெற்றன. சைபாத்சுக் குடும்பங்களும் அரசியல் கட்சிகளுடன் இணைந்து வளர்ந்தன. முதல் உலகப் போருக்குப் பின்னர் ஏற் பட்ட பொருளாதார மந்தம், வெளியுறவுச் சிக்கல்கள், ஆகிய வற்றின்போது ஜப்பானிய அரசு அவ்வளவு சிறப்பாகச் செயல் படவில்லை என்பதையும் முன்னரே கண்டோம். இதனல் உள் நாட்டில் கலகங்களும் குழப்பங்களும் தோன்றின. இதற்கிடையில் அரசியல் கட்சிகளும் திறமை குறைந்து காணப்பட்டன. சுரண்டு வோர், தன்னலமிகள், திறமையற்ருேர், பதவிவெறிபிடித்தோர் கட்சிகளில் சிறப்பிடத்தைப் பெற்று வளர்ந்தனர். சைபாத்சுக் குடும்பங்கள் உன்னத நிலையடைந்தன.

1930ஆம் ஆண்டிற்குப் பின்னர் புதிய சிக்கல்கள் தோன்றின. படையினர் அமைச்சரவையின் அனுமதியின்றி மஞ்சூரியாவைப் பிடித்தனர். ஜப்பானியத் தலைமை அமைச்சர் இனுகாய் கொலை யுண்டார். பயங்கரக் கலவரங்கள் தோன்றி நாட்டைக் குழப்பத்தி லாழ்த்தின. மஞ்சூரிய விவகாரத்தில் பன்னட்டுக் கழகம்

தலையிட்டு, ஜப்பானைக் கண்டிக்க முயன்றபோது ஜப்பான் பன்னாட்டுக் கழகத்தைவிட்டே வெளியேறியது. இதனால் ஜப்பானிய அயலக உறவுக் கொள்கையில் புதிய சிக்கல்கள் தோன்றின. இக் குழப்பங்களைப் படையினர் தங்களுக்குச் சாதகமாக்கிக் கொண்டனர்.

படையினரிடையே இருந்த பிரிவைப்பற்றி முன்னரே குறிப்பிடப்பட்டுள்ளது. இந் நிலையில் 1936-ல் பொதுத் தேர்தல்கள் நடந்து முடிவுகள் அறிவிக்கப்பட்டன. மிதவாதிகளின் கட்சியான மின்சிதோ (Minseito) கட்சி பெரும்பான்மை பெற்றது. தேர்தல் முடிவு அறிவித்த நான்காம் நாள் (Feb. 26, 1936) தோக்கியோவில் பெருங்கலகம் ஒன்றைப் படையினர் ஏற்படுத்தினர். கட்சித் தலைவர்கள், அமைச்சர்கள், பெரிய அதிகாரிகள் பலர் கொல்லப் பட்டனர். அலுவலகங்கள் கொளுத்தப்பட்டன. தலைமையமைச்சரே தெய்வாதீனமாக உயிர் தப்பினார். இருப்பினும் கலகம் அடக்கப்பட்டது. தீவிரவாதிகளின் இக் கலகம் அவர்களுடைய உண்மையான நோக்கத்தை வெளிப்படுத்தியது. படையினரின் அரசியல் செல்வாக்கு மேலும் வளர்ந்தது.

இதன் பின்னர் ஹிரோதாவின் (Hirota) தலைமையில் ஏற்படுத்தப்பட்ட அமைச்சரவை படையினரின் கோரிக்கைகள் அனைத்தையும் ஏற்றுக்கொண்டது. படையினர் மிகுந்த செல்வாக்குப் பெற்றனர். படைச் செலவு பன்மடங்கு உயர்ந்தது. ஆயுதங்கள் ஏராளமாகச் செய்து குவிக்கப்பட்டன. இதன் பின்னர் அரசு இராணுவ அரசாகவே மாறியது எனலாம். பன்னாட்டுக் கழகத்திலிருந்து வெளியேறிய ஜப்பான், அமெரிக்கா, பிரிட்டன் போன்ற நாடுகளின் எதிர்ப்பையும், பகையையும் தேடிக்கொண்டது. ஐரோப்பிய நாடுகளால் 'ஆதிக்க வெறி கொண்ட நாடு' என ஒதுக்கித் தனித்துவிடப்பட்ட ஜப்பான் நாசிச ஜெர்மனியுடன் 'பொதுவுடைமை எதிர்ப்பு ஒப்பந்தம்' (Anti-Comintern Pact) ஒன்றைச் செய்துகொண்டதன் மூலம் ஐரோப்பிய நாடு ஒன்றின் நட்பைப் பெற்றது. மேற்கத்திய எதேச்சாதிகாரத்தின் மொத்த உருவமான ஜெர்மனியுடன் செய்துகொண்ட நட்பு உடன்படிக்கையில் பின்னர் பாசிச இத்தாலியும் சேர்ந்து கொண்டதால் ரோம்-பெர்லின்-தோக்கியோ கூட்டணி உருவாயிற்று. ஜப்பானில் ஏற்பட்ட இராணுவ ஆதிக்கத்தின் விளைவாக ஜப்பான் அழிவுப் பாதையில் வேகமாக அடியெடுத்து வைத்தது. இதுவரை அரசியல் கட்சிகளை நம்பியிருந்த ஜப்பானியச் செல்வக் குடும்பங்களும், தன்னிலை உணர்ந்து, இராணுவ ஆட்சியை ஆதரித்துப் பயனடைந்தன. உள்நாட்டில் இராணுவ ஆட்சிக்கிருந்த தடைகள் முழுவதும் நீங்கின,

மேலைநாட்டுப் பாணியில் இராணுவ ஏகாதிபத்தியத்தை ஜப்பான் தொடங்கியது எனினும், ஐரோப்பிய ஏகாதிபத்தியத் திற்கும் ஜப்பானிய ஏகாதிபத்தியத்திற்கும் வேறுபாடுகள் இருக்கவே செய்தது. ஜெர்மனியில் தலைமையேற்ற ஹிட்லரைப் போலவோ (Fuhrer) அல்லது இத்தாலியில் தலைமையேற்ற முசோ லினியைப் போலவோ (Duce) ஜப்பானில் தனிப்பட்ட தலைவர் உருவாகாமல், பேரரசரின் தலைமையிலேயே மீண்டும் இராணுவ ஆட்சி ஏற்பட்டது. ஜப்பானின் தனித் தன்மையையும், பேரரச ரின்பால் ஜப்பானியர் கொண்டிருந்த அழிக்க முடியாத பக்தியை யும், ஜப்பானிய இரத்தத்தில் ஊறிப்போன பாரம்பரிய கொள்கைப் பிடிப்பினையும் எடுத்துக்காட்டுகின்றது.

## ஜப்பானிய அமைச்சரவை 1918-1931

**அரசியல் கட்சிகள்**

| | | | |
|---|---|---|---|
| 1. | 1918-1921. | ஹரா தகாஷ் | ... சையுகாய் கட்சி. |
| 2. | 1921. | தக ஹாஷி கொரிக்யூ பிரபு | ... சையுகாய் கட்சி. |
| 3. | 1922. | தளபதி கதோ தமோசாபுரோ | ... கட்சியற்ற அரசு. |
| 4. | 1923. | தளபதி யமமோதா கோம்பி | ... ,, |
| 5. | 1924. | கியூரா கீகோ பிரபு | ... ,, (பிரபுக்கள் அவை) |
| 6. | 1924. | கதோ தகாகி | ... கென்சிகாய் கட்சி. |
| 7. | 1925. | கதோ தகாகி | ... ,, |
| 8. | 1926. | வகாத் சுகி ரிஜிரோ | ... ,, |
| 9. | 1927. | தளபதி தனகா கிய்ஜி | ... சையுகாய் கட்சி. |
| 10. | 1929. | ஹமாகுச்சி ஓசாசி | ... மின்சிதோ கட்சி. |
| 11. | 1931. | வகாத்சுகி ரிஜிரோ | ... மின்சிதோ கட்சி. |
| 12. | 1931. | இனுகை சுயோஷி | ... சையுகாய் கட்சி. |

## இராணுவ ஆட்சியில் அமைச்சரவைகள் 1932–1944

1. *1932-1934.* தளபதி சைதோ—Admiral Viscount Siato Mokoto.
2. *1934-1936.* தளபதி ஒகாதா கைசுகே—Admiral Okada Kaisuke.
3. *1936-1937.* ஹிரோதா—Hirota Koki.
4. *1937.* தளபதி ஹயாஷி—Gen. Hayashi Sanfuro.
5. *1937-1939.* கோனோயி—Prince Konoye Fumimaro.
6. *1939.* ஹிரானுமா—Hiranuma Kiichiro.
7. *1940.* யோனை மித்சுமாசா—Admiral Yonai Mitsumasa.
8. *1940-41.* கோனோயி—Prince Konoye Fumimaro.
9. *1941-1944.* தளபதி தோஜோ—General Tojo Hideki.

## இயல் ஐந்து

# 1. சீனாவில் சியாங்-கே-ஷேக்கின் தலைமையில் கோமிண்டாங்கின் ஆட்சி

1928ஆம் ஆண்டு வரையில் சீனாவில் எழுந்த போராட்டங்களையும், போர்ப்பிரபுக்கள் சீனாவின் பல பாகங்களில் தங்களின் ஆதிக்கத்தை நிறுவி, ஒருவரோடுவர் போரிட்டுக்கொண்டு, பொருளாதர வளர்ச்சியை நசுக்கியிருந்த நிலையையும், சியாங்-கே-ஷேக்கின் தலைமையிலான் கோமிண்டாங் படையினர் காண்டன் நகரிலிருந்து தொடங்கி, படிப்படியாகப் போர்ப் பிரபுக்களின் கொட்டங்களையடக்கி, ஒரு சிலரைத் தங்களின் நண்பர்களாக மாற்றியும், பீகிங் நகரை வென்று, சீனா முழுவதையும் படை வலிமையால் ஒருங்கிணைத்த தன்மையையும் முன்பே கண்டோம். ஆட்சியின் தலைநகர் பீகிங் நகரிலிருந்து நாங்கிங்கிற்கு மாற்றப் பட்டது. மஞ்சூரியா உட்பட சீனப் பகுதிகள் அனைத்தும் ஒரு கட்சி ஆட்சியினுள் ஒடுக்கப்பட்டன. டாக்டர் சுன்யாட்சனின் முதல் குறிக்கோள் இதனால் வெற்றியடைந்தது. சீனாவில் தேசிய உணர்ச்சி பொங்கியெழுந்து, அந்நியர் ஆதிக்கத்திலிருந்தும், கட்டுப்பாடுகளிலிருந்தும் விடுபடுவதற்கான முதற்படியில் சீனா அடியெடுத்து வைத்தது.

இந் நிலையில் சீனாவின் அரசியல் நிலைகளை ஜப்பானின் அரசியல் நிலையோடு ஒத்து நோக்குவது, சீனாவின் நிலையைத் தெளிவாகப் புரிந்துகொள்ளப் பேருதவியாக இருக்கும். ஜப்பான் மேஜி புரட்சியின் விளைவாக மேற்கத்திய முறைகளைக் கையாண்டு, வல்லரசு நிலைக்கு உயர்ந்தது. அவ்வாறு வளர்ச்சியுற்றபோதும் ஜப்பானியப் பேரரசின் தெய்விகத் தன்மை மறுக்கப்படவில்லை. மாறாக, பேரரசனைச் சார்ந்து, அவர் கரங்களைப் பலப்படுத்தும் முறையில் ஜப்பானில் மாற்றங்கள் வேண்டப்பட்டன. ஆனால், சீனாவில்

ஏற்பட்ட புரட்சியின்போர்து, இரண்டு நூற்றுண்டுக்கும் மேலாக ஆட்சி புரிந்துவந்த மஞ்சு அரசு வமிசம் ஒழிக்கப்பட்டது. ஜப்பானிய பழமைத்தத்துவமான ஷிண்தோ மதமும், பழமை ஜப்பானியப் பண்புகளும் முழுவதும் அழிக்கப்படாமல், புதிய வடிவம் பெற்றன; புதிய விளக்கங்களும் ஆக்கமும் பெற்றுச் சிறந்தன. மேற்கத்திய அரசியல் கோட்பாடுகளை, கல்வி, பண்பாட்டு முறைகளை, தொழில், வர்த்தக, படை முன்னேற்றங்களை ஏற்றுக்கொண்ட ஜப்பான், தன் தனிச் சிறப்புத் தன்மை அழியாமல், அவைகளைத் தனது சூழ்நிலைகளுக்கு ஏற்ப மாற்றியமைத்துப் பயன் பெறும் திறமைப் பெற்றிருந்தது. ஜப்பானியத் தலைவர்களும், உள்நாட்டு எதிர்ப்பைச் சிறுகச்சிறுக ஒழித்து, எதிர்ப்பாளர்களையும் முன்னேற்றத்திற்கு உதவும் சக்திகளாக மாற்றிப் பெருமை பெற்றனர். மேலும், ஜப்பான் பரப்பளவில் சீனுவைக் காட்டிலும் பன்மடங்கு சிறிய நாடு; மக்கள் தொகையும் குறைவு. மக்களினப் பிரிவுகளும் இல்லை. என்வே, திறமையான அரசியல் தலைமையில், ஒருமைப்பட்டு நின்ற ஜப்பான், தேர்ந்தெடுத்து ஏற்றுக்கொள்கின்ற தனது வல்லமையால் மேற்கத்தியக் கருத்துகளுக்கு மாற்றங்கள் ஏற்படுத்தி ஏற்றுப் பயன்பெற்றது. நாட்டுப் பற்று மீதூரப்பெற்ற ஜப்பானியர் உழைப்பிலும் சிறந்து விளங்கினர். இதனடிப்படையில் சீனுவை நோக்கும்போது, நேர்மாருன நிலைமைகளைக் காணமுடியும். சீனுவில் ஏற்பட்ட புரட்சியினுல் (1911) இரு நூற்றுண்டுகளுக்கும் மேலாக ஆட்சி புரிந்த அரச வமிசம் (மஞ்சுக்கள்) ஒழிக்கப்பட்டது. இதுகாறும், அரசியல் சமூகக் கொள்கைகளின் இருப்பிடமாக இருந்த கன்பூசியத் தத்துவங்கள் அடியோடு மறுக்கப்பட்டன. முற்றிலும் மறுக்கப்பட்ட. முற்றிலும் மாறுபட்ட, மக்களுக்குப் புரியாத, தலைவர்களுக்கும் கூடப் புதிராக இருந்த மேற்கத்திய அரசு முறைகள் புகுத்தப்பட்டன. இத் தத்துவங்களைப் புரிந்து ஏற்றுக்கொள்ளச் செய்கின்ற அளவுக்குத் திறமை படைத்த, சீனர்கள் அனைவரின் ஆதரவைப் பெற்ற தலைவர் யாரும் இல்லை. சீனப் பேரரசும் வலிமை பெற்றிருப்பதுபோல் தோன்றினுலும், மிகவும் பரந்துகிடந்த, பல இனங்களைச் சார்ந்த, மிகப் பெரிய மக்கள் தொகையைக் கொண்ட சீனு முழுவதையும் திறமையுடன் ஆட்சி புரிகின்ற வலிமையற்று இருந்தது. போர்ப்பிரபுக்கள், சுயநலமிகள், திறமையற்ற அதிகாரிகள், முறையற்ற பொருளாதாரக் கொள்கைகள், அந்நியர்களின் தலையீடு, அவர்களின் ஆதிக்கம் இவற்ருல் உறிஞ்சப்பட்டுச் செயலிழந்த நிலையில் நின்ற சீனுவில் ஒருமைப்பாட்டுணர்ச்சியோ, தேசிய எண்ணமோ, தோன்ருமலிருந்ததில் வியப்பேதுமில்லை. சீன மக்களில் 80%க்கும் மேலானவர்கள் எழுத்தறிவற்ற ஏழை விவசாயிகள். ஏனையவர்கள் நிலப்

பிரபுக்களும், பெரும் வணிகர்களும், சுரண்டி வாழும் சுயநலமிகளும் ஆவர். இந்நிலையில் தான் டாக்டர் சுன்யாட்சுன் சீனவின் விடிவெள்ளியாகத் தோன்றினர்.

சீனவை ஒருமைப்படுத்தி, ஆட்சி முறையில் மக்களுக்குப் பயிற்சியளித்து, குடியரசை நிறுவி, மக்கள் நல்வாழ்வுக்கான அரிய பல திட்டங்களைத் தீட்டி, நவீன சீனவாக உயர்த்துவது தான் டாக்டர் சுன்யாட்சனின் அடிப்படை நோக்கம் என்பதையும் முன்பே கண்டோம். முதல் உலகப் பெரும் போரின் பின்னர், ஜப்பானின் வலிமையை ஏற்றுக்கொண்ட ஐரோப்பிய நாடுகள் சீனவிற்குப் பேச்சளவில் ஆதரவு காட்டுவதுடன் நிறுத்திக் கொண்டன. ஆனல், தூரக்கிழக்கு நாடுகளில் ஜப்பானைப் போலவே ஆதிக்கம் பெற விரும்பிய, பொதுவுடைமைக் கொள்கைகளை ஏற்று, மற்ற நாடுகளின் நல்லெண்ணத்தை இழந்த ருஷியா மட்டும்தான் சீனவிற்கு உதவ முன்வந்தது. ருஷிய ஆலோசகர்களின் உதவியால்தான் சுன்யாட்சனின் கோமிண்டாங் கட்சி புதிய பொலிவைப் பெற்றது. சுன்யாட்சனின் மறைவுக்குப் பின்னர் தலைமையேற்ற சியாங்-கே-ஷேக், படைபலம் கொண்டு சீன முழுவதையும் வென்று ஒருங்கிணைக்க முயன்று, 1928-க்குள்ளாகச் சீன முழுவதையும் தன்னாதிக்கத்தில் இணைத்தார். எதிர்த்த போர்ப் பிரபுக்கள் அழிக்கப்பட்டனர். இணைய முன்வந்தவர்கள் அரவணைப்பைப் பெற்றுப் பயனடைந்தனர்.

இவ்வாறு, முதன்முறையாக ஒற்றுமையடைந்த சீனவை ஏராளமான புதுப் பிரச்சினைகள் நாற்புறமிருந்தும் தாக்கின. 1927-28-ல் கோமிண்டாங் கட்சியினர், சியாங்-கே-ஷேக்கின் தலைமையில் சீனவின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றனர். இவர்களை எதிர்நோக்கிய ஏராளமான பிரச்சினைகளைப் பொதுவாக மூன்ருகப் பிரிக்கலாம். முதலாவதாக, கோமிண்டாங்கின் தன்மை, அவர்கள் ஏற்படுத்திய அரசின் நோக்கங்கள், அதன் செயல்முறைகள். இரண்டாவதாக, கோமிண்டாங் அரசிற்குத் தோன்றிய உள்நாட்டு எதிர்ப்புகள். மூன்ருவதாக, சீனவின் இப் புதிய அரசின் வெளிநாட்டு எதிரிகள், சிறப்பாக ஜப்பான்.

**கோமிண்டாங் கட்சியின் தேசிய அரசு உறுதிப்படுதல்**

1928ஆம் ஆண்டில் சீனவின் போர்ப்பிரபுக்கள் அடக்கப்பட்டு, சீன முழுவதும் இணைக்கப்பட்டது. சியாங்-கே-ஷேக்கின் தலைமையில் நாங்கிங் நகரில் தேசிய அரசு நிறுவப்பட்டது. இவ்வரசின் தலைமைப் பொறுப்பை கோமிண்டாங் கட்சியின் 'மையச் செயற்குழு' (Central Executive Committee) ஏற்றுக் கொண்டது. இக் குழுவின் தலைவராக சியாங்-கே-ஷேக் நியமிக்கப்

பட்டார். இக் குழுவிற்கு உதவியாக மாநிலங்களின் பிரதிநிதிகள் அடங்கிய 'அனைத்து மாநிலக்குழுவும் (Central State Council) அமைக்கப்பட்டது. இந்த மைய ஆட்சிக் குழுதான் அரசையும், கட்சியையும் இணைத்துச் செயலாற்ற உதவியது. சட்டமியற்றுதல், நிர்வாகம், நீதி, தேர்வுகள், கட்டுப்பாட்டு முறைகள் ஆகிய இவ் வைந்து பணிகளும் இந்த மையக் குழுவிடமே இருக்கும். இதன டிப்படையில் மாநில அரசுகளை அமைக்கும் சட்டங்களும் 1928ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்களில் வெளியிடப்பட்டன. இம் மாநில அரசுகள் மைய அரசால் நியமிக்கப்பட்டு, மைய அரசின் முழுக் கட்டுப்பாட்டுக்குள் செய்லாற்றும். இதன்டிப்படையில் தூண்டன், ஹாங்கோ, பீகிங், முக்டன் போன்ற பல நகரங்களில் மாநில ஆட்சிக்குழுக்கள் ஏற்படுத்தப்பட்டன. இச்சட்டத்தைத்தான் 'அடிப்படைச் சட்டங்கள்' (Organic Law) எனக் குறிப்பிடுபவர். 1931-ல் முறையான அரசியல் சட்டம் உருவாக்கப்படுகின்ற வரையில், இச் சட்டம் செயல்பட்டு வந்தது.

1931ஆம் ஆண்டில் கட்சியின் பொதுக்குழுவில் உருவாக்கப் பட்ட அரசியல் சட்டமும், 1928-ல் ஏற்படுத்தப்பட்ட அடிப் படைச் சட்டத்தின் (Organic Law) மாதிரியிலேயே அமைந் திருந்தது. இருப்பினும், இவ்வரசியல் சட்டத்தின்படி, மையச் செயற்குழுத் தலைவருக்கு (Chariman of the Central Ex ecutive Committee) மிகுந்த அதிகாரம் வழங்கப்பட்டது. கோமிண்டாங் கட்சியின் கிளைகள் சீனவெங்கிலும் நிறுவப்பட்டன. மாநில அரசு களும், கட்சிக் கட்டுப்பாட்டிற்குள் செயல்பட்டன. முதலில், புதிய அரசியல் முறைகளை மக்களுக்கு உணர்த்தி, அவர்களைப் பயிற்று விக்கும் நோக்கத்தில்தான் கோமிண்டாங் கட்சியினரின் அரசியல் அமைப்பு இருந்தது. இந் நோக்கம் முழுவதும் செயல்படுத்துவதற் குள்ளாகப் பல்வேறு பிரச்சினைகள் தோன்றி, கோமிண்டாங் கட்சி யினருக்குத் தீராத தொல்லைகள் கொடுத்தன.

முதலாவதாகப் போர்ப் பிரபுக்கள் சியாங்கின் ஆட்சியை எதிர்த்தனர். 1928ஆம் ஆண்டிற்குள் போர்ப் பிரபுக்கள் தோற் கடிக்கப்பட்டுப் பணிந்தாலும், முழுவதும் அழிக்கப்படாத நிலையில், அரசுக்கு எதிரான செயல்களில் இறங்கினர். நாங்கிங்கைச் சுற்றியுள்ளப் பகுதிகளில் கோமிண்டாங் அரசின் செல்வாக்கு உயர்ந்திருந்தபோதிலும், ஏனைய பகுதிகளில் கடும் எதிர்ப்பு இருந்துகொண்டே இருந்தது. மக்கள் நல்வாழ்வுக்கான கோமிண் டாங்கின் திட்டங்களையும், அரசை உறுதிப் படுத்துவதற்கான ஏற்பாடுகளையும் இந்த எதிர்ப்புகள் தடுத்தன. இவர்களுடன் கம்யூனிஸ்டுகளின் தொல்லைகளும் பெருகியிருந்தன. இச் சக்திகளை ஒடுக்கும் பணியிலேயே கோமிண்டாங் அரசு தன் திறமை முழுவதை

யும் செலவிடவேண்டிய நிலைமையில் இருப்பினும், சியாங்-கே-ஷேக்கின் அரசு, பல சிறப்பான பணிகளைச் செய்து, புகழ் பெற்றது.

### பொருளாதாரக் கொள்கை

நிதித்துறைப் பணிகளில் கோமிண்டாங்கின் ஆட்சிச் சிறப்படைந்தது. நிதித்துறையின் பொறுப்பேற்றிருந்த T. V. சூங் (T. V. Soong) என்பாரின் திறமையால் நாட்டின் வரவு செலவுத் திட்டத்தில் இதுவரை ஏற்பட்டுவந்த பற்றுக்குறை தவிர்க்கப்பட்டது. தேசியக் கடன்கள் திருப்பிக் கொடுக்கப்பட்டன. வரி விதிப்பு முறைகள் மாற்றியமைக்கப்பட்டன. அரசின் செலவுகள் குறைக்கப்பட்டன. சுங்கவரி வசூலிக்கும் உரிமையைச் சீன அரசு அந்நியர்களிடமிருந்து திரும்பப் பெற்றுப் பயனடைந்தது. புதிய இருப்புப்பாதை, நெடுஞ்சாலைத் திட்டங்கள் உருவாக்கப்பட்டுச் செயல்படுத்தப்பட்டது. இதன் மூலம் நாடு முழுவதும் முறையான இரயில் நெடுஞ்சாலை வழிகளால் இணைக்கப்பட்டு, பொருளாதார வளர்ச்சிக்கு அடிப்படையாய் அமைந்தது. நாணயச் சீர்திருத்தம், கல்வியமைப்பு, பொதுச் சுகாதார அமைப்பு, அபினித் தடுப்பு, மற்றும் தேசியப் புனரமைப்புத் திட்டங்களைத் தீட்டி, நவீன சீனாவாக உருவாக்கும் முயற்சியில் சீன அரசு பன்னாட்டுக் கழகத்தின் உதவியை நாடியது. தொழிலாளர் நலன்களைக் காக்கும் பொருட்டு தொழிற்சங்கங்களை ஏற்படுத்தியது. தொழிலாளர் வேலை நேரம் 8 மணியாகக் குறைக்கப்பட்டது. நிதித்துறை சார்ந்த சீர்திருத்தங்கள் மேற்கொள்ளப்பட்டன. சட்டத் தொகுப்புகள் ஏற்படுத்தப்பட்டன. சிறைச்சாலைச் சீர்திருத்தங்களும் மேற்கொள்ளப்பட்டன.

### குறைபாடுகள்

இச் சீர்திருத்தங்கள் அனைத்துமே முதலாளித்துவ முறையில் அமைந்திருந்தன. ஏழை எளியவர்களின் துயர் துடைக்கப்படவில்லை. இக் குறைகள் பெரிதுபடுத்தப்பட்டு மக்களிடையே பரப்பப்பட்டன. சிறப்பாக, டாக்டர் சுன்யாட்சனின் மனைவியார் (Madame Sun-Yat-Sen) இக் கொள்கைகளைக் கடுமையாக எதிர்த்தார். தன் கணவர் குறிப்பிட்ட மக்கள் நல்வாழ்வுத் திட்டம் செயல்படுத்தப்படவில்லை என்றும், மாறாகப் பெரும் முதலாளிகள் வர்க்கத்திற்கு ஆக்கம் தரும் திட்டங்களே தீட்டப்பட்டிருக்கின்றன என்றும் கடுமையாகக் குறை கூறினார். அவரும், அவரோடிணைந்த பிறரும் புரட்சிகரமான மாறுதல்களை எதிர்பார்த்தனர். சமுதாயப் பொருளாதாரப் புரட்சியை எதிர்நோக்கியவர்களுக்கு, சியாங்கின் மிதமான சீர்திருத்தங்கள்

ஏமாற்றத்தையே அளித்தன. இவ் வெதிர்ப்புகள் கம்யூனிசக் கொள்கை வளர்வதற்கு ஏதுவாய் அமைந்தது.

சியாங்கின் உள்நாட்டுச் சீர்திருத்தங்களைப் பொதுவாக ஆராயும் பொழுது சீனப்புரட்சிக்குப் பின்னர் சீன மக்களிடையே எழுந்துள்ள புதிய ஆர்வம், முன்னேற்றம் காண விழைதல், மேற்கத்திய முறைகளைக் கையாண்டு வளரவேண்டும் என்ற புதிய வேகம், சமுதாய மாற்றங்களை எதிர்நோக்கியிருத்தல் போன்ற நிலைகள் விளங்கும். சியாங்கின் அரசு, தன் கடமைகளை உணர்ந்து, நாட்டு மக்களின் விழிப்புணர்ச்சியையும் கருத்தில் கொண்டுதான் புதிய பொருளாதாரத் திட்டங்களை வகுத்தது. ஆனுல், சீனுவின் வளர்ச்சி முதலாளித்துவக் கொள்கையின் அடிப்படையிலா அல்லது பொதுவுடைமைக் கோட்பாட்டின் அடிப்படையிலா என்பதுதான் 1933-ல் சீனுவில் தோன்றிய பெரும் கேள்விக் குறியாகும். 1949-ல் பொதுவுடைமைக் கட்சியினர் மா-சே-துங்கின் தலைமையில் சீனுவின் ஆட்சிப் பொறுப்பை ஏற்கின்ற வரையில் சியாங்-கே-ஷேக்கின் கோமிண்டாங் கட்சி சீனுவின் ஆட்சிப் பொறுப்பைப் பல இடர்ப்பாடுகளுக்கிடையேயும் வெற்றிகரமாக நிர்வகித்தது.

**இராணுவ வளர்ச்சி**

சியாங்கின் இராணுவக் கொள்கைகளை நோக்குமிடத்து, அவரது திறமைப் பளிச்சிடும். சீனுவில் அமைதிகாக்கவும் வெளிநாட்டுப் படையெடுப்புகளை, சிறப்பாக ஜப்பானின் ஆதிக்க வெறியையும், உள்நாட்டில் கம்யூனிஸ்டுகளினின்றும் கோமிண்டாங் ஆட்சியைக் காக்க உறுதி பூண்ட சியாங், தமது படைவலிமையைப் பெருக்க முனைந்தார். ஜெர்மன் இராணுவ நிபுணர்களின் உதவியால் படைச் சீர்திருத்தங்களைச் செய்தார். அதிகாரிகளுக்குப் பயிற்சியளிக்கக் கல்லூரி நிறுவப்பட்டது. படையினருக்குப் பயிற்சியளித்து, நவீன ஆயுதங்கள் வழங்கப்பட்டன. கப்பற்படையும், விமானப்படையும் புதிய முறையில் உருவாக்கப்பட்டு வளர்ச்சியடைந்தன. படைகளின் உதவியால் சீனுவை இணைத்து, முன்னேற்றப் பாதையில் செலுத்திய சியாங், அப் படைகளின் உதவியைக் கொண்டே சீனுவைக் காக்கவும் முனைந்தார்.

**கம்யூனிச எதிர்ப்பு இயக்கம்**

முதல் உலகப் போரின் முடிவில் சீனுவுக்கு ஆதரவளிக்க முன் வந்த ஒரே நாடு ருஷியா என்பதை முன்னரே கண்டோம். முதல் உலகப் போரின் ஆரம்பத்தில் ஜெர்மனியிடம் தோல்வியுற்ற ருஷியாவில் புரட்சி ஏற்பட்டது (1917). இப் புரட்சியின் விளைவாகப் பொதுவுடைமைக் கட்சி ஆட்சி ஏற்றது. இப் பொதுவுடைமைக்

கட்சியினர் உலகம் முழுவதும் பரவத் திட்டமிட்டனர். சுன்யாட்சன் ருஷிய அரசோடு தொடர்புகொண்டு, ருஷிய ஆலோசகர்களின் உதவியால் தம்முடைய கோமிண்டாங் கட்சியையே திருத்தியமைத்து உறுதிப்படுத்தினார் என்பதையும் முன்னரே குறிப்பிட்டோம். டாக்டர் சுன்யாட்சனின் மறைவுக்குப் பின்னர் தலைமைப் பொறுப்பேற்ற சியாங்-கே-ஷேக் பொதுவுடைமைக் கட்சியின் கட்டுப்பாடுகளையும், ஆதிக்கத்தையும் களைய முற்பட்டார். 1927-ல் பொதுவுடைமைக் கட்சி சீனாவில் தடைசெய்யப்பட்டது. இதன் பின்னர், பொதுவுடைமைக் கட்சியினர் கலகங்களின் மூலமாக அதிகாரம் பெற முயன்று தோற்றனர். இந்நிலையில்தான் சீனப் பொதுவுடைமைக் கட்சியின் தனிப் பெருந்தலைவராக மா-சே-துங் (Mao-Tse-Tung) தோன்றினார். சீனப் பொதுவுடைமைக் கட்சியின் தலைவராக மாவோவும், செம்படையின் தலைவராக சு-தே-(Chu-Teh) என்பவரும் பணியாற்றினர். இவர்கள் கியாங்சி-ஹூனன் மாநிலங்களுக்கு இடைப்பட்ட காட்டுப் பகுதிகளில் மறைந்து கொண்டு, செயல்படத் தொடங்கினர். 'கம்யூனிசம்' கோமிண்டாங் கட்சியின் எதிர்ப்பியக்கமாக வளர்ந்து சீன அரசியலில் மாபெரும் சக்தியாக உருவெடுத்தது.

கியாங்சி, ஹூனன் மாநிலங்களின் எல்லைக்காடுகளில் மறைந்து, மாவோவின் எழுச்சி மிகு தலைமையில் செயல்படத் தொடங்கிய பொதுவுடைமைக் கட்சியினருக்கு, ஆரம்ப நிலையில் தோல்விகள் பல ஏற்படினும், அயராது உழைத்துப் பொதுவுடைமைக் கருத்துகளைச் சீன விவசாயிகளிடையே பரப்பினர். 1933ஆம் ஆண்டிற்குள் கியாங்சி மாநிலத்தின் தென் கிழக்குப் பகுதியில் பொதுவுடைமை ஆட்சி நிறுவப்பட்டது. இப்பகுதிகள், 'சோவியத் குடியரசு' (Soviet Republic) என அழைக்கப்பட்டன. கியாங்சி—ஹூனன் மாநிலக் காடுகளைத் தலைமை இடமாகக் கொண்ட பொதுவுடைமைக் கட்சியினர் நில உரிமையற்ற ஏழை உழவரிடையே செல்வாக்குப் பெற்றனர். வரிச்சுமையினாலும், செல்வப் பிரபுக்களின் கொடுமைகளினாலும் பெருந்தொல்லைகளுக்குட்படுத்தப்பட்ட நிலமற்ற ஏழை விவசாயிக்குப் பொதுவுடைமைக் கருத்துகள் வரப்பிரசாதமாக அமைந்தன. உழவர் கழகங்கள் ஏற்படுத்தப்பட்டன. இக் கழக உறுப்பினர்களின் எண்ணிக்கை ஆரம்ப ஆண்டிலேயே மூன்று மில்லியன் அளவைத் தாண்டியது. தன்னுடைய ஆட்சிக்குட்பட்டிருந்த பகுதிகளில் பெரும் நிலப்பிரபுக்களின் நிலங்கள் பிடுங்கப்பட்டு நிலமற்ற வறிய விவசாயிகளுக்குப் பிரித்துக் கொடுக்கப்பட்டன. விவசாயிகளின் வரிச்சுமை வெகுவாகக் குறைக்கப்பட்டது. பெரும்பண்ணைகளில் நாள்

முழுவதும் கசக்கிப் பிழியப்பட்ட ஏழை, பொதுவுடைமைக் கொள்கையால் தன்னுரிமை பெற்ருன். தன்னுடைய செல்வாக் கினை விவசாயிகளிடையே வளர்த்துக்கொண்ட பொதுவுடைமைக் கட்சி, அண்டை மாநிலங்களிலும் பரவத் தொடங்கியது. ஹூபே (Hupeh), குவாண்டங் (Kwantung), ஹூனன் (Hunan), கியாங்சி (Kiangsi) ஆகிய மாநிலங்கள் அனைத்தும் பொதுவுடைமைக் கொள் கைகளை ஏற்றன. விவசாயிகளுக்குப் பெரு நன்மைகளைத் தேடித் தந்த பொதுவுடைமைக் கட்சி நகரங்களில் தொழிலாளர் நலன் களைப் பேணும் கட்சியாகவும் விளங்கியது. ஊதிய உயர்வு, வேலை நேரக் குறைப்பு, வாழ்க்கைத்தரம் உயரப் பாடுபடுதல் ஆகிய பணி களில் ஈடுபட்டுத் தொழிலாளர்களிடையே செல்வாக்குப் பெற்றது.

விவசாயிகளும், தொழிலாளர்களும் பொதுவுடைமைக் கட்சியின் செம்படையில் (Red Army) சேர்ந்தனர். ஐந்து இலக்கத் திற்கும் அதிகமான வீரர்கள் கொண்ட செம்படை உருவானது. செம்படை ஆக்கிரமிப்புச் செயல்களில் ஈடுபட்டு, சீனு முழு வதையும் படைபலம் கொண்டு வென்று, செஞ்சீனுவாக மாற்ற முயற்சிகள் செய்தது. செம்படை சென்றவிடமெங்கும் செல் வந்தர், வட்டிக்குக் கடன் கொடுத்துப் பிழைப்போர், பெரும் பண்ணை உரிமையாளர்கள் ஆகியோரின் செல்வாக்கு அழிக்கப் பட்டது. அவர்களின் செல்வங்கள் ஏழை, எளியவர்களுக்கு உரிமையாக்கப்பட்டன. மாவோவின் ஆதிக்கம் பெருகியது.

இந்நிலைமையில் பொதுவுடைமைக் கட்சியின் படைப் பலத்தை அழிப்பது ஒன்றுதான் கோமிண்டாங் கட்சியின் ஆதிக்கத்தைக் காப்பாற்றும் ஒரே வழி என்பதனை உணர்ந்த சியாங்-கே-ஷேக் பொதுவுடைமைக் கட்சியினரின் செம்படையை அழிக்க உறுதி பூண்டார். 1933-ல் கோமிண்டாங்கின் நான்கு பெரும் படைப் பிரிவுகள் முறையாகச் செயல்பட்டுச் செம்படைகளை அழிக்கும் பணியில் அமர்த்தப்பட்டன. செம்படை தோல்வியுற்றது. பொதுவுடைமைக் கட்சியின் 'சீனுவின் சோவியத் குடியரசுகள்' சுற்றி வளைக்கப்பட்டன. செம்படைகளின் அழிவு நெருங்கி விட்ட தாகக் கருதப்பட்டது. ஆனுல், மாவோவின் தலைமையிலான பொதுவுடைமைக் கட்சியை அழிப்பது என்பது இயலாது என்பதைப் பின்வரும் நிகழ்ச்சிகள் தெளிவாக்கின. கியாங்சி மாநில எல்லைக் காடுகளில் இருந்த செம்படையினர் சுற்றி வளைக்கப்பட்ட போதுதான் வரலாறு காணுத விந்தையைச் செம்படையினர் செய்து காட்டினர். கோமிண்டாங்கின் பாசறைத் தடுப்புகளை உடைத்துக்கொண்டு தலைவர் மா-சே-துங், சு-தே., சூ-என்-லாய் உட்படப் பொதுவுடைமைக் கட்சியின் தலைவர்கள் அனைவரும்

செம்படையினரும் சீனவின் தென்மேற்குப் பகுதிகள் வழியாக் வடக்கு நோக்கி நகர்ந்தனர். தங்களை எதிர்க்க வந்த கோமின்டாங்கின் படைகளை அழித்துக் கொண்டு, தீரச்செயல்கள் பல




பொதுவுடைமை ஆதிக்கத்தின் வளர்ச்சி

புரிந்து, கடுமையான வழிகளில் விடாமுயற்சியுடன் பயணம் செய்து குவீச்சௌ (Kweichow), யுவான் (Yuan), ஷெச்வான் (Szechwan) ஆகிய மாநிலங்கள் வழியாகக் கிட்டத்தட்ட ஆறாயிரம் மைல்களைக் கடந்து சீனவின் வடமாநிலமான ஷென்சியை (Shensi) அடைந்தனர். இச் செயல்தான் சீனவின் வரலாற்றில் நீண்ட

பயணம் (Long March) எனக் குறிப்பிடப்படுகின்றது[1]. ஷென்சி மாநிலத்தை அடைந்த பொதுவுடைமைக் கட்சியினர் சீனுவின் சோவியத் குடியரசை (Chinese Soviet Republic) ஏற்படுத்தி, ஏனுன் (Yenan) நகரைத் தலைநகராக்கிக் கொண்டு, வட சீனுவில் பொதுவுடைமைக் கொள்கைகளைப் பரப்பி வளர்க்கவும், ஜப்பானிய ஆதிக்கத்தைத் தடுக்கும் பணியிலும் ஈடுபட்டனர். செம்படையினரை முழுவதும் அழிக்க இயலாத சியாங்-கே-ஷேக், இறுதியில் தன் படை வலிமை குறைந்து, செம்படையினராலேயே சீனுவிலிருந்து விரட்டப்பட்டார் என்பதையும் ஈண்டுக் குறிப்பிடலாம்.

**கோமிண்டாங் ஆட்சியின் வெளிவுறவுக் கொள்கை**

சமநிலையற்ற உடன்படிக்கைகளை மாற்றி, சீனுவின் வலிமையையும், பெருமையையும் நிலைநாட்ட வேண்டுமென்பது கோமிண்டாங்கின் கொள்கைகளில் ஒன்று. இக் கொள்கையின் அடிப்படையில் சியாங்-கே-ஷேக்கின் அரசு செயல்படத் துவங்கியது. சமநிலையற்ற உடன்படிக்கை (Unilateral treaties) என்பது சிறப்பாக இரண்டு முக்கிய நிலைகளைக் கொண்டது. முதலாவதாக, சீனுவில் அந்நியர்களுக்கு வழங்கப்பட்டிருந்த சில சிறப்புரிமைகள் (Extraterritoriality—foreign nationals in China were not bound by Chinese laws) அழிக்கப்பட வேண்டும். இரண்டாவது சீனத் துறைமுகங்களில் சுங்கவரி, மற்றும் ஏனைய வரிகள் விதிக்கின்ற, வசூலிக்கின்ற உரிமைகளைச் சீனு மீண்டும் பெறவேண்டும் என்பதாகும். இந்த இரண்டு உரிமைகளும்தான் சீனுவின் பெருமைக்கு இழுக்கு விளைவிக்கும் நிகழ்ச்சிகளாகும். இவ் வுரிமைகளைப் பெற்று, ஐரோப்பிய நாடுகளிடையே மதிப்புப் பெறுகின்ற நிலையை சீனு அடைய கோமிண்டாங் அரசு முழு முயற்சி எடுத்துக் கொண்டது.

முதல் உலகப் போரின்போது ஆஸ்திரிய, ஜெர்மானிய நாடுகள் சீனுவில் பெற்றிருந்த சிறப்புரிமைகள் இரத்து செய்யப்

[1] They climbed 18 mountain ranges, occupied 62 cities and crossed a dozen rivers. They carried radio, a printing press and their archieves...... Chiang thought that the Long March would be the Red funeral march. It almost turned out to be a funeral march for him. Reds began with 100,000 men and finished with 50,000 men. The Long March shows 15 major battles, three hundred skirmishes. 368 days of March with 100 days rest. Actual moving 268 days, i.e, 15 miles a day, a remarkable feat.

பட்டது போலவே மற்ற நாடுகளின் தனி உரிமைகளும் அழிக்கப் படவேண்டும் என்பதில் கோமிண்டாங் அரசு மிகுந்த அக்கறை காட்டியது. முதன்முதலாக 1928-ல் அமெரிக்க அரசு சீனா விற்குச் சுங்கவரி உரிமையை விட்டுக் கொடுத்தது. ஜப்பான் மட்டும் உரிமைகளை விட்டுக் கொடுக்க மறுத்தது. இதனைப் பின்பற்றி, மேலை நாடுகளின் தனி உரிமைகளை (Extra territorial rights) விட்டுக் கொடுக்கும்படி சீன அரசு வேண்டியது. இந்த வேண்டுகோளை ஐரோப்பிய நாடுகள் ஏற்றுக் கொள்ளத் தயங்கின. பன்னாட்டுக் கழகத்திலும் சீனா இப் பிரச்சினையை வைத்துத் தீர்வு காண முயன்றது. அத்துடன் 1930ஆம் ஆண்டு ஜனவரி முதல் தேதியிலிருந்து அந்நிய நாடுகளின் தனி உரிமைகள் அனைத்தும் ஒழிக்கப்படும் என்று சீன அரசு அறிவித்தது. ஆயினும் செயல் படுத்த இயலவில்லை. ஜப்பானின் மஞ்சூரியத் தாக்குதல், கம்யூ னிஸ்டுகளுடன் போர், உள்நாட்டுப் பிரச்சினைகள், ஜப்பானின் ஆக்கிரமிப்பு இவைகளை எதிர்நோக்க வேண்டிய நிலையிலிருந்த சீன அரசு, அந்நிய நாடுகளின் தனியுரிமை மறுப்பைச் செயல் படுத்த இயலவில்லை.

### சியாங்-கே-ஷேக்கும் ஜப்பானும்-1937 வரை

சியாங்கின் தலைமையிலான கோமிண்டாங்கின் ஆட்சிக்குப் பெரும் எதிரிகள் ருஷியாவும், ஜப்பானுமாகும். வடக்கு மங்கோலிய, வடக்கு மஞ்சூரியப் பகுதிகளின் மீது ருஷியா தனது பார்வையைத் திருப்பியிருந்தது. ருஷியாவின் தலையீட்டினால் வட மங்கோலியப் பகுதி 'ஆட்சியுரிமை பெற்ற நாடு' (Autonomous State) என அறிவிக்கப்பட்டது (1929). மஞ்சூரியா முழுவதையும் ஜப்பான் ஆக்கிரமிப்பு செய்து வெற்றி பெற்றுக் கடைசி மஞ்சு குல அரசனின் தலைமையில் 'மஞ்சுகோ' (Manchuko) என்ற பொம்மை அரசை நிறுவியதையும், பன்னாட்டுக் கழகத்திடம் சீனா முறை யிட்டு, நடவடிக்கை எடுத்தபோது பன்னாட்டுக் கழகத்திலிருந்தே ஜப்பான் வெளியேறியதையும் முன்னரே கண்டோம். இவ்வாறு வெளியேறிய ஜப்பானை ஒன்றும் செய்ய இயலாத நிலையில் பன்னாட்டுக் கழகமும், ஜப்பானியப் பிரச்சினைகளில் வல்லரசு நாடு களும் முழுக்கவனம் செலுத்த முடியாத அளவுக்குப் பொரு ளாதாரப் பெருமந்தத்தால் பாதிக்கப்பட்டிருந்த நிலையையும்கூட முன்பே கண்டோம். இவ்வாறு தனித்து விடப்பட்ட ஜப்பான் தனது பொருளாதாரச் சிக்கல்களிலிருந்து விடுபட வேண்டுமானால் படைப்பலம் கொண்டு மஞ்சூரியா முழுவதையும், முடியுமானால் கிழக்காசிய நாடுகள் முழுவதிலும் தனது ஆதிக்கத்தைப் பரப்பும் துணிவு கொண்டது. இத் துணிவைச் செயல்படுத்தும் முறையில்

ஜப்பானிய அரசியலில் படையதிகாரிகளின் செல்வாக்கு மேம்பட்டு ஜப்பான் படை பலமிக்க வல்லாட்சியை நிறுவியிருந்தது.

மஞ்சூரியாவை 1931-ல் வென்ற ஜப்பான் மஞ்சூரியாவை அடுத்த பகுதிகளிலிருந்த போர்ப் பிரபுக்களை ஒடுக்கித் தனது ஆதிக்கத்தை வளர்த்துக் கொண்டது. மஞ்சூரியாவிலிருந்து தோல்வியுடன் விரட்டியடிக்கப்பட்ட சாங்-சியூ-லியாங் (Chang-Hseuh-Liang) என்ற தானைத் தலைவர் பீப்பிங் நகர்ப் பகுதிகளில் (முன்னர் பீகிங் என்ற பெயரில் இருந்த சீனுவின் தலைநகர், கோமிண்டாங்கின் ஆட்சி நாங்கிங்கைத் தலைநகராகக் கொண்டு ஏற்படுத்தப்பட்ட பிறகு பீப்பிங் என அழைக்கப்பட்டது) தனது படைகளுடன் கோமிண்டாங் அரசின் தலைமையில் பணியேற்ருர். இதற்கிடையில் வடசீனப் பகுதிகளில் ஜப்பானின் தூண்டுதல் களால் கோமிண்டாங் எதிர்ப்பு இயக்கம் உருவானது. இவ்வெதிர்ப் பியக்கத்தைப் பயன்படுத்திக் கொண்ட ஜப்பான் ஹோப்பே (Hopei), சாஹர் (Chahar), சுயான் (Suiyyan), ஷான்ஷி (Shansi), ஷாண்டுங் (Shantung) ஆகிய ஐந்து மாநிலங்களையும் இணைத்து இரண்டு ஆட்சியுரிமை பெற்ற பகுதிகளாக சீனு அறிவித்தது. (1. Eeast Hopei Autonomous Council-dominated by the Japanese military authority. 2. Hopei - Chahar Political Council-Partly under the Control of Kuomintang government). இந் நிகழ்ச்சிகள் சியாங்-கே-ஷேக்கின் அரசியல் கொள்கையைத் தெளிவாக்கின. ஜப்பானின் அச்சுறுத்தல்களுக்கு இணங்கி, செயலாற்றியதன் மூலம் சீனுவின் உறுதியற்ற நிலையில் ஜப்பானுடன் ஏற்பட இருந்த போரைத் தவிர்த்தார். அவருடைய முக்கிய நோக்கம், உள்நாட்டில் கம்யூனிஸ்டுகளை முழுவதும் நசுக்கி, தன்னுடைய மற்ற எதிர்ப்புகளையும் முறியடித்து, சீனுவில் அமைதி ஏற்படுத்தி, பொருளாதாரத் துறையில் முன்னேற்றம் காண்ச்செய்ய வேண்டும் என்பதாகும். இவ்வெண்ணம் நிறை வேறும் வகையில் ஜப்பானுடன் பகைமை பாராட்டி, நேரடி மோதல்கள் மூலம் அழிவைத் தேடிக் கொள்வதை விட பணிந்து சென்று வளர்ச்சி அடைவது சாலச் சிறந்தது என்றும் கருதினுர்.

ஆனுல், சியாங்கின் இக் கருத்துகளை சீனுவில் ஒரு பகுதியினர் ஏற்க மறுத்தனர். நாட்டுப்பற்று மிக்க சீனர்கள், தங்கள் தாய்நாட்டில் அந்நியர்கள்—சிறப்பாக ஜப்பானியர் படிப்படியாக ஆதிக்க வளர்ச்சி பெறுவதை உடனடியாகத் தடுக்க வேண்டும் என்றும், வேண்டுமானுல் தாய்நாட்டின் பெருமையைக் காக்க உயிரைப் பணயம் வைக்கவும் தயங்கவில்லை என்றும், அரசும்

ஜப்பானிய எதிர்ப்பு நடவடிக்கைகளில் உடனடியாக ஈடுபட வேண்டும் என்றும் வற்புறுத்தினர். வடக்கில் தங்கள் செல்வாக் கினைப்பரப்பி, ஜப்பானிய எதிர்ப்பியக்கத்தின் ஆணிவேராக இருந்த கம்யூனிஸ்டுகளும், ஜப்பானை எதிர்ப்பதில் தங்கள் வேற்றுமையை மறைத்து, அரசுடன் இணைந்து செயல்பட விருப்பம் தெரிவித் தனர். சியாங் மக்களிடையே பெருகி வரும் ஜப்பானிய எதிர்ப்பு இயக்கத்தின் வளர்ச்சியை உணரவில்லை. சீனு முழுவதிலும் ஜப்பானிய எதிர்ப்புக் கலகங்கள் தோன்றின. 1936ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்களில் சியான் (Sian-the Capital of Shensi province) நகர்ப் பகுதிகளில் ஏற்பட்ட கலகத்தின் காரணமாக, சியாங் சியான் நகருக்குப் பயணமானுர். சியான் நகரில் சியாங்-கே-ஷேக் சாங் சியூ-லியாங் என்ற தானைத் தலைவரின் தலைமையிலான படையதிகாரிகளின் குழுவினுல் கடத்திச் செல்லப்பட்டார். 1936-டிசம்பர் 12ஆம் நாளிலிருந்து அம் மாதம் 25ஆம் தேதி வரை சியாங்-கே-ஷேக், தன் படையதிகாரிகளிடம் சிறைப் பட்டிருந்தார். இச் செய்தி உலகம் முழுவதையும் பெருவியப்பி லாழ்த்தியது. ஜப்பானியரை எதிர்க்க, கம்யூனிஸ்டுகளுடன் இணைந்து செயல்பட வேண்டும் என்ற கோரிக்கையை ஏற்ற பின்னர் சியாங்-கே-ஷேக் விடுதலை செய்யப்பட்டார். அவர் கைதியாக இருந்தபோதே கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த சூ-என்-லாயும், மற்றவர்களும் சியாங்கைச் சந்தித்திருந்தனர். இந் நிகழ்ச்சியின் பின்னர்தான் சீனுவின் அரசியலில் சியாங்கே ஷேக்கிற்கு இருந்த தலையான செல்வாக்கை உணர முடிந்தது. ஜப்பானியரை எதிர்க்க சியாங் எடுத்த முடிவு 1937-ல் தொடங்கிய இரண்டாவது சீன ஜப்பானியப் போராக ஏற்பட்டது.

# 2. இரண்டாம் சீன–ஜப்பானியப் போர் (1937-41)

1931ஆம் ஆண்டிற்குப் பிறகு ஜப்பானிய அரசியலில் படையினர் செல்வாக்குப் பெற்றனர். அரசியல் கட்சிகள் மக்களிடையே மதிப்பிழந்தன. ஊழல் மலிந்த, திறமையற்ற, செல்வக் குடும்பங்களின் கைப்பாவையாகி விட்ட, நாட்டு நலன்களில் அக்கறை கொள்ளாத அரசியல் கட்சிகளையும், அதன் வழிப்பட்ட மக்களாட்சி முறையினையும் ஜப்பானியர் ஏற்றுக்கொள்ள மறுத்தனர். மாறாக, படை வலிமை ஒன்றுதான் ஜப்பானியப் பெருமையை உலகறியச் செய்யும் என நம்பினர். வளர்ந்துவிட்ட ஜப்பானியப் பெருந்தொழில்களுக்குத் தேவையான மூலப் பொருள்களையும், செய்து குவிக்கப்பட்ட உற்பத்திப் பொருள்களை விற்பதற்கு ஏற்ற அந்நியச் சந்தைகளையும், பெருகி வரும் மக்கள் தொகைக்குப் போக்கிடமாகப் புதிய பகுதிகளையும் பெற்றுத் தரும் ஆற்றல் படைத்தது படை வலிமை ஒன்றுதான் என்பதை ஜப்பானியர் உணர்ந்தனர். வாஷிங்டன் மாநாட்டிற்குப் பின்னர் ஏற்பட்ட அயலுறவு மாற்றங்களினாலும், பெரும் பொருளாதார மந்தத்தினாலும் ஜப்பானியர் பெரிதும் பாதிக்கப்பட்டனர். இந் நிலையிலிருந்து மீள, மேலைநாட்டு எதிர்ப்புகளினின்று, சிறப்பாக அமெரிக்க நாட்டின் ஆதிக்கத்திலிருந்து தன்னைக் காத்துக் கொள்ளப் படைப்பலம் ஒன்று தான் கைகண்ட மருந்து எனவும் ஜப்பானிய மக்கள் உணர்ந்தனர். எனவேதான் படையினரின் வளர்ச்சிக்கு ஆதரவு காட்டினர். ஆதிக்க வெறியும் ஜப்பானில் வளர்ந்தது.

மஞ்சூரியாவைப் பிடித்து 'மஞ்சுகோ' என்ற பொம்மை அரசை நிறுவிய ஜப்பான் சிறுகச்சிறுகத் தனது ஆதிக்கத்தை வட சீன முழுவதிலும் பரப்ப எத்தனித்தது என்பதை முன்னரே குறிப்பிட்டுள்ளோம். இதன் பின்னர், ஜப்பான் தன்னுடைய




வட சீனுவில் ஜப்பானிய ஆதிக்கம் (1935)

அயலுறவுக் கொள்கையை அறிவித்தது. இக் கொள்கைதான் '<u>ஜப்பானிய மன்ரோ கொள்கை</u>', என்று குறிப்பிடப் படுகின்றது. இக் கொள்கையின் முழு விளக்கத்தையும் குறிப்பிட இந் நூலின் அமைப்பு இடங்கொடுக்கவில்லை யெனினும் முக்கியமான கருத்து களை மட்டும் குறிப்பிட வேண்டியது அவசியமாகிறது. இக் கொள்கையின்படி தூரக் கிழக்கு நாடுகளில் அமைதி காப்பது ஜப்பானின் பொறுப்பாகும். அந்நிய நாடுகளின் ஆதிக்கத்தினின்று சீனுவை மீட்பதும், சீனுவின் அரசியல் ஒருமைப் பாட்டையும் பொருளாதார வளர்ச்சியையும் காப்பதும் தன்னுடைய தலையாய கடமையென ஜப்பான் அறிவித்தது. அதேபோலக் கிழக்காசியப் பகுதிகளிலும் அமைதியைக் காக்கும் பொறுப்பும் ஜப்பானின் கடமை யெனவும் அறிவித்தது. ஜப்பானுக்கு எதிராகச் சீனுவைத் தூண்டுகின்ற பணியிலோ, மற்றும் கிழக்காசியப் பகுதிகளில் அமைதிக் குலைவு ஏற்படுத்த எந்த நாடுகள் முயன்றாலும், அதை ஜப்பான் கண்டிப்பாகத் தடுக்கும் என்றும் விளக்கியது. இக் கருத்துகள் பிரிட்டன், பிரான்சு, அமெரிக்கா ஆகிய நாடுகளுக்குச் சிறப்பாக அறிவிக்கப் பட்டன.

இதற்கு மறுப்புத் தெரிவிக்கும் வகையில் சீனுவும் ஓர் அறிக்கையை வெளியிட்டது. 'உலகின் எப்பகுதியிலும் அமைதி காக்கும் பணியை எந்த ஒரு நாடும் தன்னுடைய தனிப் பொறுப் பாக ஏற்றுக் கொள்ள முடியாது; சீனுவின் நட்புறவு நாடாகக் கருதும் எந்த நாடும் சீனுவின் வளர்ச்சியைக் கண்டு அச்சமுறத் தேவையில்லை' என்பது போன்ற கருத்துகளை வெளியிட்டுச் சீனு தனது எதிர்ப்பை அறிவித்தது. ஜப்பானின் இத்தகையக் கட்டுப் பாட்டுக் கொள்கைகளின் அடிப்படைக்காரணம், சீனுவின் வளர்ச்சி யில் மேலைநாடுகள் பங்கேற்க முனைந்தது. பன்னாட்டுக் கழகத்தைச் சேர்ந்த பொருளாதார நிபுணர் குழு, சீனுவின் பொருளாதார மேம்பாட்டிற்கானத் திட்டங்களை வகுத்துத்தர முன்வந்தது. அமெரிக்க நாடுகள் சீனுவின் விமானப்படை வளர்ச்சியிலும், விமானப் போக்குவரத்து வளர்ச்சியிலும் பெருமளவுக்கு உதவியது. இதன் பயனாகச் சீனுவின் இராணுவம் மேனாட்டு முறையில் புதுப்பிக்கப் பெற்றது. சீனு முழுவதையும் தன்னுதிக் கத்தில் கொண்டு வர வேண்டும் என்ற கனவை நனவாக்க முயன்று கொண்டிருந்த ஜப்பான், மேலைநாட்டு உதவியுடன் வளர்ந்துவரும் சீனுவைக் கண்டு அஞ்சியதில் வியப்பில்லை.

இந் நிலையிலும் தனது ஆதிக்க வளர்ச்சியின் மூலம் சீனுவை அடிபணிய வைக்கும் நோக்கத்துடன் ஜப்பான் சீனுவிற்கு மூன்று கோரிக்கைகளை அனுப்பியது. இதை ஹிரோதா என்ற

முதலமைச்சர் வெளியிட்டதால் ஹிரோதாவின் மூன்று கொள்கைகள் (The Hirota Three Point Policy - 1936) என்றும், சீனவில் புதிய ஆதிக்கக் கொள்கைகள் (New order in China) என்றும் வரலாற்றில் இது இடம் பெறுகின்றது. இக் கொள்கைகளின்படி, (1) சீன, மஞ்சுகோ அரசை அங்கீகரித்து, அதன் வளர்ச்சிக்கு உதவ வேண்டும். (2) சீனவின் வட பகுதியில் கம்யூனிஸ்டுகளை அழிக்கவும், மேலை நாடுகளின் செல்வாக்கினை அடியோடு நீக்கவும் ஜப்பான் தனது முழு ஒத்துழைப்பையும் நல்கும். (3) ஜப்பானின் பொருளாதாரக் கொள்கைகளின் அடிப்படையில் ஜப்பான், மஞ்சுகோ, சீன ஆகிய மூன்று நாடுகளும் வளர்ச்சியடைய வேண்டும். சீனவின் கோமிண்டாங் அரசு ஜப்பானின் இப் புதிய கொள்கைகளை ஏற்று, ஜப்பானின் மேலாதிக்கத்தை ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை.

தன்னுதிக்கக் கொள்கைகளுக்குச் சீன அமைதியாக அடிபணிய மறுப்பதைக் கண்டு வெகுண்ட ஜப்பான், படைப்பலம் கொண்டு அடிபணியச் செய்ய முயன்றது. வட சீனவில் தேசிய அரசிற்கு எதிர்ப்புகள் உருவாக்கப் பட்டன. வட சீனவின் ஐந்து மாநிலங்களில் (Hopei, Chahar, Suiyuan, Shansi and Shantung) கலகங்கள் தோன்றின. இக் கலகங்களைக் காரணமாகக் காட்டி, ஜப்பான் வடசீனப் பகுதிகளில் தன்னுதிக்கத்தை நிறுவியது என்பதை முன்னரே குறிப்பிட்டுள்ளோம். இதன் விளைவாக ஜப்பானிய எதிர்ப்பியக்கம் சீனவில் தீவிர மடைந்தது. வடசீனவில் ஆட்சியுரிமைப் பெற்ற பகுதிகள் ஏற்படுத்தப்பட்டதால் ஜப்பானியப் பொருள்கள் கள்ளக்கடத்தல் மூலமாகச் சீனவிற்கு ஏராளமாகக் கொண்டு வரப்பட்டன. ஏற்கெனவே மஞ்சூரியாவையும், வடசீன மாநிலங்களையும் இழந்ததினல் ஏராளமான வருவாயை இழந்திருந்த சீன, ஜப்பானின் ஆதரவினல் நடைபெற்றுவந்த கள்ளக்கடத்தல் மூலமாகப் பெருநட்டத்திற்கு உள்ளானது. சுங்க வரி வருமானம் இதனல் மிகக் குறைந்தது. இத்துடன் இதுவரை சீனவில் தடை செய்யப்பட்டு வந்த போதை மருந்தை தன்னுட்சிக்குட்பட்ட பகுதிகளில் தயாரிப்பதிலும் (Narcotic drugs) அம் மருந்துகளைச் சீன முழுவதிலும் விற்பனை செய்து கொள்ளை இலாபம் கண்டது ஜப்பான். ஜப்பானியப் பொருள்கள் ஏராளமான அளவில் கள்ளக்கடத்தல் மூலமாகச் சீனவிற்குள் நுழைந்து மலிவாக விற்கப்பட்டதால் சீனவின் உற்பத்திப் பொருள்களின் விற்பனை மிகக் குறைந்தது. சீனவின் நலிவுற்ற பொருளாதாரம் ஆட்டங்கண்டது.

ஜப்பானின் இத்தகைய நடவடிக்கைகளால் சீனவின் பொருளாதார வளர்ச்சி தடைபடுவதைக் கண்ட கோமிண்டாங் அரசு,

ஜப்பானுடன் பேச்சுவார்த்தைகள் நடத்தி முடிவு காண விழைந்தது. ஆனல், ஜப்பானிய அரசு 'ஹிரோதாவின் புதிய ஆதிக்கக் கொள்கையை ஏற்றுக் கொண்டேயாக வேண்டும் எனவும், இராணுவம் உட்படச் சீனுவின் அனைத்து ஆட்சி துறைகளிலும் ஜப்பானிய ஆலோசகர்களை அனுமதிக்க வேண்டுமென்றும் ஜப்பான் வற்புறுத்தியது. இதற்கிடையில் சீனுவில் பெரும் அரசியல் மாறுதல்கள் ஏற்பட்டிருந்தன. கம்யூனிஸ்டுகளை அடியோடு ஒழிப்பதையே தனது முக்கியக் கொள்கையாகக் கொண்டிருந்த சியாங்-கே- ஷேக், ஜப்பானியருடன் அமைதியை விரும்பி, ஜப்பானியரின் ஆக்கிரமிப்புக் கோரிக்கைகளைக் கூட ஏற்று அமைதிகாண விரும்பினர். இந் நிலையில்தான் தீவிர ஜப்பானிய எதிர்ப்புணர்ச்சி சீனுவெங்கிலும் தோன்றி வளர்ந்தது. ஜப்பானியரைச் சீன மண்ணிலிருந்து விரட்டியடிப்பதையே அடிப்படைக் கொள்கையாகக் கொண்டு செயலாற்றி வந்த சீன கம்யூனிஸ்டுகளுக்கெதிராக அனுப்பப்பட்ட கோமிண்டாங் படையும் கலகம் செய்தது. இக் கலகத்தை அடக்கி, படையினரிடையே உருவான கோமிண்டாங் எதிர்ப்புணர்வைக் களையும் நோக்கத்துடன் சியான் நகர் நோக்கிச்சென்ற சியாங் தன்னுடைய படையதிகாரிகளாலேயே கடத்திச் செல்லப்பட்டார். ' கம்யூனிஸ்டுகளுக்கு எதிராகத் தொடர்ந்த உள்நாட்டுப் போரை நிறுத்திவிட்டு, அதே கம்யூனிஸ்டுகளுடன் இணைந்து ஜப்பானியரை எதிர்க்க முடிவுசெய்த பின்னர்தான் சியாங் விடுதலை செய்யப்பட்டார். கம்யூனிஸ்டுகளுடன் நடத்திய பேச்சுவார்த்தைகள் வெற்றி பெற்றன. சியாங்-கே- ஷேக்கின் தலைமையில் ஜப்பானிய எதிர்ப்பியக்கத்தில் கம்யூனிஸ்டுகளும் முழு மூச்சுடன் உழைக்க முன் வந்தனர். இதனுல் சியாங்கின் பெருமை உயர்ந்தது. அவரின் தலைமையில் இணைந்து வலிமை பெற்ற—புத்துயிர் பெற்ற சீனு ஜப்பானியரை எதிர்க்கத் தயாரானது.

இவ்வாறு சீன அரசியலில் ஏற்பட்ட எதிர்பாராத மாறுதல்களினுல் ஹிரோதாவின் புதிய ஆதிக்கக் கொள்கைகளைச் சீனு முழுவதுமாக ஏற்க மறுத்து மாறுதல் கோரியது. ஜப்பானும் புத்துயிர் பெற்ற சீனுவின் துடிப்பை உணர்ந்து, பேச்சுவார்த்தைகளின் மூலம் அமைதி காண முன்வந்தது. இப் பேச்சுவார்த்தைகள் நடந்து கொண்டிருந்தபோதே, ஜப்பானியப் படைகள் ஜப்பானிய அரசின் ஆணையின்றியே வலிந்து தாக்குதல்கள் தொடங்கின. சீனப் படைகள் இத் தாக்குதல்களை முறியடித்தன. ஜப்பானியப் படைகளின் இந்த வரம்பற்ற செயல் பேச்சுவார்த்தைகளின் மூலம் அமைதி காண விழையும் அடிப்படையைத் தகர்த்தன. இதன் விளைவாக ஜப்பானிய அரசியலிலும் பெரும் மாற்றங்கள் ஏற்

பட்டன. ஏற்கெனவே ஜப்பான் ஜெர்மனியுடன் செய்துகொண்ட கம்யூனிச எதிர்ப்பு ஒப்பந்தத்திற்கு (Anti-Comintern Pact) ஜப்பானில் கடும் எதிர்ப்பிருந்தது. இந்த எதிர்ப்புகளினால் ஹிரோதாவின் அமைச்சரவை வீழ்ந்தது. படையினர் ஆதிக்கம் பெற்றனர். பின்னர் கோனேயி (Konoye)யின் தலைமையிலான அமைச்சரவை படையினரின் கைப்பாவையாக மாறியது. படையினர் ஆதிக்கம் பெற்றவுடனே சமாதானப் பேச்சுவார்த்தைகள் நிறுத்தப்பட்டன. பேச்சுவார்த்தைகள், மாநாடுகள், உடன்படிக்கைகள் அனைத்துமே துப்பாக்கியின் துணையால்தான் முடிவு செய்யப்பட வேண்டும் என்ற வெறியுணர்வு தலைதூக்கியது. சீனா முழுவதும் ஜப்பானியரின் கைவசமாக வேண்டும் என்ற எண்ணத்தில் ஜப்பானிய இராணுவத் தலைவர்கள் இயங்கினர். கிழக்காசிய நாடுகளின் ஒப்பற்றத் தலைவனாக ஜப்பானை அனைத்து நாடுகளும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என ஜப்பான் கனவு கண்டது. இதை நிறைவேற்றும்பொருட்டுத்தான் 'ஆசியா ஆசியருக்கே' என்ற கொள்கையையும் தீவிரமாகப் பரப்பியது. ஐரோப்பிய நாடுகளிடமிருந்தும், குறிப்பாக அமெரிக்காவின் எதிர்ப்பினின்றும் தான் காப்பாற்றப்பட வேண்டுமானால், தென் கிழக்காசியா முழுவதும் தனது கட்டுப்பாட்டிற்குள் வரவேண்டும் என ஜப்பான் எண்ணியது. இக் கொள்கைக்குப் பேரிடராக இருந்ததுதான் சீனாவின் தேசிய இயக்கமும், சியாங்கே ஷேக்கின் தலைமையிலான ஒருமைப்பாடுற்ற சீன அரசும். அமைதி வழியில் சீனாவை அடிபணிய செய்ய முடியாதபோது, படைகொண்டு அடிபணியச் செய்தாக வேண்டுமென ஜப்பான் முடிவுசெய்தது. இதன் விளைவு ஏதாவது சிறு ஜப்பானிய எதிர்ப்பு நிகழ்ச்சி ஏற்பட்டாலும் அது மாபெரும் போராக மாறிவிடக்கூடிய நிலை உருவாகியிருந்தது.

**போருக்கான உடனடிக் காரணங்கள்**

தென் மஞ்சூரிய இருப்புப் பாதையில் வெடித்த குண்டு மஞ்சூரியா முழுவதையும் ஜப்பான் வெற்றிகொள்ள வாய்ப்பை அளித்தது. அதேபோல மற்றொரு மிகச் சிறிய நிகழ்ச்சி இரண்டாவது சீன-ஜப்பானியப் போரையும் துவக்கியது. 1937ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் ஏழாம் நாள், பீப்பிங் நகரின் தென் மேற்கில் ஒன்பது கல் தொலைவிலிருந்த மார்கோபோலோ பாலத்திற்கருகில் (Marco Polo Bridge Near Lukouchiao Railway Station) அத்துமீறி நுழைந்த ஜப்பானியப் படைகளின்மீது சீனப் படையினர் சுட்டனர். இச் சிறு நிகழ்ச்சியின் விளைவாகச் சீன-ஜப்பானியப் போர் ஆரம்பமானது. இந் நிகழ்ச்சியைக் காரண

மாகக் கொண்டு பெரும் ஜப்பானியப் படை சீனுவிற்குள் நுழைந்து போரைத் துவக்கியது. இப் போர் முறைப்படி அறிவிப்புச் செய்யப் படாத போர் (Undeclared War) என்றும், ஜப்பானிய வரலாற்றில் 'சீன நிகழ்ச்சி' (China affair or China Incident) என்றும் குறிப் பிடப்படும். ஜூலை 29ஆம் தேதிக்குள்ளாக பீப்பிங்கும், டியன் சினும் ஜப்பானியர் வசமாயின. இதற்கிடையில் ஜப்பானியத் தலைமையமைச்சர் கோனேயி, பேரரசரின் ஆணைக்கிணங்கப் பேச்சு வார்த்தைகளின் மூலம் அமைதி காண முன்வந்தார். பலமுறை இம் மாதிரி நடத்திய அமைதிப் பேச்சுவார்த்தைகளின் பயனற்ற முடிவைக் கண்டு கசப்புற்ற சீன அரசு தன் சுதந்திரத்தைக் காக்க இராணுவத்தைப் பயன்படுத்துவது என்று முடிவு செய்திருந்தது. எனவே, போர் தொடர்ந்து நடைபெற ஏதுவாயிற்று. இவ்வாறு தொடங்கிய போர் இறுதியாக இரண்டாம் உலகப் பெரும் போருடன் இணைந்து, ஜப்பானியரின் அழிவிற்குக் காரணமாக அமைந்தது.

**போர் நிகழ்ச்சிகள்**

இப் போரின் நிகழ்ச்சிகளை எளிதில் புரிந்துகொள்ளும் வகையில் மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம்: (1) ஆகஸ்டு 13ஆம் நாள் ஷாங்காய் நகர் தாக்கப்பட்டதிலிருந்து தேசிய சீனுவின் தலைநக ரான நாங்கிங் நகரின் வீழ்ச்சி—டிசம்பர் 15, 1937 வரை. (2) நாங்கிங் நகர் வீழ்ந்ததிலிருந்து, காண்டன் மற்றும் ஆங்கோவ் (Hankow) நகர் வீழ்ச்சிவரை—அக்டோபர், 1938; (3) ஆங்கோவ் நகரிலிருந்து சீன அரசு ஷெச்சுவான் மாநிலத் தலைநகரான சுங்கிங் நகரில் (Hankow to Chungking in Szechuan Province) தஞ்சமடைந்ததற்குப் பின்னர் நடந்த போர் நிகழ்ச்சிகள்.

போரின் முதல் கட்டமாக யாங்ட்சி நதியின் முகத்துவாரத்தில் அமைந்திருந்த ஷாங்காய் நகர் மீது ஜப்பானிய முப் படைகளும் பயங்கரத் தாக்குதல்களைத் தொடங்கின. சியாங்கின் படைகளின் வீரமிக்க தாக்குதல் ஜப்பானியப் படைகளின் முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. ஜப்பானிய விமானப் படைகள் பெருஞ்சேதத்தை விளைத்துக் கொண்டிருந்தன. இரண்டு மாதக் கடுந் தாக்குதல்களுக்குப் பின்னர் நவம்பர் மாதத்தில் (1937) ஷாங்காய் நகர் வீழ்ந்தது. இதன் பின்னர் தேசிய சீனுவின் தலைநகரான நாங்கிங் நகரை நோக்கி ஜப்பானியப் படைகள் பாய்ந்தன. ஒரு மாதத்திற்குள்ளாகவே (டிசம்பர் 15, 1937) நாங்கிங் நகரும் ஜப்பானியர் வசமானது. சீனுவின் தலைநகர் ஆங்கோ நகருக்கு மாற்றப்பட்டது. நாங்கிங் நகரின் வெற்றிப் பெருமிதத்தில் நுழைந்த ஜப்பானியப் படைகள் கொலை,

கொள்ளை, தீவைத்தல், கற்பழித்தல் போன்ற கொடுமையான செயல்களில் ஈடுபட்டனர். இவ் வெறிச் செயல்களைக் கேள்வியுற்ற சீனர்கள் கொதித்தெழுந்தனர். பிறந்த பொன்னாட்டின் மானம் காக்கத் தங்கள் உயிரையும் தியாகம் செய்யும் வீரமிக்க சீனப் படை உருவானது. தங்களின் உள்நாட்டுப் போரையும் மறந்து, பொது எதிரியை முறியடித்து, சீனாவின் பரம்பரை வீரப் பண்புகளைக் காக்க வேண்டி, கம்யூனிஸ்டுகளின் செம்படையும், தேசிய சீனப் படையும் உறுதி பூண்டன. ஜப்பானியருக்குப் பலமான எதிர்ப்பு உருவாகியது. சீனத் தலைநகரைக் கைப்பற்றிய அதே நேரத்தில் மற்றொரு ஜப்பானியப் படை பீப்பிங் நகரிலிருந்து வடக்கில் உள்ள பகுதிகள் அனைத்தையும் மங்கோலியா உட்பட, வெற்றி பெற்று, பீகிங்கில் தாற்காலிக சீன அரசு ஒன்றையும் நிறுவியது. இவ்வாறு போரின் முதற் பகுதியில் ஜப்பானியர், வியத்தகு வெற்றிகள் பல பெற்றிடினும், சியாங்-கே-ஷேக்கின் சீனப் படைகள் முழுவதுமாக அழிக்கப்படவில்லை.

போரின் இரண்டாவது கட்டம் துவங்குவதற்கு முன்னர், ஜெர்மானிய தூதுவர் போர் நிறுத்த முயற்சிகளை மேற்கொண்டார். அவரது முயற்சிகள் பலனளிக்காது போகவே, ஜப்பான் தனது தாக்குதல்களைத் தொடங்கியது. நாங்கிங் நகரைக் கைப்பற்றிய ஜப்பானியப் படைகள் சீனாவின் புதுத் தலைநகராகிய ஆங்கோவை நோக்கி விரைந்து முன்னேறின. இப் படைகளுக்கு உதவியாக வடக்கிலிருந்த ஜப்பானியப் படைகள் மஞ்சள் நதிப் பள்ளத்தாக்கில் ஜப்பானியர் எதிர்பாராதவண்ணம் சீனாவின் கம்யூனிஸ்டுப் படைகள் (8th Route Army) முதன்முதலாக ஜப்பானியப் படைகளைத் தையர் சுவாங் (Taier Chuang) என்னுமிடத்தில் புறங்கண்டு, வடக்கிலிருந்தும், நடுவிலிருந்தும் ஆங்கோ நோக்கிச் செல்லும் படைகள் இணையாவண்ணம் தடுத்து நிறுத்தப் பட்டது. இருப்பினும் ஆங்கோ நகரமும் வீழ்ந்தது. சீனாவின் தலைநகர் சுங்கிங்கிற்கு மாற்றப்பட்டது. இரண்டாவது உலகப் பெரும் போர் முடிவுறும் வரை போர்க் காலத் தலைநகரமாக இந் நகரே இருந்துவந்தது. ஆங்கோ நகரைப் பிடிப்பதற்கு ஜப்பானியர் பல்லாயிரக்கணக்கான வீரர்களைப் பலிகொடுக்க வேண்டியிருந்தது. ஜப்பானிய விமானப் படை சீனாவில் பெரும் அழிவையும், இழப்பையும் ஏற்படுத்திக் கொண்டிருந்தது. ஆங்கோ நகர் பிடிபடுவதற்குள் காண்டன் நகரமும் ஜப்பானியர் வசமாயிற்று. ஜப்பானியர் ஆங்கோ நகரைக் கைப்பற்றியதோடு போரின் இரண்டாவது கட்டம் முடிவுற்றது (October 25, 1938).

போரின் இரண்டாவது கட்டத்தில் ஜப்பானியரின் நோக்கம் சீனத் தலைநகர் ஆங்கோவைக் கைப்பற்றுவதன் மூலம் சீனாவின்

படை பலத்தை அழித்து, அடிபணியச் செய்வது என்பதாகும். ஆனால், இந் நோக்கத்தில் ஜப்பான் வெற்றியடையவில்லை. சீன அரசு தனது தலைநகரை சுங்கிங் நகருக்கு மாற்றிக்கொண்டது. சீனப் படைகள் தோல்வியுடன் விரட்டப்பட்டன. ஆயினும் அழிக்கப்படவில்லை. சீனுவும் ஜப்பானுக்குப் பணியவில்லை. ஜப்பானிய எதிர்ப்புகளும் அதிகரித்தனவே தவிரக் குறைந்த பாடில்லை. இந் நிலையில் மேலும் போரைத் தொடர்ந்து நடத்து வதில் தொல்லைகள் பல இருப்பதை உணர்ந்த ஜப்பான், தான் இதுகாறும் வென்ற பகுதிகளில் தனதாட்சியை நிலைநிறுத்தும் பணியில் ஈடுபட்டது. ஜப்பானியப் படைகள் பெரிய நகரங்களைக் கைப்பற்றினவே தவிர, சிறு நகரங்களும், சீனுவின் பரந்து கிடக்கும் கிராமப்புறங்களும் ஜப்பானிய எதிர்ப்பியக்கத்தின் உறைவிடங்களாக இருந்தன. சீன அரசைத்தான் ஜப்பானுல் விரட்டியடிக்க முடிந்ததே தவிர, சீன மக்களின் உள்ளத்தில் ஊன்றிவிட்ட ஜப்பானிய எதிர்ப்புணர்ச்சியை விரட்ட முடிய வில்லை. எனவே, ஏராளமான கொரில்லா இயக்கங்கள் சீனுவெங் கணும் தோன்றி ஜப்பானியப் படைகளை அலைக்கழித்தன. ஜப்பானிய விமானப் படைகள் சீன நகரங்களையும், இருப்புப் பாதை, நெடுஞ்சாலை வழிகளையும் குண்டு வீசித் தொடர்ந்து தாக்கின. ஜப்பானியப் படைகள் மேலும் முன்னேறுவது நிறுத்தப் பட்டாலும், எந் நேரத்திலும் ஜப்பானியத் தாக்குதல்கள் பெரு மளவில் ஏற்படக்கூடிய அபாயம் இருந்து கொண்டேயிருந்தது.

தோல்விமேல் தோல்விகண்டு, அஞ்சியோடிய சியாங்-கே-ஷேக்கின் அரசு அழிக்கப்படவில்லையெனினும், ஜப்பானியத் தாக்குதலால் பிளவுண்டது. சீனுவின் தோல்வியால் மனந்தளர்ந்த சிலர், சிறப்பாக வாங்-சிங்-வி (Wang-Ching-Wei) என்பவர், ஜப்பானுடன் போரை நிறுத்தி, அமைதி காணுவதுதான் சீனுவை அழிவிலிருந்து காக்கும் ஒரே வழி என்று நம்பினர். வாங்-சிங்-வி என்பவர் கோமிண்டாங் கட்சியில் சியாங்கே ஷேக்கிற்கு அடுத்த நிலையில் வைத்து எண்ணக்கூடிய சிறப்புப் பெற்றவர். சியாங்கின் அரசியல் போட்டியாளர் என்றும் இவரைக் கருதலாம். இவர்கள் இருவருக்குமிடையே கருத்து வேறுபாடுகளும், காழ்ப்புணர்ச்சியும் இருந்தன எனவும் கருதுவர். இந் நிலையில் வாங்-சிங்-வி ஜப்பா னுடன் அமைதிப் பேச்சுவார்த்தைகளைத் தொடங்க முன்வந்தார். கோமிண்டாங் கட்சியின் எதிர்ப்புகளை மீறி இவர் செயல்பட முனைந்தபோது கட்சியினின்றும் நீக்கப்பட்டார். நாட்டுத் துரோகக் குற்றமும் இவர்மீது சாட்டப்பட்டது. இவைகளி லிருந்து தப்பி, ஜப்பானியர் வசமிருந்த பகுதிக்குள் ஓடிவிட்டார். இவ்வாறு கோமிண்டாங் கட்சிக்குள்ளேயே பிளவு ஏற்பட்டாலும்,

சியாங்கின் பெருமை குன்றவில்லை. சீன மக்களின் பேராதரவு சியாங்கிற்குக் கிடைத்தது.

இந்நிலையில் சீனவை இரண்டு பகுதிகளாகப் பிரிக்கலாம். முதல் பகுதி கோமிண்டாங்கின் ஆட்சிக்குட்பட்ட பகுதி. இப் பகுதி வடக்கில் பீகிங் நகரிலிருந்து, ஆங்கோ வழியாகத் தெற்கில் காண்டன் வரை, வரையப்பட்ட கோட்டிற்கு மேற்கில் இருந்த மாநிலங்கள். இவை சுதந்திர சீன (Free China) என்வும், இரண் டாவது கோட்டிலிருந்து கிழக்கில் கடல்வரை உள்ள சீனப் பகுதிகள் ஜப்பானிய ஆதிக்கத்திற்குட்பட்ட பகுதிகள் என்றும் பிளவுபட்டிருந்தது. கோமிண்டாங்கின் ஆட்சிக்குட்பட்டிருந்த பகுதியில் கம்யூனிஸ்டுகள் செல்வாக்குப் பெற்றிருந்த பகுதிகளும் உண்டு. சுங்கிங் நகரில் சியாங்கின் மைய அரசு செயல்பட்ட அதே நேரத்தில் தெற்கில் ஏனன் (Yenan) நகரை மையமாகக் கொண்ட கம்யூனிஸ்டுகளின் ஆட்சியும் நடைபெற்றது. இவ்வாறு சீன பிளவுண்டு கிடந்ததால் ஜப்பானிய எதிர்ப்புகள் மிகவும் குறைந் திருந்தன. மேலும், சியாங்கின் தலைமையிலான சீன உலகின் எப்பகுதியிலிருந்தும் உதவிகள் பெற முடியாவண்ணம், வழிகள் அனைத்தும் தடுக்கப்பட்டிருந்தன. இருப்பினும் சீன அரசு ஜப்பானியக் கட்டுக் காவல்களையும்மீறி, வெளியுலகுடன் தொடர்பு கொள்ளவும், உதவிபெறவும் முயற்சிகள் எடுத்து ஓரளவுக்கு வெற்றியும் பெற்றது.

**சீனவில் ஜப்பான்**

தான் வெற்றி பெற்ற பகுதிகளில் ஜப்பான் பொம்மை அரசுகளை நிறுவியது. கோமிண்டாங்கிலிருந்து பிரிந்து, தப்பி யோடிய வாங்சிங்-லியின் தலைமையில் நாங்கிங் நகரில் போட்டிச் சீன அரசு ஒன்றை ஜப்பான் ஏற்படுத்தியது. இதைப்போலவே வடக்கிலும் பொம்மை அரசுகள் நிறுவப்பட்டன. நாங்கிங் நகரில் வாங்சிங் - லியின் தலைமையிலான அரசு, தாங்கள்தான் உண்மையில் சுன்யாட்சனின் கருத்துகளின் அடிப்படையில் ஆட்சியை அமைத்திருக்கிறோம் என மார்தட்டியது. இந்த அரசை ஜப்பான் அங்கீகரித்தது. இவ்வாறு சீனவின் பெரு நிலப் பகுதியைப் போர் தொடங்கிய பதினென்கு மாதங்களுக்குள் ஜப்பான் கைப்பற்றிவிட்டதால், அதன் தொழில் வளர்ச்சிக்கும், பொருளாதார மேம்பாட்டிற்குமான மூலப் பொருள்களைக் கைப் பற்றிய பகுதிகளிலிருந்து சுரண்டிச் சென்று ஜப்பான் வளம் பெற்றது. ஆனால் சீனப்படையினர் 'அழிவுக் கொள்கையின்' (Scorched Earth Policy) படி, தோற்றோடும் போது, அப் பகுதி களில் இருந்த பயன்தரக்கூடிய பொருள் அனைத்தையும், இயந்

திரங்கள், உணவுப் பொருள்கள், பெரிய நிலையங்கள் ஆகியவற்றை அழித்துச் சென்றிருந்தனர். சீனர்களின் இவ்வழிவுக் கொள்கை யின் நோக்கம், வெற்றி பெற்ற ஜப்பான், படைகளுக்கு வேண்டிய பொருள்கள் அனைத்தையும் ஜப்பானிலிருந்தே கொண்டு வரவேண்டும். வெற்றி பெற்ற பகுதிகளிலிருந்து தனது பொருளாதார மேம்பாட்டிற்காக எதையும் பயன்படுத்த முடியாமல் செய்து, ஜப்பானைப் பொருளாதாரத் தொல்லைகளுக்கு உட்படுத்தவேண்டு மென்பதுதான். ஜப்பானிய ஆதிக்கத்தி லிருந்த சீன மக்களும் உள்ளத்தாலும், உணர்ச்சியாலும் ஒன்று பட்டு ஜப்பானியரை விரட்டுவதிலேயே நோக்கமுடையவர்களாய் இருந்தனர். நாங்கிங்கில் தங்கள் கைப்பாவை ஆட்சியை வாங்சிங்-வி தலைமையில் ஏற்படுத்திய பின்னர் ஜப்பானியர் மேற்கொண்டு பல இடங்களைக் கைப்பற்றும் நோக்கத்தைக் கைவிட்டு, இதுவரை கைப்பற்றிய பகுதிகளில் தங்கள் செல் வாக்கை நிலைநாட்ட முற்பட்டார்கள்.

வெகு எளிதாகச் சீனுவின் பெரும் பகுதியை வென்றுவிட்ட ஜப்பான், ஆதிக்க வெறி மீதூரப் பெற்று, கிழக்காசிய நாடுகள் அனைத்தினையும் வெல்ல வேண்டும் என்ற பேராசை கொண்டது. கிழக்காசிய நாடுகள் அனைத்தும் தனது கைப்பாவையானுல், தனது பொருளாதார வளர்ச்சிக்குப் பயன்படுத்திப் பெரும் பயனடைய முடியும் என்று ஜப்பான் கனவு கண்டது. சீனுவின் முதுகெலும்பை ஒடித்துவிட்டதாலும், ஐரோப்பிய நாடுகள் ஹிட்லர் - முசோலினியின் ஆதிக்க வெறியிலிருந்து தங்களைக் காத்துக்கொள்ள முழுமூச்சுடன் செயல்படுவதாலும், கிழக்காசிய விவகாரங்களில் அவர்கள் தன்னைத் தடைசெய்ய வாய்ப்பில்லை என்பதை ஜப்பான் நன்குணர்ந்திருந்தது. அமெரிக்கா ஒன்று மட்டும்தான் ஜப்பானுக்குப் போட்டியாக வரக்கூடும். இதனை நன்குணர்ந்த ஜப்பான் 'புதிய கிழக்காசிய ஆதிக்கக் கொள்கை'யை (New Order in East Asia, November 3, 1938) வெளியிட்டது. இதன்படி ஜப்பானின் தலைமையில் மஞ்சுகோ, நாங்கிங் அரசு (ஜப்பானிய ஆதிக்கத்திற்குட்பட்ட சீனு) ஆகிய அரசுகள் இயங்கும். இதனுல் ஜப்பானின் பேராட்சிநிலை கிழக்காசியப் பகுதிகளில் உறுதிப்படும் என ஜப்பான் நம்பியது. இப் புதிய ஆதிக்கக் கொள்கையைக் கடைப்பிடித்த ஜப்பான் சீனுவிலிருந்த ஐரோப்பியர்களின் வர்த்தகம், மற்றும் தொடர்புகள், செல் வாக்கு, உரிமைகள் அனைத்தையும் அழிக்க முற்பட்டது. பிரான்சு, பிரிட்டன் ஆகிய நாடுகளின் உரிமைகளைத் தடுத்தது. அதனுடைய உறவு நாடான ஜெர்மனிகூட ஜப்பானின் இக் கொள்கைக் கட்டுப்பாட்டிலிருந்து தப்பிக்க இயலவில்லை. ஆனுல், பிரிட்டனும்

அமெரிக்காவும் ஜப்பானியரை எதிர்க்கத் தொடங்கின. அமெரிக்கா ஜப்பானுடன் செய்துகொண்டிருந்த வர்த்தக உடன்படிக்கைகளை இரத்து செய்தது. இவ்வாறு ஜப்பான் தனது புதிய கிழக்காசிய ஆதிக்கக் கொள்கையின் மூலம் அமெரிக்க, ஐரோப்பிய நாடுகளின் பகைமையைத் தேடித் தன்னை இரண்டாம் உலகப் போர் என்னும் ஆழ்கடலில் ஆழ்த்தி அழிவைத் தேடிக் கொள்ளும் வகையில் செயல்படத் தொடங்கியது.

**1939-ல் சியாங்-கே-ஷேக்கின் சீனுவின் நிலைமை**

நான்கு ஆண்டுகளாக (1937-1941) கோமிண்டாங் சீனு, மேலை நாடுகளின் எவ்வித உதவியுமின்றிப் போரிட்டு ஜப்பானியரிடம் பாதிக்கும் அதிகமான நிலப்பரப்பைப் பறிகொடுத்திருந்தது. மீதமிருந்த சீனப் பரப்பில் சியாங்-கே-ஷேக் தமது ஆட்சியை நிலைநிறுத்திக் கொண்டு, ஜப்பானியரை எதிர்க்கத் துணிந்தார். இவருக்குச் சீன மக்கள் அனைவரும் துணைநின்றனர். எத்தகைய இன்னல்களுக்கும் தங்களைத் தயார் செய்துகொண்ட சீனர்கள் தங்கள் மண்ணின் பெருமையை காக்க, ஜப்பானியரைத் தொடர்ந்து தாக்க உறுதி பூண்டனர். தலைநகர் மாற்றப்பட்ட போது பள்ளிகள், கல்லூரிகள், மாணவர்கள், தொழிலதிபர்கள், பாமர மக்கள் என அனைவரும் புதுத் தலைநகர் நோக்கி விரைந்தனர். மாட்டுவண்டிகள் உட்படக் கிடைத்த ஊர்திகளையும், ஏதுமற்றவர்கள் கால்நடையாகவும், தங்களது உடைமைகளைச் சுமந்து கொண்டு சுதந்திர சீனுவை நோக்கி விரைந்த வண்ணம் இருந்தனர். புதிய தலைநகரான சுங்கிங் நகரில் பள்ளிகள், கல்லூரிகள், தொழிலகங்கள் நிறுவப்பட்டன. ஜப்பானுக்குப் பணிவதில்லை என்ற உறுதி ஒவ்வொரு சீனரின் உள்ளத்திலும் நிறைந்து நின்று, ஜப்பானிய எதிர்ப்பியக்கத்திற்குத் துணை நின்றது.

சீன அரசிற்குப் பெருவாரியான வருமானத்தைக் கொடுத்துக் கொண்டிருந்த கடலோர மாநிலங்கள் அனைத்தும் ஜப்பானியரால் கைப்பற்றப்பட்டு விட்டன. அரசின் வருவாய் மிகவும் குறைந்தது. சீன அரசின் முக்கிய வருவாய் உப்பு வரியும், நிலவரியுமேயாகும். இவ்விரண்டுமே ஜப்பானியர் வசமாயின. நிலவரியை உயர்த்த சியாங்-கே-ஷேக் தயங்கினுர். இந்நிலையில் வேளாண்மைக்குடியினர் தாங்களாகவே அரசுடன் ஒத்துழைக்க முன்வந்தனர். நிலச்சீர்திருத்தச் சட்டங்கள் இயற்றப்பட்டன. இத்தகைய நிலச்சீர்திருத்தங்களை வலியுறுத்திய பொதுவுடைமைக் கட்சிக்கு மக்கள் ஆதரவு பெருகியது.

வேளாளரிடையே தன் மதிப்பைப் பெற்ற பொதுவுடைமைக் கட்சியினரும் ஜப்பானிய எதிர்ப்பியக்கத்திற்கு ஊன்றுகோலாய் இருந்தனர். பொதுவுடைமைப் படைகள் (8th Route Army) வட சீனுவில் கொரில்லாப் போரைத் துவக்கியது. செம்படைகள் (Red Army) ஜப்பானிய ஆதிக்கத்திலிருந்த வட சீனப் பகுதிகளில் ஊடுருவி, மக்கள் ஆதரவுடன் ஜப்பானியருக்குப் பெருஞ் சேதத்தை விளைவித்தன. இத்தகைய தாக்குதல்களால் 50 மில்லியன் மக்கள் தொகையைக் கொண்ட பெரும் நிலப்பரப்பை ஜப்பானிய ஆதிக்கத்திலிருந்து செம்படையினர் மீட்டனர். இவ்வாறு மீட்கப்பட்டப் பகுதிகளில் (Liberated areas) பொது வுடைமை அரசு ஏற்படுத்தப்பட்டது. பொதுவுடைமையினரின் இவ்வியக்கமும், போர் முறையும், செயல்களும் சியாங்-கே-ஷேக்கிற்கு அதிர்ச்சியளித்தன.

பொதுவுடைமையினரை அழிப்பதையே தனது தலையாய நோக்கமாகக் கொண்டிருந்த சியாங், பின்னர் எவ்வாறு பொது வுடைமையினருடன் இணைந்து ஜப்பானியரை எதிர்க்கத் தலைப் பட்டார் என்பதை முன்பே கண்டோம். இந்த உறவு நீண்ட நாள் நீடிக்கவில்லை. சீன-ஜப்பானியப் போர் முடியு முன்னரே பொது வுடைமையினரும், கோமிண்டாங்குகளும் மோத ஆரம்பித்தனர். ஒருவரை ஒருவர் அழித்து, சீனுவில் ஆதிக்கம் பெறுவதையே தமது அடிப்படைக் கொள்கையாகக் கொண்ட, மாறுபட்ட கருத்து களைக் கொண்ட இருவர் எப்போதுமே இணைந்து உறவு கொண் டாடுவதென்பது இயலாதது. பொதுவுடைமையினர் கோமிண் டாங்கின் ஆதிக்கத்திற்குப் பணிந்து, அவர்களுடைய திட்டங்களை ஏற்றுப் பணியாற்ற மறுத்தனர். கோமிண்டாங் படைகளுக்கும், செம்படைகளுக்கும் நேரடி மோதல்கள் தொடங்கின (1941-1945). இரண்டாம் உலகப் பெரும் போர் தொடங்கிய பின்னரும் இவ்விரு படைகளும் ஒருவரையொருவர் கண்காணிப்ப திலேயே முழுக்கவனத்தையும் செலுத்தினர்.

வாங்சுங்-லியின் பிரிவும், அவர் தலைமையில் ஜப்பானின் கைப் பாவையாக, ஏற்படுத்தப்பட்ட நாங்கிங் போட்டி அரசும், சீனுவின் படுதோல்விகளும் கோமிண்டாங்கின் ஆட்சியை விரட்டி யடித்ததே தவிர, அழிக்கவில்லை. புதிய தலைநகரான சுங்கிங்கில் இருந்து கோமிண்டாங் ஆட்சித் தலைவர் சியாங்-கே-ஷேக் ஜப்பானி யருடன் போரைத் தொடர்ந்தார். இதற்கிடையே பொது வுடைமைக் கட்சியின் செம்படையினருக்கும் கோமிண்டாங்கின் தேசியப் படைகளுக்கு மிடையேயும் பெரும் மோதல்கள் ஏற்பட்டன. பொருளாதாரச் சீர்குலைவும் ஏற்பட்டது. கடல்

வழியாக வெளிநாட்டு உதவி பெறுதலும் ஜப்பானியக் கடற் படையால் தடைசெய்யப்பட்டன. இருப்பினும் ருஷியாவி லிருந்தும், மற்ற மேலை நாடுகளிலிருந்தும் சீனவிற்குப் போர்க் கருவிகளும் உதவிகளும் தரை வழியாக வந்துகொண்டிருந்தன. 1939ஆம் ஆண்டில் தொடங்கிய இரண்டாவது உலகப் போருடன் இந்தச் சீன-ஜப்பானியப் போரும் இணைந்துவிட்டது. 1941-ல் ஜப்பான் முன்னறிவிப்பின்றி பெர்ல் துறைமுகத்தைத் தாக்கியதன் விளைவாக, அமெரிக்காவும் போரில் இறங்கியது.

# 3. ஜப்பானிய-உலகநாடுகள் உறவு (1937-1941)

## பொதுவுடைமை எதிர்ப்பு ஒப்பந்தம்

1929-ல் ஏற்பட்ட உலகப் பொருளாதாரப் பெருமந்தத்தினுல் ஜப்பானும் மிகவும் பாதிக்கப்பட்டது. ஜப்பானில் ஏற்பட்ட அரசியல் மாற்றங்கள், படையினரின் ஆதிக்கத்திற்கு வழிகோலின. படையினர் ஆதிக்கம்பெற்றவுடன், பொருளாதாரச் சிக்கல்களுக்கு வழிவகை காண வேண்டுமெனின் படையாதிக்கக் கொள்கையைக் கடைப்பிடிக்க வேண்டுமென வற்புறுத்தினர். இதன் விளைவாகத் தான் மஞ்சூரியாவைக் கைப்பற்றிய ஜப்பான் (1931) 'மஞ்சுகோ' என்ற பெயரில் தன்னுடைய கைப்பாவை அரசை நியமித்தது. பின்னர் சீனுவின் வட மாநிலங்களையும், ஏதாவது காரணம் காட்டி விழுங்க ஆரம்பித்தது. மஞ்சூரியாவின் வட எல்லையில் ஆதிக்கம் பெற்றிருந்த ருஷியாவை ஜப்பான் தன்னுடைய எதிரியாகவே கருதியது. ருஷியப் பொதுவுடைமைக் கொள்கை சீனுவிலும் வேரூன்றத் தொடங்கியவுடனே ஜப்பான் அச்சமடைந்தது. இதற்கிடையில் ஜப்பானின் மஞ்சூரிய நிகழ்ச்சி, பன்னுட்டுக் கழகத்தினரால் சாடப்பட்டது. இதைக் கண்ட ஜப்பான் பன்னுட்டுக் கழகத்திலிருந்தே வெளியேறியது. இதனுல் உலக நாடுகளிடையே தனித்து நின்ற ஜப்பான் நாசிச ஜெர்மனியுடன் இணைந்து பொதுவுடைமை எதிர்ப்பு ஒப்பந்தம் (Anti-Comintern Pact - 1936) செய்து கொண்டது. பின்னர் பாசிச இத்தாலியும் சேர, ரோம்-பெர்லின்-தோக்கியோ அச்சு உருவானது. ஆரம்பத்தில் பொதுவுடைமைக் கொள்கை எதிர்ப்பியக்கமாகத் தோன்றிய இந்த உறவு, ஆதிக்கக் கொள்கையால் பாதுகாப்பு உறவாக மாறியது. ஜெர்மனியின் ஆதிக்க வெறியால் 1939-ல் ஐரோப்பாவில் ஏற்பட்ட போரில், ஜெர்மானியரின் ஆரம்ப வெற்றிகள் ஜப்பானியருக்கு ஊக்கமளித்தன. ஆசிய

நாடுகளில் ஜப்பானியப் பேரரசை நிறுவும் பேராசையினுல் உந்தப் பெற்ற படையினரின் ஆதிக்க வெறி சீனப் போராக உருவெடுத்து, இரண்டாம் உலகப் போருடன் இணைந்தது.

**ருஷிய-ஜப்பானிய உறவுகள்**

ஜப்பானிய வரலாற்றில் 1894 முதற்கொண்டே ருஷிய-ஜப்பானிய உறவு நல்ல நிலையில் இருந்ததில்லை. பசிபிக் பெருங் கடல் பகுதியில் துறைமுகத்தை வேண்டிய ருஷியா, ஜப்பானின் எழுச்சியை தனக்கு எதிராகத் தோன்றிய போட்டியாகவே ஆரம்பத்திலிருந்து கருதியது. முதல் சீனப் போரின் போதும் (1894-1895), பிறகு ருஷிய-ஜப்பானியப் போரின் போதும் (1904-1905), பின்னர் முதல் உலகப் பெரும் போரின் முடிவிலும் ஜப்பானும், ருஷியாவும் மோதிக்கொண்டதை ஏற்கெனவே கண்டோம். இந்நிலை ஜப்பானின் அழிவு வரை நீடித்தது. மஞ்சூரிய எல்லையில் ஜப்பானுக்கும் ருஷியாவிற்கும் இடையே 1931-லிருந்து போராட்டம் துவங்கியது. ருஷியாவின் தற்காப்பு முயற்சிகளையும், தன் எல்லையை ஜப்பானிய ஆக்கிரமிப்பிலிருந்து பாதுகாத்துக் கொள்ள ருஷியா காட்டிய உறுதியையும், வலிமை யையும் கண்ட ஜப்பான் தன்னைக் காத்துக்கொள்ள வேண்டிப் பொதுவுடைமை எதிர்ப்பு ஒப்பந்தத்தைச் செய்து கொண்டது என்பதைப் பார்த்தோம். இரண்டாவது சீன-ஜப்பானியப் போரில் சீனுவின் பெரும் பகுதிகளை வென்றுவிட்ட ஜப்பான், கிழக்காசிய நாடுகள் முழுவதையும் வெல்ல ஆர்வம் கொண்டது. இம் முயற்சியில் அமெரிக்க நாட்டுடன் போர் ஏற்படக்கூடிய ஆபத்து இருப்பதை உணர்ந்த ஜப்பான், தனது மஞ்சூரிய வடக்கு எல்லையில் இருந்த ருஷியாவுடன் நட்புறவு கொள்ள விழைந்தது. இவ்வுறவுக்கு முன்னோடியாக ஜெர்மனி ருஷியாவுடன் செய்து கொண்ட போர்தவிர்ப்பு ஒப்பந்தம் (Non-aggression Pact) விளங்கியது. தனது நட்புறவு நாடான ஜெர்மனி காட்டிய வழியைப் பின்பற்றி, ஜப்பானும், ருஷியாவுடன் 1941-ல் போர் தவிர்ப்பு ஒப்பந்தமும், நடுநிலைமை ஒப்பந்தமும் (Neutrality Pact) செய்து கொண்டது. அமெரிக்காவுடனே அல்லது பிரிட்டனுடனே போர் ஏற்பட்டால், தன் வடஎல்லையைப் பற்றிக் கவலைப் படாமல் போரில் ஈடுபட ஏதுவாகும் என்று ஜப்பான் முழுமையாக நம்பியது.

**பிரிட்டனும் ஜப்பானும்**

1902-ல் ஏற்படுத்தப்பட்ட ஆங்கில-ஜப்பானிய உடன் படிக்கை, ஜப்பானை வல்லரசாக உலக நாடுகளுக்கு அறிமுகப்

படுத்தியது. 1922-வரை செயலிலிருந்த இவ்வுடன்படிக்கை தான் ஜப்பானின் ஆதிக்க வளர்ச்சிக்கு மிக முக்கிய காரணமாகும். முதல் உலகப் போரிலும், அதற்குப் பின்னரும் பிரிட்டனின் ஆதரவால் ஜப்பான் பெரும்பயன் பெற்றது. 1922-ல் இவ்வுடன் படிக்கை முறிந்தபோதும் ஜப்பானியக் கொள்கைகளுக்கு பிரிட்டன் ஆதரவு காட்டியே வந்தது. சீனுவில் ஜப்பானிய ஆதிக்கம் விரிவடைந்த போதுகூடப் பிரிட்டன் அச்சமுறவில்லை. ஆனல் 1931-க்குப் பிறகு சீனுவை நசுக்கி, தன்னடிமை நாடாக மாற்ற வேண்டுமென்ற ஜப்பானிய உள் நோக்கத்தைப் புரிந்து கொண்ட பிரிட்டன் ஜப்பானிய ஆதிக்கக் கொள்கையை வெறுக்க ஆரம்பித்தது. இரண்டாவது சீன-ஜப்பானியப் போரில் சீனுவில் இருந்த பிரிட்டனின் தொழிலகங்களும் வர்த்தக நிலையங்களும் பாதிக்கப்பட்டன. பெருந்தொகையைச் சீன வளர்ச்சிக்காக முதலீடு செய்திருந்த பிரிட்டன் ஜப்பானின் தாக்குதல்களை எதிர்த்து மறுப்புத் தெரிவித்துச் சீனுவிற்கு உதவ முன் வந்தது. புதிதாக ஏற்படுத்தப்பட்ட 'பர்மா நெடுஞ்சாலை' வழியாகச் சீனு வுக்குப் படைக்கலன்களைப் பிரிட்டன் அனுப்பி உதவி புரிந்தது. 1940-க்குப் பிறகு ஐரோப்பியச் சூழ்நிலைகளால் பிரிட்டன் ஆசியக் கொள்கைகளில் முழுக்கவனத்தையும் செலுத்த முடியவில்லை யெனினும், ஜப்பானின் ஆதிக்க வெறியை உணர்ந்து, அதைத் தடுக்கும் வகையில் ஜப்பானிய எதிர்ப்பியக்கத்திற்கு ஆதர வளித்தது. பர்மாவிலும், மலேயாவிலும் கடுமையான பாதுகாப்பு ஏற்பாடுகளை மேற்கொண்டது.

### பிரான்சு, நெதர்லாந்து-ஜப்பானிய உறவுகள்

1940-ல் பிரான்சும், ஹாலந்தும் நாசிச ஜெர்மனிக்கு அடி பணிந்தன. இவ்விரண்டு நாடுகளுக்கும், கிழக்காசியப் பகுதிகளில் மிகப்பெரிய குடியேற்றங்கள் இருந்தன. பிரான்சுக்கு இந்தோ-சீனுவும், ஹாலந்துக்கு இந்தோனேஷியாவும் உடைமைகளாக இருந்தன. பிரான்சு, ஹாலந்து இவைகளின் வீழ்ச்சியைப் பயன் படுத்திக்கொண்டு, ஜப்பான் தன்னுடைய 'கிழக்காசியப் புதிய ஆதிக்கக் கொள்கை'யை விரிவாக்க எண்ணம் கொண்டது. இதன் காரணம் கோமிண்டாங் சீனுவிற்கு இந்தோ சீனு பகுதிகள் வழி யாக வெளிநாட்டு ஆயுத உதவி கிட்டியது. அதைத் தடுக்கும் பொருட்டு 1940-ல் இந்தோசீனு முழுவதையும் ஜப்பான் கைப்பற்றியது. ஏற்கெனவே ஜெர்மனியிடம் தோல்வியடைந்த பிரான்சில் ஏற்படுத்தப்பட்ட 'விச்சி ஆட்சி' (Vichy Regime) இதை அனுமதித்தது.

கிழக்கிந்தியத் தீவுக் கூட்டங்களில் ஏராளமாகக் கிடைத்த இரப்பர், எண்ணெய், துத்தநாகம் போன்றவைகளைக் கைப்பற்ற ஜப்பான் எண்ணங்கொண்டது. ஜப்பானின் புதிய கிழக்காசிய ஆதிக்கக் கொள்கையின் நோக்கமும் இதுவே என்பதனை உணர்ந்த டச்சு அரசு, இதனைத் தடுக்க முனைந்தது. ஐரோப்பாவில் ஜெர்மனியிடம் தோற்றுப் பணிந்த டச்சு அரசிடம் ஜப்பான் ஏராளமான அளவில் எண்ணெய், இரப்பர், துத்தநாகம் போன்ற கனிப்பொருள்களை வற்புறுத்தியது. பொருளாதார வர்த்தக உரிமைகளையும் வேண்டியது. இவ் வேண்டுகோள்கள் மறுக்கப் படவே தானாகக் கனியாத பழத்தைத் தடிகொண்டு அடித்துப் பழுக்க வைக்க முயன்றது. படைகொண்டுதான் டச்சு அரசைப் பணியவைக்க முடியும் என்பதனை உணர்ந்த ஜப்பான் செயல்படத் துவங்கியது.

### அமெரிக்க-ஜப்பானிய உறவுகள், 1941 வரை

மூடிக்கிடந்த ஜப்பானியக் கதவுகளை வலியத் திறந்து அதனை வெளியுலகுக்கு அறிமுகப்படுத்தி, அதன் வழி ஜப்பானை ஒரு நவீன நாடாகவும், உலக வல்லரசாகவும் மாறவைத்த பெருமை அமெரிக்காவையே சாரும். 1894ஆம் ஆண்டிலிருந்து 1917ஆம் ஆண்டு வரை அமெரிக்க ஜப்பானிய உறவுகள் நட்பின் அடிப்படையில் வளர்ந்துவந்தன. தன் கடற்படையுடன் 1853-ல் தோன்றிய கடற்படைத் தலைவர் பெர்ரிக்குப் பின்னர், பல அமெரிக்கத் தூதுவர்கள் ஜப்பானில் தங்கி, அமெரிக்க ஜப்பானிய உறவை வளர்த்து வந்தனர். ஜப்பானை அடிமைப்படுத்த வேண்டுமென்றோ, தனது குடியேற்ற நாடாக மாற்ற வேண்டுமென்றோ எண்ணம் அமெரிக்காவிற்கு எப்போதுமே இருந்ததில்லை என்பது இங்குக் குறிப்பிடத் தக்கதாகும். ஜப்பானிய வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும், அமெரிக்கா உதவ முன்வந்தது என்பதும் குறிப்பிடத் தக்கதாகும். 'பாக்ஸர்' கலகத்தின் போதும், அதற்குப் பின்னரும் கூட ஜப்பானிய சீனக் கொள்கைகளுக்கு அமெரிக்கா தடையேதும் விதிக்கவில்லை. மாறாக ஐரோப்பிய நாடுகள் சீனாவைத் தங்களுக்குள் கூறு போட்டுக் கொண்டு, 'தங்களின் செல்வாக்குப் பகுதிகள்' என்ற நிலையினை ஏற்படுத்தியதைக் கண்டித்து, சீனாவில் 'அனைத்து நாடுகளுக்கும் சம வர்த்தக உரிமைக் கொள்கையை' (Open door policy) வலியுறுத்தியது. ருஷிய-ஜப்பானியப் போரில் ஜப்பானுக்கு ஆதரவு காட்டிய அமெரிக்கா, அப்போரை முடித்து 'போர்ட்சு மவுத்' உடன்படிக்கையையும் அமெரிக்கக் குடியரசு தலைவர் தியோடர் ரூஸ்வெல்டின் முயற்சியால் ஏற்படுத்திக் கொடுத்தது. ஆனால் இந்த உடன்படிக்கைக்குப் பின்னர்தான் அமெரிக்க-

ஜப்பானிய உறவுகளில் சிறிதளவு விரிசல் காண ஆரம்பித்தது. அடுத்து மஞ்சூரியத் தகராறில் அமெரிக்கா தலையிட்டு ஜப்பானின் ஆதிக்க வளர்ச்சியைத் தடுத்துச் சீனுவைக் காப்பாற்றியது. சீனுவின் அரசியல் இறைமையைக் காத்து, அந்நியரின் வேட்டைக் காடாக, சிறப்பாக ஜப்பானின் ஆதிக்க வெறியினின்று சீனுவைக் காத்து, தூரக்கிழக்கு நாடுகளில் அமைதியை நிலைநாட்டும் பொறுப்பை அமெரிக்கா மேற்கொள்ளத் தொடங்கியது. அமெரிக்காவின் இக் கொள்கை, தன்னைக் கட்டுப்படுத்தி, அழிப்பதற்காகவே என்று எண்ணிய ஜப்பான் மனம் புழுங்கியது. ஜப்பானில் அமெரிக்க வெறுப்புணர்ச்சி வளர்ந்தது.

முதல் உலகப்போரின் போது ஜப்பான் சீனு முழுவதையும் கைப்பற்றும் எண்ணத்தில் தனது இருபத்தொரு கோரிக்கைகளைச் சீனுவுக்கு அனுப்பியது. இக்கோரிக்கைகள் ஏற்கப்பட்டால் சீனுவின் சுதந்திரம் பறிபோகும் என்றும், கிழக்காசிய நாடுகளில் ஜப்பானியர் ஆதிக்கம் மேலோங்கும் என்றும் உணர்ந்த அமெரிக்கா இதில் தலையிட்டுத் தடுத்தது. 1917-ல் ஏற்பட்ட 'லான்சிங்-இஷி உடன்படிக்கையில்' ஜப்பானுக்குச் சீனுவிலிருந்த சிறப்புரிமைகளை ஏற்றுக் கொண்டது. இதனுல் ஜப்பானின் செல்வாக்குச் சீனுவில் நிலைத்து நிற்கவும், வளரவும் அமெரிக்கா உதவியது. 'இவ்வாறு அமெரிக்கா முதலிலிருந்தே சீனுவை ஒரு கறவைப் பசுவாகவும், ஜப்பானை அதன் பால்காரனுகவுமிருந்து, பயனை அனுபவிக்க அனுமதித்ததே தவிர, அதனைக் கொன்று தின்னும் கொலைகாரனுக அனுமதிக்கவில்லை என்பது புலனுகிறது.'[1] முதல் உலகப் போருக்குப் பின்னர் ஏற்பட்ட உடன்படிக்கையில் சீனு, தன் நாட்டில் ஜெர்மனி உரிமைப் பெற்றிருந்த ஷாண்டுங் பகுதியைத் தனக்குத்தர வேண்டும் என்று வேண்டியபோது, அமெரிக்கக் குடியரசு தலைவர் வில்சன் இதை ஏற்றுக் கொள்ளும்படி ஜப்பானை வற்புறுத்தினுர். ஜப்பான் தனது கோரிக்கைகள் அனைத்தும் ஏற்கப்படாவிட்டால் சமாதான மாநாட்டிலிருந்து வெளியேறி விடுவதாக அச்சுறுத்திய பிறகே, ஜப்பானின் வேண்டுகோள்கள் அனைத்தும் ஏற்கப்பட்டன.

அடுத்தாற்போல அமெரிக்காவின் முயற்சியால் கூட்டப்பட்ட வாஷிங்டன் மாநாடும் (1922) ஜப்பானியரை அமெரிக்காவின் மீது ஐயப்பாடும், அச்சமும் கொள்ளச் செய்தன. ஆங்கில ஜப்பானிய உறவு முறிவு, கடற்படைக் கட்டுப்பாட்டு விகிதம் ஆகிய அனைத்தும் ஜப்பானிய ஆதிக்கக் கொள்கைகளுக்கும் தடை

1. ஜப்பானிய வரலாறு—பேராசிரியர் கோ. தங்கவேலு ... பக்கம். 411.

விதிக்கவே ஏற்படுத்தப்பட்டன. ஆனால் வாஷிங்டன் மாநாட்டின் முடிவில் ஏற்படுத்தப்பட்ட 'நான்கு வல்லரசுகளின் ஒப்பந்தமும்', ஒன்பது வல்லரசுகளின் ஒப்பந்தமும் ஜப்பானின் ஆதிக்க மனப் பான்மையை அடியோடு ஒழிக்கமுடியவில்லை. அதன் ஒரு சில இழப்புகள் அதன் எதிர்கால ஆதிக்கப் பேராசைக்கு ஊக்கமளிப்ப தாகவே நின்றன. இதனால் மஞ்சூரியப் பிரச்சினை தூரக்கிழக்கு நாடுகளின் மையப் பிரச்சினையாக மாறியது. மேலும் ஜப்பானும் அமெரிக்காவும் தங்களுக்குள் நேரடியான அத்துமீறலும், நாடு பிடித்தலும் இல்லாமல் சீனாவையும், மஞ்சூரியாவையும், ஆவாயையும், பிலிப்பைன் தீவுகளையும் மையமாகக் கொண்டு பகைமையுணர்ச்சியையும், நட்பையும் இடையிடையே வளர்த்துக் கொண்டன.

இதற்கிடையே அமெரிக்கரும், ஜப்பானியரும் ஒருவரைப் பற்றி மற்றொருவர் கொண்டிருந்த தவறான ஐயப்பாடுகளும், இவ்விரு நாட்டினரிடையே பகை வளர ஏதுவாய் இருந்தன. ஜெர்மனியுடன் சீனாவின் உறவை முறித்து, ஜப்பானியரின் விருப்பத்திற்கு மாறாகச் சீனாவை முதல் உலகப்போரில் இறங்கச் செய்தது ஜப்பான். பிறகு சீனாவுக்காகச் சமாதான மாநாட்டில் பரிந்து பேசியதும், அதற்கு முன்பிருந்தே சீனாவில் அனைத்து நாடுகளுக்கும் சமவர்த்தக உரிமைக் கொள்கையை அமெரிக்கா வலியுறுத்தி வந்திருந்தாலும், சீனாவில் பெருமளவுக்கு அமெரிக்கா முதலீடு செய்து பொருளாதார வளர்ச்சியில் மிகுந்த அக்கறை காட்டுவதைக் கண்ட ஜப்பான் அமெரிக்காவைச் சந்தேகக்கண் கொண்டு காணத் துவங்கியது. தாங்கள் செல்வாக்குப் பெறும் இடங்களிலெல்லாம் அமெரிக்கர்கள் தங்களுக்குப் போட்டியாகச் செயல்படுவதாக ஜப்பானியர்கள் கருதினர். மேற்கு நோக்கி விரிவடைய வேண்டும் என்ற ஆதிக்கக் கொள்கையை மறைத்து, சீனாவுக்கு உதவுதல் என்ற போர்வையில் எளிதாக அமெரிக்கர்கள் நுழைகிறார்கள் என்றே ஜப்பானியர் கருதினர். அட்லாண்டிக் கடற்கரையிலிருந்து மேற்கு நோக்கி வளர்ந்து, பசிபிக் கடற்கரைப் பகுதிகளில் முன்னேறி, ஆவாய்த் தீவைக் கைப்பற்றி, பிலிப்பைன் தீவுகளை வென்று, நிலைபெற்றிருந்த அமெரிக்கரின் இந்த மேற்கு நோக்கி விரிவடையும் வளர்ச்சிக் கொள்கையினை ஜப்பான் தவறாகக் கருதியது. பசிபிக் பெருங்கடற் பகுதிகளில் தனது நிலையினை உறுதிபடுத்திக் கொண்ட அமெரிக்காவைத் தனது முதல் எதிரி என்றும், ஜப்பான் கருதியது. மேலும் அமெரிக்கா போன்ற வல்லரசுகளின் தடையற்ற உதவி சீனாவிற்கு இல்லையென்றால், வெகு எளிதாகச் சீனாவைத் தான் வென்று அடிமைப்படுத்தியிருக்க

முடியும் என்று மனப்பால் குடித்த ஜப்பான் அமெரிக்கர்களை வெறுக்கத் தொடங்கியது.

ஜப்பான் அமெரிக்காவைக் கண்டு ஐயுற்றதைப் போலவே ஜப்பான் தூரக்கிழக்கு நாடுகளிலும், பசிபிக் பெருங்கடலிலும் தன் ஆதிக்கத்தைப் பெருக்குவதைக் கண்ட அமெரிக்கா, தமக்குச் சொந்தமான பிலிப்பைன் தீவுகளையும், ஆவாயையும் ஜப்பான் கைப்பற்றிக் கொள்ளுமென அஞ்சியது. அதற்கேற்றாற்போல ஆவாய் மக்கள் தொகையில் பெருவாரியானவர்கள் ஜப்பானியராகவே இருந்தனர். மேலும் மெக்சிகோவிலும், மைய அமெரிக்காவிலும் ஜப்பானியரின் செல்வாக்கு மிகுந்து காணப்பட்டது. பெருகிவரும் ஜப்பானியக் கடற்படையைக் கண்ட அமெரிக்கர்கள் அஃது பசிபிக் பெருங்கடலை ஆதிக்கம் செய்து கொள்ளுமோவென அஞ்சினார்கள். ஆனால் உண்மையில் ஜப்பானியரின் நோக்கமெல்லாம் சீனுவைப் பற்றியதே தவிர அமெரிக்காவைப் பற்றியதன்று.

முதல் உலகப் போரின் பின்னர் ஏற்பட்ட பொருளாதார மந்தம் ஜப்பானியரையும் பாதித்தது. இதனை ஈடுசெய்ய ஜப்பான் மஞ்சூரியா மீது ஆதிக்கம் செய்ய முனைந்தது. ஜப்பான் மஞ்சூரியப் படையெடுப்பும், பன்னாட்டுக் கழகத்தினிடம் சீனு முறையிட்டதையும், பன்னாட்டுக் கழகத்தின் செயலற்ற நிலையையும், அமெரிக்க ஐக்கிய நாடுகளின் எதிர்ப்பும், அதன் காரணமாக ஜப்பான் பன்னாட்டுக் கழகத்தினின்றும் வெளியேறியதையும் முன்னரே விளக்கமாகக் குறிப்பிட்டுள்ளோம்.

தனது படை வலிமையை அளவுக்கு மீறி வளர்த்துக்கொண்ட ஜப்பானில், அரசியலிலும் படையினர் செல்வாக்குப் பெற்றனர். மக்களாட்சி முறை மறைந்தது. படையினர் சீனுமீது போர் தொடுத்தனர். அமெரிக்கா இப் போரை வன்மையாகக் கண்டித்தது. இதனால் அமெரிக்க ஜப்பானிய உறவு முறையில் சிக்கல்கள் வளரத் தொடங்கின. அமெரிக்க தகரிப்படகு யாங்ட்சி ஆற்றில் ஜப்பானியத் தாக்குதல்களுக்கு இரையானது. ஜப்பான் இந் நிகழ்ச்சிக்கு வருத்தம் தெரிவித்து இழப்பீடும் செய்தது. எனினும் அமெரிக்க ஜப்பானிய உறவில் முன்னேற்றம் ஏற்படவில்லை.

## அமெரிக்காவில் குடியேறிய ஜப்பானியர்-பிரச்சினைகள் (Friction over Japanese emigration to the U.S.A.)

ஜப்பானின் அண்டை நாடுகளும், பசிபிக் பெருங்கடல் பகுதியில் ஆதிக்கம் செலுத்திவந்த மேலை நாடுகளும்,

ஜப்பானியரின் ஆதிக்க வளர்ச்சியைக் கண்டு அஞ்சினர்; வெறுப்புக் கொண்டனர். இதற்கு அடுத்தாற் போல ஜப்பானுக்கும் மற்ற நாடுகளுக்குமிடையே குடியேற்றக் கொள்கையிலும் தகராறுகள் ஏற்பட்டன. சிறப்பாக அமெரிக்காவிற்கும், ஜப்பானுக்குமிடையே ஏற்பட்ட விரோத மனப்பான்மைக்கு அமெரிக்காவில் குடியேறிய ஜப்பானியரைப் பற்றிய பிரச்சினைகளும் முக்கிய காரணமாகும். ஆவாயிலும், அமெரிக்காவின் மேற்குக் கரையில் அமைந்துள்ள நகரங்களிலும் உள்ள தொழிலகங்களிலும் தோட்டங்களிலும் மிகத் தாராளமாகச் சீன ஜப்பானியக் கூலிகள் குறைந்த கூலிக்கு வேலை செய்தனர். இவர்கள் தங்கள் நாட்டில் பெறும் கூலியை விட அமெரிக்காவில் பன்மடங்கு அதிகமான கூலியைப் பெற்றனர். இதனால் ஏராளமான ஜப்பானியக் கூலிகளும், மற்றும் வணிகர் களும், வேறு தொழிலாளர்களும் அமெரிக்கா நோக்கிச் சென்ற வண்ணம் இருந்தனர். ஆவாய் அமெரிக்காவுடன் இணைத்துக் கொள்ளப்பட்ட பின்னர் மேலும் அதிகமான ஜப்பானியர் அமெரிக்கத் தேயிலைத்தோட்டங்களில் பணியாள்களாக அமர்த்தப் பட்டனர். முதன் முதலில் ஆவாயிலும், கலிபோர்னியாவிலும் குடியேறிய இவர்கள் 1898ஆம் ஆண்டிற்குப் பிறகு அமெரிக்கா வெங்கிலும் சென்று குடியேறினர். இவ்வாறு அமெரிக்காவில் குறைந்த கூலிக்குப் பணியாற்றும் ஆசிய நாட்டு மக்கள் எண்ணிக்கை வளர்ந்துகொண்டே சென்றது. கூலிக்குறைவை எதிர்த்துப் போராட்டம் நடத்திய தொழிற் சங்கங்கள், குறைந்த கூலியையும் மனநிறைவோடு ஏற்றுப்பணிபுரிய முன்வந்த ஜப்பானி யரையும் மற்றையோரையும் வெறுக்கத் தொடங்கின. இவர் களைத் தடுத்து நிறுத்தாவிடில் எதிர்காலத்தில் அமெரிக்க மேற்குக் கடற்கரைப் பகுதி முழுவதிலும் அமெரிக்கரல்லாதவரே பெரும் வலிமை பெற்றுவிடுவரென அஞ்சினர். குறிப்பாக, பசிபிக் கடற் கரை முழுவதிலும் ஜப்பானியர்களே நிறைந்து காணப்பட்டனர். ஜப்பானிலிருந்து வெளியேறிய மக்கள் தொகையில் 41 சதவீதத் திற்கும் அதிகமானோர் அமெரிக்காவில் வசித்தனர்.

அமெரிக்காவில் குடியேறி, தங்கள் பழக்கவழக்கங்கள், உடைகள், வாழ்க்கை முறை அனைத்திலும் அமெரிக்கரையே பின் பற்றி, அமெரிக்காவின் வளத்திற்கு அமெரிக்கர்களைவிடச் சற்று அதிகமாகவேகூட உழைக்க முன்வந்த ஜப்பானியர்களை வெறுத்து ஒதுக்கிவிடவோ, வெளியேற்றிவிடவோ இயலவில்லை. அமெரிக்கா சென்று பல துறைகளிலும் பட்டம்பெற்ற ஜப்பானியர் தங்களை அமெரிக்கர்களாகவே கருதி அமெரிக்க மேம்பாட்டிற்குப் பாடு பட்டனர். இவர்களை அமெரிக்கர்களில் பெரும்பாலோர் விரும் பவும் செய்தனர்.

ஆனால் இத்தகைய சுமுகமான அமெரிக்க ஜப்பானிய நல்லுறவு நீடிக்கவில்லை. ஜப்பானில் ஏற்பட்ட மக்கள் பெருக்கம், ஏராளமான ஜப்பானியரை அயல் நாடுகளுக்குக் குடியேற்றியது. இவர்களில் பெரும்பாலானோர் அமெரிக்காவில் குடியேறுவதையே விரும்பினர். இவ்வாறு ஜப்பானியரின் எண்ணிக்கை அதிகமாவதை அமெரிக்கர்கள் வெறுக்கத் தொடங்கினர். இதே வெறுப்புணர்ச்சியைப் பரப்பப் பல இயக்கங்கள் தோன்றி, ஜப்பானியரைப் பற்றிய தவறான, தரக்குறைவான கருத்துகளை மக்களிடையே பரப்பின. அமெரிக்க ஜப்பானிய மக்களிடையே இருந்த நல்லுறவு முறியத் தொடங்கியது, இதனையுணர்ந்த ஜப்பானிய அரசு, அமெரிக்காவில் ஜப்பானியர் குடியேறுவதைத் தடுக்கச் சட்டம் இயற்றியது. மஞ்சள் இனத்தவரைப் பற்றிய அச்சம் (Yellow peril) அமெரிக்கா முழுவதும் பரவியது. இந்தப் பயத்தை அமெரிக்க மக்களிடையே உருவாக்கிய இயக்கங்கள், அமெரிக்காவில் பணிபுரியும் ஜப்பானியருக்குத் தொல்லைகள் விளைவித்தன; வெளியேறும்படி அச்சுறுத்தின. ஜப்பானியர் வெறுப்புணர்ச்சி அமெரிக்கர் ஒவ்வொருவர் உள்ளத்திலும் வளர்ந்தது. சான்பிரான்சிஸ்கோ நகர் கல்விக் கழகம் ஜப்பானிய சீன மாணவர்களைப் பிரித்து, அவர்களுக்கென தனிக் கல்விக் கூடங்களை ஏற்படுத்த முனைந்தது. கலிபோர்னியா மாநிலத்தில் ஜப்பானியர் குடியேறுவதைத் தடுக்கும் வகையில் சட்டங்கள் வரையப்பட்டன. இதனைக் கண்ட அமெரிக்கக் குடியரசு தலைவர் தியோடர் ரூஸ்வெல்ட் தலையிட்டு, ஜப்பானிய எதிர்ப்புச் சட்டங்களை நீக்க முயற்சியெடுத்துக் கொண்டார். ஜப்பானிய மக்களுக்குப் பாதுகாப்பு அளிக்கவும் உறுதியளித்தார். இதனையடுத்து அமெரிக்க காங்கிரசு 1906ஆம் ஆண்டு ஓர் சட்டத்தை நிறைவேற்றியது. அயல்நாடுகளிலிருந்து குடியேறும் வேண்டப்படாத இனத்தவர்களைத் தடுத்து நிறுத்தும் அதிகாரத்தை இச் சட்டம் குடியரசு தலைவருக்கு அளித்தது. இதன் பின்னர், குடியரசு தலைவர் ஜப்பானிய அரசுடன் தொடர்பு கொண்டு, ஜப்பானியக் கூலிகள் அமெரிக்காவில் குடியேறுவதைத் தடுக்க ஓர் ஒப்பந்தத்தைச் செய்துகொண்டார். இந்த ஒப்பந்தம் 'பெருந்தகையர் ஒப்பந்தம்' (Gentlemen's Agreement) என அழைக்கப்படுகின்றது.

ஏராளமான ஜப்பானியர் மனைவி மக்களுடன் குடியேறுவதைக் கண்ட கலிபோர்னியா மாநில அரசு, இதனால் ஜப்பானியரின் எண்ணிக்கை உயர்ந்துவிடுமோ என அஞ்சியது. இதைத் தடுக்கும் வகையில் ஜப்பானியருக்கு நில உரிமையை மறுக்கும் சட்டத்தை இயற்றியது. குடியரசு தலைவரின் வேண்டுகோளையும் மறுத்து, இச் சட்டத்தைச் செயல்படுத்தியது. இதனையடுத்து

இதாஹோ (Idaho), ஒரிகன் (Oregon) ஆகிய மாநிலச் சட்ட மன்றங்களும் இதேபோல் சட்டங்கள் கொண்டுவர முயன்றன. அமெரிக்காவில் பிறந்த ஜப்பானியருக்கு மட்டும் குடியுரிமை வழங்கப்பட்டது. மற்றவர்களுக்குக் குடியுரிமையும் மறுக்கப் பட்டது. இத்தகைய ஜப்பானியருக்கு விரோதமான சட்டங்கள் கொண்டு வருதலைப் பற்றியப் பிரச்சினை அமெரிக்கக் காங்கிரசிலும் விவாதிக்கப்பட்டது. இவற்றையெல்லாம் கண்ணுற்ற ஜப் பானியர் தாங்கள் உரிமையற்ற கூலிகளாய் நடத்தப்படுவதையும், தங்கள் நாட்டையும் அமெரிக்கர் கேவலமாக மதிப்பதையும் கண்டு மனம் புழுங்கினர். இதே போல நியூசிலாந்து, கனடா, தென் அமெரிக்க நாடுகள் ஆகியவையும் ஆசிய மக்களை, குறிப்பாக ஜப்பானியரை வெளியேற்றவும், குடியேறுவதைத் தடுக்கவும் முனைத்தன.

### பெர்ல் துறைமுகம் தாக்கப்படுதல் (Attack on Pearl Harbour 7th December, 1941)

தன்னுடைய மக்களுக்கு அமெரிக்க அரசு இழைக்கும் அநீதி களையும், அவமானத்தையும்கூட ஒரு பொருட்டாக மதிக்காமல், சீனு முழுவதிலும் தங்கள் ஆதிக்கத்தைப் பரப்புவதிலேயே ஜப் பானியர் கண்ணும் கருத்துமாக இருந்தனர். 1931ஆம் ஆண்டு சீனுமீது ஜப்பான் போரைத் தொடங்கியதிலிருந்து அமெரிக்கா ஜப்பானின் போக்கைக் கண்டித்து, அதன் வெறுப்பை அதிகப் படுத்தக்கூடிய பலதரப்பட்ட எச்சரிக்கைகளை விடுத்தது என்பதை யும், அமெரிக்கத் தகரிப் படகு ஒன்றை ஜப்பானியர் யாங்ட்சி நதியில் மூழ்கடித்து, அதற்கு இழப்பீடும் கொடுத்தனர் என்பதையும் முன்னரே குறிப்பிட்டுள்ளோம்.

இச் சம்பவத்திற்குப் பின்னர் வலிமைற்ற சீனுவில் பேராதிக்கம் செலுத்தும் கொள்கையை ஜப்பான் கைவிடும் வரையில் தானும் ஓயப்போவதில்லை என அமெரிக்கா தீர்மானித்தது. சீனுவை வலுப்படுத்திக் காப்பது தனது கடமையெனவும் அமெரிக்கா கருதியது. ஜப்பானுடன் அமெரிக்கா பெருமளவு வணிகத் தொடர்பு கொண்டு பயன் பெறுகின்றனர் என்றும், எனவே தென் கிழக்காசியாவில் ஜப்பானின் புதிய ஆதிக்கக் கொள்கையை ஆதரிப்பதன் மூலம் அமெரிக்கா மிகுந்த பயன்பெறும் என்றும் வாதிட்டு, அமெரிக்க-ஜப்பானிய நேரடிப் போரைத் தடுக்கும் எண்ணங்களும் அமெரிக்க மக்களிடையே தோன்றியிருந்தன. ஆனாலும் ஜப்பானியப் பேராதிக்கக் கொள்கையும், ஆசியா முழு வதிலும் ஆதிக்கம் செலுத்த முயலும் பேராசையும், அமெரிக்கர் களை ஜப்பானியர் மீது அளவற்ற வெறுப்புக்கொள்ளச் செய்தன.

இதனடிப்படையில்தான் 1938-ல் அமெரிக்கா பிற நாடுகளுக்கு வேண்டுகோள் விடுத்து, ஜப்பானுக்கு வெடி மருந்துப் பொருள்களோ விமானங்களோ, படைக்கலப் பொருள்களோ கொடுக்க வேண்டாமென வேண்டிக் கொண்டது. 1939-ல், தான் ஜப்பானுடன் கொண்டிருந்த வணிக ஒப்பந்தங்களை முறித்துக் கொண்டது. 1940-ல் ஜப்பானுக்கு எப்பொருளையும் அரசு அனுமதியின்றி ஏற்றுமதி செய்யக்கூடாதென்று தடைவிதித்தது. அமெரிக்காவில் இருந்த ஜப்பானியரின் சொத்து முழுவதும் அரசின் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவரப்பட்டது (Japanese assets in the U. S. A were 'Irozen'). இதனால் ஜப்பானியப் பொருள்கள் அமெரிக்காவில் கேட்பாரின்றிக் குவிந்து கிடந்தன. ஜப்பானியத் தொழிலகங்களுக்குத் தேவையான மூலப் பொருள்கள் அமெரிக்காவிலிருந்து ஏற்றுமதியாவது அடியோடு நிறுத்தப் பட்டது.

1939ஆம் ஆண்டிலிருந்து ஐரோப்பாவையே ஆட்டிப் படைத்த இரண்டாம் உலகப் போர் பசிபிக் பெருங்கடல் பகுதிகளிலும் எதிரொலிக்கத் தொடங்கியது. தென்கிழக்காசிய நாடுகளில் ஜப்பானியராதிக்கம் பரவவொட்டாமல் தடுப்பதைத் தனது குறிக்கோளாகக் கொண்ட அமெரிக்கா, நான்கு நாடுகளின் கூட்டிணைவை ஏற்படுத்தியது. இதற்கு ABCD வல்லரசுகள் என்று பெயர் (A-America; B-Britain; C-China; & D-The Dutch). இந் நாடுகளின் கிழக்காசியப் பகுதிகளில் ஜப்பானின் பொருள் வளமோ, படைவளமோ பெருகாமல் பார்த்துக்கொண்டன.

இதற்கிடையே அமெரிக்க ஒன்றிய நாடுகளின் செயலாளர் கார்டல் ஹல் (Cordell Hull) என்பவரும், வாஷிங்டனில் ஜப்பானியத் தூதுவராக இருந்த தளபதி நொமுரா கிச்சி சாபுரோவும் (Admiral Nomura Kichi Saburo) பேச்சு வார்த்தைகளின் மூலம் சமாதானம் காணும் முயற்சியில் இறங்கினர் (1941). இப் பேச்சு வார்த்தைகள் நடந்து கொண்டிருந்தபோதே ஜப்பான் திடீரென முன்னறிவிப்பு ஏதுமின்றி (December, 7, 1941) பெர்ல் துறைமுகத்தைக் தாக்கியது. 150-க்கும் அதிகமான ஜப்பானியப் போர் விமானங்கள், அமெரிக்காவின் பசிபிக் கடற்படைத் தளமான பெர்ல் துறைமுகம் மீது குண்டு மாரி பொழிந்தன. 8 பெரிய போர்க் கப்பல்கள் மூழ்கடிக்கப்பட்டன. 2343 பேர் கொல்லப்பட்டனர். 1272 பேர் காயமுற்றனர் 960 பேர் காணுமற் போயினர். அமெரிக்கப் பசிபிக் கடற்படை பெரும் நாசத்திற்குள்ளானது. 'இத் தாக்குதல்களினால் ஏற்பட்ட சேதத்தைச் சரிப்படுத்த அளவற்ற செல்வமும், செயல் நுணுக்கமும், கருவிகளும், எண்ணற்ற வீரர்களையும் கொண்டு உலக நாடு

களிலேயே தலை சிறந்து விளங்கிய அமெரிக்காவிற்கே ஓராண்டுக் காலம் தேவைப்பட்டது என்றால், ஜப்பானியத் தாக்குதலின் வலிமையைப் பற்றி விளக்கவும் வேண்டுமோ? அமெரிக்க நாடு போரில் கலந்து கொள்வதைப் பற்றிய மாறுபட்ட கருத்துகள், எதிர்ப்புகள் அமெரிக்க மக்களிடையே இருந்தன. டிசம்பர் 7ஆம் நாளுக்குப் பின்னர் அமெரிக்க மக்கள் அனைவரும் தங்கள் வேற்றுமையை மறந்து, தங்கள் நாட்டின் பெருமையை நிலை நாட்டத் திடீரென்று தாக்கிய எதிரியை முறியடிக்கத் துடித்தனர். அமெரிக்கக் குடியரசு தலைவர் பிராங்க்ளின் டிரூஸ்வெல்ட் போர் அறிவிப்புச் செய்தார். இவ்வறிப்பைப் பின்பற்றி பிரிட்டன், சீனா, ஹாலந்து ஆகிய நாடுகளும் ஜப்பான்மீது போர் தொடுத்தன.

# 4. பசிபிக் பெருங்கடல் பகுதியில் இரண்டாம் உலகப்போர்

ஜப்பான் இரண்டாம் உலகப் போரில் இறங்குவதற்கான முக்கிய காரணமாகத் தளபதி தோஜோவின் தலைமையிலான இராணுவத்தினர்தான் என்று திட்டவட்டமாகக் கூறமுடியாது. பிரிட்டன் தன்னைவிட்டுப் பிரிந்ததும், வாஷிங்டன் மாநாட்டில் போர்ப் படைகளை வைத்திருக்க வேண்டிய அளவினையும் முறைகளையும் நிர்ணயித்ததும், சீனாவில் தான் ஆதிக்கம் பெற்றதும், இதற்கேற்றாற்போலத் தன் படை வலிமையும், பொருள் வலிமையும், மக்கள் தொகைப் பெருக்கமும், இத்தனைக்கும் மேலாகத் தன் முன்னேற்றத்திற்கும், ஆதிக்க வளர்ச்சிக்கும் அமெரிக்கா தடையாக நின்றதுமே ஜப்பான் இரண்டாம் உலகப் போரில் இறங்குவதற்குக் காரணமாக இருந்தன. உலகில் அமைதியையும், முன்னேற்றத்தையும் ஏற்படுத்தும் குறிக்கோள்களோடு ஏற்படுத்தப்பட்ட பன்னாட்டுக் கழகம் தன் ஆணைகளை மீறிய நாடுகளைத் தடுத்து, தண்டித்து அமைதிப்படுத்தும் பணியில் தோல்வியுற்றதாலும், உலகில் வல்லாட்சி வளர்ந்தது. வெர்சேல்ஸ் உடன்படிக்கையின்போது சுமத்தப்பட்ட பழியினாலும், பழிவாங்கும் நோக்கில் தன்னை நடத்திய முறைகளினாலும் வெகுண்ட ஜெர்மனியில் 'நாசிசம்' வளர்ந்தது. ஹிட்லரின் தலைமையில் நாசிச சர்வாதிகார ஜெர்மனி வளர்ந்தது. இத்தாலியில் 'பாசிச' சர்வாதிகார ஆட்சியும், ருஷியாவில் பொதுவுடைமையினரின் வல்லாட்சியும் ஏற்பட்டன. இந் நாடுகளைப் பின்பற்றிய ஜப்பானும் தன்னைக் கிழக்காசிய நாடுகளின் தலைவனாக, பாதுகாவலனாக நினைத்து வளர்ந்தது. வல்லாட்சி ஏற்படுத்தியது. ஆதிக்கக் கொள்கைகளை ஏற்றது. படைப்பலம் வளர்த்து, தனது ஆதிக்கப் பேராசையையும், கூடவே வளர்த்தது. இதற்கு உறுதுணையாக ஜெர்மனியுடன் செய்துகொண்ட பொதுவுடைமை ஒப்பந்தத்தை மாற்றி, இராணுவ அடிப்படையில் ஒப்பந்தம் ஒன்றைச் செய்து




நேச நாடுகளின் எதிர்த் தாக்குதல்கள் (1943-1945)

கொண்டது. இதனுடன் இத்தாலியும் சேரவே ரோம்-பெர்லின்-தோக்கியோ அச்சு உருவாகியது (Rome-Berlin Tokyo Axis-September 1940). ஜப்பான் தன்னுடைய படை வலிமையிலும், பொருளாதார வளர்ச்சியிலும் பெருமையடைந்தது. ஆசிய நாடுகளின் தலைமையைத் தானுக எடுத்துக்கொள்ள வேண்டித் தன்னைப் போருக்கு ஆயத்தம் செய்துகொண்டது.

இவ் வெண்ணங்களை உறுதிப்படுத்தும் வகையில் உள்நாட்டு அரசியல் பொருளாதாரக் கொள்கைகள் மாற்றம் பெற்றன. மஞ்சூரிய வெற்றிக்குப் பின்னர் படையினர் மக்களிடையே நன் மதிப்புப் பெற்றனர். திறமையற்ற, ஊழல் மிகுந்த, சுயநலமி களான அரசியல் கட்சிகள் மதிப்பிழந்தன. ஓரளவுக்கு மக்க ளிடையே செல்வாக்குப் பெற்றிருந்த சையூகாய் (Seiyukai), மின்சிதோ (Minsito) அரசியல் கட்சிகள் கலைந்தன. படையினர் தான் ஜப்பானியரின் பெருமையை நிலைநாட்டி, மக்களின் நல் வாழ்வுக்கு உத்தரவாதம் அளிக்கமுடியும் என்ற நம்பிக்கை மக்க ளிடையே பரவியது. மக்களாட்சிக் கொள்கைகளில் மாருத நம்பிக்கைக் கொண்டிருந்தவர்களும், இத்தகைய எண்ணங்களை ஏற்றனர் என்பது வியப்பிற்குரியதாகும். ஜப்பான் நாட்டுத் தொழில்கள் அனைத்துமே படைக் கருவிகளை உற்பத்தி செய்யவோ, படையினருக்கு உதவும் வகையில் துணைத் தொழில்களாகவோ மாற்றம் பெற்றன. இவ்வாறு ஆக்கம் பெற்ற ஜப்பானிய இராணுவ ஆட்சிக்குப் போர் வெறிபிடித்த தளபதி தோஜோ தலைமை ஏற்ருர். சீனுவுடன் தொடர்ந்த போரும், ஜெர்மனி, ருஷியாவுடன் நட்புறவும் நல்வாய்ப்புகளாய் அமைந்தன.

சீனுவுடன் ஏற்பட்ட பெரும் போர் முடிவடையுமுன்னரே ஜப்பான் இரண்டாம் உலகப் போரில் இறங்கியது என்பதை முன்பே கண்டோம். 1939-ல் ஐரோப்பாவில் ஏற்பட்ட போரில் ஹிட்லரின் நாசிப் படைகள் நெதர்லாந்து, டென்மார்க், நார்வே நாடுகளைப் பிடித்து, பிரான்சு முழுவதையும் வென்ற பின்னர், லண்டன் மாநகரைக் குண்டு வீசித் தாக்கி அழிக்க முயன்றது. இத்தாலியும் வட ஆப்பிரிக்காவிலும் பிரான்சின் தென் பகுதி யிலும் வெற்றிகரமாகப் போரைத் துவக்கியது. இந் நிலையால் நிலைகுலைந்த, தங்களைக் காத்துக்கொள்ளவே இயலாத ஐரோப்பிய நாடுகளின் நிலையைத் தனக்குச் சாதகமாகக் கொண்டு தென் கிழக்காசிய நாடுகள் முழுவதையும் தனதாக்கிக்கொள்ள விழைந்தது ஜப்பான். மேலும், சீனுவுடன் தொடங்கிய போர் களாலும், அமெரிக்க ஜப்பானிய உறவு முறிந்ததாலும் ஏற்பட்ட வர்த்தகப் பொருளாதார நட்டங்களை, தென் கிழக்காசிய நாடுக

னைத்தையும் கைப்பற்றுவதன் மூலம் சரிக்கட்டலாம் என மனப்பால் குடித்த ஜப்பான், அமெரிக்காவின் வலிமையை ஒடுக்கும் எண்ணம் கொண்டது. விரைவான திட்டங்களைத் தீட்டியது. இதன் விளைவுதான் பெர்ல் துறைமுகம் (Pearl Harbour) தாக்கப்படுதல் (December 7, 1941). ஜப்பான் இரண்டாம் உலகப் போரில் முழுமூச்சுடன் ஈடுபடுதல் ஆகும்.

ஜப்பானிய விமானங்கள் பெர்ல் துறைமுகத்தில் குண்டுமாரி பொழிந்த அதே நேரத்தில் குவாம் தீவுகள், பிலிப்பைன் தீவுகள், சிங்கப்பூர் ஆகிய பகுதிகளிலும் ஜப்பானிய விமானங்கள் எதிர் பாராத விதத்தில் பேரழிவை விண்ணிலிருந்து உண்டாக்கின. டிசம்பர் 8ஆம் நாள் அமெரிக்கா, பிரிட்டன், நெதர்லாந்து, ஆஸ்திரேலியா, தென் அமெரிக்க நாடுகள் ஆகிய நாடுகளனைத்தும் ஜப்பானின் மீது போர் தொடுத்தன.

**ஜப்பானின் வியத்தகு வெற்றிகள்**

போரின் ஆரம்ப நிலையில் தயாராக இருந்த போர் வெறி கொண்ட ஜப்பானியப் படைகள் வியத்தகு வெற்றி பெற்றன. மூன்றே வாரங்களில் ஒரு நூற்றாண்டிற்கும் மேலாகப் பிரிட்டனின் பிடியிலிருந்த ஹாங்காங் நகர் வீழ்ந்தது (December 25, 1941). மலேயா தீபகற்பமும். சிங்கப்பூரும் இரண்டே மாதங்களில் கைப்பற்றப்பட்டன (February 15, 1942). ஜூன் மாத இறுதிக்குள் பர்மா முழுவதும் ஜப்பானியர் வசமானது. ஐந்து மாதப் பயங்கரத் தாக்குதல்களுக்குப் பின்னர் பிலிப்பைன் தீவுக் கூட்டங்களை ஜப்பான் கைப்பற்றியது. பிலிப்பைன் தீவுப் படைகளின் அமெரிக்கத் தளபதி மெக் ஆர்தர், குடியரசு தலைவரின் ஆணை யின்படி வெளியேறினார். 40,000 அமெரிக்கப் போர் வீரர்கள் சரணடைந்தனர். அதே வேகத்தில் நெதர்லாந்துக்குச் சொந்த மான கிழக்கிந்திய தீவுகளனைத்தும் ஜப்பானியருக்கு இரை யாயின. பசிபிக் பெருங்கடல் தீவுகளில் பெரும்பாலானவற்றை ஜப்பானியர் பிடித்துக் கொண்டு, ஆஸ்திரேலியாவை நோக்கி முன்னேறினர். பர்மா முழுவதையும் கைப்பற்றிய ஜப்பானியர் வங்கக் கடலில் நுழைந்து அந்தமான், நிக்கோபர் தீவுகளையும் கைப்பற்றினர். இந்தியத் துணைக் கண்டத்தின் கிழக்குக் கடற் கரை நகரங்களைத் தாக்கவும் ஜப்பானியர் முயன்றனர்.

**ஜப்பானின் தலைமையில் கிழக்காசிய நாடுகள்**

இவ்வாறு போர் தொடங்கி ஏழு மாதங்களில் தென் கிழக் காசிய நாடுகள் முழுவதையும், பசிபிக் பெருங்கடல் தீவுகளில் பெரும்பாலானவற்றையும் வென்ற ஜப்பான் தனது வெற்றிகளை

நிலைநிறுத்தவும்; வெற்றி பெற்ற நாடுகளில் தன் ஆட்சியை நிறுவும் பணியிலும் ஈடுபட்டது. அமெரிக்காவின் எதிர்த் தாக்குதல்களை முறியடிக்கவும், தனது பரந்த கிழக்காசியக் கொள்கைகளை நிறைவேற்றவும் ஜப்பான் முனைந்தது. வென்ற பகுதிகளின் ஆட்சியைக் கவனிக்க, 'கிழக்காசிய முன்னேற்றக் கூட்டிணைவு' (East Asia Development League) ஒன்றை நிறுவியது. இக் கழகம் ஜப்பானில் ஏற்படுத்தப்பட்டிருந்த 'பேரரசின் உதவி ஆட்சிக் குழுவின் (Imperial Rule Aid Association) தலைமையில் செயல்பட வேண்டும் என்று நிர்ணயிக்கப்பட்டது.

இக் கிழக்காசிய முன்னேற்றக் கூட்டிணைவில் உள்ள நாடுகளின் ஆட்சிப்பொறுப்பு, படைத் தலைவர்களிடம் ஒப்படைக்கப்பட்டது. பொது நிர்வாகம், நிதி, தொழில், வர்த்தகம், போக்குவரத்து ஆகிய துறைகளைக் கொண்ட நிர்வாக அமைப்பை ஏற்படுத்தி ஆளத் தொடங்கினர். இத் துறைகளின் செயல்முறையை ஊன்றிக் கவனித்தால் எந்த அளவு திட்டமிட்டு, நுணுக்கங்களை ஆய்ந்து, முறைப்படுத்தி, சிறப்பான ஆட்சியமைப்பை நிலையான முறையில் ஏற்படுத்தி, நீண்டகாலத் திட்டங்களைத் தீட்டி, ஜப்பானியர் செயல்பட்டு வந்தனர் என்பது விளங்கும். கிழக்காசியப் பகுதிகள் முழுவதும் இனி எப்போதும் தங்கள் பேராட்சிக்குட்பட்ட பகுதிகளே என்ற இறுமாப்பில் ஜப்பானியர் இயங்கத் தொடங்கினர். வெள்ளையர் ஆதிக்கத்திலிருந்து விடுவிப்பதே எங்கள் நோக்கம். மஞ்சுகோ அரசைப் போல சுதந்திர அரசுகளை ஏற்படுத்துவதே எங்கள் குறிக்கோள். மக்களவைகளை ஏற்படுத்தி அவைகளின் உதவியுடன் ஆட்சியை நடத்தி, நாட்டு மக்களுக்கு அரசியல் சுதந்திரம் பெற்றுத் தருவதுதான் எங்கள் தலையாய எண்ணம் என்பது போன்ற கருத்துகளைக் கிழக்காசிய மக்களிடையே பரப்பினர். ஓரளவுக்கேனும் கிழக்காசிய மக்களின் பண்பாடுகள், அரசியல் அமைப்புகள், ஆட்சி முறைகள் ஆகியவற்றிற்கு மதிப்புக் கொடுத்து, தங்களின் மேலாண்மைத் தன்மையை ஏற்றுக் கொள்ளும்படி செய்தனர்.

இவ்வாறு கிழக்காசிய மக்களின் நல்லெண்ணத்தையும், ஆதரவையும் பெற முயன்ற ஜப்பானியர், ஒருசில ஆதிக்கக் கொள்கைகளினால், கிழக்காசிய மக்களின் வெறுப்பையும் தேடிக் கொண்டனர். கிழக்காசிய நாடுகளில் ஐரோப்பிய மொழிக்குப் பதிலாக ஜப்பானிய மொழி புகுத்தப்பட்டது. மேலை நாட்டு இசை, பேசும் படங்கள் ஆகியவை தடைசெய்யப்பட்டன. மேலை நாட்டு அரசியல் மற்றும் பொருளாதார, சமுதாய, சமயக் கருத்துக் கருவூலங்களை அழித்து, அதற்குப் பதிலாக ஜப்பானியக்

கல்வி, சமய, சமூக, பண்பாட்டியல்கள் வற்புறுத்தப்பட்டன. கிழக்காசிய நாடுகள் முழுவதிலும் பெரும்பான்மை பெற்று விளங்கிய புத்த சமயத்தின் அடிப்படையில், ஜப்பானியர் தங்கள் ஆட்சியை நிலைநாட்ட முயன்றனர். ஐரோப்பியர்களின் நிற வெறிக் கொள்கையை மிகைபடுத்திப் பரப்பி, மக்களிடையே ஐரோப்பியர்பால் வெறுப்புணர்ச்சி கொள்ளச் செய்தனர். கல்வி நிலையங்களில் ஜப்பானிய வரலாறு, இலக்கியங்கள், தத்து வங்கள், பண்பாட்டியல்கள் விளக்கப்பட்டன. இளைஞர் கழகங் களை ஏற்படுத்தி ஜப்பானியர் ஆட்சிக்கு உறுதுணையாகப் பணியாற் றும்படியும், ஜப்பானியப் பாணியில் இளந் தலைமுறையினரை உருவாக்கவும் முயன்றனர். கிழக்காசிய நாடுகளின் முதமதியர் கழகமொன்றையும் ஏற்படுத்தி, அவர்களையும் ஜப்பானியப் புகழ் பாடவைத்தனர். ஜப்பானியர் ஆட்சியின் ஆதரவாளர்களாக இருக்கும் வகையில் புதிய அரசியல் கட்சிகளும் தோற்றுவிக்கப் பட்டன. இவ்வாறாக ஜப்பானிய மயமாக்கும் தீவிரக் கொள்கை யினைப் பின்பற்றி வெறுப்பைத் தேடிக் கொண்டனர்.

கிழக்காசிய நாடுகளின் பொருளாதார நிலைகளைத் தன்னுடைய போர்க்காலத் தேவைக்கு ஏற்றாற்போல மாற்றியமைக்கும் பணி யிலும் ஜப்பானியர் ஈடுபட்டனர். கிழக்காசிய நாடுகளின் எண்ணெய் வளமும், கனி வளங்களும், உணவுப் பொருள்களும், இரப்பர் போன்றவைகளுமே ஜப்பான் இந் நாடுகளை வென்ற தற்குக் காரணம். இவ் வளங்களைச் சுயநலத்திற்குப் பயன்படுத்தி வளங்காண முயன்றது ஜப்பான். தொழில்துறைகளும் ஜப்பா னியர் போர் முயற்சிக்கு உதவும் பொருள்களை உருவாக்கப் பணிக் கப்பட்டன. பெட்ரோலியம், இரப்பர், இரும்பு, உணவுப் பொருள்கள் ஆகியவற்றை ஜப்பானுக்குக் கொடுத்து உதவும்படி வற்புறுத்தப்பட்டன.

ஜப்பானின் இந்தப் புதிய ஆதிக்கக் கொள்கைகளுக்கு விரைவில் எதிர்ப்புத் தோன்றலாயிற்று. வெள்ளையராதிக்கத்திலிருந்து விடு பட்டு, ஜப்பானியராதிக்கத்தின்கீழ் வந்துவிட்ட தங்கள் அவல நிலையை கிழக்காசிய மக்கள் உணரத் தொடங்கினர். சீனாவிலும் ஜப்பானியராட்சிக்குட்பட்ட பகுதிகளில் எதிர்ப்பியக்கங்கள் வளர்ந்தன. சிறப்பாகக் கொரில்லா போர் முறையில் ஈடிணை யற்று விளங்கிய செம்படையினர் ஜப்பானியப் படைகளை அலைக் கழித்தனர். ஜப்பானியர் வென்ற பகுதிகளில் காகித நாண யங்கள் வெளியிடப்பட்டன. அளவுக்கு மீறி வெளியிடப்பட்ட காகித நாணயங்கள் மதிப்பை இழந்தன. பணவீக்கம் ஏற்பட்டது. பொம்மை அரசுகளும் திறமைக் குறைவினால் மதிப்பிழந்தன.

ஜப்பானியப் படையதிகாரிகளிடையே ஊழலும், போட்டி பொறாமையும் வளர்ந்தன. ஒருமித்துப் பணியாற்றக் கடமைப் பட்ட இராணுவத்தினரிடையே ஒற்றுமைக் குறைவு ஏற்பட்டது. இந்நிலைகள் மாபெரும் வெற்றிகளுக்குப் பின்னர் ஜப்பானியப் படைகளிடையே தோன்றிய திறமை குறைந்த நிலையை உணர்த்தின.

**ஜப்பானியரின் தோல்விகள்**

பெர்ல் துறைமுகத் தாக்குதலினுல் செயலிழந்து நின்ற அமெரிக்கா ஓராண்டுக்குள்ளாகவே தனது போர் ஆற்றலைப் பன் மடங்காகப் பெருக்கிக்கொண்டது. பிரிட்டன், நெதர்லாந்து, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளின் ஜப்பானியர் எதிர்ப்புப் படைகளுக்கு தளபதி மெக் ஆர்தர் தலைமை தாங்கினுர். பிரிட்டன் மற்றும் ஐரோப்பிய நாடுகள் அனைத்தும் அமெரிக்காவின் உதவியுடன் ஜெர்மனியை வெற்றி கொள்ளும் முயற்சியில் இறங்கின. எனவே அமெரிக்கா மட்டும் ஜப்பானியரை எதிர்த்து அழிக்கும் பணியில் தனித்தியக்கவேண்டிய நிலையிலிருந்தது.

சீனுவிலிருந்து ஜப்பானைத் தாக்கும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அமெரிக்க விமானங்கள் ஏராளமான போர்த் தளவாடங்களைச் சீனுவில் குவித்த வண்ணமிருந்தன. ஏராளமான போர் விமானங்களையும், அமெரிக்கா சீனுவிற்குக் கொடுத்துதவியது. மஞ்சூரிய தொழிலகங்களும், விமானதளங்களும் சீனப் போர் விமானங்களின் குண்டு வீச்சுக்கு இரையாயின. இடையில் இந்தியாவிலிருந்து பர்மாவைத் தாக்கி விடுவிக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. 1942, 43, 44ஆம் ஆண்டுகளில் இந்திய-பர்மா எல்லைகளில் கடும் போர் துவங்கியது. 1944-ல் ஜப்பானியர் உதவியுடன் இந்திய விடுதலைப் போருக்கான திட்டங்களும் தீட்டப்பட்டன. நேதாஜி சுபாஷ் சந்திரபோஸின் தலைமையிலான இந்திய தேசியப் படை டெல்லி நோக்கி வீரநடை போட ஜப்பானியரால் உருவாக்கப்பட்டது. ஆனுல் இம் முயற்சிகள் தகர்க்கப்பட்டன. பர்மாவிலிருந்து படிப்படியாக ஜப்பானியர் வெளியேற்றப்பட்டனர்.

1944ஆம் ஆண்டுக்குள் ஜப்பானிப் படைகள் அமெரிக்கப் படைகளிடம் தோல்வியுறத் தொடங்கின. இத் தோல்வியின் ஆரம்பம் 1942, மே மாதம் 7, 8ஆம் நாள்களில் காணப்பட்டது; பவளக்கடல் (Coral Sea) பகுதியில் நடந்த மிகக் கடுமையான விமானப் போரில் அமெரிக்கா வென்று, வெற்றி முனையில் அடியெடுத்து வைத்தது. அடுத்த பெரும்போர் 1942ஆம் ஆண்டு ஜூன் மாதம் 4ஆம் நாளி

லிருந்து 7ஆம் நாள் வரை பசிபிக் பெருங்கடலின் நடுவிலிருக்கும் மிட்வே தீவுகளுக்கருகில் (Midway Islands) நடந்த மிகப் பெரிய கடற் போராகும். இப் போரில் விமானங்களும் பயன்படுத்தப் பட்டன. முதன்முதலாக ஜப்பானியக் கடற்படை இப்போரில்தான் பெருந் தோல்வியடைந்தது. 21 கப்பல்களை ஜப்பான் இழந்தது. இப் போருக்குப் பின்னர் பசிபிக் கடல் பகுதிகளில் ஜப்பானிய ஆதிக்கம் ஆட்டம் காணத் தொடங்கியது.

இதற்கிடையில் 1943-ல் இத்தாலி சரணடைந்தது. ருஷியப் படைகளும், நேச நாடுகளின் படைகளும் ஜெர்மனியை நெருங்கின. 1944, 45-ல் ஜெமானியப் படை ஐரோப்பா வெங்கிலுமிருந்து விரட்டப்பட்டு, ஜெர்மனி தாக்கப்பட்டது. 1945-ல் ஜெர்மனி சரணடைந்தது. ஹிட்லர் தற்கொலை செய்து கொண்டார். இதன் பின்னர் நேச நாடுகளின் படைப்பலம் முழுவதும் ஜப்பானுக்கெதிராகத் திருப்பப்பட்டது. ஜெர்மனியின் வீழ்ச்சிக்கு முன்னரே அமெரிக்கப் படைகள் மார்ஷல் தீவுகள், குவாம் தீவுகள், கரோலினு தீவுகள் இவைகளைக் கைப்பற்றி, பிலிப்பைன் தீவுகளையும் கைப்பற்றியிருந்தனர். இதற்குள் ஜப்பானியப் படைகளும், படைக்கலன்களும் பெருமளவில் அழிக்கப் பட்டு விட்டன. 1945ஆம் ஆண்டுத் துவக்கத்திலிருந்து தோக்கியோ ஓசாகா போன்ற ஜப்பானிய நகரங்கள் வினானத் தாக்குதல்களுக்குள்ளாயின. ஜூன் மாதத்திற்குள்ளாகத் தோக்கியோ நகரப் பகுதிகளில் மட்டும் 50 கிலோ மீட்டர் சதுர அளவு தரை மட்டமாக்கப்பட்டது. பெரும் புயற்காற்றால் உந்தப் பெற்ற கருமேகக் கூட்டங்கள் இருளெனப் பாய்ந்து, இடிமுழக்கோடு மழை கொட்டுவது போன்று, ஒரே நாளில் 200-க்கும் அதிகமான ராட்சத போர் விமானங்கள் தோக்கியோ விண்ணை மறைத்துக் குண்டு மாரிப் பொழிந்தன. 1945ஆம் ஆண்டில் ஜூன், ஜூலை, ஆகஸ்டு 15, ஆகிய 75 நாட்களுக்குள்ளாக ஏறத்தாழ 3000 ஜப்பானிப் போர் விமானங்களும், 1600க்கும் அதிகமான ஜப்பானியக் கப்பல்களும் அழிந்துபட்டன என்றால், போர் அரக்கனின் வெறித் தாண்டவத்தை விளக்கவும் வேண்டுமோ? நேச நாடுகளும், ஏராளமான விமானங்களையும், கப்பல்களையும் இழந்தாலும், நலிவற்ற பொருளாதார மேம்பாட்டைப் பெற்றிருந்ததனால் ஜப்பானை அழித்துப் பணிய வைக்கும் முயற்சியில் ஈவிரக்கமின்றிச் செயல்பட முடிந்தது.

போர்ட்சுடேம் அறிக்கை

இதற்கிடையில் அமெரிக்கா, பிரிட்டன், சீனு ஆகிய நாடுகள் இணைந்து ருஷியாவைக் கேளாமலே போர்ட்சுடேம் பேரறிக்

கையை ஜூலை 26, 1945-ல் வெளியிட்டன. இதன்படி போர் நிறுத்தத்திற்கான பல நிபந்தனைகளை இந் நாடுகள் வெளியிட்டன. 'ஜப்பான் தம் நாட்டைத்தவிர (ஹொக்கைதோ, ஹொன்சு, குயூஷு, ஷிக்கொக்கு ஆகிய நான்கு தீவுகளைத் தவிர) பிறநாடு களில் கைப்பற்றியிருக்கும் இடங்களை முழுவதுமாகக் கைவிட்டு வெளியேற வேண்டும்; அங்கிருக்கும் படைகளையெல்லாம் திருப்பிப் பெற வேண்டும்; ஜப்பான் நாட்டைத்தவிர உலகின் வேறெங்கும் அதன் ஆதிக்கம் இருக்கக் கூடாது; நாட்டிலுள்ள போர்க் கழகங் களையும், போர்த் தொழிலகங்களையும், படைகளையும் அறவே ஒழிக்க வேண்டும்; போருக்குப் பின்னர் மக்களாட்சி முறையில் ஜப்பானை நடத்திச் செல்ல வேண்டும்' என்பன போன்ற நிபந் தனைகள் இவ்வறிக்கையில் காணப்பட்டன. இதன்படி நோக் கினால், ஜப்பானில் படையாட்சி முறையோ, அல்லது பேரரசரோ, மற்றவையோ இனி இருக்கமுடியாது. தன் சுதந்திர நிலையிழந்து, பெருமை குன்றி, தலை குனிந்து வாட வேண்டியிருக்கும் என்பதையும் உணர்ந்தது. அழிவைத் தடுக்கும் வகையில் பேரரசர் இந் நிபந்தனைகளை ஏற்றுக் கொள்ள முன் வந்தாலும், படைப் பிரிவினரும், மற்றோரும் மறுத்தனர். ஜப்பான் போராட முடிவு செய்தது.

### ஜப்பான் சரணடைதல்

ஜப்பானை விரைவில் பணியவைக்க இதுவரை எடுத்த முயற் சிகள் பலனளிக்காது போகவே, ஜப்பானைத் தாக்கி, பிடிப்பதைத் தவிர, வேறு வழியில்லாது போயிற்று. அவ்வாறு ஜப்பானில் நுழைந்து போரிடும்போது இரு சாராருக்கும் பெருமிழப்புகள் ஏற்பட்டாலும் ஜப்பான் முழுவதும் அழிக்கப்படுவது தவிர்க்க முடியாததாகும். எனவே, இந் நிலையிலிருந்து மீள அமெரிக்கா அணுக்குண்டை வீசுவது என்ற முடிவிற்கு வந்தது. ஆகஸ்டு 6, 1945ஆம் ஆண்டு உலக வரலாற்றிலேயே முதன்முதலாக அணுக் குண்டு ஹிரோஷிமா என்ற ஜப்பானிய நகரின்மீது வீசப்பட்டது. நொடிப் பொழுதில் அந் நகரம் அழிந்தது. கிட்டத்தட்ட 1,60,000 பேர் இறந்திருக்கலாம் என கணக்கிடப்படுகிறது. அடுத்த நாள் ருஷியாவும் ஜப்பான்மீது போர் தொடுத்தது. இந்த அணுக்குண்டு அழிவைப் பார்த்த பின்னரும் ஜப்பானியப் படையாட்சியினர் சரணமடைய மறுத்தனர். எனவே, நாகசாகி நகரின்மீது இரண் டாவது அணுக்குண்டு ஆகஸ்டு 9, 1945-ல் வீசப்பட்டது. அந் நகரும், கப்பற்டைத் தளமும் அழிந்துபட்டன. இந் நிலையைக் கண்ட ஜப்பானியப் பேரரசர் இனியும் போரை நீடிப்பது அறிவீனம் என்பதை உணர்ந்து சரணடைய விருப்பம் தெரிவித்

தார். ஆகஸ்டு 15, 1945ஆம் ஆண்டு ஜப்பான் போர்ட்சுடேம் அறிக்கையை ஒப்புக்கொள்வதாக அறிவித்தது. இச் செய்தியை சுவிட்சர்லாந்து அரசு உலகம் முழுவதும் ஒலி பரப்பியது. நேச நாடுகள் அனைத்தும் ஜப்பானின் சரணுகதியை ஏற்றுக்கொண்டன. ஜப்பானியப் போர் அமைச்சர் தோல்வியின் அவமானத்தைத் தாங்கொணுது தற்கொலை செய்து கொண்டனர். இவரைப் பின் பற்றி ஏராளமான படை அதிகாரிகளும், வீரர்களும் தாங்களே உயிரை மாய்த்துக் கொண்டார். சரணுகதி ஒப்பந்தத்தில் ஜப்பானியக் கடலில் நின்று கொண்டிருந்த மிசெளரி (Missouri) என்னும் அமெரிக்கப் போர்க்கப்பலில் நேச நாடுகள் முன்னிலையில் ஜப்பான் கையொப்பமிட்டது (Sept. 2. 1945). இதன் பின்னர், ஜப்பானியப் படைகள் கலைக்கப்பட்டன. 1894ஆம் ஆண்டுக்குப் பின்னர் வென்ற நாடுகளனைத்தையும் ஜப்பான் இழந்தது. ஜப்பானின் எதிர்காலத்தை நேச நாடுகளே நிர்ணயிக்கும். அதுவரை ஜப்பானில் குடியாட்சி முறையை ஏற்படுத்தி, அதில் பயிற்சியளித்து, சமாதானத்தில் நாட்டங் கொள்ளச் செய்யும் பொறுப்பினை நேச நாடுகளின் படையாட்சி ஏற்றுக்கொண்டது

# 5. நேச நாடுகளின் பொறுப்பில் ஜப்பான்

இத்தாலியும், ஜெர்மனியும் சரணடைந்த உடனேயே, ஜப்பானும் பணிந்திருக்குமேயானால், அணுக்குண்டுத் தாக்குதல்களின் கோரமான அழிவிலிருந்து தன்னைக் காப்பாற்றியிருக்க முடியும். ஆனால் தளபதி தோஜோவின் ஆத்திரமும், போரமைச்சரவையின் வெறிக் கொள்கைகளும் போரைத் தொடர்ந்து நடத்தக் காரணமாக இருந்தன. மற்ற அரசியல் குழப்பங்களும் எளிதில் ஒரு முடிவுக்கு வரமுடியாமல் தடையாய் நின்றன. இந் நிலையில் மாமன்னர் 'ஹிரோஹிதோ' எஞ்சியுள்ள ஜப்பானிய மக்களையும், மாந்தர் சமுதாயத்தையும், அவர் பண்பாட்டையும் காப்பாற்ற வேண்டுமானால் சரணடைந்தேயாக வேண்டும் எனக் கூறியும் ஜப்பானியர் கடைசிவரை சரணடைவதற்கு விரும்பவில்லை. போர் நடந்து கொண்டிருக்கும்போதே கூடி, முடிவெடுத்த கெய்ரோ மாநாடு, டெஹ்ரான் மாநாடு, யால்டா மாநாடு, இறுதியாக போர்ட்சுடேம் மாநாடு ஆகியவற்றின் அறிக்கைகள் யாவும் ஜப்பானை அடியோடு நசுக்குவதாகக் காணப்பட்டன. எனவேதான் ஜப்பானியர் தங்களின் வாழ்வும், பேரரசரும் சரணுக்குப் பின்னர் நேச நாடுகளின் கரங்களில் சிக்கி மாள்வதைவிட, கடைசிவரை போரிட்டு, போர்க்களத்திலேயே மாளத் தீர்மானித்தார்கள். இடையே ருஷியா தங்கள் சார்பில் நடவடிக்கைகள் ஏதாவது எடுத்து, அழிவினின்று காப்பாற்றும் எனவும் நம்பியிருந்தனர். இந் நம்பிக்கையும் பயனற்றுப்போகவே (ருஷியாவும், ஜப்பான்மீது ஆகஸ்டு 8, 1945-ல் போர் தொடுத்தது) இறுதியாக, தாங்கொணாத வேதனையையும் அவமானத்தையும் தாங்கித்தான் ஆகி வேண்டும் (Japan must endure the unendurable) என்ற பேரரசரின் வாக்குப்படி சரணடைந்தது (August 15, 1945).

ஜப்பான் சரணடைந்தவுடன் ஜப்பானுக்கிட வேண்டிய கட்டளைகளை அமெரிக்க நாடுகளின் போர்த்துறையும், நாவாய்த்

துறையும் உருவாக்கியளித்தன. இத்தகைய கட்டளைகளுக்கு, ஜப்பானின் சரணுகதிக்குப் பின்னர், 'அமெரிக்காவின் ஆரம்பக் கட்டளைகள்' என்று பெயர். (United States Initial Post-Surrender Policy of Japan - September 6, 1945). இதில் குறிப்பிடப்பட்ட மாநாடுகளில் அறிவித்த அறிக்கைகளின் கூறுபாடுகளே காணப் பட்டன. இதனை அடிப்படையாகக் கொண்டுதான் தூர ஆணைக் குழு (Far Eastern Commission) ஜப்பான் சரணடைந்த பின்னர், தனது அடிப்படைக் கொள்கைகளை வெளியிட்டது. (Basic Post Surrender policy for Japan-June 19, 1947).

## நேச நாடுகளின் பெருந்தானைத் தலைவர்

நேச நாடுகளின் கொள்கைகளின்படி ஜப்பானின் ஆட்சிப் பொறுப்பை ஏற்று, அதனைக் கண்காணிப்பதற்காக நேச நாடு களின் பெருந்தானைத் தலைவராக (Supreme Commander for the Allied Powers-Scap) அமெரிக்கக் கிழக்காசிய வெற்றிப் படைத் தலைவர் தளபதி டக்ளாஸ் மெக் ஆர்தர் (General Douglas Mac-Arthur) என்பவர் அமர்த்தப்பட்டார். கீழ்த்திசை நாடுகளின் ஆட்சிப் பொறுப்பைக் கண்காணிக்க 'தூரக்கிழக்கு ஆணைக்குழு' (Far Eeastern Commission-FEC) ஒன்று வாஷிங்டனில் ஏற்படுத்தப் பட்டது. இதில் அமெரிக்கா, ருஷியா, பிரிட்டன், சீனு, பிரான்சு, நெதர்லாந்து, கனடா, ஆஸ்திரேலியா, நியூசிலாந்து, இந்தியா, பிலிப்பைன் முதலிய பதினெரு நாடுகள் இடம் பெற்றன. இதன் எண்ணிக்கை, பர்மாவும் பாகிஸ்தானும் 1949-ல் சேரவே பதின்மூன்ருக உயர்ந்தது. இக் குழுவின் ஆணைகளைத் தளபதி மெக் ஆர்தர் ஜப்பானில் செயல்படுத்தும் வகையில் அவருக்கு அதிகாரங்கள் வழங்கப்பட்டிருந்தன. செயல்முறையின் பொறுப்பு களை அமெரிக்கா ஏற்றது.

இதைத் தவிர நேச நாடுகளின் அவை (Allied Council for Japan) ஒன்றும் ஏற்படுத்தப்பட்டது. இதில் அமெரிக்கா, சீனு, ருஷியா, பிரிட்டன், காமன்வெல்த் நாடுகளின் பிரதிநிதியொருவர் இடம் பெறுவர். இந்த அவை ஜப்பானியத் தலைநகரான தோக்கி யோவில் கூடும்; இந்த அவையைக் கலந்துதான் தளபதி மெக் ஆர்தர் செயல்பட வேண்டும். ஆனுல் நடைமுறையில் இந்த அவை சிறப்பான இடத்தைப் பெற முடியவில்லை.

தளபதி மெக் ஆர்தருக்கு நிர்வாகத்தில் உதவி செய்வதற்குப் படைத்துறை, ஊரியல் துறை (Civil) முதலியவற்றைச் சேர்ந்த பலரடங்கிய ஒரு பெரிய நிர்வாகம் ஏற்படுத்தப்பட்டது. இவர் களில் பெரும்பாலோர் ஜப்பானிய உள்நாட்டு முறைகளையும்

பண்பாடுகளையும், மனப்போக்கையும் அறிந்தவர்களாக இருந்தது பெரும் பயனை அளித்தது.

**தூரக்கிழக்கு ஆணைக் குழுவின் நோக்கங்கள் (Objectives of the occupation)**

ஜப்பானின் ஆதிக்க வெறியை அழித்து வெற்றி கொண்டு, ஜப்பானின் ஆட்சிப் பொறுப்பை ஏற்ற நேச நாடுகளின் முக்கிய குறிக்கோள்களாவன: (1) 'உலக நாடுகளின் அமைதியை, சிறப்பாக அமெரிக்க நாடுகளின் அமைதிக் கொள்கையை எதிர்க்கும் வகையில் வலிமை பெற்ற ஜப்பான் உருவாகாமல் தடுப்பது. இதன் மூலம் தூரக்கிழக்கு நாடுகளின் அமைதிக்கும், உலக அமைதிக்கும் உறுதுணையாக நிற்பது, (2) ஜப்பானியருக்குப் பாராளுமன்ற ஆட்சி முறையில் பயிற்சியளித்து, பொறுப்புள்ள மக்களின் நன்மையைக் கருதுகின்ற மக்களாட்சி அரசியல் முறையைக் கற்பித்து, அமைதியான முறையில் ஜப்பானில் நல்லாட்சிக் காணச் செய்வது' என்ற இவ்விரண்டு குறிக்கோள் களை நிறைவேற்றத் தேவையான ஆறு முக்கிய கொள்கைகளையும் மேற்கொண்டது. அவைகளாவன:

1. ஜப்பானின் பரப்பளவைக் குறிப்பது. ஹொக்கைதோ, ஹொன்சு, குயுஷு, ஷிக்கொக்கு ஆகிய நான்கு பெரும் தீவுகளும், அதனை யடுத்துள்ள ஒரு சில தீவுகளும் மட்டும் ஜப்பானிய இறை மாட்சிக்குள் அடங்கியிருக்கும்.

2. ஜப்பானியப் படைகளையும், படை நிறுவனங்களையும், இப் படை நிறுவனங்களுக்கு உதவுகின்ற வகையில் அமைந்துள்ள பொருளாதாரக் கொள்கைகளையும் அழிப்பது.

3. ஜப்பானில் படையாட்சி முறை வளர்வதற்குக் காரண மாக இருந்த படையதிகாரிகள், அரசியல் வாதிகள், ஆட்சித்துறை யினர், தொழிலதிபர்கள், ஆகியவர்களை அரசியல், மற்றப் பொறுப்புகளிலிருந்து நீக்குவது; சிறப்பாக, ஜப்பான் போரில் ஈடுபடுவதற்குக் காரணமாயிருந்தவர்களையும், தூண்டுதல் செய்த வர்களையும், பெரும் பொறுப்பில் இருந்தவர்களையும், பேரரசர் தவிர மற்றவர்களை, போர்க் குற்றங்களுக்காகத் தண்டிப்பது.

4. பொருளாதார, சமூகச் சீர்திருத்தங்களைக் கொண்டு வருதல், தொழிற்சங்கங்கள் ஏற்படுத்தி, தொழிலாளர் நலன்கள், உரிமைகளைக் காத்தல், மக்களுக்கு அடிப்படை உரிமைகளை வழங்குதல்.

5. பொருளாதாரக் கொள்கைகள், பன்முகப் படுத்தப்பட வேண்டும். நாட்டின் தொழில், வர்த்தகம் அனைத்தும் ஒருசில சுயநலமிகளின் கையில் அடங்கிக் கிடப்பதை மாற்றி, நாட்டின் வளர்ச்சியிலும், ஆதிக்கத்திலும் மக்கள் அனைவருக்கும் சம உரிமையும், வாய்ப்பும் வழங்கப்பட வேண்டும்.

6. கல்வித் துறையை மாற்றியமைத்து, சீர்திருத்தக் கருத்துகளை ஏற்கவும் மக்களாட்சி முறையில் நம்பிக்கையை ஊட்டும் வகையிலும் கல்வி முறையில் மாற்றங்களை ஏற்படுத்துதல்.

நேச நாடுகள், ஜப்பானின் வலிமையை நிரந்தரமாகக் குறைத்து, போர்க்கால அழிவைச் சீர்திருத்தி, ஜப்பானிய மக்களின் நல்வாழ்வுக்கும், பொருளாதார ஏற்றத்திற்கும் ஆவன செய்கின்ற வகையில் மேற்கூறிய குறிக்கோள்களையும், அக் குறிக்கோள்களைச் செயல்முறையில் கொண்டு வர ஏதுவாக இருக்கும் கொள்கைகளையும் உருவாக்கி, இக் கொள்கைகளுக்கு உருவம் கொடுக்கும் வகையில் நேச நாடுகளின் குழுவும், அதனுடன் இணைந்து பணியாற்றத் தளபதி மெக் ஆர்தரின் தலைமையிலான நிறுவனமும் ஜப்பானில் ஏற்படுத்தப்பட்டன. இந்தக் கொள்கைகள் எவ்வாறு செயல் விளக்கம் பெற்றன வென்பதை இனிக் காண்போம்.

### ஜப்பான் தான் வென்ற நாடுகளை இழத்தல்

ஜப்பான் மேஜி புரட்சியின் பின்னர் தான் வென்றிருந்த நாடுகள் அனைத்தையும் இழக்க வேண்டியதாயிற்று. மஞ்சூரியா, தைவான் (பார்மோசா), பெஸ்கடோர்ஸ் (Pescodores) தீவு ஆகியவற்றைச் சீனக் குடியரசு திரும்பப் பெற்றது. சீன மண்ணிலிருந்து முழுவதுமாக ஜப்பான் வெளியேற்றப்பட்டது. குரைல் தீவுக் கூட்டங்களையும், தெற்கு சாகாலின் (Sakalin) தீவையும் ருஷியா எடுத்துக் கொண்டதோடு, வட சீனாவில் மங்கோலியா, மஞ்சூரியப் பகுதிகளில் சில உரிமைகளையும் ருஷியா பெற்றது. பசிபிக் தீவிலுள்ள போனின், ரியூகியூ, மாரியானா, கரோலின், மார்ஷல் போன்ற பல தீவுக்கூட்டங்கள் அமெரிக்க நாடுகளின் கண்காணிப்பில் கொண்டு வரப்பட்டன. பிலிப்பைன், இந்தோனேஷியா, இந்தோசீனா, பர்மா, மலாயா ஆகிய பகுதிகள் ஜப்பானிய வெற்றிக்கு முன்பிருந்த நிலையை அடைந்தன. எஞ்சியிருந்த ஹொக்கைதோ, ஹொன்சு, கியூஷு, ஷிக்கொக்கு, அவைகளுக்கருகில் இருந்த சில தீவுகளில் மட்டும் ஜப்பானியராட்சி அனுமதிக்கப்பட்டது.

**ஜப்பானியப் படைக்கலைப்பு**

நேச நாடுகளின் தீர்மானங்களில் ஒன்றான ஜப்பான் படையொழிப்புத் திட்டத்தின்படி ஏறத்தாழ 40 இலட்சம் படையினர் கலைக்கப்பட்டனர். படையாட்சி முறையும், படையாட்சித் துறையும் ஜப்பானிலிருந்து அடியோடொழிக்கப்பட்டது. ஜப்பானில் படைக்கலப் பொருள்கள் உற்பத்தி தடைசெய்யப் பட்டது. அணு ஆராய்ச்சி, விமானவியல் துறை ஆராய்ச்சி போன்ற ஆராய்ச்சிகள்கூடத் தடைசெய்யப்பட்டன.

ஜப்பான் போரில் ஈடுபடுவதற்குக் காரணமாக இருந்தவர்களை யும், தூண்டுதல் செய்தவர்களையும் விசாரிப்பதற்கு 'பன்னாட்டுப் போர்க் குற்றவாளிகளின் மேல் முறையீட்டு நீதி மன்றம்' (International War Crimes Tribunal) ஒன்று தோக்கியோவில் ஏற்படுத்தப் பட்டது. போரில் ஏற்பட்ட அரக்கத்தனமான அழிவுகளுக்கும், செயல்களுக்கும் காரணமாக இருந்து, மானிட சமுதாயத்தின் நல்வாழ்வை அழிக்க முயன்றதாக 25 ஜப்பானியத் தலைவர்கள்மீது குற்றம் சாட்டப்பட்டது. தளபதி தோஜோ, வெளியுறவு அமைச்சராக இருந்த மாத்சுகா (Matsuoka) உட்பட ஏழு பேருக்கு மரண தண்டனையும், மற்றும் பலருக்கு ஆயுள் தண்டனையும் விதிக்கப்பட்டன. 1300-க்கும் மேற்பட்ட பல்வேறு பட்ட ஜப்பானியக் கழகங்கள் கலைக்கப்பட்டன. இரண்டு இலட்சம் பேர் அரசாங்க அலுவல்களிலிருந்து நீக்கப்பட்டனர்.

**பொருளாதாரச் சீர்திருத்தங்கள்**

ஜப்பானில் மீண்டும் படையாட்சி முறை தோன்றாமலிருக்க வேண்டுமாயின், அங்கு மக்களாட்சி முறை, அதன் சிறப்புமிக்க கோட்பாடுகள் மக்களிடையே வளம் பெற வேண்டும்; நாட்டில் அமைதியும், வளமான பொருளாதார மேம்பாடும் இல்லையெனில் மக்களாட்சிக் கருத்துகள் மக்களிடையே மதிப்பை இழக்க வேண்டி வரும். மேலும், ஜப்பானில் போரின்போது ஏற்பட்ட அழிவுகளை அகற்றி, மக்களுக்கு நல்வாழ்வளிக்க வேண்டிய முழுப் பொறுப்பை யும் அமெரிக்கா ஏற்றுக் கொண்டதால், ஜப்பானின் பொருளா தார வளர்ச்சியில் மிகுந்த அக்கறை கொண்டது. ஜப்பானியர் உழைப்புத் திறனும், கட்டுப்பாடும் மிகுந்தவர்கள்; தொழில் நுணுக்கங்கள் தெரிந்தவர்கள்; முன்னேறும் ஆர்வம் மிக்கவர்கள். போரில் பேரழிவு ஏற்பட்ட போதும், எஞ்சியிருந்த தொழிலகங்கள் மிகச்சிறந்த கருவிகளைத் தயாரிக்கும் செயல்திறன் கொண்டிருந்தன, மேலும் போர்ச் சாதனங்களைச் செய்து குவித்த தொழிலகங்கள் இப்போது வேறு பல பொருள்களைச் செய்து குவித்தன,

மேலாக, அமெரிக்கர்களின் அளவற்ற முதலீடுகள் ஜப்பானின் நசுக்கப்பட்ட பொருளாதாரத்தை ஏற்றமிகு நிலைக்கு உயர்த்த முயன்றன.

### சைபாத்சு குடும்பங்களின் செல்வாக்கு அழிக்கப்படுதல்

ஜப்பானில் மக்களாட்சி முறை நிலை பெற வேண்டுமாயின் அதன் பொருளாதார வளர்ச்சியிலும், செல்வத்திலும் நாட்டினர் அனைவருக்கும் சம உரிமை இருக்க வேண்டும். எனவே, ஜப்பானி லுள்ள ஒரு சில பெரும் பணக்காரக் குடும்பங்களின் செல்வாக்கை ஒழித்துவிட்டால் அதன் பொருளாதாரம் நாடு முழுவதும் சமமாகப் பரவும் என மெக் ஆர்தர் நம்பினூர். இதனுல் சைபாத்சு (Zaibatsu) குடும்பங்களின் ஆதிக்கத்திலிருந்த பெரும் தொழிலகங் களும், வைப்பகங்களும், போக்குவரத்து நிறுவனங்களும், மற்ற வைகளும் அரசாங்கத்தால் எடுத்துக் கொள்ளப்பட்டன. அவ்வாறு எடுத்துக் கொள்ளும் போது சொந்தக்காரர்களுக்கு அவற்றின் மதிப்பிற்கேற்ற தொகைகள் நீண்ட கால அரசாங்கப் பத்திரங்கள் மூலம் வழங்கப்பட்டன. மேஜி புரட்சியின் காலத் திலிருந்து செல்வாக்குப் பெற்றிருந்த சைபாத்சுக் குடும்பங்களின் ஏற்றமிகு நிலை அழிக்கப்பட்டது.

### தொழிலாளர் நலன்கள்

பொருளாதார மேம்பாட்டுடன், தொழிலாளர்களின் இடர்ப் பாடுகளை நீக்கி அவர்களுக்குத் தன்னிறைவு வாழ்க்கை அளிப்பதற் கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அமெரிக்காவில் செயல் முறையிலிருந்த 'தேசியத் தொழிலாளர் நலச் சட்டம்' (National Labour relations Act) என்பதனைத் தழுவி, ஜப்பானில் ஒரு திட்டம் கொண்டுவரப்பட்டது. இதன்படி ஜப்பானில் அங்கீகரிக் கப்பட்ட தொழிற்சங்கங்கள் தோன்றின. இச் சங்கங்களின் உறுப் பினர் எண்ணிக்கை 1950ஆம் ஆண்டிற்குள் 70 இலட்சமாக உயர்ந்தது. இவ்வாறு உரிமை பெற்ற தொழிற்சங்கங்கள் உற் பத்தியைப் பெருக்குவதற்கு முயற்சி செய்யாமல், தங்களின் உரிமைகளுக்காகப் போராட்டங்கள் செய்ய ஆரம்பித்தன. தொழிற் சங்கங்களிடையே பொதுவுடைமைக் கட்சியினர் செல் வாக்குப் பெற்றனர்.

### நிலச் சீர்திருத்தங்கள்

ஜப்பானில் நிலச் சீர்திருத்தச் சட்டம் மெக் ஆர்தரின் உத்தர விற்கிணங்க 1946-ல் இயற்றப்பட்டது. இச் சட்டத்தின் அடிப் படை நோக்கம் பயிரிடுவோர் பலரும் நில உரிமை பெற

வேண்டும் என்பதாகும். இதன்படி பல பெரிய நிலப் பிரபுக்களுடைய நிலங்களை அரசாங்கம் கட்டாயப்படுத்தி வாங்கி அதை விவசாயிகளுக்கு நேரடியாக விற்றது. அதன் விலையை நீண்ட காலத் தவணையில் கொடுக்கவும் ஏற்பாடு செய்தது. நேரடியாகத் தாங்களே விவசாயம் செய்யும் நிலக்கிழார்கள் தங்கள் சொந்தப் பயனுக்காக ஏழரை ஏக்கரும், குத்தகைக்கு விடுவதற்காக இரண்டரை ஏக்கர் நிலமும் வைத்திருக்க அனுமதிக்கப் பட்டார்கள். ஆக, பத்து ஏக்கருக்கு மேல் யாருமே ஜப்பானில் நிலம் வைத்திருக்க இயலாத நிலை உருவாயிற்று. குத்தகையும் ஆண்டிற்கு விளைச்சலில் இருபத்தைந்து சதவீதம் என நிர்ணயம் செய்யப்பட்டது. பல்லாயிரக் கணக்கான ஏழை உழவர்கள் இதனால் பயனடைந்தனர்.

### கல்விச் சீர்திருத்தங்கள்

மக்களாட்சி முறை வளர்ச்சிக்கு அடிப்படையாக உதவுவது பொருளாதாரம் என்றாலும், சீர்திருத்தங்களை ஏற்பதற்கும், கருத்துகளை அறிந்து கொள்ளவும் தகுந்த கல்வி முறைகள் அமையவேண்டும். எனவேதான் நேச நாடுகள் ஜப்பானின் கல்வி முறையையும் மாற்றியமைக்கும் திட்டத்தை வெளியிட்டன. இது வரை ஜப்பானில் இருந்துவந்த கல்வி முறை அடியோடு ஒழிக்கப் பட்டது. உலக சமாதானத்திற்கும், குடியாட்சி முறை வளர்ச்சிக் கும், நாடுகளிடையே நல்லெண்ணம் ஏற்படுகின்ற வகையிலும், இளம் உள்ளங்களிடையே இனவெறியை, ஆதிக்க உணர்வை, அரச பக்தியை, தன்னுட்டைத் தவிர மற்றவைகள் அனைத்தும் கீழானவை என்ற தவறான கொள்கையை எழச் செய்கின்ற முறை களை மாற்றியமைக்கும் வகையிலும் கல்வித் திட்டங்கள் உரு வாக்கப்பட்டன. நாடெங்கிலும் தொடக்கக் கல்வியும், நடுத் தரக் கல்வியும் கட்டாயமாக்கப்பட்டது. பிறகு ஆறு ஆண்டுகள் உயர்நிலைக் கல்வியும் நான்கு ஆண்டுகள் பல்கலைக் கழகக் கல்வியு மாக ஆக்கப்பட்டது. நாடெங்கிலும் கல்லூரிகளும், பள்ளிகளும் நிறுவப்பட்டன. மாணவர்கள் கண்மூடித் தனமாகக் கட்டா யத்தின் பேரில் பாடங்களைக் கற்பதற்குப் பதிலாக அவர்களின் விருப்பத்திற்கேற்ற பாடங்கள் கற்பிக்கப்பட்டன. பொது வாகக் கூறுமிடத்து அமெரிக்கக் கல்வி முறை அப்படியே ஜப்பானில் புகுத்தப்பட்டது எனலாம்.

### ஷிண்தோ சமயத்தின் வீழ்ச்சி

ஜப்பான் நாட்டின் ஆதிக்க வெறிக்கு வித்திட்டது ஷிண்தோ சமயமாகும். அவ் வெறி மதத்தை ஒழித்தால்தான் ஜப்பானியருக் குப் பரந்த நோக்கமேற்படும் என்பதை யுணர்ந்த மெக் ஆர்தர்,

அம் மதத்தை அடியோடு ஒழித்தார். அம் மதம் தேசிய மதமாக இனி இருக்கக் கூடாதென்றும், அரசு பணியாளர்கள் அம் மதத்தைப் பின்பற்றவோ, பரப்பவோ கூடாதென்றும் உத்தர விட்டார். இதைப் பின்பற்றிப் பேரரசரும், தமது தெய்விகத் தன்மையைக் கைவிடுவதாகப் பேரறிக்கை மூலம் அறிவித்தார். இதனால் ஜப்பானிய மக்களிடையே இதுவரை நிலவிவந்த, பேரரசர் கடவுள் வழிவந்தவர் என்ற நம்பிக்கையும், கடவுளரு ளால் தங்கள் நாடு உயர்ந்தது என்ற கொள்கையும், தாங்கள் தான் உலகிலேயே உயர் இனத்தவர் என்ற பெருமையுணர்வும், படை கொண்டு உலகையாளலாம் என்ற பேராசையும் அழிக்கப் பெற்று, நாமும் உலக மக்களோடு மக்களே; எல்லோரும் சமமான வர்களே. எந்தப் பதவிக்கும் எவரும் மக்களாட்சி முறைப்படி வரலாம் என்ற எண்ணங்கள் ஜப்பானியரிடையே தோன்றலாயின.

**ஜப்பானின் புதிய அரசியலமைப்புச் சட்டம் (May 3, 1947)**

நேச நாடுகள் ஜப்பானைப் பாராளுமன்ற ஆட்சி முறையில் ஆள அதன் மக்களுக்குக் கற்றுக் கொடுப்பதைத் தங்களுடைய அடிப்படை நோக்கமாகக் கொண்டிருந்தன என்பதை அறிவோம். அதற்கேற்ப ஜப்பானில் நேச நாடுகளின் நோக்கங்களைத் தங்கள் கொள்கைகளாகக் கொண்ட அரசியல் கட்சிகளைத் தேர்ந்தெடுப் பதும், வளர்ப்பதும் நேசநாடுகளின் முக்கிய பணியாயிற்று. ஜப்பானில் லிபரல் கட்சி, முன்னேற்றக் கட்சி, பொதுவுடைமை யினர் போன்ற செல்வாக்குப் பெற்ற கட்சிகளும், முந்நூறுக்கும் அதிகமான உதிரிக் கட்சிகளும் இருந்தன. இவைகள் யாவுமே தேசிய நோக்கமின்றி, கட்சித் தலைவர்களின் தன்னலக் கொள்கை களுக்காகப் பாடுபட்டன. இந் நிலையில் சுயநலமின்றி, நாட்டின் முன்னேற்றத்திற்காகப் பாடுபடும் கட்சிகளுக்கு ஆதரவளித்து, இறைமைத் தன்மையை மக்களிடம் அளித்து, மக்களாட்சி முறை மலரச் செய்ய மெக் ஆர்தர் உறுதி பூண்டார். 1889ஆம் ஆண் டில் பேரரசர் மக்களுக்கு அளித்த அரசியல் அமைப்புச் சட்டத் தின் விதிகளை முற்றிலும் மாற்றி, புதிய அரசியலமைப்பை உரு வாக்கித் தரும்படி மெக் ஆர்தர் ஆணையிட்டார். 1945ஆம் ஆண்டு தொடங்கப் பெற்ற ஜப்பானுக்குப் புதிய அரசியல் சட்டத்தை உருவாக்கும் பணி, ஆரம்ப வரைவுகள், திருத்தங்கள், விளக்கங்கள் என விரிந்து, பெருந்தானைத் தலைவரின் திருத்தங்களை ஏற்று, அவரின் அனுமதியுடன் ஜப்பானியப் பேரரசரால் அறிவிப்புச் செய்யப்பட்டது. இப் புதிய அரசியல் சட்டம் 1947ஆம் ஆண்டு மேத் திங்கள் 3ஆம் நாள் செயல்படத் துவங்கியது.

இப் புதிய அரசியல் சட்டத்தில் பதினோர் அத்தியாங்கள் மிக எளிய சொற்றொடர்களில் எழுதப்பட்டிருக்கின்றன. இதில்




ஜப்பானிய அரசியல் சட்டம் (1947)

மொத்தம் 103 சட்ட விதிகள் இருக்கின்றன. இது எழுதப்பட்ட, நெகிழாத் தன்மையுடைய, பாராளுமன்ற முறையை அடிப்படையாக்க் கொண்ட ஒற்றையாட்சி முறையில் செயல் படும்(Unitary Constitution) அரசியல் அமைப்புச்சட்டமாகும். இது ஒரு மணி நேரத்தில் படிக்கக்கூடியதாக இருபது பக்கங்களைக் கொண்டதாகவும், நுணுக்கமான, சட்டங்கள் சம்மந்தப்பட்ட சொற்றொடர்களின்றி, பாமர மக்களும் படித்தறிந்துகொள்ளும் வகையிலும் எழுதப்பட்டிருப்பது இதன் சிறப்பை வலியுறுத்தும்.

இப் புதிய அரசியலமைப்பில் காணப்படும் அடிப்படையான மிக முக்கிய அரசியல் தத்துவங்கள் மூன்று. ஒன்று, மக்களின் இறைமாட்சி; இரண்டு, அடிப்படை உரிமைகள்; மூன்று, போரை ஒழித்தல், ஆகியவையாம். இம் மூன்று கருத்துகளும், அரசியலமைப்பின் முகவுரையிலேயே (Preamble) மிகத் தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. உலகில் எந்த அரசியலமைப்பிற்கும் இல்லாத தனிச்சிறப்பு புதிய ஜப்பானிய அரசியலமைப்பிற்கு உண்டு. அதுதான் போரைத் துறத்தல் என்பதாகும். இரண்டாவது அத்தியாயத்தில் ஒன்பதாம் விதி இதை வலியுறுத்துகின்றது. மேலும் மொத்தம் 103 விதிகளில், முப்பத்தொரு விதிகள் மக்களின் அடிப்படை உரிமைகளைப் பற்றியும், அவர்களின் கடமையைப் பற்றியும் குறிப்பிடுகின்றன. அவ்வுரிமைகள் என்றென்றும் நிலைத்திருப்பதும், யாராலும் மீறப்படாதவையுமாகும் என அரசியல் சட்டம் திட்டவட்டமாகக் குறிப்பிடுகின்றது. ஒவ்வொரு ஜப்பானியக் குடிமகனுக்கும், அரசியல், சமூகம், பொருளாதாரம் முதலிய துறைகளில் ஏற்றத்தாழ்வற்ற சமமான நிலைகளை வழங்கவும், சுதந்திரம் சமத்துவம், நல்வாழ்வு முதலியவற்றை நல்கவும், இந்த அடிப்படை உரிமைச் சட்டங்கள் காப்புறுதியளிக்கின்றன.

### பேரரசர்

பேரரசர், ஆங்கிலப் பேரரசரைப் போல, பெயரளவுக்கு மட்டிலும் நாட்டின் தலைவராக, ஒற்றுமையின் சின்னமாக விளங்குவார். இதுவரை பெற்றிருந்த இறைமாட்சியை இழந்தார். அரசியலைப் பொறுத்தவரையில் எந்தவித அதிகாரமும் கிடையாது. நாடாளுமன்றம் இயற்றுகின்ற சட்டங்களுக்கு ஒப்புதல் அளிக்கவேண்டும். அறிவுரை கூறுகின்ற அதிகாரம் உண்டு. ஆனால், அதைத் தலைமையமைச்சரோ, நாடாளுமன்றமோ ஏற்றுக் கொள்ள வேண்டும் என்ற நியதி இல்லை. அமைச்சரவை சட்டதிட்டங்களுக்குட்பட்டுப் பேரரசர் செயல்படவேண்டும். முதல் ஆறு அரசியல் சட்ட விதிகள் பேரரசரின் தன்மையைக் குறிப்பிடுகின்றன

**நாடாளுமன்றம் (Diet)**

இதில் இரண்டு அவைகள் உள்ளன. உறுப்பினரவை (House of Councillors); இதை மேலவை என்றும் கூறலாம். மற்றொன்று பிரதிநிதிகள் அவை (House of Representatives). இதை மக்களவை அல்லது கீழவை எனக் கூறலாம். அரசரும், அமைச்சரவையும் இம் மன்றத்திற்குக் கட்டுப்பட்டு செயலாற்ற வேண்டும். பேரரசர் இம் மன்றத்தைக் கட்டுப்படுத்தவோ, அல்லது இயற்றிய சட்டங் களைத் தள்ளவோ இயலாது. எதிர்க்கட்சிகளுக்குக் குறைகளை எடுத் தியம்பும் அதிகாரம் உண்டு. நாடாளுமன்றத்தில் பெரும்பான்மை பெற்ற கட்சியின் தலைவரே முதலமைச்சராக நியமிக்கப்படுவார். நாடாளுமன்றத்தின் நம்பிக்கையை இழந்தால் அமைச்சரவை கலைக்கப்படும்.

**உறுப்பினரவை (House of Councillors)**

மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட 250 உறுப்பினர்களைக் கொண்டது. பதவிக்காலம் ஆறு ஆண்டுகள். பாதிப் பேர் மூன்றாண்டுக்கு ஒருமுறை பதவி விலகுவர். 150 பேர் தொகுதிவாரி யாக நாட்டின் 46 தொகுதிகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்படுவர். மீதிப் பேர் நாடு முழுவதிலுமிருந்து தேசிய அடிப்படையில் தேர்ந் தெடுக்கப்படுவர். முப்பது அகவையடைந்தவர்கள் தொகுதி, இனம், பால், கல்வி, சொத்து ஆகிய வேறுபாடுகளின்றித் தேர்ந் தெடுக்கப்படுவர். இவ்வவை ஆண்டுக்கொரு முறை டிசம்பரில் கூடும்.

**பிரதிநிதிகளவை (House of Representatives)**

இதில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட 467 உறுப்பினர்கள் நான்கு ஆண்டுக்காலம் பதவியிலிருப்பர். நாடு முழுவதிலுமுள்ள 118 தொகுதிகளிலிருந்து, மூன்றிலிருந்து ஐந்து பேர் வரை, மக்கள் தொகை அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்படுவர். 1920ஆம் ஆண்டுச் சட்டப்படி இருபது அகவையடைந்த ஆண், பெண், அனைவருக்கும் வாக்குரிமை உண்டு. இருபத்தைந்து அகவை நிரம்பியவர்கள் தேர்தலில் போட்டியிடலாம்.

இவ்விரண்டு அவைகளும் இணைந்து சட்டங்களை உருவாக்கும் கீழவையில் பெரும்பான்மை பெற்ற ஒரு கட்சியின் தலைவரோ அல்லது கட்சிகளின் கூட்டிணை ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒரு வரையோ பேரரசர் தலைமையமைச்சராக நியமிப்பார். டயட் உறுப்பினர்களே பெரும்பாலும் அமைச்சர்களாக நியமிக்கப்படு வர். நாடாளுமன்றத்தின் நன்மதிப்பையும், ஆதரவையும்

பெற்றிருக்கின்ற வரையில் தலைமை அமைச்சரும், அமைச்சரவை யும் செயலாற்றுவர்.

### நீதித்துறை

இவ்வாறு நாடாளுமன்றமும், அமைச்சரவையும் ஆங்கில அரசியலமைப்பு முறையில் ஏற்படுத்தப் பட்டாலும், ஜப்பானிய நீதித்துறை அமெரிக்க நீதித்துறை முறை அடிப்படையில் அமைக்கப்பட்டது. தலைமை நீதிபதியும், மற்ற நீதிபதிகளும் நாடாளுமன்றத்தினால் அமர்த்தப்படுவர். தலைமை நீதி மன்றத் திற்கு அமெரிக்கத் தலைமை நீதிமன்றத்தைப்போல நீதி மறுஆய்வு (Judicial Review) செய்கின்ற அதிகாரம் உண்டு. கீழ் நீதிமன்றங் களின் நீதிபதிகளைப் பரிந்துரை செய்யவும், நடைமுறைகளைக் கண்காணிக்கும் உரிமையும் உண்டு.

### வட்டார அரசுகள் (Local Governments)

வட்டார அரசாங்கத்தைப் பொறுத்த வரையில் சுயாட்சி யையும் (Home Rule) மக்களாட்சியையும் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாகச் செயல்படுத்தமுடியுமோ அந்த அளவுக்குச் செயல் படுத்த முயன்றனர். வட்டாரத் தன்னாட்சிக் கொள்கைகளின்படி அவ்வரசுகள் செயல்படுவதற்கு விதிமுறைகள் இருந்தன. தலைமை நிர்வாக அலுவலர்கள் யாவரும் பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப் படுவர்.

### புதிய ஜப்பானில் அரசியல் கட்சிகளும், அமைச்சரவைகளும்

நேச நாடுகளின் பொறுப்பில், மெக் ஆர்தரின் ஆட்சியில் ஜப்பான் புதுவாழ்வைத் தொடங்கியது. போருக்கு முன்பும், போரின்போதும் செல்வாக்குப் பெற்றிருந்த, இராணுவத்தினரின் அடிவருடிகளாய் இருந்த அரசியல் கட்சிகள் மறைந்தன. பல்லாயிரக்கணக்கான அதிகாரிகளும், பலதரப்பட்ட கட்சித் தலைவர்களும் தமது அதிகாரத்தை இழந்தனர். அரசியலை விட்டும் வலுக்கட்டாயமாக வெளியேற்றப் பட்டனர். இதுகாறும் சிறையில் வாடிய பொதுவுடைமைக் கட்சியினர் வெளிப் போந் தனர். போருக்குப் பின்னர் ஏற்படுத்தப்பட்ட பொருளாதார, சமூக, சமய, கல்விச் சீர்திருத்தங்களும், தொழிற்சங்கங்களும், பொதுவுடைமையினரின் செல்வாக்கை மக்களிடையே வேரூன்றச் செய்தன. இதைக் கண்ட மெக் ஆர்தர் அதிர்ச்சியடைந்தார். பொதுவுடைமைக் கட்சி வளர்ந்தது. அதனுடன் கற்றவர்களையும், தொழிலாளர்களையும் உள்ளடக்கிய சோஷல் டெமோக்கிராடிக் கட்சி (Social Democrats-Shakaito) ஒன்றும் ஆரம்பிக்கப்பட்டு,

பொதுவுடைமைக் கட்சியுடன் இணைய மறுத்துத் தனித்து நின்றது. இத்துடன்இருவேறு புதுக்கட்சிகளும் தோன்றின. முன்னர் மின்சிதோ (Minseito) செயூகை (Seiyvkai) கட்சியிலிருந்தவர்கள், பழமைவாதிகள் என அழைக்கப்பட்டவர்களை உறுப்பினர்களாகக் கொண்டு இரண்டு புதுக்கட்சிகள் உருவாயின. ஒன்று அஷிதா ஹிதோஷியையும் (Ashida Hitochi), யோஷிதா ஷிகேருவையும் (Yoshida Shigeru) தலைவர்களாகக் கொண்ட லிபரல் (Liberal-Jiyuto) கட்சி, மற்றொன்று ஷிதேரா குஜுரோவின் (Shidehara-Kujuro) தலைமையிலான முன்னேற்றக் கட்சியாகும் (Progressive-Shimpoto).

இவ்வாறு புதிய கட்சியினர் ஜப்பானிய அரசியல் வானில் உதயமான போதும், தன்னிச்சையாகக் கொள்கைகளை உருவாக்கிச் செயல்பட இயலவில்லை. நேச நாடுகளின் பிடியில் இன்னமும் இருந்த ஜப்பான், அந் நாடுகளின் இசைவுடனும், பெருந்தானைத் தலைவர் மெக் ஆர்தரின் அனுமதியுடனும்தான் அரசியல் வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டியிருந்தது என்பது நோக்கற்பாலது. 1946 ஆம் ஆண்டு நடத்தப்பட்ட முதல் பொதுத்தேர்தலில் லிபரல் கட்சி வெற்றி பெற்று, அஷிதா (Ashida) தலைமையில் அமைச்சரவை அமைத்தது. இவ்வமைச்சரவைதான் ஜப்பானின் புதிய அரசியலமைப்பை வெளியிடும் பெயரைப் பெற்றது. ஆனால், இந்த அமைச்சரவை நீண்டகாலம் பதவியிலிருக்க முடியவில்லை. ஜப்பானிலிருந்த பொதுவுடைமைக் கட்சியினர் பொருளாதாரச் சீர்திருத்தம் கோரி, பொது வேலைநிறுத்தம் செய்ய முயன்றனர். இவர்களின் முயற்சி நசுக்கப்பட்டது. இதனால் பொதுவுடைமையினர் மதிப்பிழந்தனர். பொது மக்களின் உண்மை நிலையை உணர வேண்டி மறு பொதுத் தேர்தல் கோரி அஷிதா அமைச்சரவை பதவி விலகியது.

யோஷிதா ஷிகேரு அமைச்சரவை (Yoshida Shigeru 1949-1954)

மேற்கூறிய அமைச்சரவை கவிழ்ந்ததும் நடைபெற்ற பொதுத் தேர்தலில் மீண்டும் லிபரல் கட்சியினர் பெரும்பான்மைப் பலம் பெற்று, தனியாக அமைச்சரவை அமைக்கும் உரிமை பெற்றனர். யோஷிதா ஷிகேரு தலைமையமைச்சரானர். பாராளுமன்ற மக்களாட்சி முறைப்படி இந்த அமைச்சரவை செயல்படத் துவங்கியது. இக் காலத்தில் தொழிற்சங்கங்களைத் தமது கைப்பாவையாகக் கொண்ட பொதுவுடைமையினர் வேலை நிறுத்தங்களிலும், வன்முறைச் செயல்களிலும் ஈடுபட்டனர். இந்த வன்முறைச் செயல்கள், மக்களாட்சி முறையின் எதிரிகளாகக் கருதப்பட்டு, நேச நாடுகளின் துணை கொண்டு நசுக்கப்பட்டன.

இந் நிலையில் அமெரிக்காவுக்கும், ருஷியாவுக்குமிடையேயான பனிப்போர் (Cold war) தொடங்கியது. முதலாளித்துவ அமெரிக்கா, பொதுவுடைமைக் கொள்கையை உலகில் பரவ வொட்டாமல் தடுப்பதைத் தனது முக்கியக் குறிக்கோளாகக் கொண்டு செயல்பட்டது. ருஷியாவிற்கு மிக அருகிலுள்ள ஜப்பானை பொதுவுடைமை எதிர்ப்பு நாடாக; அதாவது தனது செல்வாக்கிற்குட்பட்ட நாடாக மாற்றி, தனது நட்பு நாடாகக் கொள்ள வேண்டும் என அமெரிக்கர்கள் விரும்பினர். இதற்கிடையே கொரியாவில் ஏற்பட்ட போரும், அமெரிக்கர்களின் இந்த விருப்பத்தை விரைவாக்கிற்று.

**சான்பிரான்சிஸ்கோ ஒப்பந்தமும்-ஜப்பானிய விடுதலையும்**

வட கொரியாவில் வலுப்பெற்று நின்ற பொதுவுடைமையினர் தங்களது ஆட்சிக்குள் தென்கொரியாவையும் கொண்டு வர முடிவு செய்து, போரைத் துவக்கினர். தென்கொரியாவிற்கு ஆதரவாக இதுவரை பாதுகாப்பு நாடாக இருந்த அமெரிக்கா உதவி செய்ய முன்வந்தது. ஜப்பானிலும் பொதுவுடைமைக் கட்சியினரின் தூண்டுதல்களால் அமெரிக்க எதிர்ப்பியக்கம் வளரத் தொடங்கியது. இந் நிலையில் ஜப்பானுக்கு விடுதலையளித்து, பொருளாதாரத் தன்னிறைவு அடையும் வரை உதவி செய்து ஜப்பானியரின் நட்பைப் பெறுவது, பொதுவுடைமைக் கொள்கை ஜப்பானில் வளர விடாமல் தடுக்க ஏதுவாகுமென்றும், ருஷியாவின் மிக அருகில் தனக்குச் சிறந்த நட்பு நாடு ஒன்று கிடைக்கும் என்றும் நம்பிய அமெரிக்கா ஜப்பானுக்கு விடுதலை வழங்க முடிவு செய்தது.

ஜூலை 20, 1951-ல் அமெரிக்காவும், பிரிட்டனும் இரண்டாம் உலகப் போரில் ஈடுபட்ட அனைத்து நாடுகளையும் சான்பிரான் சிஸ்கோவில் நடக்கவிருக்கும் மாநாட்டிற்கு வருகை தருமாறு அழைத்தன. ஜப்பானுடன் சமாதானம் செய்து கொள்வதே இம் மாநாட்டின் நோக்கமென்றும், அத்தகைய சமாதான உடன்படிக்கையில் இன்னின்ன கூறுபாடுகள் அடங்கியிருக்க வேண்டும் என்பதனையும், அழைப்பிதழுடன் ஒரு போலிகை உடன்பாட்டையும் எழுதியனுப்பியது.

சான்பிரான்சிஸ்கோவில் கூடிய மாநாட்டில் 48 நாடுகள் ஜப்பானுடன் செய்து கொள்ளப் போகும் உடன்படிக்கையில் கையொப்ப மிட்டன. ருஷியாவும், அதன் நேச நாடுகளும் கையொப்பமிடவில்லை. மாநாட்டில் கலந்து கொள்ள சீனா மறுத்து விட்டது. ஜப்பானின் தலைமையமைச்சர் யோஷிதா ஷிகேரு தம்

நாட்டின் சார்பில் கையொப்ப மிட்டார். அதே நாளில் அமெரிக்கா தான் மட்டும் தனியாக ஜப்பானுடன் ஒரு பாதுகாப்பு ஒப்பந்தம் செய்துகொண்டது. இந்த ஒப்பந்தங்களை 1951 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் ஜப்பான் ஏற்றுக் கொண்ட தாக அறிவித்தது.

சான்பிரான்சிஸ்கோ ஒப்பந்தத்தை ஏற்றுக் கொண்ட ஜப்பான், தன்னை ஐக்கிய நாடுகளின் சபையில் ஓர் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்றும் கூறியது. இந்த ஒப்பந்தத் தின்படி ஜப்பான் தனது இடையீடற்ற இறைமாட்சியைப் பெற்றது. கொரியாவின் சுதந்திரத்தை அங்கீகரித்தது. பார்மோசா உரிமைகளைத் துறந்தது. இதேபோல குரைல் (Kurile) தீவுகள், சாகாலின் ஆகியவற்றின் மீது தனக்கிருந்த உரிமைகளை யும் விட்டுக்கொடுத்தது. பசிபிக் பெருங்கடலில் தன் ஆதிக்கத் திலிருந்த தீவுக் கூட்டங்கள் அனைத்தையும் ஐக்கிய நாடுகள் அவையின் பாதுகாப்பின் கீழ் விடச் சம்மதித்தது. தனது சுதந்திரத்தை மீண்டும் பெற்ற ஜப்பான், இனி எந்த நாட்டுடனும் எத்தகைய சச்சரவையும் ஐக்கிய நாடுகள் அவை மூலம் தீர்வு காண முனைவதல்லாமல் வன்முறைச் செயல் மூலம் தீர்வுகாண முயல்வ தில்லை என்ற உறுதியையும் கொடுத்தது.

அமெரிக்காவுடன் செய்து கொண்ட தனி ஒப்பந்தத்தின்படி, ஜப்பானுக்குத் தனது பாதுகாப்பிற்கு அமெரிக்கப் படைகளை நம்பியிருக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. தன் நாட்டில் ஏற்படும் புரட்சிகளையும், கலகங்களையும் அடக்குவதற்கு அமெரிக்காவின் படைகளைத் தவிர வேற்று நாட்டுப் படைகளை அனுமதிப்பதில்லை என ஜப்பான் அறிவித்தது. ஜப்பானியர்களை அமைதிப்பணியில் நாட்டங்கொள்ளச் செய்யவும், உலக சமாதான நிறுவனங்களில் பங்கேற்கச் செய்யவும் அமெரிக்கா பாடுபட்டது. ஐக்கிய நாடுகளின் கல்வி, அறிவியல், பண்பாட்டு நிறுவனத்தில் (Unesco) ஜப்பானையும் பங்குகொள்ளச் செய்தது. அமெரிக்கா மேலும், அரசியல், சமூக, பொருளாதாரச் சீர்திருத்தங்களை உருவாக்கி, அவைகளைச் செவ்வையாகச் செயல்படுத்தும் நிர்வாகத் துறையை ஏற்படுத்திக் கொடுப்பதிலும் அமெரிக்கா பெரும் பங்கேற்றது.

சான்பிரான்சிஸ்கோ உடன்படிக்கை கையெழுத்தான நாளிலிருந்தே (செப்டம்பர் 8, 1951) ஜப்பான் விடுதலையடைந்து விட்டதாக உலக நாடுகள் ஏற்றுக் கொண்டாலும், நடைமுறை யில் ஏப்ரல் 21, 1952 ஆம் ஆண்டுதான் ஜப்பான் தனது முழுப் பொறுப்பையும் தானே ஏற்று விடுதலையடைந்த நாள் என்று கூறலாம். இதற்கு அடுத்த நாளே சீனக் குடியரசுடனும், தேசிய சீனுவுடனும் ஜப்பான் உடன்படிக்கை செய்து கொண்டது.

# 6. இன்றைய ஜப்பான்

இரண்டாம் உலகப் பெரும் போரில் ஈடுபட்டுப் பேரழிவைத் தேடிக்கொண்ட ஜப்பான், போரின் முடிவிலிருந்து ஏழாண்டுகள் நேச நாடுகளின் பொறுப்பில் இருந்தது. நேச நாடுகளின் பொறுப்பில் இருந்தது என்பதைவிட ஜப்பானின் தோல்விக்கு மூலகாரணமாய் இருந்த அமெரிக்காவின் பிடியிலிருந்தது எனக் கொள்வதே மிகவும் பொருந்தும். இந் நிலையிலிருந்து சான்பிரான் சிஸ்கோ ஒப்பந்தத்தால் ஜப்பான் விடுதலை அடைந்தது. முழு உரிமை பெற்ற, சுதந்திர நாடாக, உலக நாடுகளிடையே மீண்டும் எண்ணப்படுகின்ற நிலைக்கு உயர்ந்தது. இவ்வாறு விடுதலை அடைந்த ஜப்பானை எதிர்நோக்கியிருந்த பிரச்சினைகள் ஏராளம். உலகப் பெரும் போரில் வெற்றி-தோல்வியடைந்த நாடுகளில் பொதுவாகத் தோன்றும் எண்ணற்ற பிரச்சினைகள்தான் ஜப்பானிலும் தோன்றினவென்றாலும், ஏழாண்டுகளாக அடிமைத் தளையில் கட்டுண்டு கிடந்த ஜப்பான், விடுதலையடைந்ததும் இப் பிரச்சினைகளைக் கண்டுத் திகைத்தது. ஆனால் உறுதியிழக்கவில்லை. போர், ஜப்பானில் இதுகாறும் போற்றி வளர்த்த பொருளாதார ஏற்றத்தையும், தொழிலகங்களையும், கட்டடங்களையும், இரண்டு மில்லியனுக்கும் அதிகமான மக்களையும் மட்டும் அழிக்கவில்லை. மாறாக, ஜப்பானிய ஆதிக்க வெறியையும், படைப் பலத்தால் உலகையே அடிபணியச் செய்யவேண்டும், ஜப்பானிய இனம்தான் தலைசிறந்த இனம் என்ற இறுமாப்பையும், இந்த இறுமாப்புக்கு ஏற்றம் அளிக்கின்ற வகையில் ஏற்படுத்திச் செயல்பட்டு வந்த பொருளாதாரக் கருத்துகளையும், சமய, சமூக நிலையங்களையும், அனைத்திற்கும் மேலாகப் படையினர்தான் ஜப்பானின் பெருமையைப் போற்றிக் காக்கமுடியும் என்ற ஜப்பானியரின் எண்ணக் கோட்டைகளையும் அழித்தது. ஜப்பானும் உலக நாடுகளுள் ஒன்று; அவ் வுலக நாடுகளின் வளர்ச்சியில், அமைதிப் பணியில் பங் கெடுத்து உலகத்தோடு ஒட்டி வாழ்தலே தலைசிறந்த பண்பாடு என்பதையும் ஜப்பானியர் உணரச் செய்தது. ஜப்பானியர்

தன்னிலே உணர்த்தப் பெற்றனர். புதிய ஜப்பான் எழுந்தது. சுறுசுறுப்பும், உழைப்புத் திறமையும், தொழில் நுணுக்கங்களுடன் கட்டுப்பாடும் மிக்க ஜப்பானியர், தங்களை எதிர்நோக்கியிருக்கும் எண்ணற்ற பிரச்சினைகளைக் கண்டு அஞ்சாமல், அவைகளையே சவாலாக ஏற்று, உழைத்திட, உயர்ந்திட, போருக்கு முன்பிருந்த ஏற்றமிகு நிலையையும்விட உயர்ந்து நின்றிடத் துணிவு கொண்டனர்; செயல்பட்டனர். புதிய அரசியல் தலைவர்கள் வழிகாட்டினர். அதன் விளைவு இன்று ஆசிய நாடுகளுக்கே, ஏன் உலகத்திற்கேகூட ஜப்பான் வழிகாட்டியாக, எடுத்துக்காட்டாக விளங்குகின்றது.

### பொருளாதார வளர்ச்சி

ஜப்பான் சுதந்திரமடையும் முன்னரே அமெரிக்காவின் உதவியினால் பொருளாதாரத் துறை சீரடைந்திருந்தது. அமெரிக்கர்கள் உணவுப் பொருள், மூலப் பொருள்கள், பண உதவி ஆகியவற்றோடு தங்களின் நவீன, தொழில்நுட்ப அறிவையும் ஜப்பானியருக்குதவினர். இதனால்தான் தரைமட்டமாக்கப்பட்ட ஜப்பான் உலகமே வியக்கும்வண்ணம் மிகக் குறுகிய காலத்தில் பல துறைகளிலும் முன்னேறிவிட்டது. ஜப்பானிய மக்களும், அரசியல் தலைவர்களும் பொருளாதார வளர்ச்சியில் பெரிதும் ஆர்வம் காட்டினர். அமெரிக்க நாடாளுமன்ற உறுப்பினர் டாட்ஜ் (Dodge) என்பவரால் வகுத்தளிக்கப்பெற்ற ஜப்பானியப் பொருளாதாரத் திட்டம் (The Dodge Plan) ஜப்பானியருக்குப் பிற்காலத்தில் பெரும் பயன் அளித்தது. இதனிடையில் 1950-ல் ஏற்பட்ட கொரியப் போர் ஜப்பானியப் பொருளாதார வளர்ச்சிக்குப் பேருதவி புரிந்தது. ஐக்கிய நாடுகளின் படைகளுக்கு வேண்டிய உணவு, உடை ஆகியவற்றை ஜப்பான் கொடுக்க முன்வந்தது. இதனால் பல இலட்சம் டாலர்களை வருவாயாகப் பெற்ற ஜப்பான், தனது தொழிலகங்களைத் திருத்தி, உற்பத்தியைப் பன்மடங்காகப் பெருக்கியது. 1956-க்குள் பொருளாதாரச் சீர்கேடுகளை நீக்கி, சமநிலை அடைந்தது. புதிய தொழிலகங்கள், வணிகக் கூடங்கள் தோன்றின. போரின்போது இருந்த உற்பத்தியளவை விட இரண்டு மடங்குப் பொருள்களை உற்பத்திசெய்யும் உயர்ந்த நிலையை அடைந்தது.

இதைப் போலவே கப்பல் கட்டும் தொழிலிலும் ஜப்பான் மிக வேகமாக முன்னேறியது. போரின் முடிவில் நேச நாடுகள் ஜப்பானில் கட்டப்படும் கப்பல்களின் எண்ணிக்கையையும், எடையையும், கப்பல்களின் வேகத்தையும் கட்டுப்படுத்தும் சட்டங்களை உருவாக்கியிருந்தது. கொரியப் போர் ஏற்பட்டபின்னர், இத்

தடைகள் நீக்கப்பெற்றன. கப்பல் கட்டும் தொழிலில் விரைந்து முன்னேறிய ஜப்பான் இன்று உலக நாடுகளில் முன்னணியில் நிற்கின்றது.

இத் தொழில் வளர்ச்சிக்கு வேண்டிய மூலப் பொருள்களை அந்நிய நாடுகளிலிருந்து பெறுகின்றது. ஜப்பான் தனக்கு வேண்டிய இரும்புத் தாது, நிலக்கரி போன்றவற்றை, அமெரிக்கா, இந்தியா, மலேயா ஆகிய நாடுகளிலிருந்து பெறுகின்றது. ஜப்பானில் மின்விசை உற்பத்தியும் பெருகி, தங்கள் தொழிலகங்களைப் பெரும்பாலும் மின் சக்தியால் இயக்கப்படுகின்ற நிலையை அடைந்துள்ளது. இத்தகு வளர்ச்சியால் இன்று தனது இயந்திர உற்பத்திப் பொருள்கள், எலக்ட்ரானிக் பொருள்கள், படமெடுக்கும் கருவிகள் முதலியவற்றை உலக நாடுகள் முழுவதற்கும் அனுப்பும் திறமை பெற்றுவிட்டது. குறிப்பாக, அமெரிக்கா, இந்தியா, கிழக்காசியா, ஐரோப்பிய நாடுகள் முதலியவற்றிற்கு ஜப்பானிய இயந்திரப் பொருள்கள் அதிகமாக ஏற்றுமதி செய்யப்படுகினறன. இவ் வியந்திரப் பொருள்கள் யாவும் தன்மையிலும், நுண்மையிலும், உழைப்பிலும், விலை மலிவிலும் மற்ற நாட்டுப் பொருள்களைச் சந்தையில் வீழ்த்தும் அளவுக்குச் சிறப்புற்றுக் காணப்படுகின்றன. இரும்பு, எஃகுப் பொருள்களும், கப்பல்களும், படகுகளும், கார்களும், தொலைக்காட்சிப் படமெடுக்கும் கருவிகளும் அதிகமாக அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இதனால்தான் இன்றைய ஜப்பான் பன்னாட்டு வணிக வளர்ச்சியில் மூன்றாவது பெரிய இடத்தைப் பெற்றிருக்கின்றது எனக் குறிப்பிடப்படுகின்றது.

மிகச் சிறிய நாடு, குறைந்த கனிவளங்கள், ஆனால் மிகப் பெரிய மக்கள் எண்ணிக்கையைக் கொண்டது ஜப்பான்—என வருணிக்கப் பட்ட ஜப்பானில் போருக்குப் பின்னர் (1945-ல்) 72 மில்லியனாக இருந்த மக்கள் தொகை, 1963-ல் 96 மில்லியனாக உயர்ந்தது. வேகமாகப் பெருகி வரும் மக்கள் பெருக்கத்தைக் கட்டுப்படுத்துவதன் அவசியத்தை உணர்ந்த ஜப்பானிய அரசு, குடும்பக் கட்டுப் பாட்டுத் திட்டத்தைத் தீவிரமாகச் செயல்படுத்தி வருகின்றது. கருச் சிதைவு, சட்டப்படி அனுமதிக்கப்பட்டுள்ளது. கருச் சிதைவுச் சாதனங்கள் இலவசமாக வழங்கப்படுகின்றன. இம் முறைகளினால் மக்கள் தொகை வளர்ச்சி ஒரு சதவீதமாகக் குறைக்கப்பட்டுள்ளது. இதனால் மக்கள் பெருக்கத்தைக் கட்டுப் படுத்தும் முறையில் உலக நாடுகளில் முதலிடத்தை ஜப்பான் பெறுகின்றது. இத்தகு பொருளாதார வளர்ச்சியினால் ஜப்பானிய மக்களின் வாழ்க்கைத் தரமும் உயர்ந்துள்ளது. ஆசிய நாடுகளி

லேயே செல்வம் கொழிக்கின்ற நாடாகவும் ஜப்பான் உயர்ந்துள்ளது.

### சமுதாய மாற்றங்கள்

மேஜி புரட்சியின் பின்னர் ஏற்பட்ட சமுதாய மாற்றங்களை முன்னரே கண்டோம்.

1945ஆம் ஆண்டுக்குப் பின்னர் படைத் தளபதிகளின் அரசியல் தலைமை மறைந்தது. அமெரிக்காவின் உதவியால் மக்களாட்சி முறைகள் வேரூன்றின. புதிய அரசியலமைப்பு உருவாக்கப்பட்டு, மக்களனைவருக்கும், சம உரிமையும், வாய்ப்புகளும் கிடைக்க வழிவகை செய்யப்பட்டது. ஆதிக்கவெறி கொண்ட அரசு ஜப்பானில் மீண்டும் ஏற்படுவதைத் தவிர்க்கும் முறையில் ஜப்பானியர் செயல்பட விழைந்தனர். புதிய சமுதாய அமைப்பும் தோன்றியது. பழமையை முற்றிலும் மறந்துவிடாமல், புதிய மக்களாட்சிக் கருத்துகளையும் ஜப்பானியரின் பண்புகளுக்கேற்றவாறு மாற்றம் செய்து ஏற்று, வளம் பெற முனைந்தனர். இதன் விளைவுதான் பன்முகப் படுத்தப்பெற்ற பொருளாதாரத் திட்டங்கள். ஒருசில செல்வக் குடும்பங்களின் தன்னலப் பிடியிலிருந்த வணிக, தொழில் துறை முற்றுரிமைகள் அகற்றப்பட்டு, அரசுடைமையாக்கப்பட்டது. நிலச் சீர்திருத்தச் சட்டங்கள், இதுவரை நில உரிமையற்று, பெரும் நிலப் பிரபுக்களின் பிடியில் சிக்கித் தவித்த ஏழை உழவனுக்கும் நில உரிமை வழங்கின. வயது வந்தோரனைவருக்கும் வாக்குரிமை வழங்கப்பட்டதால், இதுவரை ஒரு சில குடும்பங்களின் தனி உரிமையாக இருந்த அரசியலிலும், நடுத்தரக் குடும்பத்தினர் நுழைந்து செல்வாக்குப் பெற வாய்ப்புகள் ஏற்பட்டன. திருத்தப்பட்ட கல்வி முறைகளினால் மக்களாட்சி முறையைக் கற்றுத் தேர்ந்த இளந்தலைமுறையினர் ஏற்றம் பெற்றனர். இதுவரை ஆண்களின் உலகமாகவே இருந்த ஜப்பானிய சமுதாயத் துறையில் பெண்களும் இடம் பெற்றனர். சமத்துவம் வளர்ந்தது. இவைகளை அடிப்படையாகக் கொண்டே புதிய சமுதாயக் கோட்பாடுகள் ஜப்பானில் தோன்றின.

### அரசியலில் வளர்ச்சி

1947ஆம் ஆண்டு மக்களாட்சி முறையை அடிப்படையாகக் கொண்ட புதிய ஜப்பானிய அரசியல் சட்டம் செயல்முறைக்குக் கொண்டு வரப்பட்டது. ஜப்பானிய ஆட்சிப் பொறுப்பை ஏற்றிருந்த பெருந்தானைத் தலைவர் மெக் ஆர்தர் அமெரிக்காவிலிருப்பதைப் போல ஜப்பானிலும் மக்களாட்சி முறையை வேரூன்றச் செய்வதில் மிகுந்த ஆர்வம் காட்டினார். அவருடைய முயற்சி

யாலும், மேற்பார்வையிலும் உருவாக்கப்பட்டதுதான் ஜப்பானிய அரசியல் சட்டம் (1947). இச் சட்டத்தின்படி பேரரசர் தமது தெய்விகத் தன்மையையும், தமது உயரிய அதிகாரங்களையும் விட்டுக்கொடுத்து, ஜப்பானிய ஒருமைப்பாட்டின் சின்னமாக மட்டும் விளங்கினுர். அரசியல் வானில் புதிய கட்சிகள் தோன்றின, பொதுவுடைமைக் கட்சியும் வளர்ந்தது. ஆனுலும் பொதுவுடைமைக் கட்சி ஜப்பானில் ஆதிக்கம் பெற முடியவில்லை. லிபரல் கட்சி, சோஷலிஸ்டுக் கட்சி, டெமாக்ரடிக் கட்சி போன்ற கட்சிகள் தோன்றி வளர்ந்தன. 1954 வரை இக் கட்சிகள் மக்களிடையே செல்வாக்குப் பெற்றிருந்தாலும், கட்சிகளுக்குள்ளேயே போட்டியும், பூசலும் மலிந்திருந்தன. சோஷலிஸ்டுக் கட்சி இரண்டாகப் பிளவுண்டது. லிபரல், டெமாக்ரடிக் கட்சிகளும் பிளவுறுகின்ற நிலையில் இருந்தன.

1955ஆம் ஆண்டுக்குப் பின்னர் ஜப்பானியக் கட்சிகளின் அமைப்பில் மாறுதல்கள் தோன்றின. ஜப்பானிய சோஷலிஸ்டு கட்சி இவ்வாண்டில் மீண்டும் இணைந்து, தனது கொள்கைகளை வரையறை செய்தது. இதைப் பின்பற்றி லிபரல் கட்சியும், டெமாக்ரடிக் கட்சியும் இணைந்து, லிபரல்-டெமாக்ரடிக் என்ற புதிய கட்சியைத் தோற்றுவித்தன. இந்த லிபரல்-டெமாக்ரடிக் கட்சிதான் இன்றுவரை ஜப்பானில் ஆட்சிப் பொறுப்பை ஏற்று நடத்தி வருகின்றது. இக் கட்சியைச் சேர்ந்த தலைமையமைச்சர்களின் பட்டியல் இந் நூலின் இறுதியில் இணைக்கப்பட்டுள்ளது.

லிபரல் டெமாக்ரடிக் கட்சியின் எதிர்க் கட்சியாக விளங்குவது சோஷலிஸ்டுக் கட்சியாகும். லிபரல் டெமாக்ரடிக் கட்சியின் பொருளாதார, சமூக நலக் கொள்கைகளும், வெளியுறவுக் கொள்கைகளும் ஜப்பானியரின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவும், தன்னிறைவு பெறவும், ஆசிய நாடுகளிலேயே செல்வம் கொழிக்கின்ற நாடாகவும் விளங்கச் செய்வதாலும், உலக நாடுகளிடையேயும் பெருமை மிக்க நிலையை ஏற்படுத்திக் கொடுத்திருப்பதாலும் இக் கட்சிக்கு மக்கள் ஆதரவு பெருகி வந்திருக்கின்றது. இக் கட்சியின் கொள்கைகள் எதுவானுலும் எதிர்ப்பதையும், சில சமயங்களில் பாராளுமன்ற முறைக்கு மாறுபட்ட முறைகளிலும் கூடச் செயல்பட்டு அரசை எதிர்ப்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருக்கின்ற சோஷலிஸ்டுக் கட்சி முக்கிய எதிர்க் கட்சியாகவே இதுவரை இயங்கி வந்திருக்கின்றது.

### வெளியுறவுக் கொள்கை

ஜப்பான் போரின் பின்னர் அடிமைப்பட்டிருந்த ஜப்பானின் ஆட்சிப் பொறுப்பை அமெரிக்கா ஏற்றிருந்தது. இக் காலத்தில்

சீரழிந்திருந்த ஜப்பானின் அரசியல், பொருளாதார முறைகளைச் சீர்திருத்தித் தன்னிறைவுகொண்ட நாடாக மாற்றுவதையே தனது முக்கியக் குறிக்கோளாக அமெரிக்கா கொண்டிருந்தது. உணவு, தொழில் நுணுக்க உதவி, பெரும் முதலீடுகள், மக்களாட்சி முறைப் பயிற்சி ஆகிய பலதுறைகளிலும் ஜப்பான் வளரக் காரண மாக இருந்தது அமெரிக்கா. இத்தகு உதவிகளுக்கு நன்றி தெரிவிக்கும் முறையிலும், அமெரிக்காவின் ஆதரவில் மேலும் முன்னேற வேண்டும் என்ற ஆவலினுலும், அமெரிக்காவுடன் நட்பு, அமெரிக்காவுடன் ஒத்துழைப்பு ஆகிய இவ் விரண்டு கொள்கையுமே தனது வெளியுறவுக் கொள்கையின் அடிப்படை யாக ஜப்பான் மேற்கொண்டது. சான்பிரான்சிஸ்கோ ஒப்பந் தத்தின்போது செய்துகொண்ட அமெரிக்க-ஜப்பானியப் பாது காப்பு ஒப்பந்தம் 1960-ல் மேலும் உறுதி செய்யப்பட்டது. இதன் முக்கிய காரணம், சீனுவில் பொதுவுடைமையினர் ஆட்சியைக்கைப் பற்றியதும் (October, 1949) சீனு-ருஷியப் பாதுகாப்பு மற்றும் நட்பு உடன்படிக்கையும் (February 1950), கொரியப் போருமாகும் (June, 1950). தன்னைச் சுற்றியுள்ள இப் பகுதிகளில் ஏற்பட்ட பொதுவுடைமை நாடுகளினிடையே ஏற்பட்ட வளர்ச்சியும், போக்கும், ஜப்பானை அமெரிக்க ஆதரவை மேலும் நாடும்படி செய்தன. மேலும் கிழக்காசிய நாடுகளுடனும் நட்புறவு கொள்ள ஜப்பான் விழைந்தது. இந்த எண்ணத்தினுல்தான் பர்மா, பிலிப்பைன், இந்தோ-சீனு ஆகிய நாடுகளில் போர்க்காலத்தில் ஜப்பானுல் ஏற்படுத்தப்பட்ட சேதங்களுக்குப் பெருந்தொகைகளை இழப்பீடாகக் கொடுத்தது. இந்த நாடுகளில் இன்றைய ஜப்பான் அரசியல் செல்வாக்குப் பெறுவதைவிட, வணிக ஒப்பந்தங்களின் மூலம் வர்த்தக உறவையும், பொருளாதார மேம்பாட்டுக்கு உதவி செய்வதினுல் நட்புறவை ஏற்படுத்திக் கொள்வதையுமே விரும்புகின்றது.

## ஒகினுவாப் பிரச்சினை (Okinawa Problem)

இத் தீவில் உள்ளவர்கள் அனைவருமே ஜப்பானியராவர். 1945-ல் அமெரிக்கா இத் தீவை வென்று, தனது படைத் தளத்தை நிறுவியது. ஜப்பான் விடுதலையடைந்தபோது அமெரிக்கர்கள் இத் தீவை ஜப்பானுக்கு விட்டுக் கொடுத்து, வெளியேற மறுத் தனர். பொதுவுடைமை நாடுகளின் அருகில் தனது படைத்தளமாக இருக்கும் ஒகினுவா தீவு, கிழக்காசிய நாடுகளில் பொதுவுடைமைக் கொள்கைப் பரவுவதைத் தடுப்பதற்கு விரும்பும் அமெரிக்காவிற் குப் பெரிதும் பயன்படும். இதனுல் இத் தீவிலிருந்து வெளியேற அமெரிக்கா தயங்கியது. இத் தீவின் அருகிலிருந்த ஏனைய தீவுகளை

ஜப்பானுக்குக் கொடுத்த அமெரிக்கா, ஓகினுவாத் தீவையும் திருப்பித்தருவதாகவும், ஆனால் அதற்குக் காலவரையறை கூற முடியாதெனவும் கூறிற்று. இதுவரை இருந்த அமெரிக்க-ஜப்பானிய நட்புறவு இதனால் பாதிக்கப்படக்கூடிய நிலையை எய்தியது. இதற்கிடையில் 1960-ல் புதுப்பிக்கப்பட்ட அமெரிக்க-ஜப்பானியப் பாதுகாப்பு ஒப்பந்தம் 1970-ல் மீண்டும் புதுப்பிக்கப்பட வேண்டியதாயிற்று. 1970-ல் ஜப்பானியத் தலைமையமைச்சராய் இருந்த இசக்கு சாதோ (Eisaku Sato) ஓகினுவாப் பிரச்சினைக்கு முடிவுகாண விரும்பினர். அமெரிக்கக் குடியரசு தலைவர் ஜான்சன் 1968-க்குப் பின்னர் ஓகினுவா திருப்பியளிக்கப்படும் என உறுதியளித்தார். ஆயினும் நிக்சன் (Nixon) அமெரிக்கக் குடியரசு தலைவராகப் பதவியேற்று, வியட்நாமிலிருந்து அமெரிக்கப் படையினரைத் திருப்பியழைத்துக் கொள்ள முடிவுசெய்த பின்னர்தான் ஓகினுவாவைத் திருப்பித்தர இசைந்தார். அதன்படி 1972-ல் ஓகினுவாவைத் திருப்பித் தருவதாக உறுதியளித்தார். ஓகினுவாவை ஜப்பான் திரும்பப் பெற்றாலும், அமெரிக்கப் படைத்தள உரிமை, சில கட்டுப்பாடுகளுடன் மேலும் நீடிக்கும் என்றும் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

### ஐக்கிய நாடுகளின் அவையில் ஜப்பான்

ஜப்பான் விடுதலையடைந்ததும் ஜூன் 1952-ல் உலக நாடுகளின் அவையில் சேருவதற்கு மனுக் கொடுத்தது. அதில் தன் நாட்டு மக்கள் உலக நாடுகளின் அவையின் நோக்கங்களை நன்கு புரிந்திருப்பதாகவும், அதனோடு ஒத்துழைத்துப் பயனடையத் தாங்கள் விரும்புவதாகவும் கூறியிருந்தது. ருஷியாவின் எதிர்ப்புக் காரணமாக 1956-ல்தான் ஜப்பான் ஐக்கிய நாடுகளின் அவையில் உறுப்பு நாடாகச் சேர முடிந்தது. இதிலிருந்து ஐக்கிய நாடுகளின் அவையின் எல்லாக் குழுக்களிலும் ஜப்பான் உறுப்பாண்மை பெற்று வந்திருக்கின்றது.

கொரியாப் போரிலும், மைய ஆசிய நாடுகளின் பிரச்சினைகளுக்கும், வியட்நாம் பிரச்சினைகளுக்கும், இதுபோன்ற மற்ற உலகப் பிரச்சினைகளுக்கும் சிறந்த முடிவு காண ஜப்பானும் உலக நாடுகளோடு இணைந்து பாடுபட்டு வருகின்றது. அணு ஆயுதப் பிரச்சினையில் ஜப்பான் மிகுந்த ஆர்வம் காட்டி, அணு ஆயுதக் கட்டுப்பாடு, குறைப்பு ஆகியவைகளைப் பற்றிய பேச்சுவார்த்தைகளிலும், ஒப்பந்தங்களிலும் பங்கேற்று வருகின்றது. மேலும், அணு ஆயுதச் சோதனைகள் நடத்தக் கூடாதென்று ஜெனிவா மாநாட்டிலும் (1958) பூமிக்கடியில்கூட அணு ஆயுதப் பரிசோதனைகள் நடத்துவதைத் தடைசெய்ய வேண்டுமென 1970ஆம் ஆண்டிலும் ஜப்பான் தீர்மானங்கள் கொண்டுவந்தது.

இவ்வாறு சமாதானத்தையே அடிப்படையாகக் கொண்டு பாடுபடும் ஜப்பான், மக்களின் நல்வாழ்வுக்காகப் பாடுபடும் ஐ. நா. அவையின் ஒவ்வொரு திட்டத்திற்கும் தனது உழைப்பையும், பொருளையும் கொடுத்து உதவுகின்றது. அறிவியல் வளர்ச்சிக்கும், தொழில்நுட்ப வளர்ச்சிக்கும் ஐ. நா. அவையில் ஏற்படுத்தப்பட்டுள்ள ஒவ்வொரு கிளையிலும் ஜப்பான் பங்கேற்றுள்ளது. ஐ. நா. வின் நீதிமன்றத்திலும் ஜப்பான் பங்கேற்றுள்ளது. இது தவிர உலக சுகாதார நிறுவனம், கல்வி, அறிவியல், பண்பாட்டு நிறுவனம், தொழிலாளர் நலநிறுவனம், உணவு, வேளாண்மை நிறுவனம் போன்ற அனைத்து நிறுவனங்களிலும் ஆர்வத்துடன் பங்கெடுத்து, வளரும் நாடுகளின்—சிறப்பாக இந்தியா, இலங்கை, மலேயா போன்ற நாடுகளின்—வளர்ச்சிக்கும் நல் வாழ்விற்கும் உதவ முன்வந்துள்ளது.

## முடிவுரை

ஏறத்தாழ அரை நூற்றுண்டிற்கும் மேலாக ஆசிய நாடுகளில் முதன்மையிடத்தைப் பெற்றுத் திகழ்ந்த ஜப்பான், போரில் ஏற்பட்ட அழிவுகளை மாற்றி ஆக்கம் பெற்று, போருக்கு முன்பிருந்த வளமான நிலையைக் காட்டிலும் பன்மடங்கு உயர்ந்து காணப்படுகின்றது. கிட்டத்தட்ட நூறு மில்லியன் மக்களைத் தன்னகத்தே கொண்டு, உழைப்பாலும் ஆக்கத்திறனாலும், உலக வல்லரசுக்கிணையாக உயர்ந்துள்ள ஜப்பான், ஆசியாவின் தலைமை நாடாக மீண்டும் விளங்க விழைகின்றது. ஆயினும், ஜனநாயக முறையில் நடைபயிலும் இந்தியாவும், பொதுவுடைமை நாடான சீனுவும் ஜப்பானுக்குப் போட்டியாக வளர்ந்து வருகின்றன. எனினும், வளர்ந்து வருகின்ற இந் நாடுகளுக்கு உதவுகின்ற நிலையில் வளர்ந்துவிட்ட ஜப்பான், தனது அரசியல் ஆதிக்கக் கொள்கையை மறந்துவிட்டது. தற்போது ஜப்பானின் கொள்கை ஆசிய நாடுகளில் பொருளாதார ஆதிக்கம் பெறவேண்டும் என்பதாகும். இந்நிலையில் ஆசிய நாடுகளிலேயே தன்னிறைவு பெற்ற ஜப்பான் அமெரிக்காவுடன் இணைந்து செயலாற்றி. உலக நாடுகளின் வளர்ச்சிக்கும், சமாதானத்திற்கும் பாடுபட்டு வருகின்றது.

# 7. சீன உள்நாட்டுப் போர்

ருஷியாவில் தோன்றி ஆதிக்கம்பெற்ற பொதுவுடைமைக் கொள்கை அண்டை நாடான சீனுவிலும் நுழைந்தது. 1918-ல் பீகிங் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த சில பேராசிரியர்கள்தான் முதலில் மார்க்சியக் கொள்கைப் படிப்பகம் (Marxist Study Group) ஒன்றைத் தொடங்கினர். இந்தப் படிப்பகம்தான் சீனுவில் பொது வுடைமைக் கொள்கையின் தோற்றத்திற்கு அடிப்படையாகும். மா-சே-துங் (Mao-Tse-Tung), லியு-ஷோ-சி (Liu-Shoa-Chi), சூ-என்-லாய் (Chou-En-Lai), சூ-தே (Chuh-Teh) ஆகியவர்கள் தாம் சீனப் பொதுவுடைமைக் கட்சியைத் தோற்றுவித்தவர்கள். தொழிலாளர்-உழவர் சர்வாதிகாரத்தை ஏற்படுத்துவதே பொது வுடைமையினரின் தலையாய குறிக்கோளாகும். சீனப் பொது வுடைமையினர் ருஷியாவோடு தொடர்புகொண்டு, பொது வுடைமைக் கொள்கையின் செயல்வீரர்களான இலெனின், ஸ்டாலின் ஆகியோரின் அரசியல் கொள்கைகளை மா-சே-துங் தீவிர மாகப் பரப்பினுர். இக் கொள்கைகள் மார்க்சிய-இலெனினியக் கொள்கைகள் என்றும், இவையே சீன வரலாற்றை மாற்றி யமைத்து, தொழிலாளர்-உழவரின் சர்வாதிகார ஆட்சியை ஏற் படுத்தக் கூடியவை என்றும் கருதினர்.

முதல் உலகப் போருக்குப் பின்னர்ச் சீனுவில் டாக்டர் சுன்யாட்சனின் தலைமையில் கோமின்டாங் கட்சியினர் செல் வாக்குப் பெற்று, சீனு முழுவதையும் ஒருமைப்படுத்தி வலிமை யுள்ள அரசை ஏற்படுத்த முனைந்தனர். இம் முயற்சியைச் செயல் படுத்த ஐரோப்பிய நாடுகளின் உதவியை நாடினுர் டாக்டர் சுன்யாட்சன். சீனுவின் அவல நிலையைக்கண்டு அனுதாபப்பட்ட மேற்கு வல்லரசுகள், ஜப்பானுடன் செய்துகொண்ட உடன் படிக்கைகளை மீற வழியறியாத நிலையில், சீனுவிற்கு உதவ முன்வர வில்லை. இந் நிலையில் பொதுவுடைமை ருஷியா, சீனுவுக்கு உதவ முன்வந்தது. ருஷியாவின் ஆதரவைப் பெற்ற கோமின்டாங் கட்சியில் சீனப் பொதுவுடைமையினர் உறுப்பாண்மை பெற்றனர்.

கோமின்டாங் கட்சியின் அமைப்பு முறைகளும் திருத்தியமைக்கப் பட்டன. சீனப் பொதுவுடைமைக் கட்சியும் தனது உறுப்பினர் களின் எண்ணிக்கையை உயர்த்திக்கொண்டு சீன மண்ணில் தழைத்து வளரத் தொடங்கியது. டாக்டர் சுன்யாட்சனின் மறைவிற்குப் பின்னர் கோமின்டாங் கட்சியின் தலைமைப் பொறுப் பேற்ற சியாங்-கே-ஷேக் பொதுவுடைமைக் கட்சியின் வளர்ச் சியைக் கண்டு அஞ்சினுர். தமது தோழமைக் கட்சியான் பொது வுடைமைக் கட்சியை வெளியேற்றி, நசுக்கும் முயற்சிகளில் ஈடுபட்டார். இதன் விளைவாக 1927-லிருந்து 1930 வரை பொது வுடைமையினர் கிளர்ச்சிகளில் ஈடுபட்டனர். இக் கிளர்ச்சிகள் நசுக்கப்பட்டன. பொதுவுடைமைக் கட்சியும் சீனுவில் தடை செய்யப்பட்டது. சீனு முழுவதையும் வென்ற கோமின்டாங்கினர் நாங்கிங் நகரைத் தலைநகரமாகக் கொண்டு பொதுவுடைமை எதிர்ப்பியக்கத்தைத் தொடங்கினர்.

இந் நிலையில்தான் சீனப் பொதுவுடைமைக் கட்சியின் தலைமைப் பொறுப்பை மா-சே-துங், ஏற்ருர். சியாங்சி-ஹுனுன் மாநில எல்லைகளிலிருந்த காட்டுப் பகுதிகளைத் தங்கள் மறைவிட மாகக் கொண்டு மா-சே-துங்கின் தலைமையிலான சீனப் பொது வுடைமைக் கட்சியினர் தங்களின் நோக்கங்களையும், கொள்கை களையும் வரையறை செய்து, சீனு முழுவதையும் வென்று, பொது வுடைமை ஆட்சியை ஏற்படுத்தும் எண்ணம் கொண்டனர். இந்த நோக்கங்களை நிறைவேற்றத் தேவையான செம்படை ஒன்றும் ஏற்படுத்தப்பட்டது. இச் செம்படையின் தலைவராக சு-தே (Chuh-Teh) என்பவர் நியமிக்கப்பட்டார். இச் செயல் களின் விளைவாகத் தென் சீன மாநிலங்களில் பொதுவுடைமையினர் வலிமைபெற்று, சோவியத் குடியரசுகளை நிறுவினர். பொது வுடைமைக் கொள்கைகள் தீவிரமாகப் பரப்பப்பட்டன. நில உரிமையற்ற ஏழை விவசாயிகள் இக் கொள்கைகளை வரவேற்றனர். பொதுவுடைமையினரின் செல்வாக்கு உயர்ந்தது. சியாங்-கே-ஷேக் இப் பொதுவுடைமையினரை அழிக்க உறுதி பூண்டு முறையான தாக்குதல்களைத் தொடங்கினுர். 1934ஆம் ஆண்டிற்குள்ளாகச் சீனப் பொதுவுடைமையினர் சுற்றி வளைக்கப் பட்டனர். இவர்களின் முடிவுகாலம் நெருங்கி விட்டதெனக் கோமின்டாங்கினர் மகிழ்ந்தனர். இந் நிலையில்தான் சீனப் பொது வுடைமையினர் மா-சே-துங், சு-தே, சூ-என்-லாய் போன்ற பெருந்தலைவர்கள் உட்பட, செம்படையினர் அனைவரும், தங்களின் உரிமைப் பொருள்களனைத்தையும் சுமந்துகொண்டு, கோமின் டாங் படையினரின் கண்காணிப்பிலிருந்து தப்பித்து, வரலாற்றில் பெரும் விந்தையெனக் கருதப்படுகின்ற தங்களின்

நீண்ட பயணத்தை (Long March) மேற்கொண்டனர். இப் பயணம் தொடங்கும்போது ஓர் இலட்சம் பொதுவுடைமையினர் வெளியேறினர். 368 நாள்கள் தொடர்ந்த இந்த நீண்ட பயணத்தின்போது பதினைந்து பெரிய போர்களையும், முந்நூறுக்கும் அதிகமான சிறு போர்களையும் சமாளித்து, பதினெட்டு மலைகளையும், ஆறேழு பெரிய நதிகளையும் கடந்து ஆறாயிரம் மைல்களுக்கப்பால் வட சீனாவில் இருந்த ஷென்சி (Shensi) மாநிலத்தையடைந்தனர். அங்கு ஏனன் (Yenan) நகரை மையமாகக் கொண்டு பொது வுடைமையினர் செயல்படத் தொடங்கினர்.

## பொதுவுடைமை அரசின் ஆரம்பகாலக் கொள்கைகள்

இவர்கள் சென்ற வழியெங்கணும் பொதுவுடைமைக் கொள் கைகளை விதைத்துச் சென்றனர். ஏராளமான புதிய உறுப்பினர் களையும் பெற்றனர். ஏழை உழவர்களின் பேராதரவைப் பெற்றனர். ஏனன் நகரை மையமாகக்கொண்ட சீனப் பொது வுடைமையினர் மா-சே-துங்கின் தலைமையில் ஆக்கம் பெற்றனர். புதிய நிலச்சீர்திருத்த முறைகள் மேற்கொள்ளப்பட்டன. பெரும் நிலப்பிரபுக்களின் நில உரிமை பறிக்கப்பட்டு, நிலமற்ற வறிய உழவர்களுக்கு வழங்கப்பட்டது. விலைகள் குறைக்கப்பட்டன. உழவர்கள் செம்படையில் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். செம் படையின் எண்ணிக்கை உயர்ந்தது.

இத்தகு தீவிரப் பொதுவுடைமைக் கொள்கைகளினால் நடுத்தர மக்கள் வெறுப்படைந்தனர். இதனை உணர்ந்த மாவோ, தமது கொள்கைகளில் தேவையான மாற்றங்களைச் செய்து மக்களின் ஆதரவைப் பெற முயன்றார். (1) நிலவரி முறைகளைச் சீர்திருத்தி யமைக்கும் பணிகளை மேற்கொண்டும் (2) உழவர்களுக்குக் கடனுதவி வழங்கியும் (3) கூட்டுறவு முறைகளைப் புகுத்தி, மலிவான விலையில் தேவையான பொருள்களை வழங்கச் செய்தும் மக்களின் ஆதரவைப் பெற்றார். பொதுவுடைமையினரால் விடுவிக்கப்பட்ட பகுதிகளில் (Liberated areas) பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப் பட்ட பிரதிநிதிகளின் துணைகொண்டு ஆட்சி நடத்த முற்பட்டார். இப் பிரதிநிதிகளின் ஆட்சிக்கு ஆதரவாகப் பொதுவுடைமையினர் நின்றனர். மக்களாட்சி முறைகளைக் கட்டுப்பாடு மிக்க பொது வுடைமைக் கொள்கைகளுடன் இணைத்து, மக்களின் நல்வாழ்வுக் கான ஆட்சி அமைப்பை ஏற்படுத்தி, தங்களது செல்வாக்கினை வட சீனாவில் வளர்த்தார்.

## சீனாவில் புதிய மக்களாட்சி முறை

பொதுவுடைமையினரின் ஆட்சிக்குட்பட்டிருந்த பகுதிகளில் புதிய மக்களாட்சி முறைகள் புகுத்தப்பட்டன. அரசு பொதுவுடை

மையினரின் தனி அரசாக இல்லாமல், நடுத்தர மக்கள், உழவர்கள், தொழிலாளர்கள் ஆகிய அனைவரின் பிரதிநிதிகளையும் உள்ளடக்கியதாக அமைந்தது. பொருளாதாரத் துறையில் கூட்டுத் துறைகள், தனியார் துறை, அரசினரின் தொழில்துறை என்று பிரிக்கப்பட்டு வளர்ச்சிக்கு வழிவகுத்தது. இதற்குக் காரணம் சோஷலிசக் கொள்கைகளை முழுவதும் ஏற்றுக்கொள்ளும் வகையில் சீனுவில் வளர்ச்சி ஏற்படவில்லை என்பதை மாவோ உணர்ந்ததுதான். அனைவருக்கும் நில உரிமை வழங்கப்பட வேண்டும் என்பதும் மாவோ வெளியிட்ட 'புதிய மக்களாட்சி முறை'யின் குறிக்கோள்களாகும். இம் முறையால் படிப்படியாகச் சோஷலிசக் கருத்துகள் சீனுவில் புகுத்தப்படும். இதற்கிடையில் செம்படை பெருகியது. மிகவும் வலிமை பெற்ற போர் இயந்திரமாக உருவெடுத்தது.

1931-ல் மஞ்சூரியாவை ஜப்பான் கைப்பற்றியவுடனேயே சீனப் பொதுவுடைமையினர் ஜப்பான் மீது போர் தொடுத்தனர். பொதுக்கூட்டங்கள், பத்திரிகைகள் வாயிலாக ஜப்பானிய எதிர்ப்பியக்கத்தை வளர்த்தனர். சீன மண்ணிலிருந்து ஜப்பானியரை விரட்டுவதையே தங்களின் முழு மூச்சாகக் கொண்டனர். தங்களின் ஜப்பானிய எதிர்ப்பியக்கக் கொள்கைகளுக்கு ஆதரவளிக்கும்படி கோமின்டாங்கினரையும் வற்புறுத்தினர். ஜப்பானியரை எதிர்ப்பதற்கு மாருக, சீனப் பொதுவுடைமையினரை அழிப்பதையே தனது முக்கியக் குறிக்கோளாகக் கொண்டு செயல்பட்டு வரும் சியாங்-கே-ஷேக்கின்மீது, கோமின்டாங் படையினரின் ஒரு பிரிவினர் ஆத்திரமடைந்தனர். பொதுவுடைமையினருடன் இணைந்து ஜப்பானியரை எதிர்த்துப் போரிட்டு விரட்டவேண்டும் என்று துடித்தனர். ஆனால், சியாங் இவ்வுணர்ச்சிக் கொந்தளிப்பை உணரவில்லை. இதன் விளைவாக ஏற்பட்டதுதான் 'சியான் நிகழ்ச்சி' (Sian Incident, 1936) [சீனுவில் சியாங்-கே-ஷேக்கின் தலைமையில் கோமின்டாங்கின் ஆட்சி என்ற தலைப்பைக் காண்க].

சியான் நகரில் தமது படையதிகாரிகளால் கடத்திச் செல்லப்பட்ட சியாங்-கே-ஷேக் பொதுவுடைமையினரின் தலையீட்டால் விடுவிக்கப்பட்டாரென்பதை முன்பே கண்டோம். பொதுவுடைமையினரின் இச்செயல் வியப்பிற்குரியதாக இருந்தது. பத்தாண்டுகளுக்கு மேலாகத் தங்களை அழிப்பதையே குறிக்கோளாகக் கொண்டு செயல்பட்டு வந்த ஒரு தலைவரைப் பொதுவுடைமையினரே முன்னின்று விடுதலை செய்தனரெனின், அதன் காரணம் சீனுவின் அரசியலில் சியாங்-கே-ஷேக் பெற்றிருந்த சீரிய நிலைதான்.

சீன மண்ணிலிருந்து ஜப்பானியரை விரட்டுவதையே தங்களின் அடிப்படைக் கொள்கையாகக் கொண்ட பொதுவுடைமை

யினர் கோமின்டாங்கின் தலைமையில் செயலாற்ற முன்வந்தனர். நாட்டின் நலங்கருதி, சியாங்-கே-ஷேக்கும் ஏற்றுக்கொண்டார். இதன் விளைவாக 1938-ல் அனைத்துக் கட்சி உறுப்பினர்களைக் கொண்ட 'மக்கள் அரசியல் குழு' ஒன்று அமைக்கப்பட்டது. இதில் கோமின்டாங் கட்சித் தலைவர்களும், பொதுவுடைமைக் கட்சித் தலைவர்களும் பெரும் பங்கேற்றனர். கட்சி வேறுபாடுகளை மறந்து, பொதுப் பகைவனை ஜப்பானியரை வெளியேற்றுவதே தங்கள் கடமையென்றும், வடக்கு, தெற்கு வேறுபாடுகளை மறந்து 'சீனர்கள்' என்ற தேசிய உணர்வால் இணைந்துபட்டோம் என்று உறுப்பினர்கள் உறுதிமொழி எடுத்துக்கொண்டுவிட்டார்கள்.

ஆனால் இந்த ஒற்றுமை நீண்டகாலம் நீடித்து நிற்கவில்லை. பத்தாண்டுகள் வளர்ந்த பகைமை அவ்வளவு எளிதில் மாறிவிடாது. போர்க்காலச் சூழல்களைத் தங்களுக்குச் சாதகமாகக் கொண்ட பொதுவுடைமையினர் மக்களிடையே நன்மதிப்புப் பெற்றனர். அதுவும் கடலோரப் பகுதிகளை இழந்துவிட்ட நிலையில், சீன அரசின் வருவாய் மிகவும் குறைந்து காணப்பட்ட நிலையில், நிலச் சீர்திருத்தங்களைக் கொணர்ந்து அரசின் வருமானத்தைப் பெருக்க முயன்றார் சியாங். ஏற்கெனவே நிலச் சீர்திருத்தங்களைக் கோரி, தங்களின் ஆட்சிப் பகுதிகளில் இச் சீர்திருத்தங்களைச் செயல் படுத்திவந்த பொதுவுடைமையினரின் செல்வாக்கு இதனால் அதிகமாயிற்று. இதற்கிடையில் கொரில்லாப் போர் முறையில் தேர்ச்சி பெற்றிருந்த செம்படையினர் ஜப்பானியப் பகுதிக்குள் ஊடுருவி நிலைத்து நின்றனர். இவற்றையெல்லாம் கண்டுணர்ந்த சியாங் அதிர்ச்சியடைந்தார். செம்படை வீரர்களுக்கும், கோமின் டாங் படையினருக்குமிடையே 1941ஆம் ஆண்டிலிருந்து 1945ஆம் ஆண்டு வரை அடிக்கடி பல மோதல்கள் ஏற்பட்டுக் கொண் டிருந்தன. ஜப்பானுடன் போரைத் தொடர்ந்து நடத்திய சியாங், உள்நாட்டில் செம்படையினரையும் கட்டுப்படுத்த முயற்சிகள் எடுத்துக்கொண்டார். இருப்பினும் செம்படையினர் கோமின்டாங் படையினரைத் தோற்கடித்துப் பல பகுதிகளில் ஆதிக்கம் பெற்றனர். ஜப்பானியர் சரணடைவதற்குள் ஏறக் குறைய நூறு மில்லியன் மக்கள் தொகையை உள்ளடக்கிய பகுதி களில் பொதுவுடைமையினர் ஆட்சி நடத்திவந்தனர்.

**செம்படையின் வளர்ச்சி**

செம்படை முழுவதும் சியாங்-கே-ஷேக்கின் கட்டுப்பாட்டிற் குள் வரவேண்டும் என்பது 'சியான் நிகழ்ச்சி'க்குப் பின்னர் ஏற்பட்ட கோமின்டாங்-பொதுவுடைமையினரின் உடன்படிக்கை யின் ஒரு விதியாக இருப்பினும், 'செயல்முறையில் பொதுவுடைமை

யினர் தங்கள் படைப்பிரிவுகளைத் தங்கள் பொறுப்பிலேயே கொண்டிருந்தனர். செம்படையினருக்குக் கட்சிக் கோட்பாடுகள் முறையாகக் கற்றுக்கொடுக்கப்பட்டன. போர் நுணுக்கங்களில் தேர்ந்து, கடுமையான போர்ப் பயிற்சிகளையும் பெற்றிருந்த செம் படையின் தன்னிகரற்ற தலைவராக விளங்கியவர் சு-தே(Chuh-The) ஆவார். இப் படைகள் நிலையான படை, கொரில்லாப் படை, உழவர்களைக் கொண்ட துணைப்படை என முப்பெரும் பிரிவுகளைக் கொண்டு சிறந்து நின்றது. போரின் இறுதியில் முப்பெரும் பிரிவு களைக் கொண்ட செம்படையின் எண்ணிக்கை மூன்று மில்லியனாக உயர்ந்திருந்தது.

1942, 1943ஆம் ஆண்டுகளில் சீனாவில், 'அரசியல் கட்சிகளைச் சீர்திருத்தும் இயக்கம்' (Cheng - Feng Movement) ஒன்று தோன்றியது. அரசியலையும், சமுதாயத்தையும் சீர்திருத்துவதற்கு முன்பாகக் கட்சிகளைச் சீர்திருத்தி ஒழுங்குபடுத்துவதற்காக இவ் வியக்கம் பாடுபட்டது. இவ்வியக்கத்தால் மாவோவின் கட்சிக்கு மேலும் வலிமை கூடியது. சான்றாக. 1937-ல் 40,000 உறுப்பினர் களைக் கொண்டிருந்த மாவோவின் கட்சி 1945ஆம் ஆண்டில் 12,00,000 உறுப்பினர்களைக் கொண்டதாயிற்று. மாவோவின் சர்வாதிகாரத் தலைமையில் இக் கட்சியின் உறுப்பினர்கள் யாவரும் இரும்புத் தூண்களாயினர். இத்தகைய செயல்வீரர்களின் துணையால்தான் கோமின்டாங் கட்சியினரை எதிர்த்து, வீழ்த்தி, ஆட்சியைக் கைப்பற்றும் அளவுக்குப் பொதுவுடைமையினர் வளர்ச்சி பெற்றனர்.

மாறாக, கோமின்டாங்கின் நிலையை நோக்கும்போது, இக் கட்சியின் அரசு மக்களாதரவை இழந்திருந்தது. ஆட்சியில் ஊழலும், திறமையின்மையும், பொறுப்பற்ற நிலையும் தோன்றியது. சியாங் ஆட்சியின் ஆரம்பகாலத்தில் இருந்த சீர்திருத்த வேகம் குறைந்து, புரட்சிக் கொள்கைகள் மங்கி யிருந்தன. முதலாளித்துவ முறைகளை ஏற்றுக்கொண்டு, அதனடிப் படையில் பொருளாதார முன்னேற்றத்தைக் காண முயன்ற சியாங்-கே-ஷேக், ஜப்பானியர் ஆக்கிரமிப்பினால், தம் நாட்டின் வளம் மிகுந்த பகுதிகளை இழந்திருந்தார். தோல்விகளும், பொருளாதாரச் சீர்குலைவும், திறமையற்ற, ஊழல் மலிந்த ஆட்சியும் மக்களின் வெறுப்பை மேலும் தூண்டின. இந்நிலையில் தான் ஜப்பான் சரணடைந்தது. சியாங்-கே-ஷேக் பல புதிய பிரச்சினைகளுக்கு ஈடு கொடுக்க வேண்டியிருந்தது.

இரண்டாம் உலகப் போரில் ஜப்பான் தோல்வியடைந்த பின்னர், தூரகிழக்குப் பகுதிகளில் அமெரிக்காவும் ருஷியாவும் மிகுந்த செல்வாக்குப் பெற்றன. போரின் இறுதிக் கட்டத்தில்

ஜப்பான்மீது போர் தொடுத்த ருஷியா, மஞ்சூரியா முழுவதையும் பிடித்துக் கொண்டு கொரியாவிலும் முன்னேறியது. கொரியாவில் 38° நடுக்கோடுவரை (38th Parallel) ருஷியாவும், அதற்குத் தெற்கிலுள்ள பகுதிகளை அமெரிக்காவும் கைப்பற்றிக் கொண்டன. போர் நடந்துகொண்டிருந்த போதே கோமின்டாங்கின் தேசிய அரசுக்கு அமெரிக்கா ஏராளமான போர்க் கருவிகளைக் கொடுத்து உதவியதன் விளைவாக நன்மதிப்பைப் பெற்றிருந்தது. சீனாவின் தேசிய அரசுடன் ருஷியாவும் 1945-ல் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டிருந்தது. இருப்பினும் இவ்விரு வல்லரசுகளும், கோமின்டாங்கின் தேசிய அரசுக்கும், பொதுவுடைமையினருக்குமிடையே ஏற்பட்ட உள்நாட்டுப் போரில் தலையிட ஆரம்பித்தன.

**போரின் பின்னர் சீனத் தேசிய அரசின் பிரச்சினைகள்**

ஜப்பான் சரணடைந்த பின்னர் சியாங்-கே-ஷேக்கின் தலைமையிலான சீனத் தேசிய அரசை எதிர்நோக்கியிருந்த பிரச்சினைகளைப் பொதுவாக மூன்றாகப் பிரிக்கலாம். அவைகள்:

1. சீன மண்ணிலிருந்து ஜப்பானியரை வெளியேற்றி, அப்பகுதிகளில் தேசிய ஆட்சியை நிறுவுவது;

2. சீனப் பொதுவுடைமையினரின் அதிகார வளர்ச்சியைத் தடுத்து, பொதுவுடைமைப் பிரச்சினைக்கு முடிவு காண்பது;

3. போரினால் சீரழிந்திருந்த சீனப் பொருளாதாரத்தைச் சீர்திருத்தி, சமுதாய ஆக்கப் பணிகளைத் தொடங்குவது.

சீனாவின் கிழக்குப் பகுதிகளில் சியாங்-கே-ஷேக்கின் தேசியப் படைகள் ஜப்பானியரை வெளியேற்றி மீண்டும் நாங்கிங் நகரைப் பிடித்தன. கடலோரப் பகுதிகளும் தேசிய அரசின்கீழ்க் கொண்டு வரப்பட்டன. சியாங்-கே-ஷேக்கின் பெருமை மீண்டும் நிலை நாட்டப்பட்டதுபோல் தோன்றியது. ஆனால், சீனாவின் வடகிழக்குப் பகுதிகளில், சிறப்பாகப் பொதுவுடைமையினர் செல்வாக்குப் பெற்றிருந்தனர். சியாங்-கே-ஷேக்கின் தேசியப் படைகள் மஞ்சூரியாவில் நுழைந்து, பெரிய நகரங்களையும், இருப்புப்பாதைத் தொடர்களையும் கைப்பற்றினாலும் செம்படையினர் மக்களின் ஆதரவுடன் மஞ்சூரியா முழுவதிலும் செல்வாக்குப் பெற்றிருந்தனர். சியாங்கின் ஆணைகளை ஏற்றுச் செயல்படச் செம்படையினர் முன் வரவில்லை. அமெரிக்காவின் படைக்கல உதவியுடன் சியாங் சீனா முழுவதிலும் தமது ஆட்சியை நிலைநிறுத்த முயன்றார். ஆனால், பொதுவுடைமையினர் தங்களின் திறமை மிக்க செம்படையின் மூலம், சீனாவில் பொதுவுடைமையினரின் ஆட்சியை நிறுவ உறுதி பூண்டனர்.

**சமாதான ஏற்பாடுகள்**

இவ்வாறு சியாங்-கே-ஷேக்கின் அரசுக்கும், பொதுவுடைமையினருக்குமிடையே போர் ஏற்படும் நிலை உருவாகியது. இந்த உள்நாட்டுப் போரைத் தடுத்து, சீனுவில் அமைதியை ஏற்படுத்த அமெரிக்கா பெரிதும் முயன்றது. அமெரிக்க அரசு, தளபதி அர்லி (General Hurley) என்பவரை அனுப்பி, சீனப் பிரச்சினைக்கு முடிவு காண விழைந்தது. தளபதி அர்லி, சீனப் பொதுவுடைமைக் கட்சியின் தனிப் பெருந்தலைவர் மாவோவுடன் 1944ஆம் ஆண்டில் ஏனுன் நகரில் பேச்சு வார்த்தை நடத்தினுர். 1945 ஆகஸ்டில் மாவோவும், அர்லியும் சியாங்-கே-ஷேக்குடன் பேச்சுவார்த்தைகள் நடத்தினர். இப் பேச்சு வார்த்தைகளின்போது பொதுவுடைமையினருடன் அரசியல் தொடர்பு, செம்படையினரின் நிலைமை, படைகளின் தலைமை போன்ற முக்கியமான பிரச்சினைகளில் கருத்தொற்றுமை ஏற்படவில்லை. இத் தோல்வியைக் கண்டும் மனந்தளராது அமெரிக்கக் குடியரசு தலைவர் ட்ரூமன் (President Truman) மீண்டும் சமாதான முயற்சியைத் தொடங்கினுர். சீனுவில் அமைதி நிலவச் செய்து, ஒற்றுமையைக் காத்து, மக்களாட்சி நிலைபெறச் செய்வதற்கான முயற்சியில் இரண்டாவது முறையாக அமெரிக்கத் தளபதி ஜார்ஜ் C. மார்ஷல் (George C. Marshall) என்பவர் அனுப்பப்பட்டார். அவருடைய தீவிர முயற்சிகளின் விளைவாகக் கோமின்டாங்கினரும், பொதுவுடைமையினரும் சந்தித்துப் பேச்சுவார்த்தைகள் நடத்த இசைந்தனர். பேச்சு வார்த்தைகள் ஜனவரி, 1946-ல் தொடங்கின. போர் ஓய்வு, ஆட்சியமைப்பு முறைகள், படைச் சீரமைப்பு, மற்றும் படைக் கட்டுப்பாடு இவைகளே பேச்சுவார்த்தைகளின் அடிப்படையாக அமைந்தன. சீனு முழுவதிலும் தங்களின் ஆட்சி நிலைபெற்று இருப்பதாலும், அமெரிக்க ஆயுத உதவியால் வலிமை மிக்க படைப்பலம் கொண்டிருந்ததாலும், கோமின்டாங் கட்சியினர் பொதுவுடைமையினருக்கு அரசியலிலோ, ஆட்சியமைப்பிலோ எந்தவிதச் சலுகைகளையும் கொடுக்க மறுத்தனர். சீனப் பொதுவுடைமையினரும் தங்களுடைய செம்படையினரின் திறமையில் அசைக்க முடியாத நம்பிக்கையும், அமெரிக்காவின் உதவியைக் கண்டு வெறுப்பும் கொண்டனர். இதனுல் தளபதி மார்ஷலின் சமாதான முயற்சியும் பயனளிக்கவில்லை. ஆகஸ்டு 1946-ல் தமது தோல்வியை ஏற்றுக்கொண்ட தளபதி மார்ஷல் அமெரிக்கா திரும்பினுர். சீனுவில் உள்நாட்டுப் போர் ஆரம்பமானது.

உள்நாட்டுப் போர் ஏற்படுவதைத் தவிர்க்க முடியாத நிலையில், தேசிய அரசு மக்களாதரவைப் பெற, காலங்கடந்த முயற்சிகளில் இறங்கியது. சியாங்-கே-ஷேக் அனைத்துக் கட்சிகளின்

கூட்டத்தில் மக்களாட்சி முறையில் வரையப்பட்ட அரசிய லமைப்புச் சட்டத்தை ஏற்படுத்த முயற்சிகள் எடுத்தார். இம் முயற்சியின் விளைவாக உருவாக்கப்பட்ட சீன அரசியல் சட்டம் டிசம்பர், 1947-ல் செயல்முறைக்கு வந்தது. இதற்குள் உள்நாட்டுப் போர் தொடங்கிவிட்டதால் அரசியல் அதிகாரம் முழுவதும் சியாங்கிடமே மீண்டும் தேங்கியது. இதனுடன் 1945ஆம் ஆண்டுக்குப் பின்னர் சியாங் பின்பற்றிய சீனப் பொரு ளாதாரக் கொள்கையும் மக்களுக்குப் பெருத்த ஏமாற்றத்தை யளித்தது. சிறப்பாக ஜப்பானியரிடமிருந்து எடுத்துக்கொண்ட தொழிலகங்களை நிர்வகிக்கும் முறையிலும், அந்நியரின் முதலீடு களாலும், உதவியாலும் ஏற்படுத்தப்பட்ட தொழில்களும் மக்களை அதிருப்தியடையச் செய்தன. மேலும் தனியார் துறையிட மிருந்து பெருந்தொகை வற்புறுத்திப் பெறப்பட்டது. இம் முறையால் தொழில்துறையினரின் ஆதரவைச் சியாங் இழந்தார். பொருளாதார நெருக்கடியைச் சமாளிக்க, காகித நாணயம் வெளியிடப்பட்டது. அளவுக்கதிகமாகக் காகித நாணயம் வெளி யிடப்பட்டதால் பணவீக்கம் ஏற்பட்டது. பொருள்களின் விலை மிகவும் உயர்ந்தது. சீன நாணயத்தின் மதிப்பு, அமெரிக்க டாலர் ஒன்றுக்கு 45,000 சீன நாணயம் என்ற அளவுக்கு மதிப்பிழந்தது. தேவையற்ற இராணுவச் செலவும், ஊழல் மலிந்த வரி வசூல் முறைகளும் இத்தகைய சீரழிவுக்குக் காரணங்களாகும். இதனால் மக்களனைவரும் வெறுப்புற்றிருந்தனர். ஏற்கெனவே இரண்டாம் சீன ஜப்பானியப் போரினாலும், அதனைத் தொடர்ந்து நடை பெற்ற இரண்டாம் உலகப் போரினாலும் அல்லலுற்றிருந்த சீன மக்கள், மேலும் ஒரு பேரர் உள்நாட்டு அரசியல் குழப்பங்களினால் ஏற்படுவதைச் சிறிதும் விரும்பவில்லை. அமைதியினடிப்படையில், பொருளாதார, சமூக மேம்பாடு அடைவதையே குறிக்கோளாகக் கொண்ட சில அதிகாரிகளும், படையினரும்கூட பொதுவுடைமைப் பினருடன் எவ்விதமாயினும் சமரசம் செய்துகொள்ளவே விரும் பினர். தளபதி மார்ஷலின் சமரச முயற்சிகள் தோல்வியடைந்த வுடனே சமாதானத்தை விரும்பிய அதிகாரிகள் சிலர் வேலை நீக்கம் செய்யப்பட்டனர். பலர் உயிரிழந்தனர். இவ்வாறாகத் தேசிய அரசின் அடித்தளமே ஆட்டங்கண்டது. இந் நிலையை உணர்ந்த பொதுவுடைமையினர் இந் நல்வாய்ப்பினைப் பயன்படுத்தி, ஆக்கம் பெற முயன்றதில் வியப்பேதுமில்லை.

### போர் நிகழ்ச்சிகள்

1947-லிருந்து 1949வரை நடந்த உள்நாட்டுப் போரில் சியாங்-கே-ஷேக்கின் தேசியப் படைகள் முற்றிலுமாகத் தோற்கடிக் கப்பட்டு விரட்டப்பட்டன. சியாங் பார்மோசாவிற்கு ஓடினார்.

அங்குத் தேசிய சீன அரசை ஏற்படுத்திக் கொண்டு அமெரிக்காவின் உதவியுடன் ஆட்சி நடத்தி வந்தார். சீனுவின் வடகிழக்குப் பகுதியில் ஆதிக்கம் பெற்றிருந்த செம்படையினர், எண்ணிக்கையிலும், படைக்கலன்களிலும் பல மடங்கு உயர்ந்திருந்த தேசியப் படைகளைக் கொரில்லாப் போர் முறையால் அலைக்கழித்து, அச்சுறுத்தித் தோற்கடித்தனர். வடசீனுவில் பீகிங் நகரும் கைப் பற்றப்பட்டது. மிகப் பெரிய தேசியப் படை சரணடைந்தது. கோமின்டாங்கினர் சமாதானம் வேண்டினர். ஆனுல், பொதுவுடைமையினர் கோரிக்கையற்ற சரணுகதியைத்தான் எதிர்பார்த்தனர். இதற்கிடையில் கான்டன், சுங்கிங் போன்ற நகரங்கள் செம்படைகளின் வசமாயின. இந் நிலையில்தான் போரைத் தொடர்ந்து நடத்த இயலாத நிலையில் சியாங்-கே-ஷேக் எஞ்சியிருந்த தமது படைகளுடன் பார்மோசாவிற்கு ஓடினுர்.

### தேசிய அரசின் தோல்விக்கான காரணங்கள்

கோமின்டாங்கின் தேசிய ஆட்சி தோல்வியுற்றதன் காரணங்களை நோக்கும்போது, முதல் காரணமாகக் கோமின்டாங் கட்சியின் அமைப்பில் இருந்த சில முக்கியக் குறைபாடுகளைக் கூறலாம். சுன்யாட்சனின் மறைவிற்குப் பின்னர் கோமின்டாங் கட்சியில் உட்பூசல்கள் தோன்றின. கட்சியில் அனைவரும் ஏற்றுக் கொள்ளக்கூடிய தலைவர் யாருமிலர். சியாங்-கே-ஷேக் தலைமைப் பொறுப்பை ஏற்றதும், கட்சி இரண்டாகப் பிளவுண்டது. கொள்கையளவில்கூட மாறுபட்ட கருத்துகள் நிலவிவந்தன. கோமின்டாங்கினர் தேசிய ஆட்சியை நிறுவியவுடன் புரட்சிக் கருத்துகளை மறந்துவிட்டனர் என்றும் கூறப்படுகிறது. உழவர்கள், தொழிலாளர்கள், ஏனைய பாமர மக்கள் நலம் பேணும் அரசாக இல்லாமல் முதலாளித்துவக் கொள்கையினடிப்படையில் செயல்பட ஆரம்பித்தது. ஆனுல் பொதுவுடைமையினர் தங்களுடைய நிலச் சீர்திருத்தச் சட்டங்களின்மூலம் வேளாளரின் நன்மதிப்பைப் பெற்றனர். அவர்களுடைய கொள்கைகள், இதுவரை பிரபுக்களாலும் அதிகார வர்க்கத்தினராலும் நசுக்கப்பட்டு, நலிவிழந்து, வறிய நிலையில் இருந்த தொழிலாளர்-வேளாளரின் உரிமைகள் பாதுகாக்கப்பட்டு, உயர்வடையச் செய்யும் வகையில் அமைந்திருந்தன. அதுமட்டுமல்லாமல் சிறந்த தலைமையும், கட்சிக் கட்டுப்பாடும், திறமையான கட்சி அமைப்பும், முறையான செயல்களும், செம்படையினரின் தீரமும், கொள்கைகளைப் பரப்பும் ஆர்வமும், நம்பிக்கையும் சீனுவில் பொதுவுடைமையினர் ஆதிக்கம் பெற்று, நிலைத்து நிற்கக் காரணமாய் இருந்தன.

கோமின்டாங்கினரின் தவருன பொருளாதாரக் கொள்கையை இரண்டாவது காரணமாகக் கூறலாம். பெருந் தொழில்கள் வளர்ச்சியில் அக்கறை காட்டிய அரசு, வேளாண்மை, மற்றும் சிறு தொழில்கள் இவற்றை முன்னேற்ற முயலவில்லை. மக்களாதரவைப் படைப்பலம் கொண்டு பெறமுயன்றது. பொருளாதாரச் சீர்கேடுகளை அமெரிக்காவின் உதவியினுல் சீர்திருத்த முயன்றது. நாட்டில் ஏற்பட்ட பணவீக்கம், நாணய மதிப்புக் குறைவு இவைகள் மக்களைத் திண்டாட வைத்தன. பொறுப்பற்ற, திறமையற்ற, ஊழல் மலிந்த, சுயநலமிகள் கோமின்டாங்கின் தேசிய அரசில் ஆதிக்கம் பெற்றனர். இதனுல் எவ்வளவுதான் அந்நிய உதவி கிடைப்பினும் அதனுல் பொருளாதார வளர்ச்சியோ நேர்மையான ஆட்சியோ இல்லாமற் போயிற்று.

இதற்கு மாருன பொதுவுடைமையினரின் கட்சி அமைப்பும், பொருளாதாரக் கொள்கையும், செயல்திறனும், சுயநலமற்ற தியாக மனப்பான்மையும், அக் கட்சி, மக்களிடையே மதிப்புப்பெற உதவின.

இறுதியாகப் பொதுவுடைமையினரின் இராணுவச் சிறப்பு, இவையனைத்தையும்விட முக்கியமான காரணமாகும். சியாங்-கே-ஷேக்கின் தலைமையிலான தேசிய அரசு சீனுவிலிருந்து விரட்டப் பட்டாலும், பார்மோசாவில் சியாங் தமது ஆட்சியை நிறுவினுர். பார்மோசாவிலிருந்த சியாங்கின் தேசிய அரசு அமெரிக்காவின் ஆதரவுடன், ஏன்ருவது ஒரு நாள் தான் இழந்த பெருமையை மீட்க முடியும் என்ற நீங்காத நினைவுடன் நிறுவப்பட்டது. வெளியுலகம், அமெரிக்காவின் செல்வாக்கினுல் இந்தத் தேசிய அரசையே சீனுவின் அரசாக அங்கீகாரம் செய்தது. இதனுல் தான் சியாங்கின் தேசிய அரசு ஐக்கிய நாடுகளின் அவையில் பாதுகாப்புக் குழுவிலும் நிரந்தரமான இடத்தைப் பெற்றிருந்தது. ஆனுல் 1972-க்குப் பின்னர், பொதுவுடைமை மக்கள் சீனு, அமெரிக்காவிடையே ஏற்பட்ட நல்லுறவின் பயனுகத் தேசிய சீனு, ஐக்கிய நாடுகளின் அவையின் பாதுகாப்புக் குழுவினின்று நீக்கப்பட்டது. அந்த இடம் மக்கள் சீனுவிற்கு வழங்கப்பட்டது.

சியாங்-கே-ஷேக்கை வெற்றிகொண்ட செம்படையினர் 1949ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் முதல் நாளன்று த்ங்கள்

ஆட்சியைத் தொடங்கினர். அதற்கடுத்த நாள் ருஷியா இதனை அங்கீகாரம் செய்தது. 1950-க்குள் பார்மோசா தவிர சீனுவின் மற்றப் பகுதிகளனைத்தும் பொதுவுடைமையினர் ஆட்சியின்கீழ் வந்தது. பொதுவுடைமையினரின் அரசு மக்கள் சீன அரசு (People's Republic) என்ற பெயரில் ஆட்சியைத் தொடங்கியது. 1950ஆம் ஆண்டில் பிரிட்டன், இந்தியா, பர்மா, பின்லாந்து, ஸ்வீடன், டென்மார்க், இஸ்ரேல், இலங்கை, பாகிஸ்தான், ஆப்கானிஸ்தானம், இந்தோனேஷியா முதலிய நாடுகளும் பொதுவுடைமை மக்கள் சீன அரசை அங்கீகரித்தன.

# 8. 1949-க்குப் பின்னர்ச் செஞ்சீனு

## சீன மக்கள் குடியரசு (The People's Republic of China)

சீன வரலாற்றிலேயே 1949ஆம் ஆண்டு மிகச் சிறந்த, உயர்ந்த இடத்தைப் பெறுகின்றது. இவ்வாண்டில்தான் கோமின்டாங்கின் தேசிய ஆட்சி சீனுவிலிருந்து விரட்டப்பட்டு, அதன் இடத்தில் பொதுவுடைமையினரின் மக்கள் குடியரசு ஏற்படுத்தப்பட்டது. இந்நிகழ்ச்சியும் சீன வரலாற்று ஏடுகளில் பொதிந்திருக்கின்ற மாறுபட்ட பல அரச குடும்பங்களின் தோற்றமும், வாழ்வும், வளமும், வீழ்வும், அழிவையும் போல, ஒரு தொடர் தானே என்ற ஐயமும் எழலாம். ஆனுல் 1911-ல் நடந்த சீனக் குடியரசு புரட்சியின் பின்னர், சீன வரலாறு புது வடிவம் பெறுகின்றது. 'மஞ்சுக்' குல வீழ்ச்சியின் பின்னர், புதிய அரச குடும்பம் தோற்றுவிக்கப்படவில்லை. மாருக, மேலைநாடுகளில் தோன்றி, சீனுவில் நுழைந்த புதுமைக் கருத்துகளுடன், சீன மண்ணில் வழங்கி வந்த பழமையும் கலந்த, புதிய மக்களாட்சி முறை தோன்றியது. ஆனுல் பொதுவுடைமையினர் இந்தக் கலப்புத்தன்மையினை அறவே ஒழித்து, புதிய புரட்சிக் கருத்துகளின் அடிப்படையில், இதுவரை சீன வரலாறு காணுத புதுமையினைப் படைக்க முன்வந்தனர். இம் முயற்சியின் முதல் வெற்றி 1949 ஆம் ஆண்டில் ஏற்பட்டது. எனவேதான் இவ்வாண்டைச் சீன வரலாற்றில் சிறந்ததொரு திருப்பத்தை ஏற்படுத்திப் பழமையை மறுத்து, புதிய புரட்சிக் கொள்கைகளை ஏற்று, உலகு வியக்கும் வண்ணம் புத்தொளி வீசும் சீனுவைத் தோற்றுவித்த ஆண்டாகக் கருதுகின்றனர். எனினும் பொதுவுடைமைச் சீனுவின் தந்தையெனக் கருதப்படும் மாவோவின் தலைமையில் சீனுவின் வளர்ச்சியை ஓரளவுக்குத்தான் குறிப்பிட முடியும். ஏனெனில் 1911-ல் குடியரசு புரட்சியாகத் தோன்றிய சீனப்புரட்சி இன்னும் முடிந்த பாடில்லை. முதலில் கோமின்டாங்குகளும், பின்னர்ப் பொதுவுடைமையினரும், இவர்களுக்கிடையே இருபெரும் உலகப் போர்களும் நடந்திருக்

கின்றன. இறுதியாகச் சீனுவின் அரசியல் வானில் தோன்றிய பொதுவுடைமையினரை எதிர்நோக்கியிருந்த பிரச்சினைகள் எண்ணிலடங்கா. அத்தனை பிரச்சினைகளையும் வென்று, அமைதி ஏற்படுத்த எடுத்துக்கொண்ட செயல்முறைகளைப் பற்றியும், விளைவுகளைப் பற்றியும், மக்களின் எண்ணங்கள், நிலையினைப் பற்றியும் விளக்கமாக அறிந்து கொள்ள அதிகாரப் பூர்வமான சான்றுகள் நமக்குக் கிடைத்தில. அதுவும் இருபதாம் நூற்ருண்டின் இறுதியில் சீனுவின் உண்மை நிலைமையை அறிந்து, உலக நாடுகளோடு ஒப்பிட்டு நோக்கி அறியும் வாய்ப்புகளும் இல்லை. சீனுவில் நுழைந்து, அரசியல், சமூக, பொருளாதார வளர்ச்சியினை அறிந்து வெளியிடவும் அனுமதி மறுக்கப்படும். மக்களின் அடிப்படை உரிமைகள் கட்டுப்படுத்தப்பட்டு, வல்லாட்சி நடைபெறும் இன்றைய சீனுவைப் பற்றி எதையும் உறுதியாகக் கூறுவதற்கில்லை.

**மக்கள் குடியரசின் ஆட்சிமுறை அமைப்பு**

பொதுவுடைமையினரின் செம்படைகள் முழு வெற்றிப் பாதையில் அடியெடுத்து வைத்தவுடனேயே, பொதுவுடைமைக் கட்சியின் பெருந்தலைவர்கள், இணைந்த தோழமைக் கட்சித் தலைவர்களின் ஒத்துழைப்போடு ஒரு தாற்காலிக அரசியல் அமைப்பை உருவாக்கும் பணியில் ஈடுபட்டனர். இதன், விளைவாக 1949 ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்களில் பீகிங் நகரில் 'சீன மக்கள் அரசியல் ஆலோசனை மாநாடு' (Chinese People's Political Consultative Conference) கூட்டப்பட்டது. இம் மாநாட்டில் மூன்று அடிப்படைச் சட்ட வரைவுகள் உருவாக்கப்பட்டன. இவைகள் தாம் தாற்காலிக அரசியல் அமைப்புச் சட்டமாகப் பயன்படுத்தப்பட்டன. அவையாவன: (1) 'சீன மக்களின் மைய அரசின் அடிப்படை விதிகள்' (The Organic Law of the Central People's Government), (2) சீன மக்கள் ஆலோசனைக் குழுவின் பொது விதிகள் (The Common Programme of Chinese People's Political Consultative Conference—C.P.P.C.C.), (3) சீன மக்கள் அரசியல் ஆலோசனை மாநாட்டின் அடிப்படை விதிகள் (The Organic Law of the C.P.P.C.C.). 1954ஆம் ஆண்டு சீன அரசியல் சட்டம் உருவாக்கப்படும் வரை மேற்கூறப்பட்ட மூன்று சட்ட வரைவுகளின்படிதான் மக்கள் சீனக் குடியரசு செயல்பட்டது. இந்தச் சீன மக்கள் குடியரசு, 1949 ஆம் ஆண்டு அக்டோபர் முதல்நாள் பொதுவுடைமையினரால் அறிவிப்புச் செய்யப்பட்டது.

ஆரம்ப நிலையில் இந்த மக்கள் குடியரசு, பொதுவுடைமைக் கட்சியும், அதனுடன் இணைந்த தோழமைக் கட்சிகளின் கூட்டரசா

கச் செயல்பட்டது. பொதுவுடைமையினரல்லாத வேறு பல கட்சி களும் கோமிண்டாங்கின் எதிரிகள் என்ற நிலையிலும், பொது வுடைமையினர் சீனவில் நிலைபெற்று நிற்கும் வரை ஆட்சியமைப் பைச் செவ்வனே நடத்த உதவியாக இருக்கும் பொருட்டும், பொதுவுடைமையினரின் கண்காணிப்பின் கீழ்ச் செயல்பட அனு மதிக்கப்பட்டிருந்தன. அக் கட்சிக்ளின் தேவைகள் முடிவுற்ற வுடனே அந்தக் கட்சிகளும் தாமாகவே மறைந்தன.

பொதுவுடைமையினர் தங்கள் ஆட்சியின் உறுதுணையாக இருக்கும் பொருட்டுப் பல இயக்கங்களையும் உருவாக்கி மக்க ளிடையே உலவ விட்டிருந்தனர். அத்தகைய இயக்கங்களில் முதன்மையிடத்தைப் பெறுவது 'இளைஞர் இயக்கங்களா' கும் (Youth Organisations). சீன மக்களாட்சி இளைஞர் கழகம் (All-China Federation of Co-operatives), மக்கள் சீனப் பெண்கள், உழவர் கழகங்கள் (All-China Federation of Democratic Women, the Peasant's Association), தேசிய திருச்சபை இயக்கங்கள் போன்றவைகளும், ருஷிய-சீன நட்புறவுக் கழகம் (Sino-Soviet Friendship Association), சீனச் செஞ்சிலுவைக் கழகம் (China Red Cross Society), உலக அமைதி, அமெரிக்க ஆதிக்க எதிர்ப்புக் குழு (Chinese People's Committee for World peace and against American aggression) போன்ற கழகங்களும், குறிப்பிட்ட பணி களை நிறைவேற்றவும், அவைகளின் முக்கியத்துவத்தை மக்க ளிடையே பரப்பும் பொருட்டும் ஏற்படுத்தப்பட்டன.

1949 ஆம் ஆண்டில் நிறுவப்பட்ட மக்கள் குடியரசின் பணி கள் நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டன. அவையாவன: (1) மக்கள் மைய அரசு: இதில் சட்டமியற்றுதல், செயல்படுத்தல், நீதி ஆகிய அதிகாரங்கள் அடங்கும்; (2) அரசு நிர்வாகக் குழு: நிர்வாகப் பொறுப்பைக் கவனிக்கும்; (3) புரட்சிப் படைக் குழு: படையதிகாரம்; (4) தலைமை நிதியாளர்: மக்கள் தலைமை நீதி மன்றம்.

இவை செயற்குழுவின் தலைமையில், சிறப்புப் பணியாற்றும். இக் குழுக்கள் அடங்கிய மைய அரசிற்கு அடுத்ததாகச் செயல் புரிய வட்டார அரசுகள் மாநிலத் தலைமை அலுவலகங்களிலிருந்து தொடங்கிக் கீழ் மட்டத்தில் உள்ள நகர்ப் பிரிவுகள், நகர், கிராம அமைப்புகள் வரை விரிந்து செயல்பட்டன. இத் தாற்காலிக அரசியல் அமைப்பைச் சீனப் பொதுவுடைமையினர், தங்களின் தோழமைக் கட்சிகளின் துணையுடன் ஏற்படுத்தியிருந்தனர். ஏறிச் செல்ல உதவும் ஏணி போல, இத் தோழமைக் கட்சிகளைப் பயன்

படுத்தி, தாங்கள் நிலைபெற்ற பின்னர், அவைகளை அழித்து விடுகின்ற முறைகளையே பின்பற்றி வெற்றியும் கண்டனர். 1954-ல் கூட்டப்பட்ட தேசிய மக்கள் காங்கிரஸில் சீனுவின் புதிய அரசியலமைப்புச் சட்டம் நிறைவேறியது (September, 9, 1954).

இப் புதிய அரசியல் சட்டத்தில் ஆட்சிமுறையமைப்பைப் பொறுத்த வரையில் சிறப்பான மாறுபாடுகள் எதுவும் காணப்படவில்லை. தாற்காலிக அரசியல் சட்டத்தின் கூறுபாடுகள் அப்படியே ஏற்றுக்கொள்ளப் பட்டிருந்தன. இந்த அரசியல் சட்டத்தின் அடிப்படை நோக்கம் சோசலிசப் பொருளாதாரத்தைச் சீனுவில் ஏற்படுத்த வேண்டும் என்பதாகும். வளர்ச்சியற்ற பொருளாதார நிலையைப் பெற்றிருந்த நாட்டில், மிகப் பெருமளவில்—அதாவது பழைய நிலைமைகளும், கருத்துகளும் அடியோடு களைந்தெடுக்கப் பட்டால்தான், புதிய முறைகளைப் புகுத்தி, விரைவான முன்னேற்றங்கண்டு சோசலிசப் பொருளாதார அமைப்பை நிலைநாட்ட முடியும். இதன் அடிப்படையில் பல ஐந்தாண்டுத் திட்டங்களைத் தீட்டி, நிறைவேற்றவும், இத் திட்டங்களின்மூலம் வேளாண்மை, தொழில், வாணிகம் ஆகிய வியத்தகு மாற்றங்கள் ஏற்படுத்தவும் இவ்வரசியல் அமைப்பு வழி காட்டுகிறது.

அரசியலமைப்புச் சட்டப்படி அதிகாரங்களனைத்தும் மக்களிடம் உள்ளன. அவர்கள் அவ் வதிகாரங்களை தேசிய மக்கள் காங்கிரஸ் (National People's Congress) மூலமாகவும், வட்டார மக்கள் காங்கிரசுகள் (Local People's Congress) மூலமாகவும் செயல்படுத்துகிறுர்கள். எனவே சீன அரசியல் முறை மக்கள் காங்கிரசுகள் முறையாகும். அரசு நிறுவனங்கள் அனைத்தும் மக்களைச் சார்ந்திருக்க வேண்டும். அவர்களோடு அடிக்கடி தொடர்பு கொள்ளவேண்டும். அவர்களுடைய கருத்துகளையும், மேற்பார்வையையும் ஏற்று அதன்படி நடக்கவேண்டும்.

### சீனப் பொதுவுடைமைக் கட்சி

'1949ஆம் ஆண்டில் சியாங்-கே-ஷேக்கை சீனத் தலைநிலப் பகுதியிலிருந்து விரட்டியடித்துச் சீனப் பொதுவுடைமையினர் வெற்றிவாகை சூடியதுதான் இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் உலக வரலாற்றில் ஏற்பட்ட மிக முக்கிய நிகழ்ச்சிகளில் ஒன்றுகும்' என்று திரு. தார் (S. N. Dhar) என்பார் குறிப்பிடுகின்றுர் (International Relations and World Politics Since 1919). இதன் விளைவாக மா-சே-துங் தலைமையில், ருஷியாவின் நட்பு அரசாக விளங்கும் மக்கள் குடியரசு ஏற்பட்டதென்பதை ஏற்

கெனவே கண்டோம். வளர்ச்சியற்று, அமைதியற்று, அந்நியர் களின் பிடியிலும் திறமையற்ற, ஊழல் நிறைந்த சீன அரசின் அவலமான ஆட்சியில் அல்லலுற்ற சீன மக்கள் பெரும்பாலோரின் ஆதரவோடும், நம்பிக்கையோடும் அமைக்கப்பட்ட சீன மக்கள் குடியரசு, மேலை நாட்டினரின் ஏகாதிபத்தியக் கொடுமைகளில் தவித்த ஏனைய ஆசிய நாடுகளின் வியப்பு, அச்சம் கலந்த பாராட்டு தல்களையும் பெற்றது. உலகப் பொதுவுடைமைக் கொள்கையை ஏற்றதால், பொதுவுடைமை எதிர்ப்பு நாடுகளுடன் பல சிக்கல்கள் எழுந்தன. அமெரிக்காவின் தலைமையில் சீட்டோ (Seato) போன்ற இராணுவ அணிகள் தோன்றின. இந்தியாவுடன் ஏற்பட்ட எல்லைத் தகராறு, மற்றும் கிழக்காசிய நாடுகளுடனு பல்வேறு சிக்கல்கள் ஆகியவற்றோடு, அமெரிக்காவின் பொதுவுடைமை தீவிர எதிர்ப்புக் கொள்கையினுல் ஏற்பட்ட கெடுபிடிப் போரி னுலும் (Cold War) சீன அரசுக்குத் தொல்லைகள் பல எழுந்தன.

இருப்பினும் சீனப் பொதுவுடைமையினர் தங்களின் உழைப் பாலும், கட்டுப்பாட்டாலும் சீனுவை வல்லரசு நிலைக்கு உயர்த்தி யிருக்கின்றனர். இதன் காரணம் சீனப் பொதுவுடைமைத் தலைவர்களேயாவர். மா-சே-துங், சூ-என்-லாய் போன்றவர்கள், பொதுவுடைமைக் கொள்கைகளை ருஷியாவிடமிருந்து பெற்று லும், ருஷியாவின் கைக்கூலிகளாகவோ அல்லது கைப்பொம்மை யாகவோ மாறிவிடாமல், சீனுவின் முன்னேற்றத்திற்கு உதவும் வகையில் கொள்கை அமைப்புகளைக்கூடத் திருத்தியமைத்து, முன்னேற்றம் காண வழிவகை செய்தனர். பொதுவுடைமைக் கொள்கைகள் சீனப் பண்பாடு, பழக்கவழக்கங்களுக்குப் புறம்பா னவை என்றும், அதனுல் அது நிலைத்து நிற்கமுடியாது என்ற எண்ணமும் ஒருசமயத்தில் இருந்தது. ஆனுல், விரைவில் இந்த நிலை மாறியது. மாவோவும், அவரது கட்சியினரும், தங்களை முதலில் சீனர்கள் என்றும், பின்னர்தான் பொதுவுடைமையினர் என்றும், பொதுவுடைமைக் கொள்கைகளை முரட்டுத்தனமாக அப்படியே பின்பற்றுவதைவிட, நாட்டின் நலன் கருதித் திருத்தங் களுடன் ஏற்றுக் கொள்பவனே உண்மையான பொதுவுடைமை யாளன் என்றும் கருதிச் செயல்பட்டனர். மார்க்ஸ் கொள்கை களைப் பற்றிய உண்மையான சிந்தனையாளர் மாவோதான் என்றும், அவரது 'சிந்தனைகளே' சீன மக்களையும், மற்றவர்களை யும் உய்விக்கும் வழி என்றும் நம்பப்படுகின்றது. 'மாவோவின் சிந்தனைகள்' என்ற நூல்தான் சீனப் பொதுவுடைமையினரின் கருத்துக் கருவூலம். அந் நூலைப் போற்றிக் கற்பதுடன், அவ்வப் போது சீனுவில் தொடங்கும் செங்-பெங் (Cheng-Feng) போன்ற தூய்மைப்படுத்தும் இயக்கங்களும் பொதுவுடைமையினரின்

ஆதிக்கத்திற்குத் துணை நின்றன. இதன் அடிப்படையில்தான் புரட்சிக் கனல் அணையாமல் காக்கும் பொருட்டும், அதை மேலும் தூண்டுகின்ற வகையிலும், தன்னலமற்ற தலைவர்களைத் தோற்று விக்கும் பொருட்டும் சீனுவில் அவ்வப்போது இயக்கங்கள் தோன்றி யிருக்கின்றன. 1966-ல் தோன்றிய சீனப் பண்பாட்டுப் புரட்சி (Cultural Revolution) இதற்கு எடுத்துக்காட்டு. இந்தப் 'பண் பாட்டுப் புரட்சி' 1969-ல் முடிவுற்றாலும், அதன் முக்கியக் கொள்கைகள், தன்மைகள், விளைவுகள் பற்றிய முடிவான கருத்துகள் இன்னமும் உலகிற்குக் கிடைக்கவில்லையென்றே கூற வேண்டும்.

சீன மக்கள் குடியரசு ஆரம்பத்தில் ருஷிய 'மூத்த சகோதரன்' காட்டிய வழியைப் பின்பற்றி வளர்ச்சியடைய முயன்றது. இதனடிப்படையில் சமநிலை (சோசலிச)ச் சமுதாயம் சமைக்கும் முதல் கட்டமாகப் 'புதிய மக்களாட்சி' அல்லது 'மக்களாட்சி முறையில் வல்லாட்சி' (Democratic Dictatorship) அமைக்கும் பணியை மேற்கொண்டது. ருஷியாவைப் போன்று ஆரம்ப நிலையில் விவசாயம், வணிகம், தொழில்கள் முதலியவற்றில் தனியார் தொழில் துறையை அனுமதிப்பதும், உழவர்கள், தொழிலாளர்கள் அல்லாத சமூக, அதிகார வர்க்கத்தினரை அனுமதிப்பதும், சீனப் பொதுவுடைமையினரின் கொள்கை. சோசலிசம் அடைந்ததும், பெருந் தொழில்களும், தேசியப் பண்ணைகளும் தொடங்கப்படும். இவைகளும்கூட படிப்படியாக, மக்களின் ஆதரவோடு செயல்படுத்தப்படும். அரசு அதிகாரங்க ளனைத்தும் பொதுவுடைமைக் கட்சித் தலைவர்களிடமே இருக்கும். அதாவது கட்சியின் தலைமையில் அரசு இயங்கும்.

பொதுவுடைமைப் புரட்சியின் முதல் கட்டம் 1954-ல் முடி வடைந்ததாகக் கருதப்படுகிறது. இவ் வாண்டில்தான் பொது வுடைமையினரின் எதிர்ப்புகள் அனைத்தும் ஒறுக்கப்பட்டு, தோழமைக் கட்சிகளின் செல்வாக்கும் அழிக்கப்பட்டு, ஒரு கட்சி அரசு நிலைநிறுத்தப்பட்டது. இனி, பொதுவுடைமையினரின் சமுதாய வளர்ச்சித் திட்டங்கள், அவர்களது குறிக்கோள்கள், செயல்முறைகள் ஆகியவற்றை மக்களுக்கு விளக்கி, அவர்களின் பேராதரவைப் பெற வேண்டுவது இன்றியமையாததாயிற்று. அது மட்டுமின்றி அதிகார வர்க்கத்தினரையும், அறிவாளிகளையும் தங்கள்பால் ஈர்த்து அவர்களின் உதவியுடன் கட்சியையும், கட்சியின் கட்டுப்பாட்டில் நடக்கும் அரசையும் மேலும் வலிமை பெறச் செய்யும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இதன் பொருட்டு மார்க்சியக் கல்வி நிலையங்கள் நாடெங்கிலும் ஏற்படுத்

தப்பட்டன. ஆரம்பப் பள்ளி முதல் கல்வி நிறுவனங்கள் அனைத்திலும் மாவோவின் சிந்தனைகளும், மார்க்சியக் கருத்துகளும் கட்டாயப் பாடமாக்கப்பட்டன. அரசுதுறை அதிகாரிகள், படையினர், முதியவர்கள் அனைவருக்கும் பொதுவுடைமைக் கொள்கைகள் கற்றுக் கொடுக்கப்பட்டன. சீன மக்கள் அனைவரின் சிந்தனையும், செயலும் 'மாவோவின் சிந்தனைகளையே' தேவ வாக்காக ஏற்றுப் பயனடையும் வழியில் திருப்பிவிடப்பட்டன. இச் செயல்களை முறைப்படுத்தி, வழிநடத்திச் செல்லும் பொருட்டு நாடெங்கிலும் 'மக்கள் மன்றங்கள்' (Peoples Organizations) ஏற்படுத்தப்பட்டன. பொதுவுடைமைக் கொள்கைகள் சீனுவில் மூலை முடுக்குகளிளெல்லாம் பரவி வேரூன்றின.

மக்களிடையே பொதுவுடைமைக் கொள்கைகளைத் தீவிரமாகப் பரப்பும் இயக்கம் 1957 வரை செயல்பட்டது. 1957-ல் சீன மக்கள் புதிய ஆட்சி முறைகளையும், பொதுவுடைமைக் கருத்துகளையும் ஏற்றுக்கொண்டுவிட்டனர் என்று மாவோ முடிவு செய்தார். இனி, சோசலிஸ சமுதாயம் ஏற்படுத்தும் வகையில் தீவிரமாகச் செயல்படத் திட்டங்கள் வகுத்தார். மக்கள் அரசு என்றும், மக்களாட்சி முறை என்றும் வற்புறுத்தி வந்த பொதுவுடைமையினர் உண்மையிலேயே சீன மக்களுக்குச் சில அடிப்படை உரிமைகளை வழங்கவும் முடிவு செய்தனர். 'நூறு எண்ணப் பூக்கள் மலரட்டும்; அதை நூறு கருத்துகள் மோதட்டும்' ('Let a hundred flowers blossom' and 'Let a hundred schools of thought Centend') என்ற மாவோவின் முழக்கம், சீனர்களுக்கு அடிப்படை உரிமைகளை, அதாவது பேச்சுரிமை, எழுத்துரிமை ஆகியவைகளை வழங்கியது. மாவோவின் இந்த முழக்கத்திற்கு இருவிதக் காரணங்கள் கூறப்படுகின்றன. முதலாவதாக, சீனுவின் பழம்பெரும் நுண்கலைகள் மீண்டும் வளரவும், அதே நேரத்தில் புதியன புனையும் விஞ்ஞான வளர்ச்சியும் வளர்ந்து, சோசலிஸ சமுதாயம் சமைத்து, புதிய சீனுவை உருவாக்கும் எண்ணம்தான் இது எனக் கூறுகின்றனர். இரண்டாவதாக, மக்களின் அடிப்படை உரிமைகளான எண்ணம், எழுத்து, பேச்சு உரிமைகள் மறுக்கப்படும்போது, மக்களிடையே உள்ளக் குமுறல்கள் எழும். இக் குமுறல்களுக்குப் போக்கிடமளித்து, மக்களின் உள்ளத்தில் புதைந்து கிடக்கும் ஆயிரமாயிரம் எண்ணங்கள், சிந்தனைகள் வெளிப்படும்போது, அவர்களின் மனமும் ஆறுதலடையும். அரசியல் உரிமை பெற்றுவிட்ட மகிழ்ச்சியும் ஏற்படும். இந் நிலையும் பொதுவுடைமையினருக்கு இரண்டு விதங்களில் பயன்படும். எந்த அளவுக்குப் பொதுவுடைமைக் கொள்கைகள் மக்கள் மனத்தில் வேரூன்றி, நம்பிக்கையை வளர்த்திருக்கின்றது என்பதனையும்,

பொதுவுடைமைக் கொள்கைகளில் முழு நம்பிக்கை, ஆர்வம் கொள்ளாதோர் இருப்பின், அவர்களை அடையாளம் கண்டு நசுக்கவும், பயன்படும். இவ் விரண்டு கருத்துகளில் இரண்டாவதாகக் கூறிய கருத்து உண்மையிலேயே பயனளித்தது என்பதையும் நாம் உணர வேண்டும். ஏனெனில் ''நூறு எண்ணங்கள் மலரட்டும்'' என முழக்கமிட்டு, மக்களுக்கு உரிமைகள் வழங்குவதுபோல அறிவிப்புச் செய்த மாவோ மீண்டும் அவ் வுரிமைகளைக் கட்டுப்படுத்தினர். இதற்கிடையில் பொதுவுடைமையினரின் எதிரிகள் எனக் குற்றம் சாட்டப்பட்டு இலட்சக் கணக்கானோர் கொல்லப்பட்டனர். பல்லாயிரக் கணக்கில் அதிகாரிகள் வேலை நீக்கம் செய்யப்பட்டனர். பல இலட்சம் பேர் சிறையிலடைக்கப்பட்டு, அரசு பண்ணைகளில் அடிமைகளைப் போல உழைத்து மாள அனுப்பப்பட்டனர். தங்களின் செல்வாக்கை அளக்கும் ஒரு கருவியாகத்தான் இக் கருத்துப் பயன்பட்டது. இதன் மூலம் பொதுவுடைமை இயக்கம் சீனுவில் வேரூன்றி நின்றது. சோசலிச சமுதாயம் அமைப்பதில் பல இடர்ப்பாடுகளுக்கிடையே வெற்றியும் கண்டது. உலக அரங்கில் வல்லரசு நிலையில் உயர்ந்து, இரு பெரும் வல்லரசுகளே கூட அஞ்சுகின்ற அளவுக்கு உயர்ந்தோங்கி நிற்கிறது என்றும் கூறலாம்.

## பொருளாதார வளர்ச்சி

### வேளாண்மைத் துறை

சோசலிஸ சமுதாயத்தை உருவாக்கும் பணியில் தங்களை ஈடுபடுத்திக் கொண்ட பொதுவுடைமையினர், சீனுவின் உணவுப் பிரச்சினைக்கு முடிவு காண்பதைத் தங்களின் தலையாய கடமையாகக் கொண்டனர். ஆரம்ப காலம் முதல் நிலச் சீர்திருத்தங்களை மேற்கொண்டும், வேளாளரின் நில உரிமை, வரிக் குறைப்பு ஆகியவைகளுக்காகப் போராடிய பொதுவுடைமையினர், தங்களின் ஆட்சிக் காலத்தில், வேளாண்மை வளர்ச்சிக்குச் சிறப்பிடம் அளித்தது வியப்பிற்குரியதன்று. இவர்களின் குறிக்கோள் சிதறுண்டு சிறு சிறு பண்ணைகளாகத் தனியாரிடத்தில் இருக்கும் விவசாயங்கள் அனைத்தையும் இணைத்து, ஒரே பண்ணையாக்கி, நவீன முறைகளில் தீவிர சாகுபடித் திட்டத்தைச் செயல்படுத்த வேண்டும் என்பதாகும். இக் குறிக்கோளை மூன்று கட்டத்தில் நிறைவேற்ற முயன்றனர். முதலாவது கட்டத்தில் உழவர்கள் அனைவரும் ஒருவருக்கொருவர் உதவி செய்துகொள்வது (Mutual aid). இந் நிலையில் விவசாயத் தொழிலாளிகள் அனைவரும் தாற்காலிகமாக இணைந்து செயல்படுவது என்பதாகும். இரண்டாவது

கட்டத்தில் உற்பத்தியாளர் கூட்டுறவுகளை (Producers Co-operatives) ஏற்படுத்துதல். இம் முறையில் விவசாயக் கருவிகள் உழைப்பு ஆகியவைகள் ஒருமுகப்படுத்தப்படும். வேளாளர்கள் அனைவரும் ஒருங்கிணைந்து, திட்டமிட்டுச் செயலாற்றுவது, வருமானத்தை நில அளவிற்கேற்பப் பிரித்துக்கொள்ளுதல். இம் முறையில் தனியொரு உழவன் பிரிந்து செல்லவும் உரிமையுண்டு. இருப்பினும், கூட்டுப் பண்ணை முறைக்கும், இம் முறைக்கும் வேறுபாடுகள் அதிகமில்லை. மூன்றாவது கட்டம் தேசியப் பண்ணைகளை அமைத்தல் ஆகும்.

### கம்யூன்கள் (The Communes)

வேளாண்மைத் துறைச் சீர்திருத்தங்கள் எந்த அடிப்படையில் ஏற்பட வேண்டுமென்பதை மேலே கண்டோம். கூட்டுப் பண்ணை முறைகளையும், தேசியப் பண்ணைகளையும் மக்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமாயின், சமுதாயத்தின் அடித்தளத்தில் உள்ள மக்கள் விழிப்புணர்வு பெற்று, கட்டுப்பாடுகளைத் தாங்களாக ஏற்க வேண்டும். சமுதாயத்தின் அடித்தளத்தைச் சீர்திருத்தும் முறையில்தான் கம்யூன்கள் தோற்றுவிக்கப்பட்டன. 1958ஆம் ஆண்டின் இறுதியில் 500 மில்லியன் மக்களை உள்ளடக்கிய 24,000 கம்யூன்கள் ஏற்படுத்தப்பட்டன. ஒவ்வொரு கம்யூனிலும் 1000 லிருந்து 10,000 குடும்பங்கள் இணைக்கப்பட்டிருந்தன. அவர்களின் நிலம், உழைப்பு ஆகிய அனைத்தும் கூட்டுறவு முறையில் இணைக்கப்பட்டுவிட்டன. இக் கம்யூன்கள் தங்களைத் தாங்களே ஆட்சி செய்து கொள்ளலாம். இதனால் மைய அரசின் பணிகள் ஓரளவுக்குக் குறைக்கப்பட்டன. இக் கம்யூன்களின் அமைப்பால் உணவு உற்பத்தி அதிகரிக்கும் என்று நம்பப்பட்டது. இவ்வாறு தனி மனிதனின் உரிமைகள் பறிக்கப்பட்டு, ஒவ்வொருவரின் பணியும் வரையறுக்கப்பட்டு, இராணுவ வாழ்க்கையைப் போல் மக்களின் வாழ்க்கை நிலையும் மாற்றப்பட்டதால், மக்கள் வெறுப்படைந்திருந்தனர். இதன் விளைவை இதுவரையிலும் உலக மக்கள் முழுவதுமாக அறிந்துகொள்ள இயலவில்லை. ஒருவேளை வருங்கால வரலாற்றாசிரியர்களுக்கு இவ் வாய்ப்புக் கிடைக்கலாம். அதுவரை சீனப் பொதுவுடைமையினரின் சீர்திருத்தங்கள் மக்களின் நல்வாழ்விற்கும் வளர்ச்சிக்கும் காரணமாக இருக்கின்றன எனக் கொள்ளலாம்.

### தொழில் துறை

வேளாண்மைத் துறை வளர்ச்சியில் காட்டிய ஆர்வத்தைவிட தொழில் வளர்ச்சியில் சீன மக்கள் குடியரசு அதிக ஆர்வத்

காட்டியது. 'விவசாய உற்பத்தியைவிட அதிக அளவில் தொழில் உற்பத்தியைப் பெருக்கவேண்டும்' என்ற இலட்சியத்தை 1953ஆம் ஆண்டில் ஆரம்பிக்கப்பட்ட முதல் ஐந்தாண்டுத் திட்டம் வெளிப் படையாகவே கூறியது. இக் கொள்கையை நிறைவேற்றும் முறையில், ஆரம்ப நிலையில் தனியார் தொழில் துறையையும் சீனப் பொதுவுடைமை அரசு அனுமதித்தது. பின்னர், தொழில் துறை தேசியமயமாக்கப்பட்டது. ருஷியாவின் பொருளாதார முறையைப் பின்பற்றி ஐந்தாண்டுத் திட்டங்கள் தீட்டப்பட்டு ஆர்வத்துடன் செயல்படுத்தப்பட்டன. 1953-ல் தொடங்கிய முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் குறிக்கோள்கள் சற்று சாதாரண மாகவே இருப்பினும் இத் திட்டத்தின் விளைவுகள் மேலும் பல பெரிய திட்டங்களைத் தீட்டி நிறைவேற்ற முயன்ற எந்த நாடுமே, இதுவரை முழு வெற்றி அடைந்ததில்லை. இருப்பினும் இத் திட்டங்களினால் ஏற்பட்ட வியத்தகு முன்னேற்றங்களை மறுக் கவோ, மறைக்கவோ முடியாது. பொதுவுடைமைச் சீனாவும் இதற்கு விலக்கன்று.

### முன்னேக்கிச் செல்லும் திட்டம் (The Great Leap Forward)

முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தின் முடிவில் திட்டமிட்ட அளவு வளர்ச்சி ஏற்படவில்லை என்பதை உணர்ந்த பொது வுடைமையினர், 1958-ல் புதிய திட்ட மொன்றை உருவாக்கி, அதற்குப் புரட்சிகரமான பெயரையும் கொடுத்தனர். இத் திட்டம் தான் 'முன்னேக்கிச் செல்லும் திட்டம்' அல்லது சீனாவின் விரைந்து முன்னேக்கிச் செல்லும் திட்டம் (The Great Leap Forward) என்று அழைக்கப்படுகின்றது. இத் திட்டத்தின் மூலம் உணவு தானியங்கள், உலோகப் பொருள்கள், சிறப்பாக எஃகு உற்பத் தியில் தீவிர முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. மில்லியன் கணக்கில் சீனக் கூலிகள் புதிய நீர்ப்பாசனத் திட்டங்களில் பங்கு கொண்டனர். இரும்பு உற்பத்தியைப் பெருக்கும் முயற்சியில் கொல்லைப்புற உலைகள் (Backyard Furnaces) வீடு தோறும் ஏற்படுத்தப்பட வேண்டும் என்று அறிவிக்கப்பட்டது. இம் முறையைப் பல மில்லியன் சீன மக்கள் ஏற்று, தங்கள் வீடுகளில் இரும்பை உருக்கும் பணியில் ஈடுபட்டிருந்தனர். திருமதி சுன்யாட்சன்கூடத் தனது கொல்லைப்புற உருக்கு உலையில், வார்ப்பு இரும்பை உற்பத்தி செய்ததாகத் தெரிகிறது. (International Relations and World Politics since 1919 by S. N. Dhar. தமிழாக்கம் A. பாண்டுரங்கன், Part II P. 170.)

சீனாவின் முன்னேக்கிச் செல்லும் திட்டம் 1960-ல் கைவிடப் பட்டது. இத் திட்டத்தின் ஆரம்பத்தில் பெரும் முன்னேற்றங்கள்

ஏற்பட்டதாக அறிவிக்கப்பட்டாலும், நாளடைவில் குறை பாடுகள் மேலோங்கி நின்றன. பொருளாதார வளர்ச்சி தடை பட்டது. 1960ஆம் ஆண்டில் சீனு உணவுப் பொருள்களை வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்ய வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. இதற்குக் காரணமாக கம்யூன்களின் அமைப்பையும், கட்டுப்பாடுகளையும் மக்கள் விரும்பி ஏற்கவில்லையென்றும், சீனு தன் திறமைக்கு அதிகமாக, பேராசை கொண்டு திட்டங்களைத் தீட்டி, துரிதமாகச் செயல்படுத்த முனைந்த அவசரமும் காரணங் களாகக் கொள்ளப்படுகின்றன. மேலும் திட்டமிடுகின்ற முறை களிலும், போதிய அளவுக்குப் பயிற்சியின்மையால் குறைகள் ஏற்பட்டன. இதன் விளைவாகத்தான் 1960-க்குப் பிறகு சீனப் பொருளாதார ஏற்றம் சற்றுத் தடைபட்டது. இக் குறைகளைக் களைந்து, முன்னேற்றப் பாதையில் சீனுவை மீண்டும் செலுத்து கின்ற முறையில் பொதுவுடைமையினர் மேலும் பல புரட்சித் திட்டங்களை உருவாக்கினர். இதற்கிடையே 1965-லிருந்து 1969-வரை நடந்த சீனப் பண்பாட்டுப் புரட்சியும் சீனப் பொரு ளாதாரத் துறை வளர்ச்சியைத் தாமதப்படுத்தியது. 1969-க்குப் பின்னர், பல பெரிய திட்டங்களைத் தீட்டி நன்முறையில் செயல் படுத்தி வருகின்றது என்பதை இன்றைய சீன வரலாறு வெளிப் படுத்துகின்றது.

மொத்தமாகப் பார்க்கும்போது, சீனப் பொதுவுடைமை யினரின் சாதனைகள் மிகவும் கவர்ச்சிகரமாக இருக்கின்றன என்பதை மறுக்க முடியாது. ஆண்டுக்கு 15 மில்லியன் மக்கள் தொகைக் கூடுதலைக் கொண்ட மிகப் பெரிய சீனுவில் மக்கள் வாழ்க்கைத்தரம் உயர்ந்து காணப்படுவதும், வேளாண்மை, தொழில் முன்னேற்றங்களும் வியப்படையச் செய்கின்றன. மேலும், 1964ஆம் ஆண்டில் சீனு அணுக்குண்டை வெடித்துத் தனது விஞ்ஞான வளர்ச்சியை உலகிற்கு அறிவுறுத்தியது. அதன் பின்னர் சீனுவின் அணு ஆராய்ச்சி வளர்ச்சியுற்றுத் தற்போது அமெரிக்கா, ருஷியா போன்ற நாடுகளுக்கிணையாக வைத்து எண் ணப்படுகின்ற வகையில் ஏவுகணைகளையும், கண்டம்விட்டுக் கண்டம் பாயும் கணைகளையும் சீனு வெற்றியுடன் சோதனை செய்து உலகை வியப்பிலாழ்த்தியிருக்கின்றது. இத்தகு முன்னேற்றங்கள் சீனுவின் வளர்ந்துவிட்ட தொழில், விஞ்ஞான முறைகளை அறிவுறுத்து கின்றது.

## சீனுவின் வெளியுறவுக் கொள்கை

சீனுவின் வெளியுறவுக் கொள்கைகளைப் பற்றி விளக்கமாகக் குறிப்பிட இந் நூலின் அமைப்பு இடங்கொடுக்கவில்லை. எனினும்,

மிகவும் சுருக்கமாக, பொதுவுடைமைச் சீனுவின் வெளியுறவுக் கொள்கைகளைக் குறிப்பிட வேண்டியுள்ளது. 1949ஆம் ஆண்டி லிருந்து பல மாறுபட்ட வெளியுறவுக் கொள்கைகளைச் சீனு கடைப் பிடித்து வந்துள்ளது. இராணுவ பலம் மூலமாகவும், புரட்சிக் கொள்கைகளைப் பரப்பி, நாடுகளின் உரிமை, விடுதலைக்காகப் பாடு படுவது என்ற கொள்கையிலிருந்து, 'அமைதியாக இணைந்து வாழ்தல்' (Peaceful co-existance) என்ற கொள்கை வரை, சீனு மாறுபட்ட வெளியுறவுக் கொள்கைகளைப் பின்பற்றி வந்திருக் கின்றது. இம் மாறுபட்ட வெளியுறவுக் கொள்கைகளை ஆழ்ந்து நோக்கும்போது ஆசிய நாடுகளில் தலைமையிடத்தைப் பெற்றுத் திகழ வேண்டும் என்ற சீனுவின் உள்ளக்கிடக்கை, பேராசைக் கொள்கை தெளிவாகும்.

சீன வெளியுறவுக் கொள்கையின் முதல் கட்டத்தில் புரட்சித் தத்துவங்களைப் பரப்பும் (Militant idealism) முறைகளைக் காணலாம். சீனுவின் வெளியுறவுக் கொள்கைகளாவன: முதலாவதாக, பொதுவுடைமை நாடுகளுடன், சிறப்பாக ருஷியா வுடன் இணைந்து செயல்படுதல். இரண்டாவதாக, பொது வுடைமையற்ற ஏனைய ஆதிக்கக் கொள்கையுடைய நாடுகளை (Imperialist Powers) எதிர்த்தல். மூன்றுவதாக, இன்னமும் விடுதலையடையாமல் அந்நியர் ஆட்சியில் கட்டுண்டு கிடக்கும் தென் கிழக்காசிய நாடுகளின் விடுதலைக்குப் பாடுபடுதல் ஆகும். 1952ஆம் ஆண்டிற்குப் பிறகு சீனு 'இணைந்து வாழ்தல்' கொள்கையை மேற்கொண்டு செயல்பட்டது. தனது முதல் ஐந்தாண்டுத் திட்டத்தை துவக்கும் நிலையிலிருந்த சீனு, அதற் கேற்றாற்போல ஆசிய நாடுகளுடன் அமைதியினடிப்படையில் நட்புறவு கொள்ள விழைந்தது. இந்தியாவுடன் ஏற்பட்ட உறவு, ஜவஹர்லால் நேருவின் பஞ்ச சீலக் கொள்கையை ஏற்றுக் கொண்டது, சீன முதல்வர் சூ-என் லாய் இந்தியாவிற்கு வருகை தந்தது, 'இந்தி-சீனி பாய்-பாய்' என்ற அறிவிப்பு, 1955-ல் பாண்டுங் நகரில் நடந்த ஆசிய ஆப்பிரிக்க நாடுகளின் மாநாட்டில் கலந்து கொண்ட சீனு, முதன்மையிடத்தைப் பெற்றது ஆகிய நிகழ்ச்சிகளைக் கூறலாம்.

1958-க்குப் பின்னர் சீனுவின் உண்மை நிலை வெளிப்பட்டது. திபெத்தை வென்று அடிமைப்படுத்தியது. இந்தியாவுடன் எல்லைத் தகராறுகள், அதன் விளைவாக நடந்த சீனுவின் இந்திய ஆக்கிர மிப்புப் போர் (1962), வியட்நாம், லாவோஸ், கம்போடியா ஆகிய கிழக்காசிய நாடுகளில் சீனுவின் தலையீடு, அதன் விளைவுகள் ஆகியவற்றைக் குறிப்பிடலாம். இத்துடன் ருஷியாவிற்கும்

சீனுவுக்குமிடையே ஏற்பட்ட உறவு முறிவு, சீனு அணு ஆயுதத் தயாரிப்பை மேற்கொண்டு, இருபெரும் வல்லரசுகளுக்கிடையே தோன்றும் கருத்து மாறுபாடுகளைப் பயன்படுத்தி, மூன்ருவது பெரிய வல்லரசாக உயர்ந்தது ஆகிய இத்தகைய வளர்ச்சிகளைக் குறிப்பிடலாம்.

1962ஆம் ஆண்டு நடைபெற்ற இந்திய-சீனப் போரில் சீனு வெற்றி பெற்றதன் விளைவாக, ஆசிய நாடுகளில் தனக்குப் போட்டி இல்லாத நிலையை ஏற்படுத்திக் கொள்ள முயன்றது. மேலும் புதிதாகச் சுதந்திரமடைந்த ஆப்பிரிக்க நாடுகளுக்கு உதவும் முறையில் அவைகளின் நல்லெண்ணத்தைப் பெற்று, தனது செல்வாக்கினை உலக அரங்கில் நிலை நாட்டியுள்ளது. 1972ஆம் ஆண்டில் ஐக்கியநாடுகளின் அவையில் இடம் பெற்றதன் மூலம், தனது வலிமையையும், முன்னேற்றங்களையும் நிலைநாட்டி யுள்ளது. இதுவரை எதிர்ப்பு நிலையில் இருந்த அமெரிக்க-சீன உறவு, அமெரிக்கா பின்பற்றிய Ping-Pong Diplomacy-யாலும், அமெரிக்கக் குடியரசு தலைவரின் சீனப் பயணத்தினுலும் (1972), அதன் பின்னர் ஏற்பட்ட அமெரிக்க-சீன ஒப்பந்தங்களாலும், நட்புறவு ஏற்படுகின்ற நிலைக்கு உயர்ந்துள்ளது. இதுவரை சீனுவை ஒதுக்கி வைத்திருந்த வல்லரசுகள் 732 மில்லியன் (1970-ல்) மக்கள் தொகையைக் கொண்ட செஞ்சீனுவை உலக அரங்கில் ஏற்று, உரிய இடத்தை அளித்திருப்பது மக்கள் சீன அரசின் மாபெரும் வெற்றியாகும்.

சீன மக்களுக்கு வளமான, ஒளிமிக்க வாழ்க்கையை அளித்து, 'இல்லை' என்ற சொல் இனியும் சீனுவிலேயே இல்லை என்று கூறுமளவுக்கு ஏற்றத்தாழ்வற்ற சமுதாய, அமைப்பை உருவாக்குவதே எங்கள் குறிக்கோள் என மார்தட்டி நின்ற சீனப் பொதுவுடைமைத் தலைவர்கள், தங்கள் வாக்குறுதிகள் அனைத்தையும் நிறைவேற்றும் வழியறியாது திகைத்து நிற்கின் றனர். இதனுல்தான் 'சீனுவை வென்ற பொதுவுடைமைக் கொள்கை, சீனுவில் அடிமைப்பட்டு கிடக்கின்றது'[1] என இன்றைய வாலாற்று ஆசிரியர்கள் உரைக்கின்றனர். எழுத்தறிவற்ற எண்ணற்ற மக்கள் சீனுவில் இன்னும் உளர். முன்னேக்கிச் செல்லும் கொள்கையும் (The Great Leap Forward) சீனுவின் பல ஐந்தாண்டுத் திட்டங்களும், திட்டமிட்ட அளவுக்கு வளமையை

1 "If the Chinese were Controlled by their Communist masters, the Communists, in their turn were the Captives of China.—(Clyde and Beers—" The Far East P. 457.)

ஏற்படுத்தவில்லை. பெருகிவரும் மக்கள் தொகையைக் கட்டுப் படுத்தும் முயற்சிகள் அவ்வளவாக வெற்றி பெறவில்லை. 1970-ல் 732 மில்லியனாக இருந்த சீன மக்கள் தொகை 1980-க்குள் ஒரு பில்லியனாக உயரும் என்று கணக்கிடப்பட்டிருக்கின்றது. பெருகி வரும் மக்களுக்குத் தேவையான உணவு, உறையுள், உடை ஆகிய அடிப்படைத் தேவைகளை அரசு பங்கீட்டு முறைகளின் மூலம் வழங்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்ட போதிலும், உணவுப் பற்றாக்குறை மிகப் பெரிய பிரச்சினையாக உருவெடுத்துள்ளது. இந்நிலையில் ஒளி மிக்க எதிர்காலத்தை உருவாக்கிக் கொடுக்கும் வாக்குறுதி எங்ஙனம் காப்பாற்றப்படுகிறது என்பதைக் காலம் தான் தெளிவுபடுத்த வேண்டும்.

# 9. கொரியப் போர் (1950-1953)

துறவிகள் நாடு என்று கூறப்படும் கொரியாவின் வரலாற்றில் பல மாறுபட்ட நிலைகள் காணப்படுகின்றன. சில காலம் சுதந்திரமாகவும், சில காலம் சீனாவின் மேலதிகாரத்தைப் பெயரளவில் ஏற்றுக் கொண்டும், 19ஆம் நூற்றாண்டின் இறுதி வரை தனித்து இருக்கும் தேசிய நாடாகக் கொரியா இருந்து வந்தது. அதன் பின்னர் உரிமைகளை இழந்து, ஜப்பானியரின் ஆதிக்கத்தில் அடிமையாக இருக்கவேண்டிய துயர நிலை ஏற்பட்டது. இத் துயர நிலைக்குக் காரணம் அதன் பூகோள அமைப்பே யாகும். ஆசியக் கண்டத்திலிருந்து, ஜப்பானுக்கு மிக அருகில், 'ஜப்பானின் இதயத்தை நோக்கி நீண்டிருக்கும் கூர்வாள்' போன்று, இது பசிபிக் பெருங் கடலில் நீட்டிக் கொண்டிருக்கும் ஒரு தீபகற்பமாகும். இத் தீபகற்பம் வல்லரசுகளின் ஆதிக்கப் போட்டியில் சிக்கிச் சீரழியும் நிலையை அடைந்தது. ருஷியப் பேரரசு கிழக்கில் பரவியதாலும், சீனப் பேரரசு தொடர்ந்து சிதைந்ததாலும், தன் பாதுகாப்பின் பொருட்டு ருஷிய ஊடுருவலைக் கொரியாவிற்கு அப்பால் தடுத்து நிறுத்தவும், பொருளாதார ஆதிக்கம் பெறவும், ஜப்பான் கொரியாவை தன்னாதிக்கத்தில் கொணர முனைந்தது.

1894-95-ல் நடைபெற்ற முதல் சீன-ஜப்பானியப் போரில் சீனா தோல்வியுற்ற பின்னர் ஏற்பட்ட உடன்படிக்கையில் கொரியாவின் சுதந்திரத்தைச் சீனா ஏற்றுக்கொண்டது. கொரியாவைக் கைப்பற்றும் முயற்சியில் முதல் வெற்றியை ஜப்பான் பெற்றது. கொரியப் பிரச்சினையின் விளைவாக 1904-05-ல் ருஷிய-ஜப்பானியப் போர் ஏற்பட்டது. இப் போரில் ருஷியா தோற்கடிக்கப்பட்டு, கொரியாவில் இருந்த உரிமைகளை ருஷியா இழந்தது. ஜப்பானியக் காப்பரசு (Protectorate) கொரியாவில் நிறுவப்பட்டது. 1910-ல் கொரியா ஜப்பானுடன் இணைக்கப்பட்டது. இரண்டாம் உலகப் போரில் ஜப்பான் சரணடையும்வரை கொரியா ஜப்பானின் ஆதிக்கத்திலேயே இருந்தது. கொரியாவில் ஜப்பானியமாக்கும் முறைகள்


கொரியப் பிரிவினை
மஞ்சூரியா
சீனு
யாலு நதி
தூமன் நதி
ருஷியா
வட கொரியா
ஜப்பான் கடல்
பியாங்யாங்
போர் நிறுத்தக் கோடு
ஜுலை 27, 1953
1945-ல் எல்லைக்கோடு
38°
செவுல்
காங்நுங்
இஞ்சான்
ஹைன் நதி
தென் கொரியா
மஞ்சள் கடல்
புசான்
கொரிய நீரிணைப்பு
ஜப்பான்
கியுஷூ தீவு

கொரியப் பிரிவினை

தீவிரமாக்கப்பட்டன. கல்வி நிலையங்கள் ஜப்பானிய முறைகளையே பின்பற்றின. பொருளாதாரத் துறையில், ஜப்பானிய ஆதிக்க வளர்ச்சிக்குப் பயன்படும் தொழில்களே வளம் பெற்றன. கொரியர்கள் ஆட்சிப் பொறுப்போ, வணிக வளர்ச்சியோ பெறுவதினின்றும் தடை செய்யப்பட்டனர். கொரிய தேசிய இயக்கம், ஒற்றுமையுணர்வு, சுதந்திர வேட்கை முதலியன ஆரம்பம் முதலே நசுக்கப்பட்டன. என்றென்றும் ஜப்பானின் அடிமை நாடாகவே கொரியா இருக்கவேண்டும் என்பதை ஜப்பான் தெளிவாக்கியது.

ஜப்பானுல் கொரியா அடிமைப்படுத்தப்பட்டாலும், கொரிய தேசிய உணர்வுகள் அழிக்கப்படவில்லை. ஜப்பானிய ஆதிக்கத்திலிருந்து வெளியேறிய கொரியர்கள், அயல் நாடுகளிலிருந்து கொண்டு, கொரிய தேசிய உணர்வை காத்து வளர்த்தனர். தாற்காலிகக் கொரிய அரசு சீனுவில் தொடங்கப்பட்டு, தேசிய ஆசியுடன் ஆரம்பத்தில் ஷாங்கையிலும், பின்னர் நாங்கிங், சுங்கிங் நகரங்களிலும் நிலை பெற்றது. இதைப் போலவே மற்றொரு குழுவினர் டாக்டர் சிங்மன் ரீ (Dr. Syngman Rhee) என்பவரின் தலைமையில் அமெரிக்காவில் தாற்காலிகக் கொரிய அரசை நிறுவி, அங்கீகாரம் பெற முயன்றனர். இருப்பினும் 1943-ல் நடந்த கெய்ரோ மாநாட்டில் அட்லாண்டிக் சாசனக் கொள்கைகளை மனத்தில் கொண்டிருந்த குடியரசு தலைவர் ரூஸ்வெல்ட்டும், பிரதமர் சர்ச்சிலும், பெருந்தானைத் தலைவர் சியாங்-கே-ஷேக்கும், 'கூடிய விரைவில் முழுச் சுதந்திரமடைந்த கொரியா உருவாக்கப்படவேண்டும்' என்ற கருத்தினை அறிவித்தனர். 1945-ல் ஜப்பான் மீது போர் தொடுத்த ருஷியாவும் இக் கொள்கையை ஏற்றுக்கொண்டது.

போரின் முடிவில் கொரியாவை இரு பகுதிகளாகப் பிரித்து 38-வது குறுங்கோட்டிற்கு (Parallel) வடக்கேயுள்ள பகுதியை ருஷியர்களும், தெற்கே உள்ள பகுதியை அமெரிக்கர்களும் கைப்பற்றிக் கொள்ளலாமென 1945-ஆம் ஆண்டு ஜூலை மாதம் நடைபெற்ற பாட்ஸ்டாம் மாநாட்டில் (Potsdam Conference) ஏற்றுக்கொள்ளப்பட்டது. இதனடிப்படையில் ஆகஸ்டு மாதம் 8ஆம் நாள் கொரியாவில் நுழைந்த ருஷியர்கள், ஜப்பானிய அரசைக் கலைத்து, கொரிய மக்களின் குழுக்களை ஏற்றுக்கொண்டு, தங்களுக்குச் சாதகமான ஒரு தாற்காலிக அரசை அமைப்பதில் முனைந்து வெற்றியும் கண்டனர். ஒரு வாரத்துக்குப் பின்னர் கொரியாவில் நுழைந்த அமெரிக்கர்கள் முன்பிருந்த ஜப்பானிய அரசைக் கலைத்துவிட்டு, அமெரிக்க இராணுவ ஆட்சியை ஏற்படுத்தினர். தென் கொரியாவில் இராணுவ ஆட்சியை ஏற்படுத்திய அமெரிக்கர்கள்,

சோவியத் ஆட்சியின்கீழ் இருக்கும் வட கொரிய அரசை ஏற்க மறுத்தனர். கொரியாவில் ஏற்பட்ட ருஷிய, அமெரிக்கப் பூசலின் காரணமாக அது ஒரு தேசிய நாடு என்பதை மறுக்கும் அளவுக்கு, அந் நாடு இரண்டாகப் பிரிந்து, பொருளாதாரம் சீர்குலைந்து கொள்கைப் போர் தீவிரமாக நடக்கும் ஓர் அரங்கமாக அந் நாடு மாறியது.

அமெரிக்க ஐக்கிய நாடுகள், ருஷியா ஆகிய இரு நாடுகளின் கூட்டுத் தர்மகர்த்தா ஆட்சியின் கீழ்க் கொரியா இருக்க வேண்டுமென 1945ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் கெய்ரோவில் நடைபெற்ற அயல் நாட்டு அமைச்சர்கள் மாநாட்டில் ஏற்றுக்கொண்ட போதிலும், அது செயற்படவில்லை. ருஷிய ஆதிக்கத்திலிருந்த வட கொரியா, அமெரிக்க இராணுவ ஆட்சியில் இருந்த தென் கொரியா ஆகிய இரு பகுதிகளுக்கிடையே உறவு முறைகளை ஏற்படுத்தும் முறையிலும், கொரியாவில் தாற்காலிக மக்களாட்சி அரசைத் தோற்றுவிக்கும் முயற்சிகளிலும் இருநாடுகளுக்கிடையே கருத்து வேறுபாடுகள் தோன்றின. பேச்சு வார்த்தைகள் பல னளிக்கவில்லை. எனவே, 1947ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்களில் நடைபெற்ற ஐக்கிய நாடுகளின் பொதுச் சபைக்கு இப் பிரச்சினையை அமெரிக்கா கொண்டு சென்றது. கொரியாவில் ஐ. நா.வின் மேற்பார்வையில் பொதுத் தேர்தல் நடத்தவும், தேர்தலின் முடிவில் மக்களாட்சி முறையில் கொரிய அரசு ஏற்படுத்தப்படவேண்டும் என்றும் முடிவு செய்யப்பட்டது. கொரிய தேர்தலை மேற்பார்வை செய்ய ஐக்கிய நாடுகளின் பொறுப்பாண்மைக் குழுவும் நியமிக்கப்பட்டது. (United Nations Temporary Commission on Korea: Sep. 14. 1947). ஐக்கிய நாடுகளின் கொரிய தேர்தல் மேற்பார்வைக் குழுவை ருஷியா, வடகொரியாவில் அனுமதிக்கவில்லை. எனவே. இக் குழுவின் மேற்பார்வையில் தென் கொரியப் பகுதிகளில் மட்டுமே தேர்தல் நடந்தது. அமெரிக்கர்களின் மேற்பார்வையில் நடைபெற்ற இத் தேர்தல் நேர்மையான முறையில் நடத்தப்பட்டது என்று நிச்சயமாகக் கூற இயலாது என நடுநிலைக்கொள்கையைப் பின்பற்றும் கொரியத் தலைவர்கள் கூடக் கருதினர். இவ்விதம் தேர்ந்தெடுக்கப்பட்ட கொரிய தேசிய மக்கள் சபை அரசியல் அமைப்பை உண்டாக்கவும், ஆட்சி முறையை ஏற்படுத்தவும் முனைந்தது. 1948-ல் கொரியக் குடியரசு உருவாக்கப்பட்டது. அதன் முதல் குடியரசு தலைவராக டாக்டர் சிங்மன் ரீ (Dr. Syngman Rhee) தேர்ந்தெடுக்கப்பட்டார். செவுல் (Seoul) நகரைத் தலைநகராகக் கொண்ட கொரியக் குடியரசை அமெரிக்காவும், அதனைச் சார்ந்த அனைத்து நாடுகளும், ருஷியாவின் தலைமையிலான பொதுவுடைமை நாடுகள் தவிர

அங்கீகரித்தன. இந்தப் புதிய குடியரசிடம் அமெரிக்க இராணுவத்தினர் கொரியாவின் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்தனர். இதற்கு மாறாக, ருஷியா, 1948ஆம் ஆண்டு மே திங்களில் பியோங் யாங் நகரைத் தலைநகராகக் கொண்ட வட கொரிய மக்கள் குடியரசை ஏற்படுத்தியது. இக் குடியரசின் தலைவராக விடுதலை இயக்க வீரர் எனப் புகழ் பெற்ற கிம்-இல்-சாங் (Kim-Il-Song) என்பவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். (இரண்டாம் உலகப்போரின் போது, பல ஆண்டுகள் ஜப்பானை எதிர்த்துக் கொரியாவில் போர் புரிந்து, கொரில்லாப் போர் முறையில் இணையற்று விளங்கிய கிம்-இல்-சுங் (Kim-Il-Sung) என்பவரின் தலைமையில் பணியாற்றியவர் கிம் (Kim). தம் தலைவரைப் போலவே கொரில்லாப் போர் முறையில் புகழ் பெற்று விளங்கிய இவ்விளைஞர், தம் தலைவரின் பெயரையே தாமும் வைத்துக்கொண்டார். கிம்-இல்-சுங் என்ற பெயர், கொரிய மக்களனைவரும் போற்றிப் புகழும் பெயர். அப் புகழ் பெற்ற பெயரையே தாமும் வைத்துக்கொண்டது, கிம்-இல் சாங்கின் சிறந்த அரசியல் தந்திரமாகத் திகழ்ந்தது.)

கொரியா முழுவதற்கும் தங்கள் அரசுதான் உரிமையுடையது என்று இரண்டு கொரிய அரசுகளும் உரிமை கொண்டாடின. இரு பெரிய வல்லரசுகளுள் ஒன்றின் உதவியுடன் கொரியாவை ஐக்கியப் படுத்தித் தன் உரிமையை நிலைநாட்ட அவ்வரசுகள் முயன்றன. கொரியா தன் பாதுகாப்பிற்கு அப்பாற்பட்ட மண்டலம் எனக் கருதி, அமைதிகாக்கும் பொருட்டு, ஒரு சிறு கொரியக் காவல் படையை ஏற்படுத்திவிட்டு, 1949ஆம் ஆண்டு ஜூன் மாத இறுதியில் அமெரிக்கா தன் படைகளைத் திரும்பப் பெற்றுக் கொண்டது. ருஷியாவும் தன் பங்கிற்கு ஒரு பெரிய படையை வேண்டிய படைக்கலன்களுடன் வட கொரியாவில் நிறுத்திவிட்டு அவ்வாண்டின் இறுதியில் தானும் வெளியேறியது. வல்லரசுகள் இரண்டும் வெளியேறிய பிறகு, இரண்டு கொரிய அரசுகளும் மோதிக் கொள்ளத் தொடங்கின. ருஷியாவின் ஆதரவில் வட கொரியாவில் அமைக்கப்பட்டிருந்த மக்கள் குடியரசு, ஒரு கட்சி அரசாகவும் எதிர்ப்புகளின்றி, திறமையுடன் செயல்பட்டு, வட கொரியப் பொருளாதார ஏற்றத்திற்கு வித்திட்டது. அதே நேரத்தில் கொரியா முழுவதையும் இணைத்து வலிமையுள்ள இணைந்த கொரிய மக்கள் குடியரசை நிறுவவேண்டும் என்ற தணியாத ஆர்வத்தையும் கொண்டிருந்தது. தென் கொரியாவில் கட்சித் தலைவர்களின் சுயநலக் கொள்கைகளாலும், திறமையற்ற ஆட்சி முறைகளினாலும் குழப்பங்கள் நிகழ்ந்து வந்தன. அமெரிக்கா எவ்வளவுதான் உதவி செய்த போதிலும், தென் கொரியப் பொருளாதாரமும், வேளாண்மையும் முன்னேறவில்லை. முன்னேற்றக் கொள்கைகளைத் தீட்டிச் செயல்படுத்தும் நிலையில்

திறமையான, வலிவுள்ள அரசும் இல்லை. இந் நிலையில் சிங்மன் ரீயின் தலைமையிலான தென் கொரியக் குடியரசு, வட கொரியாவைப் பொதுவுடைமையினரிடமிருந்து மீட்டு, ஜனநாயகக் குடியரசை நிறுவும் பேராசையும் கொண்டிருந்தது. இக் கருத்துக்கு அமெரிக்க ஆதரவும் கிடைக்கும் என நம்பியது. அமெரிக்க-ருஷிய உறவும் படிப்படியாகச் சீர்குலையத் தொடங்கியது. கெடுபிடிப்போர் ஆரம்பமானது. ஐக்கிய நாடுகள் சபையும் கொரியப் பிரச்சினைக்கான தீர்மானங்களை இயற்றுவதுடன் நின்றுவிட்டது. நிறைவேற்றிய தீர்மானங்களைச் செயல்படுத்த எந்தவித ஏற்பாடுகளும் மேற்கொள்ளப்படவில்லை. பொருளாதாரச் சீர்கேடுகளினால் அல்லலுற்ற கொரியாவின் இரு அரசுகளும் உள்நாட்டுப் போரை நோக்கி நடைபோட்டன. உலக நாடுகள் கொரியாவின் இந் நிலையை உணர்ந்தும், இதைத் தடுக்கும் முயற்சிகளில் ஈடுபடவில்லை.

**வட கொரியப் படையெடுப்பும், ஐ.நா.வும்**

100 ருஷிய டாங்கிகளை முன்னணியாகக் கொண்ட 60,000 வட கொரியத் துருப்புகள், தென் கொரியாமீது 1950ஆம் ஆண்டு ஜூன் மாதம் 25 ஆம் நாள் திடீர்த் தாக்குதல்களைத் தொடங்கின. போதிய ஆயுதங்களும், படைப் பயிற்சியுமற்ற தென் கொரியக் குடியரசு படைகளைத் தோற்கடித்து, தென் கொரியாவில் வட கொரியப் படைகள் முன்னேறின. ஐ.நா.வின் பாதுகாப்புச் சபைக்கு இப் பிரச்சினையை அமெரிக்கர்கள் உடனே கொண்டுவந்தனர். அன்று மாலை 2 மணிக்குக் கூடிய பாதுகாப்புச் சபை, போர் நிறுத்தம் கோரியும் வட கொரியப் படைகள் 38-வது சமகோட்டிற்கு வடக்கே திரும்பச் செல்ல வேண்டும் என்றும் கோருகின்ற தீர்மானங்களை நிறைவேற்றியது. பாதுகாப்புச் சபையின் இத் தீர்மானத்தை 'வட கொரியா ஏற்க மறுத்தது. பாதுகாப்புச் சபையின் கொரியப் போர் நிறுத்தத் தீர்மானத்தைச் செயல்படுத்தும் முறையில் அமெரிக்காவின் விமான, கப்பற்படைகளைக் கொரியக் குடியரசுக்கு உதவும்பொருட்டும், பார்மோசாவின் பாதுகாப்பிற்கான நடவடிக்கைகளையும் எடுக்கும்படியும், அமெரிக்கக் குடியரசு தலைவர் ட்ரூமன் ஆணைகளைப் பிறப்பித்தார் (June 27, 1950). 'கொரியாவின் மீது போர் தொடுத்த ஆக்கிரமிப்பாளர்களை விரட்டியடிக்கவும், அந் நாட்டின் அமைதி, பாதுகாப்பிற்காகவும் உதவுமாறு' தன் அங்கத்தினர்களைக் கேட்டுக் கொள்ளும் தீர்மானமொன்றை பல மணி நேரத்திற்குப் பின்னர் மீண்டும் கூடிய பாதுகாப்புச் சபை நிறைவேற்றியது. ஜூலை மாதம், 7 ஆம் நாள் கூடிய பாதுகாப்புச் சபை, ஐக்கிய நாடுகளின் படையை ஏற்படுத்தவும், அப் படைகளின் தலைவரை

நியமிக்குமாறும் அமெரிக்காவைக் கோரியது. அமெரிக்கக் குடியரசு தலைவர் ட்ரூமன், ஜப்பானில் நேச நாடுகளின் படைத் தலைவராக ஆட்சிப் பொறுப்பேற்றிருந்த தளபதி மெக் ஆர்தரை, அப் பதவிக்கு நியமித்தார் (July 8, 1950). ஜூன் 27ஆம் நாள் பொதுச் சபையில் நிறைவேற்றப்பட்ட கூட்டுப் பாதுகாப்புத் தீர்மானம் 59 உறுப்பினர் நாடுகளுக்கும் அனுப்பப்பட்டது. அவைகளுள் படைகளை அனுப்பிய அல்லது அனுப்ப முன்வந்த நாடுகள் 14 தான். இவைகளும் கூட ஒப்புக்காகத் தரப்பட்டவைகளே. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் படைகளும் கொரியக் குடியரசின் படைகளும் மொத்தப் படையில் 90 சதவிகிதம் இருந்தன.

செஞ்சீன மக்கள் குடியரசை ஐக்கிய நாடுகள் சபையின் உறுப்பினராக்கும் முயற்சியில் தோல்வியுற்ற ருஷியா, பாதுகாப்பு சபைக் கூட்டங்களிலும் 1950 ஜனவரி மாதத்திலிருந்து கலந்து கொள்ளவில்லை. இவ்வாறு பாதுகாப்பு அவையின் நிரந்தர உறுப்பினராகிய ருஷியா கலந்து கொள்ளாத நேரத்தில்தான் கொரியப் பிரச்சினைக்கான பாதுகாப்புச் சபையின் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டு எளிதில் செயல் முறைக்குக் கொண்டுவரப் பட்டன. அவ்வாண்டு ஆகஸ்டு மாதத்தில் மீண்டும் ருஷியா, பாதுகாப்புச் சபை நடவடிக்கைகளில் கலந்து கொண்ட போது, தான் இல்லாதபோது பாதுகாப்புச் சபை நிறைவேற்றிய தீர்மானங்களை ஏற்றுக்கொள்ள இயலாது என மறுப்புத் தெரிவித்தது. தென் கொரியாதான் ஆக்கிரமிப்புப் போரைத் தொடங்கியது என்றும், ஆகவே பாதுகாப்புச் சபையின், தீர்மானங்கள் பயனற்றவை, ஏற்றுக்கொள்ள முடியாதவை, என்றும் வற்புறுத்தியது. மேலும், கொரியப் பிரச்சினைக்கான எந்தவித முடிவுகளையும், தீர்மானங்களையும் பாதுகாப்புச் சபை மேற்கொள்ள முடியாதவாறும் தடுத்தது. எனவே, கொரியப் பிரச்சினை பாதுகாப்புச் சபையிலிருந்து பொதுச் சபைக்கு மாற்றப்பட்டது. இதற்கிடையே கொரியாவில் ஏற்பட்ட போர் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருந்தது. போரின் போக்கில் எதிர்பாராத மாறுதல்களும் ஏற்பட்டுக் கொண்டிருந்தன.

### போர் நிகழ்ச்சிகள்

கொரியப் போர் நிகழ்ச்சிகளைப் பொதுவாக மூன்று கட்டங்களாகப் பிரிக்கலாம். முதல் கட்டத்தின் ஆரம்பத்தில் வட கொரியப் படையினர், தென் கொரியப் படைகளை வென்று, தலைநகரான செவுல் (Seoul) நகரைக் கைப்பற்றி, உதவிக்கு வந்த ஐக்கிய நாடுகளின் படைகளையும் தெற்கிலுள்ள பூசான்

(Pusan) கடற்கரைப் பகுதிக்கு விரட்டியடித்தனர். 1950ஆம் ஆண்டு செப்டம்பர் 15ஆம் நாள் வந்திறங்கிய அமெரிக்காவின் ஏழாவது கடற்படையினரும், விமான, தரைப்படையினரும் வெற்றிப் பெருமிதத்திலிருந்த வட கொரியப் படைகளைத் தாக்கி, 38வது சமகோட்டிற்கும் வடக்கே துரத்தியடித்தனர். அமெரிக்கப் படை வட கொரியாவில் மேலும் முன்னேறி தலைநகரான பியாங்யாங்கையும் (Pyongyong) கைப்பற்றி, வடகொரியாவின் வட எல்லையான யாலு நதிக்கரை (Yalu River) வரை முன்னேறியது. இந் நிலையில் தான் யாலு நதியைக் கடந்து மஞ்சூரியாவில் அத்துமீறி அமெரிக்க விமானப்படை நுழைவதையும், சீன எல்லையை நோக்கி ஐ.நா.வின் படைகள் மேலும் முன்னேறுமானுல் அதைத் தடுக்க சீனு போரில் இறங்க நேரிடும் என்ற எச்சரிக்கையை இந்தியத் தூதுவரான K. M. பணிக்கர் மூலமாக விடுத்தது. அதன் பின்னர் 200,000 சீனப் பொதுவுடைமைத் தொண்டர்கள் (Volunteers) வட கொரியர்களுக்கு ஆதரவாகப் போரில் இறங்கினர்.

சீனப் பொதுவுடைமைத் தொண்டர்கள் மூலமாக சீனு போரிலிறங்கியதிலிருந்து, போரின் இரண்டாவது கட்டம் தொடங்கியது. இச் சீனத் தொண்டர் படை யாலு நதியைக் கடந்து (November 25, 1950) ஐ.நா.வின் படைகளைத் தாக்கிப் பின்வாங்கச் செய்தனர். சீனப்படைகள் மேலும் வெற்றி பெற்று 38-வது சமகோட்டை அடைந்து தென் கொரியாவிலும் 90 மைல் வரை நுழைந்து வெற்றி பெற்றனர். எனவே பொதுவுடைமைச் சீனுதான் ஆக்கிரமிப்பாளன் என குற்றஞ்சாட்டப்பட வேண்டும் என்ற தீர்மானமொன்றை அமெரிக்கா ஐ.நா.வில் கொண்டு வந்தது. 1951ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்திலிருந்து மீண்டும் ஐ.நா.வின் படைகள் வெற்றிபெறத் தொடங்கின. போர் 38வது சம கோட்டின் அருகில் மையம் கொண்டது. இதற்கிடையில் சமாதான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

அமெரிக்காவின் நேரடித் தலையீட்டால் இப் போர் மூன்றும் உலகப் போராக மாறிவிடக் கூடிய ஆபத்து நிலையை உணர்ந்த இந்தியா, அமெரிக்காவின் முயற்சியை எதிர்த்தது. ஒரு போர் நிறுத்தக் குழுவை (Cease-fire group) ஏற்படுத்த வேண்டுமென்றும், தூரக் கிழக்குப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு ஒரு மாநாடு கூட்ட வேண்டும் என்றும் தீர்மானம் ஒன்றினை 12 ஆசிய நாடுகளின் சார்பில் இந்தியா கொண்டு வந்தது. 'போரில் வெற்றிபெற வேண்டுமானுல் சீனுவிற்குள்ளும் சென்று போரிட வேண்டுமென்றும், அமெரிக்கா தன் முழுப் படை வலிமையையும் கொண்டு

பொதுவுடைமைப் படைகளை நசுக்க வேண்டுமென்றும், தேவையானுல் அணுக்குண்டைக் கூட உபயோகிக்க வேண்டுமெனவும் அமெரிக்க - இராணுவத் தளபதிகள், சிறப்பாக மெக் ஆர்தர் அமெரிக்க அரசை வற்புறுத்தி வந்தார்' (1919 முதல் சர்வதேச உறவுகளும், உலக அரசியலும்- மூலநூல்- S. N. Dhar–தமிழாக்கம் A. பாண்டுரங்கன், பகுதி II, பக்கம் 189). இதனுல் இந்தியாவின் தீர்மானத்திற்குப் பொதுச் சபையில் பேராதரவு கிடைத்தது. தளபதி மெக் ஆர்தரின் இத்தகைய வேண்டுகோள் அமெரிக்க அரசியலில் பெருங் கொந்தளிப்பை உண்டாக்கவே குடியரசு தலைவர் ட்ரூமன், தளபதி மெக் ஆர்தரை தலைமைப் பதவியினின்றும் நீக்கினுர் (April 11, 1951).

தளபதி மெக் ஆர்தர் தூரக் கிழக்கின் இராணுவத் தலைமைப் பதவியிலிருந்து நீக்கப்பட்டதிலிருந்து போரின் மூன்ருவது கட்டம் ஆரம்பமானது. 1951ஆம் ஆண்டின் ஆரம்பத்திலிருந்தே போர் நிகழ்ச்சிகள் 38வது சம கோட்டின் அருகிலேயே இரு பகுதியினருக்கும் வெற்றியும் தோல்வியுமாக மாறி மாறி நடந்துவந்தன. இதற்கிடையே சமாதானப் பேச்சு வார்த்தைகளும் ஆரம்பிக்கப்பட்டன. தளபதி மெக் ஆர்தருக்குப் பிறகு தலைமைப் பதவியேற்ற தளபதி ரிட்ஜ்வே (General Ridgway) சமாதான முயற்சிகளைத் தொடங்கினுர். இப் பேச்சுவார்த்தைகள் முதலில் கேசாங் (Kaesong) நகரிலும் (July 10, 1951), பின்னர் பான்முன்ஜாம் (Ponmunjom) என்ற நகரிலும் (October 25, 1951), தொடர்ந்து இரண்டு ஆண்டுகள் நடைபெற்றன. இப் பேச்சு வார்த்தைகளின் போது கொரியாவின் அரசியல் நிலைமைகளும், இரு கொரிய அரசுகளுக்குமிடையேயான உறவு முறைகளும், போர்க் கைதிகளைப் பற்றியதுமான பிரச்சினைகளும் விவாதிக்கப்பட்டன. இந்தியா போன்ற ஆசிய நாடுகளின் சமாதானக் கொள்கைகளும், முயற்சிகளும்கூடப் பயனளிக்கவில்லை. போர்க் கைதிகளை அனுப்புவது பற்றிய பிரச்சினைதான் பேச்சுவார்த்தைகள் அடிக்கடி முறிவதற்குக் காரணமாய் இருந்தது. உண்மையில் ஐ.நா.வின் படையினரால் சிறைபிடிக்கப்பட்ட ஏராளமான சீனர்களும், வட கொரியர்களும் தங்களுடைய நாட்டிற்குத் திரும்ப மறுத்தனர். போர்க் கைதிகள் தம் கொள்கைகளை ஏற்க வேண்டுமென நினைத்து இரு சாராரும் மிகப் பெரிய பிரசாரங்களில் இறங்கினர். பொதுவுடைமையினர் போர்க் கைதிகளை அச்சுறுத்தியும், கொடுமைப்படுத்தியும் தங்கள் நாட்டிற்குத் திரும்ப அழைத்துக்கொள்ள முற்பட்டனர். ஐ.நா. மனிதாபிமானத்தைக் கருதி, விருப்பமற்ற கைதிகளைத் திருப்பி அனுப்ப விரும்பவில்லை. போர் நிறுத்தப் பேச்சு வார்த்தைகளில் ஏற்பட்ட தேக்கநிலை இரண்டு வல்லரசு நாடுகளில் ஏற்பட்ட

அரசியல் தலைமை மாறுதலால் நீங்கியது. போர் நிறுத்த ஒப்பந்தம் 1953ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள், 27ஆம் நாள் கையெழுத்தாகியது.

### சமாதான உடன்படிக்கை (July 27, 1953)

1953ஆம் ஆண்டு நடந்த அமெரிக்கக் குடியரசு தலைவர் தேர்தலில் குடியரசு கட்சியைச் சேர்ந்த டுவைட் ஐசன்ஹோவர் (Dwight Eisenhower) குடியரசு தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் கொரியாவில் அமைதி ஏற்படுத்தி, பொதுவுடைமைக் கொள்கை மேலும் பரவாமல் தடுப்பதைத் தமது முக்கியக் கொள்கையாகக் கொண்டிருந்தார். அதேபோல ருஷியாவிலும், ஸ்டாலின் மறைவிற்குப் பின்னர் பிரதம மந்திரியாக ஏற்படுத்தப்பட்ட ஜியார்ஜி மெலங்கோவ் (Georgi Melenkov) என்பவரும் சமாதானத்தை விரும்பினர். எனவே, சமாதான உடன்படிக்கை 1953ஆம் ஆண்டு ஜூலை மாதம், 27ஆம் நாள் கையெழுத்தாயிற்று. 38வது சமகோடு இரு கொரியாக்களின் எல்லையாக நிருணயம் செய்யப்பட்டது. அக் கோட்டின் இருபுறமும், நடுநிலைப் பகுதியும் (Neutral Zone) வரையறுக்கப்பட்டது. போர்க் கைதிகளை இரு சாராரும் பரிமாற்றம் செய்துகொள்ள வேண்டும். பின்னர் கொரியாவில் அமைதியை நிலைநாட்ட ஐக்கிய நாடுகளின் மேற்பார்வைக் குழு ஒன்றை அமைக்க வேண்டுமென்றும், கொரியப் பிரச்சினைக்கு முடிவு காண ஒரு மாநாடு கூட்டப்பட வேண்டும் என்றும் முடிவுசெய்யப்பட்டது. கொரியப் பிரச்சினையின் பொருட்டு 1954ஆம் ஆண்டு ஜெனிவாவில் கூட்டப்பட்ட மாநாடு பல்வேறு உலகப் பிரச்சினைகளால் எந்தவித முடிவையும் எடுக்கமுடியாமல் பயனற்றுப் போயிற்று.

### இரு கொரியாக்கள்: வட கொரியா

1953ஆம் ஆண்டிற்குப் பின்னர் வட கொரியாவில் செல்வாக்குப் பெற்ற ஒரே தலைவர் கிம்-இல்-சாங் (Kim-Il-Song) ஆவர். ருஷியாவின் ஆதரவில் ஆட்சிப் பொறுப்பேற்றிருந்தாலும், தம்முடைய சொந்த முயற்சியால் கொரியப் பொதுவுடைமைக் கட்சியை வளர்த்து, எதிர்ப்புகளை ஒடுக்கி, முறையான, திறமை மிகுந்த, முன்னேற்றக் கொள்கைகளில் ஆர்வம் கொண்ட ஆட்சியமைப்பை உருவாக்கினர். பொதுவுடைமையினரின் உறுப்பினர் தொகை 1946-ல் 360,000ஆக இருந்தது. 1961-ல், 1,311,563ஆக உயர்ந்தது. படைப் பிரிவுகள் கட்சியினரால் கட்டுப்படுத்தப்பட்டன. ஏற்றமிகு பொருளாதாரத் திட்டங்களைத் தீட்டி, ருஷியா, மற்றப் பொதுவுடைமை நாடுகளின்

உதவி பெற்று நிறைவேற்றப்பட்டன. இத் திட்டங்கள் மூவகை யில் தீட்டப்பட்டன. முதலாவதாக, விளைநிலங்கள் அனைத்தும் தேசியப் பண்ணைகளாக மாற்றப்பட்டன. இரண்டாவதாக, தொழில்கள் அனைத்தும் தேசிய மயமாக்கப்பட்டன. நீண்ட காலத் திட்டங்களின் அடிப்படையில் ஏராளமான புதிய தொழில்கள் ஆரம்பிக்கப்பட்டன. மூன்றாவதாக, பொது வுடைமைக் கொள்கைகளையும், சோசலிசத் தத்துவங்களையும் மக்களுக்குப் புகட்டும் வகையில் கல்விமுறை சீர்திருத்தி அமைக்கப் பட்டது. கொரிய தேசிய உணர்வினை ஊக்கும் வகையிலும், புதிய தொழில் நுணுக்கங்கள் வளர்ச்சியுறும் வகையிலும் கல்வித் திட்டங்கள் மாற்றப்பட்டன. இத்தகையத் திட்டங்களுக்கு ருஷியா இரண்டு பில்லியன் ரூபிள்களையும் (Two Billion Roubles) 1500-க்கும் அதிகமான தொழில்நுட்பக்கலைஞர்களையும் கொடுத்து உதவியது. செஞ்சீனாவும், ஏனைய பொதுவுடைமை நாடுகளும் இதற்கு இணையான உதவிகளைச் செய்தன. இவ் வுதவிகளை நன் முறையில் பயன்படுத்திய வட கொரியா, விரைவிலேயே இயந்திரக் கருவிகள், மோட்டார் வாகனங்கள், டிராக்டர்கள், இரசாயனப் பொருள்கள் போன்ற பல பொருள்களையும் உற்பத்திசெய்து தன்னிறைவு பெறுகின்ற உன்னத நிலையை எய்தியது. வேளாண்மைத் துறையில் மட்டும் தன்னிறைவு காண இயலவில்லை யாயினும், சமுதாய அடிப்படையில் பெரும் முன்னேற்றம் கண்ட நாடாக வளர்ந்தது. வட கொரிய அரசு எதேச்சாதிகார முறையில் திட்டங்களைத் தீட்டி, மக்களின் உரிமைகளைக் குறைத்துச் செயல்படுவதை ஒருசிலர் வெறுத்தாலும், பொதுவுடைமை அரசை எதிர்த்து, வெற்றிபெறும் அளவுக்கு வலிமை பெற்ற எதிர்ப்பியக்கம் ஏதும் உருவாகவில்லை.

பொதுவுடைமையினரின் தலைமையில் ஒருமைப்பாடுற்ற கொரியாவை உருவாக்க வேண்டும் என்பது 'கிம்' அவர்களின் குறிக்கோள். ஜெனிவா மாநாட்டிற்குப் பின்னர் (1954) ருஷியப் படைகளும், 1958-ல் செஞ்சீனப் படைகளும் வட கொரியாவி லிருந்து வெளியேறின. 1958ஆம் ஆண்டிற்குப் பிறகு தென் கொரியாவிலிருந்தும் ஐ.நா.வின் படைகள் வெளியேற வேண்டு மென்றும், நேர்மையான முறையில் கொரியாவெங்கிலும் பொதுத் தேர்தல் நடத்தி, கொரிய ஒற்றுமைக்குப் பாடுபட வேண்டு மென்றும் கிம்-இல்-சாங் முயன்றார். 1961-ல் தென் கொரியாவில் ஏற்பட்ட புரட்சியும் அதன் பின்னர் படையுதவியுடன் அமைக்கப் பட்ட தென் கொரிய அரசும், அரசியல் கொந்தளிப்பான நிலையும் கிம்-இல்-சாங்கின் திட்டங்கள் நிறைவேறத் தடையாக இருந்தன. இதன் விளைவாக வட கொரிய அரசு, செஞ்சீனவுடனும், ருஷியா

டனும் பாதுகாப்பு ஒப்பந்தங்கள் செய்துகொண்டது. இதன் பின்னர் வட கொரியப் படை எண்ணிக்கையிலும், போர்க் கலன்கள் பயிற்சியிலும் மிகவும் வலிமை பெற்றதாகத் திருத்தியமைக்கப்பட்டது. வட கொரியப் படைகள் தென் கொரியாவில் இருந்த ஐ.நா.வின் படைகளுடன் சிறுசிறு மோதல்களை அடிக்கடித் தொடங்கின.

தென் கொரியாவின் ஆதரவாக இருந்த அமெரிக்காவின் மீது 'கிம்' தீராத பகைமையை வளர்த்துக் கொண்டார். அமெரிக்காவின் உதவியையும், ஆதரவையும் பெற்றதால்தான் தென் கொரியா தன்னுடன் இணைய மறுக்கிறது என்பதையும் உணர்ந்தார். இதன் விளைவாகத்தான் 1968-ல் அமெரிக்க வேவுக் கப்பலான பியூப்லோ (Pueblo) என்ற கப்பலை, 82 சிப்பந்திகளுடன் கைது செய்து, ஓராண்டுக் காலம் சிறைப்படுத்தியிருந்தார். 1969ஆம் ஆண்டுக்குப் பின்னர் ருஷிய-சீன உறவில் விரிசல் காண ஆரம்பித்தது. மாவோவின் கருத்துகளில் பற்றுதல் மிக்க 'கிம்' தமது பொதுவுடைமைக் கொள்கையை இந்த இரு நாடுகளும் ஏற்கும் முறையில் செயல்படுத்த முனைந்தார். பொருளாதார, படைத் துறையில் ஓரளவு வளர்ந்து வலிமையடைந்த நிலையிலிருக்கும் வட கொரியா அயல் நாட்டுறவில் தனித் தன்மை பெற ஆர்வம் கொண்டுள்ளது.

### தென் கொரியா

வட கொரியா தன்னுடைய பாதுகாப்பிற்கு ருஷியா, சீனுவை நம்பியிருந்தது போலவே தென் கொரியாவும், தன்னுடைய பாதுகாப்பிற்கும் வளர்ச்சிக்கும் அமெரிக்க ஐக்கிய நாட்டையே நம்பியிருக்க வேண்டியதாயிற்று. ஆனுல், வட கொரியாவில் இருந்தது போல ஒரே கட்சியோ, அல்லது திறமை மிக்க, சுயநல மற்ற தலைமையோ, அல்லது மக்களனைவரையும் தன்பால் ஈர்க்கின்ற வல்லமை படைத்த தனியொரு தலைவரோ தென் கொரியாவில் இல்லை. அமெரிக்கா எவ்வளவுதான் உதவி செய்யினும், அவ்வுதவியை நாட்டின் முன்னேற்றத்திற்குப் பயன்படுத்தி வளப்பம் காணும் பொதுநல அரசு தென் கொரியாவில் நிறுவப்படவில்லை. இதற்குக் காரணம் தென் கொரியக் குடியரசு தலைவராய் இருந்த டாக்டர் சிங்மன்-ரீ என்பவரின் பதவி வெறியும், தான் தோன்றித்தனமுமாகும். 1953-ல் ஏற்பட்ட கொரியப் போர் ஓய்வு ஒப்பந்தத்தையே இவர் ஏற்றுக்கொள்ள மறுத்தார். கொரிய இணைப்பைத் தவிர வேறு எந்த ஒப்பந்தத்தையும் ஏற்றுக்கொள்ள சிங்மன்-ரீ தயாராகவில்லை. இவருடைய எண்ணத்திற்கு மாருக ஏற்பட்ட கொரியப் போர் நிறுத்த ஒப்பந்தத்தைக் கண்டு வெறுப்

புற்றார். இதனால் அமெரிக்க அரசுடன் இருந்த உறவு விரிசல் காண ஆரம்பித்தது. மேலும், தென் கொரியப் படைகளைக் கொண்டு எந் நேரத்திலும் வடக்கில் தாக்குதல் நடத்தப் போவதாக அச்சுறுத்தியும் வந்தார். இதன் விளைவாக 1954ஆம் ஆண்டு தென் கொரியாவுடன் அமெரிக்க அரசு பாதுகாப்பு ஒப்பந்தம் ஒன்றனைச் செய்துகொண்டது. இவ் வொப்பந்தத்தின்படி தென் கொரிய அரசு தன் பொறுப்பில் படையெடுப்பு நடத்துவது தடைசெய்யப்பட்டது. பொதுவுடைமை எதிர்ப்புக் கொள்கைகளும் வலியுறுத்தப்பட்டன.

தென் கொரிய அரசியலிலும் குழப்பங்கள் மலிந்திருந்தன. தென் கொரியாவில் இரு கட்சிகள் தோன்றியிருந்தன. லிபரல் கட்சியின் தலைவராக சிங்மன்-ரீ இருந்தார். மற்றது ஜனநாயகக் கட்சியாகும். தேர்தல் முறைகளை மாற்றியமைக்கும் முறையில் அரசியல் சட்டங்களைத் திருத்தியும், தமது கையாள்களை அதிகாரிகளாக நியமித்தும் எதிர்ப்போரை எம் முறையிலாயினும் சரிக்கட்டியும், சிங்மன்-ரீ ஆட்சியின் தலைமைப் பொறுப்பில் நீடிக்க முயன்றார். 1960ஆம் ஆண்டில் நடைபெற்ற பொதுத் தேர்தலில் ஏராளமான எதிர்க் கட்சியினரைச் சிறைப்படுத்தியும், காவல் படையினரின் உதவி கொண்டும், பதவியைக் கைப்பற்றி, தமது ஏதேச்சதிகாரத்தை நிலைப்படுத்த முயன்றார். அரசு பணம், வெளி நாட்டுதவி ஆகிய அனைத்தும் இவரது சுயநலத்திற்காகவே செலவிடப்பட்டது. இந் நிலையில் தென் கொரிய மக்கள் கிளர்ந்தெழுந்தனர். இக் கிளர்ச்சியை அடக்க அனுப்பட்ட படையினரும் மக்களுடன் இணைந்தனர். அமெரிக்க அரசும் சிங்மன் ரீயை பதவியைத் துறக்கும்படி வற்புறுத்திற்று. சிங்மன்-ரீ ஹவாய் தீவுக்கு ஓடினார். பின்னர், புதிய அரசியலமைப்பு ஏற்படுத்தப்பட்டது. குடியரசு தலைவரின் அதிகாரம் வெகுவாகக் குறைக்கப்பட்டு, பிரதம மந்திரிக்கு முதன்மை அதிகாரங்கள் கொடுக்கப்பட்டன. முதன்மந்திரியாக ஜனநாயகக் கட்சியைச் சேர்ந்த ஜான் M. சாங் என்பவர் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

ஆனால், ஜனநாயகக் கட்சியைச் சேர்ந்த ஜான் சாங்காலும் நிலையான அரசை ஏற்படுத்த முடியவில்லை. கட்சிப் பூசல்களும், ஊழலும், திறமையின்மையும், தன்னலமும், சுரண்டலும் மிகுந்து நாட்டை அலைக்கழித்தன. இந் நிலையில்தான் இராணுவப் புரட்சி ஏற்பட்டது (May 16, 1961). இராணுவத்தினர் ஆட்சியைக் கைப்பற்றினர்.

இராணுவத்தினர் முதலில் அரசில் மலிந்து கிடக்கும் திறமையின்மை, சுரண்டல், வரி ஏய்ப்பு ஆகியவைகளைச் சாடினர்.

ஏராளமான அதிகாரிகள், பழைய முதன் மந்திரி உட்படத் தண்டிக்கப்பட்டனர். பல தொழிலதிபர்களின் வரி ஏய்ப்புகள் கண்டு பிடிக்கப்பட்டு, அவர்களே அக் குற்றங்களை மக்கள் முன்னிலையில் உரைக்கவும், தண்டனையை ஏற்றுக்கொள்ளும்படியும் செய்யப்பட்டனர். ஆட்சித் துறைச் சீரமைப்பிற்குப் பின்னர் ஐந்தாண்டுத் திட்டங்கள் தீட்டப்பெற்றுத் திறமையுடன் செயல்படுத்தப்பட்டன.

ஜப்பானுடன் ஒப்பந்தம் செய்துகொள்ளப்பட்டது. போர் இழப்பீடாகவும், உதவியாகவும் ஜப்பான் 800 மில்லியன் டாலரைக் கொடுத்தது. வியட்நாமில் ஏற்பட்ட போரின் விளைவாக அமெரிக்கா ஏராளமான பொருள்களைத் தென் கொரியாவிடமிருந்து வாங்க முற்பட்டது. புதிய தனியார் தொழிலகங்களும் அமெரிக்கர்களால் நிறுவப்பட்டன. வேளாண்மைத் துறையும் தொழில் துறையைப் போலவே துரித வளர்ச்சி பெற்றது. மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்ந்தது. நாட்டின் பொது வருமானம் இரு மடங்காக உயர்ந்தது.

இத்தகைய வியத்தகு முன்னேற்றத்திற்குக் காரணமாக இருந்த இராணுவ ஆட்சியை மாற்றி, அதிகாரத்தை மீண்டும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசிடம் ஒப்படைக்கும் முயற்சிகள் தொடங்கப்பட்டன. புதிய அரசியலமைப்பு ஒன்றை உருவாக்கும் பணியும் ஆரம்பிக்கப்பட்டது. ஆனுல், இராணுவ ஆட்சியின்போது தலைமை ஏற்று ஆட்சி நடத்திய தளபதி பார்க்-சங்-ஹீ (General Park-Chung-Hee) தமது பதவியைத் துறக்க விரும்பவில்லை. குடியரசு தலைவராய் இருந்து அவரே ஆட்சி நடத்த முற்பட்டார். அவருடைய ஆட்சியின்போதும் அரசியல் குழப்பங்களும், போட்டியும் குறைந்தபாடில்லை.

தளபதி பார்க், ஐரோப்பா, தென் கிழக்காசிய, அமெரிக்க நாடுகளில் சுற்றுப்பயணம் மேற்கொண்டு, மற்ற நாடுகளின் உதவியைப் பெற முயன்ருர். தென் கொரியாவின் முந்தைய அரசுகளைப் போலவே இவரும் அமெரிக்காவை மட்டும் நம்பி, அதன் கைப்பொம்மையாக இருக்க விரும்பவில்லை. தம் நாட்டின் வளர்ச்சியில், மனிதாபிமான எண்ணத்தில் நம்பிக்கைக் கொண்டு உதவ முன்வரும் எந்த நாட்டின் உதவியையும் இவர் ஏற்றுக்கொண்டு பயனடைய விரும்புகிருர். இத்தகைய சுதந்திரமான வெளியுறவுக் கொள்கையை வெளியுலகிற்கு அறிவிக்கும் முறையில் 50,000 தென் கொரியத் துருப்புகளை வியட்நாம் போரில் ஈடுபடச் செய்திருக்கின்ருர் தளபதி பார்க்.

இவ்விரு கொரிய நாடுகளும் தங்களின் சுதந்திரத்தையும், தனித் தன்மையையும், வளர்ச்சியையும் உலகிற்கு அறிவிக்கும் போதும், அந் நாடுகளின் தலையாயப் பிரச்சினை இன்னும் தீராப் பிரச்சினையாகவே இருந்து வருகின்றது. இரு நாடுகளும் கொரியாவின் ஐக்கியத்தைப் பற்றி மாறுபட்ட கருத்துகளையே இன்னும் கொண்டிருக்கின்றன. அமெரிக்கா, ஐ.நா.வின் தலையீடின்றி கொரிய இணைப்பு ஏற்படுவதையே வட கொரியா விரும்புகிறது. ஐ.நா.வின் துணையுடனும், மேற்பார்வையுடனும் தேர்தல் நடத்தி, அதன்மூலம் இணைவதையே தென் கொரியா விரும்புகிறது. கொரியா இணைப்பு ஏற்படுமா, அவ்வாறு ஏற்பட்டால் எந்த அடிப்படையில் ஏற்படும் என்பது 1970ஆம் ஆண்டு வரையிலும்கூடக் கொரிய மக்களுக்கே புரியாத புதிராக இருக்கின்றது. உலக வல்லரசுகள் சிறப்பாக அமெரிக்கா, ருஷியா, செஞ்சீனு ஆகிய இம் மூன்று வல்லரசுகளும் இணைந்து முடிவெடுத்தால்தான் கொரியப் பிரச்சினை முடிவு பெறும். அந் நாள் எந் நாளோ!

இயல் ஆறு

# தென்கிழக்காசிய நாடுகள்

## 1. வேற்றுமையில் ஒற்றுமை

'தென்கிழக்காசிய நாடுகள்' என்ற சொற்கள் இரண்டாம் உலகப் போரின்போது வழக்கில் வந்தது. ஆசியாக் கண்டத்தின் தென் பகுதியையும், இந்தியாவையும் பசிபிக் பெருங்கடல்களில் விரிந்து கிடக்கின்ற எண்ணற்ற தீவுக் கூட்டங்களையும் குறிப்பிடு கின்ற பொதுப் பெயராக இச் சொற்கள் பயன்படுத்தப்பட்டு, பின்னர் வரலாற்றிலும் முக்கிய இடம் பெற்றது. கிழக்கு மேற்காக 3000 மைல்களும், வடக்கு தெற்காக 2000 மைல்களும், கொண்ட மிகப் பரந்த பகுதியே தென்கிழக்காசிய நாடுகளாகும். இப் பகுதியை இருபிரிவுகளாகப் பிரிக்கலாம்: (1) ஆசியாக் கண்டத் திலிருக்கும் இந்தோ-சீன தீபகற்பம். இப் பகுதியில் பர்மா, மலேசியா, சிங்கப்பூர், சயாம் அல்லது தாய்லாந்து, கம்போடியா, லாவோஸ், வட வியட்நாம், தென் வியட்நாம் ஆகிய நாடுகள் அடங்கும். (2) இந்திய-பசிபிக் பெருங்கடலில் விரிந்து கிடக்கின்ற தீவுப்பகுதிகள். இப் பகுதியில் இந்தோனேஷியா, பிலிப்பைன் நாடுகள் அடங்கும். இந்தோனேஷியா என்பது சுமாத்ரா, ஜாவா, போர்னியோவின் பெரும்பகுதி, பாலி, செலுகஸ், மொலுக்கஸ் முதலிய பெரிய தீவுகளை உள்ளடக்கிய, மூவாயிரத் திற்கும் அதிகமான தீவுகளைக் கொண்டது. பிலிப்பைன் நாட்டில் ஏறத்தாழ ஏழாயிரம் தீவுகள் அடங்கியிருக்கின்றன. தென் கிழக்காசிய நாடுகள் அனைத்தையும் உலக வரைபடத்தில் நோக்கும்போது பர்மாவின் வடவெல்லையாகிய இமயமலைத் தொடர்களிலிருந்து தெற்கு நோக்கி லாவோஸ், கம்போடியா,

தாய்லாந்து, வியட்நாம், மலேசியா வழியாக சுமாத்ரா, ஜாவா, போர்னியோ தீவுகள் மூலமாக, பிலிப்பைன் நாட்டை உள்ளிட்டு, ஒரு குதிரை லாட வடிவில் அமைந்திருப்பதையும், இவைகளினி டையில் சீனக்கடலும் அமைந்திருப்பதையும் காணலாம்.

மலேயாவிலிருந்து தென்கிழக்கு நோக்கிச் செல்லும் சங்கிலித் தொடர் போன்ற எண்ணற்ற தீவுகளை நோக்கும்போது, அத் தீவுகள் ஆஸ்திரேலியாவை நோக்கிச் செல்கின்ற காலடிச் சுவடுகள் போன்று தோற்றமளிக்கின்றன. இச் சங்கிலித் தொடரைத்தான் வரலாற்று ஆசிரியர்கள், தென் கிழக்காசியத் தீவுக் கூட்டங்களின் அமைப்பு ஒரு பெரிய மதில் சுவர் போன்று பசிபிக் பெருங்கடலில் அமைந்திருக்கின்றது என்றும், இம் மதிற் சுவரின் கண் ஏராளமான நுழைவாயில்கள் இருக்கின்றன வென்றும், இந் நுழைவாயில்கள்தான் இந்தியாவிலிருந்து சீனுவிற்கும், சீனு விலிருந்து இந்தியா வழியாக மேலைநாடுகளுக்கும் கடல் வழித் தொடர்பு நிலையங்களாக விளங்கின என்றும் குறிப்பிடுகின்றனர். இந்தியா, சீனு போன்ற இரு மாபெரும் பேரரசுகளின் வர்த்தகம், பண்பாடு ஆகியவற்றின் சந்திப்பிடமாகவும், மேற்கு, கிழக்கு நாடுகளிடையேயான கடல் வாணிபத்தின் மைய இடமாகவும் இத் தீவுக் கூட்டங்கள் விளங்கின; வரலாற்றில் புகழ்மிக்க இடத்தைப் பெற்றன.

**இயற்கை வளம்**

தென் கிழக்காசிய நாடுகளில் பனிமூடிய மலைச் சிகரங்களும், அடர்ந்த காடுகளும் நிறைந்துள்ளன. அவைகளில் நெடிதுயர்ந்த மரங்களும், எண்ணற்ற தாவர வகைகளும் வளர்ந்து மனிதன் நுழைய இயலாவண்ணம் பெருகியுள்ளன. இவைகளினிடையே நெற்கதிர்கள் வரவேற்பளிக்கின்ற சமவெளிகளும், சதுப்பு நிலப் பகுதிகளும், மரங்களடர்ந்த மேட்டுப் பகுதிகளும் உண்டு. இம் மலைகளும் காடுகளும் நாடுகளின் எல்லைகளாக அமைவதோடு, மாறுபட்ட வாழ்க்கை நெறிகள், பண்பாடுகள் தோன்றவும் காரணமாய் அமைந்தன. உலகப் பெரு நதிகளான சால்வீனும் (Salween) மெகாங்கும் (Mekong) இந்தோ-சீனப் பகுதிகளை வளங் கொழிக்கச் செய்கின்றன. ஐராவதி (Rvier Irawaddy-Burma) மெனும் நதி (R. Menom-Thailand), செந்நதி (Red River-North Vietnam) போன்ற பெருநதிகளும், ஏராளமான சிறு நதிகளும் இந்தோ-சீன நாடுகளின் பொருளாதார ஏற்றத்திற்கும், மக்களின் நல்வாழ்வுக்கும் அடித்தளமாக அமைந்துள்ளன. ஜாவாவில் வடக்கு நோக்கிப் பாயும் சோலோ நதிப் (River Solo) பள்ளத் தாக்கு, பிராந்தஸ் நதிப் (River Brantes) பள்ளத்தாக்கு

ஆகியவைகள், 12,000 ஆண்டுகட்கும் முற்பட்ட ஆதிமனிதன் வாழ்ந்த இடங்களென மானிட இயல் வல்லுநர்கள் (Anthropo-ogists) கருதுகின்றனர்.

காடுகளடர்ந்த பகுதிகளாதலால் மரங்களும், வனப்பொருள்களும் பெருமளவில் கிடைக்கின்றன. பூமிக்கடியில் ஏராளமான கனிவளங்கள் புதைந்து கிடக்கின்றன. பொதுவாக உலகில் தோண்டியெடுக்கப்படும் தகரத்தின் (Tin) பெரும்பகுதி தென் கிழக்காசிய நாடுகளிலிருந்து கிடைக்கின்றது. மற்றும் இரும்பு, குரோமியம், துத்தநாகம், எண்ணெய் போன்றவைகளும் ஏராளமான அளவில் இப் பகுதிகளில் கிடைக்கின்றன. விவசாய உற்பத்திப் பொருள்களான நெல், தேயிலை, காப்பி, நறுமணப் பொருள்கள், இரப்பர் போன்றவைகளும் இப் பகுதிகளின் சிறப்பையும் வளத்தையும் அதிகரிக்கின்றன. உலகிலேயே நறுமணப் பொருள்கள் உற்பத்தி செய்யப்படும் ஒரே பகுதி தென்கிழக்காசியத் தீவுகளாகும். இந் நறுமணப் பொருள்கள் தான் ஐரோப்பிய நாடுகளைச் சுண்டியிழுத்தன.

## தட்பவெப்ப நிலை

தென் கிழக்காசிய நாடுகள் நில நடுக்கோட்டுப் பகுதியில் அமைந்திருக்கின்றன. பருவக்காற்று வீசும் பகுதிகளாகவும் இருக்கின்றன. நிலநடுக்கோட்டுப் பகுதியாதலால் கடுமையான வெயிலும், பருவக்காற்றுப் பகுதியிலிருப்பதால் பெருமழையும் இப் பகுதிகளின் தட்ப வெப்ப நிலையை அமைக்கின்றன. ஆண்டு முழுவதும் வெப்பமும், புழுக்கமும் காணப்படும். குளிர்காலம் வறட்சியாகவும், புழுக்கம் நிறைந்ததாகவும் காணப்படும். வெப்பமும், மழையும் நிறைந்த பகுதியாதலால் அடர்ந்த காடுகளும், சதுப்பு நிலங்களும் காணப்படுகின்றன. பர்மாவிலுள்ள உயர்ந்த மலைச் சிகரங்கள் பனியாலும் மூடப்பட்டிருக்கும். இம் மாறுபட்ட தட்ப வெப்ப நிலைகள் இந் நாட்டு மக்களின் பண்பாடு, தொழில், பொருளாதார வளர்ச்சி இவைகளைக் கட்டுப்படுத்தி, மக்களின் வாழ்க்கைத் தரத்தையும் நிர்ணயிக்கின்றது.

## மக்களினம்

ஏறத்தாழ 12,000 ஆண்டுகளுக்கு முற்பட்ட பழங்கால மனிதன் வாழ்ந்த இடமென தென்கிழக்காசியப் பகுதியிலுள்ள ஜாவா கருதப்படுகின்றது. ஜாவா மனிதன் (Jawa Man) எனப்பட்ட, மனிதக் குரங்கிற்கும்-மனிதனுக்கும் இடைப்பட்ட நிலையிலிருந்ததாகக் கருதப்படுகின்ற மக்களினம் வாழ்ந்திருந்த பகுதியென ஜாவா கருதப்படுகின்றது. ஜாவாவில் சோலோ நதிப்

பள்ளத்தாக்கில் கண்டெடுக்கப்பட்டுள்ள மண்டையோடுகளும், தாடை எலும்புகளும் இக் கருத்தை வலியுறுத்துகின்றன. எனவே மனித இனம் தோன்றிய காலந்தொட்டே, தென்கிழக்காசியப் பகுதிகளிலும் மனிதன் நடமாட்டம் இருந்திருக்கின்றது. பழைய கற்காலம், புதிய கற்காலம், உலோக காலம், அதற்கும் முற்பட்ட மனித இனம் ஆகியவை தொடங்கி இன்றைய நாகரிகம், பண்பாட்டில் சிறந்த அணு ஆயுத கால மனிதன் வரை தொடர்ந்து வாழ்கின்ற சிறப்பைப் பெற்றது இப் பகுதியாகும்.

தென் கிழக்காசிய நாடுகளில் வாழ்கின்ற மக்களில் பெரும் பாலோர் 'இந்தோனேஷிய இனத்தைச்' சேர்ந்தவர்கள் எனக் கூறலாம் (Indonesian Stock). இருப்பினும் இரண்டாயிரம் ஆண்டு கட்கும் அதிகமாகத் தொடர்பு கொண்டுள்ள இந்திய, மங்கோலிய, சீன, இஸ்லாமிய, ஐரோப்பிய மக்கள், மொழி, பண்பாட்டுத் தொடர்பு இம் மக்களிடையே சமய, பண்பாட்டு வேற்றுமைகளைப் புகுத்தியிருக்கின்றது. இருப்பினும் உருவ அமைப்பில் தென் கிழக்காசியர்கள் அனைவரும் மிகவும் நுண்ணிய வேறுபாடுகளை நீக்கிப் பார்க்கும்போது ஒரே இனமாகத் தோற்ற மளிப்பர். வியட்நாமியர் மட்டும் உருவத்திலும், நிறத்திலும் சீனர்களை ஒத்துள்ளனர். இம் மக்கள் அனைவரும் சீனக் கடற்கரைப் பகுதிகளிலிருந்து வியட்நாமில் குடியேறி, அங்கிருந்த ஆதிமக்களில் பெரும்பாலோரை வெளியேற்றி, எஞ்சியவர்களைத் தங்கள் இனத்துடன் இணைத்தும் நிலைபெற்றவர்கள். ஏனைய மக்கள் சற்றுக் குள்ளமாத, மாநிறத்துடன், வட்டமான கண்களும், கரிய தலைமுடியும் கொண்டவர்கள். நிற வேறுபாடுகள் இருப்பினும் அது அவ்வளவாகத் தெரியவில்லை. இவர்கள் அனைவருமே மலேய-இந்தோனேஷிய இனத்தைச் சேர்ந்தவர்கள். 2500-லிருந்து 1500 ஆண்டுகளுக்குள் மத்தியாசியாவிலிருந்து தெற்கு நோக்கி முன்னேறி, தென் கிழக்கு ஆசிய நாடுகளிலிருந்த கறுத்த, குட்டை யான ஆதி மனிதர்களுடன் கலந்து விட்டவர்கள். ஆதி இனத்தவ ரான மலேய நீக்கிரத்தோக்கள் (Negritos of Malaya) இந்தோ-சீன, இந்தோனேஷியக் காடுகளில் நாகரிகமடைந்த மனித இனத்தின் தொடர்பற்று, நஞ்சு தடவிய அம்புகளையும், ஆயுதங் களையும் தாங்கி, ஏறக்குறைய நிர்வாணமாகவே திரிந்து வேட்டை யாடுவதையே தொழிலாகக் கொண்டு இன்றும்கூட வாழுகின் றனர். இத்தகைய மலைவாழ் மக்கள் ஆஸ்திரேலியக் காடுகளிலும் காணப்படுகின்றனர்.

இத்தகைய ஆதிமக்கள் ஒருபுறம் ஒதுங்கி வாழ்கின்ற அதே நாட்டில் தற்கால நாகரிகமும் விளங்கி வருவதை நாம் காணு

கின்றோம். ஒரு மில்லியனுக்கும் அதிகமான மக்கள் தொகையை யுடைய பாங்காக் (Bangkok), மணிலா (Manila), சிங்கப்பூர் (Singapore), ஜகார்த்தா (Jakartha) ஆகிய பெரு நகரங்களும், அவைகளிலிருந்து விண்ணோக்கி எழும் மாபெரும் கட்டடங்களும், தெருக்களை அடைத்துக்கொண்டு செல்கின்ற எண்ணற்ற மோட்டார் வாகனங்களும், நொடிக்கு ஒன்று என்ற வீதத்தில் பறந்தெழுகின்ற ஜெட் விமானங்களும், எண்ணிறந்த தொழிற்சாலைகளுமென வளங்கொழிக்கும் தென்கிழக்காசிய நாடுகளையும், நாகரிக உலகின் நவநாகரிகச் சின்னங்களாக நடை பயிலுகின்ற எண்ணற்ற மக்களையும் காணும்போது, பழமையும் புதுமையும் கலந்துறவாடுவதைக் காண முடிகின்றது. பல்வேறுபட்ட மக்கள், இனத்தால், மொழியால், சமயத்தால், பண்பாட்டால், மாறுபட்டவர்கள் இணைந்து ஒற்றுமையுடன் வாழுகின்ற பகுதியாகக் காட்சியளிக்கின்றது.

மொழியின் அடிப்படையிலும் இம் மக்கள் வேறுபட்டு நிற்கின்றனர். மூன்று உலக மொழிக் குழுக்கள் (Three Great Linquistic Groups or Families) இப் பகுதி மக்களிடையே கலந்துறவாடுகின்றன. அவையாவன: 1. மலேய-பாலினீஷிய மொழிகள், 2. ஆஸ்ட்ரோ-ஆசிய மொழிகள், 3. திபெத்திய-சீன மொழிகள் ஆகும். மலேயா தீபகற்பத்திலும், இந்தோனேஷியத் தீவுக் கூட்டங்களிலும், பிலிப்பைன் தீவுகளிலும், மலேய-பாலினீஷியன் மொழிகள் பேசப்படுகின்றன. பர்மா-சயாம், இந்தோ-சீன நாடுகளில் ஆஸ்ட்ரோ-ஆசிய மொழிகள் பேசப்படுகின்றன. பர்மா-சயாம் பகுதிகளில் திபெத்திய-சீன மொழிகள் பேசப்படுகின்றன. இதே போல மாறுபட்ட சமயங்களும் பரவியுள்ளன. இந்தோனேஷியா, மலேயாவில் இஸ்லாமிய மதமும், பர்மா, சயாம், இந்தோ-சீன நாடுகளிலும், மற்றும் சீனர்கள் வாழும் பகுதிகளிலும் புத்த சமயமும், பர்மா, மலேயாவில் சிறுபான்மையினரும், இந்தோனேஷியாவில் பாலித்தீவில் இந்து மதமும் பின்பற்றப்படுகின்றது. பிலிப்பைன் தீவுகளில் 95 சதவீதத்தினர் கிறித்தவர்கள். இச் சமயங்களும், அவற்றோடு இணைந்த பண்பாடுகளும், வர்த்தகத் தொடர்பினால் தென்கிழக்காசிய நாடுகளில் புகுந்தவை என்பதும், ஈண்டுக் குறிப்பிடத் தக்கதாகும். தென்கிழக்காசிய நாடுகள் உலக வர்த்தகப் பாதையில் மைய இடத்தில் அமைந்துள்ளன; இந்தியா-சீனா போன்ற பழம் பெருமை மிகுந்த நாடுகளினிடையில் அமைந்துள்ளன. ஏராளமான கனிவளங்களையும் பெற்றிருக்கின்றன. எனவே, வர்த்தக வளர்ச்சி ஏற்பட்டது. வர்த்தகத் தொடர்பினால் பெரும்பாலும் இந்தியர்களும், சிறப்பாகத் தென்னிந்திய மக்களும், சீனர்களும், இவர்

களைப் பின்பற்றி இஸ்லாமியர்களும், பதினைந்தாம் நூற்றுண்டின் பின்னர் கிறித்தவர்களும் தொடர்பு கொண்டனர். இம் மக்களின் சமயம், பண்பாடு, அரசியலும் வர்த்தகத்தைத் தொடர்ந்து நுழைந்து, செல்வாக்குப் பெற்று நிலைத்தது.

எனவேதான் தென்கிழக்காசிய நாடுகளில் பல இனங்கள், சமயங்கள், மொழிகள், பண்பாடுகள் அனைத்தும் கலந்துறவாடு கின்ற நிலை ஏற்பட்டது. இத்தகைய வேறுபாடுகளிடையேயும், பன்மைச் சமூக அடிப்படையிலும், வாழ்கின்ற தென்கிழக்காசிய மக்கள் அந்நியர்கள் நுழைவதற்கு முன்பிருந்த பண்பாட்டு முறைகளை அடியோடு மறந்துவிடவில்லை என்பது வியப்பிற்குரிய தாகும். தென்கிழக்காசியப் பழைய பண்பாடு முறைகள் என்ற வகையில் சிலவற்றை கோட்ஸ் (Coeds) என்ற வரலாற்றுசிரியர் தொகுத்துக் கூறியுள்ளார். அவைகள்: 1. நீர்ப்பாசன முறைகளை ஏற்படுத்தி நெற்பயிர் விளைத்தல், 2. எருது, எருமை போன்ற மிருகங்களை உழவிற்குப் பயன்படுத்துதல், 3. உலோகங்களின் பயனை அறிந்திருத்தல், 4. கப்பல் செலுத்துவதில் திறமை, 5. பெண்களுக்குச் சமூகத்தில் மிக உயர்ந்த இடம்—தாய் வழிச் சொத்துரிமை, 6. நீர்ப்பாசனத்தை அடிப்படையாகக் கொண்ட வேளாண்மை, 7. இயற்கை வழிபாடு (Animism), மூதாதையர் வழிபாடு, நில வழிபாடு, 8. மலையுச்சியில் கோவில்கள் கட்டுதல், 9. பெரிய மண்பானைகளில் வைத்து இறந்தவர்களைப் புதைத்தல், புதைத்த இடத்தில் குத்துக் கல்லறைகள் கட்டுதல் (Dolmens) 10. மலைகள்-கடல்கள், பறப்பன-நீந்துவன, மலைவாழ் மக்கள்-கடலோர மக்கள்-போன்ற இயற்கை மாறுபாடுகளைத் தெய்வ நியதியாக ஏற்று வழிபடுதல்-ஆகியவையாம். நுண்கலைகளைப் பற்றிக் குறிப்பிடும்போது பொம்மலாட்டம் (Wayang-Puppet Shadow Theatre), இசைக் குழு (Orchestra-Gamelan), துணிகளில் சித்திர வேலைப்பாடு (Batik Work) ஆகிய இம் மூன்று துறைகளிலும் தென்கிழக்காசிய மக்கள் சிறந்து விளங்கினர் எனவும் குறிப்பிடு கின்றார்.

மாறுபட்ட சமயங்கள், பண்பாடுகள், மொழியினங்கள், தென்கிழக்காசியாவில் நுழைந்து, பல நூற்றுண்டுகளாக மக்க ளிடையே பரவியிருந்தாலும், அந் நாட்டு மக்கள் தங்களின் பழமையான பண்பாட்டியல்புகளை மறக்காமல் போற்றிக்காத்து வருகின்றனர் என்பது பெருவியப்பிற்குரியதாகும். இதன் முக்கிய காரணம் வருகின்ற சமய, பண்பாடுகளைத் தங்களுக்கேற்ற வகையில் மாற்றி, ஏற்றுக்கொள்ளுகின்ற தனித்திறமை அம் மக்களிடம் இயல்பாகவே காணப்படுவதாகும்.

மொழியால், சமயத்தால், பண்பாடுகளால், அரசியல் நோக்கங்களால் பெரிதும் வேறுபாடு கொண்ட மக்கள், இயற்கையிலே பிரிந்து தனித்து வாழுகின்ற நிலையிலும், தங்களின் உணர்வால் ஒருங்கிணைந்து, அரசியல் தலைமையேற்று, அடிமைநிலை அடைந்த போதும், போராடி, விடுதலைப் பெற்று, முன்னேற்றம் கண்டு, வளர்ந்துவிட்ட உலக நாடுகளிடையே தாங்களும் போராடி, வளர்ந்து, வருகின்றனர் என்பதை வரலாறு உலகிற்கு எடுத்தியம்புகின்றது.

# 2. தென்கிழக்காசிய நாடுகளில் இந்தியப் பண்பாடுகள்

மனித குலம் குரங்கினத்திலிருந்து தோன்றியது என்பது மானிட இயல் அறிஞர்களின் துணிபு. குரங்கினத்திற்கும், மனித இனத்திற்கும் இடைப்பட்ட மனிதன் தென்கிழக்காசிய நாடுகளுள் ஒன்றான ஜாவாவில், வாழ்ந்திருந்ததற்கான சான்றுகள் நமக்குக் கிடைத்துள்ளன. ஜாவாவில் சோலோ நதிப் பள்ளத்தாக்கில் கண்டெடுக்கப்பட்ட மண்டையோடுகள், தாடை எலும்புகள் ஆகியவை 12,000 ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த மனிதனுடையதாக இருக்கலாம் என்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இங்கு மனித இனம் பண்டுதொட்டு வாழ்ந்து வந்திருக்கின்றது என்பது இதனால் அதிகார பூர்வமாக நிரூபிக்கப் பட்டிருக்கின்றது. பழங்கற்காலம், புதிய கற்காலம், உலோக காலம் என மனித வரலாற்றின் ஆரம்ப காலத்தில் வாழ்ந்த மனிதனின் நாகரிக முன்னேற்றத்தைக் குறிக்கும் சான்றுகள் தென்கிழக்காசியப் பகுதிகள் அனைத்திலும் விரவிக்கிடக்கின்றன. இச் சான்றுகள், அப் பகுதி மக்களின் ஆரம்ப கால வளர்ச்சியை நமக்குத் தெளிவாக்குகின்றன. மேலும் நில அமைப்பிலும் இப் பகுதி மனித நாகரிகம் தோன்றி வளர்ந்த இரு மாபெரும் நாடுகளுக்கிடையில் அமைந்திருக்கின்றது. மேற்கில் இந்தியாவும், கிழக்கு-வடகிழக்கில் சீனவும், அமைந்திருக்கின்றன. இவ்விரு நாடுகளும் சந்திக்கும் இடமாக தென்கிழக்காசியா பண்டு தொட்டு விளங்கி வருகின்றது. இதனால்தான் தென்கிழக்காசிய நாடுகளின் ஆரம்ப கால வரலாறு, இருபெரும் பண்பாடுகளின் இணைப்பிடமாகவும் தென்படுகின்றது. இப் பண்பாடுகள் தென்கிழக்காசிய நாடுகளில் நுழையு முன்னரே இங்கும் சிறந்ததொரு பண்பாட்டு வளர்ச்சியும் இருந்திருக்கின்றது. இந்திய, சீனப் பண்பாடுகள் நாகரிகமற்ற காட்டுமிராண்டிகள் வாழ்ந்த நாட்டில் நுழைந்து, புதிய நாகரிகத்தைத் தோற்றுவிக்க வில்லையென்றும், மாறாக அப் பகுதிகளில்

ஏற்கெனவே வளர்ந்தோங்கியிருந்த நாகரிகம், இந்திய-சீன நாகரிகங்களின் சிறப்புத் தன்மையைத் தனதாக்கிக் கொண்டு மேலும் சிறப்படைந்தது என்றும் கூறுவர். இந்திய-சீனப் பண் பாடுகள் தென்கிழக்காசிய நாடுகளில் கலந்து, வளர்ந்தபோது இவ்விரு நாகரிகங்களின் தனிச் சிறப்புகள், செல்வாக்குகள் வெளிப்பட ஆரம்பித்தன.

'திரை கடலோடியும் திரவியம் தேடு' என்னும் பழமொழிக் கிணங்க, இந்திய வர்த்தகர்கள் பன்னெடுங்காலமாகவே சிறப்புப் பெற்று விளங்கி வந்திருக்கின்றனர். இந்திய வர்த்தகக் கலங்கள் இந்தியப் பெருங்கடல் முழுவதிலும் மிதந்தன. மேற்கில் அரபு நாடுகள் வழியாக, ரோம, கிரேக்கப் பேரரசுகளுடனும், கிழக்கில் சீனப் பேரரசுடனும் பெரும் வர்த்தகம் செய்துள்ளனர். சீனு விற்குச் செல்லும் வழியில் அமைந்திருக்கின்ற கிழக்கிந்தியத் தீவுகளுடனும், தொடர்பு கொண்டனர். இப் பகுதிகளிலிருந்து தங்கமும், வெள்ளியும், வெள்ளீயமும் ஏராளமாக இந்தியாவிற்குக் கொண்டுவரப்பட்டது. இந் நாடுகளைக் கடந்து சீனுவை அடைந்து பட்டு, பீங்கான் பொருள்களை ஏராளமான அளவில் இறக்குமதி செய்துள்ளனர். இவ் வர்த்தகத் தொடர்புகளைப் பின்பற்றி இந்து மதமும், பின்னர் புத்த மதமும் தென்கிழக்காசிய நாடுகளுக்குச் சென்றன. பர்மா, தாய்லாந்து, இந்தோ-சீன நாடுகள், சீனு, ஜப்பான் ஆகிய நாடுகளில் புத்த மதம் நிலைபெற்றிருப்பதை இன்றும் காணலாம். இந்து சமயத்தின் கொள்கைகள் தெளிவாக வரையறுக்கப் பட்டிருக்கவில்லையெனினும், அது வாழ்க்கை நெறியாக, மனிதனை நல்வழி நடத்தும் நெறி முறையாக (A way of life, rather than an Organised religion Hinduism...) இன்றும் தென்கிழக்காசிய நாடுகளின் பண்பாட்டில் இடம் பெற்றிருப்பதை வரலாறு நமக்குத் தெளிவுபடுத்துகின்றது.

தென்கிழக்காசிய நாடுகளுடன் இந்தியர்கள் தொடர்பு கொண்டதற்கு அடிப்படைக் காரணம் வர்த்தகமாகும். நறுமணப் பொருள்கள், தேக்கு மரம், தங்கம், வெள்ளி, வெள்ளீயம், தகரம் ஆகிய பொருள்களுக்காகவே இந்தியர்கள் தென்கிழக்காசியப் பகுதி களுக்குச் சென்றனர். சீனத்துப் பட்டும், சித்திர வேலைப்பாடு களில் சிறந்த பீங்கானும், ஏனைய பொருள்களும் இந்திய வர்த்தகர்களைச் சீனுவிற்கும் அழைத்தன. முதலாம் இராசேந்திர சோழப் பேரரசரும், பல்லவ மன்னன் இராசசிம்மனும் சீனப் பேரரசுடன் தொடர்பு கொண்டிருந்தனர் என்பதற்குச் சான்றுகள் உள்ளன. இத் தொடர்புகளுக்கெல்லாம் வர்த்தகமே காரணமாய் உள்ளது. யுவனர்களுடனும், தென்கிழக்காசியாவுடனும் தென்

விந்தியர்கள் மிகவும் தொடர்பு கொண்டிருந்தனர் என்பதை வரலாற்றேடுகள் தெளிவாக்குகின்றன. இவ் வர்த்தகர்கள் சென்ற விடமெங்கணும் மக்களோடு தொடர்பு கொண்டிருந்திருக்கின் றனர். ஆங்காங்கே துறைமுகப் பட்டினங்களில் தங்கி வாழ்ந்து வந்திருக்கின்றனர். வர்த்தகத் தொடர்போடு, பண்பாட்டுத் தொடர்பையும் ஏற்படுத்தியவர்கள் இவ் வணிக்க் கூட்டத்தினரே யாம். இந்து சமயத்துடன், இந்தியாவில் தோன்றி வளர்ந்திருந்த புத்த மதமும் இவ் வர்த்தகத் தொடர்பு மூலமாகவே தென்கிழக் காசிய நாடுகளில் பரவியிருக்கின்றது.

## இந்தியத் தொடர்பை வலியுறுத்துகின்ற சான்றுகள்

**இலக்கியச் சான்றுகள்**

கி.பி. முதலாம் நூற்றுண்டில் தென்கிழக்காசியப் பகுதிகளில் 'இந்தியக் குடியிருப்புகள்' (Indain Settlements) ஏற்படுத்தியிருந் தமைக்கு ஆதாரங்கள் உள்ளன. இராமாயணத்திலேயே கூடத் தென்கிழக்காசியக் காடுகளைப் பற்றிய குறிப்புகள் காணப்படு கின்றன. (இராமாயணம் கி. மு. ஆறும் நூற்றுண்டில் இயற்றப் பட்டதாகக் கருதப்படுகிறது.) சுவர்ண தீப்பா (Swarna dvipa) யவ தீப்பா (Yava Dvipa) என்ற இரண்டு இடங்கள் இராமாயணத் தில் குறிப்பிடப்படுகின்றன. 'தீப்பா' என்றால் மூன்று பக்கங் களிலும் கடலால் சூழப்பட்ட 'தீபகற்பம்' அல்லது 'தீவு' என்று பொருள். 'சுவர்ண' என்பது தங்கத்தைக் குறிப்பிடும். 'யவா' என்ற சொல் 'பார்லி'யைக் குறிக்கும். இவைகள் வடமொழிச் சொற்கள். வாயு புராணத்தில் மேலும் இரண்டு இடங்கள் குறிப்பிடப்படுகின்றன. 'மலேய தீப்பா' (Malaya-Dvipa) 'யவ தீப்பா' (Yava Divpa) என்ற இடங்கள் குறிப்பிடப்படுகின்றன. இப் பெயர்கள் குறிப்பிடுகின்ற இடங்களைச் சரியாகக் குறிப்பிட முடியவில்லையெனினும், இப் பெயர்கள் தென்கிழக்காசியப் பகுதி களைக் குறிப்பிடுகின்றன என்பதை மட்டும் கூறமுடியும். ஏனெனில் கீழ் பர்மாவும், மலேயாவும் 'தங்க நாடு' (Land of Gold) என்றே இந்திய வர்த்தகர்களால் குறிப்பிடப்பட்டிருக்கின்றது. கி.மு. மூன்றும் நூற்றுண்டில் வாழ்ந்த மாமன்னர் அசோகனும் 'சுவர்ண பூமிக்கு' (Swarna bhumi) புத்த சமயப் பரப்பாளர்களை அனுப்பி யிருக்கின்றார். இது கீழ் பர்மாவைக் குறிக்கின்றது என்பது வரலாற்றாசிரியர்களின் முடிவு. மாமன்னர் அசோகன் தனது புத்த சமய பரப்பூழியர்களை 'சுவர்ண பூமிக்கு' அனுப்பியதிலிருந்து அந் நாட்டிற்கும் இந்தியாவிற்கும் மிக நெருங்கியத் தொடர்பு இருந்திருக்கின்றது என்பது தெளிவாகின்றது. 'சுவர்ண பூமி', யவ தீப்பா அல்லது பார்லி விளையும் பகுதி எனக் குறிப்பிடப்

படுவதிலிருந்து, அந் நாடுகளில் பெருமளவில் கிடைக்கும் வர்த்தகப் பொருள்களைக் கொண்டே அந் நாடுகளை இந்தியர்கள் குறிப்பிட்டனர் என்பதிலிருந்து, வர்த்தகத் தொடர்பின் சிறப்புத் தன்மை விளங்குகின்றது.

அந்நிய அறிஞர்களின் குறிப்புகள்

கிரேக்க ரோமப் பேரறிஞரான டாலமி என்ற புவியியல் வல்லுநர் வரைந்த உலகவரை படத்தில் தென்கிழக்காசியப் பகுதிகள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. அவரது காலம் கி.பி. 150 அல்லது அதற்குச் சற்று முற்பட்ட காலம் எனக் கணக்கிடப்படுகிறது. அவர் வரைந்த உலகப் படத்தில் மலேயாவும் மிகத்தெளிவாக, இப்போது உலகப் படத்தில் காணப்படுகின்ற அதே மாதிரியில் வரையப்பட்டிருந்தது. இப் பகுதியை, 'தங்க செர்சானிஸ்' (Golden chersonese) அதாவது 'தங்கத் தீபகற்பம்' எனக் குறிப்பிடுகின்றார். இதுவும், இராமாயணத்தில் குறிப்பிடப்பட்டுள்ள 'சுவர்ண தீப்பா' என்பதும் ஒன்றே எனக் கருதுகின்றனர். டாலமியும் தென்கிழக்காசியத் தீவுகளிலொன்றை 'இபாதியோ' அல்லது பார்லித் தீவு' (Ibadiobu or Island of Barley) என்றும் குறிப்பிடுகின்றார். வடமொழியில் குறிப்பிடப்பட்டுள்ள 'யவ தீப்பா' என்றாலும் 'பார்லித் தீவுகள்' என்றே பொருள், 'பார்லித் தீவுகள்' என்பது 'சுமாத்ரா'-'ஜாவா' (Sumatra-Java) தீவுகளைக் குறிக்குமென்று முதலிலும், பின்னர் இச் சொல் போர்னியோவைக் குறிக்கும் என்றும் கருதினர். டாலமி குறிப்பிட்டுள்ள இடங்கள் அனைத்தையும் தெளிவாக அறியவில்லையெனினும், தென்கிழக்காசியப் பகுதிகளை ஒருவாறு விளக்கமாகவே அறிந்துகொள்ள ஏதுவாகிறது.

சீன வரலாற்றுக் குறிப்பேடுகளும் (Chinese Annals) தென்கிழக்காசிய-இந்திய வர்த்தகத் தொடர்பை கோடிட்டுக் காட்டுகின்றன. கி.பி. முதலாம் நூற்றாண்டில் ஏற்படுத்தப்பட்டுச் சிறந்து விளங்கிய 'இந்திய வழி அரசுகளான' (Indianised States) புனன் (Funan—Thailand) 'சாம்பா' (Champa—Cambodia) 'லாங்கசுகா' (Langasuka—North Malaya) போன்ற அரசுகளைப் பற்றியும், அவைகளின் அரசியல், பண்பாட்டு, நுண்கலை, சமய, சமூக அமைப்புகளைப் பற்றியும் குறிப்பிட்டிருக்கின்றன.

தென்கிழக்காசியப் பகுதிகளில் கண்டெடுக்கப்பட்ட பழங்காலச் சிற்பங்களும் இந்தியத் தொடர்பை வலியுறுத்துகின்றன. தென்னிந்தியாவில் கிருஷ்ணா நதிக்கரையில் அமைந்திருந்த அமராவதி நகரில் உருவாக்கப்பட்ட புத்தர் சிலைகளைப் போல

அமைப்புள்ள புத்தர் சிலைகள் ஏராளமாகத் தென்கிழக்காசியப் பகுதிகளில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. (அமராவதி நகரில் உருவாக்கப்பட்ட புத்தர் சிலைகள் மடிப்புகள் பல கொண்ட ஆடைகளைக் கொண்டிருக்கும் (The Buddha Statue with many Folded Dress). அதேபோல தென்கிழக்காசிய நாடுகளில் காணப்படு கின்ற கல்வெட்டுகளும் இந்தியத் தொடர்பை வலியுறுத்து கின்றன. சைவசமயம் இப் பகுதிகளில் சிறந்து விளங்கியதை இக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. மேலும் இக் கல்வெட்டு களில் பயன்படுத்தப்பட்ட மொழியும் வடமொழியாகும். அதுவும் தென்னிந்தியாவில் பல்லவர்கள் காலத்தில் மேன்மையுற்றிருந்த 'கிரந்த' எழுத்துகளாகும் (Grantha Scripts). இம் மாதிரிக் கல்வெட்டுகள் சாம்பா, மலேயா, பர்மா, போர்னியோ, ஜாவா, ஆகிய பகுதிகளில் நிறையக் கிடைக்கின்றன. இதைக்கொண்டு தான் தென்கிழக்காசிய நாடுகளில் ஆதிக்கம் பெற்றிருந்தது தென்னிந்திய அரசுகள்தாம் எனச் சில வரலாற்றறிஞர்கள் குறிப் பிடுகின்றனர். ஆனால் வடநாட்டிலிருப்பதைப் போன்ற புத்தர் சிலைகளும் தென்கிழக்காசியாவெங்கிலும் கிடைப்பதால் இந்திய அரசுகள் அனைத்தும் தொடர்பு கொண்டிருந்தனவென்பது புலனாகும்.

### இந்துப் பண்பாடுகள் பரவுதல் (The Process of Indianisation)

இந்திய-தென்கிழக்காசியத் தொடர்பு மூன்று காரணங்களால் ஏற்பட்டிருக்கக் கூடும் எனக் கருதப்படுகின்றது. இக் கருத்து களும், 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் ஐரோப்பிய வரலாற் றறிஞர்கள் தென்கிழக்காசிய நாடுகளின் பண்டைய வரலாற்றை ஆய்ந்தறிய முற்பட்டபோது வெளியிட்டவைகளே ஆகும். அவர் களின் ஆராய்ச்சியின்படி படையெடுப்பு, குடியேற்றங்கள், வர்த்தகம்-ஆகிய இம் மூன்று காரணங்களால்தான் தென்கிழக் காசியாவில் இந்தியச் செல்வாக்கு வளர்ந்திருக்கின்றது என்பது உணரப்பட்டன. முதலிரண்டு காரணங்களும் போதிய ஆராய்ச்சி களின் பின்னர் மறுக்கப்பட்டன. மூன்றாவது காரணமான வர்த்தகத் தொடர்பு மூலமாகத்தான் இந்தியா, தென்கிழக் காசியவில் அழியா இடம் பெற்றிருக்கின்றது என்பதனைப் பெரும் பான்மையோர் ஏற்றுக்கொண்டனர். வர்த்தகத் தொடர்பு காரணமாகத் தென்கிழக்காசியாவில் நுழைந்த இந்திய சமயம், பண்பாடு, கலைகள் ஆகிய அனைத்தும் அரசவை, மேற்குடிமக்கள் ஆகியவர்களிடமே பெருமதிப்புப் பெற்றிருந்தன.

19ஆம் நூற்றாண்டில் ஐரோப்பிய அறிஞர்கள் செய்த தென் கிழக்காசிய நாடுகளின் பண்டைய வரலாற்றைப் பற்றிய ஆய்வுகள்

சமஸ்கிருத மொழி, இந்து சமயம், பண்பாடு, கலைகள் எந்த அளவுக்கு அந் நாடுகளின் வரலாற்றில் இடம்பெற்றிருக்கின்றன என்பதை இயம்புகின்றன. இந்த ஆராய்ச்சிகளின் விளைவாக தென்கிழக்காசிய நாடுகள் இந்திய பேராதிக்கத்தின்கீழ் இருந்திருக்கவும் கூடும் என்ற முடிவுக்கும் வந்தனர். இக் கருத்துக் களினல் தூண்டடப்பட்ட இந்திய வரலாற்றறிஞர்களும் ஊக்க முடன் செயல்படத் தொடங்கினர். இதன் விளைவாக ஏற்பட்டது தான் 'பெரும் பாரத வரலாற்றுக் குழு'[1] (The Greater India Society-1926) என்ற இந்திய வரலாற்றுக் கழகமாகும். இக் கழகம் இந்திய-தென்கிழக்காசியத் தொடர்புகள் குறித்து விரிவான ஆராய்ச்சிகள் செய்து, 'தென்கிழக்காசிய நாடுகள் பண்டைய இந்திய குடியேற்றங்களே' என்ற கருத்தை வெளியிட்டது. இக் கழகத்தின் கருத்துகளில் பல மறுக்கப்பட்டாலும், தென்கிழக் காசிய நாடுகளின் அரசியல், சமய, சமூக வரலாற்றில் பொதிந்து கிடக்கும் இந்தியப் பண்பாட்டுக் கருத்துகளை யாரும் மறுத் துரைக்கவில்லை. மறுத்துரைக்கவும் இயலாது.

படையெடுப்பின் காரணமாகவும், வேறு பல அரசியல் காரணங்களுக்காகவும் இந்தியர்கள் தென்கிழக்காசிய நாடுகளில் குடியேறி, தங்கள் பண்பாடுகளைப் பரப்பினர்கள் என்ற கருத்து மறுக்கப்படுகின்றது. வர்த்தகத் தொடர்பு மூலமாகவே இந்தியப் பண்பாடு பரவியிருக்கக்கூடும் என்ற கருத்து வரவேற்கப் பட்டுள்ளது. தென்கிழக்காசிய மக்களும் நாவாய் செலுத்துவதில் வல்லமை பெற்றிருந்த போதிலும், இந்திய வர்த்தகர்கள் தங்களது செல்வச் செழிப்பின் காரணமாகத் தென்கிழக்காசிய நாடுகளில் மேன்மை பெற்றனர் எனக் கருதப்படுகின்றது. வர்த்த கத்தின் பொருட்டு கடல் கடந்து சென்றவர்கள் ஒரு சில காலம் தென்கிழக்காசிய கடல்துறை பட்டினங்களில் தங்கி வாழ வேண்டிய சூழ்நிலை ஏற்படுகின்றது. அவ்வாறு தங்கியிருக்கும் போது அந் நாட்டு மக்களுடன் சற்று நெருங்கிய தொடர்பு ஏற்படு கின்றது. செல்வச் செழிப்பின் காரணமாக இந்திய வர்த்த கர்கள் அம் மக்களைத் தங்கள்பால் ஈர்க்கின்றனர். இந்திய வர்த்த கர்களின் மதிப்பும் பெருமையும் உயர்கின்றது. இவ்வாறு மதிப்பில்—வாழ்க்கைத்தரத்தில் உயர்ந்து நின்ற இந்திய வர்த்தகர் களின் சமயமும், வாழ்க்கை நெறிகளும், நடைமுறைகளும் உயர்ந்ததாகத் தோன்றுகின்றன. உயர்ந்து நிற்கின்ற கருத்து களும், பழக்க வழக்கங்களும் மற்றவராலும் விரும்பி ஏற்றுக் கொள்ளப்படுவது உலக இயல்பு. இதைப்போலவே இந்திய முறைகளும் தென்கிழக்காசிய மக்களால் விரும்பி ஏற்றுக் கொள்ளப்பட்டன. வர்த்தகர்களோடு சென்ற இந்து-புத்த

மதங்கள் வேரூன்றித் தழைத்து வளர்ந்தன. புத்த பிட்சுகள் அரசர்களை நாடி, தங்களது கருத்துச் செறிவு மிக்க சொல்லாற்றலால் அவர்களை மயக்கி, மதமாற்றம் செய்வதில் வெற்றி பெற்றனர்; புத்த சங்கத்தையும் தோற்றுவித்தனர். இச் சங்கத்தில் சேர்ந்து பயின்ற தென்கிழக்காசியாவைச் சேர்ந்த புத்த பிட்சுகள் இந்தியாவிற்கு வருகை தந்தனர். புத்தர் பிறந்து வாழ்ந்த மண்ணில் நடப்பதையே புண்ணியமாகக் கருதி இந்தியப் பல்கலைக் கழகங்களில் தங்கிப் பயின்றனர். நாடு முழுவதிலுமிருந்த புத்த சங்கங்களைப் பார்த்தனர். 'நாலந்தா' பல்கலைக் கழகத்தில் ஏராளமான தென்கிழக்காசிய நாடுகளைச் சேர்ந்த புத்த பிட்சுகள் கல்வி பயின்றனர். அவ்வாறு வந்தவர்கள் இந்தியா முழுவதும் பயணம் செய்து இந்தியப் பண்பாடுகளையும், மொழியியல், சிற்பம், ஓவியம், கட்டடம் ஆகிய கலைகளையும் கற்றுச் சென்றனர்.

அதேபோல இந்து சமயமும் தென்கிழக்காசிய மக்களிடையே பேராதரவு பெற்றது. சிறப்பாகப் பிராமணர்கள் தென்கிழக்காசிய அரசவைகளில் சிறப்பிடத்தைப் பெற்றனர். 'அரச குரு' என்ற நிலையில் அரசனின் பக்தியையும், மதிப்பையும் பெற்றுச் சிறந்தனர். இந்து மதத்தின் உயர்ந்த கருத்துகளை கற்றுத்தரும் ஆசானாகவும், அரசனையும், அரசவையையும் புனிதப் படுத்தி உயர்த்தும் 'அரச குருவாகவும்' கல்வி கேள்விகளில் சிறந்த பிராமணர்கள் அமர்த்தப் பெற்றுப் புகழடைந்தனர். வடமொழியும், இலக்கியங்களும் இவர்களால் வளர்க்கப்பட்டன. புத்த மதமும், பிராமண இந்து சமயமும் போட்டியிட்டுக் கொண்டு வளர்ந்தன. தென்கிழக்காசியக் கல்வெட்டுகள் பல வடமொழியிலும், கிரந்த எழுத்துகளிலும் பொறிக்கப் பட்டிருப்பதால் இவர்களின் பணிகளைக் காணலாம். கிரந்த எழுத்துகள் தென்னிந்தியாவில் பல்லவப் பேரரசர்களால் பயன் படுத்தப் பட்டவை என்பது குறிப்பிடத்தக்கதாகும். இரண்டாம், மூன்றாம் நூற்றாண்டுகளில் சோழப் பேரரசும், பின்னர் எட்டாம் நூற்றாண்டு வரை பல்லவப் பேரரசும் தென்னிந்தியாவில் புகழ் பெற்றவை. இவர்களுடைய கடலாதிக்கத்தின் விளைவுதான் தென்கிழக்காசிய நாடுகளில் தென்னிந்திய மொழிகளும், சமயக் கருத்துகளும் பெற்றிருந்த செல்வாக்கு எனலாம். காஞ்சியில் ஏற்படுத்தப்பட்டிருந்த 'புத்தமடம்' உலகப்புகழ் பெற்றது. இந்தப் புத்தமடத்திலிருந்துதான் புத்தமதக் கருத்துகள் கடல் கடந்து சென்றிருக்கக் கூடும். எட்டாம் நூற்றாண்டிற்குப் பின்னர் தென்னிந்தியாவில் பிற்காலச் சோழர்கள் சிறப்படைந்தனர். முதலாம் இராசேந்திரன் காலத்தில் சோழப்பேரரசு தென்கிழக்காசிய நாடுகளையும் உள்ளடக்கியிருந்தது.

**இந்தியத் தொடர்பின் விளைவுகள்**

வர்த்தகத்தின் மூலமாகத்தான் இந்திய-தென்கிழக்காசியத் தொடர்பு ஆரம்பமானது என்ற கருத்து பலராலும் ஏற்றுக் கொள்ளப்படுகிறது. இதன் மூலமாக அரசர்களுக்கிடையேயும் தொடர்புகள் ஏற்பட்டிருக்கக் கூடும். அதிலும் முதலாம் நூற்றுண்டிலிருந்த தென்னிந்திய அரசுகளும், தென்கிழக்காசிய நாட்டு அரசுகளும் நெருங்கிய வர்த்தகத் தொடர்பு கொண்டிருந்தன. அதன் விளைவாக தென்னிந்தியாவிலிருந்த பிராமண மதமும், சைவமும், புத்தமும் தென்கிழக்காசிய நாடுகளுக்குச் சென்றிருக்கின்றன. இதனுல்தான் தென் கிழக்காசியக் கல்வெட்டு களில் தென்னிந்திய எழுத்துகளைக் காணமுடிகின்றது. கற்றறிந்த, சமயத்துறையில் தேர்ச்சி பெற்ற பிராமண குருக்கள் தென்கிழக் காசிய நாடுகளின் அரசவைகளில் வரவேற்கப் பட்டனர். இத் தொடர்பு அரசவை மூலமாக ஏற்பட்ட தொடர்பேயாகும். இந்திய அரசர்களைப் போல ஆடம்பரமாக, இறைவனின் அருளால் மன்னுகி, மக்களுக்கு இறைவனுகவே காட்சியளிக்கின்ற உயர்ந்த நிலையைக் கண்டு மயங்கிய தென்கிழக்காசிய நாட்டு மன்னர்கள் இந்திய சாத்திரங்கள், சடங்குகள், மந்திரங்கள், புராணங்கள், அத்தனையையும் வரவேற்று, இந்திய முறைப்படி, ஆகம விதிகளின்படி முடிசூட்டிக் கொண்டு, தாங்களும் இந்திய மன்னர்களைப் போலவே மக்களுக்கு இறைவனுக (God King) விளங்கவேண்டுமென்ற பேராசையில், இந்தியப் பிராமண குருக்களையும் வரவேற்று ஆதரித்தனர். இதனுல்தான் பிராமண சமயம், கிரந்த எழுத்துகளில் வடமொழி, இந்தியப் பண்பாடு, கலைகள் ஆகிய அனைத்தும் தென்கிழக்காசிய நாடுகளில் பரவின என்றும் கருதப்படுகின்றது.

இத்தகைய இந்தியச் செல்வாக்கு பதின்மூன்றும் நூற்றுண்டு வரை தென்கிழக்காசிய நாடுகளில் நிலைத்திருந்தது. இக் காலத்தில் தென்கிழக்காசிய நாட்டு மக்களிடையே பரவி வந்திருந்த பழக்க வழக்கங்கள் அத்தனையையும் இந்து சமயம் ஏற்றுத் தனதாக்கிக் கொண்டது. அந் நாடுகளில் காணப்பட்டிருந்த பழக்க வழக்கங்கள் அனைத்தும் வேதங்களில் கூறப்பட்டுள்ளவைகளே என்றும் விளக்கப்பட்டது. உதாரணமாக மலைவாழ் கடவுளை வணங்கும் இந்தோனேஷிய பழக்கத்தைப் பற்றி கூறும் போது, கயிலாய மலையில் வாழ்கின்ற சிவபெருமானை வணங்குகின்ற பழக்கமே அது என்றும், சிவபெருமானின் திருவுருவமே மன்னன் என்றும் கூறி, அப் பழக்கத்தையும் இந்துமதக் கருத்தாகவே ஏற்றுக் கொண்டனர். வடமொழிக் காப்பியங்களான இராமாயணம் மகாபாரதம் ஆகிய இவைகள் இந்தோனேஷிய மக்களின்

இலக்கிய முன்னேற்றத்திற்கு அடிப்படையாய் விளங்கின. புராணங்களும், ஏனைய இந்து சமய நூல்களும், அவைகளில் கூறப்பட்டிருந்த கருத்துகளும் மக்களின் வாழ்க்கைக்கான அடிப்படைத் தத்துவங்களாகவும், இலக்கியங்களாகவும் ஏற்றுக் கொள்ளப் பட்டன. 'தர்ம சாஸ்திரங்கள்', 'நீதி சாஸ்திரங்கள்,' சிறப்பாக 'மனுதர்ம சாஸ்திரம்' (Manu's Code of Law) சிறப்பிடம் பெற்றன. மன்னனின் மிக்குயர் தன்மையும், ஆட்சித்துறையில் மன்னனின் பொறுப்புகளும் விளக்கமாகக் கூறப்பட்டிருப்பதால், சாணக்கியனின் 'அர்த்த சாஸ்திரமும்' பெருமையுடன் ஏற்றுக்கொள்ளப் பட்டது. மருத்துவம், சட்டம், ஆட்சித்துறை ஆகியவைகளைக் குறிக்கும் வடமொழிச் சொற்கள் அப்படியே ஏற்றுக்கொள்ளப்பட்டன. இந்துக் கடவுளர்களின் பெயர்களையே மன்னர்களும் சூட்டிக்கொண்டு புகழடைந்தனர். பொதுவாகக் கூறுமிடத்து, இந்திய முறை இலக்கியம், சமயம், சடங்குகள், அரசியல் ஆகியவை சமுதாயத்தின் மேற்குடி மக்களால் மட்டுமே ஏற்றுக்கொள்ளப்பட்டன என்பது தெளிவு.

தென்கிழக்காசிய நாடுகளில் சிற்பம்-கட்டடக்கலை இந்தியக் கட்டடக்கலைகளையே ஒத்திருக்கின்றது. இப் பகுதியெங்கணும் விரவிக் கிடக்கின்ற கோவில்களனைத்தும் தென்னிந்தியப் பாணியிலேயே கட்டப்பட்டிருக்கின்றன. உயர்ந்த கோபுரங்களும், சித்திர, சிற்ப வேலைப்பாடுகளும் தென்னிந்திய முறைப்படியே அமைந்திருக்கின்றன. ஆனால், கட்டடங்களைச் சற்று ஊன்றிக் கவனிக்கும் போது அக் கட்டடங்கள் இந்தியப் பாணியில் இருப்பினும், அவைகள் தென்கிழக்காசிய முறைகளையும் கொண்டிருப்பது தெளிவாகும். இந்தியாவிற்கு வந்து, புத்த மடங்களிலும், வேறுபல கல்வி நிலையங்களிலும் கற்றுத் தேறி, இந்தியாவெங்கும் பயணம் செய்து திரும்பிய தென்கிழக்காசிய மக்கள் இந்தியச் 'சிற்பசாஸ்திரத்தையும்' (கட்டடக்கலை நுணுக்கங்கள்) கற்றுச் சென்றனர். இந்தியச் 'சிற்ப சாஸ்திர' முறைகளோடு அவர்களின் கருத்துக்கேற்ற ஒருசில மாற்றங்களையும் புனைந்து, இணைத்து உருவாக்கியிருந்தனர். அதேபோல இந்தியப் பிராமண சமயக் கருத்துகள் அனைத்தையும் அப்படியே ஏற்றுக் கொண்டு விட்டனர் என்றும் கூற முடியாது. இந்திய சமுதாய அடிப்படையின் சாபக்கேடாக விளங்கும் சாதிப்பிரிவினையை தென்கிழக்காசிய நாட்டினர் ஏற்றுக் கொள்ளவில்லை. கைம்பெண்கள் தீக்குளிக்கும் பழக்கமான 'சதி' அல்லது 'உடன்கட்டை யேறுதல்' என்ற மிகக் கொடிய வழக்கத்தினையும் மற்றும் மந்திரங்கள், மாயாஜால வித்தைகள் ஆகியவைகளையும் ஏற்றுக் கொள்ள மறுத்தனர்.

இந்திய பிராமண சமயமும், புத்த மதமும், தென்கிழக்காசிய நாடுகளில் செல்வாக்குப் பெற்றிருந்த போதிலும், இந்து மதம் படிப்படியாக மதிப்பிழந்து மறைந்தது. பர்மா, சயாம் (அல்லது) தாய்லாந்து, கம்போடியா, லாவோஸ், வியட்நாம் பகுதிகளில் புத்த மதம் வேரூன்றி வளர்ந்திருக்கின்றது. மலேயா, இந்தோனேஷியப் பகுதிகளிலிருந்தும் இந்து மதம் மறைந்தது. இப் பகுதிகளில் இஸ்லாமிய சமயம் ஆதிக்கம் பெற்றது.




பண்டைய நாடுகள் : கி.பி. முதல் ஐந்து நூற்றாண்டுகள்

இருப்பினும் பர்மா, சயாமில் ஒருசில பகுதிகளிலும், இந்தோனேஷியாவில் பாலித் தீவிலும் இன்றும் இந்து சமயம் நிலைபெற்று நிற்கின்றது. எனினும் தென்கிழக்காசிய மக்களின் வாழ்க்கை அமைப்பு நெறியில், இந்திய கருத்துக் கலப்பு நிலவி வருவதை இலக்கியங்கள், நாட்டுப் பாடல்கள், கடவுள் கொள்கைகள் ஆகியவைகளில் காணமுடியும்.

### தென்கிழக்காசிய நாடுகளில் இந்து அரசு முறைகள் (Indianised States of South East Asia)

தென்கிழக்காசிய நாடுகளில் இந்தியத் தொடர்பின் மேன்மையை அறியும் வகையில் மிகவும் சுருக்கமாக இந்திய முறையில் எழுந்த சில தென்கிழக்காசிய 'அரசுகளைப்' பற்றிச் சுருக்கமாக அறிந்து கொள்ளுதல் அவசியமாகிறது.

### புனன் அரசு (Kingdom of Funan)

சீன வரலாற்றுக் குறிப்பேடுகளின்படி புனன் அரசு கி.பி. முதலாம் நூற்றுண்டில் தொடங்கியது. கௌண்டின்யா என்ற பிராமண இளவரசன் (Kaundinya-a Brahman) தென்னிந்தியா விலிருந்து புனனை அடைந்ததாகவும், அங்கு 'வில்லோ லீவ்' (Willow Leaf) என்ற இளவரசி அவனை எதிர்த்ததாகவும் அவளை, வென்று நாட்டைக் கைப்பற்றிய பின்னர் அவளையே மணந்து கொண்டதாகவும், இவர்களுக்குப் பின்னர் இவர்களின் சந்ததி யினர் புனனை ஆண்டனர் என்றும் சீன வரலாற்றுக் குறிப்பேடுகள் கூறுகின்றன. மேலும், கௌண்டின்யா புனனை அடைந்தபோது, அவனை எதிர்த்த இளவரசி ஆடையேதும் அணிந்திருக்கவில்லை யென்றும், அவளை வென்ற பின்னர், கௌண்டின்யாதான் அவளுக்கு ஆடையைக் கொடுத்து அணியச் செய்தான் என்றும், தலையில் 'கொண்டை போடுகின்ற' முறையையும் கற்றுக் கொடுத்தான் என்றும் குறிப்பிடுகின்றன.

எதிர்ப்பின்றி இந்தியர்கள் புனனில் நுழையவில்லை என்பதும், தங்களுடைய படை வலிமையாலும், உயர்ந்த பண்பாடுகளாலும் தான் புனனை வென்று அடிமைப்படுத்த முடிந்தது என்பதும் புலனுகின்றன. புனனை ஆண்டவர்கள் 'நாகர்' (Nagas) பரம்பரையைச் சேர்ந்தவர்களென்றும், கௌண்டின்யா வென்று அடிமைப் படுத்தியது நாக அரசியையே என்றும், ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். புனனில் இந்தியர் செல்வாக்குப் பெற்றதிலிருந்து அந்நாட்டு வரலாறும் சிறப்படைகிறது. புனன் நாடு தற்போதுள்ள கம்போடியா, அன்னம் பகுதிகளாகும். 500 ஆண்டுகளுக்கும் அதிகமாக இப் பகுதியை இந்திய அரச குலத்தினர் ஆண்டனர். இந்தோ-சீனு முழுவதிலும், அதையடுத்துள்ள பகுதிகளிலும் இந்தியப் பண்பாடு பரவுவதற்கு இவ்வரசு வழிகோலியது.

கி. பி. ஐந்தாம் நூற்றுண்டில் புனன் அரசு மிகவும் சிறப்புற்ற நிலையை அடைந்தது. உயர்ந்த மலைகளின்மீது கோவில்களைக் கட்டுவதும், 'மலை மன்னர்கள்' என (Kings of Mountains) தெய்வத்திற்கிணையாக அரசர்களைக் கருதும் வழக்கமும் தோன்

றியது. கி. பி. ஆரும் நூற்ருண்டில் சென்-லா (Chen La) என்ற கூட்டத்தினரால் புனன் இந்திய அரசு அழிக்கப்பட்டது. புனனுக்குப் பின்னர் 'கமர் அரசு' (Khmer Kingdom) தோற்றுவிக்கப்பட்டது.

'கமர் அரசு' (Khmer Kingdom)

புனனின் அழிவுக்குக் காரணமாக இருந்த 'கமர் அரசு' கி.பி. 802 ஆம் ஆண்டு வரை இந்திய முறைகளை அப்படியே ஏற்றுக்கொண்டிருந்தது. புத்த மதம் செல்வாக்குப் பெற்றிருந்த போதும், இந்து சமயமும், சிறப்பாகச் 'சிவ' வழிபாடும் அரசின் ஆதரவைப் பெற்றிருந்தது.

802ஆம் ஆண்டில் இரண்டாம் ஜெயவர்மன் (Jayavarman II) என்பவர் 'ஆங்கர் அரச குலத்தை' (Angkor Dynasty) நிறுவிக் கம்போடியா முழுவதையும் இணைத்துப் பேரரசாக உருவாக்கினர். இவருக்கும் ஜாவாவை ஆண்ட சைலேந்திர அரச குலத்தினருக்கும் (Sailandras of Java) தொடர்பிருந்திருக்கின்றது. இரண்டாம் ஜெயவர்மன் நிறுவிய நகரான 'ஆங்கர்' (Angkor) அமைப்பிலேயே இந்து சமயத் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டிருந்தது எனக் கூறுவர். பிராமண சமயமும், புத்தமதமும் சிறப்புப் பெற்றிருந்தன. 12ஆம் நூற்ருண்டின் இறுதிவரை பிராமண சமயம் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தது. சிவ வழிபாடு மேற்கொள்ளப்பட்டது. சிவபெருமானின் திருவருளால் அரசப் பதவியைப் பெற்றவர்கள் இவ்வரச குலத்தினர் என்ற கருத்தும் நிலவி வருகின்றது. இதனை வலியுறுத்தும் வகையில் தமது தலைநகரான ஆங்கர் நகரின் மையத்தில் செயற்கை மலையொன்றினை உருவாக்கி, அதில் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து வணங்கி வந்தனர். இந்த அரசர்கள், இறந்த பின்னர் சிவனோடு இரண்டறக் கலந்து விடுகிருர்கள் என்ற ஐதீகமும் நிலவி வருகின்றது. 'கமர்' அரசர்களும் வழிபடும் தெய்வங்களாகவே மக்களால் கருதப்பட்டனர். இறந்த மன்னர்களின் உருவத்தைக் கருங்கல்லில் சிலையாக வடித்து வணங்கும் வழக்கம் இருந்தது. இத்தகைய கருங்கல் சிலைகள் ஏராளமாகக் காணப்படுகின்றன. இந்திய சமயத் தத்துவமான 'மன்னன் இறைவனின் நிழலே' என்ற கருத்து கமர் அரச குலத்தினரால் பின்பற்றப்பட்டது என்பது இதனுல் தெளிவாகின்றது.

இரண்டாம் சூரிய வர்மன் (King Suryavarman II) என்பவரால் உருவாக்கப்பட்டதுதான் 'ஆங்கர் வாட்' (Angkor Wat) என்ற உலகப் புகழ் பெற்ற திருக்கோயில். இது ஒரு வைணவக் கோவில்,

இக் கோவிலில் உறையும் இறைவனின் திருவுருவம் சூரியவர்மனின் உருவமே என்றும் கருதப்படுகின்றது. பன்னிரண்டாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் கட்டி முடிக்கப் பெற்ற இக் கோவிலின் சிறப்புக்கு இணையாகக் கூற வேண்டுமானால் ஜாவாவிலுள்ள போராபுதூரில் இருக்கும் சைலேந்திர அரசர்களின் மலைக்கோவில் (Sailendra-Mountain Temple of Borobadur in Java) ஒன்றைத் தான் கூறமுடியும். இந்தியக் கட்டடக் கலையின் சிறப்பிற்கு இக் கோவில்கள் இரண்டையுமே எடுத்துக்காட்டாகக் கூறலாம். 'கமர் அரசின்' கடைசிச் சிறப்புமிக்க அரசன் ஏழாம் ஜெயவர்மன் என்றும் அவரது மறைவிற்குப் பின்னர் 'கமர் அரசும்' அழிந்து பட்டதென்றும் குறிப்பிடுவர் (13ஆம் நூற்றாண்டின் இறுதி).

### பர்மா

சுவர்ணபூமி என்றழைக்கப்பட்ட கீழ் பர்மாவில் 'கமர்' இனத்தைச் சேர்ந்த 'மான்' (Mons of Lower Burma) என்ற இனத்தவர் வாழ்ந்தனர். அசோகர் கீழை நாடுகளுக்கு அனுப்பிய தூது குழு இந்த 'மான் இனத்தவரிடம்' புத்த சமயத்தைப் பரப்பியது. எட்டாம் நூற்றாண்டில் வடக்கிலிருந்து வந்த பர்மியர்கள் தெற்கிலிருந்த 'மான்' இனத்தவரை விரட்டி அடிபணியச் செய்து பர்மிய அரசைத் தோற்றுவித்தனர். பாகன் (Pagen) என்ற நகர் பர்மியரின் தலைநகராக்கப்பட்டது. பர்மிய அரசர்களில் மிகவும் சிறப்புப் பெற்றவர் அனுரதா (Anauratha 1044-1077) என்பவராவர். பர்மியர்கள் 'மான்' இனத்தவரை வெல்லுவதற்கு முன்னரே புத்த சமயத்தைத் தழுவியிருந்தனர் என்றாலும், 'மான்' இனத்தைச் சேர்ந்த புத்த பிட்சு ஒருவர்தான் அனுரதாவை புத்த சமயத்திற்கு மாற்றியவர் என்று ஒரு வரலாற்றுக் குறிப்பேடு தெரிவிக்கின்றது. பாகன் நகரைத் தலைநகராகக் கொண்ட பர்மிய அரசர்கள் 1287 வரை ஆண்டனர். பண்டைய பர்மிய வரலாற்றில் இவ்வரசர்கள் காலம்தான் மிகவும் சிறப்பு வாய்ந்த காலமாகும்.

### ஸ்ரீ விஜயப் பேரரசு (Sri Vijaya of Sumatra)

கி. பி. ஏழாம் நூற்றாண்டில் சுமாத்ராவின் தென் பகுதியில் பாலம்பாங் (Palembang) என்ற நகரைத் தலைநகராகக் கொண்டு ஸ்ரீ விஜய அரசு ஏற்படுத்தப்பட்டது. இவ்வரசின் தோற்றம், வளர்ச்சி ஆகியவைகளைப் பற்றிய செய்திகளைக் கூறுவது சீன வரலாற்றுக் குறிப்பேடுகளே[1] ஸ்ரீ விஜயத்தைப் பற்றிய வர

1. "In the Chinese Annals-a reference to a midfifth century state. Kan-To-Li-which they say was later named San-Fo-Tel, a Chinese equivalent to Sri Vijaya." South East Asia—B. Harizon. p. 24.

லாறு, வர்த்தகம், சமயம் ஆகியவைகளைப் பற்றி இட்சிங் (I-Tsing) என்ற சீனப் பயணி எழுதிச் சென்ற பயணக் கட்டுரைகளிலும் விளக்கமாகக் காணப்படுகின்றது. மகாயான புத்த மதம் ஶ்ரீவிஜயத்தில் பரவியிருந்ததைப் பற்றிய குறிப்புகளும் அவரது நூலில் காணப்படுகின்றன.




சைலேந்திரர் காலத்து மைய-கிழக்கு ஜாவா

ஜாவாவிலும் மகாயான புத்த மதம் பரவியது. ஜாவாவின் நடுப்பகுதியில் ஏழாம் நூற்றுண்டில் சைலேந்திர (Sailandras) அரசு தோற்றுவிக்கப்பட்டது. இவ்வரசின் தோற்றத்தைப் பற்றி மாறுபட்ட கருத்துகள் நிலவி வருகின்றன. இந்தியாவின் கிழக்கு கரைப் பகுதியிலிருக்கும் கலிங்க நாட்டிலிருந்து வெளியேறிய

வர்கள் 'ஹோ-லிங் (Ho-Ling an equivalent of Kalniga) என்ற நாட்டை உருவாக்கியதாகவும், அதில் புத்தமதம் சிறப்புற்று விளங்கியதாகவும் கருதப்படுகிறது. 'சஞ்ஜயா' என்ற அரசன் (King Sanjaya) மைய ஜாவாவில் சைலேந்திர அரசைத் தோற்று வித்தான் என்றும், அவன் சிவ வழிபாட்டை மேற்கொண்டு, பிராமண சமயத்திற்கு ஆதரவளித்தானென்றும் மற்ருெரு கருத்து நிலவி வருகின்றது. எட்டாம் நூற்ருண்டில் வாழ்ந்த கஜாயனு (Gajayana) என்ற அரசன் அகத்திய மாமுனிவருக்குக் கோவில் ஒன்று கட்டுவித்ததாகவும், கீழை ஜாவாவிலுள்ள வடமொழிக் கல்வெட்டு ஒன்று அறிவிக்கின்றது.

கி.பி. எட்டாம் நூற்ருண்டின் இறுதியில் சைலேந்திர அரசு நிலைநிறுத்தப்பட்டது. 'பணங்காரன்' என்பவர் சைலேந்திரப் பேரரசராக விளங்கினுர் (Emperor Panangaran). இவ்வரசன் காலத்தில் புத்த மதம் மீண்டும் சிறப்பிடத்தைப் பெற்றது. இவர் மலேயாத் தீபகற்பத்தை வென்று, கம்போடியாக் கடற்கரையில் தமது ஆதிக்கத்தை நிலைநாட்ட முயன்ருர். இவர் காலத்தில்தான் சைலேந்திரப் பேரரசு தெற்கு நோக்கி விரிவடையத் தொடங் கியது. சுமாத்ராவிலிருந்த ஸ்ரீவிஜய அரச குலத்துடன் திருமண உறவையும் பேரரசர் பணங்காரன் ஏற்படுத்திக் கொண்டார். இதனுல் சைலேந்திர-ஸ்ரீவிஜய அரசகுலங்கள் இணைந்தன. சைலேந்திரர்கள் ஸ்ரீவிஜயத்தின் பேரரசர்கள் என்று அறிவிக்கப் பட்டனர். சைலேந்திர அரசின் தலைநகரமும் ஜாவாவிலிருந்து தென் சுமாத்ராவிற்கு மாற்றப்பட்டது. ஜாவாவிலிருந்த சைலேந்திர அரசு, சுமாத்ராவிலிருந்த ஸ்ரீவிஜய அரசுடன் இணைந்து, தனது தலைநகரையும் மாற்றிக் கொண்ட பின்னர், ஜாவாவில் மீண்டும் பிராமண சமயம் புத்துயிர் பெற்றது. இந்துக் கோவில்கள் கட்டப்பட்டன. பிராமண சமயம் புத்துயிர் பெற்றுவிட்டபோதிலும், புத்த மதமும் ஜாவாவில் விளங்கியது. இவ்விரு சமயங்களையும் ஏற்றுக்கொண்டு பெருமை பெற்ற ஜாவா மக்கள் 'சிவ-புத்தா' என்ற புதிய தத்துவத்தையே கூட உருவாக்கி விட்டனர்.

ஜாவாவில் பிராமண சமயத்தின் வளர்ச்சியும், சிவ வழிபாட்டின் உயர்வும் 'மடாரம்' (Mataram) என்ற புதிய அரசு தோன்றக் காரணமாய் இருந்தது. இருப்பினும் இந்த மடாரம் அரசு ஸ்ரீவிஜய அரசினுல் தோற்கடிக்கப்பட்டது (1006). மடாரத் தின் தலைநகர் கைப்பற்றப்பட்டது. மலேயா, ஜாவா, சுமாத்ரா என்ற இப் பகுதிகளின் பேரரசன் என்பதைக் குறிப்பிடும் வகையில் ஸ்ரீவிஜயப் பேரரசர்கள், 'கடாரம்-ஸ்ரீவிஜய அரசன்' என்றழைக்கப் பட்டனர்.

ஸ்ரீவிஜய அரசர்களுக்கும் சோழ மன்னர்களுக்கும் (பிற்காலச் சோழர்கள்) ஆரம்பத்தில் நட்பு இருந்து வந்திருக்கின்றது. தென்னிந்தியாவின் கீழைக் கடற்கரையிலுள்ள நாகபட்டினத்தில்




இந்திய வழி அரசுகள்—கி.பி. 7–9ஆம் நூற்றாண்டுகள்

புத்தமடம் கட்டுவதற்கு ஸ்ரீவிஜய அரசர்களுக்கு அனுமதி வழங்கப்பட்டது (Buddhist Temple of Nagapatnam in C. 1005). நாகபட்டினப் புத்த மடத்திற்கு இறையிலி நிலமாக, ஆனைமங்கலம்

என்னும் ஊர் வழங்கப்பட்டது. அஃது 'இராசராசப் பெரும் பள்ளி' என்றும் அழைக்கப்பட்டது. இச் செய்திகள் இவ் விரு அரசுகளுக்கிடையே நிலவிவந்த ஆரம்ப கால நல்லுறவை விளக்கும். இதன் பின்னர் இவ் விரு அரசுகளுக்குமிடையே பிணக்கு ஏற்பட்டது. இதன் காரணம் வர்த்தகத் துறையில் ஏற் பட்ட தகராறுகளாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது. 1025-ல் மிகப் பெரிய சோழக் கடற்படை ஸ்ரீவிஜயத்தின்மீது படையெடுத்து வெற்றி பெற்றிருக்கின்றது. இச் செய்தி தஞ்சா வூர்க் கல்வெட்டுகளில் காணப்படுகின்றது (1030). முதலாம் இராசேந்திர சோழனது நான்காம் ஆட்சிக் கல்வெட்டொன்று (1035-36) அவன் பெற்ற வெற்றிகளைத் தொகுத்துரைக்கின்றது. அக் கல்வெட்டின் ஒரு பகுதியில் கீழ்க் கண்டவாறு பொறிக்கப் பட்டுள்ளது: '......அலைகடல் நடுவில் பல கலம் செலுத்திச் சங்கிராம விசயோத்துங்கவர்மன் ஆகிய கடாரத்து அரசனை வாகை யம் பொருகடல் கும்பக் கரியொடும் அகப்படுத்து, உரிமையின் பிறக்கிய பகுநிதிப் பிறக்கமும், ஆர்த்தவன் அகநகர்ப் போர்த் தொழில் வாசலில் விச்சாதிரத் தோரணமும், மொய்த்து ஒளிர் புனை மணிப் புதவமும், கனகமணிக் கதவமும், நிறைசீர் விசயமும், துறைநீர்ப் பண்ணையும், வன்மலையூர் எயில் தொல் மலையூரும், ஆழ்கடல் அகழ்சூழ் மாயிருடிங்கமும், கலங்கா வல்வினை இலங்கா சோகமும், காவலம் புரிசை மேவிலம்பங்கமும், விளைப்பந்தூருடை வளைப்பந்தூரும், கலைத்தக்கோர் புகழ் தலைத் தக்கோலமும், தீதமர் வல்வினை மாதமாலிங்கமும், கலாமுதிர் கடுந்திறல் இலாமுரி தேசமும், தேன் நக்குவார் பொழில் மானக்கவாரமும், தொடு கடல் காவல் கடுமுரண் கிடாரமும், மாப்பெருந்தண்டால் கொண்ட......' என இவ்வாறுக இராசேந்திர சோழனின் தென் கிழக்காசிய வெற்றிகளைத் தொகுத்துரைக்கின்றது. இதில் சீர் விசயம் என்ற நாடு சுமாத்ராவிலிருந்த ஸ்ரீவிஜயம் என்ற புகழ் மிக்க நாடாகும். சுமாத்ராவின் கீழைக் கடற்கரையில் பண்ணை என்ற நாடு இருந்தது. மலையூர் என்பது ஸ்ரீவிஜயம் அல்லது பண்ணையாதல் வேண்டும். மாயிருடிங்கம் மலேயாவில் லீகாருக்கு அருகில் இருந்தது. மேவிலம்பங்கமும், வளைப்பந்தூரும் இன்ன இடத்தில் இருந்தனவென்பதை அறிய முடியவில்லை. தலைத் தக்கோலமானது சிரா பூசந்தியின் மேலிருந்த ஒரூராகும். மாத மாலிங்கம் என்ற இடம் மலேயா தீபகற்பத்தில் பண்டன் விரிகுடா வுக்கு அருகில் இருந்ததெனத் தெரிகிறது. இலாமுரி தேசம் வட சுமாத்ராவின் ஒரு பகுதியாகும். மானக்கவாரம் என்பது நிக்கோ- பார் தீவுத் தொகுதியாகும். கிடாரம் என்பது பெனுங்கையடுத்




இடைக்கால அரசுகள்—கி.பி. 9-14ஆம் நூற்றுண்டுகள்

துள்ள கேடா என்னும் இடமாக இருக்கலாம் என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.[1]

தென் கிழக்காசிய நாடுகளில் சோழப் பேரரசின் வெற்றி அதிக காலம் நிலைத்திருக்கவில்லை. சோழர்களின் பிடியிலிருந்து ஒவ்வொரு பகுதியாக விலகிச் சென்றது. பின்னர் 1069-ல் மீண்டும் சோழப் பேரரசு கடாரத்தை வென்று அடிமைப்படுத்தி யிருக்கின்றது.

பதின்மூன்றும் நூற்றுண்டில் ஸ்ரீவிஜயப் பேரரசு வலிமை குன்றிய நிலையை எய்தியது. ஸ்ரீவிஜய அரசின் பல பகுதிகள் பிரிந்து சென்று சுதந்திரமடைந்தன. கீழை ஜாவாவில் சிங்காசாரி (Singhasari) என்ற இடத்தில் புதிய அரசு ஒன்று தோன்றியது. இந்த அரச குலத்தில் தோன்றிய மாபெரும் வீரனுகிய கீர்த்தனு கரா (Kertanagara) என்ற அரசர் ஸ்ரீவிஜயப் பேரரசின் பெரும் பகுதிகளை வென்றதுடன், அவ் வரசைச் சுற்றிலும் தன்னுதிக் கத்தை நிறுவினுர். இவருடைய ஆதிக்கமும் நீண்ட காலம் நீடிக்க வில்லை. கீர்த்தனுகராவிற்கு எதிராகப் புரட்சிகள் தோன்றின. கீர்த்தனுகரா கொல்லப்பட்டார். அவருடைய மகனுன விஜயன் என்பவர் 'மஜாபாஹித்' (Majapahit) என்ற இடத்தைத் தலைநக ராகக் கொண்டு, தமது ஆட்சியைத் தொடங்கினுர். இது மஜா பாஹித் ஆட்சியின் தொடக்கமெனக் கருதப்படுகிறது. மஜா பாஹித் அரசைச் சேர்ந்தவர்கள் ஸ்ரீவிஜயப் பேரரசை அழித்து (1364-65) தங்களது பேரரசை நிலைநாட்டினர். இவ் வரசு வளர்ந்து, மலேயா, சுமாத்ரா, போர்னியோ, மொலுக்கஸ், செலிபஸ் ஆகிய பகுதிகள் அனைத்தையும் வென்று, மிகப் பெரிய பேரரசாக உருவெடுத்தது.

ஆனுல், கீழை ஜாவாப் பேரரசும் நெடுங்காலம் நீடித்து நிலைத் திருக்க முடியவில்லை. புதிய அரசியல் சக்திகள் தோன்றின. இந்தோசீனு பகுதியிலிருந்த சயாம் அரசு மலேயாவை நோக்கி விரிவடைந்தது. வர்த்தகச் செழிப்பு, தெற்கில் பல நாடுகளுக்குப் புதிய தெம்பை ஊட்டியது. இவைகள் அனைத்தும் மஜாபாஹித் பேரரசை எதிர்த்தன. இவைகள் அனைத்திற்கும் மேலாக புதிய பண்பாடு ஒன்று தென் கிழக்காசியாவில் நுழைந்து வளர ஆரம் பித்தது. அதுதான் இஸ்லாமிய மதம். இம் மதம் விரைவிலேயே மலேயாவிலும், இந்தோனேஷியாவிலும் பரவி, நிலைபெற்றது.

1. தமிழக வரலாறு—மக்களும் பண்பாடும்—டாக்டர் கே. கே. பிள்ளை. பக். 257-59.

# 3. தென்கிழக்காசியாவில் இந்தியப் பண்பாடுகள்

உலகில் நாகரிகம் தோன்றி வளர்ந்த நாடுகளில் இந்தியாவும் ஒன்று. இந்திய நாகரிகச் சிறப்புகள் பல நாடுகளுக்கும் பரவியிருக்கின்றன. கிரேக்க-ரோமப் பேரரசுகள் இந்தியாவோடு தொடர்பு கொண்டிருந்திருக்கின்றன. 'யவனர்கள்' எனப் பொதுவாக வரலாற்றில் குறிப்பிடப்படுகின்ற மேலைநாட்டு வர்த்தகர்கள் இந்தியாவில் துறைமுகப் பட்டினங்களிலும், உள்நாட்டில் இருந்த வர்த்தகத் தலங்களிலும் தங்கி, பெரும் வாணிகம் செய்திருக்கின்றனர். இவ் வர்த்தகத்தைப் பற்றி தென்னிந்திய இலக்கியங்கள், சிறப்பாகத் தமிழ் இலக்கியங்கள் மிகவும் விளக்கமாக உரைக்கின்றன. இந்திய உற்பத்திப் பொருள்கள் உலகின் பல நாடுகளிலும் வரவேற்பைப் பெற்றிருக்கின்றன. இத்தகைய மிகச் சிறந்த பொருள்களை உருவாக்கும் நாடு, அரசியல், சமயப் பண்பாட்டுத் துறைகளிலும் மிக்குயர்வு அடைந்திருந்தது என்பதைத் தனியாகக் குறிப்பிட வேண்டியதில்லை. இந்தியர்கள் மேலை நாடுகளுடன் மட்டுமல்லாது கீழை நாடுகளுடனும் வர்த்தகத் தொடர்புகள் கொண்டிருந்தனர். கிழக்கிந்தியத் தீவுக் கூட்டங்களைக் கடந்து சீனவுடன் வர்த்தகத் தொடர்பு கொண்டிருந்தனர் என்பது வரலாறு குறிப்பிடும் உண்மையாகும்.

கீழை நாடுகளுடன் வர்த்தகத் தொடர்பு கொண்டிருந்த இந்தியர்கள் அந் நாடுகளில் தங்களது சமயம், பண்பாடுகளையும் பரப்பினர். இந்திய சமயமான இந்து மதம் அல்லது பிராமண சமயமும், புத்த மதமும் தென்கிழக்காசிய நாடுகளுக்குக் கொண்டு செல்லப்பட்டன. தென்கிழக்காசிய நாட்டு மக்கள் இந்திய சமயம், பண்பாடுகளை விரும்பியேற்றனர். இந்தியப் பண்பாடுகளை ஏற்றுச் சிறப்படைந்தனர் என்று கூறும்போது, அம் மக்கள் நாகரிகத்தையே அறிந்திராத காட்டுமிராண்டிகள் எனக் கருதி

விடக்கூடாது. ஏனெனில் இந்தியத் தொடர்பு ஏற்படும் முன்னரே தென்கிழக்காசிய நாடுகளில் சிறந்ததொரு பண்பாடு நிலவி வந்திருந்தது என்பதை இக்கால வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் தெளிந்துள்ளனர். எனவே இந்தியப் பண்பாட்டின் உயர்வை, சிறப்புகளை உணர்ந்து, அதனை வரவேற்று, தங்களுடையதாக ஆக்கிக்கொள்ளும் மனப்பக்குவம் பெற்றிருந்தனர் என்பது தெளிவாகிறது. மேலும் தென்கிழக்காசிய நாடுகளுக்குச் சென்ற இந்திய வர்த்தகர்களின் செல்வச் செழிப்பும், பண்பாடுகளும், வளமும், திறமையும் அப் பகுதி மக்களை முதலில் திகைக்கச் செய்து, பின்னர் அத்தகைய செல்வந்தர்களைப் பின்பற்றித் தாங்களும் உயர்ந்து பயனடைய வேண்டும் என்ற ஆர்வத்தையும் தோற்றுவித்திருக்கலாம். எனவே இந்தியப் பண்பாடுகள் தென்கிழக்காசிய நாடுகளில் பரவி வளம் பெறுவதற்கு அடிப்படைக் காரணங்களாக இந்திய வர்த்தகப் பெருமக்களையும், அவர்களைப் பின்பற்றிச் சென்ற பிராமண, புத்தமதத்தைச் சேர்ந்தவர்களின் அறிவாற்றல் மிகுந்த ஊக்கத்தையும், அவர்களுக்கு ஆதரவளித்துப் போற்றிய இந்திய மன்னர்களையும் கூறலாம்.

இந்திய-தென்கிழக்காசிய வர்த்தகத் தொடர்பின் ஆரம்பக் காலத்தைக் குறிப்பிடுவது அவ்வளவு எளிதான செயல் அன்று. ஆனல், தொல்பொருள் ஆராய்ச்சியின் விளைவாக, கி.பி. இரண்டாம் அல்லது மூன்றும் நூற்றுண்டுகளில் இத் தொடர்பு ஏற்பட்டிருக்கலாம் என்பதை வலியுறுத்திக் கூறமுடியும். இதற்கும் முன்னரேகூட வர்த்தகத் தொடர்புகள் இருந்திருக்கலாம் என்பதையும் மறுப்பதற்கில்லை.

பண்பாட்டுத் தொடர்புகள் பொதுவாக மூன்று வகைகளில் ஏற்பட்டிருக்கலாம் என்று கருதப்படுகின்றது. இந்திய இலக்கியங்கள்—அதாவது சாத்திரங்கள், புராணங்கள், இதிகாசங்கள்—இந்தியாவிலிருந்து மலேயாவிற்கும், மற்ற நாடுகளுக்கும் பரவியிருக்கலாம். இந்த நூல்களின் கருத்துகளை அந் நாட்டு மக்கள் விரும்பியேற்றிருக்கலாம். இரண்டாவதாக, இந்திய வணிகர்கள் தென்கிழக்காசியத் துறைமுகப் பட்டினங்களில் வாழ்ந்து, தங்களது செல்வம் கொழிக்கின்ற ஆடம்பர வாழ்க்கையின் மூலமாக அப் பகுதி மக்களை ஈர்த்திருக்கலாம். அச் செல்வ வணிகர்களைப் பின்பற்றி இந்திய சமய நெறியாளர்களும் சென்று, இந்தியப் பண்பாட்டுச் சிறப்பியல்புகளை மக்களிடையே பரப்பி, ஏற்றம் கண்டிருக்கலாம். புனன் அரசில் ஐந்நூறுக்கும் அதிகமான இந்திய வர்த்தகக் குடும்பங்கள் வாழ்ந்திருந்ததாகக் கூறப்படுகிறது. சயாம் நாட்டில் கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டு தமிழ் மொழியில்

எழுதப் பட்டுள்ளது. இக் கல்வெட்டு ஒன்பதாம் நூற்றூண்டைச் சேர்ந்ததாக இருக்கலாம் என்பதும் குறிப்பிடத்தக்கது. (பல்லவ அரசன் மூன்றும் நந்திவர்மன் (826-850) காலத்தைச் சேர்ந்தது எனக் குறிப்பிடப்படுகிறது).

**சமயம்**

இந்தியச் சமயங்கள் தென்கிழக்காசிய மக்களிடையே மிகவும் செல்வாக்குப் பெற்றிருந்தன. இந்தியக் கலைப்பாணியில் உருவாக்கப்பட்ட புத்தரின் சிலைகள் ஜாவா, போர்னியோ, பாலி ஆகிய தீவுகளில் ஏராளமாகக் கிடைக்கின்றன. மாமன்னன் அசோகன் தனது புத்தமத தூதுகுழுக்களை சுவர்ணபூமிக்கு அனுப்பியதற்கான குறிப்புகள் நமக்குக் கிடைத்துள்ளன. மலேயா, தென்கிழக்காசியப் பகுதிகளில் புத்த சமயம் சிறப்புப் பெற்றிருந்திருக்கின்றது. கி.பி. ஏழாம் நூற்றூண்டில் சைவமும், வைணவமும் தென்கிழக்காசிய நாடுகளில் வெற்றிக் கொடி நாட்டியிருக்கின்றன. அகத்தியர் உருவச்சிலைகளும், அவரது கோவில்களும் தென்கிழக்காசிய நாடுகளில் காணப்படுகின்றன. அதே நேரத்தில் சீனுவிலிருந்து இந்தியாவிற்கு வருகைதந்து திரும்பிய பாஹியான், இட்சிங் போன்றவர்கள் தென்கிழக்காசிய நாடுகளில் புத்த மதம் அடைந்திருந்த சிறப்பையும் செல்வாக்கினையும் கூறிப்போந்தனர். இந்தியாவிலிருந்து புத்த மதம் மறைந்து விட்ட போதிலும், தென்கிழக்காசிய நாடுகளிலும், தூரக்கிழக்கு நாடுகளிலும் புத்த மதத்திற்கு இருக்கின்ற செல்வாக்கு அம் மதத்தின் மேன்மையை விளக்கும்.

இந்து சமயத்தின் முப்பெரும் கடவுளர்களான பிரம்மா, சிவன், விஷ்ணு ஆகிய மூன்று தெய்வங்களுக்கும் பர்மா, கம்போடியா, மலேயா நாடுகளில் இந்தியக் கோவில்களைப் போலவே கோவில்கள் கட்டப்பட்டிருக்கின்றன. லிங்க வழிபாடு சிறந்திருக்கின்றது. மகாபலிபுரத்தில் இருக்கின்ற 'பஞ்சபாண்டவர் இரதங்கள்' எனக் கூறப்படுகின்ற கற்கோவில்களின் படிவங்கள் மைய ஜாவாவில் காணப்படுகின்றன. வால்மீகி முனிவரின் கோவில் ஒன்றும் கம்போடியா நாட்டில் உள்ளது.

இந்திய சமய முறையான உருவ வழிபாடும் தென்கிழக்காசிய நாடுகளில் பரவியிருக்கின்றது. ராதா-கிருஷ்ணு உருவச்சிலைகள், ருக்மிணி-சத்தியபாமா-இருபக்கங்களிலும் அமர்ந்திருக்கும் வகையில் கிருஷ்ணனின் உருவச் சிலைகள், அகத்தியரின் சிலைகள், லிங்கங்கள், ஏராளமான அளவில் தென்கிழக்காசிய நாடுகளெங்கணும் கிடைக்கின்றன. கம்போடியாவிலுள்ள ஆங்கர் (Angkor) (தற்போது பாழடைந்துள்ளது) நகரத்திலிருந்த உலகப் புகழ்

பெற்ற 'ஆங்கர் வாட்' (Angkor Wat) என்ற கோவிலில் இராமாயண நிகழ்ச்சிகள் அழகு கொஞ்சும் சித்திரங்களாகத் தீட்டப்பட்டிருக்கின்றன. மேரு மலையை மத்தாகவும், ஆதிசேஷனைக் கயிருகவும் கொண்டு, தேவர்களும் அசுரர்களும் திருப்பாற் கடலைக் கடைந்ததாகக் கூறப்படுகின்ற புராணக் காட்சிகளும் ஆங்கர் வாட் கோவிலில் சித்திரங்களாக வரையப் பட்டுள்ளன. இதேபோல திருவுருவ வழிபாடு தென் கிழக்காசியாவெங்கிலும் பரவலாக இருந்திருக்கின்றது.

நிருவாகம்

இந்தியப் பண்பாடுகளின் நுழைவிற்குப் பின்னர்தான் தென் கிழக்காசிய நாடுகளில் 'அரசன்' என்பவன் மிகவுயர்ந்த நிலையை அடைந்தான். அரச பரம்பரை, அறிவிற் சிறந்தோரை-அதாவது பிராமணர்களை மந்திரியாக, அரச குழுவாக நியமித்தல், அரசப் பதவியேற்புவிழா, அரசவை அமைப்பு ஆகிய அனைத்தும் இந்திய பாணியிலேயே உருவாக்கப்பட்டிருந்தன. கம்போடியா, சயாம், மலேயா, ஜாவா, சுமாத்ரா ஆகிய நாடுகளின் அரசர்கள், இந்திய அரசர்களைப் போலவே தங்களையும் மாற்றிக் கொண்டனர். அரசர்களைக் கடவுளாகவே கருதி வணங்குகின்ற இந்திய முறையும், தென்கிழக்காசிய நாடுகளில் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இறைவனின் திருவுருவைச் சமைக்கும்போது மன்னர்களின் உருவங்களையே இறைவனுருவாக்கி, மன்னனுருவில் இறைவனைக் காண்கின்ற உயர்ந்த பழக்கமும் இந்தியாவினின்று ஏற்றுமதியானதுதான். ஆங்கர் வாட் என்ற கோவிலில் உறையும் விஷ்ணு, உண்மையிலேயே சூரியவர்மன் என்ற அந் நாட்டு அரசனின் உருவமேயாகும். ஜாவாவில் போராபதூர் என்ற இடத்தில் காணப்படுகின்ற போதிசத்துவரின் முகம் அப் பகுதியை ஆண்ட சைலேந்திர மன்னனின் முகமேயாகும். மன்னர்களின் பெயரால் கடவுளர்களும் உருவாக்கப் பட்டனர். பத்ரவர்மன் என்ற மன்னனல் உருவாக்கப்பட்ட லிங்கம் 'பத்ரேசுவரர்' என்றும், இந்திரவர்மன் என்ற அரசனல் உருவாக்கப்பட்ட லிங்கம் 'இந்திரேசுவரர்' என்றும் வழங்கப்பட்டன. அதேபோல அரசமாதேவிகளும், கடவுளரின் உருவச் சிலைகளாகச் செதுக்கப்பட்டு வணங்கப் பெற்றனர். இம் முறைக்கு தேவ-ராஜா (Deva-Raja—God King) அதாவது அரசனைக் கடவுளாகவே கருதி வணங்குதல் என்ற இந்து முறையாகும்.

வேதங்களும், தர்ம சாஸ்திரங்களும் தென்கிழக்காசிய அரசுகளின் அடிப்படைக் கருத்துகளாயின. ஆட்சியமைப்பு, சட்டங்களை ஆக்குதல், நீதி வழங்குதல், போரிடுதல், அரச குருவிற்கு

உயர்ந்த இடம், விழாக்கள் எடுத்தல், பதவியேற்றல் ஆகிய அனைத்து முறைகளும் இந்திய வேதங்கள்-சாஸ்திரங்களின் அடிப்படையிலேயே மேற்கொள்ளப்பட்டன. கொடில்யரின் அர்த்த சாஸ்திரமும், மனு தர்ம சாஸ்திரங்களும் ஏற்றுக் கொள்ளப் பட்டன. அரச அதிகாரிகளும், அவர்களது பெயர்களும், கடமை களும், இந்து தர்ம சாஸ்திரங்களின் கூற்றுப்படியே ஏற்படுத்தப் பட்டன. அரண்மனை வாயிலில் 'ஆராய்ச்சி மணி' ஒன்று கட்டித் தொங்க விடுகின்ற பழக்கமும் இருந்துவந்தது.

**பழக்கவழக்கங்கள்**

சாதிப் பிரிவினை இந்திய மண்ணில் வேரூன்றிய அளவு தென் கிழக்காசிய நாடுகளில் இடம் பெறவில்லை என்பது மிகவும் குறிப்பிடத்தக்கது. 'வர்ணாசிரம தர்மங்கள்' என்ற முறைப்படி மக்கள் பிரிவுகள் இருந்தன. ஆனால் அப் பிரிவுகள் சாதிகளாக இறுகி விடவில்லை. உடன்கட்டை யேறுகின்ற வழக்கமும், கைம்பெண்கள் இந்திய சாஸ்திர முறைப்படி மொட்டையடித்துக் கொண்டு, முக்காடிட்டுக் கொண்டு, வாழ்க்கையினின்று ஒதுங்கி வாழ்ந்து அழிகின்ற முறைகளும் கடைப்பிடிக்கப்பட்டு வந்தன. அதே நேரத்தில் ஜாவா போன்ற ஒருசில நாடுகளில் மட்டும் விதவை மறுமணமும், ஆதரிக்கப்பட்டு வந்தது என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

**பொழுது போக்குகள்**

பொழுது போக்குத் துறையில் தென்னிந்திய முறைகள் மிகவும் அதிகமாகத் தென்கிழக்காசிய நாடுகளில் விரவிக் கிடக்கின்றன. கோழிச் சண்டை மிகவும் பரவலாக இருந்த ஒன்று. பாமரர்கள் மட்டுமன்றிப் பாராளும் வேந்தர்களும் கோழிச் சண்டையைக் கண்டு களித்ததாகவும், இதற்காக வெளிநாடு களிலிருந்து கூடச் சேவல்களை விலைக்கு வாங்கிச் சென்றனர் என்ற செய்தியும் காணக் கிடைக்கின்றது. தமிழக வீர விளையாட்டு களுள் மிகவும் சிறப்பு பெற்றிருக்கின்ற சிலம்பம், மற்போர், சுருள் கத்தி வீசுதல் போன்ற வீர விளையாட்டுகள் தென்கிழக்காசிய மக்களிடமும் காணப்பட்டன. பொம்மலாட்டமும், இதற்கான பொம்மைகளைச் செய்வதும், பொம்மைகளை ஆட்டுவிக்கின்ற முறையும், அதன் வாயிலாக வீரக்கதைகள், புராணக் கதைகள் சொல்லும் பழக்கமும் தென்னிந்தியாவினின்றும் எடுத்துக் கொண்டதேயாகும். கதாகாலட்சேபம் செய்கின்ற முறை மலேயாவில் 'கத காக்' (Katha Kak) என்றழைக்கப் படுகின்றது.

தென்னிந்தியக் கோவில்களில் இறைவனைப் போற்றிப் பாடவும் இறைவன் முன்பு ஆடுவதற்கும் 'தேவரடியார்கள்' என்றழைக்கப்பட்ட பெண்டிர்கள் இருந்ததைப் போலவே, தென்கிழக்காசிய நாட்டுக் கோவில்களும், இசை, கூத்து, நடனம் போன்றவைகளின் இருப்பிடமாக இருந்தன. அதே போல தென்னிந்தியப் பழக்கமான 'சாமியாடல்' என்ற பழக்கமும் தென்கிழக்காசிய நாடுகளில் உண்டு. அதாவது பக்தர்களில் ஒருவன், இறைவன் திருவுலா வரும்போது தன்னை மறந்து ஆடுவான். ஆடும்போதே சில 'வாக்குகளையும்' கூறுவான். அந்த வாக்குகள் இறைவனின் வாக்காகவே மதித்து ஏற்றுக் கொள்ளப்படும். இந் நிகழ்ச்சி முடிந்தவுடன் 'சாமியாடியவன்' மயங்கி வீழ்வான். மயக்கம் தெளிந்து எழுந்தவுடன் அவனுக்கு தான் என்ன செய்தோம், என்ன கூறினோம் என்பது நினைவிலிருக்காது. பண்டைய தமிழகத்தில் இருந்துவந்த நிகழ்ச்சிகளில் இதுவும் ஒன்று. இயற்கை வழிபாடு, இறந்தவர் வழிபாடு போன்றவைகளில் தென்கிழக்காசிய மக்களுக்கும் மிகுந்த நம்பிக்கையும் ஈடுபாடும் உண்டு.

**கல்வி**

குருகுல முறையில் வேதங்களையும், சாஸ்திரங்களையும், நீதி நூல்களையும் கற்றுத் தேர்வதே கல்வி என்ற நிலை ஏற்றுக் கொள்ளப் பட்டிருந்தது. 'சிவ வியாகரணம்' என்ற இந்து சமய நூலைப்பற்றி ஆங்கர்வாட் கோவிலிலும் குறிப்பிடப் பட்டிருந்தது. இராமாயண மகாபாரதக் கதைகளைக் கற்றல் சிறப்பானதாகக் கருதப்பட்டது. பண்டைய இந்திய வரலாற்றில் சிறப்புப் பெற்றிருந்த அரசவை நிகழ்ச்சிகள், கதைகள் விரும்பிக் கற்கப்பட்டன. பண்டைய இந்திய மருத்துவ நிபுணர்களின் நூல்களும் பயிலப் பட்டன. இசை, வான சாஸ்திரம் முதலிய பல கலைகளும் இந்திய முறைப்படியே ஏற்றுக்கொள்ளப்பட்டன. இயற்கை விநோதங்களைப் பற்றிய வடமொழி நூல்களின் மாதிரியில் தென்கிழக்காசிய நாடுகளில் நூல்கள் எழுதப் பட்டன. கண்ணன், அருச்சுனன் போன்ற இதிகாச நாயகர்களைப் பற்றிய நூல்கள் ஜாவாவிலும், மற்ற நாடுகளிலும் தோன்றியிருந்தன. இந்தியப் புராணக் கதைகளான 'சத்தியவான்-சாவித்திரி', கயிலாய மலையில் தேவர்கள் அனைவரும் கூடியதால், உலகு ஒரு பக்கமாகச் சாய்ந்தபோது, அகத்திய முனிவர் தென்திசை நோக்கி வந்து உலகைச் சரி செய்தார்' என்பன போன்ற கதைகளும் ஜாவாவில் உண்டு. 'யமபுராணங்கள்', 'நரகத்தில் பாவ ஆத்மாக்களின் அல்லல்கள்'-இவைகளை சித்திரிக்கின்ற நூல்களும் பாலித் தீவில் பரவியிருந்தன.

அரசியல், நிர்வாகம், பேரரசு சிறப்பு ஆகியவைகளைப் பற்றியும், இந்தியப்பாணியில் நூல்கள் ஆக்கப்பட்டன. 'பாரதம்', 'நகரகிருதகம்' (Bharatham-Nagaragrithagam) போன்ற நூல்கள் சைலேந்திர அரசின் தோற்றத்தை விளக்குவன. 'பிரகத்கதா', 'ஹர்ஷசரிதா' முதலிய வரலாற்று நூல்களைப் போன்ற நூல்களும் தென்கிழக்காசிய நாடுகளில் எழுதி வெளியிடப்பட்டன.

**கட்டடக் கலை**

தென்கிழக்காசியக் கோவில்களில் பெரும்பாலானவை தென்னிந்தியக் கோவில்களின் அமைப்பைக் கொண்டவை. உயர்ந்த கோபுரங்கள், மண்டபங்கள், மதில்கள், குளங்கள், அகழிகள் என அனைத்தும் தென்னிந்திய முறையிலேயே அமைந் துள்ளன. கோவில்களின் உட்பகுதியில் காணப்படுகின்ற சித்திர சிற்ப வேலைப்பாடுகளும், தூண்களின் அமைப்பும், சிற்பங்களும், தென்னிந்தியக் கோவில்களைப் பிரதிபலிக்கின்றன. ஆனால், இக் கோவில்களை நுணுக்கமாகப் பார்க்கும்போது, அவைகளில் சில மாறுபாடுகள் தென்படுகின்றன. அதற்குக் காரணம் தென் னிந்தியச் 'சிற்பசாஸ்திரங்களை' எடுத்துச் சென்ற தென்கிழக்காசிய நாட்டினர், தென்னிந்திய அமைப்புகளுடன் தங்களது பரம்பரை அமைப்புகளையும் கலந்து புதிய பாணியில் கோவில்களை அமைக்க முற்பட்டனர். பூவேலைப்பாடுகள், போன்ற நுண்ணிய வேலை களில் தங்களது சொந்தக் கைவண்ணங்களையும் கலந்து, உருவாக்கியிருக்கின்றனர்.

தென்கிழக்காசிய மொழிகளில் பெரும்பாலும் வடமொழிச் சொற்களும், தென்மொழிச் சொற்களும் காணப்படுகின்றன. இந்தியாவிலுள்ள நதிகள், நகரங்கள், மன்னர்கள், கடவுளர்கள் ஆகிய பெயர்களும், ஆட்சித்துறை, தொழில் நுட்பப் பெயர்கள், மருத்துவம், இயலிசை நாடகம், ஆகிய அனைத்துத் துறைகளிலும் இந்திய மொழிச் சொற்கள் அப்படியே எடுத்தாளப்பட்டிருக் கின்றன.

பொதுவாகக் கூறுமிடத்து 14ஆம் நூற்றுண்டின் இறுதிவரை தென்கிழக்காசிய நாடுகளின் அரசியல், சமூக, சமய, பொரு ளாதாரப் பண்பாட்டு அடிப்படைகள் இந்தியாவைப் பின்பற்றிய தாகவே இருந்தது. இருப்பினும் இந்தியத் தொடர்பும் பண்பாடும், அரசன்-அரசவைப் பிரபுக்கள் போன்ற உயர்குலத் தோரிடையே மட்டும் மதிப்பு பெற்றிருந்தது. சைவ, சமண மதங்களும், இந்தியப் பண்பாடுகளும், உயர் குடியினரிடத்தில் பெற்றிருந்த மதிப்பு, பாமர மக்களிடையே பெறவில்லையென்றே

கூற வேண்டும். சாதாரண மக்கள் புதிய பண்பாட்டு முறைகளைத் தங்களது பண்பாட்டு முறைகளுடன் கலந்து ஏற்றுக் கொள்வதையே விரும்பினுர்கள். 'மன்னன் எவ்வழி—மக்கள் அவ்வழி' என்ற சொல்லுக்கேற்ப மக்களும் வாழ்ந்திருந்தாலும் அவர்கள் இரத்தத்தில் கலந்து ஊறிப்போன பண்பாட்டியல்கள் அடியோடு மறைந்து விட்டதாகக் கூறிவிட முடியாது.

## தென்னிந்தியாவின் பங்கு

தென்கிழக்காசிய-இந்தியத் தொடர்பை ஏற்படுத்தியதில் தென்னிந்தியா முக்கிய பங்கேற்றிருக்கின்றது. அதிலும் தமிழகம் முன்னணியில் இருந்திருக்கின்றது. பண்டைய தமிழ் இலக்கியங்கள் இக் கருத்தினை வலியுறுத்துகின்றன. தென்கிழக்காசிய நாடுகளில் இந்தியத் தொடர்பை ஏற்படுத்துவதில், வட இந்தியாவை விட்த் தென்னிந்தியாவே முன்னணியில் இருந்திருக்கின்றது எனப் பண்டித நேரு அவர்கள் தமது உலக வரலாற்று நூலில் குறிப்பிடுகின்ருர். எனவே, தென்னகத்தின் பங்கையும் சிறிது குறிப்பிடுதல் அவசியமாகிறது.

### பெயர்கள்

தென்னிந்தியாவில் வழங்கிவருகின்ற பல ஊர்களின் பெயரும், மன்னர்கள், கடவுளர்கள் பெயரும், அப்படியே தென்கிழக்காசிய நாடுகளிலும் காணப்படுகின்றன. உதாரணமாக, ஜாவாவிலிருக்கும் 'தருமா' (Taruma) என்ற ஊரின் பெயர் கன்னியா குமரி முனைக்கருகிலுள்ள ஓர் ஊரின் பெயராகும். கிருஷ்ணு நதிக்கரையிலிருக்கும் 'அமராவதி' என்ற பெயர் சாம்பா (Champa) விலும் காணப்படுகின்றது. தலைங் (Talaing) என்பது தெலிங்கானு என்ற பெயராகும். அதே போல வட இந்திய நகரங்களான அயோத்தி, தட்சசீலம், காந்தாரம், போன்ற பெயர்களும் தென்கிழக்காசிய நாடுகளின் நகரங்களின் பெயர்களாக உள்ளன. மக்கள் இனத்தைக் குறிக்கும் சோலியா, பாண்டிக்கேரா, 'மெலியாலா' (Solia, Pandihera Meliyala) போன்ற பெயர்களும் சுமாத்ராவில் பரவியிருக்கின்றன. அரசர்களின் பெயர்கள், சிறப்பாக சைலேந்திர மன்னர்களின் பெயர்கள், 'வர்மன்' என்று முடிகின்றன. இப் பெயர் பல்லவ மன்னர் பரம்பரையினரைக் குறிப்பதாகும். பல்லவ மன்னர்களுக்கு 'சைல ராஜாக்கள்' (Saila Rajas) என்ற பெயரும் உண்டு என்பது குறிப்பிடத்தக்கதாகும். ஜாவாவின் அரசரான ஜெயநாகரா என்பவரின் முழுப்பெயர் 'ஸ்ரீ சுந்தர பாண்டிய தேவாதிஸ்வரநாம ராஜாபிஷேக விக்ரமதுங்க தேவ ஜெயநாகரா'

(Sri Sundarapandya, Devadiswaranama Rajabhisheka Vikramatunga deva Jayanagara). அவருடைய முத்திரையும் பாண்டிய மன்னர்களின் சின்னமான 'மீன்' ஆகும். இது போன்று ஏராளமான பெயர்கள், சொல், இனப்பிரிவு போன்றவைகளில் தென்னாட்டிலிருந்து தென்கிழக்காசிய நாடுகளுக்கு எடுத்துச் சென்றவைகளை வரிசைப்படுத்திக் கூற முடியும். தென்னிந்தியப் பல்லவ மன்னர்களுக்கும் புனன், கம்போடியா, ஜாவா அரச குலத்தினருக்கும் நெருங்கிய தொடர்பு இருந்திருக்க வேண்டும் எனக் கருதப்படுகின்றது. பல்லவ நந்திவர்மன் காலத்துச் செப்பேடுகள் (Velur palayam Plates) இச் செய்திகளை விளக்கு கின்றது. செந்தமிழ்க் காப்பியமான 'மணிமேகலையும்' தமிழக—தென்கிழக்காசிய நாடுகளின் தொடர்புகளை வலியுறுத்திப் பேசு கின்றது.

சமயம்

சைவமும், வைணமும் தென்னிந்தியாவினின்று சென்ற வையே. புத்தமதக் கருத்துகளும் 'காஞ்சிப் புத்தமடத்தினின்று' சென்றிருக்கின்றது. சங்கராச்சாரியாரின் சீடரான 'சோமசிவா' (Soma Siva) என்பவர் கம்போடியாவிற்குச் சென்றிருக்கின்றார். அதேபோலப் புத்த பிட்சுகளும் தென்னிந்தியாவின்றும் சென்றிருக் கின்றனர்.

கட்டடக்கலை

தென்கிழக்காசிய நாடுகளின் கட்டடக்கலை முழுக்க முழுக்க தென்னிந்தியக் கட்டடக்கலையையே சார்ந்துள்ளது என்பது மறுக்க முடியாத கருத்தாகும். மகாபலிபுரக் கற்கோவில்களைப் போலவும், தென்னிந்தியக் கோபுரங்களைப் போலவும், கோபுரங் களில் அமைந்துள்ள சிற்ப வேலைப்பாடுகளும் தென்னிந்திய கட்டடக்கலையை அப்படியே பிரதிபலிக்கின்றன. கோவில் சிலைகளும் தமிழகத்துச் சிலைகளைப் போலவே காட்சியளிக்கின்றன. மேலும், தமிழக—தென்னக வர்த்தகத் தொடர்புகளையும், விளைவு களையும், தமிழ் இலக்கியங்கள் விரிவாகவும், மிகவும் அழகாகவும் தெளிவுபடுத்துகின்றன.

# 4. தென்கிழக்காசிய நாடுகளில் சீனப் பண்பாட்டுக்கூறுகள்

இந்தியாவுடன் கொண்டிருந்த வர்த்தகத் தொடர்பினால் இந்திய அரசியல், சமய, சமூக, கலைப் பண்பாடுகளைத் தென்கிழக்காசிய மக்கள் அறிந்தனர். செல்வச் செழிப்புள்ள இந்திய வர்த்தகர்கள் தென்கிழக்காசிய மக்களைத் தங்கள்பால் ஈர்த்தனர். தென்கிழக்காசிய மக்களும் மேன்மையுற்றுச் சிறந்து விளங்கிய இந்திய பண்பாட்டியல்புகளை விரும்பியேற்றனர். தென்கிழக்காசிய நாடுகள் பண்பாடுகளின் சந்திப்பிடமாகவும் அமைந்திருந்தன. இந்தியச் சீனக் கடல் வாணிகம் தென்கிழக்காசிய நாடுகள் வழியாகத்தான் நடந்துவந்தது. எனவே, சீனாவுடன் இந் நாடுகளும் வர்த்தகத் தொடர்புகள் கொண்டிருந்தன. மேலும் சீனாவின் கிழக்கு தென்கிழக்கெல்லையாகப் பர்மாவும், இந்தோ-சீனாவும் விளங்குகின்றன. எனவே, தரை வழியாகவும் சீனாவுடன் நேரடித் தொடர்பு கொள்ளவும் வாய்ப்பிருந்தது. தென்கிழக்காசிய நாடுகள் அனைத்திலும் சீன மக்கள் பெருமளவில் குடியேறியிருக்கின்றனர். எனவே சீனாவின் தென்கிழக்காசியத் தொடர்புகள் பற்றி சுருக்கமாக ஈண்டுக் குறிப்பிடுவோம்.

**சீனப் பேராதிக்கக் கொள்கை**

இந்தியாவைப் போலல்லாது தன்னுடைய அண்டை நாடுகளாகவும், தனது தென்கடல் பகுதியில் விரவிக் கிடக்கின்ற எண்ணற்ற தீவுக் கூட்டங்களாகவும் அமைந்திருக்கின்ற இந்தத் தென்கிழக்காசிய நாடுகளை வென்று அடிமைப்படுத்த வேண்டும் என்று சீனா எண்ணியதில் வியப்பேதுமில்லை. சீனப் பேரரசு தென்கிழக்காசியாவின் சில பகுதிகளை வென்று தன் நாட்டுடன் இணைத்திருந்திருக்கின்றது. பல பகுதிகள் சீனாவின் மேலாண்மையை ஏற்றுக்கொண்டு திறை செலுத்தி வந்திருக்கின்றன. சீனாவுடன் இந் நாடுகள் வர்த்தகத் தொடர்புகளும் கொண்டிருந்தன. இத்

தொடர்புகளால் தென்கிழக்காசிய நாடுகளின் வரலாற்றில் சீனாவின் செல்வாக்கும் இடம் பெற்றிருக்கின்றது.

இந்தியத் தொடர்புகளைப் போல அவ்வளவு சிறப்பும் செல்வாக்கும் கொண்டதாகச் சீனத் தொடர்பு இருந்திருக்கவில்லை. இந்தியா, தென்கிழக்காசிய நாடுகளின் அரசியல் சமய, பண்பாட்டுத் துறைகளில் பெற்றிருந்த செல்வாக்கிற்கிணையாகச் சீனத் தொடர்பைக் கூறமுடியாது. சீனாவின் 'கன்பூசியக் கொள்கை'கள் தென்கிழக்காசிய நாடுகளில் பரவவில்லை. இந்து, புத்த சமயங்களை விரும்பியேற்றுக்கொண்ட அம் மக்கள் 'கன்பூசியக் கொள்கைகளை' ஏற்கவில்லை என்றும் கருத இடமுண்டு. சீனாவின் நேரடி ஆட்சிக்குட்பட்டிருந்த வியட்நாம் பகுதியில் மட்டும் 'கன்பூசியத் தத்துவங்கள்' ஓரளவுக்கேனும் பரவியிருந்தன. தாங்கள் வென்ற பகுதிகளில் தங்களது அரசியலை மட்டுமல்லாது, சமயக் கருத்துகளையும் புகுத்துகின்ற வழக்கம் சீனர்களுக்கு உண்டு. இவ் வழக்கத்தின்படி வியட்நாமில் மட்டும் சீன அரசியலும் 'கன்பூசியமும்' பரப்பப்பட்டன. 'கன்பூசியம்', இந்து, புத்த சமயக் கோட்பாடுகள் போலல்லாது, அரசியலுடன் பின்னிப் பிணைந்திருப்பவை. சீன அரசியலின் அடிப்படையே கன்பூசியக் கொள்கைகளாகும். சீன அரசியல் செல்வாக்கு தென்கிழக்காசிய நாடுகளிலிருந்து மறைந்தபோது, சீனச் சமயக் கோட்பாடுகளும் மறைந்தன.

## சின் பேரரசு (The Chin Empire 221-210 B.C.)

சீனாவின் முதல் பேரரசராகக் கருதப்படுகின்ற ஷி-ஹுவாங்-தி (Shih-Huang-Ti the First Emperor) என்பவரால் தோற்றுவிக்கப்பட்ட இந்த அரச குலம் மிகக் குறுகிய காலம்தான் ஆட்சி புரிந்திருப்பினும், சீன வரலாற்றில் சிறப்புமிக்க இடத்தைப் பெற்றிருக்கின்றது. சீனா முழுவதையும் வென்று இணைத்த ஷி-ஹுவாங்-தி, தென்கிழக்கு எல்லைப் பகுதியிலிருந்த வியட்நாமையும் வென்று தமது பேரரசுடன் இணைத்தார். சீனப் பேரரசுடன் இணைந்த வியட்நாமில் சீன அரசியலும், அரசியலோடு இணைந்த கன்பூசியமும் புகுத்தப்பட்டன. சீனப் பேரரசர் ஷி-ஹுவாங்-தியின் மறைவோடு இந்த அரசகுலமும் மறைந்தது. சீனாவில் அடுத்த அரசகுலம் நிறுவப் பெறுவதற்குள் வியட்நாம் சுதந்திரமடைந்திருக்கக்கூடும் என்று கருதப்படுகின்றது. கி.மு. 206-ல் லியு-பாங் (Liu-Pang) என்பவர் 'ஹான்' (Han) அரச குலத்தைத் தோற்றுவித்தார். இவ் வரச குலம் நான்கு நூற்றாண்டுகள் சீனாவை ஆண்டது.

**ஹான் அரசு (Han Dynasty)**

இவ் வரச குலத்தில் மிகவும் சிறப்புமிக்கவராகக் கருதப் படுபவர் உ-தி (Wu-Ti)யாவர். இவர் காலத்தில்தான் சீனுவின் ஆதிக்கம் உச்சநிலையை அடைந்தது. சீனுவின் தெற்குக் கடற்கரை வரை தமது ஆதிக்கத்தை விரிவடையச் செய்து, சில தீவுகளையும் வென்ருர். தெற்குக் கடற்கரைத் துறைமுகங்களிலிருந்து, தென் கிழக்காசிய நாடுகளுடன் வர்த்தகம் செய்வதே இவரது முக்கிய நோக்கமாகக் கருதப்பட்டது. பர்மா, இந்தியாவில் கங்கைநதிப் பள்ளத்தாக்கு வழியாக மேற்காசிய, ஐரோப்பிய நாடுகளுடன் தரை வழியாகவும் வர்த்தகம் மேற்கொள்ளப்பட்டது. இவரது காலத்தில் வியட்நாம் மீண்டும் சீனுவுடன் இணைக்கப்பட்டது. ஏனைய தென்கிழக்காசிய நாடுகளை வெற்றி கொள்வதற்காகச் சிறந்த கப்பற்படையொன்றும் அனுப்பப்பட்டது (116-110 B.C). இவர் காலம்தொட்டு தென்கிழக்காசிய நாடுகள் சீனுவுக்குத் திறை செலுத்தி, அதன் மேலாதிக்கத்தை ஏற்றுக்கொண்டன. இச் செய்திகளைச் சீன வரலாற்றுக் குறிப்பேடுகள் விளக்குகின்றன. சீன வரலாற்றுக் குறிப்பேடுகள் மட்டும் சீனுவின் கிழக்காசியத் தொடர்புகளைக் குறிப்பிடவில்லை. தென்கிழக்காசிய நாடுகளெங் கணும் காணப்படுகின்ற 'ஹான்' பேரரசு காலத்தைச் சேர்ந்த பீங்கான் பொருள்களும், இத் தொடர்பைத் தெளிவாக்கு கின்றன. போர்னியோ, ஜாவாவின் மேற்குப் பகுதி, சுமாத்ராவின் தென்பகுதி ஆகிய இடங்களில் 'ஹான்' பேரரசு காலத்தில் உருவாக்கப்பட்ட பீங்கான் பொருள்கள் (Han Pottery) கண்டெ டுக்கப்பட்டுள்ளன. வியட்நாம் மட்டுமே சீனுவுடன் இணைக்கப் பட்டிருந்தது எனச் சீன வரலாற்றுக் குறிப்பேடுகள் கூறுகின்றன. ஆனல், தென்கிழக்காசியா முழுவதும் சீனத் தொடர்பைப் பெற்றுப் பயனடைந்தன என்பதை, அப் பகுதிகளில் கண்டெடுக்கப் பட்ட வரலாற்றுச் சின்னங்கள் தெளிவாக்குகின்றன. கி.பி. முதலாம் நூற்ருண்டிற்கு முன்பிருந்தே சீனத் தொடர்புகள் இருந் திருக்கலாம் என்று கணக்கிடப்படுகிறது.

பிற்காலத்திய சீன அரசுகள் தென்கிழக்காசிய நாடுகளுடன் அரசியல் தொடர்புகள் கொண்டிருக்கவில்லையெனினும், வர்த்தகத் தொடர்புகள்மட்டும் தொடர்ந்தன. இவ் வர்த்தகமும் சீனர் களால் மேற்கொள்ளப்படவில்லை. சீனர்கள் கடல்மேற் செல்லு வதிலும், வர்த்தகக் கப்பல்களைக் கட்டி இயக்குவதிலும் அவ்வள வாக அக்கறை கொள்ளவில்லை. சீன வர்த்தகப் பொருள்களை வெளிநாட்டு வணிகர்கள் சீனுவிற்கு வந்து வாங்கிச் சென்றனர். அவ்வாறு கடல் வாணிகம் செய்வதில் இந்தியர்கள் பெரும் பங்கேற்றனர். இந்திய-சீன வர்த்தகம் தென்கிழக்காசிய நாடுகள்

வழியாக நடந்தது என்பதை முன்னரே குறிப்பிட்டுள்ளோம். தென்கிழக்காசிய நாடுகள், இந்திய-சீன கடல் வாணிகத்தின் மையமாக இருந்து, பெரும் பொருளீட்டின. கடல் வழியாக அல்லாது தரைவழி வர்த்தகமும் தென்கிழக்காசிய நாடுகள் (இந்தோ-சீனு, பர்மா) வழியாக நடைபெற வேண்டிய நிலை இருந்தது. இதனுலும் அவர்கள் முக்கியத்துவம் பெற்றனர்.

ஹான் பேரரசு சீனுவின் தெற்குப் பகுதியில் வலிமை பெற்றிருந்த அதே நேரத்தில் சீனுவின் கிழக்குப் பகுதிகளில் கீழை ஹான் பேரரசு (Eastern Hans) வலிமை பெற்றிருந்தது. இப் பேரரசு மத்தியாசியாவில் ரோமப் பேரரசின் எல்லை வரை பரந்து கிடந்தது. கீழை ஹான் அரச குலத்தினர் தென்கிழக்காசியப் பகுதிகளான வியட்நாம், சம்பாப் பகுதிகளையும் வென்று இணைக்கும் முயற்சிகளில் ஈடுபட்டனர். கீழை ஹான்களுக்குப் பின்னர் வந்த அரச குலத்தினர் கி.பி. 231ஆம் ஆண்டுக்குள் சம்பா, புனன் பகுதிகளின் மேலாண்மையைப் பெற்றனர். தென் கிழக்காசிய நாடுகள் அனைத்திற்கும் தங்கள் தூது குழுக்களை அனுப்பி திறைப் பணம் வசூலித்தனர்.

பொதுவாக நோக்குமிடத்து, சீன அரசு தென்கிழக்காசிய நாடுகளில் தனது மேலாண்மையை நிலைநாட்டுவதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்திருக்கின்றது என்பது புலனுகிறது (Lord of the Southern Seas). கடற்பயணங்களை மேற்கொள்ளுவதிலோ, பெருங் கப்பல்களைக் கட்டிச் செலுத்துவதிலோ, பெரும்பாலும் அக்கறை கொண்டிராத சீனர்கள், தங்களின் ஏற்றுமதிப் பொருள்களை, வெளிநாட்டவரே வந்து வாங்கிச் செல்ல வேண்டும் என்று எதிர்பார்த்தனர். தென் கிழக்காசிய நாடுகள் இவ் வர்த்தக வழியில் அமைந்திருந்ததால் அவைகளை அடக்கித் திறை வசூலிப்பதையும் சீனர்கள் தங்களது நோக்கமாகக் கொண்டிருந்தனர் என்பதும் தெளிவாகும்.

சீனப் பண்பாடுகள் தென்கிழக்காசிய நாடுகளில் இடம்பெறவில்லையென்றே கூறவேண்டும். தென்கிழக்காசிய நாடுகளில் ஒன்ருன வியட்நாமில் மட்டும் சீனப் பண்பாடு கலந்திருக்கின்றது. ஏனைய பகுதிகளில் முதலில் இந்திய செல்வாக்கும், பதின்மூன்ரும் நூற்ருண்டிற்குப் பின்னர் சில நாடுகளில் இஸ்லாமியப் பண்பாடும் கலந்திருந்தன. வர்த்தகத்திற்காகத் திறந்துவைக்கப்பட்டிருந்த சீனக் கதவுகள் வாயிலாக வெளிநாட்டுச் சமயக் கருத்துகளும் சீனுவில் நுழைந்து ஆதிக்கம் பெற்றன. புத்தமதம் சீனுவில் நுழைந்தது. கி.பி. மூன்ரும் நூற்ருண்டுவரை சீன அரசவையில்

மட்டும் செல்வாக்குப் பெற்றிருந்த புத்தமதம் மூன்றும் நூற்றுண் டிற்குப் பின்னர் மக்களிடையேயும் பேராதரவைப் பெற்றது. இந்தியாவிலிருந்து புத்தபிட்சுகள் சீனுவிற்குச் சென்று புத்தமதக் கருத்துகளைப் பரப்பினர். புத்தமதத்தைத் தழுவிய சீனப் பெரியோர்களும் இந்தியப் பயணங்களை மேற்கொண்டனர். அவ்வாறு வந்தவர்களில் சிறப்பு மிக்கோர் பாஹியான் (Fa-Hien 399-411 AD), இட்சிங் (I-Tsing), யுவான் சுவாங் (Yuan Tsang) போன்றவர்களாவர். இவர்களுடைய பயணக் குறிப்புகள் இந்திய-சீனத் தொடர்புமல்லாது, இந்திய வரலாற்றிற்கும் முக்கிய ஆதாரங்களாகய் விளங்குகின்றன என்பதை வரலாறு கற்றறிந் தோர் யாவரும் உணர்வர். சீனுவில் புத்தமதம் பரவிச் சிறப் படைந்த பின்னர், தென்கிழக்காசிய நாடுகளுடன் சீனுவின் தொடர்பு வலுவடைந்தது எனவும் கூறலாம்.

# 5. இஸ்லாமிய சமயம் பரவுதல்

நபிகள் நாயகம் தோன்றுவதற்கு முன்பிருந்தே அரேபியா விற்கும் சீனுவிற்கும் இடையே வர்த்தகத் தொடர்புகள் இருந்திருக் கின்றன. இஸ்லாமின் தோற்றமும், ஆதிக்க வளர்ச்சியும் இத் தொடர்புகளை மேலும் வலிவடையச் செய்திருக்கின்றன. 8, 9ஆம் நூற்றுண்டுகளில் சம்பாவிலும், மற்றப் பகுதிகளிலும் முகமதி யர்கள் குடியேறி, தனித்து வாழ்ந்திருக்கின்றனர். இந்தோனேஷி யத் தீவுகளில்கூட ஆரம்பகால முகமதியர் மற்றைய இனத்த வரோடு எவ்விதத் தொடர்பும் கொள்ளாது தனித்தே வாழ்ந்திருந் தனர் என்பதற்குச் சான்றுகள் கிடைத்துள்ளன. ஜாவாவில் முகமதியர்கள் எப்போது நுழைந்தார்கள் என்பதைத் திட்டவட்ட மாகக் கூற இயலவில்லை. இருப்பினும் 11ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் ஜாவாக் கடற்கரைப் பகுதிகளில் முகமதியர்கள் இருந்தனர் என்பதற்குச் சான்றுகள் கிடைத்துள்ளன. எனினும் இஸ்லாமிய சமயம் உள்நாடுகளில் பரவ ஆரம்பித்தது 13ஆம் நூற்றுண்டிற்குப் பின்னர்தான் என்பது தெரிய வருகின்றது.

வெனிஸ் நகர வணிகன் மார்க்கோ போலோ பதினேழு ஆண்டுகள் சீனுவில் தங்கியிருந்து பின்னர் தென்கிழக்கு ஆசிய நாடுகள் இந்தியாவின் கிழக்கு, மேற்குக் கடற்கரை வழியாக வெனிஸ் திரும்பியிருக்கின்றுர். அவரது 'பயண நூல்'தான் முதன் முதலாக ஐரோப்பியர்களுக்குத் தென் கிழக்காசிய நாடுகளை அறிமுகப்படுத்தியது. மார்க்கோ போலோ 1292ஆம் ஆண்டில் சுமாத்ராவிலுள்ள 'பெர்லக்' (Perlak) என்னும் துறைமுகத்தை அடைந்ததாகவும் அங்கு பல முகமதியர்கள் வாழ்ந்திருந்ததைக் கண்ணுற்றதாகவும் அவரது 'பயண நூல்' குறிப்பிடுகின்றது. அதே கருத்தைச் சீன வரலாற்றுக் குறிப்பேடுகளும் உரைக்கின்றன.

இஸ்லாமிய சமயமும், இந்து புத்தமதங்களைப் போலவே கடலோரப் பகுதி அரசர்களாலும், உயர்ந்த அரசவை அதிகாரி

களாலும் முதன்முதலில் ஏற்றுக்கொள்ளப்பட்டது. மன்னர்களும், மன்னரவைகளும் மக்களிடையே உயர்ந்த மதிப்பைப் பெற்றிருந்த காரணத்தால், மன்னர்களைப் பின்பற்றி மக்களும் புதிய மதத்தை ஏற்றுக்கொண்டனர். இந்து, புத்த சமயங்களும் முதலில்




இஸ்லாமிய சமயம் பரவுதல்—கி.பி. 14-15ஆம் நூற்றுண்டுகள்

அரசவையினரின் ஆதரவைப் பெற்று, பின்னர் மக்களிடையேயும் பரவியது என்பதை முன்னரே குறிப்பிட்டுள்ளோம். தென் கிழக்காசிய நாட்டு மக்கள், பொதுவாகவே சமயம், பண்பாட்டுத் துறைகளில் அரசின் வழி நடப்பவர்கள். இருப்பினும் தங்களின் பழமைப் பண்புகளையும் மறந்துவிடுவதில்லை. புதிய மதத்தின் கருத்துகளையும் ஏற்று, அதே நேரத்தில் தங்களது பாரம்பரியப்

பண்பாடுகளுடன் அவைகளை இணைத்துப் பின்பற்றி வந்தனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும். மலாக்கா நீரிணைப்புப் பகுதிகளில் (Malacca Straits) ஆக்கம் பெற்று வளரத் தொடங்கிய இஸ்லாமிய சமயம், ஆரம்பத்தில் அரசகுல திருமண உறவுகளால் சிறப்படைந்து மேலும் பரவியது. இஸ்லாமிய சமயத்தைத் தழுவிய சுமாத்ராவின் பாசை நாட்டு சுல்தான் (Sultan of Pasai) பெர்லத் (Perlak) நகர அரசனது மகளை மணந்தார். இத் திருமண உறவு முகமதியர்களுக்கு உயர்வையும் மதிப்பையும் மக்களிடையே ஏற்படுத்தியது. இதேபோலப் பெரிய செல்வந்தர்களும், கற்றறிந்தவர்களும், மன்னர்களும் இஸ்லாமிய சமயத்தைத் தழுவினர். ஆரம்ப காலத்தில் ஜாவாவில் கட்டப்பட்ட மசூதிகள் அனைத்தும் இந்திய கட்டடக்கலை முறையிலேயே கட்டப்பட்டிருப்பது, முதன் முதலில் மதமாற்றம் செய்துகொண்டவர்கள் தங்களின் பழைய பண்புகளை ஒரேடியாக மறந்து, ஒதுக்கிவிடவில்லை என்பதையே எடுத்துக்காட்டுகிறது. முகமதியக் கல்லறைகளில்கூட இந்து மதத்தைச் சார்ந்த முத்திரைகள் பொறிக்கப்பட்டிருந்தன.

ஜாவா, சுமாத்ரா தீவுகளில் இஸ்லாமிய சமயத்தைப் பரப்பியவர்கள் குஜராத், வங்காளம் ஆகிய இந்தியப் பகுதிகளைச் சேர்ந்த வணிகர்களேயாவர். குஜராத் 1298-ல் முகமது கோரியினால் வெல்லப்பட்டது. ஒரு நூற்றாண்டுக்குள் கங்கைநதிப் பகுதிகளும், வங்காளமும் முகமதியர் வசமாயின. குஜராத், வங்காளத்தைச் சேர்ந்த மக்களில் பெரும்பாலானோர் இந்துக்களாக இருந்தாலும் முகமதியராட்சியில் சிறப்பு பெற்றவர்கள் முகமதியர்களே ஆவர். புதிதாக இஸ்லாமிய மதத்தைத் தழுவிய இந்திய வர்த்தகர்கள், தாங்கள் செல்லுமிடங்களிலெல்லாம் தங்களது புதிய இஸ்லாமிய மதத்தைப் பரப்புவதையும் முக்கியப் பணியாகக் கொண்டனர். குஜராத்தில் காம்பே (Cambay) துறைமுகத்தினின்று புறப்பட்ட வர்த்தகர்களின் செல்வ வளமும், உயர்ந்த ஆடம்பர வாழ்க்கையும் தென்கிழக்காசிய மக்களை அவர்கள்பால் ஈர்த்தன. இவ் வர்த்தகர்களைப் பின்பற்றி ஏராளமானவர்கள் இஸ்லாமிய மதத்தைத் தழுவினர். கல்லறைக் கற்கள்கூட (Tombstones) குஜராத்தில் உருவாக்கப்பட்டு, காம்பே துறைமுகத்திலிருந்து ஜாவா, சுமாத்ராப் பகுதிகளுக்குக் கொண்டு செல்லப்பட்டது. குஜராத்தைச் சேர்ந்த வர்த்தகர்கள் ஆரம்ப நிலையில் ஜாவா, சுமாத்ராப் பகுதிகளிலேயே தங்கி, வணிகம் செய்தனர். 15ஆம் நூற்றாண்டில்தான் மலாக்கா பகுதிக்குள் ஊடுருவினர்.

இந்திய முகமதியர்கள் மூலமாகத் தென்கிழக்காசிய நாடுகள் இஸ்லாமிய சமயத்திற்குத் திறந்துவிடப்பட்டன. புதிய

பண்பாட்டுக்கலப்பு ஏற்பட்டது. ஆசியாவில் ஆசிய மக்களால் தோற்றுவிக்கப்பட்ட ஆசிய மதம் இஸ்லாம் என்பதனுல், தென் கிழக்காசிய மக்கள் இப் புதிய ஆசிய மதத்தையும், அதன் பண்பாடு களையும் ஏற்றுக்கொள்வதைத் தரக்குறைவான செயல் என்றோ, அந்நியப் பண்பாட்டின் ஊடுருவல் என்ருே கருதவில்லை. எனவே இஸ்லாமிய மதக் கருத்துகளையும் வலிந்து, விரும்பியேற்றுக் கொண்டனர்.

அதே நேரத்தில் மார்க்கோ போலோவின் 'பயண நூலை'க் கற்ற ஐரோப்பியர்கள், மார்க்கோ போலோ வருணித்த கீழை நாடுகளைத் தாங்களும் கண்டு, அதன் பண்பாட்டுச் செல்வச் சிறப்பினை உய்த்துணர வேண்டுமென்ற பேராவல் கொண்டனர். அதுவரை கீழை நாட்டுப் பொருள்களான பட்டு, பருத்தி யாடைகள், இரும்புப் பொருள்கள், வேலைப்பாடுகளிற் சிறந்த வண்ண வண்ண பீங்கான் பொருள்கள், மரங்கள், நவரத்தினங்கள், நறுமணப் பொருள்கள் போன்ற எண்ணற்ற பொருள்களையும், மிக உயர்ந்த வேலைப்பாடுகளைக் கொண்ட பொருள்களையும், அராபிய வர்த்தகர்களிடமிருந்து வாங்கி அனுபவித்து வந்தனர். சீனு-தென் கிழக்காசியா, இந்தியாப் பகுதிகளிலிருந்து ஐரோப்பிய நகரங்களுக்குச் செல்வதற்குள் பொருள்களின் விலை பன்மடங்கு உயர்ந்தது. இக் காரணங்களால் ஐரோப்பியர்கள் அராபிய நடுவர்களைத் தவிர்த்து, நேரடியாகக் கீழைநாடுகளுடன் தொடர்பு கொள்ளும் எண்ணத்தில் செயல்பட ஆரம்பித்தனர். 15ஆம் நூற்ருண்டிலேயே போர்ச்சுகீசிய அரசன் ஹென்றி இதற்கான தீவிர முயற்சிகளை மேற்கொண்டிருந்தார். இந்தியாவிற்கு நேரடிக் கடல்வழி கண்டுபிடிப்பதையே தமது குறிக்கோளாகக் கொண்டு செயல்பட்டு வந்தார்; இதனுல் 'மாலுமி ஹென்றி' (Prince Henry the Navigator) என்ற சிறப்புப் பெயரையும் பெற்ருர். இந்த முயற்சிகளின் விளைவே பதினைம் நூற்ருண்டில் ஐரோப்பியர்களின் புதிய கடல்வழி கண்டுபிடிக்கும் முயற்சியில் வெற்றி கண்டதாகும். கொலம்பஸ் மார்க்கோ போலோவின் பயணநூலைப் படித்த பின்னர்தான் கடற்பயணங்கள் மேற்கொள்வதில் பேரார்வம் கொண்டார் எனவும் குறிப்பிடப்படுகின்றது.

ஐரோப்பியர்கள் இம் முயற்சியில் ஈடுபட்டிருந்தபோதும் கீழை நாடுகளின் வர்த்தகம் பெரும்பாலும் அராபிய வர்த்தகர்களிடம் தான் பெருகி நின்றது. இதன் காரணமாகத் தென்கிழக்காசிய நாடுகளில் இஸ்லாமிய மதம் வேரூன்றி வளரத் தொடங்கியது. சுமாத்ராவின் வடபகுதியிலும், ஏனைய பகுதிகளில் அங்கொன்றும் இங்கொன்றுமாக இஸ்லாமிய சமயம் தளிர்க்க ஆரம்பித்தது.

இப் பகுதிகள் அனைத்துமே மஜாபாஹித் பேரரசிற்கு உட்பட்ட பகுதிகளாகும். சுமாத்ராவிலிருந்து மலேயா தீபகற்பப் பகுதியிலும் இஸ்லாம் பரவியது. இந்தோ-சீனுவிலிருந்த சயாம் அரசும் ஜாவா-சுமாத்ராவிலிருந்த மஜாபாஹித் பேரரசும் மலேயாப் பகுதிமீது உரிமை கொண்டாடின. இந்த ஆதிக்கப் போட்டியினுல் மலேயா தீபகற்பப் பகுதியின் முக்கியத்துவம் வளரலாயிற்று. சயாம், மஜாபாஹித் பேரரசுகளுக்கிடையிலும், தென்கிழக்காசிய நாடுகளின் வர்த்தக வழியின் மையத்திலும் அமைந்திருக்கின்ற மலேயா தீபகற்பப் பகுதியில் இஸ்லாமும் வளர ஆரம்பித்தது. மலேயா தீபகற்பத்தின் மேற்குக் கரையில், சுமாத்ரா தீவின் கிழக்குக் கரைப் பகுதிகளுக்கு மிக அருகில் அமைந்திருந்த 'மலாக்கா' (Malacca) நகரம் 15ஆம் நூற்றுண்டில் வர்த்தகச் சிறப்பு பெற்று விளங்கியது. இந் நகரத்திலும், அதை சுற்றியிருந்த பகுதிகளிலும் இஸ்லாமிய சமயம் பரவி நிலைத்து நின்றது. இஸ்லாமின் வளர்ச்சியும், ஆதிக்கப் பெருக்கமும் மலாக்காவிலிருந்தே தொடங்கியது எனலாம்.

ஜாவா, சுமாத்ராவில் ஆதிக்கம் பெற்றிருந்த மஜாபாஹித் பேரரசு வலிமை குன்றியிருந்த நிலையில், மலாக்கா வர்த்தகச் சிறப்புப் பெற்றிருந்தது. சுமாத்ராவின் கிழக்குக் கடற்கரைப் பகுதியிலும் மலாக்காவிலும் இஸ்லாமிய மதம் வளர்ந்தோங்கியிருந்தது. 15ஆம் நூற்றுண்டின் ஆரம்பத்தில் வர்த்தகச் சிறப்புப்பெற்ற மலாக்கா நகரையும் அதனை அடுத்திருந்த பகுதிகளையும் பரமேஸ்வரா என்பவர் ஆண்டு வந்தார். இவர் ஒரு குறுநில மன்னர். இவர் தமது நிலையை உயர்த்திக் கொள்ளவும், மலாக்காவின் வர்த்தகச் சிறப்பை மேலும் உயர்த்தவும் எண்ணம் கொண்டு, சுமாத்ராவின் கிழக்குக் கரைப் பகுதியில் ஆதிக்கம் பெற்றிருந்த 'பாசை' என்ற பகுதியின் சுல்தானின் அங்கீகாரத்தைப் பெற விரும்பினுர். பரமேஸ்வரா இஸ்லாமிய சமயத்தைத் தழுவினுல்தான் அங்கீகரிக்க முடியும் எனக் கூறி பாசை சுல்தான் மறுத்துவிட்டார். பரமேஸ்வரா மதமாற்றம் செய்து கொள்வதை அவ்வளவாக விரும்பவில்லை. ஆனுல் குஜராத்-வங்காளத்திலிருந்து வந்த இந்திய முகமதிய வர்த்தகர்கள், மலாக்காவின் வர்த்தக முக்கியத்துவத்தை உணர்ந்து வர்த்தகத் தொடர்புகள் ஏற்படுத்திக்கொள்ள விழைந்தனர். இவ் வர்த்தகர்களும் பரமேஸ்வராவை மதமாற்றம் செய்துகொள்ளும்படி வற்புறுத்தினர். இதற்கிடையில் பாசை சுல்தானும் பரமேஸ்வரா இஸ்லாமிய சமயத்தைத் தழுவினுல், அவருக்குத் தம் மகளை மணமுடித்துக் கொடுப்பதாகவும் ஆசை காட்டினுர். பரமேஸ்வராவும் மத மாற்றம் செய்துகொள்ள இணங்கினுர். இஸ்லாமிய சமயத்தின் தென்கிழக்காசிய அடித்தளமாக 'மலாக்கா' மாறியது. பரமேஸ்வரா தமது பெயரை இஸ்கந்தர் ஷா (Ishkandar Shah)

என்று மாற்றிக் கொண்டார். இவருக்குப் பிறகு அரசப் பொறுப் பேற்றவர்கள் இந்துப் பெயரையே கொண்டிருந்தனர். ஆனால் முஸபர் ஷாவின் (Muzaffar Shah 1445c) மலாக்கா இஸ்லாமிய அரசாகவே மாறியது. திருமண உறவுகளால் உயர்நிலையை அடைந்த மலாக்கா அரசு, வர்த்தக முக்கியத்துவத்தால் வளம்பெற்றது. தெற்கில் தமாசெக் (Tamasek-old name for Singapore) வரையிலும், வடக்கில் கேடா (Kedah) வரையிலும் ஆதிக்க வளர்ச்சி பெற்றது. இவருக்குப் பின்னர் வந்த மன்சூர் ஷா (Mansur Shah) என்பவரின் ஆட்சியில் சுமாத்ராவிலிருந்த துறைமுகப் பட்டினங்களாகிய சியாக், காம்பர், இந்திரகிரி, ஜாம்பி (Siak, Kampar, Indragiri, Jambi) ஆகிய பகுதிகளிலும் மலாக்கா அரசு தனது செல்வாக்கினை விரிவடையச் செய்தது. தென்கிழக்காசிய நாடுகள், தீவுக் கூட்டங்கள் முழுவதிலும், ஜாவா, போர்னியோ, மொலுக்க்ஸ் தீவுகள் உட்பட அனைத்துப் பகுதிகளிலும் இஸ்லாம் சமயம் விரிந்து பரந்தது. தென்கிழக்காசிய நாடுகளில் இஸ்லாமிய சமயத்தின் ஆணிவேராக மலாக்கா அரசு விளங்கியது. இவ்வரசு, சீனுவின் தலைமையை ஏற்றுக் கொண்டு, இதுவரை ஆதிக்கம் பெற்றிருந்த இந்து பேரரசான மஜா பாஹித்தை அழித்து, இஸ்லாமியப் பேரரசை உருவாக்கியது.

### மலாக்காவும்-மஜாபாஹித்தும்

ஸ்ரீவிஜயப் பேரரசின் ஆதிக்கத்தை அழித்துப் புகழ் பெற் றிருந்த கிழை ஜாவா பேரரசான மஜாபாஹித்தின் ஆதிக்கம் தென் கிழக்காசிய நாடுகளில் குன்றத் தொடங்கியது. சீனு, சயாம் போன்ற நாடுகளில் தோன்றிய புதிய அரசுகள் மஜாபாஹித்தின் செல்வாக்கினைக் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்திருந்தன. தென்கிழக்காசிய நாடுகளான மலாக்கா, சுமாத்ரா, போர்னியோ, மொலுக்கஸ் போன்றவைகள் பெயரளவுக்குத்தான் மஜாபாஹித் பேரரசின் தலைமையை ஏற்றுக் கொண்டிருந்தன. சிறப்பாக, மலாக்காவில் இஸ்லாமிய சமயம் ஆதிக்கம் பெற்றதையும், அதன் விளைவாக வர்த்தகத் துறையில் மலாக்கா அரசு மிக உயர்ந்த நிலைக்கு வளர்ந்துவிட்டதையும், மஜாபாஹித் பேரரசு உணர்ந் திருந்தாலும், அவ் வளர்ச்சியைத் தடுக்கும் அளவுக்கு வலிமை பெற்றிருக்கவில்லை. மலாக்காவின் வளர்ச்சி, மஜாபாஹித்தின் செல்வாக்கினை மிகவும் குறைத்தது. இஸ்லாமிய மலாக்கா அரசும் ஆரம்ப நிலையில் மஜாபாஹித்தின் தலைமையை ஏற்றிருந்தது. இதன் விளைவாக மஜாபாஹித்தின் துறைமுகங்களில் தடையற்ற வணிக உரிமையையும் பெற்றிருந்தது. இஸ்லாமிய மலாக்கா, போதிய வலிமையடைந்தவுடன் மஜாபாஹித்தைத் தாக்கி அழித்தது. பல நூற்றுண்டுகளாக ஆதிக்கம் செலுத்திவந்த மஜாபாஹித்தின் பெருமை பழங்கதையாக மாறியது.

### மலாக்காவும் சீனுவும்

சயாம் அரசுடனும், சீனுவுடனும் மலாக்கா நட்புறவு கொண்டிருந்தது. பதினைன்காம் நூற்றுண்டின் இறுதியில் சீனுவில் பெரும் அரசியல் மாற்றங்கள் நிகழ்ந்தன. அதுவரை சீனுவை ஆண்ட மங்கோலிய அரசகுலம் வீழ்ந்தது. 'மிங்' (Ming) அரச குலம் ஆதிக்கம் பெற்று நிலைத்தது. மிங்குகளின் ஆட்சியில் சீனுவில் 'கன்பூசிய மதம்' மீண்டும் சிறப்பிடத்தைப் பெற்றது. சீனுவின் பழம்பெருமை புத்துயிர் பெற்றது. இதுவரை மீளாத் துயிலில் ஆழ்ந்திருந்த சீனர்கள் திடுக்கிட்டு விழித்தெழுந்தனர் அல்லது புதிய அரச குலத்தால் தட்டியெழுப்பப்பட்டனர். தீரமிக்க சீனுவின் மறவர் படைகள் எதிரிகளைத் தேடியழித்தன. இந்தோ-சீனு பணிந்தது. ஏனைய தென்கிழக்காசிய நாடுகளை வெல்லுவதற்கு மாபெரும் கடற்படை தயாரானது. செங்-ஹோ (Cheng-Ho) என்பவர் கடற்படைத் தளபதியானுர். இவரது போர்க் கப்பல் களில் சில 400 அடிக்கும் அதிக நீளமுள்ளனவாக இருந்தனவாம். இத்தகைய மாபெரும் கப்பற்படையுடன் செங்-ஹோ தென்கிழக் காசியத் தீவுகள் அனைத்திற்கும் சென்றுர். அத் தீவுகளின் அரசுகள் சீனப் பேரரசருக்குத் திறை செலுத்தும் சிற்றரசுகளாக மாற்றப் பட்டன. சிலோன்வரைக்கும் வந்த செங்-ஹோ, அக்காலத்திய சிலோன் மன்னரை வென்று, அவரைச் சிறைக் கைதியாகச் சீனு விற்குக் கொண்டு சென்றுர். இந் நிலையில் மலாக்கா அரசும் சீனப் பேரரசிற்கு இரு தூது குழுக்களைப் பரிசுகளோடு அனுப்பியது (1407). மலாக்காவின் முகமதிய அரசர்கள் இருமுறை சீனுவிற்குச் சென்று சீனப் பேரரசருக்கு நேரடியாகத் தங்கள் பணிவை அறிவித்தனர். ஆனுல் சீனுவின் இந்தத் திடீர் ஆதிக்கப் பேராசை ஆரம்பித்த வேகத்திலேயே முடிவும் அடைந்தது. 1430-ல் சீனுவின் கதவுகள் மீண்டும் அடைக்கப்பட்டன.

### மலாக்காவும்-சயாமும்

மலாக்கா அரசர்கள் சீனுவின் மேலாண்மையை ஏற்று, திறை செலுத்தியதன் முக்கிய நோக்கம், சீனுவின் ஆதரவைப் பெற்று, தங்களைச் சயாமின் ஆதிக்க வெறியிலிருந்து காத்துக்கொள்ளவே யாம். வர்த்தகத்தின் மூலமாகப் பெருஞ் செல்வம் ஈட்டிய மலாக்கா அரசு 1460ஆம் ஆண்டிற்குள் மிகவும் வலிமை பெற்று சயாமின் எதிர்ப்பை முறியடித்தது. இதன் விளைவாக இஸ்லாம் வடக்கு நோக்கிச் சென்றது. 1474-ல் கேடா (Kedah) அரசும் இஸ்லாமிய சமயத்தைத் தழுவியது.

**மலாக்காவும், சுமாத்ரா மற்றும் ஏனைய பகுதிகளும்**

மலாக்கா அரசு வடக்குப் பகுதியில் சயாம் அரசுடன் போராடி வெற்றிகண்ட அதே நேரத்தில், தெற்கில் சுமாத்ரா, ஜாவாவின் வட பகுதிகளிலும் தனது செல்வாக்கினை வளர்த்துக் கொண்டது. இப் பகுதி அரசுகளுடன் திருமண உறவு கொண்டு இஸ்லாமிய சமயத்தைப் பரப்பியது. இஸ்லாமிய சமயப் பரப்பூழியர்களும் மிகுந்த ஆர்வத்துடன் தங்களது சமயத்தைப் பரப்பினர்.

பதினைந்தாம் நூற்றுண்டின் இறுதியில் தென்கிழக்காசியப் பகுதிகளில் மிகவும் சிறப்புமிக்க அரசாக விளங்கியது இஸ்லாமிய மலாக்கா அரசுதான். இஸ்லாமிய சமயம் ஆதிக்கம் பெற்று நிலைத்துவிட்ட நிலையிலும், மலேயாப் பகுதிகளில் இந்தியப் பண்பாடுகள் முற்றிலும் அழிந்துபடவில்லை. மாறுக இந்திய, இஸ்லாமிய, சீனப் பண்பாடுகளின் கலப்பு ஏற்பட்டது. இன்றும் கூட இம் மூன்று பண்பாடுகளும் மேலைநாட்டுப் பண்பாட்டுப் போட்டியினிடையே நிலைபெற்று இருப்பதைக் காணலாம்.

# 6. ஐரோப்பியர் வருகை

ஐரோப்பிய வரலாற்றில் பதினைரும் நூற்றுண்டு மிகச்சிறப்பான இடத்தைப் பெறுகின்றது. இந் நூற்றுண்டிலிருந்துதான் தற்காலம் தொடங்கியது என்பர். இடைக்காலத்தின் சின்னங்களான நிலமானிய முறை, போப்பாண்டவரின் ஒப்பற்ற தலைமையில் கிறித்தவ சமயத்தின் ஈடுஇணையற்ற செல்வாக்கு, புனித ரோமானியப் பேரரசின் ஐரோப்பியத் தலைமை ஆகிய இம் மூன்றும் புகழ் மங்கி, மதிப்பிழக்கத் தொடங்கின. அதற்கு மாறுக தேசிய நாடுகள் தோன்றின. இனம், மொழி, பண்பாடு இவைகளால் ஒருங்கிணைந்து வாழ்ந்த மக்கள் தேசியப் பற்றுக் கொண்டனர். வலிமை பெற்ற முடிமன்னர்கள் தோன்றினர்கள். இத்தாலியில் தோன்றிய 'மறுமலர்ச்சி இயக்கம்' ஐரோப்பா வெங்கும் பரவியது. கிறித்துவப் பாதிரிகள் கூறியதைக் கண்மூடித்தனமாக நம்பியிருந்த நிலைமை மறைந்து, மனிதன் சிந்திக்கத் தொடங்கினன். ஐரோப்பாவில் 'பகுத்தறிவுக் காலம்' தொடங்கியது. அச்சுப்பொறியும், விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளும் மனிதனின் ஆக்கச் சக்திக்கு ஆரம்ப வித்திட்டன. உலகம் உருண்டையானது என நிருபிக்கப்பட்டது. கிறித்தவ மடாலயங்களின் உயர்தனிச் செல்வாக்கு மறுக்கப் பட்டது. மடாலயங்களின் குறைபாடுகள் மிகைபடுத்தப்பட்டன. சமயக் கருத்துகளைக் கூடப் பகுத்தறிவு பெற்ற புதிய ஐரோப்பியர்கள் சிந்தித்துத் தெளிந்த பின்னரே ஏற்றுக்கொள்ள முன்வந்தனர். சமயத்துறையிலும் புதுமைக் கருத்துகள் தோன்றின. கிறித்துவ உலகம் பிளவுண்டது. கத்தோலிக்கர்கள்-புராடஸ்டண்டுகள் என இருபிரிவினராகக் கிறித்துவ மக்கள் பிரிந்தனர். இது சமயச் சீர்திருத்தம் என ஐரோப்பிய வரலாற்றில் இடம் பெறுகின்றது. ஐரோப்பாவில் புதிதாகத் தோன்றிய தேசிய நாடுகளின் முடிமன்னர்கள் வியத்தகு சாதனைகளைப் புரிந்து நாட்டு மக்களின் அன்பையும், ஐரோப்பிய நாடுகளிடையே தலையாய இடத்தையும்

பிடிக்க வேண்டும் எனப் பேராசை கொண்டனர். நாடுகளிடையே போட்டியும், பொறாமையும், பூசலும் வளர்ந்தன.

இதற்கிடையில் மத்திய ஆசியாவில் ஏற்பட்ட அரசியல் மாற்றங்கள் ஐரோப்பியர்களைப் பெரிதும் பாதிக்கத் தொடங்கின. இந்தியா போன்ற கீழை நாடுகளிலிருந்து ஐரோப்பியரின் வாழ்க்கைக்குத் தேவையான அடிப்படையான பொருள்களும் (மிளகு, இலவங்கம், ஏலக்காய், போன்ற நறுமணப்பொருள்கள்), ஆடை வகைகளும், (பருத்தி, பட்டாடைகள்-சரிகை வேலைப் பாடமைந்த துணி வகைகள்), ஆடம்பரப் பொருள்களான விலையுயர்ந்த நவரத்தினங்களும், மற்றும் மரங்கள், உலோகப் பொருள்கள் போன்ற எண்ணற்ற பொருள்கள் ஏற்றுமதியாயின. இப் பொருள்கள் அனைத்தும் இந்திய அராபிய வர்த்தகர்களால் கடல், தரை வழிகளில் மத்தியதரைக் கடல் துறைமுகப் பகுதி களுக்குக் கொண்டு வரப்பட்டன. அங்கிருந்து இத்தாலிய வணிகர்கள் இத்தாலிய நகரங்களுக்கு எடுத்துச் சென்று, (வெனிஸ், ஜெனோவா, நேப்பிள்ஸ்) ஐரோப்பிய நகரங்களுக்கு விநியோகம் செய்வர். 1453-ல் ஆட்டோமன் துருக்கியர்கள் மத்திய ஆசியாவில் வலிமை பெற்று கான்ஸ்டாண்டிநோபிளைக் கைப்பற்றியதன் மூலம் கீழைரோமப் பேரரசை அழித்து, மத்திய தரைக்கடல் பகுதிகளைக் கட்டுப்படுத்தி, இத்தாலிய வணிகர் களுக்குப் பெரும் தொல்லைகளை விளைவித்தனர். கீழைநாட்டுப் பொருள்களின் தேவை அதிகரித்தது. ஐரோப்பிய நாட்டின் ரனைவரும் பெருந்துயருற்றனர். கீழைநாடுகளுடன் நேரடியாக வர்த்தகத் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள வேண்டியதின் அவசியத்தை உணர்ந்தனர். இந்த நிலையில் மார்க்கோ போலோவின் பயண நூல் ஐரோப்பியர்களின் பேராசையை மேலும் தூண்டியது.

16 ஆம் நூற்றுண்டில் தான் ஐரோப்பியர் உலகம் உருண்டை யானது என்பதை அறிந்தனர். ஐரோப்பியருக்குத் தெரிந்த அட்லாண்டிக் மாகடலுக்கு அப்பால் என்ன இருக்கிறது என்பதை அறிந்து கொள்ளும் ஆவலும் ஏற்பட்டது. தீரச்செயல்கள் மூலம் உலகவரலாற்றில் புகழ் மிக்கதொரு இடத்தைப் பெறும் எண்ணம் கொண்ட வீரத்திலகங்களும் இருந்தனர். பெருஞ்செல்வந்தர்களும் அரசர்களும் இத் துறையில் உதவ முன்வந்தனர். ஐரோப்பியக் கடலோர நாடுகளான ஸ்பெயினும், போர்ச்சுகல்லும் கடலில் ஆய்வுப் பயணங்களை மேற்கொள்ளத் தயாராக இருந்தன. இவர் களுக்கு ‘மாலுமி திசைக் காட்டும் கருவி’ மேலும் ஊக்கமளித்தது. புதிய கடல் வழிகள் கண்டுபிடிக்கும் முயற்சி தொடங்கியது.

அதுவும் கீழைநாடுகளுக்கு நேரடிக் கடல்வழி கண்டு பிடித்தேயாக வேண்டும் என்ற வெறியுணர்வும் தோன்றியது.

கடல் வழிகள் கண்டுபிடிப்பதில் பேரார்வம் கொண்டு முன்னணியில் நின்ற நாடு போர்ச்சுகல். அந் நாட்டின் மன்னரான ஹென்றி என்பார் 'மாலுமி பயிற்சிப் பள்ளி' யொன்றினைத் தொடங்கியும், பல ஆய்வுப் பயணங்களை மேற்கொண்டும் இத் துறையில் மிகுந்த அக்கறை காட்டினார். இதனால் இவருக்கு 'மாலுமி ஹென்றி' (Prince Henry, the Navigator) என்ற சிறப்புப் பெயரும் ஏற்பட்டது. இவரது மறைவிற்குப் பின்னரும் இந்த முயற்சிகள் தொடர்ந்தன. 1487-ல் பார்த்தலோமியோ டயஸ் என்பவர் ஆப்பிரிக்காவின் மேற்குக்கரையோரமாகவே பயணம் செய்து ஆப்பிரிக்காவின் தென்கோடியை அடைந்தார். ஆப்பிரிக்காவின் தெற்கு முனையில் புயற்காற்று வீசியதால் அதற்குப் 'புயல்முனை' எனப் பெயரிடப்பட்டது. இப் புயல்முனை இந்தியாவிற்குக் கடல்வழி கண்டுபிடிக்கும் நம்பிக்கையை ஊட்டியதால் இது பின்னர் 'நன்னம்பிக்கை முனை' என்றழைக்கப் பட்டது. 1497-ல் டயஸ் சென்ற வழியிலேயே பயணம் செய்த மற்றொரு போர்ச்சுகீசிய மாலுமியான வாஸ்கோ டா காமா 1498-ல் இந்தியாவை அடைந்தார். இந்தியாவிற்கு நேரடிக் கடல் வழி கண்டுபிடிக்கப் பட்டுவிட்டது. இவ்வழியைக் கண்டு பிடித்த போர்ச்சுகீசியர் ஐரோப்பிய நாடுகளிடையே மிகுந்த செல்வாக்கினைப் பெற்றனர். இந்திய வர்த்தகத்தின் மூலம் பெரும் பொருளீட்டிய போர்ச்சுகீசியர் தென்கிழக்காசிய நாடுகளையும் அடைந்தனர். போர்ச்சுகீசியர் புதிய கடல் வழிகள் கண்டு பிடிப்பதில் முனைந்திருந்த அதே நேரத்தில் ஸ்பெயினும் கடற் பயணங்களை மேற்கொண்டது. கொலம்பஸ் இந்தியாவிற்கு கடல்வழி கண்டு பிடிக்கும் முயற்சியிலிறங்கினார். அவரது முயற்சிகளின் விளைவாக மேற்கிந்திய தீவுகள் கண்டுபிடிக்கப்பட்டன. அமெரிகோ வெஸ்புச்சி என்பவர் கொலம்பஸின்வழியில் சென்று கொலம்பஸ் கண்டு பிடித்தது இந்தியாவன்று. வேறு ஒரு புதிய கண்டமேயென அறிவித்தார், அப் புதிய கண்டம் 'அமெரிக்கா'வென அழைக்கப் பட்டது. ஸ்பானியர் தென் அமெரிக்காவில் ஆதிக்கம் பெற்றனர். ஸ்பெயின்-போர்ச்சுகீசிய நாடுகளுக்கிடையே ஏற்பட்ட இப் போட்டியைத் தவிர்க்கும் முறையில் போப்பாண்டவர் அட்லாண்டிக் பெருங்கடலை மையமாகக் கொண்டு, உலகை இரு கூறுகப் பிரித்து கிழக்குப் பகுதியைப் போர்ச்சுகீசியருக்கும், மேற்குப் பகுதியை ஸ்பானியருக்கும் கொடுத்தார். இதனால் வேறு எந்த ஐரோப்பிய நாட்டினரின் போட்டியின்றி போர்ச்சுகீசியர் கீழைநாடுகளில் செல்வாக்குப் பெற்றனர். கிட்டத்தட்ட ஒரு நூற்றாண்டுக் காலம்

போர்ச்சுகீசியர் கீழை நாடுகளில் தனித்து ஆதிக்கம் பெற்றிருந்த தால் அந் நூற்றுண்டு 'போர்ச்சுகீசியரின் நூற்றுண்டு' (The Portuguese Century) எனத் தென்கிழக்காசிய வரலாற்றில் குறிப் பிடப்படுகின்றது.

இந்தியாவை அடைந்த போர்ச்சுகீசியர் இந்தியாவின் மேற்குக் கரையில் இருக்கும் 'கொச்சின்' நகரைத் தங்கள் தலைமை வர்த்தக நிலையமாக ஏற்படுத்திக் கொண்டனர். வர்த்தகத்தோடு அரசியலிலும் ஈடுபட்டனர். இந்தியாவில் போர்ச்சுகீசியக் குடியேற் றங்களையும் அமைத்தனர். கீழைநாடுகளின் போர்ச்சுகீசிய ஆளுநராக 'அல்மைதா' (Almeida) என்பவர் நியமிக்கப் பட்டார். அவருக்குப் பின்னர் வந்த அல்பான்ஸோ-தி-அல்புகர்க் (Albonso-de Albuquerque) என்பவர்தாம் போர்ச்சுகீசிய ஆளுநர் களுக்குள்ளேயே மிகவும் சிறப்பு வாய்ந்தவர். இவர் இந்தியாவில், கோவாவை வென்று அதைத் தமது தலைநகராக்கிக் கொண்டார். பாதுகாப்புக்காகப் பெரும் கோட்டை ஒன்றனைக் கட்டி, தமது வீரர்களைக் கொண்டு பாதுகாத்தார். இந்தியாவின் கிழக்குக் கடற்கரையிலும் சில துறைமுகங்களை வென்று, போர்ச்சுகீசிய ஆதிக்கத்தை மேலும் வலிவுள்ளதாக்கினுர். பின்னர் கிழக்கிந்தியத் தீவுகளிலும் தம் ஆதிக்கத்தை நிறுவி, வர்த்தக, அரசியல் சிறப் படையும் எண்ணம் கொண்டு செயல்பட்டார்.

பிரான்சிஸ்கோ அல்மைதா (Francisco D'Almeida) ஆளுநராக இருந்தபோது இந்தியாவின் மேற்குக் கரைப்பகுதிகளில் தமது ஆதிக்கத்தை ஏற்படுத்த முனைந்தார். இதன் விளைவாக 1509-லிருந்து 1511 வரை இந்திய முகமதியர்களுக்கும், போர்ச்சு கீசியருக்குமிடையே கடும் போர்கள் நிகழ்ந்தன. முகமதியர்களுக்கு ஆதரவாக எகிப்திய சுல்தானும் கப்பல் படையொன்றினை அனுப்பினுர். அப் படைகளை டையுவில் அல்மைதா தோற்கடித் தார். இவ் வெற்றிக்குப் பின்னர் போர்ச்சுகீசியரை எதிர்க்கும் துணிவு இந்திய அரசுகளுக்கு ஏற்படவில்லை. டையுவில் பெற்ற வெற்றிக்குப் பின்னர் போர்ச்சுகீசியக் கப்பற்படை இந்தியப் பெருங் கடலைக் கடந்து மலாக்காவை அடைந்து வர்த்தக உரிமை கோரியது. மலாக்காவில் செல்வாக்குப் பெற்றிருந்த குஜராத்தி வர்த்தகர்கள் போர்ச்சுகீசியருக்கு வணிக உரிமைகள் வழங்குவதை எதிர்த்தனர். போர்ச்சுகீசியக் கப்பற்படை சிறுதாக்குதல் ஒன்றை நடத்திவிட்டு வெறுங்கையுடன் திரும்பியது.

அல்மைதாவிற்குப் பின்னர் 1509-ல் பதவியேற்ற அல்புகர்க் போர்ச்சுகீசிய வர்த்தகச் செல்வாக்கினை ஆசியா முழுவதிலும்

ஏற்படுத்துவதையே தமது தலையாய நோக்கமாகக் கொண்டார். கோவா நகர் போர்ச்சுகீசியரின் தலை நகராக்கப்பட்டது. இந்தியா வில் போர்ச்சுகீசியரின் நிலையை உறுதி செய்த பின்னர் 1511-ல் மலாக்கா நோக்கித் தமது பார்வையைச் செலுத்தினார். பதினெட்டுப் பெரிய போர்க்கப்பல்களுடன் இந்தியப் பெருங்கடலைக் கடந்து சுமாத்ராவிலுள்ள பாசை (Pasai), பெதிர் (Pedir) துறைமுகங்கள் வழியாக ஜூலைத் திங்கள் முதல் நாளன்று (1511) மலாக்காவை நெருங்கினார். அல்புகர்க் மலாக்காவை அடைந்தகாலை அந் நகர் விழாக்கோலம் பூண்டிருந்தது. மன்னரின் திருமண விழாவினை யொட்டி மலாக்கா நகர் முழுவதும் அலங்கரிக்கப் பட்டிருந்தது. முப்பது சக்கரங்கள் பொருத்தப்பட்ட மாபெரும் வண்டியில், தாரை-தப்பட்டைகள் முழங்க, இடியோசையென பீரங்கிகள் மகிழ்ச்சி முழக்கங்கள் புரிய அரச ஊர்வலம் வீதி உலா வந்தது.

இந்த நேரத்தில் தமது பெரும் பீரங்கிகளுடன் சென்று அல்புகர்க் வர்த்தக உரிமைகள் கோரினார். 1509ஆம் ஆண்டு சிறைப்பிடிக்கப்பட்ட போர்ச்சுகீசியர்களை உடனடியாக விடுதலை செய்யும்படியும் கோரினார். பேச்சுவார்த்தைகள் தொடங்கின. துப்பாக்கி முனையில் நடந்த இப் பேச்சு வார்த்தைகள் பயனேது மின்றி முறிந்தன. ஜூலை 25ஆம் நாள் போர்த்துகீசியப் பீரங்கிகள் முழங்கின. ஆகஸ்டு 10ஆம் நாள் மலாக்கா சரணடைந்தது. தென் கிழக்காசிய நாடுகளில் வெற்றி முழக்கத்தோடு போர்ச்சுகீசியச் செல்வாக்குத் தொடங்கியது.

இந்தியப் பெருங்கடலில் போர்ச்சுகீசிய வர்த்தகக் கலங்கள் தடையின்றிப் பயணம் செய்யும் வகையில், அல்புகர்க் திட்டங்கள் தீட்டிச் செயல்படுத்த முனைந்தார். போர்ச்சுகல்லுக்கும், தென் கிழக்காசிய நாடுகளுக்குமிடையே உள்ள வர்த்தக வழிகளைப் பாதுகாக்கும் முறையில் முக்கிய இடங்களில் போர்ச்சுகீசியரின் கோட்டைகள் ஏற்படுத்தப்பட்டன. போர்ச்சுகீசிய வர்த்தகத்தை மேலும் விரிவடையச் செய்வதே இவரது முக்கிய குறிக்கோளாய் இருந்ததே தவிர, அரசியல் செல்வாக்கை ஏற்படுத்துவதில் அன்று. இதன் பொருட்டு வர்த்தக முக்கியத்துவம் பெற்ற இடங்களில் பலமான கோட்டைகள் கட்டப்பட்டன. இக் கோட்டைகளும் கடல் வழிகளையே நோக்கி இருந்தன. சில இடங் களில் உள்நாட்டிலும் நுழைய வேண்டிய அவசியம் ஏற்பட்ட பொழுதும், தயக்கத்துடனேயே நுழைந்தனர். பொதுவாகப் போர்ச்சுகீசியரின் வழிமுறைகளை மூன்றாகப் பிரிக்கலாம். முதலாவது ஆய்வுப் பயணங்கள், இரண்டாவது தொழிலகங்கள், மூன்றாவது கோட்டைகளைக் கட்டிப் பாதுகாத்தல் ஆகும்.

இவர்களுக்குப் பின்னர் வந்த ஐரோப்பிய நாட்டினர் அனைவருமே பெரும்பாலும் போர்ச்சுகீசியரின் இம் மூன்று முறைகளையே பின்பற்றினர் என்பது நினைவிற்கொள்ள வேண்டிய கருத்தாகும். அவர்களின் கோட்டைகள், அவற்றிற்குள் வாழ்ந்த மக்களின் பண்பாடுகள் ஆகிய அனைத்தும், ஐரோப்பிய நகரங்களின் மாதிரியிலேயே அமைந்திருந்தன.

மலாக்காவை வென்ற போர்ச்சுகீசியர், அந் நகரில் தங்களது கோட்டையைக் கட்டி, தென்கிழக்காசிய நாடுகளின் தலைமையிடமாக மாற்றும் பணியில் ஈடுபட்டனர். சுல்தானின் மசூதி அழிக்கப்பட்டது. அம் மசூதியின் கற்களையும், சுல்தான்களின் கல்லறைக் கற்களையுமே கொண்டு மிகவுயர்ந்த காவல் கோபுரம் (Tower-Watch Tower) கட்டப்பட்டது. மரத்தாலான சுல்தானின் அரண்மனை இருந்த மலையுச்சியில் கற்களைக் கொண்டு கட்டப்பட்ட கிறித்தவ ஆலயம் நிறுவப்பட்டது. இவைகளை மையமாகக் கொண்டு பெரிய கோட்டைச்சுவர் எழுப்பப்பட்டது. இக் கோட்டையினுள் ஆளுநரின் மாளிகை, ஆட்சித்துறை அலுவலகங்கள், பண்டகசாலைகள், கிறித்தவ ஆலயங்கள், பாதிரிகளின் மடம், பாசறை, மருத்துவமனை, சிறைச்சாலை, கல்வி நிலையம் ஆகியவைகள் கட்டப்பட்டன.

வாஸ்கோ டா காமா கள்ளிக்கோட்டையில் இறங்கியதும், அவரது நோக்கங்களைப் பற்றி வினவியபோது, ‘கிறித்தவ சமயமும், வர்த்தகமும்’ என்று பதிலிறுத்தாராம். இதிலிருந்து போர்ச்சுகீசியரின் மனப்பாங்கு புலப்படுகிறது. வர்த்தகச் செல்வாக்கினை ஏற்படுத்தும் அதே நேரத்தில் தமது சமயத்தைப் பரப்புவதையும் தங்களது குறிக்கோளாகக் கொண்டிருந்தனர் என்பது விளங்குகிறது. அதேபோல மலாக்காவில் ஆதிக்கம் பெற்ற போர்ச்சுகீசியரும் வன்முறை வாயிலாகத் தமது வர்த்தகத்தையும், சமயத்தையும் வளர்க்கத் தொடங்கினர். இந்தியாவில் இருந்தது போலவே மலாக்காவிலும் முகமதியர்களின் எதிர்ப்பை போர்ச்சுகீசியர் உணர்ந்தனர். எனவே வன்முறைகள் மூலமாக முகமதியர்களை அழித்தல், அல்லது முகமதியக் கப்பல்களைக் கொள்ளையடித்து அழித்தல் போன்ற முறைகளைத் தடையின்றிப் போர்ச்சுகீசியர் பின்பற்றினர். போர்ச்சுகீசியரின் சமய ஆர்வமும், வெறியும், ஆசிய மக்களுக்குப் புதியவை. இதுவரை அவர்கள் அறியாத ஒன்றாகும். ஆரம்ப கால எதிர்ப்புகள், வன்முறைச் செயல்களுக்குப் பின்னர் ஐரோப்பியர்களும், மலாக்கா மக்களும் ஒருவரையொருவர் மதித்து நடக்கத் தொடங்கினர். சமயத்தைப் பரப்புவதையே தங்கள் குறிக்கோளாகக் கொண்டிருந்த திருச்

சபையும், கல்விக் கூடங்களை நிறுவியும், சமுதாய ஆக்கப் பணிகளை மேற்கொண்டும் மக்களின் ஆதரவைப் பெற்றது. போர்ச்சுகீசியர் ஆசிய மக்களுடன் கலந்து இணைந்து வாழ ஆரம்பித்தனர். போர்ச்சுகீசிய-ஆசியக் கலப்புத் திருமணங்கள் வரவேற்கப் பட்டன.

மலாக்காவைத் தலைமையிடமாகக் கொண்ட போர்ச்சுகீசியர் கள் தென்கிழக்காசிய நாடுகளிடையே ஒற்றுமையின்மையை நன்கு பயன்படுத்திக் கொண்டு வளம்பெற்றனர். ஜாவா, சுமாத்ரா, மலாக்கா, சயாம் அரசுகளுக்கிடையே இருந்த பகையுணர்வை மேலும் தூண்டிவிட்டு, அவ்வரசுகள் தங்களின் வர்த்தகத்திற்கு இடையூறு விளைவிக்கா வண்ணமும், தங்களை வெளியேற்ற, இணைந்து செயல்படாதிருக்கும்பொருட்டும் முன்னெச்சரிக்கை யாகச் செயல்பட்டனர். இந் நோக்கத்தினால்தான் அவர்களுக் குள்ளே இருந்த பகைமையைத் தூண்டிவிட்டு, தாங்கள் தப்பித்துக் கொண்டதோடு மட்டுமல்லாமல் பயனும் பெற்றனர்.

போர்ச்சுகீசியரின் நோக்கம் கிழக்கு நோக்கி மேலும் செல்வ வதாகும். நறுமணத்தீவுகள் என்றழைக்கப்பட்ட மொலுக்கஸ் தீவுக்கூடங்களை அடைவதே அவர்களது குறிக்கோளாம். 1511ஆம் ஆண்டின் இறுதியில் மொலுக்கஸ் தீவுகளை நோக்கிப் போர்ச்சுகீசிய கப்பற்படையொன்று அனுப்பட்டது. அம்பாய்னாவை (Amboyna) அடைந்த இப் படை புயல்காற்றினால் சிதைந்தது. எஞ்சியிருந்த ஒரே கப்பல் மொலுக்கஸ் தீவுக்கூட்டங்களில் ஒன்றான இலவங்கத் தீவிற்கு (Tarnate or Cloves Island) அடித்துச் செல்லப்பட்டது. இவ்விலவங்கத் தீவிலிருந்து போர்ச்சுகீசியரின் செல்வாக்கு மேலும் பெருக ஆரம்பித்தது. மொலுக்கஸ் தீவை அடைந்த போர்ச்சு கீசியரை ஸ்பானியர் எதிர்த்தனர்.

**ஸ்பெயின்**

1519-ல் ஸ்பெயினிலிருந்து புறப்பட்ட மெகல்லன் அட்லாண்டிக் பெருங்கடலைக் கடந்து, தென் அமெரிக்காவின் தென்கோடி முனையைச் சுற்றிப் பசிபிக் பெருங்கடலைக் கண்டறிந் தார். பசிபிக் பெருங்கடலில் பயணம் செய்து 1521-ல் பசிபிக் கடலிலிருந்த தீவுக்கூட்டம் ஒன்றினை அடைந்தார். அவைகளுக்கு லாத்ரோன்ஸ் (அ) திருடர் தீவுகள் எனப் பெயரிட்டார் (Ladroneosr Rober Islands). பின்னர் அத்தீவுகள் மரியானு தீவுகள் (Marianas Islands) என அழைக்கப்பட்டன. பின்னர் மற்றொரு பெரிய தீவுக்கூட்டத்தையடைந்து அவற்றிற்குப் புனித லாசரஸ் தீவுகள் (St Lazarus) எனப் பெயரிட்டார்.

பின்னர் அத் தீவுகள் பிலிப்பைன் தீவுகள் என அழைக்கப்படடன. நறுமணத் தீவுகளை அடைந்த மெகல்லன் (Moluccas Islands) உள்நாட்டுப் போரில் தலையிட்டதன் விளைவாகக் கொல்லப் பட்டார். ஆனால் அவரது கப்பல்களில் ஒன்றான விட்டோரியா (Vittoria) இந்தியப் பெருங்கடலைக் கடந்து ஸ்பெயினை அடைந்தது. உலகை வலம் வந்த முதல் நிகழ்ச்சி என்றாலும், நறுமணத் தீவு களுக்கு வழி கண்டுபிடித்ததையே ஸ்பானிய அரசு மிகவும் சிறப் பானதாகக் கருதிப் போற்றியது. ஐரோப்பிய நாடுகள் அனைத்தும் முதன் முதல் உலகம் சுற்றிய அந் நிகழ்ச்சியை மட்டுமே பாராட்டியது.

16ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் இவ்வாறாகப் போர்ச்சு கல்லும், ஸ்பெயினும் இரு வழிகளில் நறுமணத் தீவுகளை அடைந்தன. இது ஸ்பெயின்-போர்ச்சுகல்லுக்கிடையே போட்டியை ஏற்படுத்தியது. மலாக்காவிலிருந்து போர்ச்சுகீசியக் கப்பற்படை மொலுக்கஸ் தீவுகளில் ஆதிக்கம் செலுத்தும் எண்ணத்துடன் முன் னேறியது. இதனைக் கண்ணுற்ற ஸ்பெயின் போர்ச்சுகல்லுடன் சமாதான உடன்படிக்கை செய்து கொண்டது. இதன் பின்னர் போர்ச்சுகல் வர்த்தகச் செல்வாக்கினை ஏற்படுத்தியதுடன், தனது குடியேற்றங்களையும் நிறுவ முயன்றது. மொலுக்கஸ் தீவுகள் வெற்றி கொள்ளப்பட்டன. கிறித்தவ சமயமும் பரப்பப்பட்டது.

மெக்சிகோவை வென்ற ஸ்பானியர்கள் அதனைத் தங்களின் வர்த்தகச் சிறப்பிடமாக மாற்றிக்கொண்டனர். மெக்சிகோவி லிருந்து சென்ற ஸ்பானியக் கப்பற்படை, போர்ச்சுகீசியரின் பற்றிடங்களைத் தவிர்த்து, லுசான் (Luzon) தீவை வென்றது. இத் தீவில் 1571-ல் மணிலா (Manila) நகர் நிறுவப்பட்டது. பின்னர் ஏனைய தீவுகளையும் வென்று, பிலிப்பைன் தீவுகளைத் தனது குடியேற்ற நாடாக ஏற்றுக்கொண்டது.

மலாக்காவிலிருந்து போர்ச்சுகீசியர் சயாம், சீன அரசு களுடனும் தொடர்பு கொண்டனர். இத் தொடர்புகளின் வாயிலாக அயுத்தியா, மெர்குயி, நாகன் (Aytiya, Mergui, Nakan) போன்ற சயாம் நகரங்களில் நிலையங்களை ஏற்படுத்திக் கொண்டு, வர்த்தகம் செய்யும் உரிமைகளைப் போர்த்துகீசியர் பெற்றனர். பின்னர் சயாமின் பகை நாடான பர்மாவிலும் போர்ச்சுகீசியர் வர்த்தக உரிமைகளைப் பெற்றனர். பர்மா, இந்தோ-சீன நாடு களில் இருந்த அரசியல் குழப்பங்களைப் பயன்படுத்திக்கொண்டு, போர்ச்சுகீசியரும் ஸ்பானியரும், வர்த்தக உரிமைகளைப் பெற்றனர். போர்ச்சுகீசியர் இந்தோ-சீன நாடுகளில் கூலிப்படையினராகவும்

பணியாற்றினர் (Mercenary Army). இன்னும் சில இடங்களில் வன்முறைகள் மூலமாக வர்த்தகம் செய்து கொழுத்த இலாபம் அடைந்தனர்.

தெற்கில் சுமாத்ரா, ஜாவா, அரசுகளுடனும், போர்ச்சுகீசியர் போரிட்டு வர்த்தக உரிமைகளைப் பெற்றனர். முதலில் சுமாத்ராவி லிருந்த 'பாசை' போர்ச்சுகீசியர் வசமானது. பின்னர் சுமாத்ரா தீவு முழுவதையும் கைப்பற்றினர். இவ் வெற்றிகளுக்கெல்லாம் மூல காரணம், போர்ச்சுகீசியரின் எதிரிகளிடையே காணப்பட்ட ஒற்றுமையின்மையாகும். இருப்பினும் போர்ச்சுகீசியர்கள் அவ்வளவு எளிதாக வெற்றிபெற இயலவில்லை. மலேயர்கள் ஜாவா அரசின் உதவியுடன் போர்ச்சுகீசியரை வெளியேற்ற முயன்று தோல்வியுற்றனர். பதினாறும் நூற்றாண்டு முழுவதும் போர்ச்சுகீசியரின் தனிச் செல்வாக்கு தென்கிழக்காசிய நாடுகளில் விளங்கியது. 17ஆம் நூற்றாண்டில் தென்கிழக்காசியாவில் நுழைந்த டச்சுக்காரர்கள் போர்ச்சுகீசியக் குடியேற்றங்களைப் பிடித்துக் கொண்டு, போர்ச்சுகீசியரை தென்கிழக்காசிய நாடு களின்று வெளியேற்றினர்.

### போர்ச்சுகீசியரின் வீழ்ச்சிக்கான காரணங்கள்

1. போர்ச்சுகல் மிகக் குறுகிய காலத்தில் மிகப் பெரிய குடியேற்றங்களை அமைத்து, வர்த்தக உரிமைகளையும் பெற் றிருந்தது. தங்களது குடியேற்ற நாடுகளில் இருந்த உள்நாட்டு எதிர்ப்புகளை அடக்கினரே தவிர, முழுவதுமாக அழிக்கவில்லை. உள்நாட்டு எதிர்ப்பு வலிமை பெற்று, போர்ச்சுகீசியருக்கு ஆபத்தை உருவாக்கும் நிலை இருந்துகொண்டேயிருந்தது. குடியேற்ற நாடுகளில் பணிபுரிந்த போர்ச்சுகீசிய அதிகாரிகளும் அரசின் குடியேற்றக் கொள்கைகளில் வெறுப்பும், சலிப்பும் கொண்டிருந்தனர்.

2. போர்ச்சுகீசிய வர்த்தகம், குடியேற்றக் கொள்கைகள் அரசின் பொறுப்பிலேயே இருந்தன. ஆசிய வர்த்தகம் அரசின் ஒரு துறையாக இருந்ததே தவிர, வர்த்தகக் கழகங்களோ, அல்லது தனியார் வர்த்தகக் குழுக்களோ ஏற்படுத்தப்படவில்லை. எனவே, அரசின் வர்த்தக-குடியேற்றக் கொள்கைகள் நிலமானிய முறை அடிப்படையிலேயே இருந்தது. பெருத்த இலாபத்தையே எதிர் பார்த்த அரசு, வருவாய் குறைந்தபோது, ஊக்கம் காட்டி, முன்னேறும் வழிவகைகள் செய்து கொடுக்கத் தவறியது; விரும்பவும் இல்லை,

3. ஆரம்பத்திலிருந்தே போர்ச்சுகீசியர் வன்முறைச் செயல்களில் ஈடுபட்டுவந்தனர். வர்த்தக உரிமைகளைப் பெறுவதிலும், குடியேற்றங்களை அமைப்பதிலும், கிறித்தவ மதத்தைப் பரப்புவதிலும் வன்முறை கையாளப்பட்டது. இத்தகைய வன்முறைகளால் ஏற்படுத்தப்படுகின்ற எந்த அரசுமே நீண்டகாலம் நிலைக்க முடியாது. மேலும் போர்ச்சுகல் குறைந்த மக்கள் தொகையைக் கொண்ட சிறிய நாடு. மிகப் பெரிய குடியேற்றங்களை ஏற்படுத்திக் கட்டிக் காக்கும் அளவுக்குத் தேவையான மிகப் பெரிய படையையும் உருவாக்க இயலவில்லை. அவ்வாறே படை ஏற்படுத்தப் பட்டாலும், வர்த்தகத்திலிருந்து கிடைக்கின்ற இலாபத்தில் பெரும்பகுதி படைப் பாதுகாப்புக்காகவே செலவிட நேரிடும். ஆரம்ப நிலையில் வன்முறை-வர்த்தகத்தினுல் பெரும் பொருளீட்டிய போர்ச்சுகீசியர், பின்னர் ஏற்பட்ட பெரும் போர்களில் ஏற்பட்ட செலவுகளைச் சமாளிக்க இயலாது திண்டாடினர். போர்ச்சுகீசியர் தங்களது வணிக இலாபத்தைப் பயன்படுத்தி, திறமைமிக்க குடியேற்ற அரசுகளை நிறுவி, சமுதாய நற்பணிகள் மூலம் மக்களின் ஆதரவைப் பெற்று நிலைத்திருக்க முடியும். ஆனுல் போர்ச்சுகீசியர் அவ்வாறு செய்ய மறந்தனர்.

4. போர்ச்சுகீசிய அதிகாரிகளும், படையினரும், மிகவும் குறைந்த ஊதியமே வழங்கப் பெற்றனர். இதனுல் பொறுப்பின்மையும், ஊழல்களும் மலிந்தன. சொந்த வியாபாரம் செய்து, இலாபம் பெற ஒவ்வொருவரும் முயன்றனர். இதனுல் அரச வர்த்தகம் சீர்குலைந்தது. பொதுநலத்தை மறந்து, சுயநலத்தைப் பேணும் அதிகாரிகளைத் தடுக்கவோ, தண்டிக்கவோ லிஸ்பன் அரசால் முடியவில்லை. அதனுல் பணத்தட்டுப்பாடு ஏற்பட்டது. 16ஆம் நூற்றுண்டின் இறுதியில், டச்சுக்காரர்களும், ஆங்கிலேயரும், பிரெஞ்சுக்காரரும் குடியேற்றப் போட்டியிலீடுபட்ட போது, சீரழிந்த நிலையிலிருந்த போர்ச்சுகல் வெளியேற வேண்டியதாயிற்று.

5. போர்ச்சுகீசியரின் எண்ணம் முழுவதும் நறுமணத் தீவுகளான மொலுக்கஸ் தீவுக்கூட்டங்களைக் கைப்பற்றுவதிலேயே இருந்ததே தவிர, ஜாவா, சுமாத்ரா போன்ற பகுதிகளைக் கைப்பற்ற எந்தவித நடவடிக்கைகளும் எடுக்கப்படவில்லை. ஆரம்ப முதலே தவருன கொள்கைகளைப் பின்பற்றி, ஐரோப்பிய நாடுகளின் போட்டியன்றி வெற்றிபெற்ற போர்ச்சுகல், மற்ற ஐரோப்பிய நாட்டினர் போட்டியிட்டபோது, தற்காப்பு ஏற்பாடுகள் ஏதுமற்ற நிலையில் தோற்கடிக்கப்பட்டு வெளியேற்றப் பட்டது.

## இயல் ஏழு

# 1. ஆங்கிலேயர்களும் டச்சுக்காரர்களும்

### டச்சு கிழக்கிந்திய வர்த்தகக் குழுவின் தோற்றம்

போர்ச்சுகீசிய வர்த்தகக் கப்பல்கள் கீழை நாடுகளிலிருந்து கொண்டுவந்த நறுமணப் பொருள்களையும், ஏனைய பொருள்களையும், லிஸ்பனிலிருந்து மற்ற ஐரோப்பியத் துறைமுகங்களுக்கு ஹாலந்து நாட்டுக் கப்பல்கள் எடுத்துச் சென்றன. ஹாலந்து நாட்டினரின் வெளிநாட்டு வர்த்தக வளர்ச்சி இவ்வாறு ஆரம்பமாயிற்று. ஸ்பெயினுக்கெதிராக ஹாலந்து நாட்டினர் கலகம் செய்ததன் விளைவாக லிஸ்பனுடன் நடத்திய வர்த்தகம் தடைபட்டது (1580). ஸ்பெயின்-போர்ச்சுகல் அரசுக்கு எதிரான நடவடிக்கைகளில் ஹாலந்து ஈடுபட்டது. வர்த்தகத்துறையிலும் போட்டி ஆரம்பமானது. போர்ச்சுகீசியரின் தென்கிழக்காசிய வர்த்தக முற்றுரிமையை எதிர்க்கும் வண்ணம் டச்சுக்காரர்களும் தங்களது வர்த்தக நோக்கங்களை உருவாக்கிக் கொண்டனர். முதல் டச்சு கிழக்கிந்திய வர்த்தகக் குழு தி ஊட்மென் (De Houtman) என்பவரின் தலைமையில் நான்கு கப்பல்களுடன் 1595ஆம் ஆண்டு ஆம்ஸ்டர்டாம் நகரிலிருந்து புறப்பட்டது. ஜாவாவின் மேற்குக் கரையிலுள்ள பாண்டம் (Bantam) துறைமுகத்தை 1596-ல் அடைந்து வர்த்தக உரிமைகளைப் பெற்ற பின்னர் (பாண்டம் துறைமுகம் மிளகு வர்த்தகத்தில் சிறந்தது) ஜகார்த்தா வழியாக, பாலி, மதுரா தீவுகளைச் சுற்றிவிட்டு, ஆம்ஸ்டர்டாம் திரும்பியது. தி ஊட்மெனின் இவ்வெற்றி டச்சுக்காரர்களிடையே பெரும் உற்சாகத்தை மூட்டியது. ஏராளமான டச்சுக் கிழக்கிந்திய வர்த்தகக் குழுக்கள் தொடங்கப் பட்டன. 1595-லிருந்து 1601ஆம் ஆண்டுக்குள் மொத்தம் 65 கப்பல்கள்

15 வர்த்தகக் குழுக்களாக ஹாலந்தினின்று தென் கிழக்காசியத் துறைமுகங்களை நாடிச் சென்றன. ஒவ்வொரு குழுவும், தென் கிழக்காசிய அரசுகளுடன் தனித்தனியாக வர்த்தக ஒப்பந்தங்களைச் செய்து கொண்டு திரும்பின. அம்பாய்ன, பண்டா போன்ற மொலுக்கஸ் தீவுகளையும் அடைந்து வர்த்தக உரிமைகளைப் பெற்றிருந்தனர்.

ஏற்கெனவே தென்கிழக்காசிய நாடுகளில் ஆதிக்கம் பெற்றிருந்த போர்ச்சுகீசியருக்கு எதிரான நடவடிக்கைகளிலும் டச்சுக்காரர்கள் இறங்கினர். போர்ச்சுகீசியரின் எதிரிகளான அச்சின் (Achin—Sumatra) அரசுடன் உறவு கொண்டு, முகமதியருடனும் நட்புறவு கொண்டு கிழக்காசிய நாடுகளில் டச்சுக்காரர்கள் செல்வாக்குப் பெற முயன்றனர். போர்ச்சுகீசியருக்கும், டச்சுக்காரர்களுக்கும் இதனால் மோதல் ஏற்பட்டது. 1597-ல் மலாக்கா அருகில் முதல் மோதல் ஏற்பட்டது. 1602-ல் பாண்டம் துறைமுகத்திற்கருகில் போர்ச்சுகீசிய கப்பற்படையை முறியடித்து டச்சுக்காரர்கள் ஆதிக்கம் பெற்றனர். மொலுக்கஸ் தீவுகளை நோக்கி டச்சுக்காரர்கள் முன்னேற ஆரம்பித்தனர்.

போர்ச்சுகீசிய எதிர்ப்பை முறியடித்துத் தென்கிழக்காசிய நாடுகளில் டச்சுக்காரர்கள் வர்த்தக ஆதிக்கம் பெற வேண்டுமெனில் தனியார் முயற்சியில் ஏற்படுத்தப்பட்ட வர்த்தகக் குழுக்கள் மட்டும் போதாது என்பதனை டச்சு அரசு உணர்ந்தது. எனவே தனித்தனியாகச் செயல்பட்டு வந்த டச்சு தனியார் வர்த்தகக் குழுக்களை இணைத்து, புதிய வர்த்தகக் கூட்டுக் குழுவை அமைக்கும் பணியை அரசு ஏற்றது. 1602-ல் 'டச்சு கிழக்கிந்திய வர்த்தகக் கூட்டுக்குழு' (United East India Company) உருவானது. 60 இயக்குநர்களைக் கொண்ட ஆட்சிக் குழுவும் (Board of Governing Body) 17 உறுப்பினர்களைக் கொண்ட செயற்குழுவும் (Executive Committee of Board of Control) ஏற்படுத்தப்பட்டன.

### ஆங்கில கிழக்கிந்திய வர்த்தகக் குழுவின் தோற்றம்

15,16ஆம் நூற்றாண்டுகளில் இங்கிலாந்து உலக வர்த்தகத்தில் அவ்வளவாக அக்கறை காட்டவில்லை. இவ்விரு நூற்றாண்டுகளிலும் ஸ்பெயினும், போர்ச்சுகலுமே வர்த்தக முற்றுரிமைகளைப் பெற்று உலகக் கடற்பரப்பில் போட்டியின்றி உலாவி வந்தனர். ஆனால் 16ஆம் நூற்றாண்டிலிருந்தே வெளிநாட்டு வர்த்தகத்தைப் பெருக்கும் முயற்சியில் இங்கிலாந்தும் ஈடுபடத் தொடங்கியது. போர்ச்சுகலும், ஸ்பெயினும் கடல் வழிகள் அனைத்திலும்

ஆதிக்கம் பெற்றிருந்ததால், இங்கிலாந்து வேறு புதிய கடல்வழிகளைக் கண்டு பிடிக்க முயன்றது. இம் முயற்சிகள் பலனளிக்கவில்லை. இங்கிலாந்துக்கும், ஸ்பெயினுக்குமிடையே 1577-ல் தொடங்கிய பகைமையுணர்வு, இங்கிலாந்தை ஸ்பானியருக்கெதிரான நடவடிக்கைகளில் ஈடுபடுமாறு தூண்டியது. ஸ்பானிய வர்த்தக ஆதிக்கத்தை முறியடிக்கும் எண்ணமும் வளர்ந்தது. பிரான்சிஸ் டிரேக் என்பவர் பிளைமவுத் துறைமுகத்திலிருந்து தமது கடற்பயணத்தைத் தொடங்கினர். 1579-ல் மொலுக்கஸ் தீவுக் கூட்டங்களில் ஒன்றான தெர்னேட் (Tarnate) தீவில் இறங்கிய டிரேக், அத் தீவின் சுல்தானுடன் வர்த்தக ஒப்பந்தம் ஒன்றனைச் செய்து கொண்டு, இலவங்க மூட்டைகளுடன் இங்கிலாந்திற்குத் திரும்பினர். இதிலிருந்து ஆங்கிலேயரின் உலக வாணிப வளர்ச்சி தொடங்கியது. டிரேக்கைப் பின்பற்றி ரால்ப் பிட்ச் (Ralph Fitch), தாமஸ் கவெண்டிஷ் (Thomas Cavendish 1586), ஜேம்ஸ் லங்காஸ்டர் (James Lancaster-1591) போன்ற ஆங்கிலேயர்கள் மேலும் பல கடற் பயணங்களைச் செய்து மீண்டனர். அவர்கள் தென்கிழக்காசியத் துறைமுகங்களை அடைந்து வர்த்தக ஒப்பந்தமும் செய்து கொண்டிருந்தனர்.

இதற்கிடையில் 1588-ல் மாபெரும் ஸ்பானியக் கடற்படை (Spanish Armada) ஆங்கிலக் கப்பற் படையால் நிர்மூலமாக்கப் பட்டது. இம் மாபெரும் வெற்றி ஆங்கிலக் கடலாதிக்க வளர்ச்சிக்கு அடிகோலியது. இவ் வெற்றிக்குப் பின்னர் போர்த்துகீசிய வர்த்தகக் கப்பல்கள் பலவற்றை ஆங்கிலேயர்கள் தாக்கிக் கைப்பற்றினர். அளவிறந்த வர்த்தகப் பொருள்களுடன் விலைமதிப்பற்ற பயணச் செய்திகளும் அக் கப்பல்களிலிருந்து கைப்பற்றப்பட்டன. தென் கிழக்காசியத் துறைமுகங்கள், அவைகளை அடையும் வழிகள், சீனத் துறைமுகங்களைப் பற்றிய தகவல்கள், வர்த்தகப் பொருள்களைப் பற்றிய குறிப்புகள், போர்ச்சுகீசிய நிர்வாக முறையைப் பற்றிய செய்திகள், விளக்கங்கள், போன்ற பலவாறான செய்திகளடங்கிய இக் குறிப்புக்கள் தாம், ஆங்கிலேய-ஆசிய வர்த்தக மேன்மைக்கு அடித்தளமாய் அமைந்தன.

இத்தகைய முயற்சிகள் அனைத்தும் சிறு சிறு ஆங்கில வர்த்தகக் குழுக்களால் ஆரம்பிக்கப்பட்டவையாகும். தனித்தனி வர்த்தகக் குழுக்கள் மாபெரும் சாதனைகளைப் புரிய இயலவில்லை. ஸ்பானிய-போர்ச்சுகீசியரின் தென்கிழக்காசிய வர்த்தக ஆதிக்கத்திற் கெதிராக டச்சுக்காரர்கள் பெற்ற ஆரம்ப வெற்றியும், அவர்களது செயல் முறைகளும் நோக்கமும் ஆங்கிலேயரைப் பெரிதும் கவர்ந்தன. 1598-ல் ஆங்கில-டச்சு வர்த்தக ஒப்பந்தம் செய்து

கொள்ளப்பட்டது. 1600-ல் முதலாம் எலிசபெத் மகாராணியார் ஆங்கில கிழக்கிந்திய வர்த்தகக் குழுவிற்கு வர்த்தக உரிமைகள் வழங்கும் அரச ஆணை ஒன்றனைப் பிறப்பித்தார். ஆங்கிலக் கிழக்கிந்திய வர்த்தகக் குழு உதயமானது.

## ஆங்கிலேயர்-டச்சு ஆதிக்கப் போட்டி

ஆங்கிலேயரும் டச்சுக்காரர்களும் போர்ச்சுகீசிய ஆதிக்கத்தையும், வர்த்தகத்தையும் எதிர்த்து அழிக்கும் பணியில் ஈடுபட்டனர். போர்ச்சுகீசிய எதிர்ப்பியக்கத்தில் டச்சுக்காரர்கள் ஆரம்பத்திலிருந்தே முழுமூச்சுடன் செயல்பட்டனர்.

மலேயா தீபகற்பத்திலிருந்த போர்ச்சுகீசியரின் தலைமையிடமான மலாக்காவை வெற்றி கொள்ளும் முயற்சியில் டச்சுக்காரர்கள் ஈடுபட்டனர். இம் முயற்சியில் மலேயாவிலிருந்த போர்ச்சுகீசிய எதிர்ப்பாளர்களின் ஆதரவையும் டச்சுக்காரர்கள் பெற்றனர். 1603-ல் மலாக்கா முற்றுகை தொடங்கியது. டச்சுக்காரர்கள் இந்தியாவிலிருந்த கோவாவையும் அச்சுறுத்தினர். 1604-ல் இங்கிலாந்துக்கும், ஸ்பானிய-போர்ச்சுகல்லுக்குமிடையே ஏற்பட்ட சமாதான உடன்படிக்கையினுல், ஆங்கிலேயர்கள் டச்சுக்காரர்களின் மலாக்கா முற்றுகையில் பங்கெடுத்துக் கொள்ள முடியவில்லை. டச்சுக்காரர்களின் மலாக்கா முற்றுகை இதனுல் வெற்றியடையவில்லை. ஆங்கிலேய-டச்சு உறவில் சிறு விரிசல் காண ஆரம்பித்தது.

ஆங்கில-டச்சு வர்த்தகக் குழுக்கள் போர்ச்சுகல்லின் எதிர்ப்பிற்கிடையேயும், ஜாவா, சுமாத்ரா தீவுகளில் வர்த்தக உரிமைகளைப் பெற்று, மொலுக்கஸ் தீவுகளை நோக்கி விரைந்தனர். ஹென்றி மிடில்டன் (Henry Middleton) என்பாரின் தலைமையில், ஆங்கிலக் கப்பற்படை 1605-ல் அம்பாய்னு தீவிற்குச் சென்று, போர்ச்சுகீசியரின் அனுமதியுடன் வர்த்தகம் செய்யத் தொடங்கியது. ஆங்கிலேயரைப் பின்பற்றி வந்த டச்சுக் கப்பற்படை போர்ச்சுகீசியரை வென்று அம்பாய்னுவைக் கைப்பற்றியது. அம்பாய்னுவில் தங்கியிருந்த ஆங்கிலக் கடற்படை போரில் பங்கெடுத்துக் கொள்ளாமல் ஒதுங்கி நின்றது. பின்னர் திதோர், தெர்னேட் (Tidore, Ternate) தீவுகளிலும் டச்சுக்காரர்கள் போர்ச்சுகீசியரை வென்று ஆதிக்கம் பெற்ற போதும் ஆங்கிலக் கடற்படை ஒதுங்கியே நின்றது. 1607-ல் திதோர், தெர்னேட் தீவுகளின் சுல்தான் டச்சுக்காரர்களின் மேலாண்மையை ஏற்று, அடிபணிந்தார். டச்சுக்காரர்கள் 'ஆரஞ்சுக் கோட்டை'யைக் (Fort of Orange) கட்டித் தங்கள் ஆதிக்கத்தை இத் தீவுகளில் நிலைநிறுத்தினர்.

தென்கிழக்காசியாவில் தொடர்ந்து வெற்றிபெற்ற டச்சுக்காரர்கள் போர்ச்சுகீசிய வர்த்தகம் முழுவதையுமே அழிக்கும் முயற்சியில் இறங்கினர். போர்ச்சுகல்லின் தலைநகரமான லிஸ்பனும் தாக்கப்பட்டது. போர்ச்சுகீசிய வர்த்தகக் கப்பல்கள் நடுக்கடலில் வேட்டையாடப்பட்டன. மொலுக்கஸ் தீவுகளில் ஒன்றான பண்டாவும் (Banda) ஆங்கிலேயர் முன்னிலையில் டச்சுக்காரர்கள் வசமாகியது.

டச்சுக்காரர்களின் வர்த்தகப் போட்டியையும், தென்கிழக்காசிய நாடுகளில் ஆதிக்க வளர்ச்சியையும் தடுத்து, தன்னைக் காத்துக் கொள்ள முடியாத நிலையில் ஸ்பானிய-போர்ச்சுகல் அரசு, ஹாலந்துடன் பேச்சுவார்த்தை தொடங்கியது (1607). இந்தப் பேச்சு வார்த்தைகளின் போது ஆங்கிலேயரின் ஆதரவை எதிர் நோக்கியிருந்த ஹாலந்து, ஆங்கிலேயரின் தலையிடாக் கொள்கையைக் கண்டு திகைத்தது. இருப்பினும் 1609-ல் கையெழுத்தான ஸ்பானிய-ஹாலந்து ஒப்பந்தத்தின் மூலம், பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் போரிலீடுபடுவதில்லை என இரு நாடுகளும் ஒப்புக் கொண்டன. இந்த பன்னிரண்டு ஆண்டுகளுக்குள் மொலுக்கஸ் தீவுக்கூட்டங்களில் தனது ஆதிக்கத்தை நிலைநிறுத்தி வலுப்படுத்தும் முயற்சியில் ஹாலந்து இறங்கியது. இம் முயற்சியில் இங்கிலாந்தின் கூட்டுறவை இழந்த ஹாலந்து தனித்துப் போராட வேண்டியிருந்தது.

இதுவரை டச்சுக்காரர்களின் செயல்களுக்கு எவ்வித ஒத்துழைப்பும் தராமல் ஒதுங்கியிருந்த ஆங்கில கிழக்கிந்திய வர்த்தகக் குழு, தென்கிழக்காசிய வர்த்தகத்தை மட்டும் முழுவதுமாக இழக்க விரும்பவில்லை. டச்சுக்காரர்களுடன் வர்த்தக ஒப்பந்தம் செய்து கொள்ள விரும்பினர். இதற்கான பேச்சுவார்த்தைகளும் 1613-ல் தொடங்கின. போர்ச்சுகீசிய-டச்சு வர்த்தக, ஆதிக்கப் போட்டியில், டச்சுக்காரர்களுக்கு ஆதரவாக ஆங்கிலேயர் செயல்படவேண்டும் என்ற அடிப்படையில் ஒப்பந்தம் செய்துகொள்ள டச்சுக்காரர்கள் விரும்பினர். ஆங்கிலேயர் இதற்கு இணங்கவில்லை. பேச்சுவார்த்தைகள் நீடித்தன. டச்சுக்காரர்கள் தனித்து நின்று போர்ச்சுகீசிய ஆதிக்கத்தை ஒழிக்கும் முயற்சியில் தீவிரமாக இறங்கினர். அதே நேரத்தில் ஆங்கிலேயரும் வர்த்தக உரிமைகளைப் பெறுவதில் தீவிரம் கொண்டனர்.

ஐரோப்பாவில் இப் பேச்சுவார்த்தைகள் நடந்து கொண்டிருந்தபோதே தென்கிழக்காசியாவில் டச்சுக்காரர்கள் போர்ச்சுகீசிய எதிர்ப்பியக்கத்தில் ஈடுபட்டனர். தென்கிழக்காசிய நாடு

களின் அரசுகளுடன் வர்த்தக ஒப்பந்தங்களைச் செய்து கொண்டனர். 1613-ல் மொலுக்கஸ் தீவுக்கூட்டங்கள் முழுவதிலும் டச்சு ஆதிக்கம் வலுப்பெற்றது. ஆங்கிலேயர்கள் பாண்டம் துறை முகத்தை மட்டும் தங்கள் தலைமையிடமாகக் கொண்டு, மற்றப் பகுதிகளில் வர்த்தக உரிமைகளைப் பெற்றனர். செலிபஸ் தீவுகளிலும், போர்னியோவிலும், சயாமிலும், ஆங்கிலேயரும் டச்சுக் காரர்களும், ஒரேமாதிரியான வர்த்தக உரிமைகளைப் பெற்றனர். ஜாவாவில் ஜகார்த்தா, கிரிசிக் (Grisek) போன்ற துறைமுகங்களில் டச்சுக்காரர்கள் ஆதிக்கம் பெற்றிருந்தபோதிலும், ஆங்கிலேயரின் போட்டியும் கடுமையாய் இருந்தது.

சுமாத்ராவிலிருந்து அச்சின் (Achin) அரசுடன் செய்து கொண்ட ஒப்பந்தங்களின்படி, மிளகு வர்த்தகத்தின் முற்றுரிமையை ஆங்கிலேயர் பெற்றனர். இருப்பினும் பண்டமாற்று முறை வர்த்தகத்தில் இலவங்கம், ஏலம் போன்ற நறுமணப்பொருள்களுக்கு இணையாக மிளகு விளங்கவில்லை. எனவே இலவங்கம், சாதிக்காய் போன்ற நறுமணப் பொருள்களின் உற்பத்தியிடமாகிய மொலுக்கஸ் தீவுகளிலும், ஆங்கிலேயர்கள் வர்த்தக உரிமை பெறுவது தவிர்க்க முடியாததாயிற்று. இதற்கிடையில் ஐரோப்பாவில் 1613-ல் தொடங்கிய ஆங்கில-டச்சு உறவு பற்றிய பேச்சுவார்த்தைகள் எவ்வித முடிவுமின்றி 1615-ல் முறிந்தன. எனவே, ஆங்கிலேயர் மொலுக்கஸ் தீவுகளை நோக்கித் தங்களது கடற்படையை நடத்தினர். 1615-ல் செய்த முதல் முயற்சி தோல்வியில் முடிந்தது. அதற்கடுத்த ஆண்டு, பண்டா தீவுக் கூட்டத்திலிருந்த வாய், ரன் (Wai, Run) என்ற இரு சிறுதீவுகளில் ஆங்கிலேயர் வர்த்தக உரிமைகள் பெறுவதில் வெற்றி கண்டனர்.

மொலுக்கஸ் தீவுக் கூட்டங்களில் வர்த்தக உரிமைகள் பெறுவதில் வெற்றிகண்ட ஆங்கிலேயர், சுமாத்ராவிலும் புதிய வர்த்தக நிலையங்களை ஏற்படுத்தினர். ஜாம்பி, இந்திரகிரி, ஜகார்த்தா போன்ற கடலோர நகரங்களிலும் ஆங்கில வர்த்தக நிலையங்கள் ஏற்படுத்தப்பட்டன. இவ் வெற்றிகளை நிலைநிறுத்தி, மேலும் விரிவடையச் செய்யும் நோக்கத்துடன் தாமஸ் டேல் (Thomas Dale) என்பவரை ஆங்கில அரசு, மிகச் சிறந்த கப்பற்படையுடன் தென்கிழக்காசிய நாடுகளுக்கு அனுப்பியது. தாமஸ் டேல் என்பவர் அமெரிக்காவில் குடியேற்றங்களை நிறுவுவதிலும், ஆட்சி புரிவதிலும் மிகவும் திறமைசாலி எனப் பெயர் பெற்றவர். ஆங்கிலேயர்களின் இப் புதிய ஆக்கிரமிப்புச் செயல்களைத் தடுக்கும் வகையில் ஜேன் பீட்டர்சன் கோயன் (Jan Pieterzson coen) என்பவரை டச்சு அரசு தென்கிழக்காசிய நாடுகளின் ஆளுநர்

தலைவராக நியமித்தது. இவர் தாமஸ் டேலைவிடத் திறமைசாலி என்பதை விரைவிலேயே நிரூபித்தார்.

பாண்டம் ஜகார்த்தா போன்ற துறைமுகங்களில் ஆங்கிலேய-டச்சு மோதல் தொடங்கியது. 1618-ல் பாண்டம் துறைமுகத்திலிருந்த டச்சுக்கப்பல் ஒன்றனை ஆங்கிலத் தளபதி டேல் சிறைப்பிடித்தார். இதை எதிர்த்துத் தாக்கி விடுவிக்கும் முயற்சியில் ஈடுபட்ட கோயன் முதலில் தோல்விகண்டார். அம்பாய்னுவிலிருந்து டச்சு உதவிப் படைகள் வரும் முன்னர் ஆங்கிலேயர் ஜகார்த்தாவைப் பிடித்துக்கொண்டனர். இதுவரை ஆங்கிலேயருக்கு உதவிய ஜாவா படையினருக்கும் ஆங்கிலேய ருக்குமிடையே தகராறுகள் ஏற்பட்டன. நண்பர்களுக்குள் ஏற்பட்ட இக் கருத்து வேறுபாடுகளைப் பயன்படுத்திக் கொண்ட கோயன், ஜகர்த்தாவைத் தாக்கினர். ஆங்கிலக் கடற்படையைத் தோற்கடித்து விரட்டினர். தென்கிழக்காசியாவில் ஆங்கில-டச்சுப் போருக்குப் பின்னர், இவ்விரு நாடுகளும் இனிப் போரைத் தவிர்க்கும் வகையில் 'பாதுகாப்பு ஒப்பந்தம்' (Treaty of Defence) ஒன்றனைச் செய்து கொண்டனர் (1619). இவ்வொப்பந்தத்தின் விளைவாக, ஜாவாவின் மிளகு வர்த்தகத்தில் இவ்விரு நாடு களுக்கும் சம உரிமையும், மொலுக்கஸ் தீவுக் கூட்டங்களில் டச்சுக் களுக்கு மூன்றில் இரண்டு பங்கும், மீதி ஆங்கிலேயருக்கும் என ஏற்றுக்கொள்ளப்பட்டது. இவ்வொப்பந்தம் டச்சுக்காரர்களின் முதல் பெரிய வெற்றியாகக் கருதப்பட்டது. டச்சுக்காரர்களின் தலையாய நோக்கம் ஸ்பானிய-போர்ச்சுகீசிய தென்கிழக்காசிய ஆதிக்கத்தை ஒழித்து, தனது அரசியல்-வர்த்தகச் செல்வாக்கினை ஏற்படுத்தவேண்டும் என்பதே. தங்களின் இன்னொரு போட்டியாள ராக விளங்கிய ஆங்கிலேயர்களுடன் செய்து கொண்ட பாது காப்பு ஒப்பந்தத்தினுல், தங்களுடைய முழுக்கவனத்தையும் அச்ச மின்றி, ஸ்பானிய-போர்ச்சுகீசியருக்கு எதிராகத் திருப்ப முடியும் எனக் கருதி மகிழ்ந்தனர். ஆனுல் ஆங்கிலேயரின் நோக்கம் போரிடுவதன்று. வர்த்தக உரிமைகளைப் பெறுவதே. ஆங்கிலேய ரின் இந்நோக்கமும் நிறைவேறியது.

ஆங்கில-டச்சுப் 'பாதுகாப்பு ஒப்பந்தம்' நீடித்து நிற்கவில்லை. தென்கிழக்காசியாவில் தங்களைத்தவிர வேறு யாரும் வர்த்தகம் செய்வதையோ, வர்த்தக உரிமைகள் பெறுவதையோ டச்சுக்காரர் கள் விரும்பவில்லை. வேறு எந்த நாட்டினருடனும் வர்த்தக உரிமை களைப் பகிர்ந்து கொள்வதையும் விரும்பவில்லை. எனவே, ஆங்கில வர்த்தகத்திற்கு ஏராளமான இடையூறுகளை ஏற்படுத்திய வண்ணம் இருந்தனர். மொலுக்கஸ் தீவுக் கூட்டங்களிலிருந்து

ஆங்கிலேயரை எப்பாடு பட்டேனும் வெளியேற்ற வேண்டும் என்று உறுதி கொண்டனர். சுமாத்ராவில் ஆங்கிலேயருக்கு இருந்த மிளகு வர்த்தக உரிமைகளையும் எதிர்க்கத் துணிந்தனர். இந் நிலையை உணர்ந்த ஆங்கிலேயர் தென்கிழக்காசியத் தீவுகளிலிருந்து வெளியேற முடிவு செய்தனர். மொலுக்கஸ் தீவிலிருந்த ஆங்கில வர்த்தக நிலையங்களை மூடிவிட்டுத் திரும்புமாறு உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டு அனுப்பப்பட்டன. இவ்வுத்தரவுகள் மொலுக்கஸ் தீவுகளை அடையுமுன்னரே மிகப்பெரிய துயர நிகழ்ச்சி ஒன்று நடந்து முடிந்தது. இந் நிகழ்ச்சி ஆங்கில-டச்சு உறவின் முறிவை அறிவித்தது.

டச்சுக்காரர்களுக்கு எதிரான சதி வேலைகளில் ஈடுபட்டதாகக் குற்றம் சாட்டப்பட்டு, முறையான விசாரணைகள் ஏதும் செய்யாமலேயே பத்து ஆங்கிலேயர்களும், ஒன்பது ஸ்பானியரும், ஒரு போர்ச்சுகீசியரும் டச்சுக்காரர்களால் கொலை செய்யப்பட்டனர். இந் நிகழ்ச்சி 'அம்பாய்னு படுகொலை' (Feb. 1623) என வரலாற்றுத் துயர நிகழ்ச்சிகளில் ஒன்றுக இடம்பெற்றுவிட்டது. இப் படுகொலை நிகழ்ச்சிக்குப் பின்னர் ஆங்கிலேயர் தென்கிழக்காசியாவில் இருந்த வர்த்தக நிலையங்களை மூடிவிட்டு இந்தியா வந்தடைந்தனர். இத் துயர நிகழ்ச்சிக்குப் பின்னரும்கூட ஜகார்த்தாவிலும் ('படேவியா' என டச்சுக்காரர்களால் குறிப்பிடப்பட்டது) பண்டாவிலும் மிகச்சிறிய அளவிலேனும் 1682 வரை ஆங்கில வர்த்தக நிலையங்கள் இயங்கி வந்தன.

மொலுக்கஸ் மற்றும் ஏனைய தென்கிழக்காசியத் தீவுகளிலிருந்து ஆங்கிலேயரை வெளியேற்றுவதில் டச்சுக்காரர்கள் முழு வெற்றியடைந்தனர். தென்கிழக்காசியாவிலிருந்து வெளியேறிய ஆங்கிலேயர்கள் தங்களது வர்த்தக, அரசியல் செல்வாக்கினை இந்தியாவில் நிலைநாட்ட முயன்று இறுதியில் வெற்றிகண்டனர். ஆங்கிலேயரை வெளியேற்றிய டச்சுக்காரர்கள், அடுத்து போர்ச்சுகீசியரையும் தென் கிழக்காசியப் பகுதிகளிலிருந்து வெளியேற்றி, தான் விரும்பியவண்ணமே, தென்கிழக்காசியாவில் தீவுப் பகுதிகள் முழுவதையும் தனது குடியேற்ற நாடாக மாற்றியமைத்துக் கொண்டது. படேவியாவைத் (ஜகார்த்தா) தலைநகராகக் கொண்ட இந்தோனேஷியா என்ற தென்கிழக்காசியத் தீவுப் பகுதிகள் டச்சுக்காரர்களின் ஆட்சிப் பகுதிகளாயின.

# 2. கிழக்கிந்தியத் தீவுகளில் டச்சுக்காரர் ஆதிக்கம்

அம்பாய்னு படுகொலைக்குப் பின்னர் கிழக்கிந்தியத் தீவுகளி லிருந்து ஆங்கிலேயர் வெளியேறினர். தங்களது வெற்றியை நிலை நாட்டி, மேலும் வளர்ச்சியடையச் செய்யும் முயற்சிகளில் டச்சுக் காரர்கள் இறங்கினர். போர்ச்சுகீசியரின் தென் கிழக்காசியச் செல் வாக்கினை முழுவதுமாக அழித்து அவர்களையும் ஆங்கிலேயர்களைப் போலவே விரட்டியடித்து, கிழக்கிந்தியத் தீவுகள் முழுவதிலும் தனியாதிக்கம் பெறுவதையே தங்கள் குறிக்கோளாகக் கொண் டனர். 17ஆம் நூற்றுண்டிலிருந்து 19ஆம் நூற்றுண்டின் இறுதிக்குள், கொஞ்சம் கொஞ்சமாகத் தங்களது செல்வாக்கினை விரிவு படுத்தி, கிழக்கிந்தியத் தீவுகளில் ஆட்சி புரிந்து வந்த முஸ்லீம் சுல்தான்களை அடிபணியச் செய்து, டச்சு ஆதிக்கத்தை வலியுறுத்தித் தற்போது இந்தோனேஷியா என்றழைக்கப்படுகின்ற தீவுக் கூட்டங்களைத் தங்கள் குடியேற்ற நாடுகளாக மாற்றினர். 16, 17ஆம் நூற்றுண்டுகளில் துறைமுகப் பகுதிகளில் மட்டும் வர்த்தக உரிமை பெற்று, ஏனைய ஐரோப்பியர்களை விரட்டியடிப் பதில் ஆர்வம் காட்டிய டச்சுக்காரர்கள், 17ஆம் நூற்றுண்டின் இறுதியிலும், 18ஆம் நூற்றுண்டிலும், உள்நாட்டிலும் நுழைந்து, அங்கிருந்த அரசியல் குழப்பங்களில் தலையிட்டு, உதவி செய்கின்ற முறையில் ஒவ்வொரு சுல்தானையும் தங்கள் மேலாண்மையை ஏற்கச் செய்து, வர்த்தக உரிமைகளுடன் அரசியல் உரிமைகளையும் பெற்றனர். 19ஆம் நூற்றுண்டின் ஆரம்பத்தில் டச்சு கிழக்கிந்திய வர்த்தகக் குழுவிடமிருந்து இந்தோனேஷிய ஆட்சி உரிமையை ஹாலந்து அரசு ஏற்றுக்கொண்டது. இந்தோனேஷியா டச்சுக் காரர்களின் குடியேற்ற நாடாக மாறியது.

ஜாவாத் தீவிலுள்ள படேவியாவை (இன்றைய ஜகார்த்தா) தென் கிழக்காசியாவில் தங்களின் முதன்மையிடமாகக் கொண்ட

டச்சுக்காரர்கள், போர்ச்சுகீசியரை விரட்டுவதைத் தங்களின் தலையாய கடமையாகக் கொண்டனர். மலாக்கா போர்ச்சுகீசியரின் முதன்மையிடமாகவும், மலாக்கா நீரிணைப்பின் காவலனாகவும் விளங்கியது. கிழக்கிந்தியத் தீவுகளில் நுழையும் கப்பல்கள் மலாக்கா வழியாகத்தான் ஏனைய பகுதிகளுக்குச் சென்றாக வேண்டும். எனவே மலாக்காவில் ஆதிக்கம் பெறும் எந்த நாடும் தென்கிழக்காசிய நாடுகளின் கடல் வாணிகத்தைக் கட்டுப்படுத்தும் வாய்ப்பினைப் பெற்றுவிடுகிறது. எனவேதான் மலாக்காவிலிருந்து போர்ச்சுகீசியரை விரட்டுவதை டச்சுக்காரர்கள் தங்களது முதல் சிறப்புப் பணியாகக் கொண்டனர்.

1630-ல் மலாக்காவை டச்சுக்காரர்கள் முற்றுகையிடத் தொடங்கினர். போர்ச்சுக்கீசியரின் பகைவர்களான, மலேயாத் தீபகற்பத்திலிருந்த சுதந்திர அரசுகள் டச்சுக்காரர்களுக்கு ஆதரவளித்தன. 1636-ல் முற்றுகை தீவிரமாக்கப்பட்டது. 1640-ல் மலாக்கா நகரின் மீது கடலிலிருந்தும் தரையிலிருந்தும் தாக்குதல் தொடங்கியது. ஓராண்டுக்காலக் கடுமையான போருக்குப் பின்னர் (Jan. 1641) மலாக்கா சரணடைந்தது. மலாக்காவிலிருந்த போர்ச்சுகீசியர் வெளியேற அனுமதிக்கப்பட்டனர். மலாக்காவை வென்ற டச்சுக்காரர்கள், மலேயக் கடற்பகுதிகளில் ஆதிக்கம் செலுத்தினர். இருப்பினும் படேவியா நகரமே டச்சுக்காரர்களின் தலைநகரமாய் இருந்து வந்தது.

மலாக்காவை வென்ற டச்சுக்காரர்கள் தங்கள் கவனத்தை நறுமணத் தீவுகள் எனப் புகழ்பெற்ற மொலுக்கஸ் தீவுக் கூட்டங்களின் பக்கம் திருப்பினர். இதற்கிடையில் ஜாவாவில் தங்களது செல்வாக்கினை உறுதிப்படுத்திக் கொள்ளவும் வேண்டியிருந்தது. மஜாபாஹித் பேரரசின் அழிவுக்குக் காரணமாக இருந்த மடாரம் அரசு (East Java) ஜாவா முழுவதிலும் ஆதிக்கம் பெற்றது. கடல் வாணிகத்தையும் வளர்த்துக்கொண்டு, ஆசிய நாடுகளுடன் வர்த்தகத் தொடர்புகளையும் ஏற்படுத்திக் கொண்டது. மடாரத்தின் கடல் வாணிக வளர்ச்சி, டச்சுக்காரர்களுக்கு அச்சத்தையளித்தது. தங்களுக்குப் போட்டியாக உருவெடுத்த மடாரம் அரசை ஒடுக்கும் வாய்ப்பை எதிர்நோக்கியிருந்தது. மடாரம் அரசின் பகுதிகளாக இருந்த பாண்டம் நகரிலும் (Bantam) மதுரா (Madura Islands) தீவிலும் ஏற்பட்ட அரசியல் குழப்பங்களைப் பயன்படுத்தி அவ் விரு பகுதிகளிலும் டச்சுக்காரர்கள் ஆதிக்கம் பெற்றனர். மடாரம் அரசின் துறைமுகங்களில் டச்சுக்காரர்கள் செல்வாக்குப் பெற்றனர்.

18ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் மடாரம் அரசிற்கு எதிராகக் கலகங்கள் தோன்றின. ஆட்சிப் பொறுப்பு மடாரம் அரசர்களிடமும், பொருளாதாரம், வர்த்தகம் முதலியவை டச்சுக் காரர்களிடமும் இருந்தன. இவ்வித இரட்டையாட்சிக்கு எதிராகத் தாங்கள் இழந்துவிட்ட பொருளாதாரக் கட்டுப்பாட்டினை டச்சுக் காரர்களிடமிருந்து மீட்க வேண்டும் என்ற ஆவலினுல் கலகங்கள் ஏற்பட்டன. மடாரம் அரசு, இக் கலகங்களை அடக்க டச்சுக்காரர் களின் உதவியை நாடியது. இக் கலகங்களை அடக்குவதற்கு உதவிய டச்சுக்காரர்கள், மேலும் பல வர்த்தக உரிமைகளை வற்புறுத்திப் பெற்றனர். அரசின் பாதுகாப்புக்காக டச்சுப் படைகள் முக்கிய நகரங்களில் நிறுத்தப்பட்டன. பாதுகாப்புப் படைச் செலவையும் மடாரம் அரசு ஏற்க வேண்டியதாயிற்று. இதனுல் மேலும் ஆத்திரம் அடைந்த ஜாவானியரும், ஜாவாவிலிருந்த சீனர்களும், சிறு அரசுகளும் டச்சுக்காரர்களுக்கெதிராகப் போரில் ஈடுபட முடிவு செய்தனர் (1741). டச்சுக்காரர்களின் பொறுப்பிலிருந்த கார்த்தசுராக் (Kartasura) கோட்டையைத் தாக்கிப் பிடித்தனர். அங்கிருந்த டச்சு படையதிகாரிகள் கொல்லப்பட்டனர். டச்சுக் காரர்களின் பாதுகாப்பிலிருந்த மற்றக் கோட்டைகளும் தாக்கப் பட்டன. 1743-ல் இத் தாக்குதல்கள் அனைத்தையும் முறியடித்த டச்சுக்காரர்கள், தாங்கள் இழந்த நகரங்களை திரும்பப் பெற்ற தோடு, மடாரம் அரசையும் தங்கள் ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டு வந்தனர். மடாரம் அரசின் பிரதம மந்திரி டச்சுக்காரர்களின் ஆலோசனைகளின்படியே நியமிக்கப்படவேண்டும் என்றும், டச்சுக் காரர்களின் அனுமதியின்றி வேற்று நாடுகளுடன் தொடர்பு கொள்ளக் கூடாதென்றும் நீதித்துறை அதிகாரங்களும் டச்சுக் காரர்களின் விருப்பப்படியே மாற்றியமைக்கப் படவேண்டும் என்றும் ஒப்பந்தம் ஒன்று செய்துகொள்ளப்பட்டது. மடாரம் அரசு தன் சுதந்திரத்தை இழந்தது. ஜாவா முழுவதும் டச்சுக் காரர்களின் மேலாண்மையை ஏற்றது.

போர்ச்சுகீசியர்களையும், அம்பாய்னு படுகொலைக்குப் பின்னர் ஆங்கிலேயர்களையும், மொலுக்கஸ் தீவுகளிலிருந்து வெற்றிகரமாக வெளியேற்றிய டச்சுக்காரர்கள் அத் தீவுகளில் தங்களாதிக்கத்தை வளம்பெறச் செய்வதில் முனைந்தனர். வர்த்தக உரிமைகளை நிலை நாட்ட முயன்றபோது, அரசியலிலும் டச்சுக்காரர்கள் ஈடுபட வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அரசியல் ஆதிக்கமின்றி, வர்த்தகச் செல்வாக்கினையும், உரிமைகளையும் நிலைநாட்டுதல் இயலாது என்பதை டச்சுக்காரர்கள் விரைவிலேயே உணர்ந்தனர். 1623-ல் பண்டா தீவுகள் (Banda Islands) டச்சுக்காரர்களுக்குக் கிடைத்தன. அதன்மூலம் ஜாதிக்காய், கசகசா (Nutmeg & Mace)

போன்ற நறுமணப் பொருள்களின் உலக வர்த்தக உரிமைகளைப் பெற்றனர். உலகிலேயே அம்பாய்னு தீவுகளில் மட்டும்தான் இலவங்கம் அதிகமாக விளைந்தது. டச்சுக்காரர்கள் இலவங்க வர்த்தகத்தையும், தாங்களே ஏற்றுக்கொள்ள விரும்பினர். இதன் விளைவாகப் பல போர்களில் ஈடுபட வேண்டியிருந்தது. 17ஆம் நூற்றாண்டின் இறுதியில் மொலுக்கஸ் தீவுகள் அனைத்தும் டச்சுக் காரர்களின் கைக்குக் கொண்டு வரப்பட்டன.

மொலுக்கஸ் தீவு அரசுகளுடன் டச்சுக்காரர்கள் போரிட்ட போது, ஏராளமான இலவங்கத் தோட்டங்கள் அழிக்கப்பட்டன. இதன் காரணம் நறுமணப் பொருள்களின் உலக வர்த்தகம் தங்களிடமே இருக்கவேண்டுமென்றும், அதனால் தங்களின் அனுமதி பெற்ற பகுதிகளில் மட்டுமே உற்பத்தி செய்யப்பட வேண்டும் என்றும், ஏனைய பகுதிகள் அழிக்கப்பட வேண்டும் என்றும் டச்சுக் காரர்கள் விரும்பியதில் வியப்பேதுமில்லை. மேலும் இலவங்கத் தோட்டங்கள் அழிக்கப்பட்டதால் மக்களுக்கு எவ்வித நட்டமும் இல்லையென்றும், மாறாக இச் செயலை மக்கள் வரவேற்றனர் என்றும் குறிப்பிடப்படுகின்றது. இலவங்கம் உற்பத்தி செய்வதனால் கிடைக்கும் வருமானம் முழுவதையும் அரசும், டச்சுக்காரர்களுமே எடுத்துக் கொண்டனர். விவசாயக் குடிமகன் உழைப்பிற்கேற்ற ஊதியத்தைக் கூடப் பெறமுடியவில்லை. இதனால்தான் விவசாயப் பெருங்குடி மக்கள் சற்று மகிழ்ந்தனர் என்றும் கருதப்படுகின்றது.

மொலுக்கஸ் தீவுகளைத் தங்களது கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்த டச்சுக்காரர்கள் வர்த்தக உரிமைகளை மட்டும் எடுத்துக் கொண்டு அத் தீவுகளின் அரசைப் பரம்பரையினரான சுல்தான்களிடமே விட்டுவிட்டனர். ஆட்சிப் பொறுப்பிலும் கூடப் பொருளாதாரத் துறைகளில் டச்சுக்காரர்கள் அக்கறை கொண் டனர். டச்சுக்காரர்களின் வர்த்தக நலனுக்காக மட்டுமே மொலுக்கஸ் தீவுகளின் அரசியல், பொருளாதார அமைப்பு இயங்க வேண்டும் எனக் கருதினர். இலவங்கத் தோட்டங்களில் வேலை செய்ய ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளில் இருந்து ஏராளமான அடிமை கள் கொண்டு வரப்பட்டனர். மொலுக்கஸ் தீவுகளின் இறக்கு மதி, ஏற்றுமதி முழுவதும் டச்சுக்காரர்களின் தனி உரிமையா யிற்று. உள்நாட்டில் அவர்களுக்குத் தேவையான பொருள்களைப் பெருமளவில் உற்பத்தி செய்யும் முறையில் விவசாயப் பொரு ளாதார அமைப்புகளும் ஏற்படுத்தப்பட்டன. 17, 18ஆம் நூற்றாண்டுகளில் ஐரோப்பிய நாடுகளுக்கு மட்டும் ஆண்டுக்கு 1400-லிருந்து 1800 டன் இலவங்கத்தைக் கொண்டு சென்றனர். இதற்கிடையில் ஏனைய ஆசிய நாடுகளுக்கும் விற்பனை செய்தனர். மொலுக்கஸில் ஒரு பவுண்டு இலவங்கத்தின் விலை 3d (பென்ஸ்)

ஆம்ஸ்டர் டாம் நகரில் இறக்குமதியாகும் போது அதன் விலை 6d (பென்ஸ்) ஆக இருக்கலாம். ஆனால் ஒரு பவுண்டு 6s 3d (ஆறு ஷல்லிங் மூன்று பென்ஸ்) என விற்றனர். கொள்ளை லாபம் கண்டனர் டச்சுக்காரர்கள்.

17ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் டச்சுக்காரர்கள் தங்கள் வர்த்தக உரிமைகளை உறுதிப்படுத்திக் கொண்டு, வளமான வர்த்தகச் செல்வாக்குப் பெறுவதையே தங்கள் குறிக்கோளாகக் கொண்டிருந்தனர். அரசியல் செல்வாக்குப் பெறுவதோ, குடியேற்றங்களை அமைப்பதோ அவர்களின் ஆரம்ப நோக்கமன்று. வர்த்தகக் குழுவின் இயக்குநர்களும் இலாபத்தைக் கணக்கிட்டனரே தவிர அரசியல் ஆதிக்கத்தை எதிர்பார்க்க வில்லை. இதனால் தான் தென் கிழக்காசிய நாடுகளின் உற்பத்திப் பொருள்களின் முற்றுரிமையைத் தாங்கள் மட்டுமே பெறவேண்டும் என டச்சுக்காரர்கள் ஆர்வம் கொண்டனர். இந்த வர்த்தக முற்றுரிமையைச் செயல்படுத்தும் போது அரசியல் உரிமையையும் பெறுவது அவசிய மாகிறது. 17ஆம் நூற்றாண்டில் டச்சுக்காரர்கள் தென்கிழக்காசிய நாடுகளின் துறைமுகங்களில் மட்டும் ஆதிக்கம் பெற்று, முக்கிய வர்த்தக வழிகளைப் போட்டியினின்று காக்க வேண்டும் எனக் கருதிச் செயல் பட்டனர். வெற்றியும் கண்டனர்.

18ஆம் நூற்றாண்டில் கடற்கரை நகரங்களினின்றும் உள் நாட்டில் நுழைய ஆரம்பித்தனர். இதற்கு முக்கிய காரணம் கூற வேண்டுமானால், முதலாவதாக டச்சுக்காரர்களின் இந்திய வர்த்தகம் முற்றிலுமாக ஆங்கிலேயர்களால் தடை செய்யப் பட்டு விட்டது. இரண்டாவதாக மற்ற ஆசிய நாடுகளுடன் டச்சு வர்த்தகமும் மிகவும் குறைந்தது. மூன்றாவதாக தென்கிழக்காசிய நாடுகளில் தங்களின் வர்த்தக முற்றுரிமைகளுக்கு ஏற்பட்ட எதிர்ப்பு என இம் மூன்றையும் கூறலாம். தென்கிழக்காசிய நாடுகளில் மட்டுமே வர்த்தகச் செல்வாக்குப் பெற்றிருந்த நிலையில், இவ் வர்த்தக உரிமைகளைக் காப்பாற்றிக் கொள்ளும் வகையில் அந் நாடுகளின் பொருளாதாரத் துறைகளைக் கட்டுப்படுத்த முயன்றனர். விவசாயத் துறைகளைக் கட்டுப்படுத்தித் தங்களது ஏற்றுமதிப் பொருள்களை மட்டும் உற்பத்திசெய்ய முயன்றனர். இத்தகைய தலையீடுகளால் டச்சுக்காரர்களின் வர்த்தகம் வளர்ந்தது எனக் கூறஇயலாது.

நாட்டின் விவசாய வளர்ச்சியைக் கட்டுப்படுத்த வேண்டு மானால் அரசியல் ஆதிக்கம் பெறுவது இன்றியமையாதது. இதனைக் கருத்திற்கொண்டே இதுவரை கடற்கரைப் பகுதிகளில் ஆதிக்கம் பெற்றிருந்த டச்சுக்காரர்கள், உள்நாட்டு அரசியலிலும் தலையிட ஆரம்பித்தனர், அரசியல் ஆதிக்கம் பெற்ற பின்னர்,

அந்நாடுகளின் உற்பத்திப் பொருள்களை வற்புறுத்திக் குறைந்த விலைக்குப் பெற்றனர். ஜாவாவிலிருந்து அரிசி, மிளகு, சர்க்கரை, காபி, இண்டிகோ போன்ற பொருள்களும், மொலுக்கஸ் தீவுகளிலிருந்து மற்ற நறுமணப் பொருள்களும் குறிப்பிட்ட அளவு கட்டாயமாக டச்சுக்காரர்களுக்கு விற்கப்பட வேண்டும். இதனுல் ஏழை உழவன் தனது விவசாயப் பொருள்களை மிகக் குறைந்த விலைக்கு விற்கும்படி வற்புறுத்தப்பட்டான் ; இவ் வர்த்தகப் பொருள்களையே விளைவிக்கும் படியும் கட்டாயப்படுத்தப் பட்டான். உணவுப் பொருள்களையோ, தனது வாழ்க்கைக்குத் தேவையான மற்றப் பொருள்களையோ விளைவித்துக் கொள்ள அனுமதிக்கப் படவில்லை. அந்நியர்களின் தொல்லைக்குள்ளான உழவன், உள்நாட்டு அரசுகளால் மேலும் அல்லலுற்ருன். கட்டாய வேலைகளும், சில சமயங்களில் பண்ணைகள் அழிக்கப் படுவதாலும் மிகவும் வறிய நிலையை அடைந்தான். டச்சுக் காரர்கள் தங்களது வர்த்தகத்தைக் கருதினர். ஆட்சித்துறையைப் பற்றியோ, மக்களின் தேவைகளைப் பற்றியோ அக்கறை கொள்ள வில்லை. உள்நாட்டு அரசும் மக்களை மறந்திருந்தது.

18ஆம் நூற்றுண்டின் இறுதிப் பகுதியில் ஆங்கிலேயர் இந்தியாவில் அரசியல் செல்வாக்குப் பெற்று, தென்கிழக்காசியாவிலும் நுழைந்து, பர்மா, சயாம், மலேயாப் பகுதிகளில் ஆதிக்கம் பெற்றனர். ஆங்கிலேய டச்சுப் போட்டி மீண்டும் தொடங்கியது. இதற்கிடையில் இங்கிலாந்தின் அமெரிக்கக் குடியேற்ற நாடுகள் சுதந்திரப் போரிலீடுபட்டன. பிரான்சும் ஸ்பெயினும் இங்கிலாந்திற்கெதிராக அமெரிக்கக் குடியேற்றங்களுக்கு ஆதரவளித்தன. அமெரிக்க நாடுகளோடு வர்த்தகத் தொடர்பு கொண்டிருந்த ஹாலந்து, அமெரிக்காவின் சுதந்திரத்தை ஏற்றுக் கொண்டு வணிக ஒப்பந்தங்கள் செய்து கொண்டது. இதனுல் வெகுண்ட இங்கிலாந்து ஹாலந்துடன் போர் தொடுத்து, இந்தியா, இலங்கைப் பகுதிகளிலிருந்த டச்சு வர்த்தகத் தலங்களை பிடித்துக் கொண்டது. தென் கிழக்காசிய நாடுகளின் மீதும் போர் தொடுத்தது. இப் போர் 1780-இலிருந்து 1784 வரை நடந்தது. இப் போரில் டச்சு கிழக்கிந்திய வர்த்தகக் குழு பெருத்த நட்டமடைந்தது. இவ்விழப்பை ஈடுசெய்ய ஆம்ஸ்டர்டாமிலிருந்த வர்த்தகக் குழு, டச்சு அரசிடம் பெருந்தொகையினைக் கடனுகக் கேட்டது. கடன் கொடுப்பதற்கு முன்னர் வர்த்தகக் குழுவின் செயல் முறைகளை அரசு ஆய்ந்தறிய முயன்றது. ஜாவாவிலும், மற்றத் தென்கிழக்காசியப் பகுதிகளிலும் விசாரணை நடத்திய ஹாலந்து அரசின் விசாரணைக்குழு, கிழக்கிந்திய வர்த்தகக் குழுவின் அரசியல் திறமையின்மையையும், தன்னலப் போக்கினையும்,

ஊழலையும் வெளிப்படுத்தியது. இதன் விளைவாக டச்சு கிழக்கிந்திய வர்த்தகக் குழு கலைக்கப்பட்டது. 1800-ல் கிழக்கிந்திய நாடுகளின் ஆட்சி பொறுப்பினை ஹாலந்து அரசு மேற்கொண்டது.

பிரெஞ்சுப் புரட்சியின் விளைவாக, ஐரோப்பிய அரசியலில் பெரும் மாறுதல்கள் நிகழ்ந்தன. நெப்போலியன் ஐரோப்பிய நாடுகள் அனைத்தையும் வென்று தனது பேரரசை ஏற்படுத்த முனைந்தார். ஹாலந்து நெப்போலியனின் கொள்கைகளை ஏற்றுப் பணிந்தது (1810). நெப்போலியனை எதிர்த்த இங்கிலாந்து, தென்கிழக்காசிய நாடுகளில் இருந்த ஹாலந்தின் குடியேற்றங்களை யும் வென்றது. இந்தோனேஷியா என்றழைக்கப்படும் டச்சுக் குடியேற்ற நாடுகள் 1811-லிருந்து 1816 வரை ஆங்கில ஆதிக்கத்தி லிருந்தது. ஸ்டாம்போர்டு ராபல்ஸ் (Stamford Raffles) என்பவர் கிழக்காசிய நாடுகளின் துணை ஆளுநராக (Lt. Governor) நியமிக்கப் பட்டார். இவரது தலைமையிலான ஆங்கிலேயரின் ஐந்து ஆண்டுக் கால ஆட்சியில் இந்தோனேஷிய மக்களின் நல்வாழ்வுக்கான அடிப்படைத் திட்டங்கள் சில உருவாக்கப்பட்டு, செயல்படுத்தப் பட்டன. இவரது ஆட்சியில்தான் ஆங்கிலேயரின் நேரடி ஆட்சி புகுத்தப்பட்டது. பொருளாதாரத் திட்டங்களும் வரிவசூல் முறைகளும் முறையாக உருவாக்கப்பட்டன. விவசாயத் துறையில் இருந்த சீர்கேடுகள் நீக்கப்பட்டன. நில உரிமையை அரசு எடுத்துக் கொண்டு, விவசாயிகளுக்கு நிலம் வழங்கியது. ஆண்டுதோறும் நிலவரி செலுத்தும் முறையும் செயல்படுத்தப்பட்டது. நிலவரி வசூலிக்கும் அதிகாரிகள் நியமிக்கப் பட்டனர். இதுவரை டச்சுக் காரர்களாலும், அரசாலும் நசுக்கப்பட்ட உழவன் உரிமைகள் சிலவற்றைப் பெற்றான். தான் விரும்பிய பயிர்களை விளைவிக்கவும், தான் விரும்பும்போது, விரும்பிய விலைக்கு விற்கவும், முதல் முறை யாக உரிமை பெற்றான். உழவர்களின்மீது சுமத்தப்பட்டிருந்த கட்டுப்பாடுகள் நீக்கப் பெறுவதால் பொருளாதாரம் வளர்ச்சி யடையுமென்றும், அரசு பயனடையும் என்றும் ஆங்கிலேயர்கள் நம்பியிருந்தனர்.

வியன்னா மாநாட்டின் முடிவுகளின்படி இங்கிலாந்து இந்தோ னேஷியாவை மீண்டும் ஹாலந்திற்குத் திருப்பிக் கொடுத்தது (1816). மலாக்கா 1818-ல் திருப்பிக் கொடுக்கப்பட்டது. சிங்கப்பூர் 1824-ல் ஏற்பட்ட உடன்படிக்கையின்படி மலேயா தீப கற்பம் முழுவதும் (மலாக்கா உள்பட) ஆங்கிலேயருக்குக் கொடுக்கப்பட்டது. இந்தோனேஷியா (தென்கிழக்காசியத் தீவுகள் முழுவதும்) முழுவதும் டச்சுக்காரர்களின் குடியேற்ற நாடாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. இந்தியாவில் டச்சுக்காரர்களுக்கு

இருந்த உரிமைகள், இடங்கள் அனைத்தும் ஆங்கிலேயருக்குவிட்டுக் கொடுக்கப்பட்டது.

1824ஆம் ஆண்டு தி ஹேக் (The Hageu) என்ற நகரில் நெதர்லாந்து வர்த்தகக் குழு (The Netherland Trading Company) ஏற்படுத்தப்பட்டது. இந்தோனேஷியாவின் அரசியல் பொருளாதார வளர்ச்சிக்கு ஊக்கமளிக்கப்பட்டது. 1827-ல் ஜாவா வைப்பகம் (Java Bank) ஏற்படுத்தப்பட்டது. பதினைந்து ஆண்டுக் கால தீவிர முயற்சிக்குப் பின்னரே ஹாலந்து அரசு புதிய பொருளாதாரத் திட்டமொன்றை வெளியிட்டது. 'பண்பாட்டுத் திட்டம்' (The Culture System) என்று குறிப்பிடப்பட்ட இத் திட்டம் 1830-ல் ஜாவாவில் தொடங்கப்பட்டு இந்தோனேஷியா முழுவதும் செயல்படுத்தப்பட்டது. இத் திட்டம் 1877-க்குப் பின்னர் கைவிடப்பட்டது.

டச்சுக்காரர்களின் 'பண்பாட்டுத் திட்டம்' இந்தோனேஷியாவில் ஆங்கிலேயர் உருவாக்கியிருந்த 'உழவர்களின் உரிமைத் திட்டத்'திற்கு முற்றிலும் மாறுனது. இத் திட்டத்தின்படி விவசாய வருமானத்தில் ஐந்தில் ஒருபங்கு வரியாகக் கோரப்பட்டது அல்லது ஒவ்வொரு குடும்பத் தலைவனும் ஆண்டில் அறுபத்தாறு நாள்கள் ஊதியமின்றி அரசு பண்ணைகளில் அல்லது தொழிலகங்களில் உழைக்க வேண்டும். இத் திட்டத்தினுல் விவசாய முறைகள் டச்சு அரசின் நேரடிக் கண்காணிப்பின் கீழ் வந்தன. வர்த்தகப் பொருள்களையே பெருமளவில் உற்பத்தி செய்து நெதர்லாந்து வர்த்தகக் குழுவிற்கு விற்கும்படியும் வற்புறுத்தப்பட்டனர். இதனுல் காபி, சர்க்கரை, இண்டிகோ முதலியவை முக்கியமான விவசாய உற்பத்திப் பொருள்களாகவும், தேயிலை, புகையிலை, பருத்தி, மிளகு இவை அடுத்த முக்கிய விளைபொருள்களாகவும் மாறின. இம் முறைகளைத் தீவிரமாகச் செயல்படுத்த அந்தந்தப் பகுதி அரசர்கள் வற்புறுத்தப்பட்டனர். எவ்வித முதலீடுமின்றி, டச்சுக்காரர்கள் தங்களுக்குத் தேவையான ஏற்றுமதிப் பொருள்களைப் பெற்றுக் கொள்ளை இலாபமடைந்தனர்.

இம் முறையின் விளைவாக இந்தோனேஷியாவில் போக்குவரத்து வசதிகள் பெருகின. உள் நாட்டிலிருந்து விளைபொருள்களைக் கடற்கரை நகரங்களுக்கு கொண்டுவரும் வகையில், போக்குவரத்து வசதிகள் பெருகின. டச்சுக்காரர்கள் கொள்ளைலாபமடைந்தனர். கடல் வாணிகத்தில் உலக நாடுகளில் டச்சுக்காரர்கள் மூன்ருவது இடத்தைப் பெற்றனர்.

அரசியல் துறையில் டச்சுக்காரர்கள் தங்களது மறைமுக ஆட்சியை மேலும் உறுதிப்படுத்தினர். டச்சு நிர்வாக அதிகாரிகள் குறுநில மன்னர்களின் அரசவைகளில் ஆதிக்கம் பெற்று ஆட்சி புரிந்தனர். இப் பொருளாதாரப் பெருக்கத்தின் விளைவாக மக்கள் தொகையும் உயர்ந்தது. வர்த்தகத்திற்குத் தேவையான விளை பொருள்களை விளைவிக்கும்படி கட்டாயப்படுத்தப்பட்டதனுல், உழவர்களின் வாழ்க்கைத்தரம் உயரவில்லை. வியர்வை சிந்த உழைக்கும் பாட்டாளி மகன் உரிமையற்ற நிலையில், வர்த்தக வளர்ச்சியையே தங்களது குறிக்கோளாகக் கொண்ட அந்நிய ஆட்சியாலும், சுயநலம், உழைப்பின்றி ஊதியம் பெறுகின்ற எண்ணம், ஊழல்மலிந்த திறமையற்ற அந்நியர்களின் கைப்பாவையான குறுநில மன்னர்களால் கசக்கிப் பிழியப்பட்ட நிலையிலும் வாடி வதங்கினுன். உரிமைபெற்ற ஒளிமிக்க வாழ்க்கைக்காக ஏங்கினுன். இத்தகைய நிலைகளுக்குக் காரணமாய் இருந்த பண்பாட்டுத் திட்டம் 1860-க்குப் பின்னர் சிறிதுசிறிதாகக் கைவிடப்பட்டு 1877-ல் முற்றிலுமாக மறைந்தது.

இங்கிலாந்தின் முறைகளைப் பின்பற்றிய டச்சுக்காரர்கள், 1850-க்குப் பின்னர் இந்தோனேஷியத் தொழில் துறைகளில் தனியார் துறைக்கும் ஆதரவளித்தனர். தகரச் சுரங்கங்களும் போர்னியோவில் வைரம், தங்கச் சுரங்கங்களும், நிலக்கரிச் சுரங்கங்களும் தனியார் துறைக்கு விடப்பட்டன. இதே போன்று போக்குவரத்து வசதிகளும் பெருக்கப்பட்டன. 1834-ல் முதன் முதலாக ஜாவாவில் இரயில் பாதை போடப்பட்டது. 1856-ல் முதன் முதல் தந்தி முறை புகுத்தப்பட்டது. இவையனைத்துமே ஐரோப்பியர்களின் வர்த்தக வளர்ச்சியின் பொருட்டே உருவாக்கப்பட்டவை என்றே கூறவேண்டும்.

1870ஆம் ஆண்டிற்குப் பின்னர் விவசாயத் துறையிலும் தனியார் ஆதிக்கம் பெற்றனர். டச்சு முதலாளிகள் பெரும் பண்ணைகளை நிறுவ அனுமதிக்கப்பட்டனர். பண்பாட்டு முறையில் இருந்த அரசின் கட்டுப்பாடுகள் அனைத்தும் நீக்கப்பட்டுவிட்டன. விவசாயம் வளர்ந்தது. ஜாவாவில் சர்க்கரை ஆலைகள் பெருகின; இரப்பர், தேயிலை, புகையிலைத் தொழில்கள் ஆக்கம் பெற்றன. இத்தகு பொருளாதாரக் கொள்கைகளினுல் உற்பத்திப் பொருள்கள் பன்மடங்காக உயர்ந்தன. 1900-லிருந்து 1914ஆம் ஆண்டுக்குள் சர்க்கரை உற்பத்தி 7,00,000 டன்னிலிருந்து 14,00,000 டன்னுக உயர்ந்தது. தேயிலை ஐந்து மடங்கும் புகையிலை அரைமடங்கும், எண்ணெய் உற்பத்தி 3,60,000 டன்னிலிருந்து 15,40,000 டன்னுகவும் உயர்ந்தன. 1900ஆம் ஆண்டில்

இரப்பர் உற்பத்தி அநேகமாக ஒன்றுமேயில்லை எனலாம். ஆனால், 1914ஆம் ஆண்டிற்குள் 15,000 டன் இரப்பர் உற்பத்தி செய்யப் பட்டது. 1927ஆம் ஆண்டிற்குள் உலக இரப்பர் உற்பத்தியில் பாதி இந்தோனேஷியாவிலிருந்து கிடைத்தது.

இத்தகைய பொருளாதார வளர்ச்சியினாலும் டச்சுக்காரர்கள் 1910ஆம் ஆண்டிற்குள் இந்தோனேஷியா முழுவதையும் தங்களின் நேரடி ஆட்சியின்கீழ் கொண்டு வந்துவிட்டதால் இந்தோனேஷிய மக்கள் விழிப்புணர்ச்சி பெற்றனர். அந்நிய நாடுகளின் சுரண்டல் களினால் தங்கள் பொருளாதார ஏற்றம், தங்கள் நாட்டின் முன்னேற்றத்திற்குப் பயன்படவில்லை என்பதையும் உணர்ந்தனர். 1910ஆம் ஆண்டில்தான் இந்தோனேஷியா முழுவதும் டச்சுக் காரர்களின் நேரடி ஆட்சியின்கீழ் வந்தது. அதே ஆண்டில்தான் இந்தோனேஷியர்களின் தேசிய எண்ணமும், அதன் விளைவாகத் தேசிய எழுச்சியும் உதயமாயின.

# 3. தென்கிழக்காசியாவில் ஆங்கிலேயர்கள்

17ஆம் நூற்றுண்டின் ஆரம்பத்தில் ஆங்கிலேயர்கள் கிழக்கிந்தியத் தீவுகளிலிருந்து வெளியேற்றப்பட்டனர். டச்சுக்காரர்கள் 'அம்பாய்ஞ' படுகொலேக்குப் பின்னர் (1623) கிழக்கிந்தியத் தீவுகளில் வர்த்தக ஆதிக்கம் பெற்றுப் பின்னர், படிப்படியாய் அரசியல் ஆதிக்கமும் பெற்று, தங்களின் குடியேற்றங்களாக மாற்றிக் கொண்டனர். டச்சுக்காரர்கள் ஆதிக்கம் பெற்றிருந்த கிழக்கிந்தியத் தீவுகளிலும் ஒரே ஓர் இடத்தில் மட்டும் ஆங்கிலேயர்கள் வர்த்தக உரிமை பெற்றிருந்தனர் (பாண்டம் நகரில் 1682 வரை). 1682ஆம் ஆண்டின் பின்னர் பாண்டம் நகரிலிருந்தும் வெளியேற்றப்பட்ட ஆங்கிலேயர் சுமாத்ராவில் இந்திரபுராவிலும் (1684), பென்கூலன் (Bencoolen) நகரிலும் (1695) வர்த்தகத் தலங்களே அமைத்துக் கொண்டனர். இவைகளில் பென்கூலன் நகர் மட்டுமே 1786-ல் பிஞங் (Penang) தீவை ஆங்கிலேயர் கைப்பற்றும் வரை அவர்களின் வர்த்தகத் தலமாக விளங்கியது. 1824-ல் மலாக்காவும் சிங்கப்பூரும் ஆங்கிலேயர்களுக்குக் கிடைத்தன. இதன் பின்னர் மலேயா முழுவதும் ஆங்கிலேயரின் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவரப்பட்டது.

17ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியிலிருந்தே ஆங்கிலேய வர்த்தகர்கள் மலேயாப் பகுதிகளில் வர்த்தகம் நடத்தி வந்தனர். இவைகள் அனைத்தும் தனியார் முயற்சியேயாகும். பிஞங்கும் சிங்கப்பூரும் கைப்பற்றப்பட்ட பின்னர் ஆங்கிலேயரின் செல்வாக்கு தென்கிழக்காசியப் பகுதிகளில் நிலே நிறுத்தப்பட்டது எனலாம்.

18ஆம் நூற்றுண்டில்தான் ஆங்கிலேயர்கள் தென்கிழக்காசியப் பகுதிகளிலும் வர்த்தக ஆதிக்கம் பெற முழு முயற்சிகள்

எடுத்துக் கொண்டனர். இதன் விளைவாக, போர்னியோ தீவில், வர்த்தகத் தலங்கள் ஏற்படுத்த முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. போர்னியோத் தீவின் வடகோடியில் அமைந்துள்ள பாலம்பாங்கன் (Balambangan island) தீவை ஆங்கிலேயர்கள் கைப்பற்றி அத் தீவைத் தங்களின் தென்கிழக்காசிய வர்த்தகத்தின் முக்கியஇடமாக மாற்ற முனைந்து தோல்வியுற்றனர். அதேபோல போர்னியோ வின் மற்றப் பகுதிகளில் மேற்கொண்ட முயற்சிகளும் தோல்வியில் முடிந்தன. ஆங்கிலேய-சீன வர்த்தகம் பெருகி வருகின்ற நிலையில் இந்தியா சீனுவிற்கிடையில் தென்கிழக்காசியப் பகுதிகளில் ஒரு முக்கியத் துறைமுகத்தின் தேவையை மிகவும் உணர்ந்தனர். பிரான்சிஸ் லைட் (Fancis Light) என்பார் மலேயாத் தீபகற்பப் பகுதியில் ஆங்கிலேயர்கள் ஆதிக்கம் பெறுவது ஒன்றுதான் வழி என்பதை வற்புறுத்திஞர்.

**மலேயாவில் ஆங்கிலேய ஆதிக்கம்**

பதினும் நூற்றுண்டில் போர்ச்சுகீசியர்கள் மலாக்காவைப் பிடித்து (1511) மலேயாப் பகுதி முழுவதிலும் வர்த்தக உரிமை பெற்றிருந்தனர். 1641-ல் மலாக்காவை டச்சுக்காரர்கள், போர்ச்சுக்கீசியரிடமிருந்து கைப்பற்றிப் பதினெட்டாம் நூற் ருண்டின் இறுதிவரை மலேயாவில் ஆதிக்கம் பெற்றிருந்தனர். பதினெட்டாம் நூற்ருண்டின் இறுதியில் ஆங்கிலேயர்களும் தென் கிழக்காசியாவில் ஆதிக்கம் பெற முயன்றனர். பிரான்சிஸ் லைட் போன்ற ஆங்கிலேயத் தனி வர்த்தகர்கள் தென்கிழக்காசியப் பகுதிகள் முழுவதிலும் வர்த்தகம் செய்துவந்தனர். இவ்வாறு பெருகிவரும் வர்த்தகச் சிறப்பை நிலை நிறுத்தும்பொருட்டுத் தென் கிழக்காசியாவில் பற்றிடங்களைப் பெறும் முயற்சியில் ஆங்கிலேயர் களும் இறங்கினர். ஆங்கிலேயர்களுக்கு ஆதரவாக மலேயாவில் சூழ்நிலைகளும் அமைந்தன.

மலேயாப் பகுதிகளை செலிபஸ் தீவினின்றும் வந்த தீரமிக்க கடற்படைகள் தாக்கின. இப் படையினரை எதிர்க்கும் வலிமை யற்றிருந்த மலேயா அரசுகள் டச்சுக்காரர்களின் உதவியை நாடின. டச்சுக்காரர்களால் இவ்வரசுகளுக்கு முழுப் பாதுகாப்பும் அளிக்க இயலவில்லை. டச்சுக்காரர்களின் இயலாமையை உணர்ந்த மலேய அரசுகள் ஆங்கிலேயர்களின் உதவியை நாடினர். ஆங்கிலே யர்கள் இவ் வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு கேடா அரசிற்குச் சொந்தமான சில பகுதிகளைப் பிடிக்க முயற்சி செய்து தோல்வி யுற்றனர். இந் நிலையில்தான் ஆங்கிலேயருக் கெதிராக அமெரிக்க சுதந்திர போர் தொடங்கியது. இப் போரில் பிரெஞ்சுக்காரரும், டச்சுக்காரர்களும் அமெரிக்கர்களுக்கு உதவியளித்தனர். இதன்

காரணமாக இங்கிலாந்து ஹாலந்தின்மீது போர் தொடுத்தது. இப் போர் தென்கிழக்காசியாவிலும் எதிரொலித்தது. இப் போரின் முடிவில் டச்சுக்காரர்கள் தென்கிழக்காசிய நாடுகளில் ஆங்கிலே யரின் வர்த்தக உரிமையை அனுமதித்தனர் (1784). அமெரிக்கக் குடியேற்றங்களை இழந்த ஆங்கிலேயர் தென்கிழக்காசிய, சீன நாடு களுடன் வர்த்தகம் செய்வதில் தங்கள் திறமையனைத்தையும் பயன் படுத்த ஆரம்பித்தனர். இங்கிலாந்தின் பருத்தித் துணிகளும், இந்தி யாவின் அபினும் மிக முக்கிய ஆங்கிலேய வர்த்தகப் பொருளாய் விளங்கின. ஆங்கிலேய-சீன வர்த்தகம் மிகவும் பெருகியது.

இவ்வாறு பெருகிவரும் வர்த்தகத்தை நிலை நிறுத்தி மேலும் வளம் காணும் எண்ணத்தில் பிரான்சிஸ் லைட் என்பார் மீண்டும் மலேயாவில் கேடா (Kadah) சுல்தானிடம் பினங்கிலும் அதை யடுத்த பகுதிகளிலும் வர்த்தகத் தலங்களை அமைக்கும் உரிமையை வேண்டினர். ஆங்கிலேயருக்கு இப் பகுதிகளைக் கொடுப்பதன் மூலம் அவர்களின் பாதுகாப்பையும் ஆதரவையும் பெறலாம் என்ற ஆசை வார்த்தைகளையும் கூறி, சுல்தானிடமிருந்து அப் பகுதி களைப் பெற்றார் (Aug. 1786). ஆனால் இந்தியாவிலிருந்த கிழக்கிந்திய வர்த்தகக் குழுவின் தலைமை ஆளுநரோ, ஆங்கில அரசோ, கேடா சுல்தானுக்கு எவ்விதப் பாதுகாப்பையும் அளிக்க முன் வரவில்லை. ஆங்கிலேயரை வெளியேற்றும் முயற்சியில் இறங்கிய சுல்தானை ஆங்கிலப் படைகள் தோற்கடித்தன. பினங்கும், அதையடுத்தாற் போல் இருந்த நிலப்பரப்பும் வெல்லெஸ்லி மாநிலம் என்ற பெயரால் ஆங்கிலேயரின் ஆதிக்கத்தின்கீழ் வந்தன. இப் பகுதி களின் ஆட்சிப் பொறுப்பை 1794 வரை பிரான்சிஸ் லைட் ஏற்றிருந்தார்.

ஐரோப்பாவில் ஏற்பட்ட பிரெஞ்சுப் புரட்சியும், புரட்சியாளர் களின் போர்களும், நெப்போலியனின் ஐரோப்பியப் போர்களும் தென்கிழக்காசியாவில், சிறப்பாக மலேயாவில் ஆங்கில ஆதிக்கம் வேரூன்றக் காரணங்களாய் அமைந்தன. ஹாலந்து பிரெஞ்சுப் புரட்சியாளர்களால் தோற்கடிக்கப்பட்டு பிரான்சின் ஆதிக்கத்தின் கீழ் வந்தது. நெப்போலியனின் பேராட்சியின் போதும் ஹாலந்து பிரெஞ்சுப் பேரரசின் ஒரு பகுதியாகவே விளங்கியது. பிரான்சை எதிர்த்த இங்கிலாந்து, பிரான்சின் குடியேற்றங்களையும் தாக்கி அழித்தது. ஹாலந்தின் குடியேற்றங்களான தென்கிழக்காசியத் தீவுகளையும் ஆங்கிலக் கடற்படை பிடித்துக்கொண்டது. ஸ்டாம் போர்டு ராபில்ஸ் (Stambord Rables) என்பார் டச்சுக் கிழக் கிந்தியத் தீவுகளின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றார். 1811-லிருந்து 1816 வரை டச்சு கிழக்கிந்தியத் தீவுகள் ஆங்கிலேயர்களின் ஆதிக்கத்திலிருந்தன.

நெப்போலியனின் வீழ்ச்சிக்குப் பின்னர் ஏற்பட்ட ஐரோப்பிய மாநாட்டில், ஐரோப்பாவில் பிரெஞ்சுப் புரட்சிக்கு முன்பிருந்த நிலை மீண்டும், ஏற்படுத்தப்படவேண்டும் என முடிவு செய்தனர். ஐரோப்பியச் 'சக்திச் சமநிலை'(Balance of Power) என்ற சொல்லும் மீண்டும் உயிர் பெற்றது. இதன் விளைவாக ஹாலந்திற்குச் சொந்தமான பகுதிகளிலிருந்து ஆங்கிலேயர் வெளியேறினர். 1816-ல் ஜாவாவிலிருந்தும், 1816-ல் மலாக்காவிலிருந்தும் ஆங்கிலேயர் வெளியேறினர். இப் பகுதிகளில் டச்சுக்காரர்கள் மீண்டும் ஆதிக்கம் பெற்றனர். ஆனுல் ஸ்டாம்போர்டு ராபில்ஸ் என்பார் மலேயாப் பகுதிகளில் ஆங்கிலேயர் செல்வாக்குப் பெற்றுத் தடையின்றி வர்த்தகம் செய்யும் உரிமைகளைப் பெற வேண்டுமானுல் மலாக்காவிற்கு அருகில், ஆங்கில வர்த்தகத் தலம் ஒன்று நிறுவப்பட்டேயாக வேண்டும் என்று வற்புறுத்தினுர். இவரது வேண்டுகோளை ஆங்கில கிழக்கிந்திய வர்த்தகக் குழு ஏற்றுக் கொண்டது. மலேயா தீபகற்பத்தின் கோடியில் இருந்த ஜோஹீர் அரசின் நட்பைப் பெற்றுருந்த ராபில்ஸ் ஜோஹீர் சுல்தானின் இசைவுடன் 'சிங்கப்பூர்' என்ற தீவில் ஆங்கில வர்த்தகக் கோட்டையை நிறுவினுர். சிங்கப்பூர் தீவு, மிகச் சிறந்த வர்த்தகத் தளமாக அமைந்தது. சிங்கப்பூரை ஆங்கிலேயர் பெற்றதனுல், டச்சுக்காரர்கள் ஆத்திரமடைந்தனர். எனவே ஆங்கிலேயே டச்சுப் போட்டி மீண்டும் ஆரம்பமானது. ஆனுல் பேச்சு வார்த்தைகளின் மூலம் இப் போட்டி தவிர்க்கப்பட்டது. பிரான்சின் ஆதிக்கத்திலிருந்து விடுவிக்கப்பட்ட ஹாலந்துக்கு இங்கிலாந்து பெருந் தொகையைக் கொடுத்திருந்தது. இந்தியாவில் டச்சுக்காரர்களின் வர்த்தகத் தலங்களை ஆங்கிலேயருக்கு விட்டுக் கொடுக்கவும், ஒரு லட்சம் பவுன்களை மேலும் பெற்றுக் கொண்டு சிங்கப்பூரையும், ஆங்கிலேயருக்குக் கொடுக்கவும் டச்சுக்காரர்கள் இசைந்தனர். மேலும் சுமாத்ராவில் ஆங்கில ஆதிக்கத்தின் கீழிருந்த பென்கூலன் நகரை டச்சுக்கு விட்டுக்கொடுத்துவிட்டு, அதற்குப் பதிலாக மலாக்காவை ஆங்கிலேயர் பெற்றனர். 1824ஆம் ஆண்டில் கையெழுத்தான இவ்வுடன்படிக்கையின் காரணமாக இங்கிலாந்து தென்கிழக்காசிய நாடுகளில் தனது ஆதிக்கத்தை ஏற்படுத்தும் வாய்ப்பைப் பெற்றது. 1824-க்குப் பின்னர் மலேயா முழுவதையும் தனது குடியேற்ற நாடாக மாற்றும் முயற்சியில் ஆங்கிலேயர் ஈடுபட்டு வெற்றியடைந்தனர். பினுங், வெல்லெஸ்லி மாநிலம், மலாக்கா சிங்கப்பூர் ஆகிய இவ்விடங்கள் ஆங்கிலேயரின் 'மலாக்கா நீரணைப்புக் குடியேற்றங்கள்' (Straits Settlements) எனக் குறிப்பிடப்பட்டன.

1867ஆம் ஆண்டு 'மலாக்கா நீரணைப்புக் குடியேற்றங்களின்' நிர்வாகப் பொறுப்பை ஆங்கில அரசு ஏற்றுக்கொண்டு, 'ஆங்கில

அரசின் குடியேற்றங்கள்' (Crown Colony) என மாற்றப்பட்டது. இக் குடியேற்றங்களின் நிர்வாகப் பொறுப்பு ஆளுநர் ஒருவரிடம் ஒப்படைக்கப்பட்டது. இவருக்கு உதவியாக, படைத்தலைவர், உயர் அதிகாரிகள், மற்றும் நியமிக்கப்பட்ட மூன்று உறுப்பினர்கள் அடங்கிய செயற்குழு' (Executive Council) ஒன்றும் ஏற்படுத்தப் பட்டது. ஆங்கில நாடாளுமன்றம், இக் குடியேற்றங்களுக்காகச் சட்டமியற்றும் அதிகாரத்தைப் பெற்றிருந்தது. எனினும் சட்ட மியற்றும் அதிகாரம் ஆளுநர், பதின் மூன்று உயர் அதிகாரிகள், பதின் மூன்று ஆங்கிலேயர்கள், மற்றும் ஆளுநரால் நியமிக்கப் பட்ட மக்கள் பிரதிநிதிகள் ஆகியோர் அடங்கிய குழுவிடம் ஒப் படைக்கப்பட்டது. மலேயாவில் வாழ்ந்திருந்த சீனர்கள், இந்தியர்கள் மற்றும் ஆசியமக்களின் பிரதிநிதிகள் ஆகியோர் மக்களின் பிரதிநிதிகளாக நியமனம் பெற்றனர். இருப்பினும் ஆளுநரும் அதிகாரிகளும், ஆங்கிலக் குடிமக்களும் இணைந்து செயல்பட்டதால் ஆட்சியதிகாரம் முழுவதும் ஆங்கிலேயரிடமே குவிந்து கிடந்தது.

இக் குடியேற்றங்களை அடித்தளமாகக் கொண்டு, ஆங்கில ஆதிக்கம் மலேயா முழுவதும் விரிவடைந்தது. மலேயா அரசுகள் ஒற்றுமையின்றிக் காணப்பட்டன. அவைகளுக்கிடையே அடிக்கடி போர்கள் ஏற்பட்டுக் கொண்டிருந்தன. அதுவுமின்றி சயாமும் இப் பகுதிகளின்மீது போர் தொடுத்தது. இத்தகைய அமைதியற்ற சூழ்நிலையில் பொருளாதார வளர்ச்சியும் நாட்டின் முன்னேற்றமும் தடைபட்டன. ஆங்கில வர்த்தகமும் தடைபட்டது. இக் குறைகளை நீக்கி அமைதி ஏற்படுத்தி முன்னேற்றப் பாதையில் மலேயாவை வழிப்படுத்த ஆங்கில அரசு முடிவு செய்தது. இதன் விளைவாக ஒவ்வொரு மலேயா அரசும் ஆங்கில நிலையர் (British Resident) ஒருவரை ஏற்றுக்கொண்டு ஆங்கிலப் பாதுகாப்பைப் பெறவேண்டும் என்று வற்புறுத்தப்பட்டனர். பெராக் (Perak) அரசும், செலங் கார் (Selanger) அரசும் 1874லும் பாஹாங் (Pahang) 1888லும், நேரி செம்பிலான் (Negri Sembilon) 1874-1898லும் ஆங்கில நிலையர்களை ஏற்றுக்கொண்டன. பின்னர் இந் நான்கு அரசுகளும் இணைந்து மலேயக் கூட்டரசாக (Federated States 1896) ஏற்படுத் தப்பட்டன. இவைகளின்றி ஜோஹீர், கேடா, பெர்லிஸ், கிலாண்டன், திரெங்கானு (Jahore, Kedah, Perlis, Kelanton, Trenganu) என்ற ஐந்து அரசுகளும்கூட ஆங்கில நிலையரை ஏற்றுக்கொண்டு பயனடைந்தன.

ஆக மலேயக் கூட்டரசில் மொத்தம் பத்து நாடுகள் இருந்தன. இவைகள் மூன்று தகுதிகளாகப் பிரிக்கப்பட்டு—(அரசு குடியேற்

றங்கள் (Crown Colonies), கூட்டரசு நாடுகள் (Federated States), கூட்டரசில் சேராத பாதுகாப்பு நாடுகள் (Protected Unfederated States)—ஆளப்பட்டாலும் ஆட்சிப்பொறுப்பு, சட்டமியற்றுதல் போன்றவைகள் ஆங்கில ஆளுநரிடமே இருந்தது. 'ஆங்கில உயர் ஆட்சியாளர்' (British High Commissioner) என்ற பெயரில் குலாலம்பூரை (Kaullampur) தலைமையிடமாகக் கொண்டு ஆங்கில ஆளுநர் இப் பகுதிகளை ஆண்டார்.

அரசியல் ஒற்றுமையை ஏற்படுத்தி, அமைதியை நிலைநாட்டிய ஆங்கில அரசு, பொருளாதார முன்னேற்றத்திலும் அக்கறை காட்டியது. தபால், தந்தி முறைகள், தொலைபேசி நிறுவனங்கள் ஆகியவை ஏற்படுத்தப்பட்டன. நெடுஞ்சாலைகள், இருப்புப் பாதைத் தொடர்கள் உருவாக்கப்பட்டன. விவசாய ஆராய்ச்சிக் குழு நிறுவப்பட்டு, இரப்பர், காபி, கரும்பு, தென்னை போன்ற விவசாயப் பொருள்கள் உற்பத்தியில் புதுமைகள் புகுத்தப்பட்டன. தகரச் சுரங்கங்கள் ஏராளமாகக் கண்டுபிடிக்கப்பட்டன. புதிய மருத்துவ முறைகள் புகுத்தப்பட்டு, மக்களின் சுகாதார வளர்ச்சியும் மேற்கொள்ளப்பட்டது. புதிய கல்வி முறைகளும் புகுத்தப் பட்டன. இத்தகைய வளர்ச்சி பெற்ற மலேயா இரண்டாம் உலகப் போரின்போது தேசிய உணர்வையும் பெற்று தேசிய விடுதலை இயக்கத்தையும் மேற்கொண்டது.

# 4. பர்மாவில் ஆங்கிலேயர் ஆதிக்கம்

உலகப் படத்தை நோக்குவோமானுல் பர்மா, இருபெரும் நாடுகளுக்கிடையே அமைந்திருப்பதைக் காணலாம். 2,61,000 சதுரமைல் பரப்பளவு கொண்ட பர்மாவின் மேற்கில் இந்தியத் துணைக்கண்டமும், கிழக்கில் சீனுவும் அமைந்துள்ளன. இவ்விரு நாடுகளிலும் இருபெரும் நாகரிகங்கள் தோன்றி வளர்ந்தன என்பதை நாமறிவோம். இவ்விரு நாடுகளுக்கு இடைப்பட்ட பர்மாவில் இந்திய-சீனப் பண்பாடுகள் விரவிக் கிடப்பதில் வியப் பேதுமில்லை. இருப்பினும் இந்தியப் பண்பாட்டுத் தொடர்பு பர்மிய வரலாற்றில் முக்கியத்துவம் பெற்றிருக்கின்றது. இந்தி யாவில் தோன்றிய இந்து சமயக் கருத்துகளும் பின்னர் ஹீனயான புத்த சமயக் கருத்துகளும் பர்மிய மக்களை ஆட் கொண்டன. ஏனைய தென்கிழக்காசிய நாடுகளைப் போலவே பர்மாவிலும் புத்த சமயம் இன்னும் விளங்கி வருவதைக் காணலாம். பதின்மூன்ரும் நூற்ருண்டில் சீனுவில் ஆதிக்கம் பெற்றிருந்த மங்கோலிய அரசகுலம் பர்மாவையும் வென்றது. இந் நூற்ருண்டிற்கும் முன்னமேயே புத்த சமயம் இவ்விரு நாடு களையும் இணைத்திருந்தது என்பது குறிப்பிடத்தக்கதே. ஐரோப் பியர்கள் பர்மாவில் செல்வாக்குப் பெறுகின்றவரையில் பர்மிய வரலாற்றில், பல அரச குலங்களின் எழுச்சியும், வீழ்ச்சியும் அவைகளின் இடைவிடாத போர்களும், அரசியல் பாகுபாடுகளும் அண்டை நாடுகளில் பர்மிய அரசுகள் பெற்றிருந்த ஆதிக்கமும், செல்வாக்கும் உறவு முறைகளும் காணப்படுகின்றன.

நில அமைப்பின்படி பர்மாவை இரு கூருகப் பிரிக்கலாம். மேல் பர்மா (Upper Burma) அடர்ந்த காடுகளும் உயர்ந்த மலை களும் பாய்ந்தோடுகின்ற ஆறுகளும் பள்ளத்தாக்குகளும் கொண்டது. பர்மாவின் இயற்கை வளங்கள் அனைத்தும் நிறைந்த பகுதி, மேல் பர்மாவாகும். கீழ் பர்மா (Lower Burma) வளங் கொழிக்கும் சமவெளிப் பகுதியாகும். ஐராவதி, சால்வின், மற்றும்

சிட்டாங் போன்ற நதிகள் கீழ் பர்மாவை வளமான பகுதியாக ஆக்கியிருக்கின்றன. இப் பகுதிகளில்தான் நெல்வயல்கள் பரந்து கிடக்கின்றன. அரிசி உற்பத்தியில் பர்மா முதன்மையிடம் வகிக்கின்றது. பர்மாத் தேக்கு உலகப் புகழ்பெற்றது. தகரச் சுரங்கங்களும் மலிந்திருக்கின்றது. நிலக்கரியைத் தவிர மற்றக் கனிவளங்கள் அனைத்தையும் கொண்ட நாடு பர்மாவாகும். நிலக்கரி கிடைக்காததால்தான் பர்மா தொழில் வளர்ச்சி பெறவில்லைபோலும்.

17ஆம் நூற்றாண்டில் தோங்கு குலத்தினர் (Toungus) பர்மாவில் ஆதிக்கம் பெற்றனர். பர்மா முழுவதையும் இணைத்து அண்டை நாடான சயாமின் ஒரு பகுதியிலும் தங்கள் ஆதிக்கத்தை நிலைநிறுத்தினர். இவர்களின் தலைநகர் அவா (Ava-near mandalay) ஆகும். பர்மாவைச் சேர்ந்த தோங்கு குல அரசர்கள் ஆங்கிலேயக் கிழக்கிந்திய வர்த்தகக் குழுவிற்குப் பர்மாவுடன் வர்த்தக உறவு கொள்ளும்படி அழைப்பு விடுத்தனர். ஆங்கிலேயர்கள் இவ் வழைப்பை ஏற்றுக்கொள்ள இயலவில்லை. ஆனல், டச்சுக்காரர்கள் பர்மாவுடன் வர்த்தகத் தொடர்பை மேற்கொண்டு, சிரியம் (Syriam) துறைமுகத்திலும் அவா நகரிலும் தங்களின் வர்த்தக நிலையங்களை ஏற்படுத்தினர். வர்த்தகம் பெருகவில்லையெனினும், ஆங்கிலேயரைப் பர்மாவுக்குள் அனுமதிக்கக்கூடாது என்ற நோக்கத்தில் டச்சு வர்த்தகக்குழு செயல்பட்டது. இருப்பினும் ஆங்கிலேயர்கள் சிரியம் நகரில் 1647-ல் தங்களின் வர்த்தக நிலையத்தை ஏற்படுத்தினர். பத்தே ஆண்டுகளில் இந் நிலையமும் மூடப்பட்டது. பின்னர் டச்சுக்காரர்களும் பர்மாவினின்றும் வெளியேறினர். 1680-ல் சிரியம் நகரில் ஆங்கிலேயர் மீண்டும் வர்த்தக நிலையத்தை ஏற்படுத்த முயன்று தோல்வியடைந்தனர்.

18ஆம் நூற்றாண்டுவரை ஐரோப்பியர்கள் பர்மாவிலும், சயாமிலும் வர்த்தகத் தொடர்புகளை ஏற்படுத்துவதில் அவ்வளவாக வெற்றி பெறவில்லை. வெற்றி பெறவில்லை என்று கூறுவதை விட முயற்சி எடுக்கவில்லை என்று கூறுவது மிகவும் பொருந்தும். மிளகு, இலவங்கம் போன்ற நறுமணப் பொருள்களை நாடிவந்த ஐரோப்பியர்கள் அனைவரும், அப் பொருள்கள் உற்பத்தியாகின்ற இந்தோனேஷியத் தீவுக் கூட்டங்களில் ஆதிக்கம் பெறுவதையே தங்களின் தலையாயக் குறிக்கோளாகக் கொண்டிருந்தனர். எனவே தான் பர்மா, சயாம், இந்தோசீனு போன்ற பகுதிகள் அவர்களை ஈர்க்கவில்லை. மேலும் 17ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட ஆங்கிலேய-டச்சு வர்த்தகப்போட்டியின் விளைவாக ஆங்கிலேயர் கிழக்கிந்தியத் தீவுகளினின்றும் வெளியேற்றப்பட்டனர். அதன் பின்னர் இந்தி

யாவில் தங்களின் வர்த்தகச் செல்வாக்கினை வளர்த்துக்கொள்ளும் முயற்சியில் ஆங்கிலேயர்கள் ஈடுபட்டனர்.

18ஆம் நூற்றுண்டில் பர்மாவில் ஏற்பட்ட அரசியல் குழப்பங் களைப் பயன்படுத்திக் கொண்டு மீண்டும் ஐரோப்பியர்கள் பர்மாவில் நுழைய ஆரம்பித்தனர். ஆனல் அரசியல் குழப்பங்கள் ஐரோப்பிய வர்த்தகத்தை மிகவும் பாதித்தது. பர்மா அரசியலில் தோங்கு குலத்தினரின் ஆட்சி முடிவுற்றது. அலாங்பாயா (Alaungpaya) அல்லது ஆலம்பரா (Alompra) என்பவர் தமது குல ஆட்சியை ஏற்படுத்தினுர். இவர் பர்மாவில் தோன்றிய எழுச்சிகளை நசுக்கித் தமது ஆட்சியை நிறுவினுர் (1757). பர்மா முழுவதையும் தம்கீழ்க் கொண்டுவந்த அலாங்பாயா, அண்டை நாடான சயாமின்மீதும் போர் தொடுத்தார். சயாமின் தலைநகரான அயுத்தியா நகர் (Ayuthia) கைப்பற்றப்பட்டது. ஆனல் அப் போரில் அலாங்பாயா மாண்டார். இருப்பினும் பர்மியப் படைகள் சயாமை வென்றனர். அதன் பின்னர் சீனுவின் படையெடுப்பையும் முறியடித்து, பர்மாவின் பெருமையை உயர்த்தினர் (1770). 1682-ல் பர்மாவின் அரசரான போதாபாயா (Bodowpaya third son of Alaungpaya) என்பவர் அரகானைக் (Aragon) கைப்பற்றினுர். வடக்கில் அசாம் மாநிலப் பகுதிகளையும் வென்முர். இவ் வெற்றி களின் விளைவாக இந்தியாவில் ஆங்கிலேயர் பெற்றிருந்த பகுதி களின் எல்லைவரை பர்மிய ஆதிக்கம் வளர்ந்தது. இந்திய-பர்மிய எல்லைப் பகுதிகளைக் கடந்தும் பர்மியப் படைகள் நுழைந்தன. இச் செயல்களை ஆங்கிலேயர்கள் எதிர்த்தனர். ஆங்கிலேய-பர்மியப் போர் ஏற்படுகின்ற சூழ்நிலை உருவாகியது. இருப்பினும் ஆங்கிலே யரின் சமரச முயற்சிகளினுல் சமாதானம் ஏற்பட்டது.

பர்மிய அரசின் எல்லை, ஆங்கில-இந்தியாவின் எல்லையை அடைந்தபோது, ஆங்கிலேய-பர்மிய உறவு முறையில் மாறுதல்கள் ஏற்பட்டன. இந்தியாவில் ஆங்கிலேய பிரெஞ்சு ஆதிக்கப்போட்டி ஏற்பட்டிருந்தது. இப் போட்டி தென்கிழக்காசிய நாடுகளிலும் எதிரொலித்தது. பிரெஞ்சுக்காரர்கள் பர்மிய அரசுடன் உறவு கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டிருந்தனர். இம் முயற்சியைத் தடுக்கவும் பர்மாவில் வர்த்தக உரிமைகளைப் பெறவும் ஆங்கிலேயக் கிழக்கிந்திய வர்த்தகக் குழு பல தூது குழுக்களை அனுப்பியது. 1795, 1797, 1802, 1803, 1809, 1811 ஆகிய இவ்வாண்டுகளில் அனுப்பப்பட்ட தூது குழுக்களினுல் பயனேதும் ஏற்பட வில்லை.

**முதல் பர்மியப் போர் (1824-26)**

*1819*-ல் பர்மியப் படைகள் மணிப்பூரைக் கைப்பற்றின. *1822*-ல் அசாம் முழுவதும் கைப்பற்றப்பட்டது. சிட்டகாங்கைக் கைப்பற்றி அதன் பின்னர் கல்கத்தாவரை முன்னேறி ஆங்கிலேயத் தலைமை ஆளுநரை தங்கச் சங்கிலியால் பிணைத்து இழுத்துவரும்படி பர்மிய படைத்தலைவர் மகாபந்துலா (Mababandula) என்பவர் அனுப்பப்பட்டார். இதனையுணர்ந்த ஆங்கிலேயர்கள் பர்மாமீது படையெடுத்தனர் (*1824*). போரின் தொடக்கத்தில் மகாபந்துலா வெற்றிபெற்றார். பின்னர் நிலைமை தலைகீழாக மாறியது. அதன் காரணம் ஆங்கிலேயர் கடல் வழியாகவும் பர்மாவைத் தாக்க ஆரம்பித்தனர். சர் ஆர்ச்சிபால்டு கேம்பெல் (Sri Archibold Campbell)லின் தலைமையில் ஆங்கிலேயக் கப்பற்படை இரங்கூனைத் தாக்கிக் கைப்பற்றியது. இப் படைக்கு சென்னை ஆளுநர் மன்றோ சிறப்பான உதவிகளைச் செய்தார். இரங்கூனை வென்ற ஆங்கிலப் படை பர்மியத் தலைநகரை நோக்கிச் சென்றது. இதற்கிடையில் அசாம், மணிப்பூர் பகுதிகளிலிருந்தும் பர்மியப்படைகள் விரட்டப் பட்டன. இறுதியாக யாண்டபூ (Yandabo) என்னுமிடத்தில் சமாதான உடன்படிக்கை கையெழுத்தாயிற்று (*1826*). இதன்படி கீழ்பர்மாவின் பெரும்பகுதியை ஆங்கிலேயர் பெற்றனர். போர் இழப்பீடாக ஒரு கோடி ரூபாயையும் பெற்றனர். ஆங்கிலேயர் வர்த்தக உரிமைகளையும் பெற்றனர். ஆங்கில நிலையர் அவா நகரில் இடம்பெற்றார்.

**இரண்டாம் பர்மியப் போர்**

*1837*-ல் பதவியேற்ற தாராவாட்டி (Tarawaddy) என்பவர், யாண்டபூ உடன்படிக்கையை ஏற்றுக்கொள்ள மறுத்தார். பர்மிய அரசியல் மரபின்படி புதிய அரசருக்கு முன்பிருந்த உடன்படிக்கை எதுவும், மறுபடியும் உறுதிப்படுத்தினாலன்றி, புதிய அரசரைக் கட்டுப்படுத்தாது. இக் கொள்கையின்படி ஆங்கிலேயர் ஏற்கெனவே செய்துகொண்டிருந்த அரசியல், வணிக உரிமைகள் பயனற்றுப் போயின. பர்மியர் ஆங்கிலேயர்களைக் கொடுமை படுத்த ஆரம் பித்தனர். இந்தியத் தலைமை ஆளுநர் டல்ஹௌசிப் பிரபு பர்மிய அரசின் இக் கொடுமையை எதிர்த்து எச்சரிக்கை விடுத்தார். இந்த எச்சரிக்கையும் பயனற்றுப் போகவே, இரண்டாம் பர்மியப் போர் தொடங்கியது. இப் போரின் விளைவாகக் கீழ் பர்மா முழுவதும் ஆங்கில அரசுடன் இணைத்துக்கொள்ளப்பட்டது (*1852*). பர்மா வின் வங்கக் கடற்கரைப் பகுதி முழுவதும் ஆங்கிலேயருக்குக் கிடைத்தது. இந் நடவடிக்கைகளைப் பர்மிய அரசர் மிண்டான் (Mindon) என்பவர் ஏற்றுக்கொள்ள மறுத்தார். ஆங்கிலேயருக்கு

எதிராகப் பிரெஞ்சு உதவியையும் நாடினர். இரங்கூனை ஆங்கிலேயர் கைப்பற்றிக் கொண்டதால் மாண்டலே என்ற புதிய நகரை உருவாக்கி, பலமிக்க கோட்டையையும் நிர்மாணித்தார்.

### மூன்றும் பர்மியப் போர்

பர்மாவில் ஆங்கில வாணிகத்திற்கு உதவும் வகையில் 1862, 1867ஆம் ஆண்டுகளில் இரண்டு உடன்படிக்கைகள் பர்மிய அரசுடன் செய்துகொள்ளப்பட்டன. ஆயினும் ஆங்கிலேய-பர்மிய அரசு நல்லுறவு ஏற்படவில்லை. தம் நாடு முழுவதையும் கைப் பற்றுவதே ஆங்கிலேயரின் நோக்கம் என்பதை பர்மியர்கள் நன் குணர்ந்தனர். மாண்டலேயிலிருந்த ஆங்கில நிலையர் பர்மிய முறைப்படி பர்மிய அரசரை மண்டியிட்டு வணங்க மறுத்தார். இதற்கிடையில் பர்மிய அரசரான மிண்டான் 1878-ல் இறந்தார். திபா (Thibaw) என்பவர் அடுத்த அரசரானர். இவர் மிகவும் கொடுமையானவர். இவர் தம்முடைய உறவினர்களில் எண்பது பேரைக் கொன்முர். தம்மை எதிர்த்தவர் அனைவரையும் ஈவிரக்க மின்றி அழித்தார். இக் கொடுமைகளைக் கண்ட ஆங்கில நிலையர் மாண்டலேயிலிருந்து வெளியேறினர்.

இதற்கிடையில் இந்தோ-சீனவில் ஆதிக்கம் பெற்றிருந்த பிரெஞ்சுக்காரர்களுடன் திபா நட்புறவு கொண்டார். 1885-ல் பர்மிய பிரெஞ்சு உடன்படிக்கை கையெழுத்தாயிற்று. பிரெஞ்சுத் தூதுவர் மாண்டலேயிற்கு வந்தார். பிரெஞ்சு வைப்பகம் ஒன்றும் நிறுவப்பட்டது. பர்மிய அரசருக்கு ஆயுதங்கள் கொடுக்கவும் பிரெஞ்சுக்காரர்கள் முன்வந்தனர். இதைக் கண்ட ஆங்கில அரசு உடனடியாக நடவடிக்கை எடுக்க முடிவு செய்தது. அச் சமயத்தில் பர்மாவில் தொழில் செய்துவந்த ஓர் ஆங்கில வர்த்தகக் கம்பெனி யின் மீது (Bombay-Burma Trading Company) தன் நாட்டுச் சட்டங்களை மீறிய குற்றத்திற்காக 2,30,000 பவுன் அபராதம் விதித்தார் திபா. பர்மா முழுவதையும் ஆங்கில அரசு எடுத்துக் கொள்ள வேண்டுமென்று இந்தக் கம்பெனியும், வேறு பல ஆங்கில வர்த்தகர்களும் வேண்டுகோள் விடுத்தனர். எனவே, ஆங்கில அரசு, பர்மிய அரசுக்கு இறுதிக் கடிதம் ஒன்றை எழுதியது. ஆங்கில அரசின் கோரிக்கைகளை திபா ஏற்க மறுத்தார். 1885-ல் ஆங்கிலேயர் போர் தொடுத்தனர். மாண்டலே நகரம் கைப்பற்றப் பட்டது. திபாவும் அவரது குடும்பத்தினரும் சிறைப்பிடிக்கப் பட்டு இந்தியாவிற்கு அனுப்பி வைக்கப்பட்டனர். இதை யெதிர்த்து பர்மியர்கள் கொரில்லாப் போரிலீடுபட்டனர். ஆறு ஆண்டுகளுக்குப் பின்னர் இக் கொரில்லாக்களும் அடக்கப் பட்டனர். பர்மா ஆங்கில இந்தியாவின் ஒரு மாநிலமாக மாற்றப்

பட்டது. இரங்கூன் இம் மாநிலத்தின் தலைநகராயிற்று. 1935 வரையிலும் ஆங்கில இந்தியாவின் ஒரு மாநிலமாக இருந்த பர்மா, இவ் வாண்டில் ஆங்கில அரசின் தனிக் குடியேற்றமாக மாற்றப் பட்டது (Crown Colony); புதிய நிர்வாக அமைப்பும் ஏற்படுத்தப் பட்டது.

**ஆங்கிலேயரின் ஆட்சியில் பர்மா**

பர்மிய எதிர்ப்புகள் முறியடிக்கப்பட்டு, பர்மா முழுவதும் ஒன்ருக் இணைக்கப்பட்டது. மைய அரசு ஆங்கிலேயர்களால் திறம்பட நடத்தப் பெற்றது. கிராம, நிர்வாகம் பர்மிய முறைப் படியே நடத்த அனுமதிக்கப்பட்டது. கிராமத் தலைவர்கள் வரி வசூலிக்கும் பணியையும் அமைதிகாக்கும் பணியையும் மேற் கொண்டனர். பொதுவாகக் கூறுமிடத்து, இந்தியாவில் கையாண்ட ஆட்சி முறையை அப்படியே பர்மாவிலும் செயல் படுத்தினர். ஆங்கிலேயருக்கு அடுத்தாற்போல இந்திய அதிகாரிகள் மிகவும் சிறப்படைந்தனர்.

பர்மிய அரசியலில் புத்தமதத்தின் செல்வாக்கு மறைந்தது. இருப்பினும் நாடெங்கிலும் இருந்த புத்தமடங்கள் பர்மிய முறை களைப் பாதுகாத்தும், மக்களிடையே செல்வாக்குப் பெற்றும் விளங்கின. புத்த மடங்களின் பொறுப்பிலிருந்த கல்வி முறையும் மாறியது. புதிதாகப் பர்மாவில் நுழைந்த கிறிஸ்துவ மடாலயங்கள் மேலைநாட்டு கல்வி முறைகளைப் புகுத்தின. அரசு பணிக்குத் தேவையான அடிப்படைக் கல்வி புகட்டப்பட்டது. மேலைநாட்டுப் பாணிகள் வரவேற்கப் பட்டன.

போக்குவரத்துத் துறை வெகுவாக முன்னேற்ற மடைந்தது. இருப்புப்பாதைகளும், நெடுஞ்சாலைகளும் உருவாக்கப்பட்டன. நதிகளில் நீராவிக் கப்பல்கள் மிதந்தன. இவையனைத்தும் வர்த்த கத்தை அடிப்படையாகக் கொண்டு ஏற்படுத்தப் பட்டவையாகும். தடையிலா வாணிபக் கொள்கை பின்பற்றப்பட்டது. ஆங்கிலேய, இந்திய, சீன வணிகர்கள் பெருஞ்செல்வத்தைத் தொழில்களில் முதலீடு செய்தனர். தொழில்கள் பெருகின, வளர்ந்தன. இவ் வளர்ச்சியில் பங்கு பெற்றவர்கள் அனைவரும் அந்நியரே. இப்பொருளாதார ஆதிக்கத்தை எதிர்க்கும் வலிமையற்ற நிலையில், பர்மியர் இருந்தனர்.

19ஆம் நூற்ருண்டின் இறுதிவரை ஆங்கிலேயரின் கொள்கை வர்த்தக முன்னேற்றத்தையே அடிப்படையாகக் கொண்டிருந்தது. முதலில் மரம் வெட்டுதலில் முதலீடு செய்த ஆங்கிலேயர்,

பின்னர் விவசாயத் துறையிலும் ஈடுபட்டனர். எண்ணெய்க் கிணறுகள் தோண்டப்பட்டன. பர்மா எண்ணெய்க் கம்பெனி தொடங்கப்பட்டது. மேலும் ஈயம், துத்தநாகம், தகரச் சுரங்கங் களிலும், கப்பல் கட்டும் தொழிலிலும், ஆங்கிலேயர்கள் பெரும் தொகையை முதலீடு செய்தனர். இவ்வளவு துறைகளிலும் ஆங்கில முதலாளிகள் ஈடுபட்டிருந்த போதிலும் தேக்குமரத் தொழிலும், எண்ணெய்த் தொழிலும்தான் சிறப்பிடத்தைப் பெற்றிருந்தன.

பொருளாதாரத் துறை வளர்ச்சியில் ஆங்கிலேய முதலீடுகள் சிறப்பிடத்தைப் பெற்றிருந்தாலும் விவசாயத் துறையில் ஆங்கிலேயர்கள் அவ்வளவாக அக்கறை காட்டவில்லை. விவசாய உற்பத்தியில் 70 சதவீதம் அரிசியே ஆகும். இந்த அரிசி வியாபாரத்தைக் கட்டுப்படுத்தியவர்கள் சென்னை மாநிலத்தைச் சேர்ந்த செட்டியார்களே ஆவர் (Chettyars). இந்தச் செட்டியார் கள் விவசாயிகளுக்குக் கடன் கொடுத்தனர். கடனைப் பெற்ற உழவன் மேலும் அதிக நிலங்களில் நெல் விளைவிக்க ஊக்குவிக்கப் பட்டான். ஒருமுறை கடன்பட்ட உழவன், எவ்வளவுதான் விளைந் தாலும், மேலும் மேலும் கடனில் மூழ்கினான். இறுதியில் நிலத் தைச் செட்டியார்களுக்கு விற்றுவிட்டு, கூலி வேலை செய்ய ஆரம்பித்தான். 1939-ம் ஆண்டில் பர்மிய விளைநிலத்தில் கால்பாகத்திற்குச் சற்று அதிகமாகவே செட்டியார்களின் ஆதிக்கத்திலிருந்தது. பர்மாவில் விளைந்த அரிசியில் பாதிக்கும் அதிகமாக இந்தியாவிற்கு ஏற்றுமதி செய்யப்பட்டது.

நிலத்தையிழந்த பர்மிய உழவன் வேலை தேடி அலைந்தான். அவனுக்குப் போட்டியாக ஏராளமானவர்கள் இந்தியாவிலிருந்தும் சீனாவிலிருந்தும் வந்தனர். பொருளாதார விவசாயத் துறையில் எவ்வளவு தான் முன்னேற்ற மடைந்தாலும், பயன் முழுவதும் ஆங்கிலேய வர்த்தகர்களுக்கும், இந்தியச் செட்டியார்களுக்குமே ஏற்பட்டது. பர்மியக் குடிமகன் எவ்வித முன்னேற்றமும் காண முடியவில்லை. இருபதாம் நூற்றாண்டில் ஏற்பட்ட முதல் உலகப் போருக்குப் பின்னர் பர்மியக் குடிமகன் தன்னிலை உணரப் பெற்றான். இவ்வுணர்வு தேசிய உணர்வாக உருவெடுத்தது. இறுதி யில் இந்தியர், ஆங்கிலேயருக்கெதிரான தேசியப் புரட்சியாகவே வெடித்தது.

# 5. இந்தோ-சீனுவில் பிரெஞ்சு ஆதிக்கம்

பத்தொன்பது, இருபதாம் நூற்றுண்டுகளில் பிரெஞ்சுக்காரரின் ஆதிக்கத்திலிருந்த தென்கிழக்காசியப் பகுதிகளான தொங்கின், அன்னம், கொச்சின் சீனு, கம்போடியா, லாவோஸ் என்ற ஐந்து பகுதிகளும், பொதுவாக இந்தோ-சீனு என்றழைக்கப்படுகின்றன. இவ் வைந்து நாடுகளின் மொத்த பரப்பளவு 2,86,000 சதுர மைல்களாகும். 1966-ல் இந் நாடுகளின் மொத்த மக்கள் தொகை 39,500,000 என்று கணக்கிடப்பட்டுள்ளது. மேற்கூறிய ஐந்து பகுதிகளும் தற்போது வடக்கு வியட்நாம் (தொங்கின்-அன்னம்) தெற்கு வியட்நாம் (அன்னம்-கொச்சின் சீனு) கம்போடியா, லாவோஸ், என்ற பெயரில் சுதந்திர நாடுகளாக இருக்கின்றன. தொங்கின் (Tonkin) அல்லது வடவியட்நாமில் செந்நதி (Red River) பள்ளத்தாக்கும், அன்னம் பகுதி நீண்ட கடற்கரைப் பகுதியாகவும், கொச்சின் சீனு அல்லது தெற்கு வியட்நாமில் மெகாங் நதிப் பள்ளத்தாக்கும் மிகவும் செழுமை வாய்ந்த பகுதிகளாகும். ஹனுய், ஹைப்பாங் போன்ற நகரங்கள் வட வியட்நாமில் சிறந்து விளங்குபவை. சைகான் தென் வியட்நாமின் தலைநகராக விளங்குகிறது. கம்போடியாவை மெகாங் நதி வளம் கொழிக்கச் செய்கிறது. இதன் முக்கிய நகரம் பினும்பென் (Phnom Penh). லாவோஸ் மலைப்பாங்கான பகுதி. மெகாங் நதி இங்கிருந்து தான் உற்பத்தியாகின்றது.

இந்தோ சீனுவின் முக்கிய விளைபொருள் அரிசியாகும். நெற்பயிருக்கு அடுத்தபடி இரப்பரும், காப்பி, தேயிலைத் தோட்டங்களும் சிறப்புப் பெற்றவை. நிலக்கரி, தகரம், துத்த நாகம், டங்ஸ்டன், குரோமியம், இரும்பு போன்ற கனி வளங்களும் நிறைந்து காணப்படுகின்றன.

இந்தோ சீன மக்களும் பலதரப்பட்டவர்கள். 70 சதவீத மக்கள் அன்னுமிய (Annamese culture) பண்பாட்டைச் சேர்ந்த வர்கள். அன்னம் பகுதி சீனர்களின் ஆட்சியில் நீண்டகாலம் அடங்கிக்கிடந்தது. எனவேதான் சீனக் 'கன்பூசியம்,' 'தாவோ யிசம்' (Taoism) பின்னர் புத்தமதம் போன்ற சமயக் கருத்துகளும் சீனப்பண்பாட்டு முறைகளும் பரவலாக வழங்கி வருகின்றன. கம்போடியா, லாவோஸ் பகுதிகளில் இந்தியப் பண்பாட்டு முறை விளங்குகின்றது. பிராமண, புத்த மதக் கொள்கைகள் இன்றும் மக்களிடையே நிலேத்து நிற்கின்றன.

இந்தோசீனப் பகுதிகளில் சீனர்கள் குடியேறினர். பொது வாகவே பர்மா, மலேயா, பிலிப்பைன் தீவுகள், மற்றும் இந்தோ னேஷியா போன்ற தென்கிழக்காசியப் பகுதிகளில் சீனர்கள் குடியேறியிருக்கின்றனர். ஆனுல் சீனர்களின் நோக்கம் குடியேற் றங்கள் அமைப்பதன்று. வர்த்தகத் தொடர்புகளே ஏற்படுத்திப் பயனடைவதையே குறிக்கோளாகக் கொண்டிருந்தனர். மேலும், சீனர்கள் அரசின் ஆதரவின்றி, சொந்த முயற்சியால் வர்த்த கத்தின் பொருட்டு, தென்கிழக்காசியப் பகுதிகளில் நுழைந்து நிலேத்து நின்றவர்களாவர். ஆனுல் பதினுரும் நூற்றுண்டின் தொடக்கத்திலிருந்து ஏற்பட்ட ஐரோப்பியர் வருகை தென்கிழக் காசிய நாடுகளின் அரசியல், சமூக, சமய, பொருளாதார பண்பாட்டுத் துறைகளில் பெரும் மாறுதல்கள் ஏற்படக் காரண மாக இருந்தது. போர்ச்சுக்கீசியரைப் பின்பற்றி நுழைந்த ஐரோப் பியர்கள் அனைவருமே படை வலிமையால், எதிர்ப்புகளே முறிய டித்து, தங்கள் நிலேயை உறுதிப் படுத்திக் கொண்டு, வர்த்தக உரிமைகள் பெற்றனர். பின்னர், தென்கிழக்காசிய நாடுகளின் அரசியல் குழப்ப நிலேயைப் பயன்படுத்திக் கொண்டு அரசியல் ஆதிக்கமும் பெற விழைந்தனர்; வெற்றியும் பெற்றனர்.

பிரெஞ்சுக்காரர்கள் பதினேழாம் நூற்றுண்டிலேயே இந்தோ-சீனப் பகுதிகளே யடைந்தனர். ஆயினும் 19ஆம் நூற்றுண்டின் இடைப் பகுதியில்தான் அரசியல் ஆதிக்கம் பெற முடிந்தது. பிரெஞ்சு வர்த்தகர்களும், கிறித்துவசமயப் பரப்பாளர்களும் உரிமைகள் பெற்றனர். பின்னர் 1747லிருந்து 1774 வரை பல பிரெஞ்சு தூது குழுக்கள் அன்னம் அரசை அணுகி வர்த்தக நிலேயங்கள் அமைக்கும் உரிமைகளேக் கோரின. இந்தோனேஷியப் பகுதிகளில் ஆதிக்கம் பெற்று நிலேத்துவிட்ட டச்சுக்காரர்களுக்கு எதிராகவும், இந்தியா மலேயாப் பகுதிகளில் வர்த்தக உரிமைகளே நிலேநாட்டியிருந்த ஆங்கிலேயர்களுக்குப் போட்டியாகவும், பிரான்சு, அன்னம் கடற்கரைப் பகுதிகளில் வர்த்தக நிலேயங்களே

ஏற்படுத்தி, அவைகளைத் தனது படைத்தளங்களாகவும் விரிவு படுத்த எண்ணம் கொண்டது. பிரெஞ்சுக்காரரின் இம் முயற்சி 'பிக்னியூ-த-பிஹைன்' (Pigneau de Behaine) என்ற பாதிரியின் தலையீட்டால் வெற்றி பெற்றது (1787). கொச்சின்-சீனு அரசுடன் பிரெஞ்சுக்காரர்கள் முதல் வர்த்தக ஒப்பந்தம் ஒன்றைச் செய்து கொண்டனர். பிக்னியூ-த-பிஹைன் பாதிரியார் கிறித்துவ சமயத்தைப் பரப்பும் உரிமையையும் பெற்ருர். 19ஆம் நூற்ருண்டின் ஆரம்பத்தில் இந்தோ-சீனுவில் கிறித்துவ எதிர்ப்பியக்கங்கள் தோன்றின. இந்தோ சீனு அரசுகள் பிரெஞ்சுக்காரர்களுடன் எவ்விதத் தொடர்பும் ஏற்படுத்திக்கொள்ள மறுத்தனர். கிறித்துவ சமய எதிர்ப்பியக்கங்கள் வலுப்பெற்றன. பிரெஞ்சுக்காரர்களும் ஸ்பானியர்களும் கொலை செய்யப்பட்டனர். இச் செயல்களைத் தடுத்து, பிரெஞ்சு மேன்மையை மீண்டும் நிலை நாட்டும் முயற்சியில் பிரெஞ்சுப் பேரரசர் மூன்ரும் நெப்போலியன் முயன்ருர். 1855-ல் மூன்ரும் நெப்போலியன் அன்னம் அரசுடன் சமாதான முறையில் ஒப்பந்தம் செய்துகொள்ள முயன்று தோற்ருர். சமாதான முறையில் அன்னம் அரசுடன் ஒப்பந்தம் செய்துகொண்டு, பிரெஞ்சு வர்த்தக உரிமைகளையும் கிறித்தவர்களையும் காப்பாற்றுவதில் தோல்வி கண்ட பிரெஞ்சு அரசு, ஸ்பானியர்களின் துணையுடன் தனது கப்பற்படை யொன்றினை அன்னம் பகுதிக்கு அனுப்பியது. இக் கடற்படை 1858-ல் கொச்சின் சீனுவையும், அன்னம் பகுதியிலிருந்த டூரேன் (தற்போது டா. நாங் துறைமுகம்) துறைமுகத்தையும் தாக்கியது. 1859-ல் சைகான் நகரம் பிடிபட்டது. 1862-ல் அன்னம் அரசு, கொச்சின் சீனுவின் மூன்று தென் மாநிலங்களையும் பிரான்சிற்குக் கொடுத்தது. போர் இழப்பீடாக நான்கு மில்லியன் டாலர்களையும் கொடுத்தது. மேலும் சமயப்பொறைக் கொள்கையைக் கடைப் பிடிப்பதாகவும் வாக்குறுதியளித்தது. பிரெஞ்சு மேலும் மூன்று துறைமுகங்களில் தடையற்ற வர்த்தக உரிமைகளையும் பெற்றது. 1863-ல் கம்போடியா பிரெஞ்சு பாதுகாப்பை ஏற்றுக்கொண்டது. 1867-க்குள் கொச்சின் சீனு முழுவதும் பிரெஞ்சு ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவரப்பட்டது.

இவ்வாறு கொச்சின் சீனுவில் ஆதிக்கம் பெற்ற பிரெஞ்சு, படிப்படியாக வடக்கு நோக்கி நகர்ந்து, தொங்கின் பகுதிகளில் உரிமைகளை நிலைநாட்ட முயன்றது. இம் முயற்சியின் முதற்படியாக, செந்நதி வாயிலாகப் பிரெஞ்சு வர்த்தகர்கள் தொங்கினுள் நுழைந்தனர். பிரெஞ்சுப் படைகளும் சென்றன. பிரெஞ்சுக்காரர்களின் இந்த ஊடுருவலை அன்னம் அரசரால் தடுக்க இயலவில்லை. பிரெஞ்சுக்காரர்கள் தொங்கின் பகுதியில் செல்வாக்குப் பெறுவ

த்தையும், அதைத் தடுக்கவியலா நிலையிலிருந்த அன்னம் அரசின் திறமையற்ற நிலைமையையும் கண்ட சீனு, பிரெஞ்சுக்காரரின் முன்னேற்றத்தைத் தடுத்து, அவர்களை விரட்டியடிக்க எண்ணம் கொண்டது. சீனுவின் இம்முயற்சிக்குக் காரணம் அன்னம் அரசு, சீனப் பேரரசின் ஒரு பகுதியாகும். சீனத் தொண்டர் படை 1881-ல் செந்நதி வழியாகத் தொங்கினுள் நுழைந்தது. சீனப் படைகளின் முன்னேற்றத்தைக் கண்டும் பிரெஞ்சுக்காரர்கள் அச்சம் கொள்ளவில்லை. தொங்கின், அன்னம் பகுதிகளைப் பிரெஞ்சுப் படைகள் கைப்பற்றின. தொங்கின்-அன்னம் அரசு, பிரெஞ்சுக்காரர்களின் பாதுகாப்பு நாடாக மாறியது (1883). பிரெஞ்சுக் காரர்களின் இந்த ஆதிக்க வளர்ச்சியை முறியடித்து, தனது மேலாண்மையை மீண்டும் நிலைநாட்டும் முயற்சியில் சீனப்பேரரசு, தனது படைகளை அனுப்பி, பிரெஞ்சுக்காரரை எதிர்த்தது. ஏற்பட்ட போரில் பிரெஞ்சுப் படைகள் வெற்றி பெற்றன. போரில் வெற்றி கொள்வது இயலாது என்பதை உணர்ந்த சீனப்பேரரசு பிரெஞ்சுக் காரர்களுடன் பேச்சு வார்த்தைகளைத் தொடங்கியது. தொங்கின் அன்னம் பகுதிகளைப் பிரெஞ்சுக்குக் கொடுத்துவிட்டு சீனப்படைகள் வெளியேறின. தொங்கின், அன்னம், கொச்சின் சீனு ஆகிய மூன்று பகுதிகளும் ஒன்ருக இணைக்கப்பட்டு, பிரெஞ்சுப் பேரரசின் தென்கிழக்காசிய மாநிலமாக மாற்றப்பட்டது (1887). 1893-ல் அன்னம், தொங்கின், பகுதிகளுக்குக் கிழக்கில் இருந்த மெகாங் நதிப் பள்ளத் தாக்கினை பிரெஞ்சு, சயாம் அரசை வற்புறுத்திப் பெற்றது. இவ்வாறு சயாமிடமிருந்து பிடுங்கப்பட்ட பகுதி லாவோஸ் என்ற பிரெஞ்சுக் காப்புநாடாக உருவாக்கப்பட்டது. 1904ஆம் ஆண்டு சயாம் அரசை மீண்டும் அச்சுறுத்தி, மேலும் பல பகுதிகளைப் பெற்று, லாவோஸ், கம்போடியாவையும் இணைத்துக் கொண்டது. இவ்வாருக இருபதாம் நூற்ருண்டின் தொடக்கத்தில் இந்தோ-சீனு முழுவதும் பிரெஞ்சுக் காரர்களின் ஆதிக்கத்தின் கீழ்க்கொண்டு வரப்பட்டது.

இந்தியாவிலும், இந்தோனேஷியாவிலும், ஆதிக்கம் பெற்றிருந்த ஆங்கிலேயரும், டச்சுக்காரர்களும், அந்தந்தப் பகுதிகளைத் தங்கள் நாட்டுடன் இணைத்துக் கொள்ளாமல் உரிமை பெற்ற தனி அரசுகளை ஏற்படுத்திப் படிப்படியாக முழு அரசியல் உரிமைகளை வழங்கும் எண்ணத்தில் செயல் பட்டன. ஆனுல் இந்தோ-சீனுவில் ஆதிக்கம் பெற்ற பிரான்சு மட்டும், இந்தோ-சீனுவை பிரெஞ்சுப்

பேரரசின் ஒரு மாநிலமாகவே கருதிச் செயல்பட்டது. இந்தோ சீனுவில் இருந்த பிரெஞ்சுத் தலைமை ஆளுநரின் செயல்கள் பாரிஸிலிருந்த பிரெஞ்சு பாராளுமன்றத்தால் முழுவதுமாக கட்டுப்படுத்தப்பட்டன. தலைமை ஆளுநருக்குச் சட்டங்கள் இயற்றும் உரிமையோ, நிர்வாகத்துறை உரிமையோ முழுவதுமாக வழங்கப்படவில்லை. பிரெஞ்சுப் பாராளுமன்றம் இந்தோ சீனுவுக் காகச் சட்டங்களை இயற்றியது. ஆனுல் இந்தோ சீனுப் பிரதிநிதிகள் சட்டமன்றத்தில் இடம் பெற்றிருக்கவில்லை.

கொச்சின் சீனு மட்டும் பிரெஞ்சுகளின் நேரடி ஆதிக்கத்தின் கீழிருந்தது. மற்ற நான்கு பகுதிகளும் பிரெஞ்சு பாதுகாப்பு நாடுகளாக இருந்தன. இருப்பினும் பாதுகாப்பு நாடுகளிலும் பிரெஞ்சு அதிகாரிகள் முழு ஆதிக்கமும் செலுத்தினர். இந்தோ சீனப் பகுதிகளைத் தங்கள் குடியேற்ற நாடாக ஏற்று, அரசியல் முறைகளை உருவாக்கிச் செயல்படுத்தத் தொடங்கும் போதே அப் பகுதிகளில் தேசிய இயக்கமும் தொடங்கப்பெற்றது.

# 6. சயாம் (அ) தாய்லாந்து
## (Siam or Thailand)

தென்கிழக்காசியாவிலேயே ஐரோப்பியர்களால் அடிமைப் படுத்தப்படாத ஒரே நாடு சயாம் (அ) தாய்லாந்துதான். சயாமைச் சுற்றியுள்ள நாடுகள் அனைத்தும் ஐரோப்பியர்களால் வென்று அடிமைப்படுத்தப்பட்டன. ஆனால் இச் சிறிய நாடுமட்டும் தனது சுதந்திரத்தைக் காப்பாற்றிக் கொண்டது. தன்னுடைய படை வலிமையைக் கொண்டுதான் சயாம் தன்னைக் காத்துக் கொண்டது எனக் கூற இயலாது. பர்மாவில் ஆதிக்கம் பெற்றிருந்த ஆங்கிலேயருக்கும், இந்தோசீனாவில் ஆதிக்கம் பெற்றிருந்த பிரெஞ்சுக்காரர்களுக்குமிடையே எழுந்த ஆதிக்கப் போட்டியின் விளைவாகவே சயாம் சுதந்திர நாடாக இருக்க அனுமதிக்கப் பட்டது. 19ஆம் நூற்றாண்டில் பல முறை ஆங்கிலேயர்களும், பிரெஞ்சுக்காரர்களும் சயாமை வென்று, தங்களுக்குள் பகிர்ந்து கொள்ளுகின்ற சூழ்நிலை உருவாகியிருந்தது. எல்லைகள் சுருக்கப் பட்டனவே தவிர சயாம் முழுவதையும் தங்களுக்குள் பகிர்ந்து கொள்ளும் அளவுக்கு ஆங்கிலேயர் பிரெஞ்சுக்காரர்களின் போட்டி இடந்தரவில்லை. எனவே இவ்விரு பேரரசுகளுக்கும் இடைப்பட்ட நாடாக (Buffer State) சுதந்திர சயாம் இருக்க அனுமதிக்கப் பட்டது.

கிழக்கு-வடகிழக்குப் பகுதியில் இந்தோசீனாவும், மேற்கு-வடமேற்குப்பகுதிகளில் பர்மாவும், தெற்கில் சயாம் வளைகுடாவும், அதற்கப்பால் தென்சீனக் கடல் பகுதிகளில் மலேயா, இந்தோனேஷியா, பிலிப்பைன் தீவுகளும் அமைந்திருக்கின்றன. சயாமின் நிலப்பரப்பு 200,000 சதுர மைல்களாகும். சயாமை நில அமைப்பின்படி முப்பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். தென் மேற்குப்பகுதி வளம்கொழிக்கும் சமவெளியாகும். சயாமின் இன்றைய தலைநகரான பாங்காக் நகரம் இப் பகுதியில்தான் அமைந்துள்ளது. வடக்கிலும், வடமேற்கிலும் மலைகளும் பள்ளத்

தாக்குகளும், அடுக்கடுக்காக அமைந்துள்ளன. சயாம் பருவக் காற்றுப் பகுதியில் அமைந்துள்ளது. மே மாதத்திலிருந்து அக்டோபர்வரை தென்மேற்குப் பருவக்காற்றினுல் சயாமில் மிகுந்த மழை பெய்கின்றது. நவம்பரிலிருந்து, பிப்ரவரிவரை மழையற்ற குளிர்காலம். பிப்ரவரியிலிருந்து இளவேனிலும், பின்னர் கோடை காலமும் தொடங்குகின்றன.

சயாமின் மொத்த மக்கள்தொகை 1967-ல் 32 மில்லியனுகும். இவர்களில் 'தாய்' மக்களினத்துடன் (Thais) சீனர்கள், இந்தியர்கள், வியட்நாமியர்கள், மலேயர்கள் ஆகியவனைவரும் கலந்து வாழ்கின்றனர். சயாமின் முக்கிய உணவுப் பொருள் அரிசியே யாகும். சீனர்களைத்தவிர ஏனையோரில் பெரும்பான்மையோர் வேளாண்மையில் ஈடுபட்டுள்ளனர். உற்பத்தி செய்யப்படும் உணவுப் பொருள்களில் 95 விழுக்காடு அரிசியேயாகும். பெரும் பாலும் வர்த்தகம் சீனர்களின் பொறுப்பிலேயே உள்ளது.

ஆரும் நூற்ருண்டில் இந்திய சமயங்களும், பண்பாட்டு முறைகளும் சயாமில் நுழைந்து செல்வாக்குப் பெற்றன. இப்போது சயாமில் வாழும் பெரும்பான்மையினரான 'தாய் மக்களினம்' பதின்மூன்ரும் நூற்ருண்டில்தான் சயாமில் நுழைந்தனர். இவர்கள் யுனுன் (சீனுவின் ஒரு மாநிலம்) பகுதியிலிருந்து வந்திருக்கலாம் எனக் கருதப்படுகின்றது. இந்த மக்களினத்தின் பெயராலேயே சயாம் 'தாய்லாந்து' என அழைக்கப்படுகின்றது.

16ஆம் நூற்ருண்டில் போர்ச்சுகீசியரும், டச்சுக்காரர்களும் தாய்லாந்தில் நுழைந்தனர். போர்ச்சுக்கீசியரும், டச்சுக்காரர்களும் நறுமணப் பொருள்களையே தங்களது முக்கிய வர்த்தகப் பொருள்களாக எண்ணி வந்ததால், தாய்லாந்து பகுதிகளில் வர்த்தக உரிமைகள் பெறுவதில் அவ்வளவாக முயற்சி எடுக்கவில்லை. எனினும், போர்ச்சுகீசியரும், டச்சுக்காரர்களும், தாய்லாந்தில் வர்த்தக நிலையங்களை அமைத்துக்கொண்டு, தங்கள் செல்வாக்கினை ஏற்படுத்த:முனைந்தனர். ஐரோப்பியர்களின் அரசியல், வர்த்தகத் தலையீடுகளை வெறுத்த தாய்லாந்தினர், ஐரோப்பியர்களுக்கெதிரான நடவடிக்கைகளில் ஈடுபட்டனர். 17ஆம் நூற்ருண்டின் இறுதியில் ஐரோப்பியர்கள் அனைவரும் தாய்லாந்திலிருந்து விரட்டப்பட்டனர்.

17ஆம் நூற்ருண்டில், டச்சு, ஆங்கிலேயர், பிரெஞ்சு வர்த்தகப் போட்டி தாய்லாந்திலும் ஏற்பட்டது. பிரெஞ்சு கிழக்கிந்திய வர்த்தகக்குழு, இந்தியாவில் வர்த்தக நிலையங்களை ஏற்படுத்திய பின்னர் தாய்லாந்திற்குச் சமயப் பரப்பாளர்களை

அனுப்பியது. சமயப் பரப்பாளர்களைத் தொடர்ந்து, பிரெஞ்சு வர்த்தகக் குழுக்களும் தாய்லாந்திற்கு அனுப்பப்பட்டன. தாய்லாந்தின் தலைநகரமாக இருந்த அயுத்தியாவில் (Ayuthiya) பிரெஞ்சு வர்த்தக நிலையம் ஏற்படுத்தப்பட்டது (1680). பிரெஞ்சு-தாய்லாந்து உறவு வளர்ந்தது. 1685-ல் வர்த்தக ஒப்பந்தமும் செய்து கொள்ளப்பட்டது. இவ்வொப்பந்தத்தின்படி பிரெஞ்சுக் காரர்களுக்கு முழு வர்த்தக உரிமையும் கொடுக்கப்பட்டது. மேலும் சிங்கோரா என்ற தீவையும் பிரெஞ்சுக்காரர்கள் பெற்றனர். உஜாங்-சலாங் அல்லது புக்கெத் தீவுகளிலிருந்து (Ujong Salong or Puket Islands) தகர ஏற்றுமதியின் முற்றுரி மையைப் பிரெஞ்சுக்காரர்கள் பெற்றனர். தாய்லாந்தில் வசிக்கும் பிரெஞ்சுக்காரர்களை, தாய்லாந்து நாட்டின் சட்ட-திட்டங்கள் கட்டுப்படுத்தாது என்ற தனியுரிமையும் (Exetra-teritorial Rights) வழங்கப்பட்டது. பிரெஞ்சுக்காரர்களின் செல்வாக்கு இதனுல் பன்மடங்கு உயர்ந்தது. பிரெஞ்சுக்காரர்களுக்கு முன்பே, டச்சுக்காரர்கள் தாய்லாந்து அரசை அச்சுறுத்தி வர்த்தகம், மற்றும் சிறப்புரிமைகளைப் பெற்றிருந்தனர் (1664).

பிரெஞ்சுக்காரர்களின் இத்தகைய முன்னேற்றத்தைக் கண்டு பொருமையடைந்த ஆங்கிலேயர்கள், தாங்களும் தாய்லாந்தில் வர்த்தக உரிமைகள் பெறவேண்டும் என எண்ணினர். இந்தியாவில் தங்களது செல்வாக்கினை வளர்த்துக் கொள்வதில் ஈடுபட்டிருந்த ஆங்கிலேயர்கள், சென்னையைத் தங்களது தலைமையிடமாகக் கொண்டு, முதலில் பர்மாவிலும், பின்னர் அங்கிருந்து தாய்லாந் திலும் வர்த்தக உரிமைகள் பெறும் முயற்சியில் ஈடுபட்டனர். 1687-ல் இரண்டு ஆங்கிலப் போர்க்கப்பல்கள் தாய்லாந்திலிருந்த மெர்குயி துறைமுகத்திற்கு அனுப்பப்பட்டன. ஆங்கிலக் கப்பற் படையைக் கண்டு அஞ்சி, மெர்குயிலிருக்கும் தாய்லாந்துப் படைகள் சரணடைந்துவிடும் என ஆங்கிலேயர்கள் கனவு கண்டனர். ஆனுல் ஆங்கிலப் படையைக் கண்டு வெகுண்டெழுந்த தாய்லாந்தினர், மெர்குயிலிருந்த ஐம்பது ஆங்கிலேயர்களைக் கொன்றுவிட்டு, ஆங்கில வர்த்தகக் குழுவின்மீது போர் தொடுத்தனர்.

இதற்கிடையில் பிரெஞ்சுக்காரர்களின் செல்வாக்கு மிகவும் உன்னத நிலையை அடைந்தது. பிரெஞ்சுப் படைகள் வரவேற்கப் பட்டன. மெர்குயி, பாங்காக், போன்ற நகரங்களில் பிரெஞ்சுப் படைகள் நிறுத்தப்பட்டன. நிலையான வர்த்தக உரிமைகளும், மற்றும் சிறப்புரிமைகளும் அதிக அளவில் வழங்கப்பட்டன. ஆனுல் பிரெஞ்சுப் படைகளின் வருகைக்குப் பின்னர் பிரெஞ்சு-தாய்லாந்து

உறவில் திடீர் மாறுதல்கள் தோன்றின. 1688-ல் பிரெஞ்சு எதிர்ப்பியக்கங்கள் தோன்றி, வலுப்பெற்றன. பிரெஞ்சு சமயப் பரப்பாளர்கள் கொல்லப்பட்டனர். கிறித்தவ சமயத்தைப் பின்பற்றிய தாய்லாந்தினரும் கொல்லப்பட்டனர். பாங்காக்கி லிருந்த பிரெஞ்சுப் படைகள் மட்டும் வெளியேறி இந்தியாவிற்குச் செல்ல அனுமதிக்கப்பட்டனர். பலர் கொல்லப்பட்டனர். தாய் லாந்தில் பிரெஞ்சுக்காரர்களின் வீழ்ச்சிக்குப் பின்னர், டச்சுக்காரர் களின் செல்வாக்கு உயர்ந்தது. ஆங்கிலேயர்மீது தாய்லாந்தினர் தொடுத்த போரின் முடிவில், ஆங்கிலேயர் மீண்டும் சில உரிமைகள் பெற்றனர்.

பதினெட்டாம் நூற்றுண்டில் பர்மிய அரசன் அலாங்பாயோ என்பவர் தாய்லாந்தின்மீது படையெடுத்து அயுத்தியாவை முற்றுகையிட்டார் (1760). 1763-ல். சியாங்மா (Chiengmai) என்ற நகரையும் பர்மியர் கைப்பற்றினர். 1767-ல் அயுத்தியா கைப்பற்றப்பட்டு, தீக்கிரையாக்கப்பட்டது. அதே நேரத்தில் பர்மாவின் மீது சீனர்கள் படையெடுத்தனர். தாய்நாட்டைக் காக்கும் முயற்சியில் பர்மியர் ஈடுபட்டிருந்த நிலையைப் பயன் படுத்திக் கொண்ட தாய்லாந்தினர் 1768-ல் அயுத்தியாவை மீட்டனர். 1775-ல் சியாங்மா நகரும் மீட்கப்பட்டது.

17ஆம் நூற்றுண்டின் இறுதியிலிருந்து 19ஆம் நூற்றுண்டு வரை தாய்லாந்தில் ஐரோப்பியரின் செல்வாக்கு மிக மிகக் குறைந்து காணப்பட்டது. டச்சுக்காரர்களும், ஒருசிலதனிப்பட்ட ஆங்கிலேய வர்த்தகர்களும் மட்டுமே, தாய்லாந்தில் சில உரிமை கள் பெற்றிருந்தனர். ஆனுல் பத்தொன்பதாம் நூற்றுண்டின் இடையில் ஐரோப்பியருடன் அமெரிக்கர்களும் சேர்ந்து கொண்டு தாய்லாந்தில் வர்த்தகச் செல்வாக்குப் பெற முயன்றனர். 1822-லிருந்து 1856-க்குள் இங்கிலாந்து, பிரான்சு, அமெரிக்கா ஆகிய மூன்று நாடுகளும் தாய்லாந்துடன் வர்த்தக உடன் படிக்கைகள் செய்துகொண்டன. இதற்குள்ளாகப் பர்மாவின் பெரும்பகுதியை ஆங்கிலேயரும், இந்தோ சீனுவின் பெரும் பகுதியைப் பிரெஞ்சுக்காரர்களும் வென்று, தங்கள் ஆட்சியை நிறுவி விட்டனர்.

1850ஆம் ஆண்டு வரையில் தாய்லாந்து அரசு ஐரோப்பியர் களுடன் வர்த்தக உறவு ஏற்படுத்திக் கொள்வதையேகூடத் தவிர்க்க முடியாதநிலையில்தான் ஏற்படுத்திக் கொண்டது. சிறப்பாக நவீன போர்க் கருவிகளுக்காகவே ஐரோப்பியர்களுடன் உறவு கொள் வதை விரும்பியது. ஆனுல் 1851-ல் ஆட்சிப் பொறுப்பேற்ற

மன்னர் 'மாங்குத்' (King Mongkut) என்பவர் ஐரோப்பிய முறைகளைப் புகுத்தி, நாட்டை முன்னேற்ற வேண்டும் என்பதில் தீவிரமாக இருந்தார். இதன் காரணமாக ஐரோப்பியருடன் ஒத்துழைத்து, அவர்களின் முன்னேற்றக் கருத்துகளை ஏற்றுக் கொள்ள முன்வந்தார். தாய்லாந்தை ஐரோப்பியமயமாக்கும் பணியில் ஈடுபட்டார். அதன் முதற்படியாக ஆங்கிலேயருடன் 1855-ல் வர்த்தக ஒப்பந்தம் ஒன்றனைச் செய்து கொண்டார், அதன்படி ஆங்கில 'கான்சல்' (Consul) ஒருவரை பாங்காக்கில் அனுமதிக்கவும்,ஆங்கிலேயருக்கு தனியுரிமைகள் (Extra-territorial-rights) வழங்கவும் இசைந்தார். ஏற்றுமதி, இறக்குமதிப் பொருள் களின் மீது விதிக்கப்பட்ட சுங்கவரிகளும் முறைப்படுத்தப்பட்டன. இதே உரிமைகளை 1856-ல் அமெரிக்காவும் பிரான்சும் பெற்றன.

ஐரோப்பியர்களுடன் செய்துகொண்ட ஒப்பந்தங்களால் உறவை ஏற்படுத்திக் கொண்ட தாய்லாந்து அரசன் மாங்குத், அவர்களின் உதவியுடன் சீர்திருத்தப் பணிகளை மேற்கொண்டார். நெடுஞ்சாலைகள் அமைத்தல், புதிய கால்வாய்களை வெட்டிப் போக்கு வரத்துக்குப் பயன்படுத்துதல், கப்பல் கட்டுதல் போன்ற ஆக்கப்பணிகள் மேற்கொள்ளப்பட்டன. சமயப் பொறைக் கொள்கை, ஏற்றுக்கொள்ளப்பட்டது. அவருக்குப் பின்னர் தாய் லாந்தின் ஆட்சிப் பொறுப்பேற்ற அவரது மகனான சுலாலங்கான் (Chulalongkorn) என்பவரும் தந்தை வழி நடந்து, நாட்டை மேலும் முன்னேற்றப் பாதையில் நடத்திச் சென்றார். ஐரோப்பிய வல்லுநர்களின் உதவி பெற்று நிர்வாகம், வருவாய்த் துறை, சட்டங்கள் இயற்றுதல், கல்வி போன்ற துறைகளில் புதுமைகளைப் புகுத்தினர். இருப்புப்பாதைகள் போடப்பட்டன. புகைவண்டி யுகம் தாய்லாந்திலும் தொடங்கியது. அடிமை முறை ஒழிக்கப் பட்டது. தாய்லாந்து ஐரோப்பிய முறைகளை ஏற்று வளர்ச்சி யடையத் தொடங்கியது.

இருப்பினும் பத்தொன்பதாம் நூற்றாண்டு முழுவதும் தாய்லாந்தின் சுதந்திரத்திற்கு ஆபத்து சூழ்ந்தேயிருந்தது. தாய்லாந்தின் மேற்கு, வடமேற்குப் பகுதியான பர்மாவை ஆங்கிலேயர் கைப்பற்றியிருந்தனர். கிழக்கு, வடகிழக்குப் பகுதி யான இந்தோ சீனாவை பிரெஞ்சுக்காரர்கள் கைப்பற்றியிருந்தனர். இவ்விரு நாடுகளுக்குமிடையில் இருந்த தாய்லாந்து எந்த நேரத் திலும், ஏதாவது ஒரு அரசாலோ, அல்லது இரண்டாகப் பிரிக்கப்பட்டோ, அடிமை நிலையை அடையக் கூடிய ஆபத்து இருந்தது. ஆனால் தாய்லாந்தின் நல்லகாலம், ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்குமிடையே ஆதிக்கப் போட்டி ஏற்பட்

டிருந்தது. இந்தியாவிலும், மற்ற நாடுகளிலும், ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரர்களும் வர்த்தக, அரசியல் உரிமைகளுக்காக போரிலீடுபட்டிருந்தனர். இந்த ஆதிக்கப் போட்டியே தாய்லாந்தின் சுதந்திரத்தைப் பாதுகாத்தது எனக் கூறலாம். இதனுல் தான் 'வளர்ந்துவிட்ட மூங்கிலைப் போன்று, வீசுகின்ற காற்றிற்கு ஏற்ப வளைந்து கொடுப்போமேயல்லாது, ஒடிந்து விழமாட்டோம்', எனத் தாய்லாந்தினர் பெருமிதத்தோடு கருதுகின்றனர் போலும். ஏனெனில் ஆங்கிலேயரும், பிரெஞ்சுக்காரர்களும், அண்டை நாடுகளில் ஆதிக்கம் பெற்றிருப்பதைவிட, இடைப்பட்ட நாடாகச் சுதந்திர தாய்லாந்தினை அங்கீகரித்து ஏற்றுக்கொள்ள முன் வந்தனர். எனவேதான் தாய்லாந்தின் சுதந்திரம் உறுதிப்பட்டது. 1930ஆம் ஆண்டில் பாரசீகத்திலிருந்து, ஜப்பான் வரையிலுமிருந்த பகுதிகளில் ஐரோப்பியர்களின் ஆதிக்கத்திற்குட்படாத ஒரே சுதந்திர நாடு தாய்லாந்து மட்டுமேயாகும். இருப்பினும் இங்கிலாந்தும், பிரான்சும், தாய்லாந்தின் மேற்கு, கிழக்குப் பகுதிகளில் சிலவற்றை வற்புறுத்திப் பிடுங்கிக் கொண்டன. தாய்லாந்திடமிருந்து கம்போடியாவையும், லாவோசையும் பிரான்சு பிடுங்கிக்கொண்டது. 1904, 1907ஆம் ஆண்டுகளில் பிரான்சுடன் செய்துகொண்ட உடன்படிக்கைகளின்படி தாய்லாந்து மேலும் ஒரு சிறுபகுதியை பிரான்சிற்குவிட்டுக்கொடுத்தது. 1909-ல் 'திராங்கானு', 'கிலாந்தான்', 'கேடா', 'பெர்லிஸ்' (Trengganu, Kelantan, Kedah, Perlis) ஆகிய......மலேயாப் பகுதிகளைத் தாய்லாந்து ஆங்கிலேயருக்கு விட்டுக் கொடுத்தது. அதற்குப் பதிலாக, தாய்லாந்திலிருந்த ஆங்கிலேயர்களை ஆளும் உரிமையைப் பெற்றது. இவ்வாறு இருபதாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் வலிமையிழந்து நாட்டின் பெரும் பகுதிகளைப் பறிகொடுத்தும், ஆங்கிலேய-பிரெஞ்சுப் போட்டியின் விளைவாகத் தனது சுதந்திரத்தைக் காத்துக்கொண்டு, ஐரோப்பியர்களின் அடிச்சுவட்டில் முன்னேற்றம் காணும் முயற்சியில் ஈடுபட்டிருந்தது.

## இருபதாம் நூற்றுண்டில் தாய்லாந்து

இருபதாம் நூற்றுண்டில் தாய்லாந்தை எதிர்நோக்கியிருந்த பிரச்சினைகள் மூன்று ஆகும். முதலாவது வரம்பற்ற முடியாட்சியை வரம்புக்குட்படுத்தி, மக்களாட்சியைத் தோற்றுவித்தல், இரண்டாவது தேசிய ஒருமைப்பாட்டை ஏற்படுத்தி, நிலைநாட்டுவது. மூன்றுவது மேலை நாடுகளின் ஆதிக்க வெறியினின்றும், ஜப்பானின் ஆக்கிரமிப்பினின்றும், தாய்லாந்தின் சுதந்திரத்தைக் காப்பதும் ஆகும்.

## தாய்லாந்தில் மேலைநாட்டு முறைகள்

மாங்குத், அவரது மைந்தன் சுலாலங்கான் ஆகிய அரசர்களால் தொடங்கப்பட்டு, செயல்படுத்தப்பட்ட, தாய்லாந்தை ஐரோப்பிய மயமாக்கும் பணி, ஆறும் இராமாவச்சிரவுத் (King Rama VI Vadjiravudh 1910-1925) என்ற அரசரின் ஆட்சியில் மேலும் ஊக்கமடைந்தது. மேலைநாட்டு முறைகள் பின்பற்றப் படுவதற்கு முதல் தடையாக நின்ற ஹீனயான புத்தமதப் பிட்சுக்களின் செல்வாக்கு வெகுவாகக் குறைக்கப்பட்டது. மற்ற மதத்தினருக்கும் சம உரிமைகள் வழங்கப்பட்டதன் மூலம், புத்த மதத்தின் செல்வாக்கு மேலும் குறைக்கப்பட்டது. ஏராளமான தாய்லாந்து இளைஞர்கள் ஐரோப்பிய நாடுகளில் கல்வி பயின்று நாடு திரும்பினர். இவர்களனைவரும் ஐரோப்பியத் தொழில், விஞ்ஞான வளர்ச்சியைக் கண்டு, உணர்ந்து, கற்று, தேர்ச்சி பெற்று, புதிய தாய்லாந்தை உருவாக்கும் ஆர்வத்துடன் தாய் நாடு திரும்பியவராவர். மக்களாட்சி முறைகள் செயல்படும் முறைகளையும், அதன் சிறப்பையும் கற்றுவந்தனர். வச்சிரவுத் அரசரின் அரும் முயற்சியாலும், வற்புறுத்தலாலும் ஐரோப்பிய நாட்டினர் தாங்கள் இதுகாறும் அனுபவித்து வந்த தனியுரிமைகளை விட்டுக்கொடுத்தனர். தாய்லாந்து முழு உரிமை பெற்ற நாடாக விளங்கியது.

முதல் உலகப் போரில் நேச நாடுகளின் சார்பில் போரிட ஒரு சிறுபடையை தாய்லாந்து அனுப்பியது. போரின் முடிவில் நாடு திரும்பிய இளைஞர்கள் மக்களாட்சி முறையிலும், மேலைநாட்டு அரசியல் முறையிலும் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டிருந்தனர். இவர்கள் அரசனின் எதேச்சாதிகாரத்தை ஏற்க மறுத்தனர். படித்த, அறிவாற்றல் மிக்க இளைஞர்கள் 'முற்போக்காளர் கட்சி' (Promoters) என்ற கட்சியைத் தோற்றுவித்து, எதேச்சாதிகார முறைகளைச் சாடினர். அரசியலமைப்பின் வரம்பிற்குட்பட்ட அரசை நிறுவ வேண்டுமெனப் போராடினர்.

தாய்லாந்து அரசில் சட்டமன்றமும், செயல் துறையும் இருப்பினும், அவைகளின் உறுப்பினர்கள் அனைவரும் அரசரால் நியமிக்கப்பட்டவர்களே. பெரும்பாலும் அரசகுலத்தினரும், உயர்குடிமக்களுமே இப் பதவிகளில் நியமிக்கப்பட்டிருந்தனர். சட்டமன்றம் இருந்தாலும் அரசரிடமே அதிகாரங்கள் அனைத்தும் குவிக்கப்பட்டிருந்தன. மேலைநாட்டு முறைப்படி நிர்வாகத்துறை அலுவலர்கள் நியமிக்கப்பட்டனர். நெடுஞ்சாலைகள், இருப்புப் பாதைகள், தொழில் துறைகள், போன்றவைகள் ஏற்படுத்தப் பட்டிருப்பினும், தாய்லாந்து அரசு எதேச்சாதிகார அரசாகவே

இருந்தது. மேலைநாட்டுக் கல்வி பயின்று திரும்பிய இளைஞர்கள் இந்த எதேச்சாதிகாரப் போக்கினை மாற்ற இயக்கங்கள் தொடங்கினர். இதன் விளைவாக அரசரின் எதேச்சாதிகாரம் நாளடைவில் குறைக்கப்பட்டது.

**மக்கள் கட்சி (The Peoples Party)**

அரசு அதிகாரிகளும் படையினரும் அரசரின் எதேச்சாதிகாரப் போக்கினை வெறுத்தனர். அவர்களுக்குள் கருத்து வேறுபாடு களிருப்பினும், நாட்டின் அரசியலில் அனைவரும் பங்குபெற வேண்டும் என்பதில் மட்டும் வேறுபாடு காணப்படவில்லை. எதேச்சாதிகார முறையை மாற்றி, மக்களாட்சி முறையைத் தோற்றுவிக்க வேண்டும் என்பதை உறுதியாக உணர்ந்த ஒருசிலர் 'மக்கள் கட்சி' என்ற ஒரு புதிய அரசியல் கட்சியைத் தோற்று வித்தனர். 'மக்கள் கட்சி' என்ற பெயரில் அரசியல் கட்சி தோற்று விக்கப்பட்ட போதிலும், சாதாரண மக்கள் அரசியலில் ஆர்வம் கொள்ளாது விலகியே நின்றனர். இதை 'அரசியல் கட்சி' என்பதைவிடத் தனிப்பட்ட ஒரு சிலரால் ஏற்படுத்தப்பட்ட 'கிளப்' (Club) என்று கூறுவதே மிகவும் பொருந்தும்.

**தாய்லாந்தில் புரட்சி (1932)**

மக்களிடையே பரவியிருந்த அரசியல் உணர்ச்சிகளை உணர்ந் திருந்த தாய்லாந்து அரசர், அரசியல் அமைப்பு ஒன்றனை உரு வாக்கிச் செயல்படுத்த முயன்றார். இம் முயற்சியைச் செயல் படுத்தும் முன்னர் உலகில் ஏற்பட்ட 'பொருளாதாரப் பெருமந்தம்' தாய்லாந்தையும் தாக்கியது. பொருளாதார நெருக்கடியைச் சமாளிக்கும் எண்ணம் கொண்ட அரசர், அரசு ஊழியர்கள், படையினரின் ஊதியத்தைக் குறைத்தார். மன்னரின் எதேச்சாதிகாரப் போக்கில் வெறுப்புற்றிருந்த இவ்விருசாராரும் 1932-ல் கிளர்ச்சி செய்து, ஆட்சியைக் கைப்பற்றினர். 'புயல் வீசும்போது வளைந்து கொடுப்போம். முறிந்து விழமாட்டோம்' எனப் பெருமை பேசிய தாய்லாந்து அரசகுலம் வளைந்து கொடுக் கத் தவறியது; முறிந்து வீழ்ந்தது. 'மன்னரின் எதேச்சாதிகாரக் கட்டுப்பாடுகளை நீக்கி, அரசியலமைப்புக்குட்பட்ட மக்களாட்சி யைத் துவக்குவதே எங்களது குறிக்கோள்' எனப் பெருமை பேசிய புரட்சியாளர்கள், ஆட்சிப் பொறுப்பேற்றதும், தாங்களும் எதேச் சாதிகார முறைகளையே பின்பற்றினர். மன்னரின் எதேச்சாதி காரம் மறைந்து, புரட்சித் தலைவர்களின் ஆதிக்கம் தோன்றியது. இப் புரட்சி ஆட்சியாளர்கள் தாற்காலிக அரசியல் அமைப்பு ஒன் றனை வெளியிட்டனர். அதன்படி அரசியல் அதிகாரங்கள் அனைத்தும்,

அரசியல் அமைப்பு முறையாக ஏற்படுத்தப்படும்வரை, பத்தாண்டு களுக்கு மக்கள் கட்சியினரிடமே ஒப்படைக்கப் பட்டிருந்தது.

அதிகாரத்தைக் கைப்பற்றிய குழுவில் மூன்று பிரிவினர்கள் இருந்தனர். அவர்கள் முற்போக்காளர்கள், குடியரசு விரும்பிகள், படையதிகாரிகள் என்பவர்கள் ஆவர். 1933-ல் அரசர் அதிகாரத் தைக் கைப்பற்ற முயன்று தோற்றார். 1935-ல் ஆனந்த மகிதால் (Ananda Mahidol) என்பவர் புதிய அரசராக அறிவிக்கப்பட்டார். இதற்கிடையில் ஆட்சியாளர்களிடையே ஆதிக்கப் போட்டி ஏற்பட்டது. முற்போக்காளர் குடியரசு விரும்பிகள் ஆகியோரின் பெரும்பான்மைத் தலைவரான பிரிதி பனோம்யாங் (Pridi Phanom-yang) என்பவருக்கும், படையினர் தலைவரான லுவாங் பிபுன் சொங்ராம் (Luang Phibun Songram) என்பவருக்குமிடையே ஏற்பட்ட ஆதிக்கப் போட்டியில் படையினரின் ஆதரவைப் பெற்ற பிபுன் வெற்றி பெற்று முதலமைச்சரானார் (1938). ஆறு ஆண்டு கள் அவரது வல்லாட்சி நடைபெற்றது.

**புரட்சி அரசின் சாதனைகள்**

1932-ல் ஏற்பட்ட புரட்சியின் விளைவாகப் பதவியேற்றவர்கள் ஏராளமான சீர்திருத்தங்களை மேற்கொண்டனர். இவர்களுடைய சீர்திருத்தங்களின் அடிப்படை நோக்கம் தாய்லாந்து மக்களின் தேசிய உணர்வைத் தட்டியெழுப்புவது ஆகும். இந் நோக்கத்தில் வெற்றியும் பெற்றனர் எனலாம். கல்வி முன்னேற்றத்தில் மிகுந்த ஆர்வம் காட்டப்பட்டது. மக்கள் அனைவரும் கல்வியறிவு பெறு வதன் மூலம்தான் தேசியம் வளர முடியும் என்பதை உணர்ந்து, அதனடிப்படையில் நாட்டு மக்களனைவருக்கும் கல்வி புகட்டுவதற் கானத் திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டன. சிறுபான்மையின ராக இருந்த மலேயர்கள், சீனர்கள் ஆகியோரையும் தாய்லாந்தின் மீது பற்றுகொள்ளுமாறு செய்ய முனைந்தனர். ஆனால் சீனர்களும், மலேய முகமதியர்களும் தாய்லாந்து அரசின் கல்விக் கொள்கை களை எதிர்த்தனர். இதுவரை ஐரோப்பியர்கள், சீனர்கள் ஆகியோரின் கட்டுப்பாட்டில் இருந்த தொழிற்சாலைகள், போக்கு வரத்துத் துறைகள், அனைத்தையும் அரசு எடுத்துக்கொண்டு விட்டது. வர்த்தகத்தையும் அரசே எடுத்துக் கொண்டது. அந்நியர்கள் இத் துறைகளிலிருந்து வெளியேற்றப் பட்டதால் நாட்டின் பொருளாதார வளர்ச்சி தடைபட்டது. இதைச் சரிப் படுத்தும் முறையில் பல கழகங்கள் (Public Corporations) ஏற்படுத்தப் பட்டன. அரசு பல தொழிற்சாலைகளை நிறுவியது. பொருளாதாரத் துறையில் தன்னிறைவு காணும் முறையில் திட்டங்கள் தீட்டப்பட்டுச் செயல்படுத்தப்பட்டன.

சமயப் பண்பாட்டுத் துறைகளில் மாற்றங்களை ஏற்படுத்தி, அதன்மூலம் தாய்லாந்தின் தேசியத்தை வளர்க்க முயன்ருர் பிபுன். புத்தமதத்தைத் தழுவியிருப்பதும், நாட்டுப் பற்றும் ஒன்றே என அறிவித்தார். கிறித்தவர்கள், முகமதியர்கள் அரசு பணிகளில் நிலைத்திருக்க வேண்டுமாயின் மதமாற்றம் செய்து கொண்டு, புத்த மதத்திற்குத் திரும்ப வேண்டும் என வற்புறுத்தினுர். தேசிய மதமாகப் புத்தமதம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. அகத்தூய்மை யைப் போலவே, புறத்தூய்மையின் சிறப்பும் போதிக்கப்பட்டது. புறத்தூய்மையைப் போலவே, சுற்றுப்புறத் தூய்ம்மயும், சுகாதாரத்தின் நன்மையும் மக்களுக்கு விளக்கப்பட்டன. வெற்றிலை போடும் பழக்கத்தைத் தவிர்க்கும் படியும் மக்களை வற்புறுத்தினர். இவ்வாறு கல்வி, தொழில்துறை, பொதுச் சுகாதாரம், முறையாக ஆடை அணிவதன் மூலம் நாட்டின் பெருமையைக் காத்தல் என்ற வகையில் அனைத்துமே தாய்லாந்தின் மேன்மைக்கும், முன்னேற்றத்திற்கும் காரணமாகவும், தேசிய உணர்வைத் தூண்டும் முறையிலும் அமைந்திருந்தன. தேசிய உணர்வினை மேலும் உறுதியாக்கும் வகையில் நாட்டின் பெயரும் கூட 'சயாம்' என்பதிலிருந்து 'தாய்லாந்து' என 1939-ல் மாற்றப்பட்டது. 'தாய்லாந்து' என்ருல் 'சுதந்திர நாடு' என்பது பொருளாகும்.

### வெளிநாட்டுக் கொள்கை

1932ஆம் ஆண்டில் ஏற்பட்ட புரட்சியின் பின்னர் தாய் லாந்தில் ஏற்பட்ட அரசு வெளி உறவுத் துறையில் ஜப்பானியரைப் பின்பற்ற ஆரம்பித்தது. ஜப்பானின் மஞ்சூரிய ஆக்கிரமிப்புக் கொள்கையை ஆதரித்த ஒரேநாடு தாய்லாந்து ஆகும். பன்னுட்டு கழக உறுப்பு நாடுகளில் தாய்லாந்து மட்டுமே ஜப்பானுக்கு ஆதர வளித்தது. இவ்வாதரவிற்கு நன்றி பாராட்டும் வகையில் தாய்லாந்து-ஜப்பானிய நட்புறவு வளர்ந்தது. 1938-ல் லுவான் சொங்ராம் பிபுன் பதவியேற்றவுடன் இவ்வுறவு மேலும் வலு வடைந்தது. தாய்லாந்தின் இராணுவம் ஜப்பானிய முறையில் திருத்தியமைக்கப்பட்டது. ஜப்பானிய உயர் படையதிகாரிகள் தாய்லாந்துப் படைகளுக்குப் பயிற்சியளித்தனர். ஜப்பானுடன் வர்த்தக ஒப்பந்தம் ஒன்றும் செய்து கொள்ளப்பட்டது. இதனுல் தாய்லாந்தில் ஜப்பானியரின் செல்வாக்கு வெகுவாக உயர்ந்தது.

பர்மாவில் ஆதிக்கம் பெற்றிருந்த ஆங்கிலேயரும், இந்தோ-சீனுவில் ஆதிக்கம் பெற்றிருந்த பிரெஞ்சுக்காரரும் தங்களுக்குள் ஏற்பட்டிருந்த போட்டியின் விளைவாக, தாய்லாந்தின் சுதந்

திரத்தை அனுமதித்தனர். இருப்பினும் தாய்லாந்தின் எல்லையோரப் பகுதிகளை இவ்விரு நாட்டினரும் ஆக்கிரமித்திருந்தனர். ஜப்பானுடன் நட்புறவு கொண்டிருந்த தாய்லாந்து, 19, 20ஆம் நூற்றுண்டுகளில் தங்களிடமிருந்து ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரரும் பறித்துக் கொண்ட பகுதிகளை மீட்க வேண்டி, கிளர்ச்சிகளில் ஈடுபட்டனர். இரண்டாம் உலகப் போரின் தொடக்கத்தில் பிரான்சு சரணடைந்தது. இந் நிலையைப் பயன்படுத்திக்கொண்ட தாய்லாந்து, கம்போடியாவில் தான் முன்னர் இழந்திருந்த பகுதிகளை மீண்டும் ஆக்கிரமித்து, எடுத்துக் கொண்டது. லாவோஸ் பகுதியிலும் தாய்லாந்து சிறு நிலப்பரப்பைத் தனதாக்கிக் கொண்டது. இச் செயல்கள் அனைத்தும் ஜப்பானின் அனுமதியுடனும், ஆதரவுடனும் மேற்கொள்ளப்பட்டன. ஆதரவு காட்டிய ஜப்பானுக்கு மேலும் வர்த்தகச் சிறப்புரிமைகள் வழங்கப்பட்டன.

இரண்டாம் உலகப்போரில் ஜப்பான் இறங்கியவுடனே ஆங்கிலேயரின் பர்மா, மலேயாப் பகுதிகளைத் தாக்க ஜப்பான் திட்டமிட்டது. இதை நிறைவேற்றும் பொருட்டு தாய்லாந்தின் வழியாகத் தமது படைகளை நடத்திச்செல்ல ஜப்பான் அனுமதி கோரியது. சிறிது தயக்கத்தின் பின்னர் அனுமதி வழங்கப்பட்டது. ஜனவரி 25ஆம் நாள் (1942) ஜப்பானுடன் இணைந்து தாய்லாந்தும் பிரிட்டன், அமெரிக்க நாடுகளின்மீது போர் தொடுத்தது. பிபுன் தலைமையிலான தாய்லாந்தின் இராணுவ அரசு நேசநாடுகளின் மீது போர்த் தொடுத்திருந்தாலும், பிரதி பனேம்யாங்கின் (Pridi-Phanomyong) தலைமையில் மக்களாட்சியை விரும்புவோர் நேசநாட்டினருக்கு உதவியளிக்க முன்வந்தனர்.

போரின் இறுதியில் ஜப்பான் சரணடைந்த பின்னர், தாய்லாந்து தனது பாதுகாப்பு நாடாக இருக்க வேண்டுமென இங்கிலாந்து விரும்பியது. ஆனால் அமெரிக்கா இக் கருத்தினை எதிர்த்தது. தாய்லாந்தின் போர் அறிவிப்பையோ, போர் முயற்சிகளையோ கூட அமெரிக்கா அங்கீகரிக்கவில்லை. அமெரிக்காவின் தலையீட்டினால் தாய்லாந்தின் சுதந்திரம் பாதுகாக்கப்பட்டது. ஜப்பான் போரிலிறங்குவதற்கு முன்னர் (Dec. 7, 1941) தாய்லாந்து எடுத்துக்கொண்ட பகுதிகளை, மீண்டும் இழந்தது. பெருந் தொகையைப் போர் இழப்பீடாக இங்கிலாந்திற்குக் கொடுக்க இசைந்தது. சுதந்திர நாடாக ஏற்றுக்கொள்ளப்பட்ட தாய்லாந்து 1946, டிசம்பர்த் திங்களில் ஐக்கிய நாடுகளின் சபையில் உறுப்பினராக ஏற்றுக்கொள்ளப்பட்டது.

## இரண்டாம் உலகப் போரின் பின்னர்

இரண்டாம் உலகப் போரின் பின்னர் தாய்லாந்தின் அரசியல் வானில் அமைதியற்ற சூழ்நிலை தோன்றியது. அடிக்கடி புரட்சிகள் தோன்றின. அரசியல் மாற்றங்கள் ஏற்படுத்தப்பட்டன. நிலையற்ற, குழப்பம் நிறைந்த நிலை ஏற்பட்டது. இப் புரட்சிகள் குழப்பங்கள் அனைத்தும், நிலையான வலிமையுள்ள அரசை ஏற் படுத்தித் தேசிய ஒருமைப்பாட்டின் அடிப்படையில், நாட்டின் வளர்ச்சியைத் தூண்ட வேண்டும் என்ற சிறந்த நோக்கத்தினடிப் படையில், ஏற்பட்டதாகக் கூறிவிட முடியாது. அரசியல் கட்சி களுக்கிடையே எழுந்த ஆதிக்கப் போட்டியின் விளைவே இப் புரட்சி களின் தோற்றம் எனக் கூறுவதே மிகவும் பொருந்தும். 1930ஆம் ஆண்டிற்குப் பின்னர் தோன்றிய அரசியல் கட்சிகளின் சுயநலமிக்க அதிகார வேட்கையே இப் புரட்சிகளின் அடித்தளமாகும். இரண்டாம் உலகப் போரில் ஜப்பானுடன் இணைந்து போரிட்டுத் தோல்வியைத் தழுவியதன் விளைவாக, பிபுன் சொங்ராம் மக்களி டையே சற்று மதிப்பிழந்திருந்தார். ஆனால் இங்கிலாந்து, அமெரிக்க அரசுகளின் ஆதரவைப் பெற்ற பிபுன் சொங்ராமின் இராணுவ ஆட்சி மீண்டும் 1948-ல் ஏற்படுத்தப்பட்டது. 1957ஆம் ஆண்டு பிபுன் சொங்ராம் பதவி விலக்கப் பெற்றார். சாரித் தனராத் (Sarit Thanarat) என்ற உயர் படையதிகாரி ஆட்சிப் பொறுப்பினை ஏற்றார். பிபுன் சொங்ராமின் ஆட்சியின் குறை பாடுகளையும், திறமையின்மையையும் வெளி உறவுக் கொள்கை களையும் சாடிய சாரித் தனராத், தமது ஆட்சியின்போது, அக் குறைபாடுகளைக் களைந்து, சிறப்பானதொரு அரசியல் கொள்கையை உருவாக்கிச் செயல்படுத்த எவ்வித முயற்சியும் எடுத்துக்கொள்ள வில்லை. 1963-ல் சாரித் இறந்த பின்னர் தானம் கிட்டகாச்சான் (Thanam Kittakachorn) என்பவர் தலைமையமைச்சராகப் பதவி யேற்றார். தானம் கிட்டகாச்சானின் தலைமையில் ஏற்பட்ட படை யினரின் ஆட்சியில் ஆதிக்கம் பெற்றிருந்தவர்கள் மூவராவர். தானம் கிட்டகாச்சானின் மகன் தளபதி நரோங் கிட்டகாச்சான், நரோங்கின் மாமனார் தளபதி பிராபாஸ் சாருஸ்தியன் (Prapas Charusthien). இவர்களின் ஆட்சி 'மூவர் சர்வதிகாரம்' (Tyrranrical Trio) எனக் குறிப்பிடப்படுகின்றது.

1973, அக்டோபரில் ஏற்பட்ட மாணவர்களுடைய புரட்சியின் விளைவாக 'மூவர் சர்வதிகாரம்' ஒழிக்கப்பட்டது. தானம் கிட்ட காச்சானும் அவருடைய குழுவும் விரட்டப்பட்டது. தாய்லாந்தின் அரசர் பூமிபால் அதுல்யதேஜ் (King Bhumipol Adulyadej) தாய் லாந்தில் முதல் மக்களாட்சியை நிறுவினார். 1975, பிப்பிரவரி

15ஆம் நாள் 69 வயது நிறைந்த சேனி பிரமோஜ் (Seni Pramoj) என்பவர் தலைமையமைச்சராகப் பதவியேற்றார்.

1945-லிருந்து 1968-க்குள்ளாக ஐந்து அரசியல் அமைப்புகள் வெளியிடப்பட்டன. இதற்கிடையே ஏற்பட்ட புரட்சிகளும், அதன் விளைவாக ஏற்பட்ட படையதிகாரிகளின் வல்லாட்சியும், மன்னரின் எதேச்சாதிகாரத்தை ஏற்றுக் கொண்டிருந்தன. தாய் லாந்தின் அரசியலில் மாற்றங்கள் நிகழ்ந்தபோதிலும், அரசியலில் புரட்சிகளையும், புரட்சித் தலைவர்களின் முறையற்ற, திறமையற்ற, ஊழல் மிகுந்த ஆட்சி முறையினையும் மக்கள் வெறுக்கத் தொடங்கினர். இதனால் மக்களிடையே மன்னரின் செல்வாக்கு மிகவும் உயர்ந்துள்ளது. அரசர் அரசியின் உருவப் படங்கள் பயபக்தியுடன் நாட்டுமக்கள் அனைவராலும் வணங்கப்படுகின்றன. புரட்சியாளர்களும், வன்முறையாளர்களும் கூட அரசர்-அரசியின் உருவப்படங்கள் வைக்கப்பட்டிருக்கும் எந்த இடத்தையும் தாக்கவோ, அழிக்கவோ முற்படுவதில்லை. இன்றும் கூட தாய் லாந்திற்கு வருகை தரும் வெளிநாட்டுப் பயணிகளுக்கு வழங்கும் முதல் அறிவிப்பு, ‘தாய்லாந்தில் மகிழ்ச்சியுடன் உங்கள் விடுமுறை யைக் கழிக்க விரும்பினால் விளையாட்டுக்காக வேண்டியும்கூட எங்கள் அரசர் குடும்பத்தைப் பற்றி எவ்விதக் குறைபாடுகளையும் பேசாதீர்கள். ஏனெனில் தாய்லாந்து மக்கள் எதை வேண்டு மானாலும் பொறுத்துக் கொள்ளுவார்கள். ஆனால் தாங்கள் தெய்வத்தின் நிழலாக எண்ணி வணங்கும் மன்னரைப் பற்றி மட்டும் யாரும் மறந்தும்கூட குறை கூறுவதைப் பொறுத்துக் கொள்ள மாட்டார்கள்’ என்பதாகும். அரசரும் மக்களின் நலம் பேணும் பண்பாளராகவும், அரசியல் அமைப்பு முறையில் மக்களாட்சி முறையினை உருவாக்குவதில் ஆர்வமும் காட்டி வருகின்றார்.

1960ஆம் ஆண்டிற்குப் பின்னர் தாய்லாந்தில் ஏற்பட்ட புரட்சிகளின் அடிப்படைக் காரணம் பொருளாதாரச் சிக்கல்கள் தான். தகரம், அரிசி, ஆகிய இவ்விரு பொருள்களுமே அந்நியச் செலாவணியைப் பெற்றுத் தருவனவாகும். இப் பொருள்களின் உற்பத்தியைப் பெருக்கி, அந்நியச் செலவாணியைப் பெற்று, அந்நிய முதலீடுகளை வரவேற்று, தொழில் துறைகளை வளர்க்கும் திட்டங்கள் தீட்டப்பட்டன. தாய்லாந்தின் தொழில் வளர்ச்சிக்கு அமெரிக்கா மிகப்பெரிய அளவில் உதவ முன்வந்தது. வியட்நாம் போரில் ஈடுபட்டிருக்கும் அமெரிக்கா, தாய்லாந்தின் உறவை விரும்பியேற்றுக்கொண்டு, தாய்லாந்தின் பொருளாதார மேம் பாட்டில் அக்கறையும், ஆர்வமும் காட்டி வருகின்றது. வியட்நாமி

விருந்து விடுமுறையில் வரும் அமெரிக்கப் படையினர் தாய்லாந்தில் தங்கி ஓய்வு பெறும் வசதிகள் செய்து தரப்பட்டன. அந்நிய நாடுகளின் மூலதனத்தை வரவேற்கும் வகையில் வரிச்சலுகைகள் கொடுக்கப்பட்டன. 1968ஆம் ஆண்டிற்குள்ளாக கார், டயர், தொழிற்சாலை மருந்து, இரும்புப் பொருள்கள், மின்சாரக் கருவிகள், பிளாஸ்டிக் தொழில்கள் ஆகியவை வளம்பெற்றன. இத் தொழில்களில் அமெரிக்காவின் முதலீடுகள் மிகவும் அதிகம், 1974ஆம் ஆண்டில் மட்டும் அமெரிக்கா கிட்டத்தட்ட 62 கோடி ரூபாயை உதவியாகத் தாய்லாந்திற்கு வழங்கியது. 1949-லிருந்து இன்றுவரை 1710 கோடி ரூபாயை அமெரிக்கர்கள் தாய்லாந்தில் செலவழித்திருக்கின்றனர். அமெரிக்கா வியட்நாம் போரில் தலையிடாதிருந்தால், தாய்லாந்தில் இத்தகைய வளர்ச்சி ஏற்பட்டவோ, அமெரிக்க முதலீடுகள் ஏற்பட்டிருக்கவோ இயலுமா என்பது கேள்விக் குறியாகும்.

இவ்வளவு முன்னேற்றமடைந்ததாகக் கூறப்படும் தாய்லாந்தில் மக்களின் அடிப்படைத் தேவையைப் பூர்த்தி செய்யுமளவில் பள்ளிக்கூடங்களோ, நல்ல சாலைப் போக்குவரத்து வசதிகளோ, சுகாதார ஏற்பாடுகளோ செய்யப்படவில்லை என்பதும், மக்களிடையே பெரும் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் மலிந்து கிடக்கின்றன என்பதும் மறுக்க முடியாத ஒன்றாகும். தென்கிழக்காசிய நாடுகளனைத்திலுமே இத்தகைய குறைபாடுகள் பொதுவாகவே காணப்பட்டாலும், அக் குறைகளைக் களைந்து, மக்களாட்சி முறையில் வளர்ந்துவிட்ட ஐரோப்பிய நாடுகளைப் போல வளர்ச்சியடைய வேண்டும் என்ற பேரார்வம், தென்கிழக்காசிய நாடுகளெங்கணும் விரவிக் கிடப்பதைக் காணமுடியும்.

இயல் எட்டு

# 1. தென்கிழக்காசிய நாடுகளில் தேசிய இயக்கம்

ஐரோப்பியர்களின் வருகைக்கு முன்னர் தென்கிழக்காசிய நாடுகளில் தேசிய உணர்வு அல்லது நாட்டுப்பற்று இல்லையென்றே கூறவேண்டும். இடைக்கால தென்கிழக்காசிய வரலாறு எடுத்துரைப்பதெல்லாம், அரசன், அரசகுலத்தின்பால் மக்கள் கொண்ட பக்தி, நம்பிக்கை, மன்னனைக் காக்க, அரசகுலத்தைக் காக்க மக்கள் வீறு கொண்டெழுந்த நிகழ்ச்சிகளே யாகும். தேசிய உணர்வினுல் நாட்டின் பெருமைக்காகப் போராடியதாகக் கூற இயலாது. 14, 15ஆம் நூற்றுண்டுகளிலேயே ஐரோப்பிய வரலாற்றில் தேசிய உணர்வுகள் தோன்றியிருந்ததையும், அதன் அடிப்படையில் எழுந்த தேசிய நாடுகளின் தோற்றங்களையும் நாம் காண முடிகிறது. பொதுவாகவே ஆசிய நாடுகளில் இத் தேசிய உணர்வுகள் 19ஆம் நூற்றுண்டிலிருந்துதான் தொடங்குகின்றன. ஆசிய நாடுகளில் தேசிய உணர்வுகள் தோன்றுவதற்கும் காரணம் ஐரோப்பியர்களே. ஐரோப்பியர்கள் தென்கிழக்காசிய நாடுகளில் புரட்சிகள் ஏற்படக் காரணமாக இருந்திருக்கின்றுர்கள். புரட்சிகள் என்றவுடனேயே ஐரோப்பிய ஆதிக்கத்திற்கு எதிரான புரட்சிகள் என்றும் கூறிவிட முடியாது. ஐரோப்பியர்களின் செல்வாக்கினுல் ஏற்பட்ட புரட்சி இயக்கம் தென்கிழக்காசிய நாடுகளின் பழமைக் கருத்துக்களுக்கெதிராகத் தோன்றியவை என்றே கூறவேண்டும். இவ்வாறு தோன்றிய புரட்சிகளே தென் கிழக்காசிய நாடுகளின் தேசிய இயக்கமாகவும் உருவெடுத்தது.

தென்கிழக்காசிய நாடுகளில் தேசியம் எழுவதற்கு மூல காரணம் மேலைநாட்டுக் கல்வி முறைகளே யாகும். பதினுறும் நூற்றுண்டிலிருந்து தென்கிழக்காசிய நாடுகளில் ஐரோப்பிய

ஆதிக்கம் தோன்றியது. 19ஆம் நூற்ருண்டிற்குள் சயாமைத் தவிர ஏனைய நாடுகள் அனைத்தும் ஐரோப்பியர்களின் ஆதிக்கத்தின் கீழ் வந்தன. ஐரோப்பிய ஆட்சி முறைகளும் கல்வி, சமய பண்பாட்டு முறைகளும் பின்பற்றப்பட்டன. இவைகளில் ஐரோப்பியக் கல்வி முறைகள் தென்கிழக்காசிய மக்களுக்குப் புத்தொளி வழங்குவதாக அமைந்தது. இவர்கள் ஐரோப்பிய மொழிகளில் எழுதப்பெற்ற எண்ணற்ற நூல்களைக் கற்றனர். ஆங்கிலேய, பிரெஞ்சுச் சிந்தனை யாளர்களின் கருத்தோவியங்கள் தென்கிழக்காசிய மக்களின் சிந்தனையைத் தூண்டுவனவாக அமைந்தன. தென்கிழக்காசிய மக்கள் ஐரோப்பிய நாடுகளில் வழக்கிலிருந்த அரசியல் கோட்பாடு களைக் கற்று, தங்கள் அரசியல் உரிமைகளுடன் ஒப்பிட்டு நோக்க ஆரம்பித்தனர். ஐரோப்பிய நாடுகளில் மக்களுக்கு வழங்கப்பட்ட அரசியல் உரிமைகளையும், அதே ஐரோப்பிய அரசுகள் குடியேற்ற நாடுகளில் கடைப்பிடித்துவந்த அடக்கு முறைகளையும் உணர்ந்து மனம் வெதும்பினர். இத்தகைய அறிவு பெற்றேர்கள் தங்கள் நாடு பொருளாதாரத் துறையில் எந்த அளவுக்கு அந்நியர்களால் சுரண்டப்படுகின்றது என்பதனையும் அறிந்து துணுக்குற்றனர். இங்கிலாந்தில் பாராளுமன்ற முறை வளர்ச்சியுற்ற வரலாற்றை யும், அமெரிக்க சுதந்திரப் போரைப் பற்றியும், பிரெஞ்சு புரட்சி யைப் பற்றியும் கற்றுணர்ந்த தென்கிழக்காசிய இளைஞர்கள் தங்கள் நிலைமையையும் ஒப்பிட்டுப் பார்க்கத் தொடங்கினர். ஜான் ஸ்டூவர்டு மில் என்பார் எழுதிய 'Essay on Liberty' என்ற நூலைப் படித்தனர். ஷேக்ஸ்பியரின் பெருமித மிக்க, நாட்டுப் பற்றுமிக்க கவிதைகளைக் கற்றுத் தெளிந்தனர். அதுவும்,

> 'This England did, nor never shall
> Lie at the proud foot of a conqueror'

என்ற ஷேக்ஸ்பியரின் வரிகளைப் படித்தபோது, அவரது நாட்டுப் பற்றினை உணர்ந்தனர். தங்கள் நாட்டின் நிலைமையை எண்ணிக் கண்ணீர் சிந்தினர். இத்தகைய நூல்களைக் கற்றுத் தேர்ந்த இளைஞர்கள் நாட்டுப்பற்று மிக்கவர்களாகவும், நாட்டின் பெருமையை, உரிமையை நிலைநாட்ட எத்தகைய தியாகமும் செய்வதற்குத் தயாராகவும் இருந்தனர். தென்கிழக்காசியத் தேசியத்தின் தோற்றமும், வளர்ச்சியும் இத்தகைய மேலைநாட்டுக் கல்வியறிவு படைத்த இளஞர் சமுதாயத்தினரால் உருவாக்கப் பட்டதுதான்.

தென்கிழக்காசிய நாடுகளில் தங்கியிருந்த ஐரோப்பிய வரலாற்று அறிஞர்கள், அந் நாடுகளின் பழங்கால வரலாற்றையும் புதைபொருள் ஆராய்ச்சி, கல்வெட்டுகள், நாணயங்கள்,

சிற்பங்கள், கட்டடங்கள் போன்றவற்றையும் ஆராய்ந்து முறையாக எழுதினர். இவ்வாராய்ச்சி நூல்களைக் கற்றவர்கள் தங்கள் மூதாதையர்களின் வீர வரலாற்றை உணர்ந்து, அத்தகைய நிலைமையை மீண்டும் அடைய வேண்டுமென்ற ஆவல் மீதூரப் பெற்றனர்.

மேலைநாட்டுக் கல்வி பயின்ற தென்கிழக்காசிய இளைஞர்கள் தங்களின் உரிமைகளையும், கடமைகளையும் உணர்ந்தனர். ஆனால் ஐரோப்பியர்களின் ஆதிக்கத்திலிருந்த தங்கள் சொந்த நாட்டில் மேலைநாட்டுக் கல்விபெற்று திரும்பிய இளைஞர்களுக்கு உயர்ந்த பதவிகள் கொடுக்கப்படவில்லை. இழிந்தவர்களென ஒதுக்கப்பட்டனர். இத்தகைய இளைஞர்களின் உள்ளத்தில் ஐரோப்பிய வெறுப்பு எண்ணங்கள் தோன்ற ஆரம்பித்தன. தங்களது தாய் நாட்டில் அடிமைகளைப்போல உரிமைகளின்றி, தகுதிகள் பெற்றிருந்தும் உயர் பதவிகளை அடையும் வழியின்றி, இரண்டாம் தரக் குடிமக்களைப் போல, பொருளாதார, தொழில் வளர்ச்சியின்றி வாழுகின்ற அடிமை நிலைமையை உணர்ந்தனர். இத்தகைய இழிநிலையைக் களைந்து, எழுச்சிமிக்க புதிய உரிமையுள்ள நாட்டினை உருவாக்கும் பணியில் தங்களை அர்ப்பணித்துக் கொள்ள முன் வந்தனர். இவர்களுக்கு உதவியாகப் போக்குவரத்து வசதிகளும், செய்தித் தொடர்பு வசதிகளும் பெருகியிருந்தன. இத்தகு வசதிகளைப் பயன்படுத்திக் கொண்டு, பெரிய பெரிய நகரங்களில் தேசியம் உதயமாயிற்று. இத்தகைய தூண்டுதல்கள் அனைத்தும் மேலைநாடுகளிலிருந்து பெறப்பட்டவையே ஆகும்.

### இந்திய, சீன, ஜப்பானியச் செல்வாக்குகள்

19ஆம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றி, இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே மாபெரும் இயக்கமாக உருப் பெற்றுவிட்ட இந்திய தேசிய இயக்கமும், காந்தியடிகளின் சீரிய தலைமையில் எழுந்த புதிய யுக்திகளும், தென்கிழக்காசிய மக்களின் முன்னோடியாக விளங்கின. 1911-ல் ஏற்பட்ட சீனப் புரட்சியும், டாக்டர் சுன்யாட்சனின் எழுச்சிமிக்க கருத்துகளும், அதன் விளைவாக எழுந்த சீனக் குடியரசும், தென்கிழக்காசிய மக்களை விழித்தெழச் செய்தன. இவைகளைவிடப் பன்மடங்கு சிறப்பு வாய்ந்த, எழுச்சியூட்டும் நிகழ்ச்சியாக விளங்கியது ஜப்பானின் துரித வளர்ச்சியாகும். மேஜி புரட்சியின் பின்னர் ஐரோப்பியரின் அடிச்சுவட்டைப் பின்பற்றி வியத்தகு முன்னேற்றங் கண்ட ஜப்பானைக் கண்டு தென்கிழக்காசிய மக்கள் திகைத்து நின்றனர். மிகவும் வலிமை பொருந்தியதாகவும், 'விண்ணூர்ந்த பேரரசு' எனவும் போற்றப்பெற்ற சீனாவின் 'மஞ்சு' குலத் தோன்றலை

1894-95-ல் நடந்த போரில் புறமுதுகிடச் செய்து, ஐரோப்பிய முறைகளை ஆசிய மக்களும் கற்றுத் திறம்படப் பயன்படுத்த முடியும் என உணர்த்தியது. பின்னர் சீனுவில் ஐரோப்பிய ஆதிக்கத்திற் கெதிராக எழுந்த 'பாக்ஸர் கலகமும்' அதன் விளைவுகளும் தென்கிழக்காசிய மக்களுக்குத் தங்களின் நிலையைத் தெளிவு படுத்தின. உலகப் பெரும் பேரரசுகளில் முதன்மையானதெனக் கருதப்பட்ட இங்கிலாந்து, ஜப்பானைத் தனக்கிணையாக வளர்ந்து விட்ட கீழைநாட்டுப் பேரரசெனக் கருதி, உடன்படிக்கை செய்து கொண்டது (1902). பின்னர் 1904-ல் ஐரோப்பிய வல்லரசுகளுள் ஒன்ருன ருஷியாவை, ஜப்பான் வென்று, புகழ் எய்தியது. இந் நிகழ்ச்சிகள் அனைத்தும் தென்கிழக்காசிய மக்களை வீறு கொண் டெழச் செய்தன. தென்கிழக்காசிய மக்கள் ஐரோப்பியர்களுக்கு எந்த வகையிலும் தாழ்ந்தவர்களல்லர் என்ற நிலையை உறுதிப் படுத்தியது; தேசிய உணர்வினை மேலும் தட்டியெழுப்பியது. புதிய தலைவர்கள் தோன்றினுர்கள். ஒவ்வொரு நாட்டிலும் ஐரோப்பிய எதிர்ப்பியக்கங்கள் தோன்றின.

முதல் உலகப் போரின் போது ஐரோப்பிய நாடுகள் உலகில் மக்களாட்சி தழைக்கவும், நாடுகளில் காணப்படும் ஏற்றத்தாழ்வுகளை நீக்கவும்; உலகை ஜெர்மனியின் ஆதிக்க வெறியிலிருந்து காப்பாற்றவும் போரிடுவதாகப் பறைசாற்றின. போரின் முடிவில் ஐரோப்பிய நாடுகளின் ஆதிக்கத்திலிருக்கும் நாடுகளுக்கு 'சுயாட்சி' வழங்குவதாகவும் ஆசைவார்த்தைகள் கூறின. இவ்வுறுதி மொழிகளை உண்மையென நம்பிய ஆசிய நாடுகள், சுதந்திரம் அடைந்துவிட்டதாகவே கனவு கண்டன. இந் நிலையை மேலும் உறுதிப் படுத்தும் முறையில் உட்ரோ வில்சனின் பதினுன்கு கொள்கைகளும் அமைந்திருந்தன. இப் போரின் வெற்றி, உலகில் சிறிய நாடுகளின் நிலையை உயர்த்தி, நாடுகள் அனைத்தும் சம அந்தஸ்து உள்ளவை என்பதையும் தெளிவாக்கும் என்றும் கூறியிருந்தன. இக் கூற்றுகளை நம்பிய ஆசிய நாடுகள் போரின் முடிவில் சுதந்திரம் அடைவது உறுதி என நம்பியிருந்தன. இந் நம்பிக்கையின் விளைவாகத் தேசியம் மேலும் வளர ஏதுவாயிற்று. ஆனுல் போரின் முடிவில், ஆசிய நாடுகள் தங்களின் கனவுகள் சிதைக்கப்பட்டமையும், போரின் கோரப்பிடியில் சிக்கித் தவித்த ஐரோப்பிய நாடுகள், மற்ற உலக நாடுகளின் முழு உதவியைப் பெறுவதற்காகவே கூறிய பொய்யுரை என்பதையும் உணர்ந்து திடுக்கிட்டனர். இதுவரை தேசியத்தில் நம்பிக்கையற்று இருந்த மக்களும், ஐரோப்பியரின் இத்தகைய கபட நாடகத்தினை உணர்ந்து, தேசிய விடுதலைக்காகப் போராடத் துணிந்தனர்.

முதல் உலகப்போரின் போது ஏற்பட்ட ருஷியப் புரட்சியும் ஆசிய மக்களுக்கு வழிகாட்டியாக அமைந்தது. மார்க்சிய கொள்கைகள் ஆதிக்கக் கொள்கையைச் சாடின. முதலாளித்துவ முறை ஏகாதிபத்திய ஆதிக்கத்தினுல்தான் வளம் பெறுகின்றது. எனவே, ஏகாதிபத்தியத்தை அழிப்பதன் மூலம் ஏற்றத்தாழ்வற்ற சமதர்ம சமுதாயத்தை உருவாக்க முடியும் என மார்க்சியக் கொள்கைகள் வலியுறுத்தின. ஐரோப்பியர்களின் ஆதிக்கத்தில் சிக்குண்டு தவிக்கும் ஆசிய நாடுகளுக்கு உதவ ருஷியப் பொதுவுடைமையினர் ஆர்வம் காட்டினர். எனவே ஐரோப்பிய எதிர்ப்பு இயக்கங்களைத் தோற்றுவிக்கவும், அவைகளுக்குத் தேவையான உதவிகளைச் செய்யவும் பொதுவுடைமை ருஷியா முன் வந்தது.

போரின் இறுதியில் ஆங்கிலேயரின் கயமையை உணர்ந்து வெகுண்டெழுந்த இந்திய தேசிய இயக்கம், காந்தியடிகளின் தலைமையில் புதிய எதிர்ப்பியக்கங்களைத் தோற்றுவித்து, ஆங்கிலேய ஆட்சியினரைத் திணறடித்தது. காந்தியடிகளின் முறைகள் அப்படியே மற்ற நாடுகளில் ஏற்றுக்கொள்ளப் படவில்லையெனினும், ஐரோப்பிய எதிர்ப்பியக்கத்தில் நாட்டு மக்கள் அனைவரையும் ஒருங்கிணைத்துப் போராட, முன்னேடியாக அமைந்தது. தேசிய சீனுவின் எழுச்சியும், மற்ற நாடுகளில் தேசிய உணர்வினைத் தட்டியெழுப்பியது. ஜப்பானின் தொழில் நுட்ப வளர்ச்சி, ஆசிய நாட்டு மக்களையே பெருமையுறச் செய்தது. 'ஆசியா ஆசியருக்கே' என்ற ஜப்பானின் முழக்கம் ஆசிய மக்களைத் தட்டியெழுப்பி, ஐரோப்பியருக்கெதிரான நடவடிக்கைகளில் ஈடுபடத் தூண்டியது. பன்னுடுகளின் கழகத்தின் திறமையின்மையை உணர்ந்த ஆசிய நாடுகள், தாங்களும் ஜப்பானைப் பின்பற்றி படை வலிமை பெற்றுலன்றி, உலக நாடுகளின் மதிப்பினைப்பெற முடியாது என்பதனையும் உணர்ந்தன. இதன் காரணமாக இடைவிடாத போராட்டங்கள் தொடர்ந்தன.

இரண்டாம் உலகப்போர் தென் கிழக்காசிய நாடுகளில்பெரும் அழிவை ஏற்படுத்தியது, தென்கிழக்காசிய நாடுகளிலிருந்து ஐரோப்பிய அரசுகள் விரட்டப்பட்டன. அதுவும் ஆசிய நாடுகளில் ஒன்றுன ஜப்பான் கிட்டத்தட்ட ஆறே மாதங்களில் தென் கிழக்காசிய நாடுகளினின்று ஐரோப்பியர்களை விரட்டியடித்தது. இந் நிகழ்ச்சி 'ஆசிய மக்கள் தாங்கள் எந்த இனத்தவருக்கும் தாழ்ந்தவரல்லர்' என்ற நம்பிக்கையைத் தோற்றுவித்தது. தங்களைக் காப்பாற்ற இயலாத ஐரோப்பியர் மீது ஆசிய மக்கள் நம்பிக்கை இழந்தனர்.

போரின் ஆரம்பத்தில் 'ஆசியா ஆசியருக்கே' என்று முழக்க மிட்ட நிலையில் ஜப்பான் தென்கிழக்காசிய நாடுகள் அனைத்தையும் வென்று, 'விடுதலையடையச் செய்தது. இவ்வாறு ஐரோப்பியரின் பிடியிலிருந்து விடுவிக்கப்பட்ட நாடுகள் அனைத்தையும் தன்னுடைய தலைமையில் ஒன்றுக இணைத்து, 'சேர்ந்து, செழித்து வாழும்' (Co-Proeperity Sphere) பகுதியாக மாற்றியது. ஆனுல் ஜப்பானின் பொருளாதாரச் சுரண்டலையும், சுயநலத்தையும் விரைவிலேயே உணர்ந்த தென்கிழக்காசிய நாடுகள் ஜப்பானிய எதிர்ப்பியக்கத் தையும்' உருவாக்கி வளர்த்தனர். தென்கிழக்காசிய நாடுகளின் உரிமை வேட்கை தடைசெய்ய முடியாத அளவுக்கு வளர்ந்து விட்டதை ஐரோப்பியரும் உணர்ந்தனர்.

ஜப்பானியர் ஆதிக்கம் தென்கிழக்காசிய நாடுகளின் தேசிய இயக்கம் முழு வடிவம் பெற உதவியது. ஜப்பானின் தோல்விக்குப் பின்னர் தேசிய இயக்கங்கள் பல முக்கிய மாறுதல்களைப் பெற்றன. புதிய தீவிரக் கொள்கைகள் எழுந்தன. முதலாவதாக அடிமைத் தளையை உடைத்தெறிய வேண்டும் என்ற தீவிர தேசியம், இரண்டாவதாகப் புதிய அரசியல்வாதிகள் தோன்றி ஒற்றையாட்சி அரசியலமைப்பு முறையில் ஏற்படுத்தப்பட்ட மக்களாட்சி, மக்க ளுக்கு அரசியல் உரிமைகளையும், மூன்றுவதாக வறுமையை ஒழித்து, திட்டமிட்ட பொருளாதார ஏற்றத்தினை ஏற்படுத்தி வளங்காணுதல் போன்ற கொள்கைகள் அறிவிக்கப்பட்டன. இக் கோரிக்கைகளை அடைய, எத்தகைய தொல்லைகளையும் ஏற்கும் துணிவு பெற்று விட்டனர்.

போரின் முடிவில் ஐரோப்பிய நாடுகளும் மிகவும் களைத் திருந்தன. பிரான்சும், ஹாலந்தும் தோற்கடிக்கப்பட்டுப் பெருமை குன்றிய நிலையில், வாடிக்கிடந்தன. இங்கிலாந்து மட்டிலும் அடிமைப்படாது இருந்தாலும், மிகவும் வறிய நிலையில் இருந்தது. இந் நிலையில் ஆசிய நாடுகளின் தேசிய எழுச்சிகளை மேலும் கட்டுப் படுத்தி அடக்கும் சக்தியற்ற நிலையை பெருந்தன்மையுடன் ஏற்றுக் கொண்ட இங்கிலாந்து, இந்தியா, பாகிஸ்தான், பர்மா, மலேயா, சிலோன், சிங்கப்பூர் ஆகிய நாடுகளுக்கு விடுதலையளித்து, மதிப்புடன் வெளியேறியது. பிரான்சு, இந்தோ சீனுவில் நீடித் திருக்க முயன்று, இறுதியில் இந்தோ-சீனத் தேசிய எழுச்சிப் படை களால் தோற்கடிக்கப்பட்டு வெளியேற்றப்பட்டது. அதே போல ஹாலந்தும் இந்தோனேஷிய தேசிய எழுச்சியை அடக்க முயன்று, இறுதியில் வெளியேறியது.

போரின் முடிவில் தென்கிழக்காசிய நாடுகளில் பொதுவுடை மைக் கொள்கை வேகமாகப் பரவியது. புதிதாகச் சுதந்திரம்

அடைந்த நாடுகளில் காணப்பட்ட அரசியல், பொருளாதாரக் குழப்பச் சூழ்நிலைகளைச் சாதகமாக்கிக் கொண்ட பொதுவுடைமை யினர் தங்களது கொள்கைகளைப் பரப்பினர். மாவோவின் தலைமை யிலான சீனப் பொதுவுடைமையினர், சீனாவில் 'மக்கள் குடியரசை' ஏற்படுத்தினர். கொரியாவிலும், பின்னர் வியட்நாமிலும் தோன்றிய பொதுவுடைமையினரின் ஊடுருவல்கள், கெடுபிடிப் போராக உருவெடுத்துப் பின்னர் பெரும்போராக மாறியது. இப் பொதுவுடைமைக் கொள்கைகளின் ஊடுருவலும் தேசியம் வெற்றிபெறக் காரணமாக இருந்தது.

தேசிய எழுச்சிகள் தோன்றிய அனைத்து நாடுகளிலும் ஒரே மாதிரியான முறைகள் காணப்படவில்லை. முறைகள் நாட்டுக்கு நாடு மாறுபட்டன. தேசியத் தலைவர்களுக்கிடையேயும் தொடர்புகளோ, சந்திப்போ, கருத்துப் பரிமாற்றங்களோ ஏற்பட்டிருக்கவில்லை. அந்தந்த நாட்டின் நிலைமைக் கேற்ப, தலைவர்கள் தோன்றித் தேசிய உணர்வினைத் தூண்டிவிட்டனர். அதேபோல ஐரோப்பிய நாடுகளும் ஒரே மாதிரியான நடவடிக்கை களை மேற்கொள்ளவில்லை. அந்தந்த நாடுகளில் தோன்றிய தேசியப் போராட்டங்களின் தன்மைக்கேற்ப, தடுப்பு நடவடிக்கை களும் மேற்கொள்ளப்பட்டன. இறுதியில் ஐரோப்பிய நாடுகள் தேசிய உணர்வுகளை நசுக்க இயலாத நிலையில், வெளியேறின. தென்கிழக்காசிய நாடுகள் அனைத்தும் விடுதலைப் பெற்றன.

## 2. இந்தோனேஷியாவில் தேசிய இயக்கம்

19ஆம் நூற்றுண்டின் இறுதியிலும், 20ஆம் நூற்றுண்டின் தொடக்கத்திலும் ஆசிய நாடுகளில் எழுந்த தேசியம், இந்தோனேஷியர்களையும் விழித்தெழச் செய்தது. இந்திய தேசிய இயக்கம் இவர்களுக்கு வழிகாட்டியது. ஜப்பானின் 'மேஜி புரட்சியும்,' அதன் பின்னர் ஐரோப்பிய முறைகளில் விரைந்து முன்னேறி, சீனுவைப் பணியச்செய்து, ஆங்கிலேயருடன் சரிநிகராக நின்று ஒப்பந்தம் செய்து கொண்டு, குன்றன்ன மாந்தனெனக் கருதப் பட்ட ருஷியாவைத் தோற்கடித்து, புகழேணியில் விரைந்து முன்னேறிய ஜப்பானை, ஏனைய ஐரோப்பிய நாடுகளைப் போலவே இந்தோனேஷியாவும் வியப்புடன் நோக்கின. ஜப்பானின் எழுச்சியால் ஊக்கமடைந்த மற்ற ஆசிய நாடுகள் தாங்களும் ஜப்பானைப் போல முன்னேற வேண்டுமென விழைந்தன. அவ்வாறு முன்னேற வேண்டுமெனில் மேலை நாட்டுக் கல்வியும், தொழில் நுட்பங்களும் தேவை என்பதனையும் உணர்ந்தனர். இந்த உணர்வைச் செயலாக்க முனைந்த போதுதான் தங்களை மூன்று நூற்றுண்டுகளாக ஆட்சி புரிந்த டச்சுக்காரர்கள், கல்வி, தொழில்துறைச் சீர்திருத்தங்கள் எதையும் மேற்கொள்ளவில்லை என்பதை உணர்ந்தனர். மேலும் மேலைநாடுகளுக்குச் சென்று உயர்கல்வி பயின்ற இந்தோனேஷிய இளைஞர்களுக்கும் அரசாங் கத்தில் உயர்ந்த பதவிகள் மறுக்கப்பட்டன. இந் நிலையை உணர்ந்த, மேலைநாட்டு முறையில் உயர்கல்வி பயின்ற இந்தோனேஷிய இளைஞர்கள், போராட முடிவு செய்தனர். இப் போராட்டம் பல நிலைகளில் வளர்ந்து, தேசிய இயக்கமாக உருவெடுத்தது.

இந்தோனேஷிய தேசியத்தின் முதற்கட்டமாக, இந்தோனேஷியர்களின் கல்வி வேட்கையைக் குறிப்பிடவேண்டும். ரேடன்

அட்ஜெஜவ் கார்டினி என்ற அம்மையார் இந்தோனேஷிய இளை ஞர்கள் உயர்கல்வி பெற வேண்டியதன் முக்கியத்துவத்தை விளக் கினர். இந்த அம்மையார், டாக்டர் வைதின் சுதிரா உசாதா (Dr. Waidin Sudira Usada) என்பவருடன் சேர்ந்து மேலைநாட்டுக் கல்வி பெற்ருக வேண்டியதின் இன்றியமையாத் தன்மையை விளக்கினர். இதன் விளைவாக எழுந்தது தான் 'புதி உதாமோ' (Budi Utomo-High Endeavour) என்ற முதல் தேசியக்கழகம். இக் கழகம் 1908-ல் டாக்டர் வைதின் சுதிரா உசாதா என்பவரால் தோற்றுவிக்கப்பட்டது. நாடு முழுவதும் பள்ளிகளும் கல்லூரி களும் ஏற்படுத்தப்பட்டன. அறிவொளி யூட்டுகின்ற பணி தொடங்கப்பட வேண்டுமென்று வற்புறுத்தினர். இவ் வியக்கத்தில் இந்தோனேஷிய இளைஞர்கள் பெருமளவில் சேர்ந்திருந்தாலும், இவர்களின் அடிப்படை நோக்கம் கல்வி வசதிகளைக் கோருவ தாகும்.

## சரேகத் இஸ்லாம் (Sarekat Islam, 1912)

சரேகத் இஸ்லாம் என்ற இயக்கம் ஆரம்பிக்கப்பட்டதி லிருந்து, இந்தோனேஷிய தேசியம் பிறந்துவிட்டதாகக் குறிப் பிடுவர். ஆரம்பநிலையில் சீன வர்த்தகர்களின் வர்த்தக மேன்மைக் கெதிராகத் தோற்றுவிக்கப்பட்டு, இந்தோனேஷியர்களின் பொரு ளாதார மேன்மைக்கும், இஸ்லாமின் தனிப்பெருமையை நிலை நாட்டவும் ஏற்படுத்தப்பட்டிருந்தாலும், பின்னர் அந்நியரின் ஆதிக்கத்திலிருந்து விடுதலையடைவதே இவ் வியக்கத்தின் குறிக் கோளாக இருந்தது. 1916-க்குள் சரேகத் இஸ்லாமின் உறுப் பினர்களின் எண்ணிக்கை 360,000 ஆக உயர்ந்தது. சமயமும், தேசியமும் என்ற இரட்டை அடிப்படையில் தோன்றி, மிகவும் விரைந்து வளர்ந்த இவ் வியக்கம், டச்சு ஆட்சியாளர்களின் கவனத்தை ஈர்த்தது. சரேகத் இஸ்லாமிய இயக்கம் சமய, சமுதாய வளர்ச்சிக்கு, பொருளாதார முன்னேற்றம்தான் அடிப் படை என்பதை தெளிவாக்கியது. ஆனல் பொருளாதார ஆதிக்கம் சீனர்களிடமும், டச்சுக்காரர்களிடமும் குவிந்து கிடப் பதையும், இந்தோனேஷியர்கள் இத் துறையில் ஒதுக்கப்பட்டு இருப்பதையும் வலியுறுத்தி எடுத்துக்காட்டியது. இந்தோனே ஷியர்கள் வர்த்தகத் தலைமையேற்று, சீன வர்த்தகர்களை வெளி யேற்ற வேண்டுமெனவும் அறிவித்தது. இத்தகைய சீரிய குறிக் கோளையும், சமயக் கொள்கைகளை அடிப்படையாகவும் கொண் டிருந்த சரேகத் இஸ்லாம் வளர்ந்து, மாபெரும் தேசிய இயக்கமாக உருவெடுத்தது.

முதல் உலகப் போரின்போது இந்தோனேஷிய தேசிய இயக்கம் மிகவும் தூண்டிவிடப்பட்டது. ஐரோப்பிய நாடுகளின் குடியேற்றக் கொள்கைகள் சாடப்பட்டன. ஒவ்வொரு குடியேற்ற நாட்டிற்கும் போரின் முடிவில் 'சுயாட்சி' வழங்கப்படும், மக்களாட்சி முறையில் பயிற்சியளிக்கப்படும், அனைத்து நாடுகளும் சம அந்தஸ்து உள்ளவையே என்பன போன்ற கருத்துகள் இந்தோனேஷிய தேசியத்திற்குப் பெரும் ஊக்கமளித்தன. மேலும் ருஷியப் புரட்சியின் வெற்றியும், குடியேற்றக் கொள்கைக் கெதிரான ருஷியர்களின் ஒத்துழைப்பும் இந்தோனேஷியாவில் திருப்பு முனையாக அமைந்தன. இந்த எழுச்சிமிக்க நிலைகளை உணர்ந்த டச்சு அரசு, இந்தோனேஷியர்களுக்குப் படிப்படியாகச் சுதந்திரம் வழங்குவதே தங்களது கொள்கை என அறிவித்தது. முழுச் சுதந்திரம் அடைவதற்கு முன்பாக ஆட்சித்துறைப் பயிற்சியும் முறையாக வழங்கப்படும் என்றும் அறிவித்தது. இவ்வறிவிப்பைச் செயல்படுத்தும் முறையில், வட்டாரத் தன்னாட்சிக் குழுக்களைத் தோற்றுவித்தது. இக் குழுக்கள் 'மக்கள் மன்றங்கள்' (Udkaraad-Peoples Council) என அழைக்கப்பட்டன. ஆனால் இக் குழுக்களில் பெரும்பான்மையோர் டச்சு அதிகாரிகளே இருந்தனர். மேலும் இம் மன்றங்களுக்கு ஆலோசனை வழங்கும் அதிகாரம் மட்டுமே வழங்கப்பட்டிருந்தது. அத்தகைய ஆலோசனைகளையும் ஏற்றுக் கொள்வது, அல்லது நிராகரிப்பது தலைமை ஆளுநரின் தனி அதிகாரமாக்கப்பட்டது. எனவே இம் 'மக்கள் மன்றங்கள்' வெறும் கண்துடைப்பு என்பதை இந்தோனேஷிய மக்கள் விரைவிலேயே உணர்ந்தனர்.

எனவே சரேகத் இஸ்லாம் தனது போராட்டங்களைத் தொடங்கியது. சரேகத் இஸ்லாமில் இருந்த தீவிரவாதிகள் இவ்வியக்கத்தில் சில கிளர்ச்சிகளை ஆரம்பித்தனர். ஆனால் விரைவிலேயே தீவிரவாதிகள் அனைவரும் வெளியேற்றப்பட்டனர். இவ்வாறு வெளியேற்றப்பட்டவர்கள் 1919ஆம் ஆண்டில் 'பார்டை கொம்யூனிஸ் இண்டி' (Partai Komunis Indi-PKI) என்ற இந்தோனேஷியப் பொதுவுடைமைக் கட்சியைத் தோற்றுவித்தனர். பொதுவுடைமையினர் தொழிலாளரிடையே செல்வாக்குப் பெற்றனர். இச் செல்வாக்கினைப் பயன்படுத்திக் கொண்டு, வேலை நிறுத்தங்களில் ஈடுபட்டனர். சுமாத்ராவிலும், ஜாவாவிலும் 1923-26-க்குள் பொதுவுடைமையினரின் கலகங்கள் பெருமளவில் தோன்றின. இக் கலகங்கள் அனைத்தும் இரும்புக்கரம் கொண்டு நசுக்கப்பட்டன. பொதுவுடைமைக் கட்சியும் இந்தோனேஷியாவில் தடைசெய்யப்பட்டது. பொதுவுடைமைக்கட்சி கலகங்களில் ஈடுபட்டிருந்தபோதே, சரேகத் இஸ்லாம், இந்திய தேசிய

இயக்கத் தலைவர்களுடன் தொடர்பு கொண்டு, இந்திய முறைகளான 'சத்தியாக்கிரகம்,' 'ஒத்துழையாமை இயக்கம்' ஆகியவைகளை மேற்கொண்டு, டச்சு எதிர்ப்புணர்வைத் தூண்டி, வளர்த்து வந்தது.

டச்சு எதிர்ப்பியக்கம் நாடு முழுவதிலும் ஆங்காங்கே நிறுவப்பட்ட 'பகுத்தறிவுப் பாசறையில்' (Study Clubs) மிகவும் வேகமாக வளர்ந்து கொண்டிருந்தது. மேலைநாட்டுக் கல்வி பயின்ற இந்தோனேஷிய இளைஞர்கள் இப் பாசறைகளில் குரானிலிருந்து, மார்க்ஸ் வரையிலுள்ள அரசியல் மாறுபாடுகளை ஆய்ந்தார்கள். வால்டேரையும், ரூசோவையும், ஹியூமையும், லாக்கையும் (Voltaire, Rouosou, Hume, Locke), ஹெகல் போன்றவர்களையும் விவாதித்தனர். ஜெபர்சன், லிங்கன் போன்றவர்களின் கருத்துகளையும் ஆய்ந்தனர். இப் பாசறைகளில் முதலிடம் வகித்து, தலைமை தாங்கி நடத்தியவர்கள்தாம் சுகர்னோ, ஹட்டா, ஸ்ஜாரிர் போன்ற இந்தோனேஷியத் தேசியத்தின் தன்னேரில்லாத் தலைவர்களாவர். பாண்டுங் என்ற நகரத்திலிருந்த பகுத்தறிவுப் பாசறையில் தோன்றியதுதான் இந்தோனேஷியத் தேசியக்கட்சி (Partai Nasional Indonesia-PNI). இக் கட்சியின் தலைவர்கள் ஜிப்தோ மாங்குன் குசுமா (Djipto Mangun Kusuma)வும், இளம் பொறியியல் வல்லுநரும், நாவன்மைமிக்கவருமான சுகர்னோவும் ஆவர். ஒத்துழையாமை இயக்கத்தைப் பின்பற்றி, முழு அரசியல் சுதந்திரம் பெற்று, மக்களாட்சி மலரச் செய்வது என்பதே இக் கட்சியின் அடிப்படைக் கொள்கையாக அமைந்தது. 1926ஆம் ஆண்டில் ஏற்பட்ட கலகங்களின் காரணமாக இந்தோனேஷியப் பொதுவுடைமைக் கட்சி தடைசெய்யப்பட்ட பின்னர், இந்தோனேஷியத் தேசியக் கட்சியினர் தேசிய இயக்கத்தின் தலைமையை ஏற்றனர். தேசியக் கட்சியினரின் வளர்ச்சியைக் கண்டு அஞ்சிய டச்சுக்காரர்கள், இக் கட்சியையும் நசுக்க முயன்றனர். 1927-ல் சுகர்னோ கைது செய்யப்பட்டார். இதன் பின்னர் தேசிய இயக்கம் மேலும் தீவிரமடைந்தது. 1934-க்குள் ஹட்டா, ஸ்ஜாரிர் ஆகியோரும் சிறையிலடைக்கப்பட்டனர். டச்சுக்காரர்களின் அடக்குமுறை தேசியத் தீயை அணைப்பதற்கு மாறாகக் கொழுந்துவிட்டெரியச் செய்தது. டச்சுக்காரர்கள் தேசியக் கட்சியின் எதிர்ப்புகளை அடக்கும் வகையில் மக்கள் மன்றத்திற்கு மேலும் சில உரிமைகளை வழங்கினர். ஆயினும் தேசியத் தலைவர்கள் போராட்டத்தைக் கைவிடவில்லை. 1942-ல் இந்தோனேஷியாவை ஜப்பானியர் கைப்பற்றும் வரை சுகர்னோவும் மற்றத் தேசியத் தலைவர்களும் சிறையில் வாடினர். ஜப்பானியர் இத் தலை

வர்களை விடுவித்ததுடன், இந்தோனேஷிய தேசியத்திற்கு உறுதுணையாகவும் நின்றனர்.

இரண்டாம் உலகப் போரின்போது, ஐரோப்பிய நாடுகளின் பிடியிலிருக்கும் ஆசிய நாடுகளை விடுவித்து, 'ஆசியா ஆசியருக்கே' என்ற நிலையை உருவாக்குவதே எங்கள் நோக்கம் என முழங்கிய ஜப்பான், இந்தோனேஷியாவைக் கைப்பற்றியவுடன் தனது கொள்கையை மாற்றிக் கொண்டது. அது இந்தோனேஷியர்களுக்குச் சுதந்திரம் வழங்க விரும்பவில்லை. ஆனால் 1945-ல் சரணடைவதற்கு முன்னர் ஜப்பான் இந்தோனேஷியாவின் சுதந்திரத்தை ஏற்றுக்கொண்டது. இந்தோனேஷியக் குடியரசு ஏற்படுத்தப்பட்டது (August 17, 1945).

இந்தோனேஷியாவிலிருந்த ஜப்பானியர்களைப் பிடித்து, அவர்களின் ஆயுதங்களைக் கைப்பற்றும் பணியில் இறங்கிய பிரிட்டிஷ் படையினர் இந்தோனேஷியக் குடியரசை ஏற்றுக் கொண்டு அதன் உதவியை நாடினர். அவர்களையடுத்துவந்த டச்சுக்காரர்கள் இந்தோனேஷியக் குடியரசை ஏற்க மறுத்தனர். ஜப்பானியப் படையினரையே டச்சுக்காரர்கள் இந்தோனேஷியக் குடியரசுக்கெதிராகப் பயன்படுத்தி இப் புதிய குடியரசை அழிக்க முயன்று, உலகப் பழியை ஏற்றனர். இப் புதிய குடியரசின் தலைவராக சுகர்னோவும், துணைத் தலைவராக ஹட்டாவும் பதவியேற்றனர். இந்தோனேஷியச் சுதந்திரத்தை டச்சுக்காரர்களை ஏற்றுக்கொள்ளச் செய்வதே இவர்களின் முக்கிய நோக்கமாக இருந்தது.

1945ஆம் ஆண்டின் இறுதியிலும் 1946-லும் டச்சுக்காரர்கள் காட்டுமிராண்டித்தனமான தாக்குதல்களை நடத்தினர். பிரிட்டிஷ் தளபதியின் தலையீட்டினால் போர் நிறுத்தம் ஏற்பட்டு, நவம்பரில் லிங்கட்ஜாடி (Linggadjatic—Nov. 15, 1946) ஒப்பந்தம் கையெழுத்தானது. இதன்படி ஜாவா, சுமாத்ரா, மதுரா தீவுப் பகுதிகளைக் கொண்ட இந்தோனேஷியக் குடியரசை டச்சுக்காரர்கள் அங்கீகரித்தனர். ஏனைய பகுதிகள் டச்சுக்காரர்களின் ஆட்சிப் பொறுப்பிலிருக்கும். குடியரசு பகுதிகளும், டச்சுக்காரர்களின் நேரடி ஆட்சிக்குட்பட்ட பகுதிகளும் நெதர்லாந்து-இந்தோனேஷியக் கூட்டரசில் இணைந்திருக்கும். இந்தோனேஷியக் குடியரசு சுயாட்சி உரிமை பெற்று, டச்சு அரசிற்குட்பட்டுச் செயலாற்றும். ஆனால், டச்சுப் பிற்போக்காளர்களும், இந்தோனேஷியத் தீவிர தேசியவாதிகளும் இவ்வொப்பந்தம் நிறைவேறுதவாறு செய்துவிட்டனர்.

டச்சுக்காரர்கள் பிரித்தாளும் கொள்கையைப் பின்பற்றி இந்தோனேஷியக் குடியரசிற்கு எதிர்ப்பினை உருவாக்க முற்பட்டனர். அதே நேரத்தில் பொருளாதாரத் தடைக் கொள்கையையும் கையாண்டனர். இதனால் பகையுணர்வு வளர்ந்தது. இதைக் காரணம் காட்டிய டச்சு அரசு, 1947-ல் 'போலீஸ் நடவடிக்கை' எடுத்தது. ஜூலை 21, 1947-ல் டச்சுக்காரர்கள் தங்களின் முப்படைத் தாக்குதல்களைத் தொடங்கினர். இந்தோனேஷியக் குடியரசினை உருத்தெரியாமல் நசுக்குவதே அவர்களின் குறிக்கோளாய் இருந்தது. ஜாவாவின் பெரும் பகுதியை டச்சுக்காரர்கள் பிடித்துக் கொண்டனர். இந்தியா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளின் தலையீட்டினை ஏற்றுக்கொண்ட ஐக்கிய நாடுகள் சபை போர் நிறுத்தம் கோரியது. ஐ-நாவின் போர் நிறுத்தக் கோரிக்கை ஏற்றுக்கொள்ளப் பெற்ற போதிலும், உண்மையில் போர் நிறுத்தம் ஏற்படவில்லை. இதற்கிடையில் டச்சுக்காரர்கள் ஜகார்த்தாவைப் (முன்னர் படேவியா) பிடித்துக் கொண்டனர். சுகர்ணோவும், ஹட்டாவும் சிறைப்பிடிக்கப் பட்டனர். டச்சுக்காரர்களின் இச் செயல் உலகின் எதிர்ப்பைத் தூண்டியது. ஐ. நா. மீண்டும் போர் நிறுத்தம் கோரியது. பண்டித நேரு ஆசிய நாடுகளின் மாநாட்டைப் புதுடெல்லியில் கூட்டி, டச்சுக்காரர்களுக்கு எதிராக அனைத்து ஆசிய நாடுகளும் நடவடிக்கை எடுக்கவேண்டும் என்ற கருத்தினை வலியுறுத்தினார். உலக நாடுகளின் எதிர்ப்பிற்குத் தலைவணங்கிய டச்சுக்காரர்கள் சுகர்ணோவையும் ஹட்டாவையும் விடுதலை செய்தனர். தி ஹேக் நகரில் வட்ட மேஜை மாநாட்டைக்கூட்டி இந்தோனேஷியாவின் சுதந்திரத்தைப் பற்றிய பேச்சு வார்த்தைகள் நடத்தவும் ஒப்புக் கொண்டது. இவ் வட்டமேஜை மாநாட்டில் இந்தோனேஷியாவின் சுதந்திரம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. 'இந்தோனேஷிய ஐக்கிய நாடுகள்' எனும் உரிமைபெற்ற, ஆனால் நெதர்லாந்துடன் தொடர்பு கொண்ட இந்தோனேஷியக் குடியரசு 1949ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் 27ஆம் நாள் உதயமானது.

இந்தோனேஷியக் கூட்டாட்சிக்கு எதிரான கலகங்கள் ஏற்பட்ட பின்னர் 1959-ல் ஒற்றையாட்சி அமைப்புகொண்ட இந்தோனேஷியக் குடியரசு உருவாக்கப்பட்டது. நான்கு ஆண்டுகளுக்குப் பின்னர் அது டச்சுக்காரர்களின் தொடர்பினின்றும் முற்றிலுமாக விடுதலைபெற்றது. சுகர்ணோ குடியரசு தலைவராகவும், ஹட்டா தலைமையமைச்சராகவும் பதவியேற்றனர்.

# 3. மலேயாவில் தேசிய இயக்கம்

1909ஆம் ஆண்டிற்குள் மலேயா முழுவதும் ஆங்கிலேயரின் ஆட்சியின்கீழ் வந்தது. ஆங்கிலேயராதிக்கத்திலிருந்த மலேயாவில் பத்து அரசுகளும், மூன்றுவகையான ஆட்சிப் பிரிவுகளும் அடங்கியிருந்தன. முதல் பிரிவு நீரிணைப்புப் பகுதியாகும். இப் பகுதியில் சிங்கப்பூர், பினங், மலாக்கா, இன்னும் சில தீவுகள் அடங்கும். இப் பகுதி அரச குடியேற்றம் (Crown Colony) என அழைக்கப்பட்டது. இரண்டாவது பிரிவு மலேயக் கூட்டாட்சி நாடுகளாகும் (Federated States). இப் பிரிவில் நான்கு மலேய அரசுகள் அடங்கியிருந்தன. ஒவ்வோர் அரசும் பெயரளவுக்குப் பரம்பரை சுல்தான்களின் பொறுப்பிலிருந்தாலும், உண்மையில் இந் நான்கு அரசுகளும் ஒன்ருக இணைந்து கூட்டாட்சியை ஏற்படுத்தியிருந்தன. இக் கூட்டாட்சியின் தலைமை ஆங்கிலேயத் தலைமை ஆணையாளரிடம் (High Commissioner) இருந்தது. மூன்ருவது பிரிவு மலேயக் கூட்டாட்சியில் இணைய விரும்பாத நாடுகள் (Unfederated States). இப் பிரிவிலிருந்த ஐந்து மலேய அரசுகளிலும் ஆங்கில நிலையர் (Resident) அனுமதிக்கப்பட்டனர். பெயரளவுக்குச் சுதந்திரமாக இயங்கிய இவ்வரசுகள், உண்மையில் ஆங்கில நிலையர்களின் கட்டுப்பாட்டின் கீழ்க் கொண்டு வரப்பட்டன.

ஆங்கில ஆதிக்கத்தின்கீழ் மலேயா அனைத்துத் துறைகளிலும் முன்னேறியது. மலேயக் கடல்களிலிருந்த கடற்கொள்ளைக்காரர்கள் அழிக்கப்பட்டனர். உள்நாட்டிலிருந்த சமூக விரோதிகள் அடக்கப்பட்டனர். போக்குவரத்து வசதிகள் பெருக்கப்பட்டு நவீனமாக்கப்பட்டன. தொழில்கள் பெருகின. 1900 ஆண்டு வரையிலும் சீனர்களின் கட்டுப்பாட்டில் இருந்த தகரச் சுரங்கங்கள், இவ்வாண்டிற்குப் பிறகு ஆங்கிலேயர்களின் தலையீட்டினுல் நவீன முறைகள் புகுத்தப்பெற்று வளம் கூட்டின. இரப்பர், சர்க்கரை, காப்பி, கொப்பரை உற்பத்தி மிகவும் அதிகமாகியது. சீனர்கள் பெருமளவு வர்த்தகச் சிறப்பு அடைந்தனர். ஆங்கிலேய

முதலீடுகள் பன்மடங்கு உயர்ந்தன. இந்திய உழைப்பாளிகள் வரவேற்கப்பட்டனர். வர்த்தகப் பொருள்களான இரப்பர், காப்பி, சர்க்கரை, கொப்பரை போன்ற பொருள்களின் உற்பத்திக்கு அதிக ஊக்கமளிக்கப்பட்டதால் உணவுப் பற்றுக்குறை ஏற்பட்டது. இதனால் அரிசி பெருமளவில் இறக்குமதி செய்யப்




பட்டது. இரப்பர் உற்பத்தியிலும், தகர உற்பத்தியிலும் மலேயா முதலிடம் வகித்தது. மிக அதிகமான அந்நியச் செலாவணியைப் பெற்று, செல்வம் கொழிக்கின்ற நாடாக உயர்ந்தது.

ஆங்கில ஆட்சியின்போது இரு முக்கிய கூறுபாடுகள் தெளி வாயின. முதலாவது, பெரும் பண்ணைகளை அடிப்படையாகக் கொண்ட பொருளாதார வளர்ச்சி. இரண்டாவது மலேயாவில் பிற மக்களினத்தினரின் எண்ணிக்கை உயர்ந்து, பன்மைச் சமுதாய அமைப்பு (Pluralistic Society) ஏற்படுதல்.

மலேயாவில் நான்கு முக்கிய மக்களினத்தினர் வாழ்ந்தனர். மலேயர்கள், சீனர்கள், இந்தியர்கள், ஐரோப்பியர்கள் என்ற இந் நான்குவகை மக்களினத்தவரும் கலந்து வாழ்ந்தனர். இவர் களில் மலேய இனத்தினர் மட்டுமே, மலேயாவைத் தங்கள் தாயக மாகக் கருதினர். மலேயர்களுக்கு இணையான அளவில் இருந்த சீனர்கள், சீனுவையே தங்கள் தாயகமாகக் கருதினர். மலேயாவைப் பொருளீட்டுகின்ற, தாற்காலிகமாக வாழுகின்ற பகுதியாகக் கருதி, தேவையான செல்வம் திரட்டியவுடன் சீனு விற்குத் திரும்பிச் செல்வதையே தங்கள் குறிக்கோளாகக் கொண் டிருந்தனர். சீனர்களில் 90 விழுக்காட்டினர் வர்த்தகர்களாகவும், தொழிலதிபர்களாகவும் இருந்து, மலேயப் பொருளாதாரத்தைக் கட்டுப்படுத்தினர். மலேயாவில் வாழ்ந்த இந்தியர்களும், வாழ்க்கை வளம் தேடிவந்தனரே தவிர மலேயாவைத் தங்கள் தாயகமாகக் கருத இயலவில்லை. இத்தகைய மாறுபட்ட மக்க ளினத்தினர் கலந்துறவாடுகின்ற நிலையில், மலேய தேசியம் ஏற்படு வதற்கு வழியில்லாது போயிற்று. பெரும்பான்மையினத்தவ ரான மலேயர்கள் பொருளாதார நிலையில் சீனர்களுக்கும், இந்தி யர்களுக்கும் கட்டுப்பட்டவர்கள். சீன, இந்தியர்கள் வட்டிக்குக் கடன் கொடுத்துப் பெருத்த இலாபமடைந்தனர். மேலும் பண் பாட்டுத்துறையிலும், சீனர்களும் இந்தியர்களும் மிகச் சிறந்த பண்பாடுகளை உலகிற்கு உருவாக்கித் தந்த நாடுகளைச் சார்ந்தவ ராதலால், மலேயர்களின் பண்பாட்டுச் சிறப்பினை ஏற்றுக்கொள்ள முன்வரவில்லை. மலேயர்கள் பண்பாட்டுச் சிறப்பற்று, கடன் பட்ட நிலையில், தாழ்ந்த நிலையில் வாழ்ந்திருந்ததால், மலேய தேசியம் தோன்றக்கூட வழியில்லாதிருந்தது.

இம் மக்களிடையே காணப்பட்ட சமய வேறுபாடுகளும், இவர்களை இணைந்து செயல்படுவதினின்றும் தடுத்தன. மலேயர் கள் இஸ்லாமிய மதத்தினர். சீனர்கள் புத்தமதத்தினர். இந்தி யர்கள் இந்துக்கள் அல்லது முகமதியர்கள். மாறுபட்ட சமயத் தினரும், இணைந்து வாழுகின்ற சுமுகமான நிலை வேறு நாடுகளில் காணப்பட்ட போதிலும் மலேயாவில் மட்டும் இச் சமயத் தினரிடையே ஒற்றுமைக் குறைவும், போட்டியும், பொறாமையும் தென்பட்டன. இதன் காரணத்தால் நாட்டுப் பற்றுமிக்க,

ஒருமைப் பாடுடைய மலேயச் சமுதாயம் தோன்ற வழியில்லாது போயிற்று. மேலும், ஆட்சியமைப்பிலும் மலேயா மூன்று பிரிவு களாகப் பிரிக்கப்பட்டிருந்த நிலையில் ஒருமைப்பாட்டுடன் கூடிய தேசிய எழுச்சி தோன்ற இயலாது போயிற்று.

மக்களினத்தில் காணப்பட்ட மாறுபாடுகளையும், ஒற்றுமை யற்ற நிலையினையும் ஆங்கிலேயர்கள், தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு, பிரித்தாளும் சூழ்ச்சியை மிக எளிதாகக் கையாண்டனர். சமுதாயத்தில் பெரும்பான்மையினமாகவும், தாழ்ந்த நிலையிலுமிருந்த மலேயர்களைத் தங்கள் ஆதரவாளர் களாக மாற்றிக் கொண்டனர். மலேயர்களுக்குத் தாங்களே பொறுப்பாளர்கள் என்றும் அறிவித்துக் கொண்டனர். சிவில் துறையில் மலேயர்களுக்கு இடமளிக்கப்பட்டாலும், உயர்ந்த பதவிகள் அளிக்கப்படவில்லை. இதனால் மலேய உயர்குடி மக்களுக்கு, ஆங்கிலேயரிடத்தில் சிறிது ஐயமேற்படினும், சீனர் களிடமிருந்து தங்களினத்தவர்களைப் பாதுகாத்துக் கொள்ள, ஆங்கிலேயருடன் ஒத்துழைத்து, அதிகாரம் பெறுவதே சாலச் சிறந்தது என்பதனை உணர்ந்து செயல்பட ஆரம்பித்தனர். அதே நேரத்தில் மக்களாட்சி முறை ஏற்படுத்தப்பட்டால் பொரு ளாதாரப் பண்பாட்டுச் சிறப்புப் பெற்ற சீனர்கள், ஆட்சியில் பெரும்பங்கு பெற்றுவிடுவர் என்றும் கருதியே மலேயர்கள், தேசியத்தையோ, மக்களாட்சிக் கருத்துகளையோ ஏற்றுக்கொள்ள முன்வரவில்லை. இவ்வாறாக மலேயர்கள் அரசியலில் பங்குகொள் வதை அவ்வளவாக விரும்பாதபோது, இந்தியர்களும், சீனர்களும், பொருள் வளம்பெற்ற நிலையில் அரசியலிலும் செல்வாக்குப்பெற விழைந்தனர்.

முதல் உலகப் போருக்குப் பின்னர் மலேய முகமதியர்கள் தேசிய உணர்வு பெற்றனர். இவ்வுணர்வும் மற்ற ஆசிய நாடுகளில் தோன்றிய முகமதிய அரசியல் எழுச்சியின் எதிரொலியே ஆகும். துருக்கிய சுல்தானின் காலிப் (Caliph) பட்டம் நீக்கப்பட்டதை யொட்டி எழுந்த முகமதிய எழுச்சியின் காரணமாக மலேய முகமதியர்களும் கிளர்ந்தெழுந்தனர். ஆயினும் மிக விரைவிலேயே இச் சிறு தேசிய உணர்வும் மறைந்தது.

மலேயாவின் முதல் தேசிய உணர்வு சீனர்களால் தோற்று விக்கப் பெற்று, மலேயர்களிடையே சிறிது சிறிதாகப் பரவி வளர ஆரம்பித்தது. சீனர்கள் சீனாவில் தோன்றி வளர்ந்த கோமின் டாங்கினருடனும் பொதுவுடைமையினருடனும் தொடர்பு

கொண்டு, அதே போன்ற தேசிய இயக்கங்களை மலேயாவிலும் தோற்றுவித்தனர். இருப்பினும் மலேயர்கள் அவ்வளவாக அக்கறை காட்டவில்லை. மலேயர்களின் அரசியல் தூக்க நிலைக்குக் காரணமாகப் பன்மைச் சமுதாய அமைப்பையும், பெரும் பண்ணைகளை அடிப்படையாகக் கொண்ட பொருளாதார அமைப்பையும் கூறுவர். (இதனை மலேய நிலமானிய முறை என்றும் கூறுவர்.) இரண்டாம் உலகப் போரின் ஆரம்பத்தில் கூட மலேய, தேசிய வளர்ச்சி குழந்தைப் பருவத்திலேயே இருந்தது.

இரண்டாம் உலகப் போரின் தொடக்கத்தில் மலேயா ஜப்பானியரால் கைப்பற்றப்பட்டது. ஜப்பானியரும், ஆங்கிலேயரைப் போலவே மலேயர்களின் ஆதரவை ஏற்றுக்கொண்டு, மலேய, சீன வேறுபாடுகளைத் தூண்டிவிட்டனர். சீனர்களை ஒறுக்கும் முயற்சியில் ஜப்பானியர் ஈடுபட்டனர். எனவே சீனர்கள் ஜப்பானிய எதிர்ப்பியக்கத்தினை ஆரம்பித்தனர். சீனர்களின் ஜப்பானிய எதிர்ப்பியக்கத்திற்கு ஆங்கிலேயர் பேருதவி புரிந்தனர். ஏராளமான படைக்கருவிகளும், பொருளுதவியும் சீனர்களுக்குக் கொடுக்கப்பட்டன. இப் படைக் கருவிகள் அனைத்தையும், போரின் முடிவில் சீனக்கொரில்லாக்கள் ஆங்கிலேயருக்கு எதிராகப் பயன்படுத்தினர். மலேய இந்தியர்களை ஜப்பானியர் நன்முறையில் பயன்படுத்திக் கொண்டனர். நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் 'ஆஸாத் ஹிந்த்' இயக்கத்தை ஆரம்பிக்க ஜப்பானியர் உதவினர். இவ்வியக்கம் தோல்வியில் முடிந்தாலும் மலேய இந்தியர்கள் தன்னம்பிக்கை வளரப்பெற்று, சமுதாய அமைப்பில் மதிப்புப் பெற்றனர்.

மலேயர்கள் ஜப்பானியரோடு ஒத்துழைத்து, உயர்ந்த அதிகாரங்களைக் கைப்பற்றினர். ஜப்பானியரிடமிருந்து பெற்ற ஊக்கத்தின் விளைவாக மலேயர்களும் தன்னம்பிக்கை பெற்றனர். தங்கள் திறமையில் நம்பிக்கை கொண்டு, தேசிய உணர்வையும் பெற்றனர். மலேயரின் தேசிய உணர்வு வேகமாகப்பரவி, வளரத் தொடங்கியது. ஜப்பானியரின் ஆட்சி சீர்கேடுகளும், சுரண்டல்களும் மலேயர்களுக்கு ஆத்திரமூட்டின. ஜப்பானியருக்கெதிரான மலேய தேசிய எழுச்சி வளரத் தொடங்கியது.

ஜப்பானியர்கள் மலேயாவினின்றும் வெளியேறியதும், ஆங்கில ஆட்சியாளர்கள் மீண்டும் மலேயாவில் நுழைந்தனர். அங்கு முற்றிலும் மாறுபட்ட மலேயர்களைக் கண்டு திகைத்தனர். இனியும் தங்களது குடியேற்றக் கொள்கையைப் பின்பற்றி, நீடிப்பது இயலாது என்பதனையும் உணர்ந்தனர், போரின்போது

ஜப்பானியரை எதிர்த்துப் போரிட்ட சீனக் கொரில்லாக்களுக்கு ஆங்கிலேயர்கள் கொடுத்த ஆயுதங்களைக் கொண்டே போரின் பின்னர் அவர்கள் ஆங்கிலேயரையே எதிர்த்தனர். மலேயாவின் காடுகளும், நில அமைப்பும் கொரில்லாப் போர் முறைக்கு ஏற்ற வாறு இருந்ததினால் அக் கொரில்லாக்களை முற்றிலும் அடக்க ஆங்கிலேயரால் முடியவில்லை. மேலும் சுபாஷ் சந்திர போசின் 'ஆஸாத் ஹிந்த்' இயக்கத்தின் விளைவாக மலேய இந்தியர்களும் ஆங்கிலேயருக்கெதிராகத் திரண்டெழுந்தனர். இவ்விரு சாராரும் மலேய விடுதலைக்காகப் போராடும் முன்னணி வீரர்கள் தாங்களே எனப் பெருமிதத்துடன் அறிவித்துக் கொண்டனர். இவையனைத் திற்கும் மேலாக, ஓர் உறுதிமிக்க தேசிய இயக்கமும் மலேய மக்களிடையே வளர்ந்து வந்தது. மேலைநாட்டுக் கல்வி பயின்ற மலேயர்கள் 'ஐக்கிய மலேய தேசிய நிறுவனம்' (United Malay National Organisation-U.M.N.O.) என்ற ஒன்றினை 1946-ல் ஏற்படுத்தினர். இவர்களின் நோக்கம் மலேயாவில் மற்ற இனத்தினருக்குச் சம உரிமைகள் வழங்குவதைத் தடுப்பதும், மலேயாவிலுள்ள சுல்தான்களின் அதிகாரத்தைக் குறைப்பதும், மலேயாவின் சுதந்திரத்தை அடைவதுமாகும். இந்தோனேஷியர் களைப் பின்பற்றி, மலேயா தேசிய இயக்கம் ஒன்றும் ஆரம்பிக்கப் பட்டது (Putera). இத் தீவிரவாதிகளின் நோக்கம் ஆங்கிலேயரை வெளியேற்றி, மலேயா, சிங்கப்பூரைக் கொண்ட மலேயா இணைப் பரசை ஏற்படுத்தவேண்டும் என்பதாகும்.

இச் சமயத்தில் இந்தியா, பர்மா போன்ற பகுதிகளிலிருந்து ஆங்கிலேயர்கள் வெளியேறியதால், மலேயாவிலிருந்தும் வெளி யேறிவிட ஆங்கில அரசு முடிவு செய்தது. எனவே 1948-ல் இங்கிலாந்து 'மலேயாக் கூட்டரசை' (Federation of Malaya) ஏற்படுத்தியது. சிங்கப்பூரைத் தவிர்த்து, மற்ற மலேயாப் பகுதிகள் அனைத்தும் கூட்டரசில் சேர்க்கப்பட்டன. சிங்கப்பூர் 'அரசு குடியேற்ற'மாகவே விடப்பட்டது. இவ்வாறு 'டொமினியன் அந்தஸ்து' அளிக்கப்பெற்ற மலேயா அரசியல் வானில் துருவ நட்சத்திரம் போன்று, துங்கு அப்துல் ரஹிமான் (Tunku Abdul Rahman) என்ற மாபெரும் அரசியல் மேதை தோன்றினார். இவரது அரிய, தன்னலமற்ற முயற்சிகளின் விளைவாக, மலேயா வாழ் மக்களினத்தவரிடையே இருந்த போட்டி, பொறாமை, பூசல் மறைந்து, மலேயாவில் வாழ்கின்ற மக்கள் அனைவரும் மலேயர் களே என்று எண்ணும் அளவுக்கு ஒருமைப்பாடுற்ற தேசிய உணர்வு வளர ஆரம்பித்தது. இம் முயற்சியில் துங்கு அப்துல் ரஹ் மான் ஆரம்பித்த 'அலையன்ஸ்' (The Alliance) என்ற 'கூட்டாட்சிக் கட்சி' பெரும்பங்கேற்றது. இக் கட்சி மலேயர்கள் அனைவரையும்

கொண்ட மாபெரும் கட்சியாக உருவெடுத்தது. சீனர்களின் அரசியல் கட்சிகளும் இத்துடன் இணைந்துவிட்டன. இவ்வாறு இணைந்துவிட்ட மலேயர்களை அடக்கியாள்வதிலிருந்த சிரமங்களை உணர்ந்த ஆங்கில அரசு மலேயாவிற்கு முழுச் சுதந்திரம் வழங்க முடிவுசெய்தது. 1957ஆம் ஆண்டு ஆகஸ்டு 31ஆம் நாள், மலேயா சுதந்திரமடைந்தது. பிரிட்டிஷ் காமன்வெல்த்தில் மலேயாவும் சேர்ந்தது. இரண்டு மாதங்களுக்குள் ஐக்கிய நாட்டுச் சபையிலும் மலேயா உறுப்பினராகச் சேர்ந்தது. சிங்கப்பூர் மட்டும் ஆங்கிலேயரிடமே இருந்தது.

இவ்வாறு சுதந்திரமடைந்த மலேயா, பொருளாதாரத் துறையில் தன்னிறைவு பெற்று, உலக நாடுகளிடையே உயர்ந்த இடத்தைப்பெற விரைந்து செயல்பட்டது. இரப்பர்த் தொழில் வளர்ச்சியில் பெரும் முன்னேற்றம் காணப்பட்டது. ஆய்வுகளின் பயனாக நவீன முறைகள் புகுத்தப்பட்டன. போக்குவரத்து வசதிகள், பள்ளிகள், பொதுச் சுகாதார ஏற்பாடுகள், குடியிருப்பு வசதிகள் ஆகியவை ஏற்படுத்தப்பட்டன. உலக நாடுகளின் உதவியை மிகச் சிறிய அளவிலேயே மலேயா ஏற்றுக் கொண்டது. இப் பொருளாதார மேம்பாட்டிற்கு முக்கிய காரணம் 1970 வரை மலேயா அரசியலின் தலைமையேற்றுப் பெருமையுடன் நடத்திய துங்கு அப்துல் ரஹ்மானின் ஈடு இணையற்ற திறமையும், அறிவுக் கூர்மையுமேயாகும்.

# 4. பர்மாவில் தேசிய இயக்கம்

19ஆம் நூற்றாண்டின் இறுதியில் பர்மா ஆங்கிலேயர் ஆட்சியின்கீழ் கொண்டுவரப்பட்டது. பர்மாவின் இயற்கை வளங்கள், உற்பத்திப் பொருள்கள் அனைத்தும் ஆங்கில வர்த்தக முன்னேற்றத்திற்காகவே பயன்படுத்தப்பட்டன. பர்மிய மரபுகளின்படி, தொன்றுதொட்டுவந்த கல்விமுறை மாற்றப்பட்டது. சமுதாய அடிப்படையைக் கூட மாற்றியமைக்கும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இந்தியச் செட்டியார்கள், பர்மிய மக்களின் உழைப்பால் உயர்ந்தனர். இந்திய வர்த்தகர்களும், சீனர்களும் செல்வாக்குப் பெற்றனர். நாட்டின் பொருளாதார முன்னேற்றங்கள், பர்மியக் குடிமகனுக்கு எவ்வித நன்மையையும் வளமான வாழ்க்கையையும் நல்கவில்லை. மாறாக பர்மியன் அடிமை நிலையிலும், சுரண்டப்பட்ட வறுமை நிலையிலும் வாடி வதங்கினான். இந் நிலையை இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே பர்மியன் உணரத் தொடங்கினான். தன்னிலை உணர்ந்த பர்மியன் ஏனைய ஆசிய நாடுகளில், சிறப்பாக ஜப்பானின் வளர்ச்சியையும், முன்னேற்றத்தையும் கண்டு வியந்தான். ஜப்பானியனைப் பின்பற்றித் தானும் உயரவேண்டும் என எண்ணம் கொண்டான். இதன் விளைவாக பர்மிய தேசியம் ஆரம்பமானது. வாய்ப்பான சூழ்நிலைகளில் தன்னலமற்ற தலைவர்கள் பர்மிய தேசிய உணர்வினைத் தூண்டி வளர்த்தனர். இறுதியில் வெற்றியடைந்தனர்.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஏற்பட்ட ஜப்பானிய வெற்றி, ஆசிய மக்களனைவருக்கும் பெருமையைத் தேடித் தந்தது. அடிமை உணர்வை அகற்றி, தேசிய உணர்வைத் தட்டியெழுப்பி, சுதந்திர வேட்கையை உருவாக்கித் தந்தது. இந்தத் தேசிய எழுச்சிக்கும், பின்னர் விடுதலைபெற்றுச் சுதந்திர நாடுகளை ஏற்படுத்தி, உலகில் தலைநிமிர்ந்து நிற்பதற்கும், ஆசிய நாடுகள் அனைத்துமே ஜப்பானியருக்குக் கடமைப்பட்டிருக்கின்றன.

பர்மாவில் வாழ்ந்த பர்மியரல்லாத மற்ற இனத்தவர் ஆங்கிலேயராட்சியில் உயர்வு பெற்றனர். ஆங்கிலேயரின் ஆதரவை வரவேற்று, ஐரோப்பியப் பண்பாடுகளையும், கல்வி முறைகளையும் ஏற்று, வளம் பெற்று உயர்ந்தனர். அரசாங்கத்தில் உயர்ந்த பதவிகளை வகித்தனர். இதனைக் கண்ட பர்மியர்கள் மனம் புழுங்கினர். மேலும் பர்மிய சமுதாய அடிப்படையான கிராமப்புறப் பரம்பரை ஆட்சி முறையை மாற்றியமைத்ததின் மூலம், பர்மிய சமுதாயத்தின் அடித்தளத்தையே மாற்ற முயல்கின்றனர் என்றும் கருதினர். பர்மிய அரசியலோடும், பழம்பெருமை, பர்மிய மரபுகள் இவைகளின் அடித்தளமாக விளங்கிய, பர்மியனின் குருதியில் கலந்துவிட்ட புத்தசமயப் பண்பாட்டினை மீண்டும் பழைய உயர்ந்த நிலைக்கு உயர்த்த வேண்டும் என்றும் ஆர்வம் கொண்டனர்.

பர்மியரிடையே மிக உயர்ந்த செல்வாக்கினைப் பெற்றிருந்த புத்த பிட்சுகள், ஆங்கிலேய அரசினுல் புறக்கணிக்கப்பட்டனர். இந்தப் புத்த பிட்சுகள்தாம் பர்மிய கலை, கல்வி, பண்பாடு இவைகளின் காவலர்கள். புத்த பிட்சுகளின் கல்வி நிலையங்களில் உயர் கல்வி பெற்ற பர்மிய மாணவர்களுக்கு அரசு பணிகள் மறுக்கப்பட்டன. பர்மிய முறையில் கற்ற கல்வி ஏற்றுக் கொள்ளப்படவில்லை. மாருக ஐரோப்பிய முறைக் கல்விக்கே உயரிடம் வழங்கப்பட்டது. இந்தப் புத்த பிட்சுகளும், மடாலயங்களும் ஐரோப்பிய எதிர்ப்பியக்கத்தைத் தோற்றுவித்தன.

புத்த பிட்சுகளுக்கு அடுத்தாற்போல தேசியம் தோன்றக் காரணமாக இருந்தவர்கள், ஐரோப்பியக் கல்வியைக் கற்றுணர்ந்த பர்மிய அறிவாளிகள்தாம். இவர்கள் பொருளாதாரச் சுரண்டலையும், தடையற்ற வாணிபக் கொள்கையையும் எதிர்த்தனர். இவ்விரு எதிர்ப்பாளர்களுக்குத் துணையாக இலட்சக்கணக்கில் நில உரிமையற்ற பாட்டாளி மக்கள் நின்றனர். இவர்கள்தாம் பர்மிய தேசியம் வளரக் காரணமாக நின்றனர். இவர்களில் புத்த பிட்சுகளும், இளம் அறிவாளிகளும் தேசிய இயக்கத்தின் தலைமையை ஏற்றனர்.

குடியேற்ற நாடுகளுக்குச் சுயாட்சி வழங்கி, மக்களாட்சி மலரச் செய்வதே நேசநாடுகளின் நோக்கம் என அறைகூவல் விடுத்த உட்ரோவில்சனின் பேச்சுகளும் கருத்துகளும் முதல் உலகப் போரின் போது பர்மிய தேசியம் வளர உறுதுணையாய் இருந்தன. ஆனுல் போரின் முடிவில் ஆங்கிலேயர் கையாண்ட கொள்கைகள் பர்மிய தேசியவாதிகளுக்குப் பெருத்த ஏமாற்றத்தையே அளித்தன.

1919ஆம் ஆண்டில் இந்தியாவிற்கு அளிக்கப்பட்ட மாண்டேகு-செம்ஸ் போர்டு சீர்திருத்தம் கூடப் பர்மியருக்கு அளிக்கப்படவில்லை. இதனையுணர்ந்த பர்மியர்கள் போராட்டங்களில் ஈடுபட்டனர். இப் போராட்டங்களைத் தடுக்க இயலாத ஆங்கில அரசு, 1921-ல் பர்மாவுக்கும் மாண்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தங்களை விரிவுபடுத்தியது. பர்மாவிலும் இரட்டையாட்சி (Dyarchy) தொடங்கப்பெற்றது. ஆனால் இரட்டையாட்சி முறையையும், அதனுடன் இணைந்த மற்றச் சீர்திருத்தங்களையும், புத்த பிட்சுகளும், தேசியவாதிகளும் ஏற்க மறுத்தனர். முழுச் சுதந்திரம் கோரிப் போராட்டங்களைத் துவக்கினர். பர்மியப் புத்தமதக் கழகத்தின் பொதுக் குழு (The General Council of the Buddhist Association of Burma) பொதுத் தேர்தல்களில் பங்கெடுத்துக் கொள்ள மறுத்தது. தேர்தலின் பின்னர் ஏற்படுத்தப்பட்ட அமைச்சரவையில் பர்மியர்கள் இடம் பெறவில்லை. பர்மியரல்லாத மற்ற இனத் தலைவர்களுக்கு அமைச்சரவையில் இடம் கொடுக்க வேண்டியதாயிற்று.

மாண்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தங்களின் விளைவுகளை ஆராய அனுப்பப்பட்ட சைமன்-குழு (Simon Commission) பர்மியர்களின் சுதந்திர வேட்கையை உணர்ந்தது. பர்மாவை இந்தியாவிலிருந்து பிரித்துத் தனி ஆட்சி முறையினை ஏற்படுத்த வேண்டும் என்ற கருத்தினைப் பரிந்துரை செய்தது. இப் பரிவுரைகளை ஏற்ற ஆங்கில அரசு 1931-ல் லண்டனில் வட்டமேசை மாநாடு ஒன்றினைக் கூட்டி, பர்மிய தேசியத் தலைவர்களுடன் பேச்சு வார்த்தைகள் நடத்தியது. பர்மியத் தலைவர்களின் எதிர்ப்பைப் பொருட்படுத்தாது, 1935-ல் பர்மா தனி நாடாக்கப்பட்டது. பர்மாவைக் குடியேற்ற நாடாகவே வைத்திருக்க, ஆங்கில அரசு கையாளுகின்ற சூழ்ச்சியே, பர்மாவை இந்தியாவினின்றும் பிரித்தது எனப் பர்மிய தேசியவாதிகள் கருதினர். போராட்டங்கள் தொடர்ந்தன. இப் போராட்டங்கள் அனைத்தும், இந்திய தேசிய காங்கிரஸ் இந்தியாவில் பின்பற்றிய சுதந்திரப் போராட்ட முறைகளின் அடிப்படையிலேயே ஏற்படுத்தப்பட்டன.

### சாயா சென் புரட்சி

இதற்கிடையில் உலகில் ஏற்பட்ட பொருளாதாரப் பெருமந்தம் பர்மியர்களையும் பெருமளவில் பாதித்தது. இதன் விளைவாக 1930-ல் ஆங்கிலேயருக்கெதிராக பர்மாவில் புரட்சி ஏற்பட்டது. இப் புரட்சிக்குத் தலைமையேற்று நடத்தியவர் சாயா சென் (Saya Sen) என்ற புத்த பிட்சு ஆவர். இப் புரட்சியின்போது ஆங்கிலேயர் கடுமையான அடக்குமுறைகளைக் கையாண்டனர்.

கொடூரமான முறையில் தாக்குதல் நடத்தி, இரண்டாயிரத்திற்கும் அதிகமான மக்களைக் கொன்று குவித்து, இப் புரட்சியை நசுக்கினர். புரட்சி நசுக்கப்பட்ட போதிலும், ஆங்கிலேய ஆதிக்கத்தின் மீது மக்களுக்கிருந்த எதிர்ப்புணர்ச்சியை இப் போராட்டம் தெளிவாக்கியது. ஆங்கிலேயருக்கு எதிரான இப்புரட்சி நசுக்கப் பட்டாலும், இந்திய, சீனர்களுக்கு எதிராக இப் போராட்டம் வலிமை பெற்றது. 1930-ல் பர்மாவின் அந்நிய முதலீடுகளில் மூன்றில் ஒரு பங்கையும், விளைநிலத்தில் நான்கில் ஒரு பங்கையும், தமிழகத்திலிருந்து சென்றிருந்த செட்டியார்கள் பெற்றிருந்தனர். பர்மியப் பொருளாதாரச் சீரழிவிற்கு, இந்தத் தமிழகத்துச் செட்டியார்களே காரணமெனப் பர்மியர்கள் கருதினர். இந்தியர்களைப் போலவே, வர்த்தகத் துறையிலும், வட்டிக்குக் கடன் கொடுத்துப் பர்மியர்களை வறியவராக்குவதில் சீனர்களும் பெரும் பங்கேற்றிருந்தனர். எனவே 'சாயா சென்' தலைமையிலான ஆங்கிலேய எதிர்ப்பு நசுக்கப்பட்ட போதிலும், இந்திய, சீனர்களுக்கெதிரான போராட்டங்கள் தொடர்ந்து நடைபெற்றன. இந்தியர்களுக்கெதிரான போராட்டங்கள் நடைபெற்றுவந்த போதிலும், பர்மிய தேசிய இயக்கத்திற்கு, இந்திய தேசிய காங்கிரஸ் வழிகாட்டியாய் இருந்தது என்பதையும் இவண் குறிப்பிட வேண்டும்.

### தோபாமா கழகம் (அ) நாம் பர்மியர் இயக்கம்

சாயா சென் போராட்டத்தின் பின்னர் பர்மிய மாணவர்களாலும், இளைஞர்களாலும் தோற்றுவிக்கப்பட்ட இயக்கம்தான் 'தோபாமா ஆசியோனு' (Dobama Asiayona - or Burma for Burmese or We Burman) என்ற 'பர்மா பர்மியருக்கே' அல்லது 'நாம் பர்மியர்' என்ற தேசிய இயக்கமாகும். இவ்வியக்கம் 'தோபாமா கட்சி' அல்லது 'தாகின் கட்சி' (Thakein Party) என அழைக்கப்பட்டது. இக் கட்சியில் பர்மிய மாணவர்கள், இளைஞர்கள், தொழிலாளிகள், வேளாண் பெருங்குடிமக்கள் ஆகிய அனைவரும் இணைந்திருந்தனர். உண்மையான முதல் தேசியக் கட்சியாக இது உருவெடுத்தது. இவ்வியக்கத்தை முன்னின்று நடத்திய தேசியத் தலைவர்களில் 'ஆங் சென்' (Aung Sen), பா-மா (Ba-Maw), உ-சா-(U-Saw), தாகின் நூ (அல்லது) யு-நூ (Thakin Nu or U-Nu) போன்றோர் மிகவும் சிறப்புப் பெற்றவர்களாவர். இத்தகைய பெருந்தலைவர்களின் தன்னலமற்ற உயரிய முயற்சிகளின் விளைவாகப் பர்மிய தேசிய இயக்கம் வலிமைபெற்று, இறுதியில் பர்மா சுதந்திரம் அடைந்தது எனலாம்.

இந்தியாவினின்று பர்மாவைப் பிரித்து, குறைந்த அளவில் சுயாட்சி வழங்கப் பெற்றதைக் கண்ட பர்மியர்கள், பூரண சுதந்திரம் அடையும் உறுதி கொண்டு தீவிரப் போராட்டங்களை ஆரம்பித்தனர். 1938-ல் ஆங்கில எதிர்ப்பியக்கம் நாடெங்கிலும் ஏற்படுத்தப்பட்டது. இந் நிலையைப் பயன்படுத்திக் கொண்டு, ஆங்கில எதிர்ப்புணர்வை மேலும் உறுதிப்படுத்தும் வகையில், ஜப்பான் பர்மியத் தேசியவாதிகளுக்கு ஆதரவளிக்க முன்வந்தது. பர்மியத் தலைவர்கள் ஆங்-சென்னின் தலைமையில் ஜப்பானுக்குச் சென்று, படைப்பயிற்சி பெற்று, பர்மா திரும்பி, 'பர்மிய விடுதலைப் படையினை' உருவாக்கினர். பர்மிய தேசியத் தலைவர்கள் ஜப்பானியருடன் இரகசிய உடன்படிக்கை யொன்றனையும் செய்து கொண்டனர்.

இரண்டாம் உலகப் போரின் தொடக்கத்தில் ஜப்பானிய வெற்றிப் படைகளை, பர்மிய தேசியவாதிகள் வரவேற்றனர். ஜப்பானும் பர்மாவிலிருந்த ஆங்கிலேயரை விரட்டியடித்தவுடன், பர்மாவின் சுதந்திரத்தை அறிவித்தது. பா-மாவின் தலைமையில் சுதந்திர பர்மிய அரசு 1942-ல் செயல்பட்டது. ஆனால் ஜப்பானியர் தங்கள் உண்மை நோக்கத்தினை மிக விரைவிலேயே தெளிவாக்கினர். உண்மையான சுதந்திரம் அடைந்து விட்டதாக இறுமாப்புக் கொண்டிருந்த பர்மிய தேசியவாதிகள், தாங்கள் அடைந்தது சுதந்திரமல்ல, ஆங்கிலேயருக்குப் பதில் ஜப்பானியரின் ஆட்சியே என்பதை உணர்ந்து துணுக்குற்றனர். இவ்வுணர்வு ஜப்பானிய எதிர்ப்பியக்கத்தை உருவாக்கியது. 'பாசிச எதிர்ப்பாளர்களின் சுதந்திரக் கழகம் (Anti-Fascist Peoples Freedom League-A.F.P.F.L.) என்ற ஜப்பானிய எதிர்ப்பியக்கக் கழகத்தினைத் தளபதி ஆங்-சென் தோற்றுவித்தார். இக் கழகத்தினரின் படையொன்றும் உருவாக்கப் பட்டது. இக் கழகத்தில் பொதுவுடைமையினர் உட்பட, சுதந்திரம் விரும்பிகள் அனைவரும் சேர்ந்திருந்தனர்.

தளபதி ஸ்லிம் (General Slim) என்பவரின் தலைமையிலான் பதினன்காவது ஆங்கிலப் படை பர்மாவை ஜப்பானியரிடமிருந்து மீட்டது. ஜப்பானியரின் நம்பிக்கைத் துரோகத்தை உணர்ந்திருந்த தளபதி ஆங்-சென்னும், ஜப்பானிய எதிர்ப்பு இயக்கத்தினரும் ஆங்கிலேயருடன் ஒத்துழைத்தனர். ஜப்பானியர் விரட்டியடிக்கப் பட்ட பின்னர், பர்மாவில் மீண்டும், போருக்கு முன்பிருந்த ஆட்சி முறையினை ஏற்படுத்த ஆங்கிலேயர் முயன்றனர். ஆனால், தளபதி ஆங்-சென்னின் தலைமையில் பர்மிய அரசியலில் வியத்தகு மாறுதல் ஏற்பட்டிருப்பதையும், ஆங்-சென்னின் தலைமையிலிருந்த படை

(பர்மிய தேசியப் படை) தங்களை எதிர்த்துப் போரிடவும் தயாராக இருப்பதையும் உணர்ந்தனர். எனவே சர் ஹியூபர்ட் ரான்ஸ் (Sir Hubert Rance) என்ற புதிய பர்மிய ஆளுநர் ஆங்-சென்னின் தலைமையிலிருந்த சுதந்திரக் கழகத்தினரையும் (A.F.P.F.L) தன்னுடைய மந்திரி சபையில் பங்கேற்கச் செய்தார். ஆளுநரின் மந்திரி சபையிலிருந்த பதினொரு பேரில் ஆறுபேர் பர்மிய சுதந்திரக் கழகத்தைச் (A.F.P.F.L) சேர்ந்தவர்களாவர்.

பர்மிய தேசிய இயக்கத்தின் வலிமையை உணர்ந்த ஆங்கில அரசு, பர்மியத் தலைவர்களுடன் பேச்சுவார்த்தைகளைத் தொடங்கியது. 1947ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 27ஆம் நாள் பர்மிய சுதந்திரக் கழகத்தின் சார்பில், தளபதி ஆங்-சென் ஆங்கில அரசுடன் ஒப்பந்தம் ஒன்றினைச் செய்துகொண்டார். அவ்வொப்பந்தத்தின் படி பர்மாவிற்குச் சுதந்திரம் வழங்க ஆங்கில அரசு இணங்கியது. பிரிட்டிஷ் காமன் வெல்த்தில் தொடர்ந்து இருப்பதோ, விலகி விடுவதோ சுதந்திரப் பர்மிய அரசின் முடிவிற்கே விடப்பட்டது. இவ்வொப்பந்தம் கையெழுத்தான பின்னர் பர்மாவில் இனப்பூசல் ஆரம்பித்தது. பல இனத்தவர்களும் அரசியல் கட்சியினரும் ஒருவரையொருவர் தாக்கிக்கொள்ள ஆரம்பித்தனர். ஆங்-சென்னும், அவருடன் பணியாற்றிய மற்ற ஐந்து உறுப்பினர்களும் ஜூலை (1947) மாதத்தில் கொலை செய்யப்பட்டனர். ஆங்-சென்னின் மறைவிற்குப் பின்னர் அவரது கட்சியின் தலைமைப் பொறுப்பையேற்ற தாகின் நூ (Thakein Nu) அல்லது யு-நூ ஆங்கில அரசுடன் பேச்சு வார்த்தைகளைத் தொடர்ந்தார். 1947ஆம் ஆண்டு அக்டோபர்த்திங்கள் 17ஆம் நாள் பர்மாவிற்குச் சுதந்திரம் வழங்கும் சட்டத்தில் ஆங்கிலத் தலைமை அமைச்சர் அட்லி (Atlee) கையெழுத்திட்டார். 1948ஆம் ஆண்டு ஜனவரி மாதம் நான்காம் நாள் பர்மா சுதந்திரமடைந்தது. சுதந்திரமடைந்த பர்மா, பிரிட்டிஷ் காமன்வெல்த்திலிருந்தும் விலகியது.

சுதந்திரமடைந்த பர்மாவின் ஆட்சிப் பொறுப்பை யு-நூ ஏற்றார். பர்மா சுதந்திரமடைந்த பிறகு உள்நாட்டுப் போராட்டங்கள் அதிகரித்தன. 1948-50-ல் பர்மியப் பொதுவுடைமைக் கட்சியினர் புரட்சி செய்தனர். பொதுவுடைமைப் படையினர் தங்களது பயங்கரத் தாக்குதல்களால் வெற்றிபெற்று, பர்மாவின் தலைநகரான இரங்கூனைக்கூட அச்சுறுத்தினர். ஆனால் தங்களின் தவறான கொள்கைகளினால் மக்களின் ஆதரவை இழந்திருந்தனர். இந் நிலையைப் பயன்படுத்திக் கொண்டு அயராது போராடிப் பொதுவுடைமையினரின் புரட்சியை நசுக்கினார் யு-நூ. 1953-ல் பர்மாவில் பொதுவுடைமைக் கட்சி தடைசெய்யப்பட்டது.

பொதுவுடைமையினரின் புரட்சியின் போதே காரென் (Karens) என்ற இனத்தவரும் புரட்சி செய்தனர். அவர்களுடைய மிகப் பெரிய எழுச்சியையும் யு-நூ வெற்றிகரமாக அடக்கினுர். இதைப் போன்று எழுந்த மற்றப் புரட்சிகளையும், எதிர்ப்புகளையும் ஒடுக்கி, பர்மியர்களை ஒருங்கிணைத்து, பர்மாவை ஒற்றுமைப் படுத்திய பின்னர், 1952-ல் முதல் பொதுத் தேர்தல் நடைபெற்றது. யு-நூ மாபெரும் வெற்றி பெற்ருர்.

யு-நூவின் தலைமையிலான பர்மிய அரசு, பர்மாவை எதிர் நோக்கியிருந்த எண்ணற்ற பிரச்சினைகளுக்கு முடிவுகாண முயன்றது. பர்மிய மக்களின் நல்லெண்ணத்தையும் ஆதரவையும் பெறுகின்ற வகையில் பல சமுதாயச் சீர்திருத்தங்கள் மேற் கொள்ளப்பட்டன. மக்களனைவருக்கும் கல்வி, நிலச் சீர்திருத்தச் சட்டங்கள், கிராம, நல்வாழ்வுத் திட்டங்கள், தொழில் வளர்ச்சிக் கான திட்டங்கள் என்ற முறையில் பலவாறுன ஏற்பாடுகள் மேற் கொள்ளப்பட்டன. கொரியப் போர் ஆரம்பித்தபோது, ஐ.நாவின் முயற்சிகளுக்குப் பர்மா மிகுந்த ஆதரவளித்தது. சீன, பர்மாவிற் கிடையேயான எல்லைத் தகராறு 1956-57-ல் சுமுகமாகத் தீர்க்கப் பட்டது. பொதுவான அயலுறவுக் கொள்கைகளில் இந்தியாவின் நடுநிலைமைக் கொள்கையையே பின்பற்றியது.

பர்மாவின் உள்நாட்டு வளர்ச்சிக்கும், சிறந்த அயலுறவுக் கொள்கைகளின் மூலம் உலக நாடுகளிடையே நன்மதிப்பைப் பெற்று விளங்கவும் யு-நூ பாடுபட்டாலும், பர்மாவில் கொந் தளிப்பு நிலை இருந்துகொண்டேயிருந்தது. நல்ல பல திட்டங்கள் தீட்டப்படினும், திறமையற்ற, ஊழல் மலிந்த அரசு அதிகாரி களும், மக்களிடையே தோன்றியிருந்த பிரிவினை, மற்றும் எதிர்ப்புச் சக்திகளும், அரசை அலைக்கழித்தன. இதன் விளைவாக யு-நூ, தாஞகவே பதவி விலகி, பர்மாவில் தளபதி நீ-வின்னின் தலைமை யிலான (General Ne-win) படையாட்சி ஏற்படுத்தப்பட்டது. இவரது நோக்கம் மக்களாட்சி முறையாகச் செயல்பட வேண்டு மெனில் மக்கள் சட்டத்திற்குக் கட்டுப்பட்டவர்களாக, மக்க ளாட்சி முறையில் நம்பிக்கைக் கொண்டவர்களாக இருக்க வேண்டும். பர்மாவில் இருந்த குழப்ப நிலையை அடக்கிக் கொரில்லாக்களையும், ஆட்சியை எதிர்க்கின்ற பிரிவினைச் சக்திகளை யும் அழித்து, மக்களாட்சி முறைக்கு ஏற்ற அரசியல் சூழ்நிலையை உருவாக்கவேண்டி, தாற்காலிகமாகப் படையினரிடத்தில் ஆட்சி விட்டுவைக்கப்பட்டது.

1960-ல் நடந்த பொதுத் தேர்தலில் யு-நூவின் கட்சி மாபெரும் வெற்றிபெற்றது. மக்களாட்சி பர்மாவில் நிலைபெற்று விட்டது போலத் தோன்றியது. ஆனுல் படையினரின் புரட்சி

ஏற்பட்டது. மார்ச் 2ஆம் நாள் 1962-ல் யு-நூவும், மற்ற ஆட்சி யாளர்களும் காவலில் வைக்கப்பட்டனர். தளபதி நீ-வின் ஆட்சிப் பொறுப்பினை மீண்டும் ஏற்ருர். பாராளுமன்ற முறை ஒழிக்கப் பட்டது. இராணுவ வல்லாட்சி ஏற்பட்டது.

தளபதி நீ-வின் உள்நாட்டில் அமைதி ஏற்படுத்தி, முன்னேற்ற மடையச் செய்து, சோசலிச சமுதாயம் ஏற்படுத்துவதே தமது நோக்கமென அறிவித்தார். நாட்டில் ஓரளவுக்கு அமைதியேற் படுத்திய பிறகு 1966-ல் யு-நூ உட்பட, பல அரசியல் தலைவர்கள் விடுதலை செய்யப்பட்டு, அவர்களில் சிலர் அரசின் ஆணைக்குழுக் களின் தலைவர்களாக நியமிக்கப்பட்டனர். தளபதி நீ-வின் மூன்று முக்கியப் பொருளாதாரக் கொள்கைகளைக் கடைப்பிடித்து வருகின்ருர். அவையாவன: 1. தொழில்துறைகள், வைப் பகங்கள், பெரிய வர்த்தக நிறுவனங்கள் ஆகியவற்றைத் தேசிய மயமாக்குதல், 2. அரசின் வருமானத்தை அதிகமாக்க, அரிசி வியாபாரத்தின் மீது அதிக வரி விதித்தல், 3. நாட்டின் பெருமையை உயர்த்தி, வளமான எதிர்காலத்தைப் படைக்கும் வகையில் நாட்டுமக்கள் அனைவரையும் தயக்கமின்றிப் பாடுபடும் படி வற்புறுத்துதல். ஆனல் நீவின்னின் இத்தகைய பொருளா தாரக் கொள்கைகள் எதிர்பார்த்த மாறுதல்களை, நன்மைகளை உருவாக்கவில்லை என்று கருதப்படுகிறது. இது மட்டுமன்றி அரசியலிலும், குழப்பங்களில்லாமலில்லை. பொருளாதார மேம் பாட்டினையும், குழப்பமற்ற அமைதியான அரசியல் சூழ்நிலையையும் உருவாக்கும் பணியிலும் இன்றைய பர்மியத் தலைவர்கள், சிறப் பாக தளபதி நீ-வின் ஈடுபட்டுள்ளார்.

# 5. இந்தோ-சீனுவில் தேசிய இயக்கம்

பிரெஞ்சு ஆதிக்கம் கடுமையான இந்தோ-சீனர்களின் எதிர்ப்பு களுக்கிடையே நிறுவப்பட்டது என்பதனையும், சீனுவின் ஆதிக்கத் தினை அகற்றுவதற்காகப் போராட்டங்கள் நடத்தி, அனுபவப் பட்டவர்கள் இந்தோ-சீனர்கள் என்பதனையும் முன் பகுதியில் கண்டோம். இந்தோ-சீனுவில் பல்வேறுபட்ட மக்களினத்தவர்கள் வாழ்கின்றனர். இத்தகைய பிரிவினிரிடையே தோன்றி வளர்ந்த தேசியத்தின் ஆரம்பத்தினைக் குறிப்பிட்டுக் கூறுவது அவ்வளவு எளிதன்று. இருப்பினும் அன்னுமியர்கள் (Annamites or Vietnamese) தான் இந்தோ-சீன தேசியத்தைத் தோற்றுவித்தவர்கள் என்று கருத இடமுண்டு. இந்த அன்னுமியர்கள் (அ) வியட்நாமியர் சீனர்களின் ஆதிக்கத்திற்கெதிராக இடைவிடாது போராடியிருக் கின்றூர்கள் என்ற வரலாற்றுக் குறிப்பும் இக் கருத்தினையே வலியுறுத்துவதாக உள்ளது.

மேலேநாட்டு முற்போக்குக் கருத்துகள் இந்தோ-சீனரிடையே பரவின. பிரெஞ்சுப் புரட்சி உலகிற்கு அளித்த 'சுதந்திரம், சமத் துவம், சகோதரத்துவம்'' என்ற மூன்று கருத்துகளும் இந்தோ சீனர்களிடையே எழுச்சியை ஏற்படுத்தின. இக் கருத்துகளும், இவை போன்ற ஏனைய மேலேநாட்டுக் கருத்துகளும், ஐரோப்பியக் கல்வி கற்ற இளம் அன்னுமியரிடையே தேசிய எண்ணத்தை உருவாக்கியது. ஜப்பானின் எழுச்சியும், ருஷியாவை அடிபணியச் செய்த தீரமும், ஆசிய நாட்டு மக்கள் உலகில் யாருக்கும் தாழ்ந்த வரல்லர் என்ற தன்னம்பிக்கையை உருவாக்கியது. ஜப்பானின் எழுச்சியால் உந்தப்பெற்ற அன்னுமிய இளம் அறிஞர்கள், புரட்சிக் கருத்துகளை மக்களிடையே பரப்பினர். இதன் விளைவாக 1905ஆம் ஆண்டில் பிரஞ்சுக்காரர்களுக்கு எதிராக அநேக புரட்சிகள் தோன்றின. அவை முழுவதும் கடுமையாக நசுக்கப் பட்டன.

19ஆம் நூற்ருண்டின் இறுதியிலும், இருபதாம் நூற்ருண்டின் ஆரம்பத்திலும் சீனுவில் தோன்றிய சீர்திருத்த இயக்கங்கங்களும் அன்னுமிய மக்களுக்கு எழுச்சியூட்டின. சீனுவின் சிந்தனையாளர் களான காங்-யு-வீ (Kang-Yu-Wei), லியாங்-சி-சோ போன்றவர் களின் எழுத்துகளும், கருத்தோவியங்களும் அன்னுமியரின் சிந்த னைக்கு விருந்தளித்தன. மேலைநாட்டு முறையில் கல்வி கற்றலை அவ் விரு எழுத்தாளர்களும் வற்புறுத்தியிருந்தனர். மாண்டெஸ்கியூ, வால்டேர், ரூசோ, போன்ற பிரெஞ்சுச் சிந்தனையாளர்களின் எழுத்துகள், அன்னுமிய இளைஞர்களின் எழுச்சிக்குக் காரணமாய் இருந்தன. ஐரோப்பிய நாட்டு அரசியல் தத்துவங்களைப் படித் தறிந்த இந்த இளைஞர்களே பிரெஞ்சு எதிர்ப்பியக்கத்தின் தலைவர்களாக விளங்கினர்.

பிரெஞ்சு அரசு, இந்தோ-சீனுவைத் தங்கள் நாட்டு உற்பத்திப் பொருள்களை விற்கும் சந்தையாகக் கருதியிருந்தது. இதன் காரணமாக இந்தோசீனுவின் போக்குவரத்து வசதிகளைப் பெருக்கி, ஏற்றுமதி, இறக்குமதிப் பொருள்களின் போக்குவரத்தினை எளிதாக்கியிருந்தது. பல கால்வாய்களை வெட்டியதின் மூலம் பாசன வசதியை அதிகரித்து, விவசாய முன்னேற்றத்திற்கு வழி வகுத்தது. ஆனல் மிக அதிகமான வரிவிதிப்பினுலும், சீனத்தரகர் களின் கொடுமையினுலும், இந்தோ-சீன விவசாயி, பெருத்த கடன் தொல்லைகளுக்குள்ளானுன். மக்கள் தொகைப் பெருக்கமும், மக்களிடையே பொருளாதாரச் சீர்கேடுகளை ஏற்படுத்தியது. கொச்சின்-சீனுப் பகுதியிலிருந்த பெரும் பண்ணையாளர்கள், ஏழை உழவனை வாட்டிவதைத்தனர். வரிச்சுமையால் நசுக்கப்பட்டு, கடன் தொல்லைகளினுல் அல்லலுற்ற அன்னும், தொங்கின் பகுதி உழவர்களும், பண்ணை முறைகளில் சிக்குண்டு தவித்த கொச்சின் சீனப்பகுதி உழவர்களும், மிகவும் வெறுப்படைந்த நிலையில் இருந்தனர். மேலும் இயற்கைக் கனிவளங்களைப் பயன்படுத்து வதிலும் பிரெஞ்சுக்காரர்கள், உள்நாட்டு மக்களை ஒதுக்கி விட்டனர். இந்தோ-சீனக் கனிவளங்கள் பிரான்சின் தொழிலகங் களை இயக்குவதற்கே பயன்பட வேண்டுமென்ற நிலை உருவாகி யிருந்தது. தொழில் வளம் காண எண்ணிய இந்தோ-சீனர்களுக்குப் பிரெஞ்சுக்காரர்களின் இந்த முறையான சுரண்டல், மிகுந்த ஆத்திரமூட்டியது. தேசியவாதிகள் எதிர்க்க ஆரம்பித்தனர்.

1911-ல் ஏற்பட்ட சீனப் புரட்சி, இந்தோ-சீன மக்களை விழித் தெழச்செய்தது. இந்திய தேசிய இயக்கமும் இந்தோ சீனு மக்களி டையே தேசிய உணர்வைத் தூண்டியது. முதல் உலகப்போரின் போது நேசநாடுகள் அறிவித்த 'சுயாட்சி உரிமைக் கொள்கை'யும்

இந்தோ-சீனர்களிடையே நம்பிக்கையை வளர்த்தது. இதன் காரணமாகப் போரின் முடிவில் சில அரசியல் கட்சிகள் துவக்கப் பட்டன. இந்த அரசியல் கட்சிகளனைத்தும், பாராளுமன்ற முறையை ஏற்று, சீர்திருத்தங்களைக் கோரின. இந்த வேண்டுகோள் களைப் பிரெஞ்சு அரசு மதிக்கவில்லை. தங்கள் குறைகளைக் கட்சி களின் மூலமாக எடுத்துக் கூறியும் பயனில்லாத காரணத்தால் அரசியல் கட்சிகள் மதிப்பிழந்தன.

மக்களாட்சி முறைப்படி சீர்திருத்தங்கள் கோரி, பயனை எதிர்பார்த்து, ஏமாந்த இந்தோ-சீனர்கள், 'இளம் அன்னுமியரின் புரட்சி கட்சி' (Revolutionary Party of Young Annam) என்ற புதிய தீவிரவாதிகளின் கட்சியை 1925-ல் ஆரம்பித்தனர். தலைவர் களுக்கிடையே காணப்பட்ட போட்டி, பொறுமைகளினுல் இக் கட்சி திறமையுடன் செயலாற்ற இயலவில்லை. அதேபோல ஏற்படுத்தப்பட்ட மற்ளுெரு கட்சியின் புரட்சியும் ஒடுக்கப்பட்டது. இவ்விரண்டு கட்சிகளின் தோல்வியின் பின்னர் வியட்நாமியப் பொதுவுடைமைக் கட்சி ஆரம்பிக்கப்பட்டது.

'தான் நியன்' (Than Nien) அல்லது 'இந்தோசீனப் பொது வுடைமைக் கட்சி' 1930-ல் 'என்குயன் ஐ குவாக்' (Nguyen Ai Quoc) என்பவரால் தோற்றுவிக்கப்பட்டது. இவர்தாம் பின்னர் 'டாக்டர் ஹோ-சி-மின்' (Dr. Ho. Chi-Minh) என்றழைக்கப்பட்ட வியட்நாமின் தன்னேரில்லாத் தலைவர் ஆவர். இக் கட்சியில் உழைப் பாளிகள், உழவர்கள் பெருமளவில் சேர்ந்தனர். பொதுவுடை மைக் கருத்துகள் ஏற்றம் பெற்றன. உலகில் தோன்றிய பொருளாதாரப் பெருமந்தம், ஏற்கெனவே வறுமையில் வாடிய ஏழை உழைப்பாளிகளை மேலும் வறிய நிலையடையச் செய்தது. இதன் விளைவாக வேலை நிறுத்தங்களும், கிளர்ச்சிகளும் ஏற்பட் டன. இந்தோ-சீனப் பொதுவுடைமையினுரால் ஏற்படுத்தப்பட்ட புரட்சிகள், கிளர்ச்சிகள் அனைத்தையும் பிரெஞ்சு அரசு அடக் கியது. பொதுவுடைமைக் கட்சியின் தலைவர்கள் தலைமறைவானுர் கள். டாக்டர் ஹோ-சி-மின் ஹாங்காங்கிற்குத் தப்பி ஓடினுர். ஹாங்காங்கில் மூன்றுண்டுக்காலம் சிறைத் தண்டனையையும் அனுபவித்தார். 1935, 36-ல் மீண்டும் கிளர்ச்சிகள் ஏற்பட்டா லும் எளிதாக அடக்கப்பட்டன. இவ்வாருக இரண்டாம் உலகப் போருக்கு முன்பு ஏற்பட்ட தேசிய இயக்கங்களும், அதன் விளைவாக ஏற்பட்ட கிளர்ச்சிகளும் பயனற்றவையாயின. இதன் காரணம் அரசியல் கட்சிகளுக்கிடையிலும், கட்சித் தலைவர்களுக்கிடை யிலும் காணப்பட்ட கருத்து வேறுபாடுகளும், ஒற்றுமையின்மை யுமே யாகும்.

டாக்டர் ஹோ-சி-மின் வெளிநாட்டிலிருந்து கொண்டே, இந்தோ-சீனப் பொதுவுடைமைக் கட்சியினை இரகசிய முறையிலேயே வளர்த்து வந்தார். இந்த இரகசியச் செய்திப் போக்குவரத்தையும், பொதுவுடைமையினரின் மறைவிடங்களையும் அழிக்கப் பிரெஞ்சு அரசு எடுத்துக் கொண்ட முயற்சிகள் அனைத்தும் பயனற்றுப் போயின. இரண்டாம் உலகப் போரின் போதுதான் டாக்டர் ஹோ-சி-மின் 1941-ல் இந்தோ-சீனுவுக்குத் திரும்பினுர். அதுவரை பொதுவுடைமையினரை அழிப்பதற்காக எடுத்த முயற்சிகள் அனைத்தையும் மீறி, வலிமைபெற்ற தேசியக் கட்சியாக வளர்ந்து, இறுதியில் வெற்றி வாய்ப்பினையும் பெற்றது, டாக்டர் ஹோ-சி-மின்னும், அவரது பொதுவுடைமைக் கட்சியுமேயாம். இந்தோ-சீனு திரும்பிய டாக்டர் ஹோ-சி-மின் தமது தலைமையிடத்தை தொங்கின் பகுதியிலிருந்த வியட்பாக் (Viet Bac) என்ற பகுதியில் அமைத்தார். இவர் 1941-ல் வியட்நாம் சுதந்திரக் கழகத்தை ஏற்படுத்தினுர் (Independance League of Vietnam). இக் கழகம் 'வியட்மின்' (Vietminh) எனப் பின்னர் அழைக்கப்பட்டது.

இதற்கிடையில் 1940-ல் பிரான்சு ஜெர்மனியிடம் சரணடைந்தது. போர்க்காலத்தில் பிரான்சில் ஏற்படுத்தப்பட்ட விசி (Vichy) அரசாங்கம் அச்சு நாடுகளுடன் ஒத்துழைத்தது. இந்தோ-சீனுவையும் ஜப்பானியர் கைப்பற்றினர். இந்தோ-சீனுவிலிருந்த பிரெஞ்சு அரசு, ஜப்பானியரின் ஆதிக்கத்தில் கொண்டு வரப்பட்டது. வியட்மின்கள் பிரெஞ்சு, ஜப்பானியர்களின் ஏகாதிபத்தியத்தையும், பாசிசத்தையும் எதிர்த்துப் போரிட்டனர். இவர்களுக்குத் தேசிய சீனுவும், லண்டனிலிருந்த சுதந்திர பிரெஞ்சு அரசும், அமெரிக்கர்களும் ஆயுத உதவியளித்து ஊக்குவித்தனர்.

1945ஆம் ஆண்டு பிரான்சிலிருந்து ஜெர்மன் படைகள் வெளியேற்றப்பட்டன. போர்க்காலத்திலிருந்த பிரெஞ்சு விசி (Vichy) அரசாங்கமும் மறைந்தது. பிரான்சு மீண்டும் உரிமை பெற்றது. இந்நிலையை உணர்ந்த ஜப்பானியர் இந்தோ-சீனுவில் இதுவரை பெயரளவுக்கு இருந்த பிரெஞ்சு அரசை நீக்கிவிட்டு அதிகாரம் முழுவதையும் தாங்களே ஏற்றனர். அத்துடன் இந்தோ-சீன மக்களின் நல்லெண்ணத்தைப் பெறுகின்ற வகையில், சுதந்திர அறிவிப்புச் செய்யும்படியும் இந்தோ சீனுவில் இருந்த அரச பரம்பரையினரை வற்புறுத்தினர். இதன் காரணமாக அன்னுமியப் பேரரசர் போவ் டாய் (Bao Dai) என்பவர் சுதந்திர வியட்நாமின் (தொங்கின்-அன்னம்-கொச்சின் சீனு) மன்னராக அறிவிக்கப்பட்டார். அதேபோல கம்போடியாவில் நொரோதம் சிகானுக்

(Norodom Sihanouk) என்பவரும், லாவோசில், சிசவாங் வாங் என்பவரும் (King Sisavong Vong) சுதந்திர நாடுகளின் அரசர் களாக அறிவிக்கப்பட்டனர். ஆனுல் இப் புதிய அரசுகள் எதிர் பார்த்த அளவுக்கு மக்கள் ஆதரவைப் பெறவில்லை என்பது குறிப் பிடத்தக்கது.

ஜப்பான் சரணடைந்த உடனே டாக்டர் ஹோ-சி-மின்னின் தலைமையிலான வியட்மின்கள் 'வியட்நாமிய ஜனநாயகக் குடியரசு' ஒன்றனைத் தாற்காலிகமாக ஏற்படுத்தினர். இக் குடி யரசின் தலைவராக டாக்டர் ஹோ-சி-மின் நியமிக்கப்பட்டார். தொங்கின் பகுதியைக் கைப்பற்றி, ஹனுய் (Hanoi) நகரையும் கைப்பற்றிக் கொண்டனர். போர்க்காலத்தில் பிரெஞ்சுக்காரர் களுடனும், ஜப்பானியருடனும் ஒத்துழைக்காமல் இருந்ததினுல், டாக்டர் ஹோ-சி-மின்னை, தொங்கின் மக்கள் தங்களை அந்நியராதிக் கத்திலிருந்து 'விடுவித்தவர்' (Liberator) எனப் போற்றினர். ஒரு சில வாரங்களுக்குள் வியட்நாம் முழுவதும் வியட்மின்களின் ஆட்சியின்கீழ்க் கொண்டுவரப்பட்டது.

ஆனுல் பாட்ஸ் டாம் மாநாட்டின் (Potsdam Conference 1945) படி இந்தோ-சீனுவின் வடக்குப் பகுதியிலிருந்த ஜப்பானியப் படை களின் சரணுகதியைச் சீனப் படைகள் ஏற்கவேண்டும், தென்பகுதி யிலிருந்த ஜப்பானியப் படைகளின் சரணுகதியை ஆங்கிலப் படை கள் ஏற்றுக்கொள்ள வேண்டும். இவ்விரு பகுதிகளின் எல்லையாக 16° வட குறுங்கோடு இருக்கும் எனவும் ஏற்பாடாயிற்று. இந்த ஏற்பாடு இந்தோ-சீன வரலாற்றிலேயே ஒரு முக்கிய திருப்பு முனையாக அமைந்தது. பிரெஞ்சு ஆதிக்கம் மீண்டும் இந்தோ சீனுவில் ஏற்படுத்த உதவும் வகையில் ஆங்கிலேயர் செயல் பட்டனர். ஆனுல் சியாங்கே ஷேக்கின் தலைமையிலான தேசிய சீன அரசு, வியட்நாமில் மீண்டும் பிரெஞ்சு ஆதிக்கம் ஏற்படுவதை விரும்பவில்லை. எனவே வேறு வழியின்றிப் பிரெஞ்சு அரசு, வியட்நாமிய ஒப்பந்தம் செய்து கொண்டது (March 6, 1946). இவ் வொப்பந்தத்தின்படி தொங்கின், அன்னம் சேர்ந்த வியட்நாம் ஒரு சுய ஆட்சியுள்ள பகுதியானது. பின்னர் வாக்கெடுப்பின் மூலம் கொச்சின் சீனுவின் இணைப்புப் பற்றித் தீர்மானித்துக் கொள்ள வேண்டும். மேலும், ஐந்து ஆண்டுகள் பிரெஞ்சுப் படைகள் நாடெங்கிலும் இருக்கவும் ஏற்பாடாயிற்று. ஆனுல் இவ் வொப் பந்தம் முழுவதையும் நிறைவேற்றும் எண்ணம் பிரான்சிற்கு இல்லை. எனவே மீண்டும் தகராறுகள் ஏற்பட்டன. பிரெஞ்சுப் படைகளுக்கும் வியட்மின்களுக்குமிடையே மோதல்கள் ஆரம்ப மாயின. முப்படைகளைக் கொண்டு பிரான்சு, வியட்மின்களைத்

தாக்க ஆரம்பித்தது. இவ்வாறு ஆரம்பித்த போர் 1946-லிருந்து 1954 வரை தொடர்ந்து எட்டு ஆண்டுகள் நடைபெற்றது.

வியட்மின்களை வென்று, மீண்டும் பிரெஞ்சு ஆதிக்கத்தை நிறுவ வேண்டும் என்ற எண்ணத்தில்தான் பிரெஞ்சுக்காரர்கள் வியட்நாமில் போரை ஆரம்பித்தனர். ஆனுல் போரின் ஆரம்ப காலத்திலிருந்து பிரெஞ்சுக்காரர்களுக்கு வெற்றி கிட்டவில்லை. பிரெஞ்சுப் படைகளின் தோல்வியைக் கண்டு ஊக்கமடைந்த வியட்மின்கள், எதிர்த்தாக்குதல்களைத் தொடங்கினர். இந் நிலையில் சீனுவில் மாவோவின் தலைமையிலான பொதுவுடைமை யினர் சீனமக்கள் குடியரசை நிறுவினர். உடனடியான வியட் நாமிய மக்கள் குடியரசைச் சுதந்திர நாடாக அங்கீகரித்தனர். சீனுவைப் பின்பற்றி ருஷியாவும் வியட்நாம் குடியரசை அங்கீ காரம் செய்தது. டாக்டர் ஹோ-சி-மின்னின் ஆட்சி வியட்நாமில் நிலைபெறத் தொடங்கியது.

இதற்கிடையில், வியட்மின்களை அழிக்கின்ற முயற்சியில் தோல்வியுற்ற பிரெஞ்சுப் படைகள் வியட்மின்களின் எதிர்தாக்கு தல்களுக்கு ஈடுகொடுக்க முடியாமல் திண்டாடினர். இந் நிலையில் பிரெஞ்சு அரசு வியட்நாமில் பிரித்தாளும் சூழ்ச்சியை மீண்டும் கையாளத் தொடங்கியது. இதன் விளைவாகக் கொச்சின்-சீனப் பகுதிகளின் ஆட்சிப் பொறுப்பை போவ் டாய் (Boa Dai) என்ற முன்னுள் அன்னம் பேரரசரிடம் ஒப்படைத்தது. அதோடு வியட் நாமில் பிரெஞ்சுக்காரர்களுக்கும், வியட்மின்களுக்கும் இடையே நடக்கும் போரை, இரு வியட்நாமிய அரசுகளுக்கிடையே நடக்கும் உள்நாட்டுப் போர் என, உண்மையைத் திரித்துக் கூறி, உலக நாடுகளை ஏமாற்றவும் முயற்சி செய்தது.

இரண்டாம் உலகப் போரின்போது பெருந்துயருற்ற பிரான்சு, வியட்நாம் போரைத் தொடர்ந்து நடத்துவதற்குப் போதிய திறமையற்றுக் காணப்பட்டது. ஆனுல் பிரான்சின் இந் நெருக்கடி நிலையைத் தவிர்க்க, அமெரிக்கா உதவ முன்வந்தது. அமெரிக்கா பிரான்சிற்கு உதவ முன்வந்ததற்கான ஒரே காரணம், தென்கிழக்காசியாவில் பொதுவுடைமைக் கொள்கைகள் பரவ வொட்டாமல் தடுக்க வேண்டும் என்பதே யாகும். டாக்டர் ஹோ-சி-மின்னின் வியட்நாமியக் குடியரசைப் பொதுவுடைமை நாடுகளான சீனுவும், ருஷியாவும் அங்கீகரித்து, படையுதவி செய்ததைக் கண்ட அமெரிக்கா, தனது பொதுவுடைமை எதிர்ப்புக் கொள்கையை வெளியிட்டது. உலகில் பொது வுடைமைக் கொள்கைகள் பரவுவதைத் தடுக்க எந்த முயற்சி

யிலும் இறங்கத் தயாராய் இருந்தது. இதன் காரணமாக, போரில் களைத்துப் போயிருந்த பிரான்சிற்குத் தேவையான ஏராளமான படையுதவிகளை அமெரிக்கா தந்தது. இவ்வாருக அமெரிக்காவும் வியட்நாம் போரில் தலையிட்டது.

## தியன்-பியன்-பூ

கொரில்லாப் போராட்டமாக ஆரம்பித்த இப் போர், இரு நாடுகளும் தங்களுடைய ஆற்றலைச் சோதனை செய்யும் போராக மாறியது; ஒவ்வொரு தரப்பினரும் ஏராளமான படைகளைப் பயன்படுத்தினர். ஒவ்வொரு தரப்பிலும் மிகச் சிறந்த தளபதிகள் தோன்றினர். அவர்களில் மிகவும் சிறந்தவர்களாக வியட்மின்களின் தளபதியான 'கியாப்' (General Giap) என்பவரும், பிரெஞ்சுப் படைகளின் தளபதிகளில் ஒருவரான 'தளபதி லத்தர்-டி-தசிக்னி' (General de Lattre de Tassigny) என்பவரையும் குறிப்பிட வேண்டும். 1950-ல் வியட்நாம் போர்க்களத்திற்கு வந்த தளபதி டி-தசிக்னி, தமது திறமையால் பிரெஞ்சுப் படைகளுக்குப் புதிய தன்னம்பிக்கையையும், வீரத்தையும் ஊட்டினுர். ஆனுல் 1952-ல் அவர் இறந்த பின்னர், அவரைப்போலத் தகுதிபடைத்த படைத் தலைவர்கள் பிரெஞ்சுப் படையினருக்குக் கிடைக்கவில்லை. 1954ஆம் ஆண்டின் ஆரம்பத்தில் இப் போர் மிகவும் நெருக்கடி நிலையை அடைந்தது. தளபதி கியாப்பின் வியட்மின் வீரர்கள் 'தியன்-பியன்-பூ' (Dien Bien Phu) என்ற பிரெஞ்சுக்காரர்களின் கோட்டையை முற்றுகையிட்டனர். பிரெஞ்சுக்காரர்கள் அமெரிக்கா தங்களுக்கு அளித்த மிகச் சிறந்த விமானப் படையைக் கொண்டு தாக்க முற்பட்டனர். 55 நாள்கள் நடந்த கடுமையான போருக்குப் பின்னர் 1954ஆம் ஆண்டு மே மாதம் 7ஆம் நாள் தியன்-பியன்-பூ நகரைத் தளபதி கியாப் கைப்பற்றினுர். வியட்மின் படைகள் மாபெரும் வெற்றியைப் பெற்றனர். பிரெஞ்சுப் படைகள் சரணடைந்தன.

ஏழரை ஆண்டுகள் நடந்த இப் போரில் ஏராளமான உயிர்ச் சேதமும் பொருள் சேதமும் ஏற்பட்டன. இப் போரில் 92,000 வீரர்கள் உயிரிழந்தனர் அல்லது காணுமல் போயினர். 114,000 மக்கள் காயமடைந்தனர். 28,000 வீரர்கள் சிறைப்பிடிக்கப் பட்டனர். இவ்வளவு இழப்பிற்குப் பின்னர் பேச்சு வார்த்தை களைத் தொடங்க விரும்பினுர்கள். உண்மையில் தியன்-பியன்-பூ நகரின் வீழ்ச்சிக்கு முன்பே பேச்சு வார்த்தைகள் தொடங்கப்பட் டிருந்தன. ஆனுல் தென்கிழக்காசியாவில் பொதுவுடைமை யினரின் வளர்ச்சியைத் தடுத்து நிறுத்த வேண்டுமென்றும் இதனை நிறைவேற்றும் வகையில் வியட்மின்களால் முற்றுகையிடப்பட்ட

தியன்-பியன்-பூ நகரைக் காப்பாற்ற விமானத் தாக்குதலைத் தொடங்க வேண்டுமெனவும் அமெரிக்க அரசு செயலர் டல்லஸ் என்பார் வலியுறுத்தினுர். இதற்கிடையில் ஐரோப்பாவில் பெர்லின் பிரச்சினைக்குத் தீர்வு காணும் வகையில் அமெரிக்கா, பிரான்சு, இங்கிலாந்து முதலிய நாடுகளின் பிரதிநிதிகள் பெர்லின் நகரில் ஒரு மாநாட்டைக் கூட்டினுர்கள். இம் மாநாட்டில்தான் இந்தோ-சீனுப் பிரச்சினைகளைப் பற்றி விவாதிக்க ஒரு மாநாடு கூட்டுவதென முடிவு செய்யப்பட்டது. அம் முடிவின்படி ஜெனிவா நகரில் 1954ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்கள் 26ஆம் நாள் பேச்சு வார்த்தைகள் தொடங்கின.

# 6. பிலிப்பைன் தீவுகள்

பசிபிக் பெருங்கடலில், பார்மோசாத் தீவிற்கு தெற்கில், சுமார் ஒரு மில்லியன் சதுரமைல் பரப்பில் அமைந்திருக்கின்ற ஏழாயிரத்திற்கும் அதிகமான தீவுகளைக்கொண்ட தீவுக் கூட்டமே பிலிப்பைன் தீவுகள் எனப்படுவது. ஒரு மில்லியன் சதுரமைல் பரப்பில் விரிந்து கிடந்தாலும், அதில் நிலப்பகுதி 115,000 சதுர மைல்களே. இப் பரப்பையும் ஐந்து பெரும் தீவுக்கூட்டங்களாகப் பிரிக்கலாம். அவைகள், லுசான், விசயன் தீவுகள், மிண்டானோ, பாலவான், சுலுதீவுகள் ஆகும். (Luson, Visayan Islands, Mindanoa, Palawan, Sulu Archipelago). இத் தீவுகளில் உயர்ந்த மலைகளும், அடர்ந்த காடுகளும், எரிமலைகளும், மிகுந்து காணப்படு கின்றன. எரிமலைகள் சில இன்றும் கூடப் புகை கக்கியவண்ணமே இருக்கின்றன. இத் தீவுக்கூட்டங்களில் வாழ்ந்த மக்கள் மலேய இனத்தைச் சேர்ந்தவர்கள். ஒரே இனத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தும், பல மொழிகளைப் பேசுகின்ற பல பிரிவுகளாகப் பிரிந்தும் வாழ்ந்திருந்தனர். மலேய இனத்தவருடன், நீக்கிரத்தோக்கள் (Negritoes) என அழைக்கப்படுகின்ற ஆதி மனித இனமும், பின்னர் வந்து இணைந்த சீன, ஜப்பானிய, ஸ்பானிய, அமெரிக்கர்களும் கலந்துறவாடுகின்றனர்.

### ஐரோப்பியர் வருகை

1519-ல் ஸ்பெயினிலிருந்து புறப்பட்ட மெகல்லன், அட்லாண்டிக் பெருங்கடலைக் கடந்து, தென் அமெரிக்காவின் தென் கோடி முனையைச் சுற்றி, பசிபிக் பெருங்கடலைக் கண்டறிந்தார். பசிபிக் பெருங்கடலில் தமது பயணத்தைத் தொடர்ந்து 1521-ல் தீவுக் கூட்டம் ஒன்றினை அடைந்தார். அத் தீவுகளுக்கு 'லாத் ரோன்ஸ்' அல்லது 'திருடர் தீவுகள்' எனப் பெயரிட்டார். பின்னர் இத் தீவுகள் மரியானு தீவுகள் என அழைக்கப்பட்டன. பின்னர் மற்றொரு பெரிய தீவுக்கூட்டத்தை அடைந்து அதற்கு


பிலிப்பைன் கடல்
லூசான்
தென் சீனக் கடல்
மணிலா.
மிண்டாரோ
பாலவான்
சுலு கடல்
மிண்டானோ
மலேசியா
சபா
சுலு தீவுகள்
செலிபஸ் கடல்

பிலிப்பைன் தீவுகள்

'புனித லாசரஸ் தீவுகள்' (St. Lazarus Islands) எனப் பெயரிட்டார். இத் தீவுக் கூட்டங்களே பின்னர் ஸ்பானிய இளவரசர் பிலிப்பின் பெயரால் 'பிலிப்பைன் தீவுகள்' என அழைக்கப் பட்டன (1542). இத் தீவுகளின் தென்பகுதியிலுள்ள 'சிபு' (Cbu) தீவில் இறங்கிய மெகல்லன், உள்நாட்டுப் பூசலில் தலையிட்டதன் விளைவாகக் கொல்லப்பட்டார். அதன்பின் மெகல்லனின் குழுவினர் ஸ்பெயினை அடைந்து, உலகை வலம்வந்த முதல்நாட்டினர் என்ற பெரும் புகழை அடைந்தனர். பிலிப்பைன் தீவுகளின் அருகிலுள்ள நறுமணத் தீவுகளில் ஏற்கெனவே போர்ச்சுகீசியர் தங்கள் ஆதிக்கத்தை நிறுவ முயன்றிருந்தனர். எனவே, போர்ச்சுகீசியருடன் ஆதிக்கப்போட்டியில் ஈடுபட விரும்பாத ஸ்பானியர் நறுமணத் தீவுகளின் வடக்கில் அமைந்திருந்த பிலிப்பைன் தீவுகளில் தங்கள் செல்வாக்கினை நிலைநாட்ட ஆரம்பித்தனர்.

இதற்கிடையில் ஸ்பானியர் அமெரிக்காவில் மெக்சிகோப் பகுதிகளில் தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டியிருந்தனர். மெக்சிகோவைத் தங்களின் தலைமைத் தளமாகக் கொண்ட ஸ்பானியர்கள், பசிபிக் பெருங்கடலில் மேற்கு நோக்கி நகர்ந்து, போர்ச்சுகீசியப் பற்றிடங்களைத் தவிர்த்து, லுசான் தீவினைக் கைப்பற்றினர். இத் தீவில் 1571ஆம் ஆண்டு 'மணிலா' நகரம் நிறுவப்பட்டது. பின்னர், படிப்படியாக, பிலிப்பைன் தீவுகள் முழுவதும் ஸ்பானிய ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவரப்பட்டது.

பிலிப்பைன் தீவுகளை அடைந்த ஐரோப்பியர்கள், ஏனைய தென்கிழக்காசியத் தீவுகளுக்கும், பிலிப்பைன் தீவுகளுக்குமிடையே இருந்த வேறுபாடுகளை உணர்ந்தனர். ஏனைய தென்கிழக்காசியப் பகுதிகள் அனைத்தும் இந்திய சமயப், பண்பாடுகளை ஏற்று வளர்ந்தும், பின்னர் பதின்மூன்றும் நூற்றாண்டிற்குப் பின்னர் நுழைந்த இஸ்லாமியப் பண்பாட்டினையும் ஏற்றுச் சிறப்படைந்திருந்தபோது, பிலிப்பைனில் மட்டும் எவ்விதக் கலை, பண்பாட்டு வளர்ச்சியும் காணப்படாதது கண்ட ஐரோப்பியர் வியந்தனர். பிலிப்பைன் மட்டும் பழமை இருளில் மூடிக்கிடந்தது. இந்தியப் பண்பாடு பிலிப்பைனில் பரவியிருந்த போதிலும், செல்வாக்குப் பெற்றிருக்கவில்லை. இஸ்லாமியப் பண்பாடும் தென்பகுதியில் மிண்டானேத் தீவுக் கூட்டங்களில் மட்டுமே பரவியிருந்தது. இவ்வாறாக நாகரிகம், பண்பாடு வளர்ச்சியடையாத நிலையில் இருந்த பிலிப்பைனில், ஐரோப்பியர்கள் மிக எளிதாகத் தங்கள் முறைகளை, சமயத்தைப் பரப்பி வளர்க்க ஆர்வம் கொண்டனர்; வெகு எளிதில் வெற்றியும் அடைந்தனர்.

ஸ்பானியருக்கு முன்பு பிலிப்பைனில் வாழ்ந்த மக்கள் மலேயா விலிருந்தும், இந்தோனேஷியாவிலிருந்தும் வந்து குடியேறியவர் களாவார்கள், இவர்கள் பராங்கேகள் (Barangays) என அழைக்கப் பட்டனர். இவர்கள் கடற்கரைப் பகுதிகளிலே முதலில் குடியேறி, பின்னர் உள்நாட்டில் வாழ்ந்துவந்த ஆதி இனத்தவரை விரட்டி விட்டுத் தங்களுடைய குடியிருப்புகளை ஏற்படுத்திக் கொண்டனர். இவர்களின் தலையாய நோக்கம் தங்களை எதிரிகளிடமிருந்து பாது காத்துக் கொள்வதேயாகும். இதன் பொருட்டே பல இராணுவக் குழுக்களையும் அமைத்துக் கொண்டனர். கடற்கொள்ளைக்காரர் களின் தொல்லைகளிலிருந்து தங்களைக் காத்துக்கொள்ள முயன்ற வர்கள், பின்னர் இஸ்லாமியரையும் எதிர்த்தனர். எதிர்ப்பினி டையேயும் தென் தீவுகளில் குடியேறிய இஸ்லாமிய சமயத்தினர் வடக்கு நோக்கிப் பரவ ஆரம்பித்தனர். ஸ்பானியர்களின் வருகை, இஸ்லாமிய வளர்ச்சிக்கு முற்றுப் புள்ளி வைத்தது.

**ஸ்பானியர் காலம்**

ஸ்பானியர் பிலிப்பைனில் ஆதிக்கம் பெறுவதை இந்தோனேஷி யாவில் செல்வாக்குப் பெற்றிருந்த டச்சுக்காரர்கள் விரும்ப வில்லை. இதனுல் டச்சுக்காரர்களுக்கும் ஸ்பானியர்களுக்கு மிடையே பல போர்கள் நடைபெற்றன. இப் போர்களின் முடிவில் டச்சுக்காரர்களின் போட்டியை முறியடித்த ஸ்பானியர் பிலிப்பைனில் நிலைபெற்றனர். ஐரோப்பாவில் ஏற்பட்ட ஏழாண்டுப் போர் பிலிப்பைனிலும் எதிரொலித்தது. இப் போரின் விளைவாக ஆங்கிலேயர் மணிலாவைக் கைப்பற்றினர். ஆனுல், போரின் முடிவில் ஏற்பட்ட சமாதான உடன்படிக்கையின்படி மணிலாவை ஸ்பானியர் திரும்பப் பெற்றனர். 1898-ல் அமெரிக்க ஐக்கிய நாட்டினரால் தோற்கடிக்கப்பட்டு, வெளியேற்றப்படும் வரை பிலிப்பைன் ஸ்பானியரின் ஆதிக்கத்தின் கீழிருந்தது.

ஸ்பானியரின் முந்நூறு ஆண்டுக்கால ஆட்சியில் பிலிப்பைன் நாடு அரசியல் அடிப்படையில் பலரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய நாடாகவும், கிறித்தவ சமயத்தை ஏற்றுக்கொண்ட நாடாகவும் வளர்ந்தது. ஸ்பானியக் குடியேற்றக் கொள்கை கத்தோலிக்கத் திருச்சபையின் வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்டிருந்தது. இதனுல் கத்தோலிக்கக் கிறித்தவ சமயம் பிலிப்பைன் தீவுகள் முழு வதும் விரைந்து வளர்ந்தது. அரசியல் பொருளாதார நிறுவனங் களும், சமய நிறுவனங்களின் செல்வாக்கு வளரத் துணை நின்றன. பொதுவாக நோக்குமிடத்து ஸ்பானியர்கள் தங்களின் நிர்வாக அமைப்புக்களையும், நிலமானிய முறையையும், கத்தோலிக்கத்

திருச்சபையின் செல்வாக்கினையும் பிலிப்பைனில் ஏற்படுத்தி வளர்த்தனர்.

ஸ்பானிய அரசால் நியமிக்கப்பட்ட தலைமை ஆளுநர் பிலிப்பைனின் ஆட்சிப் பொறுப்பை ஏற்ருர். அவரிடம் அரசியல் அதிகாரங்கள் அனைத்தும் ஒப்படைக்கப்பட்டிருந்தன. ஆளுநரின் பதவிக்காலத்தின் முடிவில், அவரது ஆட்சியைப் பற்றிய மதிப்பீடு செய்யப்பட்டது. மதிப்பீடு செய்யும் அதிகாரம் பெற்ற தலைமை நீதி மன்றம் (Audiencia or Supreme Court) மட்டுமே தலைமை ஆளுநரை ஓரளவுக்குக் கட்டுப்படுத்த முடியும். நாடு பல மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டு, மாநில ஆளுநரின் பொறுப்பில் விடப்பட்டிருந்தது. அவர்களுடைய மேற்பார்வையின்கீழ் தேர்ந்தெடுக்கப்பட்ட பிலிப்பைனியர்கள், தல ஆட்சிப் பொறுப்புகளை ஏற்றனர் (Elected native Gobernadorcillos, who were in charge of Pueblos, into which the Province was sub-divided). பொருளாதாரத் துறையில் நிலமானிய முறை பின்பற்றப்பட்டது. பெரும் பண்ணைகள் ஏற்படுத்தப்பட்டன. இப் பண்ணைகளின் உரிமையாளர்களாய் இருந்த ஸ்பானிய உயர்குடி மக்கள் பிலிப்பைனின் பொருளாதார, சமுதாய அடிப்படையை உருவாக்கினர். இப் பண்ணைகளில் கத்தோலிக்க சமயம் பரப்பப்பட்டது. ஐரோப்பியப் பண்பாட்டு முறைகளும் வளர்ச்சியுற்றன. ஆங்காங்கே கத்தோலிக்கத் திருச்சபைகளும் ஏற்படுத்தப்பட்டன. அத் திருச்சபைகளைச் சுற்றி மக்கள் தங்கள் உறைவிடங்களை ஏற்படுத்திக் கொண்டனர். புதிய சிற்றூர்கள் தோன்றி வளர்ந்தன. அச் சிற்றூர்களின் தலைவர்கள் ஸ்பானிய நாகரிகத்தில் மூழ்கியவர்களாகவும், செல்வந்தர்களாகவும், திருச்சபையைச் சேர்ந்த பாதிரிமார்களின் விருப்பப்படி ஆட்சி செய்பவர்களாகவும் இருந்தனர். திருச்சபைகள் இவ்வாருகக் கிராம, நகர்ப்புறங்களில் செல்வாக்குப் பெற்றன. திருச்சபைகள் கல்விக் கூடங்களையும் நிறுவி, சமயத்துடன் கல்வியறிவைப் பரப்பும் பணியிலும் ஈடுபட்டன. கிறித்தவ சமயமும், பண்பாடும், பிலிப்பைன் மக்களிடையே பரவி நிலை பெறத் திருச்சபைகளே காரணமாய் இருந்தன.

ஸ்பானிய அரசின் குடியேற்றக் கொள்கைகள், பிலிப்பைனில் பல எதிர்ப்பியக்கங்கள் தோன்றக் காரணமாய் இருந்தன. தென் கிழக்காசிய நாடுகளில் குடியேற்றங்களை ஏற்படுத்தி, ஆட்சிப் பொறுப்பை ஏற்றிருந்த டச்சுக்காரர்கள், ஆங்கிலேயர், பிரெஞ்சுக்காரர்கள், ஆகிய அனைவரும் வர்த்தகத்தையே தங்களது முதன்மை நோக்கமாகவும், அரசியல், சமயம் ஆகிய இவைகளை அடுத்த நோக்கமாகவும் கொண்டிருந்தனர். ஆனுல் பிலிப்பைனை

வென்ற ஸ்பானியர்கள், சமயத்தைப் பரப்புவதையும் திருச் சபையின் ஆதிக்கத்தை நிலைநாட்டுவதையும் மக்களை வற்புறுத்தி மதமாற்றம் செய்வதையுமே தங்களது தலையாய நோக்கமாகக் கொண்டிருந்தனர். வர்த்தக வளர்ச்சியோ, பொருளாதார முன்னேற்றமோ அரசின் ஆதரவைப் பெறவில்லை. அரசு, திருச் சபையினரின் கைப்பாவையாகவே இயங்கியது. அரசியலில் செல்வாக்குப் பெற்றிருந்த திருச்சபையினர் மக்களிடமிருந்து அதிக வரிவசூலிக்க ஆரம்பித்தனர். இதனால் மக்களிடையே வெறுப்புணர்ச்சி வளர ஆரம்பித்தது. திருச்சபையினரின் கல்வி நிலையங்களில் பயின்றவர்கள், உயர்கல்வி நாடி, மேனாடுகளுக்குச் சென்று திரும்பினர். மேனாட்டுக் கல்வி பயின்ற பிலிப்பைனியர் அரசு பணியில் சேர அனுமதிக்கப்படவில்லை. மேனாட்டு முறையில் கல்வியறிவு பெற்ற இளைஞர் சமுதாயம் விழித்தெழுந்தது. திருச் சபையின் பிடியிலிருந்து அரசியல் பொருளாதாரத் துறைகளைப் பிரித்து, நாட்டின் முன்னேற்றத்திற்காகப் பாடுபடவேண்டும் என்ற எண்ணம், இயக்கமாக உருவெடுத்தது. அரசியல் கிளர்ச் சிகள் 19ஆம் நூற்றுண்டின் இடையில் தோன்ற ஆரம்பித்தன.

19ஆம் நூற்றுண்டின் முடிவில் பிலிப்பைனில் பல இரகசியக் குழுக்கள் தோன்றின. இவைகளின் முக்கிய நோக்கம் சீர்திருத்த மாகும். சீர்திருத்தம் கோரிய இரகசியக் குழுக்களில் இரண்டு பிரிவுகள் காணப்பட்டன. ஒரு குழுவில் சாதாரண மக்கள் இடம் பெற்றிருந்தனர். அவர்களது நோக்கம் அரசியல், பொருளாதார முழு உரிமையாகும். இரண்டாவது பிரிவில் ஸ்பெயினில் உயர் கல்வி பயின்று, ஆனால் தாய்நாட்டின் அரசு பணியில் சேர்ந்து பணியாற்றுவதிலிருந்து தடுக்கப்பட்டு, அரசின் ஆதரவற்ற, ஆனால் உயர் குடியில் பிறந்தவர்கள் இருந்தனர். இவ்விரு பிரிவினரும் மாநிலங்களில் பாதிரிமார்களின் கொடுமைகளை எதிர்த்தும், அரசியல் உரிமைகள் கோரியும், கலகங்கள் ஏற்படுத்தினர். பிலிப்பைனில் புரட்சிக் கருத்துகள் தோன்றி மக்களிடையே பெருகி வளரக் காரணமாக இருந்தவர்கள் டாக்டர் ஜோஸ் ரிசால் (Dr. Jose Rizal) என்பவரும் ஆண்ட்ரே போனிபேசியே (Andre Bonifacio) என்பவருமாவர். டாக்டர் ஜோஸ் ரிசால் என்பவர் ஸ்பெயினில் உயர்கல்வி பயின்று, தாய்நாடு திரும்பியவர். பிலிப்பைன் நாட்டு மக்களை ஒருங்கிணைத்து, திருச்சபைகளின் கொடுமைகளினின்றும், திருச்சபையின் கைப்பாவையாக விளங்கிய திறமையற்ற ஸ்பானிய அரசின் பிடியிலிருந்தும் நாட்டை விடுவித்து, சுதந்திர நாடாக்க வேண்டுமென்பதே அவரது நோக்கமாகும். அவரது எழுத்துகள் கல்வியறிவு படைத்த மக்களிடையே சுதந்திர உணர்வைத் தூண்டின. அவர்

நாடு போற்றும் தலைவராக ஏற்றுக்கொள்ளப்பட்டார். ஆனால் 1896-ல் நடந்த கலகத்தின் காரணமாகக் கைது செய்யப்பட்ட டாக்டர் ஜோஸ் ரிசால், சுட்டுக் கொல்லப்பட்டார். ஜோஸ் ரிசாலின் மரணம், பிலிப்பைனில் புரட்சித் தீ அதிவேகமாகப் பரவக் காரணமாய் இருந்தது.

ஆண்ட்ரே போனிபேசியோவின் தலைமையில் 'கடிபுனம்' (Katipunam) என்ற இரகசியக் குழு ஏற்படுத்தப்பட்டது. அதன் முழுப் பெயர், 'ககாலங்கலங்கன் கடாஸ்டசாங் கடிபுனம்' (Kagalangalangon Kataastasang Katipunam). இதன் பொருள் 'மதிப்பிற்கும் மரியாதைக்கும் உரிய நாட்டின் தவப்புதல்வர்களின் கழகம்' என்பதாகும். மணிலா நகரில் தோன்றிய இக் கழகம் விரைவிலேயே பிலிப்பைன் முழுவதிலும் பரவியது. இக் கழகம் பிலிப்பைனின் பழம் பெருமைகளை விளக்கமாக எடுத்துரைத்து மக்களை நம்பச்செய்தது. ஸ்பானியரின் வருகைக்கு முன்னரே பிலிப்பைன் சிறந்ததொரு நாகரிகத்தின் உறைவிடமாகவும், பண்பாடுகளின் பிறப்பிடமாகவும், வணிகச் சிறப்பு மிக்கதாகவும், சமயச் சிறப்புப் பெற்றிருந்தது என்ற கருத்தினை இக் கழகம் வலியுறுத்திப் பரப்பியது. அவர்கள் கிறித்தவத்திருச்சபை பிலிப்பைனின் பண்பாட்டு உயர்வுக்கோ பிலிப்பைனின் மேன்மைக்கோ பாடுபடவில்லை என்றும் குற்றஞ்சாட்டி, திருச்சபையினரிடத்தில் மக்கள் நம்பிக்கையிழக்கும்படி செய்வதில் ஓரளவுக்கு வெற்றியும் பெற்றனர். அவர்களின் முழு நோக்கம் பிலிப்பைனியர் அனைவரையும் ஒன்றுதிரட்டி, புரட்சியின் மூலம் சுதந்திரமடைவது என்பதாகும்.

புரட்சி வெடித்து, போராக உருவெடுத்தபோது, ஆண்ட்ரே போனிபேசியோவிற்குப் படை நடத்தும் ஆற்றல் இல்லாததால் எமிலியோ அகைனல்டோ (Emilio Aguinaldo) என்ற பள்ளியாசிரியர் புரட்சித் தலைவராக ஏற்றுக்கொள்ளப்பட்டார். அகைனல்டோவின் தலைமையிலான பிலிப்பைனியரின் புரட்சிப் படை வெற்றிகள் பல பெற்றிடினும், ஸ்பானியர்களை விரட்டுவதென்பது இயலாது என்பதனை உணர்ந்தது. எனவே, 1897-ல் ஸ்பானிய அரசுடன் உடன்படிக்கையொன்று செய்து கொள்ளப்பட்டது. அதன்படி பிலிப்பைனியர் தங்களிடமிருந்த போர்க் கருவிகளை ஒப்படைத்துவிட வேண்டும். அகைனல்டோவும், ஏனைய புரட்சித் தலைவர்களும் பிலிப்பைனிலிருந்து வெளியேற வேண்டும். அதற்கு ஈடாக ஸ்பானிய அரசு பிலிப்பைனியருக்கு இருபது மில்லியன் மெக்சிகன் டாலர்களைக் கொடுக்கவேண்டும் என்று ஏற்பாடாயிற்று. இதன்பின்னர் சில சீர்திருத்தங்களையும்

செய்ய ஸ்பானிய அரசு முன்வந்தது. அகைனுல்டோ ஹாங்காங் கிற்குச் சென்றுவிட்டார். இருப்பினும் 1897-ல் கையெழுத்தான உடன்படிக்கை முழுவதுமாகச் செயல்படவில்லை.

இந் நிலையில் 1898ஆம் ஆண்டு ஸ்பெயினுக்கும், அமெரிக்க ஐக்கிய நாட்டிற்குமிடையே போர் மூண்டது. ஹாங்காங்கில் தளபதி ஜார்ஜ் தியுவே (George Dewey) என்பவரின் தலைமையி லிருந்த அமெரிக்கக் கடற்படை மணிலாவிலிருந்த ஸ்பானியக் கடற்படையைத் தாக்கி அழித்தது (May Ist 1898). ஆனல், மணிலாவில் இறங்கி, நகரைக் கைப்பற்றத் தேவையான படை வீரர்கள் தியுவேயிடம் இல்லை. எனவே அமெரிக்காவிலிருந்து உதவிப்படைகள் வரும் வரையில் மணிலா நகரைக் கைப்பற்ற இயலவில்லை. இதற்கிடையில் ஹாங்காங்கிலிருந்த எமிலியோ அகைனுல்டோவை, தளபதி தியுவே பிலிப்பைனுக்கு அழைத்து வந்தார். அகைனுல்டோவின் உதவியுடன் ஸ்பானியரை முறியடிக்க வேண்டும் என்பது தியுவேயின் திட்டமாகும். அமெரிக் கர்களின் உதவியுடன் மணிலாவில் நுழைந்த அகைனுல்டோ ஓரிரு வாரங்களில் பிலிப்பைனியரின் புரட்சிப் படையொன்றினை உருவாக்கி ஸ்பானியரைத் தாக்க ஆரம்பித்தார். மணிலா நகரம் சுற்றி வளைக்கப்பட்டது. அகைனுல்டோவின் படை மணிலா நகரின் வெளிப்புறத்தில் காவலாக நிறுத்தப்பட்டது. 1898 ஜூன்-ஜூலை மாதங்களில் ஸ்பானியப் படை அமெரிக்கர் களிடம் சரணடைந்தது. அமெரிக்கப் படைகள் மணிலாவில் வெற்றியுடன் நுழைந்தபோது, அகைனுல்டோவின் பிலிப்பை னியப் படைகள் மணிலா நகரின் வெளிப்புறத்திலேயே நிறுத்தப் பட்டன. நகரில் நுழைய அனுமதிக்கப்படவில்லை.

அமெரிக்கர்களுக்கு உதவி செய்வதன் மூலம் ஸ்பானியரிட மிருந்து பிலிப்பைன் விடுதலை அடையும் என அகைனுல்டோ நம்பியிருந்தார். இந்த நம்பிக்கையைச் செயல்படுத்தும் வகையில் மணிலாவிற்கு வெளியில் இருந்த பகுதிகளில் சுதந்திர அரசை நிறுவும் பணியில் ஈடுபட்டார். அவ்வரசின் தலைநகரமாக புலாகன் (Bulagan) மாநிலத்திலிருந்த மாலோலஸ் (Malolos) என்று அறிவிக்கப்பட்டது. இதற்கிடையில் அமெரிக்கர்களுக்கும் பிலிப்பைனியருக்கும் இடையேயான உறவு முறிந்தது. அமெரிக் கர்கள் பிலிப்பைனியரின் புரட்சி அரசை ஏற்க மறுத்தனர். அதைக் கலைத்துவிடும் படியும் ஆணையிட்டனர். சுதந்திர மடைவதையே குறிக்கோளாகக் கொண்டிருந்த பிலிப்பைனியர், தங்களது மேலாளர்களை மட்டும் மாற்றிக்கொள்ள விரும்பவில்லை. ஸ்பானி யர்களிடம் அடிமைப்பட்டிருந்தவர்கள், இப்போது அமெரிக்க

ரிடம் அடிமைப்பட வேண்டியிருக்கின்றதே என எண்ணி மனம் புழுங்கினர். பிலிப்பைனியப் புரட்சி அரசு அமெரிக்கரின் ஆணையை ஏற்க மறுத்தது. வாளேந்தி, போர்புரிந்து, தங்களின் சுதந்திரத்தை நிலைநிறுத்த உறுதி பூண்டனர் பிலிப்பைனிய இளம் வீரர்கள். அமெரிக்கர்களுடன் நடந்த போர் 1899-லிருந்து 1902 வரை மூன்றுண்டுகள் தொடர்ந்து நடை பெற்றது. இறுதியில் பிலிப்பைனியர் தோல்வியுற்று அமெரிக்கர்களுக்குப் பணிந்தனர்.

**அமெரிக்கர்கள் காலம், 1902-1946**

பிலிப்பைனிலிருந்து ஸ்பானியர்களை வெளியேற்றிய அமெரிக்கர்கள், தங்களது ஆட்சியை நிறுவினர். அமெரிக்கர்கள் ஸ்பானியரை வெற்றி கொள்வதற்கு உதவியளித்த அகைனல்டோவும் அவரது குழுவினரும், சுதந்திரப் பிலிப்பைன் அரசு ஏற்படுத்தப் படும் என்று நம்பி, ஏமாந்தனர். இந்த ஏமாற்றம் அமெரிக்க எதிர்ப்பியக்கமாக உருவெடுத்தது. 1899-லிருந்து 1902-வரை அகைனல்டோவின் சுதந்திர இயக்கத்தினர் அமெரிக்கர்களுடன் போரிட்டுத் தோல்வியுற்றனர். அமெரிக்கர்கள் பிலிப்பைனின் முழு ஆட்சிப் பொறுப்பையும் ஏற்றனர். பிலிப்பைனின் ஆட்சிப் பொறுப்பை ஏற்ற அமெரிக்க குடியரசுத் தலைவர் மெக்கின்லி, ஒரு குழுவினை அமைத்து, பிலிப்பைன் பிரச்சினைகளை ஆய்ந்து பரிந்துரைகள் வழங்குமாறு ஏற்பாடு செய்தார். இக் குழு தனது பரிந்துரையில் அமெரிக்காவின் மேலாண்மையை வற்புறுத்தியது. அதே நேரத்தில் அமெரிக்கர்களின் நட்புறவுக் கொள்கைகளின் மூலம், பிலிப்பைனியரின் நல்லெண்ணத்தையும், வரவேற்பையும் பெற வேண்டும் என்றும் குறிப்பிட்டது. மேலும், பிலிப்பைனியர்களுக்கு ஆட்சித்துறை அனுபவம் இல்லையென்றும், தங்களைத் தாங்களே ஆட்சி செய்து கொள்ளும் திறமையடையும்வரை அமெரிக்கர்கள் பிலிப்பைனின் ஆட்சிப் பொறுப்பை ஏற்று, அவர்களுக்கு ஆட்சித்துறையில் பயிற்சியளித்தல் வேண்டுமெனவும் இக் குழு பரிந்துரை செய்தது.

இக் குழுவின் பரிந்துரையை ஏற்ற அமெரிக்கக் குடியரசு தலைவர் மெக்கின்லி, பிலிப்பைனின் முதல் அமெரிக்க சிவில் ஆட்சித் துறைத் தலைவராக வில்லியம் ஹோவர்டு தாப்ட் (William Howard Taft) என்பவரை நியமித்தார். தாப்டின் தலைமையிலான பிலிப்பைன் அரசில் பிலிப்பைனியரும் பங்கெடுத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டனர். தலைமை அரசில் மூன்று பிலிப்பைனியர்கள் உறுப்பினர்களாக நியமிக்கப்பட்டனர். வட்டார அரசுகளில் பெரும்பாலும் அவ் வட்டாரத்தைச் சார்ந்தவர்களே நியமிக்கப் பட்டனர். வட்டார அரசுகளை மேற்பார்வையிடுகின்ற

அதிகாரம் அமெரிக்கர்களிடமே இருந்தாலும், அவ்வதிகாரங்கள் பிலிப்பைனியரைப் புண்படுத்தா வண்ணம் திறமையுடன் செயல் படுத்தப்பட்டன. வட்டார அரசுகள் அமைதி, ஒழுங்கு இவைகளை நிலைநாட்ட வேண்டும். ஆங்கில மொழி அடிப்படையிலான கல்வித்திட்டங்களைச் செயல்படுத்த வேண்டும். பொதுச் சுகாதாரமும், மக்களின் நல்வாழ்வுத் திட்டங்களும் மேற்கொள்ளப்பட வேண்டும். நீர்ப்பாசன வசதிகள், போக்குவரத்து வசதிகள் இவைகளில் முன்னேற்றம் ஏற்படுத்த வேண்டும் என்பது போன்ற அதிகாரங்களைச் செயல்படுத்த வட்டார அரசுகள் பணிக்கப் பட்டன. ஆரம்பத்தில் அமெரிக்கர்கள் மீது வெறுப்புக் கொண்டிருந்த பிலிப்பைனியர், பின்னர் அவர்களின் உண்மை நோக்கத்தினைப் புரிந்து கொண்டு முழு ஒத்துழைப்பையும் நல்கினர். பிலிப்பைன் நாடு முன்னேற்றப்பாதையில் அடியெடுத்து வைத்தது.

பொது அமைதிகாத்தல், வட்டாரத் தன்னுட்சி ஆகிய துறைகளில் கிட்டிய வெற்றியைக் கண்ட அமெரிக்கர்கள் 1907-ல் பிலிப்பைனின் தேசியச் சட்டமன்றத்தைத் தேர்ந்தெடுக்கும் முயற்சிகளில் இறங்கினர். இந்தத் தேசிய மன்றத்தில் தேர்ந்தெடுக் கப்பட்ட பிரதிநிதிகள் கொண்ட சபை, கீழ்ச்சபையாகவும், நியமிக்கப்பட்ட உறுப்பினர்கள் கொண்ட சபை மேல் சபையாக வும், தலைமை ஆளுநர் ஆட்சித்தலைவராக இருக்கவும் திட்டமிடப் பட்டது. இருபத்தொரு வயது நிறைந்த ஆண்கள், குறிப்பிட்ட சொத்து மதிப்புள்ளவர்கள் (500 பிசோக்கள்-Pesos), ஆங்கில ஸ்பானிய மொழிகளை எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள், குறைந்தது ஆறு திங்கள் குறிப்பிட்ட மாநிலத்தில் குடியிருந்தவர் களுக்கும், தேர்தலில் வாக்குரிமை வழங்கப்பட்டது.

1907ஆம் ஆண்டு தேசிய சட்டமன்றத்திற்கு நடந்த தேர்த லில் கூட்டாட்சிக் கட்சியைச் சேர்ந்தவர்களும், சுதந்திரமடைவதையே தங்களது குறிக்கோளாகக் கொண்டிருந்த தேசியவாதி களும் போட்டியிட்டனர். தேசியவாதிகளின் கட்சியினர் மாபெரும் வெற்றி பெற்றனர். ஆஸ்மனோ (Osmano) என்பவரது தலைமையில் தேசியச் சட்டமன்றத்தை அமைத்தனர். 1907 முதல், 1946-ல் பிலிப்பைன் சுதந்திர மடையும் வரையில், தேசியவாதிகளே பிலிப்பைனில் சிறந்த அரசியல் கட்சியினராய் இருந்தனர். தேர்தலுக்குப் பின்னர் பிலிப்பைனில் அரசியல் கட்சிகளுக்கிடையே போட்டியும் பூசலும் வளர்ந்தன. தேசியவாதிகளுக்கிடையேயும், கட்சித் தலைமைக்கான போட்டி ஏற்பட்டது. ஆஸ்மனோவுக்கும், மானுவல் கியுசானுக்குமிடையே (Manuel Quezon) ஆதிக்கப்

போட்டி ஏற்பட்டது. இப் போட்டிகளின் போதே தேசியவாதிகளுக்கும், தலைமை ஆளுநருக்குமிடையேயும் போராட்டங்கள் ஆரம்பமாயின.

இதற்கிடையில் அமெரிக்காவில் குடியரசு தலைவர் தேர்தலில் ஜனநாயகக் கட்சியினர் வெற்றி பெற்றனர். உட்ரோ வில்சன் அமெரிக்கக் குடியரசு தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவரது ஆட்சிக் காலத்தில் பிலிப்பைனுக்குச் சுயாட்சி வழங்கும் முறையில் சட்டமொன்று இயற்றப்பட்டது. 1916ஆம் ஆண்டு அமெரிக்கக் காங்கிரஸ் பிலிப்பைன் பற்றிய அமைப்புச் சட்டமொன்றை இயற்றியது. இச் சட்டம் ஜோன்ஸ் சட்டமென (Jones Law) அழைக்கப்படுகின்றது. இச் சட்டத்தின்படி பிலிப்பைன் தீவுகளில் அரசியல் சட்டமொன்று உருவாக்கப்பட்டு, அதன் அடிப்படையில் அரசாங்கம் ஏற்படுத்தப்படவேண்டும். நிலையான அரசாங்கம் பிலிப்பைனில் ஏற்படுத்தப்பட்டவுடன் அமெரிக்காவின் மேலாதிக்கம் திரும்பப் பெற்றுக் கொள்ளப்படும் என்பதாகும்.

ஜோன்ஸ் சட்டம் இயற்றப்பட்ட பின்னர் அமெரிக்கா முதல் உலகப் போரில் இறங்கியது. உலகப்போரின் முடிவில் பிலிப்பைனியர்கள் தங்களது சுதந்திர போராட்டத்தைத் துவக்கினர். அமெரிக்கக் குடியரசு தலைவர் உட்ரோவில்சனும் பிலிப்பைனியர்களுக்குச் சுதந்திரம் வழங்கவேண்டுமென முடிவு செய்திருந்தார். ஆனால் 1921-ல் நடந்த தேர்தலில் ஜனநாயகக் கட்சி தோற்று, குடியரசு கட்சியினர் மீண்டும் குடியரசு தலைவர் பதவியைக் கைப்பற்றினர். பிலிப்பைனுக்குச் சுதந்திரம் வழங்குவதை அமெரிக்கக் குடியரசு கட்சியினர் விரும்பவில்லை. அமெரிக்கர்களிடையேயும் பிலிப்பைனியரைப் பற்றிய வாக்கு வாதங்கள் ஏற்பட்டிருந்தன. பிலிப்பைனியருக்குச் சுதந்திரம் வழங்க வேண்டும் என்ற அடிப்படையில் 1933ஆம் ஆண்டு 'ஹேர்-ஹாவஸ்-கட்டிங் சட்டம்' (Hare-Hawes-Cutting Act) அமெரிக்கக் குடியரசு தலைவரின் மறுப்பாணைக்குப் பின்னரும் நிறைவேற்றப்பட்டது. ஆனால் பிலிப்பைனில் ஆஸ்மனேவுக்கும், மானுவல் கியூசானுக்குமிடையே ஏற்பட்ட கருத்து வேறுபாடுகளினால் இச் சட்டம் செயல்படுத்தப்படவில்லை. பின்னர் பிராங்க்ளின் ரூஸ்வெல்ட் அமெரிக்கக் குடியரசு தலைவராகப் பதவியேற்றவுடன் 'டைடிங்ஸ்-மக்டபி சட்டம்' (Tydeings-Mc, Duffie Act-March 24, 1934) இயற்றப்பட்டது.

இச் சட்டத்தின்படி குடியாட்சி அரசியல் அமைப்பை உருவாக்க அரசியல் அமைப்பு நிர்ணய சபை ஒன்று ஏற்படுத்தப்

படும். பிலிப்பைனில் இருக்கும் அமெரிக்கர் நலனைப் பாதுகாக்க அமெரிக்க உயர் ஆணையாளர் ஒருவர் அமெரிக்க அரசால் நியமிக்கப்படுவார். அவ்வாறே பிலிப்பைன் அரசாங்க அலுவலர் ஒருவர் அமெரிக்காவில் தங்கி, பிலிப்பைனியரின் நலன்களைக் கவனித்துக் கொள்வார். அமெரிக்கத் தலைமை நீதி மன்றம் பிலிப்பைன் சட்டங்களை மறு ஆய்வு செய்யும் உரிமையைத் தொடர்ந்து பெற்றிருக்கும். இச் சட்டத்தின் மிக முக்கியமான குறிக்கோள், பிலிப்பைனில் புதிய அரசாங்கம் பதவியேற்றது முதல், பத்து ஆண்டுகளில், அதாவது 1946ஆம் ஆண்டு ஜூலை மாதம் நான்காம் தேதிக்குள், பிலிப்பைன் முழு உரிமைபெற்ற சுதந்திர நாடாக அறிவிக்கப்படும் என்பதாகும்.

பிலிப்பைனியர் 'டைடிங்ஸ்-மக்டபி சட்டத்தை' வரவேற்றனர். 1934ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் பத்தாம் நாள் அரசியல் நிர்ணய சபைக்குத் தேர்தல்கள் நடைபெற்றன. அந்த அரசியல் நிர்ணய சபை உருவாக்கிய அரசியல் அமைப்பை அமெரிக்கக் குடியரசு தலைவரும், பிலிப்பைனியரும் வரவேற்றனர். பிலிப்பைனிய காமன்வெல்த் அரசு ஏற்படுத்தப்பட்டது. பிலிப்பைனிய காமன்வெல்த்தின் தலைவராக மானுவல் குயுசானும், உதவித் தலைவராக ஆஸ்மனேவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். புதிய பிலிப்பைன் காமன்வெல்த் அரசினை எதிர்நோக்கியிருந்த பிரச்சினைகள் ஏராளம். திறமையான மைய அரசை நிறுவி, வட்டார அரசுகளையும் ஏற்படுத்தி, பொருளாதார சமுதாயப் பிரச்சினைகளைச் சமாளித்து, மக்களின் உன்னத வாழ்விற்குப் பாடுபட வேண்டிய பொறுப்பு இப் புதிய அரசிற்கு இருந்தது. மானுவல் குயுசான் தமது கடமையை உணர்ந்து, உறுதியுடனும், முற்காணியத்துடனும் (தீர்க்கதரிசனம்) செயல்பட முனைந்தார். ஆனால், 1941, டிசம்பர் 7ஆம் நாள் ஜப்பான் பெர்ல் துறைமுகத்தைத் தாக்கி, பசிபிக் பெருங்கடல் பகுதியில் இரண்டாம் உலகப் போரைத் துவக்கியது. பிலிப்பைனையும் விரைவிலேயே ஜப்பான் கைப்பற்றியது. பிலிப்பைன் குடியரசு தலைவர் குயுசானும், உதவித் தலைவர் ஆஸ்மனேவும் வேறுசில முக்கிய உதவியாளர்களும், பிலிப்பைன் அரசாங்கத்தை அமெரிக்காவிலுள்ள வாஷிங்டன் நகருக்கு மாற்றிக்கொண்டு சென்றனர். மணிலாவில் எஞ்சியிருந்த அரசாங்க அலுவலர்கள் தங்களால் இயன்றவரை பிலிப்பைனியர்களைக் காப்பாற்ற முயன்றனர்.

ஜப்பானியர் பிலிப்பைனைத் தாக்கும்போது, தங்களுக்கு அமெரிக்க உதவி உடனடியாக கிடைக்காது என்பதை பிலிப்பைன் அரசு உணர்ந்திருந்தது. அதனால் பிலிப்பைனிய மக்கள் ஜப்பானிய

எதிர்ப்பியக்கத்தில் ஈடுபட்டனர். இவ்வெதிர்ப்பியக்கத்தில் மாண வர்களும், தொழிலாளர்களும், அறிஞர்களும் முழு மூச்சுடன் ஈடு பட்டனர். பிலிப்பைனிய பொதுவுடைமைக் கட்சியினர் 'ஹக்குகள்' (Hukbalahaps or Peoples Anti-Japanese Army) மக்களின் ஜப்பானிய எதிர்ப்புப் படையை ஏற்படுத்தி, கொரில்லாப் போர் முறைகளைக் கையாண்டனர். இவர்கள் சீனாவின் பெருந்தலைவர் மாவோ கைப்பற்றிய அதே முறைகளைப் பின்பற்றி ஜப்பானியப் படைகளை அலைக்கழித்தனர். இது ஒரு பக்கமாகும். மறுபக்கத்தில் பிலிப்பைனிய அரசு அதிகாரிகள் ஜப்பானியருடன் ஒத்துழைத்து, 'ஜப்பானியரின் மேலாண்மைக் குட்பட்ட 'பிலிப்பைன் குடியரசு' ஒன்றனை ஏற்படுத்தினர். இக் குடியரசு சுதந்திரமான அரசு என அறிவிக்கப்பட்டபோதிலும், அது உண்மையிலேயே ஜப்பானியரின் கைப்பாவை அரசு என்பதை மறுக்க முடியாது. பிலிப்பைனிலிருந்த ஜப்பானிய ஆதரவாளர்கள் தண்டிக்கப்படுவார்கள் என அமெரிக்கக் குடியரசு தலைவரும், கிழக்காசியப் படைத்தலைவரானமெக்ஆர்தரும் பிலிப்பைனியர்களை அச்சுறுத்தி வந்தனர். ஆனால் போரின் முடிவில் இவ்வச்சுறுத்தல் செயலாக்கப்படவில்லை. போர் நடந்து கொண்டிருந்தபோதே, பிலிப்பைன் குடியரசு தலைவர் மானுவல் குயுசான் இறந்தார். ஆஸ்மனே குடியரசு தலைவரானார். போரின் முடிவில் மெக்ஆர்தருடன், ஆஸ்மனேவும் பிலிப்பைனுக்குத் திரும்பினார். போர்க் காலத்தில் ஜப்பானியரின் ஆதிக்கத்திலிருந்த பிலிப்பைனில் தோன்றியிருந்த பல புதிய சக்திகளும், இயக்கங்களும், பிரச்சினை களும் ஆஸ்மனேவை வரவேற்றன. இதனிடையே புதிய சுதந்திர பிலிப்பைன் குடியரசு தலைவர் பதவிக்கான தேர்தல் நடந்தது. இத் தேர்தலில் வயதுமுதிர்ந்த நிலையில் இருந்த ஆஸ்மனே தோற் கடிக்கப்பட்டார். ஜப்பானியராதிக்கத்திலிருந்த பிலிப்பைனின் கைப்பாவை அரசின் தலைமையை ஏற்று, காப்பாற்றியவரான மானுவல் ராக்சாஸ் (Manuel Roxas) என்பவர் வெற்றி பெற்றார்.

### பிலிப்பைன் சுதந்திரமடைதல்

சுதந்திரத்திற்குப் பிறகு பிலிப்பைன் - அமெரிக்க நாடுகளுக் கிடையிலான உறவுகள் எத்தகையனவாக இருக்க வேண்டும் என்ற முறைகளை வரையறுக்கும் வகையில் இரண்டு சட்டங்கள் இயற்றப் பட்டன. இவற்றில் முதன்மையானது பிலிப்பைன் வாணிகச் சட்டம். இதன்படி அமெரிக்காவிற்கும் பிலிப்பைனுக்குமிடையே ஏற்றுமதி செய்யப்படும் பொருள்கள் சம்பந்தமான வர்த்தகம் சுதந்திரமாக இருக்க வேண்டுமென்பதை வற்புறுத்தியது. ஆனால், 1954-க்குப் பிறகு பல காலக் கட்டங்களில் படிப்படியாக வரி

விதிப்பதற்கும் வகை செய்யப்பட்டது. இரண்டாவதாக 1946ஆம் ஆண்டு உருவாக்கப்பட்டது 'பிலிப்பைன் மறுவாழ்வுச் சட்டம்'. இச் சட்டத்தின்படி போரில் ஏற்பட்ட இழப்பை ஈடுசெய்யும் வகையில் 620 மில்லியன் டாலர்கள் செலவிட வகை செய்தது. தனிப்பட்டோரின் இழப்புகள் முழுவதுமாகச் சரிசெய்யப்பட வேண்டுமென்றும் குறிப்பிடப்பட்டிருந்தது. அமெரிக்கா, பிலிப்பைனில் இராணுவத் தளங்களை ஏற்படுத்தி, பயன்படுத்தும் உரிமை 99 ஆண்டுகளுக்கு வழங்கப்பட்டிருந்தது. பிலிப்பைனின் சுதந்திரத்திற்கு ஆபத்து வருமேயானால் அதைத் தடுத்து, பிலிப்பைனைக் காப்பாற்றும் பாதுகாப்பு உரிமையும் அமெரிக்காவிற்கு வழங்கப்பட்டது.

1946ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் நான்காம் நாள் பிலிப்பைன் சுதந்திரமடைந்தது. சுதந்திரம் பெற்று, குடியரசாக அறிவிக்கப்பட்டாலும், பொருளாதாரத் துறையில் அமெரிக்காவுடன் பிணைக்கப்பட்டிருந்தது. அத்துடன் போர்க்காலத்தில் உருவான புதிய சக்திகள், பிலிப்பைனின் அமைதி, பொருளாதார, சமுதாய வளர்ச்சிகளுக்கு இடையூறு விளைவிப்பனவாயும் இருந்தன.

**பிலிப்பைன் குடியரசு**

புதிதாகச் சுதந்திரம் பெற்ற பிலிப்பைன் குடியரசை எதிர் நோக்கியிருந்த பிரச்சினைகள் ஏராளம். முந்நூறு ஆண்டுகளுக்கும் அதிகமாக ஸ்பானியரிடமும், பின்னர் அமெரிக்கரிடமும் அடிமைத் தளையில் கட்டுண்டு கிடந்த பிலிப்பைனிய மக்கள், சுதந்திர அரசின் பால் நம்பிக்கையற்றவர்களாகக் காணப்பட்டனர். ஜப்பானிய ஆக்கிரமிப்பிற்குப் பின்னர் நாட்டில் சட்டமும் அமைதியும் சீர் குலைந்திருந்தது. பெரும் நிலக்கிழார்கள் ஏழை உழவர்களைக் கசக்கிப் பிழிந்து அடிமைப்படுத்துகின்ற நிலைமை நீடித்தது. புதிதாகப் பரவிய மேலைநாட்டுக் கல்வி முறையும், அதனடிப்படையில் ஏற்பட்ட அரசியல் விழிப்புணர்ச்சியும் பாமர மக்களிடையே பரவியிருக்கவில்லை. மக்களும் அரசியலைப் பற்றியோ நாட்டு முன்னேற்றத்தைப் பற்றியோ அவ்வளவாகஅக்கறை கொள்ளாத வர்களாய் இருந்தனர். ஜப்பானிய எதிர்ப்பியக்கமாகத் தோன்றிய 'ஹக்குகள்' (Huks) பொதுவுடைமைக் கொள்கையை யேற்று, வேளாண் பெருங்குடி மக்களின் தோழனுக, துயர் துடைக்கும் தலைவனுக, உரிமைகளைக் கொடுத்து முன்னேற்றப்பாதையைக் காட்டும் ஒளிவிளக்காக, அரசியல் அறிஞனுக, தங்களை அறிவித்துக் கொண்டு, மக்களின் பேராதரவைப்பெற்று வளர்ந்தனர். அரசாங்கத்தை எதிர்க்கும் அளவிற்குப் படை வலிமை பெற்றுத் திகழ்ந்தனர். இத்தகைய பிரச்சினைகளைபற்றிக் கவலை கொள்ளாத

நிலையில் பிலிப்பைனின் புதியகுடியரசு விளங்கியது. அரசாங்க அதிகாரிகள் சுயநலமிகளாக, திறமையற்றவர்களாக, ஊழல் மலிந்தவர்களாக, தன்னம்பிக்கையற்றவர்களாகக் காணப்பட்டனர்.

இத்தகைய நிலையில் பிலிப்பைன் குடியரசு நிலைத்து நிற்குமா என்பதே பெரிய கேள்விக் குறியாகத் தென்பட்டது. குடியரசு தலைவராய் இருந்த மானுவல் ராக்சாஸ் 'ஹக்குகளை' அடக்கும் முயற்சியில் ஈடுபட்டார். 1948ஆம் ஆண்டு 'ஹக். இயக்கம்' சட்டபூர்வமானதன்று என அறிவித்தார். ராக்சாஸுக்குப் பின்னர் குடியரசு தலைவராகப் பொறுப்பேற்ற எல்பிடோ கியூரினோ (Elpididio Quirino) ஹக்குகளை அடக்குவதில் தீவிரம் காட்டினர். இதற்குள் ஹக்குகள் தங்கள் தாக்குதலை தீவிரமாக்கிக் கொண்டதோடு, அரசாங்கத்தைப் பிடிக்கப் போவதாகவும் அச்சுறுத்தினர். பிலிப்பைன் இராணுவத்தினராலும் ஹக்குகளை அடக்க முடியவில்லை. இராணுவத்தில் காணப்பட்ட குறைபாடுகளே இத்தகைய நிலைக்குக் காரணமென்பதை அரசு உணர்ந்தது. இந் நிலையில், 'ராமோன் மக்சாசே' (Raymond Magsaysay) என்பவர் பாதுகாப்புச் :செயலாளராக நியமிக்கப்பட்டார் (1950). இவர். இரண்டாம் உலகப் போரின்போது கொரில்லாக்களின் தலைவராய் இருந்து தீரச் செயல்கள் பல புரிந்தவர். 'ஹக்குகளை' அடக்கி நாட்டின் அமைதியைக் காப்பதற்கான முழு அதிகாரமும் இவரிடம் ஒப்படைக்கப்பட்டது.

ராமோன் மக்சாசே, முதற்படியாக இராணுவச் சீர்திருத்தங்களை மேற்கொண்டு திறமையானவர்களுக்குப் பதவியுயர்வு-விருதுகள் வழங்கியும், திறமையற்றோரைப் பதவி நீக்கம் செய்தும், இராணுவ ஒழுங்குக் கட்டுப்பாட்டு விதிகளை முறையாகச் செயல் படுத்தியும், இராணுவத்தினரின் தன்னம்பிக்கையை வளர்த்தார். இரண்டாவதாக, 'ஹக்குகளை' அழிப்பதற்குப் பதிலாக, அவர்களைத் திருத்த முயன்றார். அரசாங்கத்தின் குறைபாடுகளைக் களைந்து, அதன் மூலம் ஹக்குகள் அரசாங்கத்தை எதிர்ப்பதற்குக் காரணமாக இருந்த நிலைகளை அகற்ற முயற்சி செய்தார். அதன் பொருட்டு 'பொருளாதார முன்னேற்ற வாரியம்' (Economic Development Corporation) ஒன்றனை ஏற்படுத்தினர். இதன் மூலம் வேளாளரின் நிலைமைகள், சீர்திருத்தப்பட்டன. மூன்றாவதாக 'ஹக்குகளின்' ஆதரவாளராக இருந்த பொதுவுடைமைக் கட்சியின் தலைமை அலுவலகத்தைக் கைப்பற்றி, பொதுவுடைமையினரின் செல்வாக்கினை ஒழித்தார். இதன் பின்னர் 'ஹக்குகளின்' செல்வாக்கும் தானாகவே குறையத் தொடங்கியது. மக்கள் அரசின்மீது நம்பிக்கை கொள்ள வேண்டுமெனில் தேர்தல்கள்

முறையாக நடத்தப்பெற்று, மக்களின் ஆதரவைப் பெற்றவர்கள் தேர்தலில் வெற்றி பெறுகின்ற வாய்ப்பு இருக்கவேண்டும். இந் நிலையை மனத்தில் கொண்டு நேர்மையான முறையில் தேர்தல்கள் நடைபெறுவதற்கென ஒரு தேசியக் கழகத்தினை ஏற்படுத்தினர் (National Association for the Maintenance of Free Electoins).

இத்தகு சீர்திருத்தங்களைக் கொண்டு மக்களின் நல்லாதரவைப் பெற்ற மக்சாசே 1953ஆம் ஆண்டு தேர்தலின்போது, தேசியக் கட்சியின் வேட்பாளராக நின்று மாபெரும் வெற்றிபெற்றார். தேர்தலின்போது இவர், நிலச் சீர்திருத்தங்கள் கொண்டுவந்து, கிராம மக்களின் வளமான வாழ்க்கைக்கு வழிகாட்டுவதாகவும், இலஞ்ச ஊழலற்ற, நேர்மையான அரசாங்கம் அமைக்கப் பாடுபடுவதாகவும், பணக்காரர்களுக்கு மட்டுமன்றி ஏழை எளியவர்களின் நன்மையைப்பேணுகின்ற அரசாங்கம் அமைக்கவும் பாடுப்டுவதாக வாக்குறுதி அளித்திருந்தார். இத்தகைய மிக உயர்ந்த குறிக்கோள்களைக் கொண்டிருந்த மக்சாசே வெற்றி பெற்றதில் வியப்பில்லை. இத்தகைய வாக்குறுதிகளைத் தேர்தல் முடிந்தவுடன் மறந்துவிடாமல், செயல்படுத்த முயற்சிகள் எடுத்துக் கொண்டார். பல பொருளாதாரத் திட்டங்களும், செய்தி, மற்றும் போக்குவரத்து முன்னேற்றத் திட்டங்களும் தீட்டப்பெற்றுச் செயல்படுத்தப்பட்டன. மக்களை நேரில் சந்தித்து, அவர்தம் குறைகளைக் கேட்டறிந்து, ஆவன செய்ததன் மூலம் மக்களிடையே அரசாங்கத்தின்பால் நம்பிக்கையேற்பட வழிவகை செய்தார். இத்தகைய செயல்கள் அனைத்தும் தனிமனிதனின் செயல்களாகவே காணப்பட்டனவே தவிர, அவர் சார்ந்திருந்த கட்சியின் கொள்கைகளாகவோ, அல்லது அவரது இயக்கத்தின் கூட்டு முயற்சிகளாகவோ காணப்படவில்லை.

இத்தகைய மாபெரும் செயல்வீரர் 1957-ல் விமான விபத்தில் மாண்டார். இவருக்குப் பின்னர் குடியரசு தலைவராகப் பதவியேற்ற கார்லோஸ் பி. கார்சியா (Carlos. P. Garcia) என்பவர் மக்சாசேயின் செயல் திட்டங்களைப் பின்பற்றி மேலும் முன்னேற்றம் காண முயன்றார். எனினும் இவரது தனித்திறமைக் குறைவுகளால் மீண்டும் திறமையின்மையும், ஊழலும் நாட்டில் தலைதூக்கின. எனவே 1961ஆம் ஆண்டு நடந்த தேர்தலில் மகாபகல் (Macapagal) என்பவரும், பின்னர் 1965லும், 1969-ல் நடந்த தேர்தல்களில் பெர்டிணண்டு மார்கோஸ் (Ferdeinand Marcos) என்பவரும் குடியரசு தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

பிலிப்பைனின் மக்கள் தொகை 1969-ல் முப்பது மில்லியனுக் இருந்தது. இன்னும் இருபது ஆண்டுகளில் முப்பது மில்லியன் அறுபது மில்லியனுக உயரக் கூடிய நிலே இருக்கின்றது. இத்தகைய மக்கட் பெருக்கம் இதுவரை ஏற்பட்ட பொருளாதார முன்னேற் றத்தின் பயனே நாட்டுமக்கள் அறியாவண்ணம் தடைசெய்து வருகின்றது. சமுதாய அமைப்பிலும், இத்தகைய தடையற்ற மக்கள் பெருக்கத்தினுல் கொலே, கொள்ளே, போன்ற குற்றங்கள் மலிந்து கிடக்கின்றன. வேலேயில்லாத் திண்டாட்டம் நாளுக்கு நாள் பெருகிக் கொண்டே வருகின்றது. அமைதியற்ற சமு தாயச் சூழ்நிலே உருவாகி வருகின்றது. இத்தகைய அமைதியற்ற சூழ்நிலேயில் 'ஹுக்' இயக்கத்தினர் மீண்டும் புது வலிமை பெற்று வருகின்றனர். உயர்கல்வி பெற்றுள்ள இளேஞரிடையேயும், தொழிற் கல்வி பெற்றவர்களிடையேயும், அரசாங்கத்திடம் நம்பிக்கையற்று வெறுப்புத் தோன்றியிருக்கின்றது. இத்தகைய அரசியல் பதட்ட நிலேயில் குடியரசு தலேவராகப் பொறுப் பேற்றிருக்கும் மார்கோஸ், மக்களின் ஆதரவோடும், அரசியல் கட்சிகளின் எதிர்ப்புகளிடையேயும், பிலிப்பைனின் வளம்காணும் முயற்சியை மேற்கொண்டிருக்கின்ருர். இவரது வெற்றியையும், அமைதியினடிப்படையில் பிலிப்பைனேப் பொருளாதார, சமூக, முன்னேற்றத்தையும், உலகம் எதிர்பார்க்கின்றது. ஐரோப்பியர் களின் குடியேற்ற ஆதிக்கத்திலிருந்து விடுதலேயடைந்த ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளில் பொதுவாகக் காணப்படுகின்ற குழப்ப நிலேயே பிலிப்பைனிலும் காணப்படுகின்றது. இத்தகைய குழப்பங் களிலிருந்து, பிலிப்பைனே மீட்டு, முன்னேற்றப் பாதையில் நடத்திச் செல்லும் பணியை அரசியல் தலேவர்கள் மேற்கொண்டு ஓரளவுக்கு வெற்றியும் பெற்றுள்ளனர்.

இயல் ஒன்பது

# 1. ஜெனிவா மாநாடு-வியட்நாம் பிரச்சினை

தியன்-பியன்-பூ போர் முடியும் முன்னரே இந்தோசீனப் பிரச்சினைகளில் முடிவுகாணும் நோக்கத்துடன், ருஷியாவும் சீனாவும் முயற்சியெடுத்தன. பிரான்சும் ஐரோப்பிய மாநாடு ஒன்றினால் தான் இப் பிரச்சினைக்குத் தீர்வுகாண முடியும் என நம்பியது. இதன் விளைவாகவே ஜெனிவா மாநாடு கூட்டப்பட்டது. இம் மாநாடு 1954 ஆண்டு ஏப்பிரல் மாதம் 26ஆம் நாள் தொடங்கி, அதே ஆண்டு ஜூலை மாதம் 21ஆம் நாள் முடிவுற்றது.

பிரான்சு, வியட்மின்களுக்கிடையே நடந்த போரில் பிரெஞ்சுக்காரர்களுக்குத் தோல்வியேற்படுகின்ற நிலைமை ஏற்பட்டவுடன், பேச்சுவார்த்தைகளின் மூலம் முடிவுகாண, பிரான்சு முயன்றது. ருஷியாவும், சீனாவும் பேச்சுவார்த்தைகளைத் தொடங்கி நடத்த முன்வந்தன. இதன் விளைவாக ஜெனிவாவில் மாநாடு கூட்டப்பட்டது. இம் மாநாட்டில் செஞ்சீனாவின் பிரதிநிதிகள் வெளியுறவு அமைச்சர் சூ-யென்-லாய் தலைமையில் கலந்து கொண்டனர். ஐரோப்பாவில் நடைபெற்ற ஒரு மாநாட்டில் முதல்முறையாக சூ-யென்-லாய் கலந்து கொண்டார். செஞ்சீனாவின் பிரதிநிதிகள் கலந்து கொண்டாலும், அதைக் கொண்டு செஞ்சீனாவை அமெரிக்கா அங்கீகரித்து விட்டதாகக் கூற முடியாது என அமெரிக்கா தெளிவுபடுத்தியது. அமெரிக்க அரசு செயலர் டல்லஸ் இம் மாநாட்டில் கலந்து கொள்ளாவிட்டாலும் அமெரிக்கப் பிரதிநிதிகள் இதில் கலந்து கொண்டனர்.

இம் மாநாடு பல்வேறு பிரச்சினைகள் காரணமாக ஜூன் மாதத்தில் தேக்க நிலையை அடைந்தது. பேச்சுவார்த்தைகள்




இந்தோ-சீனா

முறிந்து விடக்கூடிய ஆபத்தும் இருந்தது. இந்நிலையில் மெண்டே பிரான்ஸ் (M. Mendes-France) என்ற பிரான்சின் புதிய பிரதமரின் தலையீட்டினுல் ஜெனிவா மாநாடு மீண்டும் ஊக்கம் பெற்றது. பதினெரு நாட்களுக்குள் ஒரு போர் நிறுத்த ஒப்பந்தம் ஏற்பட வில்லையானுல், தாம் பதவியை விட்டு விலகப்போவதாக மெண்டே-பிரான்ஸ் என்ற பிரெஞ்சுப் பிரதமர் வெளியிட்டார். எனவே ஜெனிவா மாநாடு, வரலாற்றுச் சிறப்புமிக்கதொரு முடிவை வெளியிட்டது.

இவ்வொப்பந்தப்படி அன்னம் நாட்டின் பழைய பேரரசின் தலைநகராக இருந்த ஹியு (Hue) நகரத்திற்கு வடக்கிலுள்ள 17° குறுங்கோட்டை ஒட்டி வியட்நாம் பிரிக்கப்பட்டது. இக் குறுங் கோட்டிற்கு வடக்கிலுள்ள பகுதி வியட்நாம் மக்கள் குடியரசு (Democratic Republic of Vietnam-DRVN) எனவும், தெற்கிலுள்ள பகுதி பிரெஞ்சுக்காரரின் ஆதரவிலுள்ள பாவ் தாய் பேரரசின் தலைமையில் உள்ள சுதந்திர அரசு என்றும் ஏற்றுக்கொள்ளப் பட்டது. இவ்வொப்பந்தத்தின் ஆருவது பிரிவின்படி (Article Six) வியட்நாம் பிரிவினை தாற்காலிகமாக ஏற்படுத்தப்பட்டது; எனவே இதையே நாட்டின் நிரந்தர எல்லையாக எடுத்துக் கொள்ளக் கூடாது: 1956ஆம் ஆண்டிற்குள் நாடு முழுவதிலும் முறையான பொதுத்தேர்தல் ஒன்றினை நடத்தி, நாட்டின் ஒருமைப்பாட்டை நிலைபெறச் செய்ய வேண்டும் என்றும் ஏற்பாடாயிற்று. லாவோஸ், கம்போடியா போன்ற நாடுகள் முழுச் சுதந்திரம் பெற்றன. அவை நடுநிலை நாடுகள் எனவும் அறிவிக்கப்பட்டது. போர் நிறுத்த ஒப்பந்தத்தை நிறைவேற்ற வேண்டி இந்தியாவின் தலைமையில், கனடாவையும், போலந்தை யும் கொண்ட உலக நாடுகளின் ஆணைக்குழு ஒன்றும் ஏற்படுத்தப் பட்டது.

பொதுவுடைமை நாடுகளும், மற்ற நாடுகளும் ஜெனிவா உடன்பாட்டை வரவேற்றன. சீனுவின் பெருமை உயர்ந்தது. தன் னுடைய நாட்டிற்கும், ஐரோப்பிய நாடுகளின் செல்வாக்கிற்குட் பட்ட நாட்டிற்கும் இடைநாடாக வட வியட்நாமைப் பெற்றது. பொதுவுடைமையல்லாத நாடுகளும், ஜெனிவா உடன்பாட்டினுல் நன்மைகள் பெற்றனர். வியட்நாமில் உடனே தேர்தல் நடத்தி யிருந்தால், கண்டிப்பாகப் பொதுவுடைமையினர் மாபெரும் வெற்றி யடைந்திருப்பர். மேலும் பொதுவுடைமைக் கொள்கையை ஏற்ற நாடுகளுக்கும், பொதுவுடைமையை ஏற்காத நாடுகளான பர்மா, தாய்லாந்து போன்ற நாடுகளுக்கும் இடையே, நடுநிலைமை நாடுகளான லாவோஸ், கம்போடியா போன்றவைகள் இருந்தன.

ஆனல் அமெரிக்கா மட்டிலும் இவ்வுடன்படிக்கையை வரவேற்க வில்லே; இருந்தபோதிலும், இந்த ஏற்பாட்டினே ஏற்றுக் கொள் வதைத் தவிர வேறு வழியேதுமில்லே. ஆனலும் இம் மாநாடு கூடு வதற்கு முன்பாகத் தென்கிழக்காசியப் பாதுகாப்பு நட்புடன்படிக் கையை ஏற்படுத்த முயன்று தோற்ற அமெரிக்கா, அதே உடன் படிக்கையை மீண்டும் ஏற்படுத்த முயன்றது. செப்டம்பர் (1954) மாதத்தில் மணிலாவில் கூடிய மாநாட்டில் எடுக்கப்பட்ட முடிவுகளின் விளேவாகத் 'தென்கிழக்காசிய ஒப்பந்த நிறுவனம்' (South-East-Asia Treaty Organisation-SEATO) ஏற்படுத்தப் பட்டது. இந்தியாவும், ஆசியாவிலுள்ள மற்றப் பெரும்பாலான நாடுகளும் இந் நிறுவனத்தின் உறுப்பினர்களாக மறுத்துவிட்டன. அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்சு, ஆஸ்திரேலியா, நியூசிலாந்து, பாகிஸ் தான், தாய்லாந்து, பிலிப்பைன்ஸ் ஆகிய நாடுகள் இதில் உறுப் பினர்களாகச் சேர்ந்தன. இந் நிறுவனத்தின் தலேமையிடமாக பாங்காக் (தாய்லாந்தின் தலேநகர்) தேர்ந்தெடுக்கப்பட்டது.

ஜெனிவா மாநாட்டிற்குப் பின்னர் வலிமையான தென்வியட் நாமிய அரசை ஏற்படுத்த அமெரிக்கா விரும்பியது. தென்வியட் நாமின் ஆட்சித் தலேவராக நியமனம் பெற்ற பாவ்தாய் பேரரசர் திறமையற்றவராகக் காணப்பட்டார். பிரெஞ்சுக்காரர்களின் கைப்பாவை எனக் கருதப்பட்ட இவர், நகோ-தின்-தயம் (Ngo-Dinh-Diem) என்பவரை தலேமையமைச்சராக நியமித்து விட்டு, பிரான்ஸ் சென்று விட்டார். அமெரிக்காவும் நகோ-தின்-தயத்திற்கு ஆதரவளிக்க முன்வந்தது. தெற்கு வியட்நாமில் அரசியல் குழப்பங்கள் மலிந்தன; கிளர்ச்சிகளும் ஏற்பட்டன. அமெரிக்கா ஏராளமான பொருளுதவி செய்தும், அரசியல் திறமையோ, பொருளாதாரத் தன்னிறைவோ தென்வியட்நாமில் ஏற்படவில்லே. ஆனல் அதே நேரத்தில் வட வியட்நாமியக் குடியரசு, டாக்டர் ஹோ-சி-மின்னின் தலேமையில் விரைந்து முன்னேறியது. தென்வியட்நாமில் இருந்த அரசியல் குழப்பங்களும் பதவிப் போட்டிகளும் மக்களிடையே வெறுப்பை ஏற்படுத்தின. இந் நிலேயில் பொதுத்தேர்தல்கள் நடத்துவதற்குத் தென்வியட் நாமியத் தலேமையமைச்சர் தயம் விரும்பவில்லே. அமெரிக்கர்களும் தேர்தல் நடத்துவதை ஆதரிக்கவில்லே. நாட்டின் ஒருமைப் பாட்டினே மீண்டும் ஏற்படுத்தும் நோக்கத்தில்தான் ஜெனிவா மாநாட்டில் பொதுத்தேர்தல் நடத்துவதாக ஏற்றுக் கொள்ளப் பட்டது. ஆனல் தெற்கு வியட்நாமிய அரசு பொதுத்தேர்தலே நடத்த விரும்பவில்லே. இதனல் ஜெனிவா மாநாட்டின் மிக முக்கியமான ஒப்பந்தம் மீறப்பட்டது. இதனல் அமைதியினடிப்

படையில் வியட்நாமிய அரசியல் குழப்பத்திற்கு ஒரு முடிவு காண முடியும் என்ற நம்பிக்கை தளர்ந்தது.

நகோ-தின்-தயம் தெற்கு வியட்நாமில் தமது ஆட்சியை உறுதிப்படுத்திக் கொண்டார். அமெரிக்கா அவருக்கு உறுதுணையாக நின்றது. தயம் அவர்களின் ஆட்சியின் குறைபாடுகளும், குழப்பங்களும், தெற்கு வியட்நாமில் அவருக்கு எதிர்ப்பணியை உருவாக்கின. 'தேசிய விடுதலை முன்னணி' அல்லது 'வியட்காங்' (National Liberation Front also known as Viet Cong) என்ற இயக்கம் டிசம்பர் 1961-ல் ஆரம்பிக்கப்பட்டது. வியட்காங் வீரர்கள் பொதுவுடைமைக் கட்சியைச் சேர்ந்தவர்கள்; வியட்மின்களோடு தொடர்பு கொண்டவர்கள். ஹனுய் அரசு இவர்களுக்கு முழு ஆதரவையும் உதவியையும் அளித்தது. வியட்காங்கினரின் முக்கிய நோக்கம் வியட்நாமிலிருந்து அந்நிய தலையீடுகளை—சிறப்பாக அமெரிக்காவின் தலையீட்டைத் தடுத்து வெளியேற்ற வேண்டும். அவர்களின் வேண்டுகோள், 'வியட்நாமை வியட்நாமியர்களிடமே விட்டுவிட்டு வெளியேறுங்கள், எங்கள் மக்களின் நலன்களை நாங்களே பாதுகாத்துக் கொள்வோம்' என்பதாகும். குழப்பம் நிறைந்த அரசியல் சூழ்நிலையில் வியட்காங்கினர் தெற்கு வியட்நாம் முழுவதிலும் பரவினர்; பல கிளர்ச்சிகளைத் தொடங்கினர்.

பொதுவுடைமையினரின் பிடியிலிருந்து தென்கிழக்காசிய நாடுகளைக் காப்பாற்ற வேண்டும் என்பதையே தங்களது முக்கிய நோக்கமாகக் கொண்ட அமெரிக்கர்கள், தென்வியட்நாமில் பொதுவுடைமையினரின் ஆட்சி ஏற்படுவதை விரும்பவில்லை. எனவே தென்வியட்நாம் அரசியலில் தலையிட்டனர். பொருளாதார உதவி, ஆயுத உதவி, இராணுவ ஆலோசனை என்று படிப்படியாக நுழைந்த அமெரிக்கர்கள் வியட்நாமிய அரசியலைக் கட்டுப்படுத்தி, வியட்காங்குகளை வேட்டையாடி, பொதுவுடைமையினரிடமிருந்து தெற்கு வியட்நாம் அரசைக் காப்பாற்றுகின்ற முழுப்பொறுப்பையும் ஏற்றனர். இவர்களுக்கு உதவியாகத் தென்கிழக்காசிய ஒப்பந்த நிறுவன நாடுகளும் (SEATO) அழைக்கப்பட்டன.

1962-63-ல் வியட்காங்கினரின் புரட்சி ஏற்பட்டது. இவ்வாண்டிற்குள் தெற்கு வியட்நாமின் பெரும்பகுதி வியட்காங்கினரின் பிடிக்குள் கொண்டுவரப்பட்டது. தயம் விமானத்தாக்குதல்களைத் தொடங்கி வியட்காங் படைகளை அழிக்க முயன்றார். சைகானில் கலகங்கள் ஏற்பட்டன. புத்த பிட்சுகள் தீக்குளித்தனர். இக் கலகங்களை அடக்க இயலாத தயம், தமது செல்வாக்கு

குறைந்து வருவதை உணர்ந்தார். ஏராளமானவர்கள் கைது செய்யப்பட்டனர். அதிகாரிகள் நீக்கப்பட்டனர். வியட்காங்கினரின் கலகங்களை அடக்கச் சைகான் நகருக்குள் படையினர் கொண்டுவரப்பட்டனர். சைகானுக்குள் நுழைந்த படையினர் தயம் அரசிற்கெதிரான இராணுவப் புரட்சியை ஏற்படுத்தி, தயம் அவர்களைச் சிறைப்படுத்தி, பின்னர் கொன்றனர் (1963). 1963-லிருந்து 1965ஆம் ஆண்டிற்குள் தென்வியட்நாமில் ஒன்பது அரசுகள் ஏற்படுத்தப்பட்டு வீழ்ந்தன. 1965-ல் தளபதி நகுயன் வான் தியு (General Nguyen Van Thieu) என்பவர் ஆட்சிப் பொறுப்பை ஏற்றார். இவரது தலைமையமைச்சராகப் புத்த மதத்தைச் சேர்ந்த விமானப்படைத் தளபதி நகுயன்-கோவ்-கி (Air Marshall Nguyen Cao Ky) பதவியேற்றார்.

இதற்கிடையில் அமெரிக்கப் போர்க்கப்பல்களை வடவியட்நாமியக் கடற்படையைச் சேர்ந்த தகரிப் படகுகள் (Gun Boats) தாக்கின. இதைக் கண்டிக்கும் வகையில் வடவியட்நாம் நகரங்களைக் குண்டு வீசித் தாக்கும்படி அமெரிக்க விமானப் படையினருக்கு அமெரிக்கக் குடியரசு தலைவர் ஜான்சன் ஆணையிட்டார். இத் தாக்குதல்கள் 1964ஆம் ஆண்டு ஆகஸ்டு 5ஆம் நாளிலிருந்து 9ஆம் நாள் வரை இடைவிடாது தொடர்ந்தது. பின்னர் 1965ஆம் ஆண்டு பிப்ரவரி யிலிருந்து விமானத்தாக்குதல் மீண்டும் தொடர்ந்தது. வியட்மின் வியட்காங்கினரின் மறைவிடங்களையும், ஆயுத, படையுதவி வழி களையும் தகர்க்கும் முறையில் இத் தாக்குதல்கள் தொடங்கப் பட்டன. கொரில்லா போராகத் தொடங்கிய இப் போர் மாபெரும் போராக மாறியது. அமெரிக்கப் படைவீரர்களின் எண்ணிக்கை ஆறு லட்சமாக உயர்ந்தது (1968). அமெரிக்கர்களின் பயங்கரத் தாக்குதல்களை எதிர்த்துப் போர் புரிகின்ற வடவியட்நாமியரின் போராற்றலையும், வீரத்தையும் கண்டு உலகமே வியந்தது. இத் தகைய வீரம் செறிந்த மக்களை எவ்வளவு தாக்குதல்கள் நடத்தினு லும் பணியச் செய்ய இயலாது என்பதனை அமெரிக்கர்களும் உணர்ந்தனர். 1968-ல் தொடங்கிய டெட் போரில் (Tet Offensive) வியட்காங்கினர் தோல்வியுற்றனர். இத்தோல்விக்குப் பின்னர் அமெரிக்காவும் விமானத்தாக்குதல்களை நிறுத்தி, சமாதானப் பேச்சுவார்த்தைகள் தொடங்க விழைந்தது. இதன் விளைவாக பாரிசில் சமாதானப் பேச்சு வார்த்தைகள் தொடங்கின (Jan. 19, 1969-Paris Conference).

### பாரிஸ் சமாதான மாநாடு

1969-ல் தொடங்கப்பட்ட இம் மாநாடு 1973 வரை நடை பெற்றது. இப் பேச்சுவார்த்தைகளின்போது அமெரிக்கா படிப்

படியாகத் தெற்குவியட்நாமிலிருந்து வெளியேறுவதாக வாக்குறுதி யளித்தது. இருப்பினும் தெற்குவியட்நாம் அரசின் தலைவரான ந்குயன் வான் தியுவிற்கும், தெற்கு வியட்நாமில் இருந்த வியட் காங்கினரின் அரசுக்குமிடையே கருத்து உடன்பாடு ஏற்படவில்லை. இப் பேச்சுவார்த்தைகளை விரைவில் முடிவுக்குக் கொண்டுவர வேண்டும் என்ற எண்ணத்தில், இருசாராரையும் அச்சுறுத்த வேண்டி, அமெரிக்கா மீண்டும் பயங்கரமான விமானத்தாக்குதலை வடக்கு வியட்நாமுக்கு எதிராகத் துவங்கியது. இதற்கிடையில் அமெரிக்கக் குடியரசு தலைவர் நிக்சனின் பிரதிநிதியாக வந்த டாக்டர் கிசிங்கர் போரை முடிவுக்குக் கொண்டுவர முழு முயற்சி யுடன் ஈடுபட்டார். அவரது இடைவிடாத முயற்சிகளின் விளை வாக ஜனவரி, 27, 1973-ல் பாரிசில் சமாதான உடன்படிக்கை கையெழுத்தாயிற்று. வடவியட்நாம் குடியரசும், அமெரிக்காவும் கையொப்பமிட்டனர்.

இவ்வொப்பந்தத்தின் படி போர் ஓய்வு ஏற்பட்ட அறுபது நாள்களுக்குள் அமெரிக்கப்படைகள் வியட்நாமிலிருந்து வெளியேற வேண்டும். அமெரிக்க போர்க் கைதிகள் அனைவரையும் ஹனுய் அரசு, அதே அறுபது நாள்களுக்குள் விடுதலை செய்ய வேண்டும். சம்மந்தப்பட்டநாடுகள் அனைத்தும் கூடி இப் போர் நிறுத்த ஒப்பந்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும். கானடா, ஹங்கேரி, போலந்து, இந்தோனேஷியா ஆகிய நான்கு நாடுகளின் பிரதிநிதி கள் அடங்கிய குழு, இவ்வொப்பந்தங்கள் நிறைவேற்றப்படுவதைக் கண்காணிக்கும். வியட்நாமின் எதிர்காலம் அனைத்துலக நாடுகளின் முன்னிலையில் நடத்தப்படுகின்ற பொதுத்தேர்தல் மூலம் நிர்ணயிக் கப்படும். இரு நாடுகளுக்கிடையே இருக்கின்ற பிரச்சினைகளையும், நாட்டின் ஒருமைப்பாட்டினைப் பற்றியும், வடக்கு, தெற்கு வியட் நாமிய அரசுகள், அந்நியரின் தலையீடின்றித் தங்களுக்குள்ளாகவே பேச்சுவார்த்தைகளின் மூலம் தீர்வுகாண வேண்டும். போரின் அழிவுகளை ஈடுகட்டும் வகையில், வடவியட்நாமிற்கும், இந்தோசீன நாடுகளுக்கும் அமெரிக்கா உதவியளிக்கும். லாவோஸ், கம்போடியா நாடுகளிலிருந்தும் அந்நியநாட்டுப் படைகள் வெளியேற்றப்படும்.

பாரிஸ் சமாதான ஒப்பந்தத்தை நோக்கும்போது, ஜெனிவா மாநாட்டின் (1954) முடிவுகளே பெரும்பாலும் ஏற்றுக்கொள்ளப் பட்டிருப்பது விளங்கும். அப்படியென்றால் இவ்வளவு பயங்கர மான போர் ஏன் தொடர்ந்து நடந்தது என்ற வினு எழுகிறது. இப் போரின் ஆரம்பத்தில் பொதுவுடைமைக் கொள்கையின் வளர்ச்சியைத் தடுப்பதே அமெரிக்காவின் நோக்கமாக இருந்தது. ஆனல் சீனு, ருஷிய நாடுகளுடன் அமெரிக்க உறவு முறையில்

ஏற்பட்ட மாறுதல்கள், அமெரிக்காவின் முந்தைய நோக்கத்தினை மாற்றிவிட்டன. சீனு, ருஷியா, அமெரிக்கா இந் நாடுகளின் உறவு முறைகள் ஓரளவுக்குச் சீரடைந்து வந்தது; வியட்நாமியப் போரின் போக்கில் ஒரு நல்ல திருப்பு முனையாக அமைந்தது. அத்துடன் வியட்நாமிய மக்களின் தேசிய உணர்வையும், தங்களின் தேசிய உணர்வைக் காப்பாற்றிக்கொள்ள எத்தகைய தியாகத்தினையும் செய்கின்ற உயர்ந்த மனப்பாங்கையும் உலக நாடுகள் உணர்ந்து வியக்கின்றன. வடவியட்நாமியர்களின் தீவிர தேசிய உணர்வு தான் அவர்களுடைய மிகப்பெரிய மறைமுக சக்தியாக இருந்து, மாபெரும் உலக வல்லரசின் கோரத் தாக்குதல்களை தாங்கிக் கொண்டு, எதிர்த்துப் போரிடும் உள்ளத்திண்மையை உருவாக்கிக் கொடுத்தது என்றும் கருத இடமுண்டு.

பாரிஸ் சமாதான உடன்படிக்கையின் முடிவுகளின்படி அமெரிக்கா வெளியேறினும், தெற்கு வியட்நாம் அமெரிக்கரின் ஆயுத உதவியைப் பெற்றிருந்தது. தெற்குவியட்நாமின் தாற்காலிக புரட்சி அரசு (PRG), தெற்கு வியட்நாமியக் குடியரசு, வட வியட்நாமிய அரசு ஆகிய இம் மூன்றும் பாரிஸ் சமாதானப் பேச்சு வார்த்தைகளின் பின்னரும், தங்களது அரசியல் பிரச்சினைகளைத் தீர்த்துக்கொள்ள இயலவில்லை. தெற்கு வியட்நாம் அமெரிக்க ஆயுதங்களைக்கொண்டு வெற்றிபெற முடியும் என நம்பியிருந்தது. ஆனால் தெற்கு வியட்நாமியரின் முயற்சி படுதோல்வியில் முடிந்தது. 1975ஆம் ஆண்டின் ஆரம்பத்திலிருந்தே ஒவ்வொரு மாநிலமாக வியட்காங்கினர் பிடித்துகொண்டே வந்தனர். ஏப்பிரல் 30ஆம் நாள் தெற்கு வியட்நாமின் தலைநகரான சைகான் நகரும் வீழ்ந்தது. தாற்காலிகப் புரட்சி அரசு (PRG) தென்வியட்நாமின் அரசியல் அதிகாரத்தைப் பெற்றிருக்கின்றது. இவ்வரசைப் பொதுவுடைமை நாடுகள் உட்பட பல நாடுகள் அங்கீகாரம் செய்துள்ளன. வியட் நாம் ஒன்றாக இணைகின்ற வாய்ப்பு ஏற்பட்டுள்ளதாகக் கருதப்படு கின்றது.

முப்பத்தோராண்டு காலமாக நடந்த இப் போர் முடிவுற்றது. மாபெரும் வல்லரசாகிய அமெரிக்க ஐக்கிய நாடுகளின் நேரடித் தலையீட்டையும் அளவிறந்த வளத்தையும் எதிர்க்கின்ற வலிமை பெற்ற வியட்நாமைக் கண்டு உலகமே வியந்தது. அமெரிக்கா இதுவரை, 1,50,000 மில்லியன் டாலர்களை செலவிட்டுள்ளதாகக் கணக்கிடப்படுகின்றது. 56,000 அமெரிக்க வீரர்கள் வியட்நாமில் உயிரிழந்திருக்கின்றனர். இரண்டாம் உலகப்போரில் வீசிய வெடி குண்டுகளைவிட ஒன்றரைப் பங்கு அதிகமான வெடிகுண்டுகள் வியட் நாமில் மட்டும் வீசப்பட்டிருக்கின்றன. இன்னும், விமானங்கள்

மற்ற இயந்திர சாதனங்கள் கணக்கில்லாது வியட்நாம் போரில் அழிந்திருக்கின்றன. இவ்வளவு பொருள், ஆட்சேதம் ஏற்பட்டிருந் தாலும் அமெரிக்கா மிகச் சிறிய வியட்நாமிடம் தோற்றிருக் கின்றது என்றே கூறவேண்டும். போரின் இறுதிக் கட்டத்தில் அமெரிக்கா எப்படியாவது வியட்நாமைவிட்டு வெளியேறினுல் போதும் என்றெண்ணுகின்ற துயரமான நிலைக்கு ஆளாக்கப் பட்டது. வடக்கு வியட்நாமியரின் இத்தகைய மாபெரும் வெற்றிக்குக் காரணம் ருஷியாவோ, அல்லது சீனுவோ அளித்த ஆதரவும் உதவியுமட்டுமன்று, வியட்நாமியரின் உள்ளத்திலே எழுந்த தேசிய உணர்ச்சியேயாகும் என்றுணரும்போது, தேசிய எழுச்சியின் பெருமையைக் கூறவும் முடியுமோ.

போர் முடிந்துவிட்ட நிலையில் எண்ணற்ற பிரச்சினைகள் தோன்றியுள்ளன. அத்தகைய பிரச்சினைகள் அனைத்தையும் வென்று, வியட்நாமிய மக்கள் அமைதியினடிப்படையில் வளம் காண, வல்லரசுகளும், ஏனைய வளர்ந்து விட்ட நாடுகளும் தமது பகையுணர்வினைக் கூடக் கருத்தில் கொள்ளாது, மனிதாபிமான உணர்வுடன் செயல்படும் என்று கருதலாம்.

# 2. லாவோஸ்–கம்போடியா

## லாவோஸ்

தாய்லாந்து, பர்மா, சீனா, வடவியட்நாம், தென் வியட்நாம், கம்போடியா ஆகிய நாடுகளால் சூழப்பட்ட சிறிய நாடே லாவோஸ் ஆகும். இந் நாடு 1954ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் 20ஆம் நாளன்று கையெழுத்திடப்பட்ட ஜெனிவா மாநாட்டு ஒப்பந்தங்களின்படி, நடுநிலைமை வகிக்கும் சுதந்திர நாடாக அறிவிக்கப்பட்டது. இவ்வாறு பிரெஞ்சுக்காரர்களின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை அடைந்த லாவோஸ் வல்லரசுகளுக்கிடையே நடக்கும் கெடுபிடிப் போரில் சிக்கித்தவிக்கின்ற பரிதாபமான நிலையை அடைந்துள்ளது.

லாவோசின் துயரமான நிலைக்கு மிகமுக்கியக் காரணம் அதனுடைய புவியியல் அமைப்பேயாகும். வடக்கில் யுனான் என்ற சீன மாநிலத்தாலும், வடகிழக்கு, கிழக்கில் வடவியட்நாமாலும், தெற்கில் தென்வியட்நாமாலும், மேற்கில் பர்மாவாலும் சூழப்பட்டிருக்கின்றது. அதுமட்டுமன்றி இந்தோ-சீனாவில் அமெரிக்க ஆதரவு நாடுகளான கம்போடியா, பர்மா ஆகிய நாடுகளை, பொதுவுடைமை நாடுகளான வடவியட்நாம், செஞ்சீனா ஆகியவைகளிடமிருந்து பிரிக்கின்ற இடைப்பட்ட நாடாக அமைந்திருக்கின்றது. இந் நாட்டினைப் பொதுவுடைமை நாடுகள் கைப்பற்றுமானால் இந்தோசீனா முழுவதிலும், பின்னர் தென்கிழக்காசியா முழுவதிலும்கூடப் பொதுவுடைமையாதிக்கம் ஏற்பட்டு நிலைத்துவிடும் என அமெரிக்கா கருதுகின்றது. அதுமட்டுமன்றி ஜெனிவா மாநாட்டின் தீர்மானங்களுக்கு எதிராக வடவியட்நாம் பல காரியங்களைச் செய்கின்றது. வடவியட்நாம் தன் படைகளை லாவோசில் நிறுத்தியிருக்கின்றது. பயிற்சியளிக்கப்பட்ட படையினரை பதட்லாவ் படைகளுக்குக் கொடுத்து உதவுகின்றது. சில சமயங்களில் பெரிய படைகளை அனுப்பி லாவோசின் அரசு

படைகளைத் தாக்குகின்றது. தென் வியாட்நாமிற்குச் செல்லும் பாதைகளைக் கண்காணிக்கின்றது. தென் வியட்நாமிலிருக்கும் வியட்காங் கொரில்லாக்களுக்கு படை வீரர்களையும் பல படைக் கலன்களையும் லாவோஸ் மூலமாக அனுப்பிவைக்கின்றது. அனைத் திற்கும் மேலாக, லாவோசிலிருந்து இந்தோசீனு முழுவதிலும் தனது ஆதிக்கத்தினைப் பரப்பச் செஞ்சீனு ஆவலுடன் காத்துக் கொண்டிருக்கின்றது. இவைகளை யுணர்ந்த அமெரிக்கா செஞ் சீனுவின் எண்ணங்களை முறியடித்து, பொதுவுடைமைக் கருத்துகள் பரவுவதைத்தடுத்து, பாராளுமன்ற முறை மக்களாட்சி இந்தோ சீன நாடுகளில் ஏற்படுத்த வேண்டுமென அமெரிக்கா விரும்பு கிறது. அமெரிக்கா, சீனு, ருஷியா ஆகிய வல்லரசுகளின் ஆதிக்கப் போட்டிக்கு இந்தோ-சீன நாடுகள் பலியாகி வருகின்றன.

லாவோசில் ஆரம்பத்திலிருந்தே பொதுவுடைமையும் தேசி யமும் கலந்தே வளர்ச்சியடைந்தன. அந்நியராட்சியை உறுதி யுடன் எதிர்த்துப் போராடியவர்கள் பொதுவுடைமையினரே. எனவே சுதந்திரம் பெற்றபின்னர் ஏற்பட்ட அரசுகளில் பொது வுடைமையினர் அதிகச் செல்வாக்குப் பெற விரும்பினர். இவர்கள் லாவோசில் பதட்லாவ் (Pathet Lao) என அழைக்கப்படுகின்றனர். பதட்லாவின் தலைவராக இளவரசர் சுபனுவாங் (Prince Souphano Vong) விளங்குகிறுர். இவருக்குச் சிவப்பு இளவரசர் (Red Prince) என்ற செல்லப் பெயரும் உண்டு. பொதுவுடைமை யினரை எதிர்க்கின்ற லாவோசிய நடுநிலைக் கட்சியின் தலைவராக இளவரசர் சுவன்ன பூமா (Prince Sovonna Phouma) என்பவர் விளங்குகிறுர். இவர்கள் இருவரும் ஒன்றுவிட்ட சகோதரர்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது. பதட்லாவ் கட்சியினர் தங்களைத் தேசியவாதிகள் எனக் கூறிக்கொண்டு அரசாங்கத்தை எதிர்த்துப் போர் புரிகின்றனர். பதட்லாவ் படைகளுக்கு வடவியட்நாமும், அதன் வழியாகச் செஞ்சீனுவும் பெரும் உதவியளிக்கின்றது. ஆயுதங்கள், மற்றும் படைக்கலன்கள், கொரில்லாப் போர் முறையில் தேர்ச்சி பெற்ற வீரர்கள் ஆகியோரை வடவியட்நாம் மூலமாக லாவோசுக்கு அனுப்புகின்றது. பதட்லாவ் படைகள் வெற்றிபெற்றுல் லாவோஸ் பொதுவுடைமை நாடாக மாறும். அது சீனுவிற்கு மாபெரும் வெற்றியாக அமையும். தென்கிழக் காசிய நாடுகளில் பொதுவுடைமைக் கொள்கைகள் பரவுவதைத் தடை செய்வதையே தனது முழு நோக்கமாகக் கொண்ட அமெரிக்கா வலதுசாரியினருக்கு உதவி செய்கின்றது. இவ்வுத விக்காக ஆண்டுதோறும் ஏறத்தாழ 52 மில்லியன் டாலர்களை அமெரிக்கா செலவிடுகின்றது. லாவோசில் நடக்கும் உள்நாட்டுப் போரை நிறுத்தி, அமைதியை நிலைநாட்டிப் பொருளாதார முன்

னேற்றம் ஏற்படுத்த வேண்டும் என்ற எண்ணத்தில் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. 1961ஆம் ஆண்டில் ருஷிய பிரதமர் குருச்சேவும், அமெரிக்க குடியரசு தலைவர் கென்னடியும் ஜெனி வாவில் கூடி நடுநிலைமை வகிக்கும் சுதந்திர நாடாக லாவோஸ் இருக்க வேண்டுமெனத் தீர்மானித்தனர். 1962ஆம் ஆண்டு இங்கிலாந்து, ருஷியா ஆகியவைகளின் தலைமையில் கூடிய பதினுன்கு நாடுகளின் மாநாட்டுத் தீர்மானப்படி, லாவோசில் போரிலீடுபட்ட மூன்று பிரிவுகளின் (பதட்லாவோ, நடுநிலை, வலது சாரியினர்) பிரதிநிதிகளும் அடங்கிய ஒரு கூட்டு மந்திரி சபை அமைப்பதென முடிவு செய்யப்பட்டது. உள்நாட்டுப் போர் நின்றது. ஆயினும் நிலையான அமைதி ஏற்படவில்லை. 1964-ல் மீண்டும் போர் தொடங்கியது. பதட்லாவ் படைகள் கூட்டணி அரசை ஒழிக்கும் முயற்சியில் போரைத் துவக்கின. 1969-70-ல் பதட்லாவின் தாக்குதல்கள் மிகவும் அதிகமாயின. பதட்லாவ் படையினருக்கு ஆயுதம் மற்றும் படையுதவி வருகின்ற 'ஹோ-சி-மின் வழி' என்ற வழியை அடைத்து, அப் பகுதிகளை மீட்க வேண்டும் என்ற எண்ணத்தில் லாவோசின் அரசு படைகள் போரிட்டன. அரசின் படைகளுக்கு உதவியாகவும், அரசை பதட்லாவிடமிருந்து காப்பாற்றவும், 'ஹோ-சி-மின் வழி', மூல மாக வருகின்ற உதவியைத் தடுக்கவும், அமெரிக்கப் போர்விமானங் கள் ஹோ-சி-மின் வழியைக் குண்டுமாரி பொழிந்து தாக்கின. போர் தொடர்ந்து நடைபெற்றது. பதட்லாவிற்கு உதவியாக அனுப்புவதற்கு 50,000 தேர்ச்சிபெற்ற வீரர்களைக் கொண்ட வடவியநாம் படை தயாராக நின்றது. இந் நிலையில் லாவோசின் உள்நாட்டுப் போர் வியட்நாம்போருடன் ஒன்றிக் கலந்து விடு கின்றது. வியட்நாம் போர் முடிவுற்ருல் தவிர, இந்தோ-சீன நாடு களில் அமைதியேற்படுவது என்பது கேள்விக்குரியதே. அமெரிக்கா தனது வலிமையைக் காட்டி வடவியட்நாமியரைப் பணிய வைக்க முயற்சி செய்து வந்தது. அமெரிக்காவின் முயற்சிகள் தோல்வி யடைந்தன. 1973ஆம் ஆண்டிற்குப் பின்னர் அமெரிக்கா சிறுகச் சிறுகத் தெற்கு வியட்நாமிலிருந்து வெளியேறியது. தெற்கு வியட் நாம் முழுவதையும் வியட்காங் படையினர் பிடித்து, தாற்காலிக புரட்சி அரசை (Provisional Revolutionary Government-PRG) ஏற் படுத்திவிட்டனர். வியட்நாம் போர் 1975ஆம் ஆண்டு ஏப்ரல் 30ஆம் நாள் முடிவுற்றது.

வியட்நாம் போருடன் பின்னிப் பிணைந்து கிடந்த லாவோஸ் பிரச்சினையிலும் இனி அமைதி காணமுடியும் என உலகம் கருது கின்றது. லாவோசில் பதட்லாவ் படைகள் வெற்றிபெற்று விட்டனர், அமெரிக்கர்கள் வெளியேற வேண்டுமென லாவோஸ்

மாணவர்கள் கலகம் செய்து வருகின்றனர். அமெரிக்கர்களும் வெளியேற இணங்கிவிட்டனர். லாவோசின் எதிர்காலம் வியட் நாம், கம்போடியப் பொதுவுடைமை அரசுகளுடன் கட்டுண்டுகிடக் கின்றது. பொதுவுடைமை நாடுகளின் ஆதரவுடன் இனியாவது லாவோசில் அமைதியான முன்னேற்றம் ஏற்படுமா என்பது இன்னமும் கேள்விக்குறியாகவே உள்ளது.

## கம்போடியா

இந்தோ - சீனுவின் பெரும் பகுதியை ஆண்டுவந்த 'கமர் பேரரசின் உறைவிடமாகப் பண்டைய காலத்தில் விளங்கிய கம்போடியா, 1864ஆம் ஆண்டு பிரெஞ்சு ஆதிக்கத்தின்கீழ் வந்தது. விவசாயத்தை அடிப்படையாகக் கொண்ட பொருளா தாரத்தைக் கொண்டிருந்தது கம்போடியா. அயல்நாட்டு வர்த் தகமும் மிகவும் அதிகமான அளவில் இருந்ததாகக் கூறமுடியாது. பிரெஞ்சுக்காரர்களின் ஆட்சியின்போதும் கம்போடிய மன்னரே பெயரளவுக்கு ஆட்சித் தலைமையேற்றிருந்தார். அதிகாரமனைத்தும் பிரெஞ்சு நிலையர்களிடம் கிடந்தன. அந் நாடு 1949-லிருந்து 1954-வரை பிரெஞ்சு யூனியனின் உறுப்பு நாடாக இருந்தது. 1954-ல் மன்னர் நரோதம் ஷிகானுக்கின் (Norodom Shihanouk) முயற்சியால் கம்போடியா விடுதலை அடைந்தது. 1954-ல் ஜெனிவா மாநாட்டு ஒப்பந்தங்களின்படி கம்போடியா நடுநிலைமை வகிக்கும் சுதந்திர நாடாக அறிவிக்கப்பட்டது. மன்னர் நரோதம் ஷிகானுக் முழு உரிமைபெற்ற சுதந்திர அரசராகப் பதவியேற்றார். ஆனால் 1955-ல் தமது அரச பதவியை உதறிவிட்டுக் கட்சி அரசியலில் காலடி எடுத்துவைத்தார். இவர், 'சாங்கும்' (Sankum-மக்களின் சோசலிஸ சமுதாயம்) என்ற கட்சியைத் துவக்கினார். இக் கட்சியின் கொள்கைகளாகப் பாராளுமன்ற முறை அரசு, நிலையான உறுதிவாய்ந்த மைய அரசு, வட்டார அரசுகள் போன்ற வைகள் அறிவிக்கப்பட்டன. 1955-ல் நடந்த தேர்தலில் சட்டசபை யிலிருந்த 61 இடங்களையும் ஷிகானுக்கின் 'சாங்கும்' கட்சியே கைப்பற்றியது. நரோதம் ஷிகானுக் தலைமையமைச்சராகப் பதவியேற்றார். நடுநிலைமை நாடாக இருப்பதால் அமெரிக்காவிட மிருந்தும் ருஷியாவிடமிருந்தும் கம்போடியா உதவி பெறுகின்றது. இவ்விரண்டு நாடுகளும் தங்களின் கொள்கைகளைக் கம்போடியா ஏற்றுக்கொள்ளும் என்ற நம்பிக்கையில் உதவி புரிந்தன.

ஆரம்ப நிலையில் ஷிகானுக் பொதுவுடைமை எதிர்ப்பு எண்ணங்களையே கொண்டிருந்தார். அதே நேரத்தில் அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற மேலைநாடுகள் இந்தோ சீன அரசியலில் தலையிடுவதையும் அச்சத்துடன் நோக்கியிருந்தார். வல்லரசுகளின்

கொள்கைப் போராட்டங்களில் சிக்கித் தவிக்கும் வியட்நாம், லாவோஸ் போன்ற நாடுகளை அண்டை நாடாகக் கொண்டிருந்த தால் எந்நிலையிலும் தம் நாட்டிலும் போராட்டங்கள் ஏற்படக் கூடும் என்பதை உணர்ந்திருந்தார். இந் நிலையில் கம்போடியாவில் ஷிகானுக்கின் அரசுக்கு எதிர்ப்பியக்கங்கள் தோன்றின. இந்த எதிர்ப்பியக்கங்களின் தலைமையிடம் தெற்கு வியட்நாமிலும் தாய் லாந்திலும் இருந்தது. இவ்விரண்டு நாடுகளும் அமெரிக்காவின் முழு ஆதரவு பெற்ற நாடுகள். எனவே தம்முடைய எதிர்ப்பியக் கங்கள் தெற்கு வியட்நாம், தாய்லாந்தின் காப்பாளராக இருக்கின்ற அமெரிக்கர்களால் தூண்டிவிடப்படுகின்றது என்று நம்பினார். இதனால் கம்போடியா—அமெரிக்க உறவில் இடர்ப் பாடுகள் தோன்றின. அமெரிக்க உறவைத் துண்டித்துக்கொண்ட ஷிகானுக், அமெரிக்க உதவியையும் மறுத்தார் (35 மில்லியன் டாலர்கள்). அமெரிக்காவிலிருந்த கம்போடியத் தூதரகத்தைக் கூடத் திரும்ப அழைத்துக்கொண்டார். அமெரிக்காவின் உறவை துண்டித்துக் கொண்ட ஷிகானுக்கை செஞ்சீனவும், வடவியட் நாமும் இரு கை நீட்டி வரவேற்றன; ஆதரவு அளிப்பதாக ஆசை வார்த்தைகள் கூறின. ஷிகானுக் செஞ்சீன, ஹனுய் அரசுகளுடன் உறவுகொண்டார். ஷிகானுக் பொதுவுடைமையரசுகளுடன் ஏற்படுத்திக் கொண்டிருந்த உறவு முறைகளைக் கண்ட கம்போடிய இளைஞர்கள் ஷிகானுக்கிற்கு எதிர்ப்பியக்கத்தைத் தொடங்கினர்.

செஞ்சீன, ஹனுய் அரசுகளுடன் கொண்ட உறவின் விளைவாக, வடவியட்நாம் படைகளும், வியட்காங்குகளும், கம்போடியா வழியாகத் தெற்குவியட்நாமைத் தாக்க ஆரம்பித்தனர். இவ்வாறு தங்களுடைய நாட்டின் வழியாக, மற்ற நாடுகளின்மீது தாக்குதல் நடத்துவதைக் கம்போடிய மக்கள் எதிர்த்தனர். ஷிகானுக்கும் அத்தகைய நிலையை எதிர்பார்க்கவில்லை. எனவே கம்போடியா விலிருந்து வடவியட்நாம் படைகளை வெளியேற்றும் முயற்சிகளில் இறங்கினர். இம் முயற்சிகளைச் செயல்படுத்தும் வகையில் ஐரோப் பிய நாடுகளுக்கும், பின்னர் ருஷியாவிற்கும் சென்று, ருஷியாவின் தலையீட்டினல் வடவியட்நாமியரை கம்போடியாவிலிருந்து வெளி யேற்ற முனைந்தார் (1970). இதற்கிடையில் கம்போடியாவில் ஷிகானுக்குக்கு எதிரான கலகங்களை மாணவர்கள் தொடங்கினர். வடவியட்நாம் தூதரகத்தின் முன்பும், வியட்காங் அலுவலகங் களின் முன்பும் மாபெரும் போராட்டங்களை ஏற்படுத்தினர். போராட்டங்களும் கலகங்களும் அதிகரித்தபோது, தளபதி லான் நால் (Gen. Lon Nol) என்பவரின் தலைமையில் புரட்சி ஏற்பட்டது. அமைதியேற்படுத்தும் முயற்சியில் அயல்நாட்டுப் பயணத்தில் இருந்த நரோதம் ஷிகானுக் பதவி நீக்கம் செய்யப்பட்டார். புதிய

கம்போடியக் குடியரசு ஏற்படுத்தப்பட்டது. தளபதி லான் நால் தாய்லாந்துடனும், தெற்கு வியட்நாமுடன் நெருங்கிய உறவு கொண்டு, ஷிகானுக் பொதுவுடைமையினரின் கைப்பாவையாகச் செயலாற்றினுர் என்றும் அறிவித்தார். இப் புதிய அரசும் எதிர் பார்த்த அளவுக்கு வரவேற்பைப் பெறவில்லை. ஏராளமான மாணவர்களும் தொழிலாளர்களும் தளபதி லான் நாலின் அரசுக்கு எதிரானப் புரட்சிகளில் ஈடுபட்டனர், வெளிநாட்டுப் பயணத்தை முடித்துக் கொண்ட ஷிகானுக் பீகிங் சென்று, அங்கு தம்முடைய கம்போடிய அரசை ஏற்படுத்தினுர். பீகிங்கில் இருந்து கொண்டு கம்போடியாவில் லான் நாலின் அரசுக்கும் அவரது ஆதரவாளர்களான அமெரிக்க, தெற்குவியட்நாமிய எதிர்ப்பியக்கங்களை ஊக்குவித்தார். இவருடைய ஆதரவாளர்கள் 'சிவப்பு கமர்' (Red Khmer) அல்லது கமர் ரூஜ் (Khmer Rouge) என அழைக்கப்பட்டனர். இவர்களுக்கு உதவியாக வடவியட் நாம் மூலமாகச் செஞ்சீனு உதவியளித்தது. கம்போடியாவில் உள்நாட்டுப் போர் தொடங்கியது. 1970-ல் தொடங்கிய இப் போர் 1975, ஏப்ரலில் முடிவுற்றது. கம்போடியாவின் தலைநகரான பினும் பென் நகர் (Phnom Penh) மூன்றரை மாத கால முற்றுகைக் கும் பின்னர் ஏப்பிரல் 17ஆம் நாள் (1975) வீழ்ந்தது. கம் போடியத் தலைநகர் கமர் ரூஜ் படைகளின் வசமானது. தளபதி லான் நால் வெளியேறிவிட்டார். பல தலைவர்கள் பிடிபட்டுத் தூக்கிலிடப்பட்டனர். ஐந்து ஆண்டுக்கால உள்நாட்டுப் போரில் கிட்டத்தட்ட ஒரு மில்லியன் மக்கள் (வீரர்கள் மற்றவர்கள் உட்பட) உயிரிழந்திருப்பார்கள் எனக் கணக்கிடப்படுகின்றது.

கமர் ரூஜ் படைகளின் மாபெரும் வெற்றியைக் கேட்ட ஷிகானுக் தம்முடைய பெருமகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண் டார். அவரே கம்போடியா திரும்பி அரசின் தலைமையேற்பார் எனக் கருதப்படுகிறது. செந்நிறமாக மாறிவிட்ட கம்போடியா, வியட்நாம், லாவோஸ் பகுதிகள் பொதுவுடைமையினரின் மாபெரும் வெற்றிச் சின்னங்களாகத் தென்படுகின்றன. இவ் வெற்றியின் பின்னர் காணப்படுகின்ற மாபெரும் பிரச்சினைகள், மக்கள் மறுவாழ்வு, போரினுல் ஏற்பட்ட அழிவுகளைச் சரிக்கட்டுதல், நிலையான குழப்பமற்ற அரசியல் சூழ்நிலை, இவையனைத்திற்கு மேலாக அமைதியை நிலைநாட்டுதல் போன்ற எண்ணற்ற பிரச்சினை கள் இந்தோ-சீன நாடுகளை எதிர்நோக்கியிருக்கின்றன. போர் விமானங்களின் ஓசையும், வெடிகுண்டுகளின் பயங்கர ஒலியும், அழிவுகளிலினின்றும் எழுகின்ற அவல ஒலியும், பீரங்கி, துப்பாக்கிகளின் ஓய்வற்ற குரலும் இப்பொழுது ஓய்வு பெற்றிருக் கின்றன. மக்களும் நிம்மதிப் பெருமூச்சு விடுகின்றனர். அவர் களின் மகிழ்ச்சி ஆரவாரம் எப்போது என்பது கேள்விக்குறியாகவே உள்ளது.

# 3. மலேசியா-சிங்கப்பூர் உருவாதல்

## மலேசியா

1957ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் 31ஆம் நாள் மலேயா விடுதலை அடைந்தது. மலேயாக் கூட்டாட்சி உருவானது. 1948ஆம் ஆண்டு உருவாக்கப்பட்ட அரசியல் சட்டம் ஒரு சில மாறுதல்களுடன் செயல்படுத்தப்பட்டது. தேர்ந்தெடுக்கப்பட்ட இரு சபைகள் (செனேட், பிரதிநிதிகள் சபை) கொண்ட பாராளு மன்றமும், தலைமை அமைச்சரின் தலைமையிலான மந்திரி சபையும் ஏற்படுத்தப்பட்டது. துங்கு அப்துல் ரகிமான் முதல் மலேயத் தலைமையமைச்சராகப் பதவியேற்றார். இங்கிலாந்துடன் பாது காப்பு மற்றும் தேவையான உதவிகளைப்பெறுவதற்கான ஒப்பந்தம் ஒன்றும் செய்து கொள்ளப்பட்டது. மலேயப் பொதுவுடைமை யினரின் கலகங்கள் அடக்கப்பட்டு 1960-க்குள் மலேயாவில் அமைதி ஏற்படுத்தப்பட்டது.

சுதந்திர மலேயா அரசு தென்கிழக்காசியப் பாதுகாப்பு ஒப்பந் தத்திலின்றும் (SEATO) விலகி நின்றது. அதேபோல சீனா மற்றும் பொதுவுடைமை நாடுகளுடனும் தொடர்பு கொள்ள மறுத்தது.

மலேயாவில் வாழ்கின்ற சீனர்களில் பெரும்பாலோர் பொது உடைமைக் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தனர். தொழில் வர்த்தகத் துறைகளில் ஏற்றமிகு நிலையை அடைந்து, அரசியல் உணர்வும் பெற்றிருந்த மலேய சீனர்கள், நாளடைவில் செஞ் சீனாவின் கைப்பாவையாக ஆகிவிடுகின்ற ஆபத்து இருந்துவந்தது. இதே நிலை சிங்கப்பூர் அரசியலிலும் காணப்பட்டது. எனவே, மலேயா-சிங்கப்பூர் தலைமையமைச்சர்கள் 1961-ல் இரு நாடு களையும் இணைப்பதைப் பற்றிய பேச்சுவார்த்தைகளைத் தொடங் கினர். அவ்வாறு மலேயா-சிங்கப்பூர் இணைந்து, கூட்டரசை

ஏற்படுத்துமானுல், சீனர்கள் பெரும்பான்மையானவர்களாக இருக்கமாட்டார்கள். இக் கூட்டரசு ஏற்படுத்தும் திட்டத்தை ஆங்கில அரசுடனும் கலந்து ஆலோசனை செய்தனர். இக் கூட்டரசில் வடபோர்னியோ, சராவாக், புருனைப் பகுதிகளும் இணைக்கப்படவேண்டும் என்பதும் துங்கு அப்துல் ரகிமானின் விருப்பமாகும். ஆங்கில அரசு இக் கூட்டரசு திட்டத்தினை ஏற்றுக்கொண்டு, தனது பாதுகாப்பு நாடுகளாக இருக்கும் வட போர்னியோ, சராவாக், புருனை அரசுகளின் விருப்பத்தை அறிந்து கொள்வதற்காக கோபால்டு பிரபுவின் (Lord Cobold) தலைமையில் ஒரு குழுவை ஏற்படுத்தியது. மலேசியா ஏற்படுவதால் விளையப்போகும் நன்மைகளை எடுத்தியம்பும்வகையில் தீவிர பிரசாரங்கள் அந் நாடுகளில் செய்யப்பட்டன. வடபோர்னியோவும், சராவாக்கும் மலேசியக் கூட்டரசில் இணைய விருப்பம் தெரிவித்தன. ஆனுல் புருனை அதில் சேர மறுத்தது. சிங்கப்பூரிலும் கடுமையான எதிர்ப்புகள் தோன்றின. மக்களின் விருப்பத்தை அறிந்து கொள்ளும் வகையில் சிங்கப்பூரின் தலைமையமைச்சர் லி குவான் யீ (Lee Kuan Yee) பொது வாக்கெடுப்பு ஒன்றனை நடத்தினுர். இவ் வாக்கெடுப்பில் மூன்றில் இருபங்கு மக்கள் மலேசியக் கூட்டரசில் சேர இணக்கம் தெரிவித்தனர். சிங்கப்பூரும் மலேசியக் கூட்டரசில் சேர முடிவு யெய்தது.

**மலேசியாவின் எதிர்ப்பியக்கங்கள்**

மலேசியக் கூட்டரசு உருவாகும் வேளையில் எதிர்பாராத பகுதியிலிருந்து பலமான எதிர்ப்புத் தோன்றியது. பிலிப்பைன் குடியரசு தலைவர் மகாபகல் (President Macapagal) வட போர்னியோ பிலிப்பைனுக்குச் சொந்தமானது என்றும், பிலிப்பைன் வடபோர்னியோ மலேசியக் கூட்டரசில் இணைவதைத் தடுக்கும் என்றும் எதிர்ப்பினைத் தெரிவித்தார். அதே சமயத்தில் புருனைப் பகுதியில் மலேசிய எதிர்ப்புக் கலகங்கள் தோன்றின. (1962). புருனையில் ஏற்பட்ட கலகங்களைப் பத்தே நாள்களில் ஆங்கில அரசு அடக்கி அமைதியேற்படுத்தியது. இக் குழப்பநிலையில் இந்தோனேஷியக் குடியரசு தலைவர் சுகர்ணுேவும் மலேசியா உருவாவதைத் தடுக்க முற்பட்டார். மலேசியக் கூட்டரசு ஏற்படுவதை எதிர்க்கும் புருனை, வடபோர்னியோ பகுதிகளுக்கு எவ்வித உதவியும் செய்வதாக வாக்குறுதியளித்தார். மலேசிய எதிர்ப்பு இயக்கங்கள் இந்தோனேஷியாவில் தோன்றின.

இதற்கிடையில் மலேயா, பிலிப்பைன், இந்தோனேஷிய நாடுகளிடையே பேச்சு வார்த்தைகள் தொடங்கின. பிலிப்பைன் குடியரசு தலைவர் மகாபகல், மலேசியக் கூட்டரசு ஏற்படுவதை

எதிர்த்து, அதற்குப் பதிலாக, மலேயா, பிலிப்பைன், இந்தோ னேஷியா ஆகிய மூன்று நாடுகளும் இணைந்து 'மாபிலிந்தோ' (Maphilindo) என்ற புதிய கூட்டரசை உருவாக்கும் திட்டத்தினை வெளியிட்டார். ஆனால் 'மாபிலிந்தோ' ஏற்படக்கூடிய வாய்ப்பு ஏற்படவில்லை. இப் பேச்சுவார்த்தைகளின் போது, உலக நாடு களின் அவை, ஒரு குழுவை வடபோர்னியோ, சராவாக், புருணைப் பகுதிகளுக்கு அனுப்பி, அம் மக்களின் விருப்பத்தை அறியவேண்டு மென்று வற்புறுத்தியது.

### மலேசியாவின் பிறப்பு

உலக நாடுகள் அவையினால் ஏற்படுத்தப்பட்ட மலேசியாக் குழு (United Nations Malaysia Mission) வடபோர்னியோ, சராவாக் பகுதிகளில் பயணம்செய்து, தனது கருத்தினை உலக நாடுகள் அவையில் சமர்ப்பித்தது. அக் குழுவின் கருத்துகளின்படி, வடபோர்னியோ, சராவாக் பகுதி மக்கள் மலேசியாவுடன் இணைவதற்குப் பெருமளவில் விருப்பம் தெரிவித்தனர். எனவே, 1963ஆம் ஆண்டு, செப்டம்பர்த் திங்கள் 16ஆம் நாள் மலேசியக் கூட்டரசு தோன்றியது.

### மலேசியக் கூட்டரசின் எதிர்ப்பு இயக்கங்கள்

பிலிப்பைனும், இந்தோனேஷியாவும் மலேசியக் கூட்டரசை அங்கீகரிக்க மறுத்தன. இந்தோனேஷியாவின் மலேசிய எதிர்ப்பு இயக்கத்தினைப்பற்றிச் சுதந்திர இந்தோனேஷியா என்ற தலைப்பின் கீழ் விளக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

### மலேசியா-பிலிப்பைன் உறவுகள்

1966-ல் பிலிப்பைனும் இந்தோனேஷியாவும் மலேசியாவை அங்கீகரித்தன. ஆனால் வடபோர்னியோ பிலிப்பைனுக்குச் சொந்தமானது என்ற பிலிப்பைன் அரசின் கோரிக்கை இன்னும் முடிவு செய்யப்படாமலேயே இருக்கின்றது. பிலிப்பைன் அரசு இப் பிரச்சினையை உலக நாடுகளின் நீதிமன்றத்திற்கு கொண்டு செல்ல விரும்பியது. ஆனால் தகுந்த காரணங்காட்டி, இப் பிரச்சினை உலக நாடுகளின் நீதிமன்றத்தினால் தீர்த்துவைக்கப்பட வேண்டியதில்லை என்பதை மலேசிய அரசு தெளிவாக்கியது. வட போர்னியோ மக்களின் விருப்பத்தினை, உலக நாடுகளின் குழுவின் மூலமாக உறுதி செய்யப்பட்ட பின்னர், உலக நாடுகள் அவையின் அனுமதியுடன் ஏற்படுத்தப்பட்டதுதான் மலேசியாக் கூட்டரசு என்றும், எனவே இப் பிரச்சினையை உலக நாடுகளின் நீதிமன்றம் ஏற்றுக்கொள்ள வேண்டியதில்லை என்றும் மலேசியா அறிவித்தது. எனவே படைவலிமையைப் பயன்படுத்தியேனும் வடபோர்னி-

யோவைப் பிலிப்பைனுடன் இணைக்கவேண்டும் என பிலிப்பைன் குடியரசு தலைவர் மாரிகோஸ் அறிவிப்புச் செய்தார். இதனை யொட்டி இரு நாடுகளுக்கிடையேயும் போர் அபாயம் ஏற்பட்டது.

**இனப் போராட்டங்கள்**

மலேசியாவில் மலேயர்களும் சீனர்களும் பெரும்பான்மை யினமாக வாழ்கின்றனர். 'மலேசியா மலேசியர்களுக்கே' என்ற போராட்டம் ஆரம்பமானது. இவ்விரண்டு இனத்தினரும் ஒரு வரையொருவர் சந்தேகிக்கின்றனர். மலேயர்கள் அதிகாரங்கள் அனைத்தையும் கைப்பற்றித் தங்களுக்குத் தொல்லை விளைப்பரோ எனச் சீனர்கள் அஞ்சுகின்றனர். அதேபோல சீனர்கள் தொழில் வர்த்தகத்துறையில் மேம்பாடடைந்து, அரசியல் ஆதிக்கம் பெறு வதையும், பொது உடைமைக் கொள்கையைப் பின்பற்றுவதால், சீனுவின் கைப்பாவையாக மாறிவிடுவரோ என்ற அச்சம் மலேயர் களிடமும் இருந்தது. இதன் காரணமாகவே 'மலேசியா மலேசியர் களுக்கே' என்ற எண்ணம் வளர்ந்தது. மலேய-சீன இனப் போராட்டம் 1969-ல் தொடங்கியது. மலேயா முழுவதும் பயங் கரமான கலகங்கள் ஏற்பட்டன. ஏராளமானோர் உயிரிழந்தனர். பெரும் அழிவுகள் ஏற்பட்டன. அரசு 'அவசரகாலச் சட்டத்தினைப் பிறப்பித்து' இக் கலகங்களை அடக்கி அமைதியேற்படுத்த ஒரு குழுவையும் நியமித்தது. துன் அப்துல் ரசாக் (Tun Abdul Razak) என்பவர் இக் குழுவின் தலைவராக நியமிக்கப்பெற்றார். இக் கலகம் அடக்கப்பட்டது. ஆயினும் சீன ஆதரவுடன்கூடிய பொது வுடைமையினர் செல்வாக்குப் பெற்று வருகின்றனர் என்பது இக் கலகத்தின் மூலம் தெளிவாகியது. மலேசியத் தலைமையமைச்சர் இந் நிலையை உணர்ந்து, அதைத் தடுப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்திருக்கின்றார்.

1970ஆம் ஆண்டிற்குப் பின்னர் மலேசியாவில் அமைதி நிலவியது. 'அவசரக்காலச் சட்டம்' நீக்கப்பட்டது. அவசர காலத்தில் ஒத்திவைக்கப்பட்டிருந்த பாராளுமன்ற முறை அரசு மீண்டும் ஏற்படுத்தப்பட்டது. அமைதியான சூழலில் அரசியல், பொருளாதார வளர்ச்சிக்கான ஏற்பாடுகள் விரைந்து செய்யப் பட்டன. மலேசிய அரசியலில் நிலையான தன்மையும், அமைதியும் நீடித்தால், தென்கிழக்காசிய நாடுகளிலேயே மிகவும் வளப்பம் மிக்க நாடாக மாறும் என்பதில் ஐயமில்லை.

## சிங்கப்பூர்

மலேயாவிற்குச் சுதந்திரம் வழங்கிய ஆங்கிலேயர்கள், சிங்கப் பூருக்கு விடுதலையளிக்க முன்வரவில்லை. சிங்கப்பூர் ஆங்கிலேயரின்

மிக முக்கியமான இராணுவ தளமாகும். தூரக்கிழக்கு நாடுகளின் நடுநாயகமாகத் திகழும் சிங்கப்பூரைவிட்டு வெளியேற ஆங்கிலேயர் கள் விரும்பவில்லை. எனவே, அரசியல் சீர்திருத்தங்கள் வழங்குவது மூலம், தாங்கள் நிலைத்து நிற்க முடியும் என நம்பினர். ஆனால் சிங்கப்பூர் மக்கள் சீர்திருத்தங்களை வரவேற்கவில்லை. மாறாக முழுச் சுதந்திரம் வேண்டிப் போராட்டங்களைத் துவக்கினர். மலேயா, இந்தோனேஷியா, இந்தோசீனா நாடுகள் போன்ற அண்டை நாடுகளின் சுதந்திரப் போராட்டங்களையும், அவைகள் பெற்ற வெற்றியினையும் கண்ட சிங்கப்பூர் மக்கள், சுதந்திர வேட்கை மீதூரப் பெற்றனர். சிங்கப்பூர் மக்களின் உணர்ச்சி களைப் புரிந்துகொண்ட ஆங்கில அரசு ஜார்ஜ் ரெண்டால் (Sir George Rendel) என்பவரை அனுப்பிப் புதிய அரசியலமைப்பை உருவாக்கும்படி பணித்தது (1953). அவர் உருவாக்கிய புதிய அரசியலமைப்பு 1955-ல். செயல் முறைக்கு வந்தது. அதன்படி சிங்கப்பூர் 32 பேர் கொண்ட சட்டமன்றத்தையும் (25 பேர் தேர்ந்தெடுக்கப்படுவர்) ஒரு மந்திரி சபையையும் பெற்றது.

டேவிட் மார்ஷல் (David Marshall) என்பவர் சிங்கப்பூரின் முதல் முதலமைச்சராகப் பதவியேற்றார். மந்திரிசபையின் கருத்துகளின்படியே ஆளுநர் நடக்க வேண்டுமென்பதும் இவரது தலையாய கோரிக்கையாக இருந்தது. இவர் ஆங்கில அரசுடன் 1956ஆம் ஆண்டு பேச்சுவார்த்தைகளைத் தொடங்கினார். இதற் கிடையே சுதந்திரப் போராட்டம் வலிவடைந்தது. கதவடைப்பு களும், கலகங்களும் ஏற்பட்டன. ஆங்கில அரசு பணிந்தது. 1959ஆம் ஆண்டு ஜூன் மாதம் 3ஆம் நாள் சிங்கப்பூரின் சுதந்திரம் அறிவிக்கப்பட்டது. மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட நாடாளு மன்றத்தில் பெரும்பான்மை உறுப்பினர்களைக் கொண்ட கட்சியின் தலைவர் தலைமை அமைச்சராகவும் இருப்பர். ஆங்கிலேயரின் படைத்தளம் ஆங்கில அரசால் நியமிக்கப்பட்ட ஆணையாளரின் பொறுப்பில் இருக்கும். சிங்கப்பூரின் பாதுகாப்பு, மற்றும் வெளி யுறவை ஆங்கில அரசே கவனிக்கும் என்று ஏற்பாடாயிற்று.

சுதந்திரமடைந்த சிங்கப்பூரில் நடந்த முதல் தேர்தலில் லி குவான் யீ (Lee Kuan Yee) என்பவரது கட்சி பெரும்பான்மை யிடங்களைக் கைப்பற்றியது. லீ குவான் யீ சிங்கப்பூரின் முதல் தலைமையமைச்சராகப் பதவியேற்றார். சிங்கப்பூரை மலேயாக் கூட்டரசுடன் இணைப்பதையே இவர் தமது முக்கிய நோக்கமாகக் கொண்டிருந்தார். சிங்கப்பூரில் பெரும்பான்மையோர் சீனர்களே சீனர்கள் பெரும்பாலும் பொதுவுடைமைக் கட்சியைச் சேர்ந்தவர் களாக இருந்தனர். சிங்கப்பூரைப் பொதுவுடையினரின் பிடியி

விருந்து காப்பாற்றுவதற்காகவே லீ குவான் யீ மலேயாவுடன் இணைவதை விரும்பினார்.

மலேயாக் கூட்டரசின் தலைமையமைச்சர் துங்கு அப்துல் ரகிமான் ஆரம்பத்தில் சிங்கப்பூர் மலேயாவுடன் இணைவதை எதிர்த்தார். மலேயாவும் சிங்கப்பூரும் இணைந்தால், மலேயர் களின் எண்ணிக்கை 41 விழுக்காடாகவும், சீனர்களின் எண்ணிக்கை 44 விழுக்காடாகவும் மாறிவிடும். அதுமட்டுமன்றி, சீனர்கள் பொருளாதார ஏற்றமிக்கவர்களாகவும் இருந்தனர். இதனால் சிங்கப்பூர்-மலேயா இணைந்தால், சீனர்களின் அரசியல் செல்வாக்கும், அதன் வழியாகப் பொதுவுடைமையினரின் செல் வாக்கும், பின்னர் செஞ்சீனாவின் கைப்பாவையாகவும் ஆகின்ற ஆபத்து இருந்தது. இதையுணர்ந்த காரணத்தினால்தான் துங்கு அப்துல் ரகிமான் ஆரம்பத்தில் இவ்விருநாடுகளின் இணைவை விரும்பவில்லை. பின்னர் சிங்கப்பூரின் அரசியல் நிலையையும், சீனர் கள் அரசியல் ஆதிக்கம் பெறுவதற்குரிய வாய்ப்புகளையும் கண்டு ணர்ந்த துங்கு, தமது ஆரம்பகாலக் கருத்தினை மாற்றிக்கொள்ள வேண்டியதாயிற்று. ஏனெனில் சிங்கப்பூரில் பொதுவுடைமையினர் ஆதிக்கம் பெற்றுவிட்டால் சிங்கப்பூரை அடித்தளமாகக் கொண்டு, மலேயா தீபகற்பம் முழுவதிலும் பொதுவுடைமையினர் ஆதிக்கம் பெற்றுவிட ஏதுவாகும். இந்த ஆபத்தினை உணர்ந்த துங்கு, லீ குவான் யீ-யுடன் பேச்சுவார்த்தைகள் தொடங்கி மலேயா சிங்கப்பூரையும் ஆங்கில அரசின் அனுமதி, பாதுகாப்புடன் வட போர்னியோ, சராவாக், புருனே போன்றவைகளையும் இணைத்து மலேசியக் கூட்டரசை ஏற்படுத்த இசைந்தார். மலேசியக் கூட்டரசு உருவானது.

ஆனால் மலேசியக் கூட்டரசில் சிங்கப்பூர் அதிக நாள்கள் நீடிக்க வில்லை. இதன் காரணம் மலேசியக் கூட்டரசில் மலேயர்களின் ஆதிக்கமே பெருகியது. மலேயா–சிங்கப்பூர் நாடுகளிடையே இந்த இனப்பிரச்சினை பெரிய சிக்கலாக உருவெடுத்தது. லீ குவான் யீ மலேசியாவிலிருந்த சீனர்கள் அனைவரையும் ஒன்று திரட்டி ஒரு புதிய அரசியல் இயக்கத்தை ஆரம்பிக்க முனைந்தார். இம் முயற்சியைக்கண்ட மலேசிய அரசு, சிங்கப்பூரை மலேசியக் கூட்டர சினின்றும் வெளியேற்றியது (Aug. 9, 1965). மலேசியக் கூட்டர சினின்றும் சிங்கப்பூர் வெளியேறிவிட்டாலும், பொருளாதாரத் தொடர்புகள் இன்னமும் தொடர்ந்து இருந்து வருகின்றது.

சிங்கப்பூர், தென்கிழக்காசிய நாடுகளிலேயே மிகவும் சிறிய சுதந்திர நாடாக இருந்து வருகின்றது. ஆங்கில அரசு சிங்கப்பூரி

லிருந்த தனது இராணுவ தளத்தினின்றும் வெளியேறிவிடுவதாக 1971-ல் அறிவித்தது. ஆங்கிலேயரின் மிகப்பெரிய கடற்படைத் தளம், கப்பல் கட்டும் தளமாகவும், கப்பல்கள் பழுதுபார்க்கப் படும் நிலையமாகவும் மாற்றியமைக்கப்பட்டுவருகின்றது. இம் முயற்சியில் ஜப்பானியர்கள் சிங்கப்பூர் அரசுக்கு உதவி செய் கின்றனர். சிங்கப்பூரில் ஏராளமான புதிய தொழில்கள் ஆரம்பிக் கப்பட்டிருக்கின்றன. தலைமையமைச்சர் லீ குவான் யீ-யின் தலைமையில் சிங்கப்பூர் முன்னேற்றப் பாதையில் விரைந்து முன்னேறுகின்றது. உலகிலேயே மிகவும் தூய்மையான நகரம் (Cleanest city in the world) என்ற நற்பெயரையும் பெற்றிருக் கின்றது.

# 4. சுதந்திர இந்தோனேஷியா

இந்தோனேஷிய ஐக்கிய நாடு, 1947ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் 27ஆம் நாள் டச்சுக்காரர்களிடமிருந்து விடுதலை யடைந்தது. இருப்பினும் டச்சு அரசுடன் தொடர்புகள் நீடித்தது. இந்தோனேஷிய வெளியுறவுக் கொள்கையை டச்சு அரசே உருவாக்கி வந்தது. மேற்கு நியுகினியா தீவின் நிலையும் தெளிவாக்கப் படாமல் இருந்தது. மேற்கு நியுகினியாவும் இந்தோனேஷியாவுடன் இணைக்கப்பட வேண்டும் என்றும், டச்சுக்காரர்களின் பொறுப்பில் இருக்கும் வெளியுறவு அதிகாரத் தையும் பெறவேண்டும் என்றும், அப்போதுதான் இந்தோ னேஷிய விடுதலை முழுமை அடையுமென்றும், இந்தோனேஷியத் தலைவர்கள் தொடர்ந்து போராடினர். 1950ஆம் ஆண்டு இந்தோ னேஷிய ஒற்றையாட்சி அரசியல் முறையை ஏற்றுக் குடியரசாக மாறியது. 1954ஆம் ஆண்டு டச்சுக்காரர்களுடன் கொண்டி ருந்த பிணைப்புகளினின்றும் விடுபட்டு முழுச் சுதந்திர மடைந்தது.

### நியுகினியாப் பிரச்சினை

சுதந்திர இந்தோனேஷியாவை எதிர் நோக்கியிருந்த பிரச்சினைகள் ஏராளம். மேற்கு நியுகினியாத்தீவு பற்றிய பிரச்சினையால் இந்தோனேஷிய - டச்சுக்காரர் உறவுகள் சீர்கேடு அடைந்தன. டச்சுக்காரர்கள் மேற்கு நியுகினியாத் தீவில் தொடர்ந்து இருப்பதைக் கண்ட சுகர்ணோ 'பொறுக்க இயலாத அளவுக்கு ஆதிக்க வெறியர்களின் சினமூட்டும் செயல்' (Intolerable Imperialist Provocation) எனச் சாடினார். இப் பிரச் சினை உலகநாடுகளின் அவைக்குக் கொண்டு செல்லப்பட்டது. உலகநாடுகளின் அவையில் இந்தோனேஷியர்களின் வேண்டு கோளுக்குப் போதிய ஆதரவு கிட்டவில்லை. எனவே படை வலிமை கொண்டேனும் நியுகினியாப் பகுதிகளை மீட்போம் என அச்சுறுத்தினர். இந்தோனேஷிய மக்களின் எழுச்சியைக் கண்ட

உலகநாடுகள் அவை மேற்கு நியுகினியாவின் ஆட்சிப் பொறுப்பை டச்சுக்காரர்களிடமிருந்து தானே ஏற்றுக்கொண்டு விட்டது. (Oct. 1962 to April 1963). 1963-மே மாதத்தில் அப் பகுதி இந்தோனேஷியாவிற்கு மாற்றப்பட்டுவிட்டது. பின்னர் 1969ஆம் ஆண்டுக்குள் மேற்கு நியுகினியாவில் வாக்கெடுப்பு நடத்தி மக்களின் விருப்பத்திற்கேற்ப முடிவெடுக்க வேண்டுமென அறிவித்தது. 1969-ல் நடந்த வாக்கெடுப்பின்படி நியுகினியா இந்தோனேஷியாவுடன் இணைந்தது.

அரசியல் நிலை

இந்தோனேஷியாவில் முப்பதுக்கும் அதிகமான அரசியல் கட்சிகள் தோன்றியிருந்தன. இதனால் எந்த ஒரு கட்சியும் பெரும்பான்மை இடங்களைப் பெற்று ஆட்சிப் பொறுப்பை ஏற்க முடியாத நிலையில் இருந்தன. இந் நிலையில் கூட்டணி அரசுகள் தோன்றின. அவ்வரசுகள் தோன்றிய வேகத்திலேயே கவிழ்ந்தன. இதனால் நிலையான அரசு ஏற்பட முடியவில்லை. குழப்பங்களும், ஊழலும், பொறுப்பின்மையும் காணப்பட்டன. பொருளாதாரச் சீர்கேடுகளும் மலிந்தன. இந் நிலையிலும் 1955-ல் பொதுத்தேர்தல்கள் நடைபெற்றன.

1955-ல் நடைபெற்ற முதல் பொதுத்தேர்தலில் முப்பத்து நான்கு அரசியல் கட்சிகள் போட்டியிட்டன. இவைகளில் நான்கு கட்சிகளே முதன்மை நிலையில் நின்றன. அவைகள் 'மாஸ்ஜூமி' என்ற முகமதியர் கட்சி (Masjumi-the Muslim Party), தேசியக் கட்சி (Partai Nasional Indonesia-PNI), பழமைப் பற்றுள்ள முகமதியர் கட்சி (Nahdatul Ulama-NU), பொதுவுடைமைக் கட்சி (Partai Kommunis Indonesia) ஆகும். இக் கட்சிகளுக்குள் பதவிச் சண்டையும் போட்டியும் பொறாமையும் பூசலும் மலிந்தன. பொதுவாகக் கட்சிகள் அனைத்துமே பொதுவுடைமையினரைத் தடுப்பதையும் நோக்கமாகக் கொண்டிருந்தன. இத்தகைய குழப்ப நிலை நீடிக்கும் வரையில் நிலையான அரசை ஏற்படுத்த இயலாது என்பதைச் சுகர்னோ தெளிவாக உணர்ந்தார். எனவேதான் பாராளுமன்ற முறை மக்களாட்சி இந்தோனேஷியாவிற்கு ஏற்றதன்று என்ற முடிவிற்கு வந்தார். எனவே அம் முறையை மாற்றி 'வரையறுக்கப்பட்ட மக்களாட்சி'யை (Guided Democracy) ஏற்படுத்தி, முதலாளித்துவ வளர்ச்சியைத் தடுத்துச் சமதர்ம சமுதாயம் அமைக்கும் எண்ணம் கொண்டார். இதனைச் செயல்படுத்தும் முறையில் இந்தோனேஷிய அரசியல் கட்சிகளை ஒன்றிணைப்பது அல்லது அழித்துவிடுவது என்று திட்டமிட்டார். இத் திட்டத்தினை ஏற்ற பொதுவுடைமையினரைத் தனது கூட்டாளிகளாக ஏற்றுக்கொண்டார். வரையறுக்கப்பட்ட மக்களாட்சி வல்லாட்சிக்கு

வழிகோலும் என ஏனைய அரசியல் கட்சிகள் அஞ்சின. இதன் விளைவாகச் சுகர்னோவிற்கு எதிரான கலகங்கள் தோன்றின. சுமாத்ரா, வடபோர்னியோப் பகுதிகளில் பயங்கரக் கலகங்கள் ஏற்பட்டன. சுகர்னோ பொதுவுடைமையினரின் துணைகொண்டு இக் கலகங்கள் அனைத்தையும் நசுக்கி, நாட்டில் அமைதியை நிலை நாட்டினார்.

### வரையறுக்கப்பட்ட மக்களாட்சி

சுகர்னோவின் அரசியல் கொள்கைகள், 1959ஆம் ஆண்டு சுதந்திர தினப் பேருரையின் அரசியல் கொள்கை விளக்க அறிவிப்பில் (Political Manifesto of Sukarno's 1959 Independance Day Oration) எடுத்துரைக்கப்பட்டன. இதில் ஐந்து முக்கியக் கொள்கைகள் எடுத்துரைக்கப்பட்டன. இவ்வைந்து கொள்கைகளின் முதல் எழுத்துகளைக் கொண்டு உஸ்டெக் (USDEK) என்ற புதுச்சொல் உண்டாக்கப்பட்டது. அவ்வைந்து கொள்கைகளாவன: 1. 1945ஆம் ஆண்டில் உருவாக்கப்பட்ட புரட்சி அரசியல் அமைப்பு. 2. இந்தோனேஷியாவின் சோஷலிஸம், 3. வரையறுக்கப்பட்ட மக்களாட்சி (Guided Democracy), 4. வழி காட்டப்பட்ட பொருளாதாரம் (Guided Economy), 5. இந்தோனேஷியத் தனித்தன்மை (Indonesian Identity) ஆகியவையாகும்.

சுகர்னோ 1959-ல் அரசியல் நிர்ணய சபையைக் கலைத்து விட்டார். 1945ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்ட அரசியல் அமைப்பை மீண்டும் செயல்படுத்தினார். அதன்படி குடியரசு தலைவருக்கு முழு அதிகாரமும் அளிக்கப்பட்டது. அரசியல் கட்சிகள் தடைசெய்யப்பட்டன. பாராளுமன்றத்திற்குப் பதிலாக அனைத்து அரசியல் கட்சிப் பிரதிநிதிகளையும் கொண்ட ஆலோசனை சபை நியமிக்கப்பட்டது. அதேபோல அனைத்துக் கட்சி உறுப்பினர்களைக் கொண்ட ஆலோசனை சபையில் படையினர் மற்றையோருக்கும் பெரும்பான்மையிடம் வழங்கப்பட்டது. இந் நியமனங்கள் அனைத்தும் குடியரசு தலைவராலேயே செய்யப்பட்டது. குடியரசு தலைவர், தலைமையமைச்சர் ஆகிய இரு பதவிகளையும் சுகர்னோ ஏற்றுக்கொண்டார். 1958-லிருந்து 1966-67-ல் பதவி நீக்கம் செய்யப்படும் வரை சுகர்னோ இந்தோனேஷியாவின் தனிப் பெரும் தலைவராய்த் திகழ்ந்தார்.

### அயலுறவுக் கொள்கை

மூன்று முக்கியக் குறிக்கோள்கள் இந்தோனேஷியாவின் அயலுறவுக் கொள்கையில் காணப்படுகின்றன. அவையாவன: 1. குடியேற்றக் கொள்கையை எதிர்த்தல். 2. மார்க்கிசியக் கொள்கைகளை ஆதரித்தல், 3. எக் கூட்டணியிலும் சேராமல் தனித்

தன்மையுடன் இயங்குதல் - ஆகியவையாகும். ஆசிய - ஆப்பிரிக்க நடுநிலைமை நாடுகளில் இந்தோனேஷியாவின் செல்வாக்கினை நிலை நாட்டவும், உலக நாடுகளிடையே மதிப்புப் பெறவும் சுகர்ணோ விரும்பினார். உலக நாடுகளில் பயணம் செய்து உலகத் தலைவர் களுடன் உறவாடி அனைத்துலகப் பிரச்சினைகளை விவாதித்து, வணிகத் தொடர்பு முதலியவைகளை ஏற்படுத்த முயன்று, இந்தோ னேஷியாவை உலக நாடுகள் பெருமையுடன் அறிந்துகொள்ள வழிவகைகள் செய்தார். உலகநாடுகள் அவையில் இந்தியாவுடன் இணைந்து வல்லரசுகளின் குறைபாடுகளை அச்சமின்றி எடுத்துரைத் தார். தமது நாட்டின் பெருமையினை உலகறியச் செய்ய வேண்டு மென்ற பேராவலில் ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளின் மாநாட்டினைத் தன்னுடைய நாட்டில் (பாண்டுங் மாநாடு 1955) நடத்த அனுமதி யளித்தார். அதே ஆசிய நாடுகளின் விளையாட்டுப் போட்டிகளும் 1962-ல் ஜகார்த்தாவில் நடத்தப்பெற்றது. இத்தகைய பெருமைக் குரிய திட்டங்களைச் செயல்படுத்தி தம்மையும் தம் நாட்டையும் உலகினர் அறியும்படி செய்தார்.

பாண்டுங் மாநாட்டின்போது இந்தோனேஷிய-சீன உறவுகள் மிகவும் உயர்ந்த நிலையில் இருந்தன. சீனத் தலைவர் சூ-யென்-லாயும் சுகர்ணோவும் அடிக்கடி தங்கள் நட்புறவினை உறுதிபடுத்திக் கொண் டிருந்தனர். பாண்டுங் மாநாட்டில் எந்த ஒரு ஆசியத் தலைவரா வது, தனிப்பட்ட முறையில் பயன் அடைந்தாரென்றால், அது சூ-யென்-லாய்தான். அவர் வந்தார், பார்த்தார், வென்றார் என்று கூறுமளவுக்குப் பெரும்பயனை அடைந்தார். 1958ஆம் ஆண்டிலும், 1959ஆம் ஆண்டின் ஆரம்பத்திலும் இந்நாடுகளுக்கிடையே இருந்த உறவுகள் மோசமடைந்தன. சுகர்ணோ தமது புதிய பொருளா தாரத் திட்டங்களைச் செயல்படுத்த முனைந்தபோது கிராமப் புறங் களிலிருந்த சீனர்களை வெளியேற்றி, அவர்களது சொத்துகளைப் பறிமுதல் செய்தார். இதனால் இந்தோனேஷிய-சீன உறவுகளில் விரிசல் காண ஆரம்பித்தது. சீனர்களின் எதிர்கால ஆக்கிரமிப்புத் திட்டங்களை இச் செயல் முன்கூட்டியே அறிவித்தது எனக் கருதப் படுகின்றது. அதேபோல ஸ்டாலின் காலத்தில் ருஷிய-இந்தோ னேஷிய நல்லுறவு ஏற்படவில்லை. குருச்சேவ் ருஷியாவில் பதவி யேற்ற பின்னர் இந்தோனேஷிய-ருஷிய உறவு வளர ஆரம்பித்தது. இந்தோனேஷியாவில் ஏற்பட்ட புரட்சி, கலகங்களை அடக்க ருஷியா ஏராளமாகப் படைக்கலன்களைக் கொடுத்து உதவியது.

### மலேசிய எதிர்ப்புக் கொள்கை

1963-ல் ஆங்கிலேயரின் தூண்டுதல்—ஆதரவுடன் மலேயா, சிங்கப்பூர், வடபோர்னியோ (அல்லது) சாபா, சராவாக், புருனே ஆகிய பகுதிகள் இணைந்து மலேசியா என்ற கூட்டரசு உருவாக்கப்

பட்டபோது, சுகர்ணோ இக் கூட்டரசை முழு மூச்சுடன் எதிர்த்தார். ஆங்கில அரசின் குடியேற்றக் கொள்கையின் மறை முகமான உருவமே மலேசியக் கூட்டரசு என்று நம்பினர். ஆதிக்கக் கொள்கை எந்த உருவில் வரினும், அதை எதிர்ப்பதையே தமது குறிக்கோளாகக் கொண்ட சுகர்ணோ, மலேசியாவை அழிக்க உறுதிபூண்டார். போர்னியோவில் கொரில்லா இயக்கங்களைத் தூண்டிவிட்டுப் பயங்கரமான தாக்குதல்களைத் தொடங்கினர். 1964ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் 17ஆம் நாள் இந்தோனேஷியா சுதந்திரமடைந்த 19ஆம் ஆண்டுவிழாக் கொண்டாடப்பட்டது. அன்றைய தினம் மலேயாத் தீபகற்பத்திலுள்ள போன்டியன் (Pontien) எனும் இடத்தில் ஒரு சிறிய படையை இறக்கித் தம் நடவடிக்கைகளை அவர் அதிகப்படுத்தினர். அடுத்த மாதத்தில் இந்தோனேஷிய பாராசூட் படையினர் கோலாலம்பூருக்கு 85 மைலுக்கு அருகில் இறக்கப்பட்டனர். அதே சமயத்தில் மலேயர்கள் - சீனர்கள் இனக்கலகம் சிங்கப்பூரில் மூண்டது. இந்தோனேஷியாவின் தாக்குதலை வாய்ப்பாகக் கொண்டு இரகசியமாக இயங்கும் பொதுவுடைமையினர் ஆதிக்கம் பெறச் செய்யும் முயற்சியென மலேசியா இதனைக் கருதியது. இந்தோ னேஷியாவின் 'ஆரவாரமான, மன்னிக்க முடியாத ஆக்கிரமிப்பு' என மலேசியத் தலைமையமைச்சர் துங்கு அப்துல் ரஹ்மான் முறை யிட்டார். உலக நாடுகள் அவைக்கு இப் பிரச்சினை கொண்டு செல்லப்பட்டது. மலேசியாவிற்கு எதிராக மேலும் ஆக்கிரமிப்பு நடவடிக்கை எடுக்கப்படும் என்றும், அதேநேரத்தில் ஆங்கில அரசை நேரிடையாக எதிர்க்கும் எண்ணமில்லை என்பதையும் சுகர்ணோ திட்டவட்டமாக அறிவித்தார். தென்கிழக்கு ஆசியாவின், இரு நாடுகளுக்கிடையே நடக்கும் போர், 'ஆசிய நாடுகளின் பிரச்சினை' எனக் கூறிய இங்கிலாந்து, மலேசியாவைப் பாதுகாப்பதைத் தமது கடமையாகக் கொண்டிருந்தும், சுகர்ணோவை நேரிடையாகத் தாக்க மறுத்தது. எனினும் சிங்கப்பூரில் நடந்த கலகத்தின் பின்னர், பொதுவுடைமையினர் ஆதிக்கக் கலகத்தினை அடக்குவதை ஒரு வாய்ப்பாகப் பயன்படுத்தி, விமானப் படையையும், நான்கு போர்க் கப்பல்களையும் இங்கிலாந்து சிங்கப்பூருக்கு அனுப்பி வைத்தது. இங்கிலாந்தின் மலேசியச் செல்வாக்கினை அழிக்கவும், பொதுவுடைமையினரின் வளர்ச்சியைப் பாதுகாக்கவும், ருஷியா இந்தோனேஷியாவிற்குத் தமது மறைமுக ஆதரவை அளித்தது.

உலக நாடுகள் அவையில் ருஷியா மட்டுமே இந்தோனேஷியா விற்கு ஆதரவாக இருந்தது. ஏனைய நாடுகள் 'மலேசிய எதிர்ப்புக் கொள்கை'யைச் சாடின. எனவே இந்தோனேஷியா உலக நாடு களின் அவையினின்றே விலகியது. சீனவுடன் இவர் கொண்டிருந்த

நெருங்கிய உறவின் விளைவுதான் இந்தோனேஷியா உலக நாடுகள் அவையினின்று விலகியது என ஜகார்த்தாவிலிருந்து வெளியாகும் ஒரு செய்தித்தாள் குறிப்பிட்டது (Jan. 1, 1965). சுகர்ணோவின் மலேசிய எதிர்ப்புக் கொள்கை ஆசிய நாடுகளின் தீவிர தேசியத்தின் எழுச்சியை உணர்த்துகிறது. ஐரோப்பியர்களின் ஆதிக்கக் கொள்கை எவ்விதச் சூழ்நிலையிலும் ஆசிய நாடுகளில் மீண்டும் பரவக்கூடாது என்பதில் எந்த அளவிற்கு ஆசிய நாட்டினர் விழிப்புடன் இருக்கிறார்கள் என்பதனையே இது தெளிவாக்குகின்றது.

இந்தோனேஷியா 'மலேசியாவை நசுக்கும் இயக்கத்தை'த் தொடர்ந்தபோதே, சிங்கப்பூர் மலேசியாவினின்றும் பிரிந்தது. சிங்கப்பூர் மலேசியாவினின்றும் பிரிந்து சென்றதைத் தனது முதல் மாபெரும் வெற்றியென மகிழ்ந்தார் சுகர்ணோ. ஆனால் செப்டம்பர் 1965-ல் இந்தோனேஷியாவில் பொதுவுடைமையினரால் ஏற்படுத்தப்பட்ட புரட்சியின் விளைவாக ஏற்பட்ட இந்தோனேஷிய அரசியல் மாறுதல்களின் காரணமாகச் சுகர்ணோ பதவி நீக்கம் செய்யப்பட்டு, தளபதி சுகார்ட்டோ குடியரசு தலைவரானார். இவர் அமைதியினடிப்படையில் மலேசிய எதிர்ப்புக் கொள்கைக்கு முடிவு காண விரும்பினார். இந்தோனேஷியாவின் புதிய வெளியுறவு அமைச்சரான ஆதம் மாலிக் (Adam Malik) என்பார் 1966, ஏப்பிரல் 4ஆம் நாள் மீண்டும் இந்தோனேஷியாவை உலகநாடுகள் அவையில் உறுப்பினராக்கினார். அமைதிப் பேச்சு வார்த்தைகளைத் தொடங்கவும் விருப்பம் தெரிவித்தார். இதன் விளைவாக இந்தோனேஷிய-மலேசிய வெளியுறவு அமைச்சர்கள் பாங்காக் நகரில் கூடிப் பேச்சு வார்த்தைகள் நடத்தினர். அதன் முடிவில் மலேசியாவை இந்தோனேஷியா அங்கீகரித்து, தூதுவர்களைப் பரிமாறிக்கொள்ள இசைந்தது. சிங்கப்பூர் ஆங்கிலேயர்களின் படைத்தளமாகத் தொடர்ந்து இருப்பதையும் ஏற்றுக்கொண்டது. இதன் காரணமாக இந்தோனேஷியாவின் குடியேற்ற-ஆதிக்க எதிர்ப்புக் கொள்கையும் காலத்திற்கேற்றவாறு மாற்றியமைக்கப்பட்டது.

பொதுவாக இந்தோனேஷியா தனது அயலுறவுக் கொள்கையில் நடுநிலைமை வகிக்கும் ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளுடன் நல்லுறவு ஏற்படுத்திக்கொள்வதை விரும்புகிறது. இந்தியாவைப் புகழ்ந்தாலும், போட்டி மனப்பான்மை உண்டு. காஷ்மீர் பிரச்சினை சம்பந்தமாக ஒரு தெளிவற்ற கொள்கையைப் பின்பற்றுகிறது. 'கொழும்பு அரசுகள்' (Colombo Powers) என்பதில் இந்தோனேஷியாவும் இணைந்துள்ளது. எனினும் இந்திய-சீனச் சிக்கல்களில் அவ்வளவு அக்கறை காட்டவில்லை. தென்கிழக்காசிய நாடுகளின்

பாதுகாப்பு ஒப்பந்தத்தை (SEATO) மேனுடுகளின் ஆதிக்கம் உள்ள இராணுவ நட்புறவாகக் கருதி அதனைக் கண்டனம் செய்கிறது. மத்திய கிழக்கிலும், ஆப்பிரிக்காவிலும் உள்ள முஸ்லீம் நாடு களுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்வதைப் பெரிதும் விழைகிறது.

## பொருளாதாரம்

தனியார் முதலீடுகளையும், தனியார் துறையையும் இந்தோ னேஷிய அரசு ஆதரிக்கவில்லை. பொதுவாக முதலாளித்துவக் கொள்கையை ஏற்றுக்கொள்ளவில்லை. மாருகத் திட்டமிட்ட தேசியப் பொருளாதாரக் கொள்கையை ஏற்றுக்கொண்டது, பொருளாதாரத் திட்டங்களைத் தீட்டிச் செயல்படுத்தும்போது ஏற்படுகின்ற சிக்கல்கள், மூலப்பொருள், தொழில் நுணுக்கம் போன்ற பற்ருக்குறைகள், மக்கள் பெருக்கத்தினுல் ஏற்படுகின்ற சிக்கல்கள் போன்றவை இந்தோனேஷியாவிலும் உண்டு. பெரும் முதலீடுகள் செய்யும் அளவுக்கு அரசும் வசதியற்ற நிலையில் இருந்தது. வெளிநாட்டுத் தொழில் நிறுவனங்களையும், மூலதனத் தையும் ஏற்றுக்கொள்வதும், ஆதரவளிப்பதும் அரசியல் கொள்கைகளுக்கு முரண்பட்டதாக இருந்தது. இருப்பினும் அமெரிக்காவின் உதவியுடன் பொருளாதார மேம்பாட்டுத் திட்டங்கள் செயல்படுத்தப்பட்டன.

## சுகர்ணேவின் வீழ்ச்சி

1935ஆம் ஆண்டிலிருந்தே இந்தோனேஷிய அரசியல் வானில் கார்மேகங்கள் சூழ ஆரம்பித்தன. புயல் சின்னம் உருவானது. சுகர்ணேவின் ஆதரவாளர்களாக இருந்த பொதுவுடைமையினர் சுகர்ணேவின் அரசியல் பொருளாதாரக் கொள்கைகளை அச்சத் துடன் நோக்க ஆரம்பித்தனர். தங்களது செல்வாக்குக் குறைந்து வருவதையும், படையதிகாரிகளின் செல்வாக்கு உயர்ந்து வரு வதையும் உணர்ந்தனர். 1965-ல் சுகர்ணே நோய்வாய்ப்பட்டார். அந் நேரத்தில் இராணுவத் தளபதிகள் அரசினைக் கவிழ்க்கச் சதித் திட்டம் தீட்டியிருக்கின்ருர்கள் என்ற குற்றம் சாட்டிப் பொது வுடைமையினர் திடீரெனப் புரட்சியைத்தோற்றுவித்தனர். முன்ன தாகவே குறிப்பிடப்பட்டிருந்த ஏழு படைத் தளபதிகளைக் கொன்று, இரத்தப் புரட்சியைத் துவக்கினர். உடனே இரா ணுவம் பொதுவுடைமையினரை வேட்டையாடி, பல்லாயிரக் கணக்கில் பொதுவுடைமையினரைக் கொன்று குவித்துப் புரட்சியை அடக்கியது. இப் புரட்சி 1965ஆம் ஆண்டு செப் டம்பர்த் திங்கள் 30ஆம் நாள் தோற்றுவிக்கப்பட்டது. 'செப் டம்பர்ப் புரட்சி' என்று இந்தோனேஷிய வரலாற்றில் இடம் பெறு

கின்றது. இப் புரட்சியைத் தொடர்ந்து சுகர்ணேவிற்கு எதிர்ப்பு அதிகமானது. இந்த எதிர்ப்புகளைச் சமாளிக்க வேண்டித் தமது மந்திரி சபையில் சில மாறுதல்களைச் செய்தார். செப்டம்பர்ப் புரட்சிக்கு அடிப்படைக் காரணமாக இருந்த டாக்டர் சுபாந்திரியோ (Dr. Subandrio) என்பவரே மீண்டும் வெளியுறவு அமைச்சராக நியமிக்கப்பட்டார். இதனையறிந்த மாணவர்கள் ஜகார்த்தாவில் மீண்டும் புரட்சிக் கொடியை உயர்த்தினர். மாணவரியக்கம் நாடு முழுவதும் பரவியது. சட்டம் அமைதி குலைந்தது. பெருத்த அழிவுகள் ஏற்பட்டன. சுகர்ணே மாணவர்கள் கலகத்தை அடக்க வழியறியாது திகைத்தார். இறுதியாக இராணுவம் வரவழைக்கப்பட்டது. இராணுவத் தளபதி சுகார்ட்டோ விடம் சுகர்ணே தமது அதிகாரங்கள் அனைத்தையும் ஒப்படைத்தார். ஆட்சிப் பொறுப்பேற்ற சுகார்ட்டோ முதலில் பொதுவுடைமையினருக்கெதிராகச் செயல்பட்டார். பொதுவுடைமைக் கட்சியைத் தடை செய்தார். டாக்டர் சுபாந்திரியோ கைது செய்யப்பட்டுக் காவலில் வைக்கப்பட்டார். பொதுவுடைமையினரின் வீழ்ச்சியோடு சுகர்ணேவின் வீழ்ச்சியும் ஏற்பட்டது. ஜூன் 21ஆம் நாள் (1966) சுகர்ணே பதவி நீக்கம் செய்யப்பட்டார். மார்ச்சு 11ஆம் நாள் (1967) சுகர்ணேவிற்கு வழங்கப்பட்டிருந்த அதிகாரங்கள் அனைத்தும் சுகார்ட்டோவிற்கு தாற்காலிகமாக வழங்கப்பட்டது. 1968-ல் முறையாகக் குடியரசு தலைவராக சுகார்ட்டோ பதவியேற்றார்.

சுகார்ட்டோ, சுகர்ணே பின்பற்றி வந்த பொருளாதாரக் கொள்கைகளிலிருந்த குறைபாடுகளைக் களைந்து, புதிய திட்டங்களைத் தீட்டிச் செயல்படுத்தி வளம் கண்டு வருகின்றார். 1968-க்குப் பின்னர் இந்தோனேஷியா தொழில், வேளாண்மைத் தொழில்களில் வியத்தகு முன்னேற்றம் அடைந்துள்ளது. இப்போது எண்ணெய் வளமிக்க நாடாகவும் உயர்ந்துள்ளது.

அயலுறவுக் கொள்கைகளிலும் சுகார்ட்டோ நட்புறவுக் கொள்கையையே பின்பற்றி வருகின்றார். உலக நாடுகள் அவையில் நம்பிக்கை கொண்டு, அண்டைநாடுகளுடன் நட்புறவை வளர்த்து, உலக அரங்கில் இந்தோனேஷியாவின் பெருமையை மேலும் உயர்த்தப் பாடுபட்டு வருகின்றார். எனினும் இவரை எதிர்நோக்கியுள்ள பிரச்சினைகள் ஏராளமே. அவைகளை எதிர்த்து வெற்றி காணப் பாடுபட்டு வருகின்றார்.

# 5. பாண்டுங் மாநாடு
## (Bandung Conference)

**1945-50** ஆண்டுகளில் ஆசிய நாடுகளின் தேசிய எழுச்சி வெற்றிபெற்றது. இருநூற்றாண்டுகளுக்கும் அதிகமாக ஐரோப்பிய நாடுகளின் ஆதிக்கத்தில் கட்டுண்டுகிடந்த ஆசிய நாடுகள் விடுதலை ஒளியை பெற்றன. ஆசிய நாட்டு மக்களின் தன்னம் பிக்கை வளர்ந்தது. தங்கள் நாட்டை அந்நியர் பிடியினின்று விடுவித்துத் தாங்களே ஆளுகின்ற சுய ஆட்சியுரிமை பெற்று விட்டோம் என அவர்கள் அகமகிழ்ந்தனர். ஒரு சிலர் தாங்கள் இவ்வளவு சீக்கிரம் விடுதலை அடைந்து விட்டோமா என்று, நம்ப முடியாமல் வியப்படைந்தனர். ஒரு சிலர் விடுதலைக்காக எண்ணற்ற போராட்டங்களையும், தொல்லைகளையும் சிறை வாழ்க்கையையும் விரும்பியேற்றுக் கொண்டவர்கள், இதுவரை தங்கள் நாட்டிற்குத் தாங்கள் ஆற்றிய பணியென்ன, இனிமேல் தங்களின் பொறுப்புகள் கடமைகள் என்னவென்பதைப் பற்றி யும் எண்ண ஆரம்பித்தனர். ஜிப்ரால்டர் பூசந்தியில் தொடங்கி, மத்திய தரைக்கடல் வழியாக, சூயஸ் கால்வாயைக் கடந்து, செங்கடலை அடைந்து, இந்தியப் பெருங்கடல் முழுவதும் பரவி, சீனக்கடலைச் சுற்றி, ஜப்பான் கடல்வரை விரவிப் பரந்திருந்த ஐரோப்பியர்களின் பேராதிக்கம் சரியத் தொடங்கியது. அவ்வழி யெங்கணும் அடிமைப்பட்டுக் கிடந்த ஆப்பிரிக்க-ஆசிய நாடுகள் புதியதொரு உயர்ந்த நிலையை அடைந்தன. இப் புதிய நாடுகளை எதிர் நோக்கியிருந்த பிரச்சினைகள் ஏராளம்.

இரண்டாம் உலகப் போரின்போது ஜெர்மனியை எதிர்த்து இணைந்து போரிட்ட முப்பெரும் வல்லரசுகளான அமெரிக்கா, இங்கிலாந்து, ருஷியா போன்றவை, தங்களின் அடிப்படைத் தத்துவங்களின் வேறுபாடுகள் காரணமாகப் பிரிந்தன. ஐக்கிய நாடுகள் அவையில் அமெரிக்கா, இங்கிலாந்து ஒருபக்கமும், பொதுவுடைமை நாடான ருஷியாவும், அதனுடைய நட்புறவு

நாடுகளும் எதிர்ப்பக்கமாகவும் நின்று செயல்பட்டன. இவ்வாறு உலக வல்லரசுகள் பிரிந்து செயல் பட்டபோது, புதிதாக எழுச்சி பெற்ற ஆசிய-ஆப்பிரிக்க நாடுகள் ஒன்றாக இணைந்து, எந்தவொரு வல்லரசுடனும் இணைந்து விடாமல் தனித்து நின்று பிரச்சினைகளை விவாதிக்க வேண்டுமென்று இந்தியா போன்ற நாடுகள் விரும்பின. ஐக்கிய நாடுகள் அவையின் சம உரிமைக் கோட்பாடு அனைத்துலக உறுப்பு நாடுகளுக்கும் ஒரே அளவான வாக்குரிமையும், தங்கள் கருத்தினை உலகமன்றத்தில் எடுத்தியம்பும் உரிமையும் வழங்கியது. இப் புதிய நாடுகளுக்கு உலக அரசியலில் புதிய ஆர்வத்தை ஏற்படுத்தியிருந்தது.

இருப்பினும் 1950-ல் ஆசிய நாடுகளனைத்தும் விடுதலை பெற்றிருக்கவில்லை. இந்தியா, பாகிஸ்தான், பர்மா, மலேயா போன்ற நாடுகளிலிருந்து இங்கிலாந்து பெருந்தன்மையோடும், பெருமையோடும் வெளியேறியது. அதேபோலப் பிலிப்பைனிலிருந்த் அமெரிக்காவும் வெளியேறியது. ஆனால், இந்தோனேஷியாவில் ஆதிக்கம் பெற்றிருந்த டச்சுக்காரர்களும், இந்தோ-சீனாவில் ஆதிக்கம் பெற்றிருந்த பிரெஞ்சுக்காரர்களும், தங்கள் குடியேற்ற நாடுகளிலிருந்தும் வெளியேற விரும்பவில்லை. படைவலிமை கொண்டேனும் நிலைத்து நிற்கும் எண்ணத்தில் செயல்பட்டனர். இந்தோனேஷிய சுதந்திரத்தை டச்சுக்காரர்கள் படைவலிமை கொண்டு நசுக்க முயன்றபோது, இந்தியாவின் தலைமையில் ஆசிய-ஆப்பிரிக்க நாடுகள் டச்சுக்காரர்களுக்கு எச்சரிக்கை விடுத்தன. 1949-ல் புதுடெல்லியில் பண்டித நேருவின் அரும்பெரும் முயற்சியால் கூடிய ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளின் மாநாடு, இந்தோனேஷிய சுதந்திரப் போராட்டத்தினைப் பற்றிய முழு விளக்கங்களையும் உலக நாடுகளுக்கு எடுத்தியம்பியது. இக் கூட்டுறவு முயற்சியைக் கண்ட டச்சுக்காரர்கள், பணிந்து வெளியேறினர்.

இவ்வாறு தங்கள் உரிமைகளையும், சுதந்திரத்தையும் பாதுகாத்துக்கொள்ள, ஆசிய-ஆப்பிரிக்க நாடுகள் கூடிச் செயலாற்றும் முறையை ஏற்று, உலக வல்லரசுகளிடையே புதிய சக்தியாகத் தோன்றினாலும், தாங்கள் இடைக்காலத்திலிருந்தது போலத் தனித்து இயங்க முடியாது என்பதனையும் உணர்ந்து இருந்தன. இந்த உணர்வினைப் பிரதிபலிக்கும் வகையில், புதிய ஆசிய ஆப்பிரிக்க நாடுகளை எதிர்நோக்கியிருந்த பிரச்சினைகளை மூன்றாகப் பிரிக்கலாம்.

முதலாவதாக ஐரோப்பிய ஆதிக்கத்திலிருந்து விடுபட்ட நாடுகள் தங்களை எதிர்நோக்கியிருந்த பிரச்சினைகளைத் தெளிந்து செயலாற்ற வேண்டியதாயிற்று. புதிய தேசிய எழுச்சியும், இனப்

பெருமையும் (Racialism) புதிய நாடுகளில் காணப்பட்டன. இரண்டாம் உலகப் போரின் பின்னர், கடற்படையின் முக்கியத் துவம் குறைந்தது. கடல்வழிகள், கடற்படை நடமாட்டத்திற்கு மட்டுமல்லாது, சுதந்திர நாடுகளின் கடல் வாணிப வளர்ச்சிக் காகப் பயன்பட வேண்டிய அவசியம் ஏற்பட்டது. எனவே அனைத்துலக நாடுகளும் ஏற்றுக் கொள்ளுகின்ற வகையில் கடல் வழிப் பாதுகாப்பு, கடலில் அமைதி காப்பது போன்ற சட்டங்களை உருவாக்க வேண்டிய தேவையேற்பட்டது.

இரண்டாவதாக, பொருளாதார வளர்ச்சி இல்லையேல், அரசியல் சுதந்திரம் பயனற்றதாகிவிடும். புதிதாகச் சுதந்திரம் அடைந்த நாடுகள் தொழில், விவசாயம், ஆகிய துறைகளில் மிகவும் பின்தங்கிய நிலையில் இருந்தன. இந் நிலையை மாற்றி, பொருளாதார முன்னேற்றம் காணத் தேவையான தொழில் நுணுக்கங்களோ, அனுபவமோ இவைகள் பெற்றிருக்கவில்லை. மேலும் தொழில், விவசாய வளர்ச்சியடையப் பெரும் மூலதனமும், இயந்திர சாதனங்களும், அவைகளை நிறுவி, இயக்குகின்ற செயல றிவும் தேவைப்பட்டது. இவைகளை வளர்ந்துவிட்ட ஐரோப்பிய நாடுகளிடமிருந்துதான் பெற முடியும். பஞ்சம், பட்டினி, வறட்சி, இவைகளிலிருந்து மக்களைக் காப்பாற்றவும், ஐரோப்பிய நாடுகளை நாடவேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஐரோப்பிய நாடுகளில் சில ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளின் வளர்ச்சியிலும், முன்னேற்றத்திலும் உண்மையிலேயே அக்கறை கொண்டிருந்தன. பல நாடுகள் உதவி செய்ய முன்வரவில்லை. அவ்வாறு உதவி செய்ய முன்வருகின்ற நாடுகளின் உள்நோக்கம் என்னவாக இருக்கும் என்பதைச் சற்றுச் சிந்தித்துத் தெளிந்த பின்னர், ஏற்றுக்கொள்ள வேண்டியிருந்தது.

மூன்றாவதாக, அரசியல் தத்துவங்கள் அல்லது கொள்கைகள் (The Choice of Ideology) 'ஆதிக்கம்', 'குடியேற்றம்' ஆகிய வைகள் இருபதாம் நூற்றுண்டில் புதிய வடிவம் பெற்றுவிட்ட தாக இந்தோனேஷியக் குடியரசு தலைவர் சுகர்ணோ அறிவித்தார். பொருளாதாரக் கட்டுப்பாடுகள் புதிய கொள்கைகளைப் பரப்பி மனிதனின் அறிவாற்றலை ஒருமுகப்படுத்துதல் (Intellectual Control), செல்வச்செழிப்புக் காரணமாகச் சிறுபான்மையோர் நாட்டு வளர்ச்சியைக் கட்டுப்படுத்துதல் என்பன போன்ற புதிய ஆதிக்க இனங்கள் தோன்றியிருக்கின்றன என்றும் அவைகளிலிருந்து புதிய நாடுகள் காப்பாற்றப்பட வேண்டும் என்றும் எச்சரித்தார். மத்திய கிழக்கு நாடுகளில் எண்ணெய் உரிமைகளைப் பெற்றதன் விளைவாக ஐரோப்பிய நாடுகள், அந் நாடுகளின் பொருளாதார

உரிமைகளைப் பெற்றனர். தூரக்கிழக்கு, தென்கிழக்காசிய நாடுகளில் சீன மக்கள் பெருமளவில் குடியேறித் தொழில் வர்த்தகங்களைத் தங்களின் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்தனர். இவைகளை விட மிகவும் சிறப்பு வாய்ந்தது பொதுவுடைமைக் கொள்கைப் பரவியதாகும். உலகம் முழுவதிலும் வருக்கப் புரட்சியை ஏற்படுத்தி உழைப்பாளர்-தொழிலாளர் அரசினை உருவாக்குவதற்கான தகுந்த காலத்தை எதிர்நோக்கி நிற்பது, மார்க்சியக் கொள்கையாகும். இப் பிரச்சினைகள் நாட்டுக்கு நாடு மாறுபட்டிருப்பினும், அனைத்து நாடுகளையும் எதிர் நோக்கியுள்ள முக்கியப் பிரச்சினைகள் என்பது ஏற்றுக்கொள்ளக் கூடியதாகும்.

**1950-55 வரை முக்கிய நிகழ்ச்சிகள்**

செஞ்சீனாவின் எழுச்சி உலக நாடுகளில் பொதுவுடைமைக் கொள்கைக்கு மாபெரும் வெற்றியாக அமைந்தது. சீனாவிலிருந்து பொதுவுடைமைக் கருத்துகள், தூரக்கிழக்கு, தென்கிழக்காசிய நாடுகளில் நுழைய ஆரம்பித்தன. இதன் முதற்படியாகக் கொரியாவில் உள்நாட்டுப் போர் ஏற்பட்டது. வடகொரியாவில் ஆதிக்கம் பெற்ற பொதுவுடைமையினர் தென்கொரியா மீது திடீர்த்தாக்குதல்களைத் தொடங்கினர். அடுத்தது இந்தோ-சீனாவில் பிரெஞ்சு ஆதிக்கத்தை எதிர்த்து, டாக்டர் ஹோ-சி-மின்னின் தலைமையிலான வியட்மின்கள் சீனா, ருஷியாவின் பேராதரவுடன் போரிட்டனர். பிரான்சு இந்தோ-சீனாவிலிருந்து வெளியேறிய பின்னரும் வியட்மின்களின் தாக்குதல்கள் முடிவடைந்துவிடவில்லை. தெற்கு வியட்நாமில் பொதுவுடைமையினர் 'வியட்காங்' படையினராகப் போரைத் தொடர்ந்து நடத்துகின்றனர். இவ்விரு நிகழ்ச்சிகளால் பொதுவுடைமைக் கொள்கையின் ஆபத்தை உணர்ந்த அமெரிக்கா, கொரியாவிலும், இந்தோ-சீனாவிலும், பொதுவுடைமையை ஏற்காத நாடுகளின் பாதுகாவலனாகத் தன்னை அறிவித்துக்கொண்டு போரிட்டது.

ஐரோப்பாவில் ஏற்பட்ட பெர்லின் நெருக்கடியின் போதும், அமெரிக்கா, தனது பொதுவுடைமை எதிர்ப்புக் கொள்கையைத் தெளிவாக்கியது. துருக்கி, பொதுவுடைமை ருஷியாவின் ஆதிக்கத்திலிருந்து, தன்னைக் காத்துக்கொள்ள வேண்டி, கிரீஸ், யுகோஸ்லேவியா போன்ற ஐரோப்பிய நாடுகளுடன் நட்புறவு ஏற்படுத்திக் கொண்டது. இதேபோலப் பொதுவுடைமைப் பிடியிலிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டிய தென்கிழக்காசிய நாடுகளில் பல, மணிலாவில் கூடி, அமெரிக்காவின் தலைமையில் தென்கிழக்காசிய நாடுகளின் ஒப்பந்த நிறுவனத்தை (SEATO) ஏற்படுத்திக் கொண்டன.

உலக அரங்கில் முப்பெரும் வல்லரசுகளுக்கிடையே ஏற்பட்ட போட்டியின் விளைவாக, உலகநாடுகள் இருபெரும் பிரிவுகளாகப் பிரிந்தன. இப் பிரிவுகள் இரண்டிலும் சேராமல் தனித்து நின்று, இருபிரிவுகளின் உதவியையும் பெற விரும்பிய ஆசிய ஆப்பிரிக்க நாடுகள், தங்களுக்குள் ஒற்றுமையை ஏற்படுத்திக் கொள்ள விழைந்தன. இதன் விளைவாக 1954-ல் கொழும்பு மாநாடு கூட்டப்பட்டது. இம் மாநாட்டில் இந்தியா, பாகிஸ்தான், பர்மா, இந்தோனேஷியா, சிலோன் ஆகிய ஐந்து நாடுகளின் தலைமை யமைச்சர்கள் கலந்து கொண்டனர். இம் மாநாட்டில்தான், ஆசிய-ஆப்பிரிக்க நாடுகள் அனைத்தும், ஒன்றுகக் கூடித் தங்களின் பிரச்சினைகளையும், தாங்கள் இணைந்து செயல்பட வேண்டியதின் அவசியத்தையும் கருத்திற்கொண்டு தங்களுக்குள் மேலும் நல்லுறவை வளர்க்க பாண்டுங் நகரில் 1955-ல் ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளின் மாநாட்டைக் கூட்ட வேண்டும் என முடிவு செய்தன.

இதற்கிடையில் சீனுவில் வளம் பெற்றுவிட்ட பொதுவுடைமை அரசு, தனது செல்வாக்கினை மற்ற நாடுகளிடையே பரப்ப முன்வந்தது. சீனுவின் தலைமையமைச்சர் சூ-யென்-லாய் உலக நாடுகளில் சுற்றுப்பயணம் செய்து, நல்லுறவு ஏற்படுத்திக் கொள்ள முன்வந்தார். இந்திய-சீன நல்லுறவை ஏற்படுத்தும் வகையில் சூ-யென்-லாய் 1954-ல் இந்தியாவிற்கு வந்தார். இந்தியத் தலைமையமைச்சர் பண்டித நேருவும், சூ-யென்-லாயும் கூட்டறிக்கை ஒன்றனை வெளியிட்டனர். இவ்வறிக்கையில் ஐந்து முக்கிய கருத்துகள் இடம் பெற்றிருந்தன. இவ்வறிக்கை 'பஞ்சசீலக்கொள்கை' என்று பெருமையுடன் அழைக்கப்பட்டது. ஆசிய-ஆப்பிரிக்க நாடுகள் அனைத்தும் இவ்வைந்து கொள்கைகளையும் ஏற்றுக்கொள்ள முன்வந்தன.

1. ஒவ்வொரு நாட்டின் உரிமையையும், இறைமையையும் மதித்து ஏற்றுக்கொள்ளுதல்.

2. ஆக்கிரமிப்பைத் தவிர்த்தல்.

3. உள்நாட்டுப் பிரச்சினைகளில் மற்ற நாடுகள் தலையிடுவதைத் தவிர்ப்பது.

4. அனைத்து நாடுகளுக்கும் ஏற்றத்தாழ்வற்ற சம உரிமை அளித்தல்.

5. அமைதியினடிப்படையில் கூடிவாழ்தல்.

இவ்வைந்துமே பஞ்சசீலக் கொள்கைகளாகும். இவ் வைந்து கொள்கைகளையும் பாண்டுங் மாநாடு ஏற்றுக்கொண்டது என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

இந்திய-சீன நாடுகளுக்கிடையே இருந்த பகையுணர்வுகள் மறைந்து, ஒரு புதிய நல்லுறவுக்காலம் தொடங்கிவிட்டதாக இந்தியா நம்பியது. இவ்வொப்பந்தத்தின் விளைவாக நேருவின் புகழ் உலகெங்கிலும் பரவியது. நேருவும், சூ-யென்லாயும் ஆசிய நாடுகளின் தனிப்பெருந்தலைவர்கள் என்ற மிக்குயர் நிலையை அடைந்தனர். ஆயினும் ஐரோப்பிய நாடுகள் நேருவின் பஞ்சசீலக் கொள்கையையும், பொதுவுடைமைச் சீனவுடன் நட்புறவு கொள்வதையும் அவ்வளவாக விரும்பவில்லை. ஐரோப்பியர் நேருவின் அயலுறவுக் கொள்கைகளைச் சாடினர். காமன்வெல்த் கூட்டுறவின் உறுப்பினராக உள்ள இந்தியா, பொதுவுடைமைச் சீனவுடன் நட்புறவு கொண்டதன் விளைவாகக் காமன்வெல்த் நாடுகளை காட்டிக் கொடுத்து விட்டதாகவும், காமன்வெல்த் கொள்கைகளைக் காற்றில் பறக்கவிட்டு விட்டதாகவும்கூடக் கண்டனக் கணைகள் தொடுத்தனர். ஆனால் இந்தியாவின் பண்பாடுகள், மரபுகள், மக்களாட்சி முறையில் கொண்டிருந்த ஆழ்ந்த நம்பிக்கை ஆகியவைகள், பொதுவுடைமைக் கருத்தினை ஏற்றுக் கொள்ளவில்லை என்பதனை ஐரோப்பிய நாடுகள் அப்போது உணரவில்லை. இந்தியாவின் 'கூட்டுச் சேராக் கொள்கை'யை வெளியிட்ட நேரு, உலகின் இரு பெரும் பிரிவுகளில் எந்த ஒன்றுடனும் இணைந்து விடுவதைத் தவிர்த்து, இரு கூட்டணிகளுடனும் நட்புறவுடன் பழகுவதையே வலியுறுத்தினர். அதே நேரத்தில் எந்த ஒரு கொள்கையோ, தத்துவமோ இந்தியாவில் ஆதிக்கம் பெறுவதை அவர் விரும்பவில்லை.

மத்தியக் கிழக்கு நாடுகளைப் பற்றிய சிறு குறிப்பும் இங்குத் தேவைப்படுகின்றது. 1948-ல் இஸ்ரேல் நாடு உருவாக்கப்பட்டதிலிருந்து, அரபு நாடுகளுக்கும், இஸ்ரேலுக்குமிடையே தீராத பகைமை ஏற்பட்டு, எந்த நேரத்திலும் கடுமையான போர் ஏற்படக்கூடிய ஆபத்துத் தோன்றியது. இதுவரை அரபுநாடுகளுக்கும் இஸ்ரேலுக்குமிடையே நடந்த போரில், இஸ்ரேல் வெற்றி பெற்று வந்திருக்கின்றது. இஸ்ரேலை எதிர்க்கின்ற ஒரே நோக்கத்தில் உருவாக்கப்பட்டதுதான் 'அரபு நாடுகளின் கூட்டணி' (Arab League). இக் கூட்டணியில் சேர்ந்துள்ள அரபு நாடுகளுக்கிடையே, இஸ்ரேலை அழிப்பது என்ற நோக்கத்தைத் தவிர ஏனைய பிரச்சினைகளில் ஒற்றுமை ஏற்படவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கதாகும். 1950-ல் எகிப்து, சவூதி அரேபியா, லெபனன், சிரியா, ஏமன் ஆகிய நாடுகள் அரபு நாடுகளின் கூட்டுப் பாதுகாப்பு ஒப்பந்தம் ஒன்றனைச் செய்துகொண்டன (Collective Security Pact of the Arab League, June 1950). இவ்வொப்பந்தத்தில் பாரசீகமும்

அடுத்த ஆண்டு சேர்ந்துகொண்டது. ஜோர்டான் மட்டும் சேராமல் தனித்து நின்றது.

பாரசீகத்தில் தேசியம் எழுந்தது. இங்கிலாந்தின் பொருளாதாரக் கட்டுப்பாட்டிலிருந்து பாரசீகம் விடுதலை பெறக் கிளர்ந்தெழுந்தது. அதேபோல ஏனைய நாடுகளும் கிளர்ச்சி செய்தன. உலகில் எண்ணெய் வளமிக்க அரபு நாடுகள், ஐரோப்பியரின் பிடியிலிருந்து விடுபட்டு, வளம் காணக் கிளர்ந்தெழுந்தன. அரபு நாடுகளிடையே செல்வாக்குப் பெற்றிருந்த துருக்கி, 'வட அட்லான்டிக் ஒப்பந்த நிறுவன'த்தில் (NATO) சேர்ந்தது. இதன் விளைவாக, அரபுநாடுகளுக்கும், அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்சு ஆகிய நாடுகளுக்குமிடையே ஏற்பட்ட சச்சரவில் தலையிட்டுச் சமாதானம் செய்துவைக்க முயன்றது. இதன் விளைவாக 'மத்தியக் கிழக்குப் பாதுகாப்பு நிறுவனம்' (Middle East Defence Organisation --MEDO) ஒன்று ஏற்படுத்தப்பட்டது. இதில் இங்கிலாந்து, அமெரிக்கா, பிரான்சு, துருக்கி ஆகிய நாடுகள் இடம் பெற்றன. மற்ற நாடுகளையும் இந் நிறுவனத்தில் பங்கேற்றுக்கொள்ளும்படி அழைத்தன. இந் நிகழ்ச்சிகளைக் கவனித்த ருஷியா ஆத்திரமடைந்தது. மேற்குநாடுகளுடன் இராணுவக்கூட்டில் சேரும் நாடுகள் ருஷியாவின் நட்புறவை இழக்க வேண்டியிருக்கும் என்று ருஷியா எச்சரிக்கை செய்தது. எகிப்தும், சிரியாவும் ருஷியாவுடன் நட்புறவு கொள்வதை விரும்பின.

1951-ல் லிபியா சுதந்திரமடைந்தது. ஆயினும் 1952 முதல் 1955 வரை மத்தியக் கிழக்கு நாடுகளின் வரலாற்றில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சி எகிப்தில் நடைபெற்றது. 1952-ல் இராணுவப் புரட்சி ஏற்பட்டது. இதன் விளைவாக எகிப்திய சுல்தான் பதவி விலகினார். தளபதி நெகுய்ப் (General Neguib) என்பவர் எகிப்தின் முதல் குடியரசு தலைவராகப் பதவியேற்றார். இவரது காலத்தில்தான் இங்கிலாந்தும் எகிப்தும் சூயெஸ் கால்வாயைப்பற்றிய புதிய ஒப்பந்தம் ஒன்றனைச் செய்துகொண்டன (Oct. 1954). இவ்வொப்பந்தத்தின்படி இருபது மாதங்களுக்குள் ஆங்கிலப்படை சூயெஸ் கால்வாய்ப் பகுதியிலிருந்து வெளியேறவேண்டும். போர் ஆபத்து ஏற்படுமேயானால் ஆங்கிலப் படைகள் மீண்டும் அப் பகுதிக்குள் வரலாம் என்று ஏற்பாடாயிற்று. இவ்வொப்பந்தத்தினை எகிப்து மக்கள் வரவேற்றனர். ஆனால், ஒருசில தீவிர தேசியவாதிகள் இவ்வொப்பந்தத்தினை ஏற்க மறுத்தனர். நவம்பர், 1954-ல் தீவிரத் தேசிய வாதிகளின் தலைவரான கர்னல் காமல் அப்துல் நாசர் (Colonel Gamal Abdul Nasser) தளபதி நெகுய்ப்பைப் பதவிநீக்கம் செய்து, ஆட்சியைக் கைப்பற்றினார்.

1954-ல் பொதுவுடைமையை ஏற்றுக்கொண்ட நாடுகள், மற்ற நாடுகள் என்ற இருபெரும் பிரிவுகள் ஏற்பட்டன. மத்தியக் கிழக்கு நாடுகளிலும் இப் பிரிவு எதிரொலித்தது. எப் பகுதியுடன் சேர்ந்துகொள்வது என்பது போன்ற விவாதங்கள் ஏற்பட்டன. முடிந்த முடிவாக எதையும் கூற முடியவில்லை. எகிப்தின் தலைவர் நாசர் அரபுநாடுகள் அனைத்தையும் தமது தலைமையை ஏற்றுக் கொள்ளச் செய்யவேண்டும் என எண்ணினார். இதன் விளைவாக பாக்தாத் நகரில் அரபுநாடுகளின் தலைமையமைச்சர்கள் கூடி நட்புறவு ஒப்பந்தம் ஒன்றனைச் செய்து கொண்டனர் (Pact of Bagdad, Feb. 1955).

இதற்கிடையில் டிசம்பர் 1954-ல் கூடிய கொழும்பு மாநாட்டில் (Colombu Conference) இந்தியா, பாகிஸ்தான், பர்மா, இந்தோனேஷியா, சிலோன் ஆகிய நாடுகளின் தலைமை யமைச்சர்கள் ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளின் பிரச்சினைகளை விவாதித்து, நட்புறவை ஏற்படுத்திக்கொள்ளும் வகையில் ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளின் மாநாடு ஒன்றனைக் கூட்டவேண்டும் என்று முடிவு செய்தனர். அத்தகைய மாநாடு ஒன்றனை நடத்தும் பொறுப்பினை இந்தோனேஷியா ஏற்றுக்கொண்டது. எனவே, பாண்டுங் நகரில் 1955-ல் மாநாடு கூட்டுவதெனத் தீர்மானம் செய்யப்பட்டது.

**பாண்டுங் மாநாட்டின் நோக்கங்கள்**

1. ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளிடையே நல்லெண்ணத்தையும் ஒத்துழைப்பையும் ஏற்படுத்துதல். அண்டைநாடுகளுடன் உறவை ஏற்படுத்தி, முன்னேற்றத்திற்குப் பாடுபடுதல்.

2. சம்பந்தப்பட்ட நாடுகளின் சமூக, பொருளாதாரப் பண்பாட்டுப் பிரச்சினைகளை விவாதித்தல்.

3. இறைமை, இனக்கொள்கை, குடியேற்றங்கள் போன்ற ஆசிய-ஆப்பிரிக்க நாட்டு மக்களைச் சார்ந்த தனிப் பிரச்சினைகளை ஆய்தல்.

4. ஆசிய-ஆப்பிரிக்க நாட்டு மக்கள் உலகில் பெற்றிருக்கும் நிலையினை விவாதித்து, உலக அமைதியை நிலைநாட்டுவதில் அம் மக்களின் பங்கினை வலியுறுத்தல்.

இம் மாநாட்டிற்கு எந்த ஐரோப்பிய நாடும் அழைக்கப்படவில்லை. ஆசிய-ஆப்பிரிக்க நாடுகள் இச் செய்கையின்மூலம் தங்களது உரிமையையும், தன்னம்பிக்கையையும் நிலைநாட்டின. 'ஐரோப்பியரின் ஆசியா' என்ற நிலை மாறி, 'ஆசியா ஆசியருக்கே' என்ற

நிலை ஏற்பட்டது. ஆப்பிரிக்க நாடுகள் உரிமைபெற்று, இதுவரை தங்களை அடக்கியாண்ட ஐரோப்பியர்களை எதிர்க்கவும் துணிந்தன ருஷியா அழைக்கப்படவில்லை. ஆனால் சீனுவின் வழியாக, பொதுவுடைமைக் கொள்கையின் பிரதிநிதி பாண்டுங் மாநாட்டில் கலந்து கொண்டார். தேசிய சீனு பங்கெடுத்துக்கொள்ளவில்லை. அரபு நாடுகளின் எதிர்ப்புக் காரணமாக இஸ்ரேலும் இம் மாநாட்டில் கலந்துகொள்ளவில்லை. இவைகளைத் தவிர மொத்தம் இருபத்தொன்பது நாடுகள் பாண்டுங் மாநாட்டில் பங்கெடுத்துக் கொண்டன. அவையாவன: ஆப்கானிஸ்தானம், பர்மா, கம்போடியா, சிலோன், செஞ்சீனு, எகிப்து, எத்தியோப்பியா, கானு, இந்தியா, இந்தோனேஷியா, பாரசீகம், ஈராக், ஜப்பான், ஜோர்டன், லாவோஸ், லெபனுன், லிபியா, லைபீரியா, நேப்பாளம், பாகிஸ்தான், பிலிப்பைன் தீவுகள், சவூதி அரேபியா, சூடான், சிரியா, தாய்லாந்து, துருக்கி, வடக்கு வியட்நாமியக் குடியரசு, தெற்கு வியட்நாம், ஏமன் ஆகிய இருபத்தொன்பது நாடுகளாகும்.

இம் மாநாட்டில் உலகப் புகழ் பெற்ற ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளின் பெருந்தலைவர்கள் கூடினர். இவர்களில் முக்கியமானவர்களில் சிலரை மட்டும் இங்குக் குறிப்பிடலாம். அவர்கள், பண்டித ஜவஹர்லால் நேரு, நொரோதம் ஷிகானுக் (கம்போடியா), ஜான் கோட்ல வாலா (சிலோன்), சூ-யென் லாய் (செஞ்சீனு), காமல் அப்துல் நாசர் (எகிப்து), இல்மா தெரசா (எத்தியோப்பியா), கோகோ போட்சியோ (கானு), அலி அமின் (பாரசீகம்), முகமது அலி (பாகிஸ்தான்), கார்லோஸ் P. ரோமுலஸ் (பிலிப்பைன் தீவுகள்), சொவாக் ஐங் தாப்பா (நேப்பாளம்), முகம்மது முண்டசர் (லிபியா) போன்றவர்கள் தங்கள் கருத்துகளை வலியுறுத்தினர்.

பண்டித நேருவின் பஞ்சசீலக் கொள்கை போற்றி ஏற்றுக் கொள்ளப்பட்டது. இந்தோனேஷியக் குடியரசு தலைவர் சுகர்ணோ, பண்டித நேரு, சூ-யென் லாய், நாசர் போன்றோர் இம் மாநாட்டில் மிகச் சிறந்த இடத்தைப் பெற்றனர். இவர்களின் பேருரைகள் உலக மக்களின் கவனத்தை ஈர்த்தன.

உலகத் தலைவர்களின் ஆரம்ப உரைகள் முடிவுற்ற பின்னர் முடிவுகளைப் பற்றிய விவாதங்கள் தொடங்கின. பாண்டுங் நகரம் சில நாள்களுக்கு ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளின் தலைநகராகவே மாறிவிட்டது எனப் பண்டித நேரு வியந்துரைத்தார். உலக மக்களில் பாதிப் பேருடைய பிரதிநிதிகள் இம் மாநாட்டில் கலந்து கொண்டிருந்தனர். இவர்கள் பல பொருள்களைப் பற்றியும்

கலந்துரையாடினர். மனித உரிமைகள், அமைதி, ஒத்துழைப்பு, குடியேற்றங்கள் போன்றவையும், வர்த்தகம், கனிப் பொருள்கள், மூலப் பொருள்கள், வைப்பகங்கள், கப்பல் போக்குவரத்து, செய்தித் தொடர்புகள், கலை, பண்பாட்டுத் தொடர்புகள், அணு சக்தியைப் பயன்படுத்துதல், விலையேற்றத்தைத் தடுத்தல் போன்ற பொருள்கள் அனைத்தும் விவாதிக்கப்பட்டன. முடிவில் ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளின் இணைந்த ஒற்றுமை வலியுறுத்தப்பட்டு, அனைத்து நாடுகளாலும் ஒரு முகமாக ஏற்றுக்கொள்ளப்பட்டது.

**பாண்டுங் மாநாட்டின் முடிவுகள்**

முதல் பிரிவு பொருளாதாரத் துறையில் அனைத்து நாடுகளும் முழு ஒத்துழைப்பு நல்கவேண்டும் எனக் குறிப்பிட்டது. இதனால் ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளிடையே வர்த்தகக் குழுக்கள் (Trade delegations) போக்குவரத்து ஆரம்பமானது. ருஷியாவும், சீனாவும் இதைப் பயன்படுத்திக் கொண்டு ஆப்பிரிக்க, ஆசிய நாடுகளில் தங்களது வர்த்தக நிலையங்களை ஏற்படுத்தின.

அடுத்த பிரிவில் கலை, பண்பாட்டுத் தொடர்பு வலியுறுத்தப் பட்டது.

மூன்றாவது பிரிவு மனித உரிமைகளைப் பற்றியது. சுயாட்சி உரிமையும் வலியுறுத்தப்பட்டது. அல்ஜீரியா, மொராக்கோ, டுனிசியா போன்ற நாடுகளுக்கு அமைதியான முறையில் சுதந்திரம் வழங்கும்படி பிரான்ஸ் நாட்டிற்குக் கோரிக்கை விடுத்தனர்.

ஐந்தாவது பிரிவில் பாலஸ்தீனத்து அரபு மக்களின் உரிமைகளை ஆதரித்தும், இஸ்ரேல் நாட்டினை எதிர்த்தும் இம் மாநாட்டின் முடிவுகள் குறிப்பிடப்பட்டிருந்தன. இந்தோனேஷியாவிற்கும்-நெதர்லாந்து அரசிற்குமிடையே முடிவுறாமல் இருந்த 'நியூகினியா' தீவு பற்றிய பிரச்சினைக்கு விரைவில் முடிவு காணுமாறு, நெதர்லாந்து அரசை இம் மாநாடு கேட்டுக்கொண்டது.

அடுத்த பிரிவில் உலக அமைதி, ஒத்துழைப்பு போன்ற பகுதிகள் குறிப்பிடப்பட்டிருந்தன. பாண்டுங் மாநாட்டில் பங்கெடுத்துக் கொண்ட பல ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளை ஐக்கிய நாடுகளின் அவையில் உறுப்பு நாடுகளாக ஏற்றுக் கொள்ளும்படி, வேண்டுகோள் விடுக்கப்பட்டது. பாதுகாப்பு அவையில் ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளுக்கும் நிரந்தர இடம் கோரப்பட்டது. அணு ஆயுத உற்பத்தியையும், சோதனைகளையும் தடைசெய்யவும் அணு ஆயுதக் குறைப்பு, படைக் குறைப்பு ஆகியவைகளை நிறைவேற்றவும் ஆன கோரிக்கையும் இதில் இடம் பெற்றது.

இம் மாநாட்டின் தீர்மானங்களேயும் கோரிக்கைகளேயும் விவாதிக்கவும், வரையவும், ஏற்ற அமைதியான, நட்புறவு மிளிரு கின்ற, நம்பிக்கையூட்டுகின்ற சூழ்நிலேயை உருவாக்கித் தந்த பெருமை சுகர்ணேவையே சாரும். 'கடந்த காலத்தை எண்ணிக் கண்ணீர் வடிப்பதை விடுத்து, எதிர்கால ஏற்றத்தில் சிந்தனே செய்வோம்' (Let us not be bitter about the past, but keep our eyes on the Future), என்பது போன்ற முழக்கங்கள் ஆசிய ஆப்பிரிக்க நாடுகளின் அடிப்படைக் கொள்கைளே எடுத்தியம்பின. 'எவரிடத்தும் எங்கட்குப் பகைமையில்லே. அமெரிக்காவை, ஆஸ்திரேலியாவை, இங்கிலாந்தை, நியூசிலாந்தை உளமார வாழ்த்துகிருேம். நியூசிலாந்தும் ஆஸ்திரேலியாவும் ஆசியாவின் பகுதிகளே. அவையிரண்டையும் நட்புக்கரம் நீட்டி அழைக் கின்ருேம். ஆனுல், அதே சமயத்தில் நிறவெறிக் கொள்கையை வெறுக்கிருேம். நிறவெறியால் மாந்தரினம் ஏற்ற இன்னல்கள் போதும். இனியும் அந் நிலே தொடரவேண்டாம்.'

இவை போன்ற பண்டித நேருவின் பேச்சுகள் இம் மாநாட்டின் எண்ணங்களே உலகிற்குத் தெளிவாக்கின. இறுதியில் இம் மாநாடு கூட்டப்படுவதற்குக் காரணமாக இருந்த ஐந்து நாடு களும், தேவையேற்படின் இதுபோன்ற மாநாடுகளே எதிர்காலத் திலும் கூட்டவேண்டும் என்பதுடன் இம் மாநாட்டின் முடிவுகள் முடிவுற்றன.

மிகவுயர்ந்த நோக்கங்களுடன் இம் மாநாடு கூட்டப்பட்டு, ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளின் நட்புறவும், ஒத்துழைப்பும் வலியுறுத்தப்பட்டிருந்தாலும், இம் மாநாட்டின் பெரும்பாலான முடிவுகள் செயல்படுத்தப்படவில்லே. பொதுவுடைமைச் சீனு, இம் மாநாட்டின் மூலம் ஆசிய நாடுகளில் உயர்ந்த இடத்தைப் பெற்றது; வியட்நாம் போரில் வடக்கு வியட்நாமிற்கு ஆதரவாக இறங்கியது; ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளில் பொதுவுடைமைச் செல்வாக்கினே ஏற்படுத்த முனேந்தது. பஞ்சசீலக் கொள்கையை ஏற்ற சீனு, நடைமுறையில் அதைக் கடைப்பிடிக்க மறந்தது. இந்திய-சீன உறவுகள் சீர்குலேந்தன. 1962-ல் சீனு இந்தியாவைத் தாக்கியது.

அதேபோல மத்தியக் கிழக்கு நாடுகளிலும் அமைதி ஏற்படவில்லே. எகிப்து போர் வெறி கொண்டது. 'இஸ்ரேலே அழித்தே தீருவோம்' என அரபு நாடுகளின் கூட்டணி முழங்கியது. சூயெஸ் கால்வாய்த் தகராறு முற்றியது. மூன்ருவது உலகப் போர் சூயெஸ் கால்வாய்ப் பகுதியில் ஆரம்பமாகுமோ என்ற

அச்சம் தோன்றியது. நல்வாய்ப்பாக இந் நிலை தவிர்க்கப்பட்டது. எனினும் மத்தியக் கிழக்குப் பகுதியும் மேற்கு ஆசியப் பகுதியும் குமுறும் எரிமலையாகவே இருந்துவருகின்றன. இந் நிலைக்குக் காரணமாக அமெரிக்க, ருஷிய நாடுகளையே குறிப்பிடலாம். ருஷியா அரபு நாடுகளுக்கும், அமெரிக்கா இஸ்ரேலுக்கும் ஆயுத உதவி வழங்கி வருகின்றன. அதேபோல இந்திய-பாகிஸ்தான் பிரச்சினைகளிலும் அமெரிக்கா பாகிஸ்தானையே ஆதரித்து வருகின்றது. காஷ்மீர் பிரச்சினை இன்னும் தீராத பிரச்சினை யாகவே உள்ளது. இந் நிலையில் பாகிஸ்தானுக்கு ஆயுதம் வழங்கும் அமெரிக்கக் கொள்கையால், இந்திய-பாகிஸ்தான் உறவுகள் மீண்டும் சீர்கேடு அடையும் நிலை உருவாகி வருகின்றது.

# மேற்கோள் நூற்பட்டியல்

## தமிழ் நூல்கள்


1. சுப்பிரமணியன், சோ.—ஆசிய நாடுகளின் அரசாங்கங்கள்
2. தங்கவேலு, புலவர் கோ.—ஜப்பானிய வரலாறு
3. தார் எஸ். என். (தமிழாக்கம் ஏ. பாண்டுரங்கன்)—1919 முதல் சர்வதேச உறவுகளும் உலக அரசியலும் (இரண்டு பாகங்கள்)


## ஆங்கில நூல்கள்


1. Beasley, W. G.—The Modern History of Japan.
2. Beckmann-George, M.—The Modernisation of China and Japan.
3. Carrington Goodrich, L.—A Short History of Chinese People.
4. Chatterjee, B. R.—Modern Japan-A Short History.
5. Chavan, R.S.—Nationalism in Asia.
6. Clyde Paul, H. and Bears Burton, F.—The Far East.
7. Edgar Snow—Red Star over China.
8. Edwards Michael—Asia in European Age 1458-1955
9. Hall, D. G. E.—A History of South East Asia.
10. Harrison, Brian—South East Asia—A Short History
11. Ian Thompson—The Rise of Modern Asia.
12. Jan Romein—The Asian Century-A History of Modern Nationalism.
13. Jawaharlal Nehru—Glimpses of World History.
14. John Gunther—Inside Asia.

15. John Whitney Hall—Japan-from Prehistory to Modern Times.

16. Latourette, K. S.—A Short History of Far East.

17. McAleavy, Henry—The Modern History of China.

18. Mct. Kaheir, G.—Major Governments of Asia.

19. Panikkar, K. M.—Asia and Western Dominance.

20. Purcell, Victor—South and South East Asia since 1800.

21. Purcell, Victor—China

22. Reishaner, Edwin, O.—Japan, Past and Present.

23. Rowe, David Nelson—Modern China.

24. Roy, S.L.—A short History of the Far East.

25. Thayer, Philip, W (Ed)—Nationalism and Progress in Free Asia.

26. Vinaeke, Harold, M.—A History of the Far East in Modern Times.

# கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| அடிப்படைச் சட்டங்கள | — | Organic Law |
| அரசியலமைப்பின் முக்வுரை | — | Preamble |
| அரசுப் பணித் தேர்வுகள் | — | The Civil Service Examinations |
| அனைத்து நாடுகளுக்கும் சம உரிமைக் கொள்கை | — | Open Door Policy |
| அரசவைப் பிரபுக்கள் | — | Kuge |
| அரச மூதாட்டியார் | — | Empress Dowager |
| அரபு நாடுகளின் கூட்டுப் பாதுகாப்பு ஒப்பந்தம் | — | Collective Security Pact of the Arab League |
| அம்பாய்னு படுகொலை | — | Ambaina Massacre |
| அரசு நெறி முறைப்படுத்தும் நிறுவனம் | — | The Censorate |
| அரச நெறியாளர்கள் | — | Censors |
| ஆட்சி உரிமை பெற்ற நாடு | — | Autonomous State |
| ஆட்சிக் குழு | — | Board of Governing Body |
| ஆங்கில அரசின் குடியேற்றங்கள் | — | Crown Colonies |
| ஆங்கில உயர் ஆட்சியாளர் | — | British High Commissioner |
| ஆசியா ஆசியருக்கே | — | Asia for Asians |
| இருபத்தொரு கோரிக்கைகள் | — | Twentyone Demands |
| இராணுவக் கழகம் | — | Military Academy |
| இறையருள் | — | Divine Right |
| இறைவழிபாட்டுக் கழகம் | — | Association for worshipping the Gods |
| இளநிலைப் பதவிகள் | — | Sanyo |
| இளைஞர் இயக்கங்கள் | — | Youth Organisation |

இந்தியக் குடியிருப்புகள் — Indian Settlement

இந்தியவழி அரசுகள் — Indianised States

இந்தியமயமான முறை — The process of Indianisation

இந்தோனேஷிய தேசியக் கட்சி — Partai Nasional Indonesia (PNI)

இளம் அன்னமியரின் புரட்சிக் கட்சி — Revolutionary Party of Young Annamites

இடைப்பட்ட அரசு — Buffer State

இந்தோனேஷியப் பொதுவுடைமைக் கட்சி — Partai Komunis Indie

எதிரிகளைப் பிரித்துத் தன்னைக் காத்துக்கொள்ளுதல் — Divide and Survive

ஐந்துரிமைக் காப்புறுதிப் பத்திரம் — The Five Article Charte Oath

ஐந்து வல்லரசு கடற்படைக் கட்டுப்பாட்டு ஒப்பந்தம் — The Five Powers Naval Treaty

ஐக்கிய மலேயத் தேசிய நிறுவனம் — United Malay National Organisation (UMNO)

ஒளி பொருந்திய மாமன்னர் — Meiji Emperor

ஒன்பது வல்லரசு ஒப்பந்தம் — The Nine Powers Treaty

கட்டுமறுப்பு — Boycot

காப்பரசு — Protectorate

கிழக்கிந்திய வர்த்தகக் கூட்டுக் குழு — United East India Company

குழு ஆட்சி — Oligarchy

குத்துக் கல்லறைகள் — Dolmens

கூட்டரசில் சேராத பாதுகாப்பு நாடுகள் — Protected Unfederated States

கொழும்பு மாநாடு — Colombo Conference

சமநிலையற்ற உடன்படிக்கைகள் — Unilateral Treaty

சக்திச் சமநிலை — Balance of Power

சாயாசென் புரட்சி — Saya Sen Revolution

சீனாவில் புதிய ஆதிக்கக் கொள்கைகள் — New Order in China

சீனப்பேரரசரை ஒன்பது முறை மண்டியிட்டு வணங்குதல் — Kow Tow

சீனச்சட்டங்கள் அந்நியரைக் கட்டுப்படுத்தாத உரிமை — Extra Territorial Rights

சீன வரலாற்றுக் குறிப்பேடுகள் — Chinese Annals
செந்நிறக் காட்டுமிராண்டிகள் — Red Barbarians
செல்வாக்கிற்குட்பட்ட பகுதிகள் — Spheres of Interest
சேர்ந்து செழித்து வாழும் பகுதி — Co-Prosperity Sphere
சைமன் குழு — Simon Commission
டைடிங்ஸ் மக்டஃபி சட்டம் — Tydings McDeffic Act
தன்னேரில்லா இறைமாட்சி — Supreme Sovereign Power
தலைமை நிலையர் — Resident General
தலைமை ஆளுநர் — Governor General
தான் நியன் (அ) இந்தோ சீனப் பொதுவுடைமைக் கட்சி — Than Nien or Communist Party of Indo-China
தி ஹேக் வட்டமேசை மாநாடு — The Hague Round Table Conference
தீவிர தேசிய வாதிகள் — Ultra Nationalists
துறவி நாடு — Hermit Kingdom
தூரக்கிழக்கு ஆணைக் குழு — Far Eastern Commission (FEC)
தென்கிழக்காசிய நாடுகளின் ஒப்பந்த நிறுவனம் — South East Asian Treaty Organisation (SEATO)
தேசியத் தொழிலாளர் நலச் சட்டம் — National Labour Relations Act
தேசிய விடுதலை முன்னணி (அ) வியட்காங் — National Liberation Front or Vietcong
தேவராஜா — Devaraja - God King
தொழிற்கழகங்கள் — Craft Guilds
தோபாமா கழகம் (அ) நாம் பர்மியர் இயக்கம் — Dobama Asiayona or We Burman Society
நடுநிலை ஒப்பந்தம் — Neutrality Pact
நறுமணத் தீவுகள் — Spice Islands
நாடாளுமன்றம் — Diet
நிறைவான அமைதி — Perfect Peace-Taipping
நீண்ட பயணம் — Long March
நூறுநாள் சீர்திருத்தங்கள் — The Hundred Days Reform

நெதர்லாந்து வர்த்தகக் குழு — The Netherland Trading Company

நேசநாடுகளின் பெருந்தானைத் தலைவர் — Supreme Commander for the Allied Powers—(SCAP)

பன்னாட்டுக் கழகம் — The League of Nations

படையாட்சி — Militarism

பன்னாட்டுப் போர்க் குற்றவாளிகளின் மேல்முறையீட்டுமன்றம் — International War Crimes Tribunal.

படைக்குடும்பத்தாரின் சட்டங்கள் — Law of Military Houses

பழைய நிலைக்குத் திரும்பு — Return to the past

பண்பாட்டுப் புரட்சி — Cultural Revolution

பகுத்தறிவுப் பாசறை — Study Clubs

பன்மைச் சமுதாய அமைப்பு — Pluralistic Society

பஞ்ச சீலக் கொள்கை — Panchshil

பண்பாட்டுத் திட்டம் — Culture System

பாதுகாப்பு ஒப்பந்தம் — Treaty of Defence

பாட்ஸ்டாம் மாநாடு — Potsdam Conference

பாசிச எதிர்ப்பாளர்களின் சுதந்திரக் கழகம் — Anti-Facist People's Freedom League (AFPFL)

புதிய ஜப்பானியம் — The New Japanism

புரட்சித் தத்துவங்கள் — Military Idealism

பெருந்தகையர் ஒப்பந்தம் — Gentlemen's Agreement

பெரும்பாரத வரலாற்றுக் குழு — The Greater India Society

பேராளர்கள் — Delegates

பொதுவுடைமை எதிர்ப்பு ஒப்பந்தம் — Anti-Comintern Pact

பொம்மலாட்டம் — Puppet shadow-play

பொருளாதார முன்னேற்ற வாரியம் — Economic Devolopment Corporation

போர் நடக்கும் பகுதிகள் — War Zones
போதை மருந்துகள் — Narcotic Drugs
போர் தவிர்ப்பு ஒப்பந்தம் — Non-Aggression Pact
போர்ப் பிரபுக்கள் — War Lords
போர்ச்சுகீஸியரின் நூற்றாண்டு — The Portugese Century
மனுதர்ம சாஸ்திரம் — Manu's Code of Law
மக்களாட்சி முறையில் வல்லாட்சி — Democratic Dictatorship
மலேசியக் கூட்டாட்சி — The Federation of Malaysia
மலாக்கா நீரிணைப்புக் குடியேற்றங்கள் — The Straits Settlement
மக்கள் கட்சி — The People's Party
மதிப்பிற்கும் மரியாதைக்குமுரிய நாட்டின் தவப்புதல்வர்களின் கழகம் — Kagalangalangam Kataaslasang Katipunam
மாபெரும் சாமானியர் — Great Commoner
மீட்கப்பட்ட பகுதிகள் — Liberated Areas
முதல் அபினிப் போர் — First Opium War
முன்னிலை மீட்சி — Restoration
முதுநிலைப் பதவிகள் — Gijo
முன்னோக்கிச் செல்லும் திட்டம் — The Great Leap Forward
முற்போக்காளர்கள் — Promoters
மூவர் சர்வாதிகாரம் — Tyrannical Trio
மூத்தோர் அவை — Council of Elders Genro
மேஜி சகாப்தம் — Meiji Era
மைய செயற்குழு — Central Executive Committee
லிங்கட் ஜடி ஒப்பந்தம் — Treaty of Linggad Jati
வட அட்லான்டிக் பாதுகாப்பு நிறுவனம் — North Atlantic Treaty Organisation (NATO)
வர்த்தக நிறுவனங்கள் — Co-Hongs (China)
வர்த்தகச் சமநிலை — Balance of Trade
வரையறுக்கப்பட்ட மக்களாட்சி — Guided Democracy

வாஷிங்டன் மாநாடு — Washington Conference

விண்ணார்ந்த பேரரசு — Celestrial Empire

வியட்நாம் சுதந்திரக் கழகம் (அ) வியட்மின் — Independent League of Vietnam or Vietminh

வியட்நாமிய ஜனநாயகக் குடியரசு — The Democratic Republic of Vietnam (DRV)

விரைந்து முன்னோக்கிச் செல்லும் திட்டம் — The Great Leap forward

வெண்தாமரைக் கழகம் — The White Lotus Society

வேட்டெஃகங்கள் — Guns

வைப்பகம் — Bank

'ஹக்குகள்'—மக்களின் ஜப்பானிய எதிர்ப்புப்படை — Hukvalahaps or People's Anti-Japanese Army

ஹேர் ஹாவஸ் கட்டிங் சட்டம் — Hare Harves Cutting Act

